முத்துமணிப்பண்ணை - காரங்காடு

10-4

# தத்துவம்:
# தொடக்கப்
# பயிற்சி நூல்






முன்னேற்றப் பதிப்பகம்
மாஸ்கோ

இயற்றியோர்: த. இ. தனிலேன்கோ, தலைமை ஆசிரியர் (முன்னுரை, அத்தியாயங்கள் 1, 2, 5, 11, முடிவுரை), ப. இ. ஸ்யுஸ்யுக்காலொவ் (அத்தியாயங்கள் 3, 4), அ.ஸெ. விஷ்னியாக்கோவ் (அத்தியாயங்கள் 8,9), ப.க. கல்தியாயேவ் (அத்தியாயங்கள் 6, 7, 10, 12, 13)

மொழிபெயர்ப்பாளர்: பூ. சோமசுந்தரம்

НАЧАЛЬНЫЙ КУРС ФИЛОСОФИИ

*На тамильском языке*

## பொருளடக்கம்

அத்தியாயம் மூன்று



அத்தியாயம் நான்கு



அத்தியாயம் ஐந்து

அத்தியாயம் ஆறு



அத்தியாயம் ஏழு



அத்தியாயம் எட்டு

அத்தியாயம் பன்னிரண்டு



அத்தியாயம் பதின்மூன்று

# முன்னுரை

மனிதனுடைய ஆற்றலை அளவிட இயலாதவாறு அதிகப் படுத்தியுள்ள மிகப் பெரிய விஞ்ஞான, தொழில்நுணுக்கச் சாதனைகளும், பூமியின் வடிவையே மாற்றிவிட்ட பிரமாண்டமான இயற்கை உருமாற்றங்களும், சமூக வாழ்வின் எல்லாப் பகுதிகள் மீதும் பாதிப்பு விளைத்துள்ள புரட்சிகரமான மாறுதல்களும் நிகழ்ந்திருப்பதனல் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது நமது காலம்.

ருஷ்யாவில் 1917ம் ஆண்டு நடந்தேறிய மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி மனிதகுல வளர்ச்சியில் புதுயுகத்தைத் தோற்றுவித்துவிட்டது. முதலாளித்துவ அமைப்பு அழிவதும் சோஷலிஸமும் கம்யூனிஸமும் நிலைபெறுவதும் தவிர்க்க முடியாதவை என்பதை உலக வளர்ச்சியின் அரை நூற்ருண்டு வரலாறு காட்டிவிட்டது. பொருளாதார, அரசியல், சித்தாந்தத் துறைகளில் சோஷலிஸத்துக்கும் முதலாளித்துவத்துக்கும் இடையே தற்போது தீவிரப் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது. மக்களின் அறிவுகளையும் இதயங்களையும் வசப்படுத்துவதற்கான போராட்டம் இது.

நடக்கும் நிகழ்ச்சிகளின் பொருளைப் புரிந்துகொள்ள வேண்டும், சென்ற காலத்தையும் நிகழ்காலத்தையும் சரியாகத் தெரிந்துகொள்ள வேண்டும், வருங்காலத்தில் பார்வையைச் செலுத்த வேண்டும் என்னும் விருப்பம் இயல்பாகவே ஒவ்வொரு மனிதனுக்கும் உண்டாகிறது. தற்கால வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் ஏற்பட்டுள்ள மாபெரும் மாற்றங்களைஅதிக ஆழத்தில் புகுந்து காண்பதற்கு விஞ்ஞானக் கண்ணேட்டம் இன்றியமையாதது. இத்தகைய கண்ணேட்டமாக விளங்குகிறது மார்க்ஸீயம்-லெனினீயம். தத்துவ, பொருளாதார, சமூக-அரசியல் கருத்துக்களின் முரணின்றிப் பொருந்திய தொகுப்பு இது.

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் உலகை அறிதல், புரட்சிகரமாக மாற்றி அமைத்தல் ஆகியவற்றுக்குரிய பொதுச்சித்தாந்தக் கோட்பாடுகளை ஆதாரபூர்வமாக நிலைநாட்டுகிறது, இயற்கை, சமூகம் ஆகியவற்றின் வளர்ச்சி பற்றிய மிக மிகப் பொதுவான விதிகளைத் தெளிவுபடுத்துகிறது, சோஷலிஸ அமைப்பின் மேம்பாட்டையும் கம்யூனிஸ சமூக உறவுகள் உருவாவதன் சாத்தியக்கூற்றையும் புலப்படுத்துகிறது. மார்க்ஸீய-லெனினீயத் தத்துவக் கல்வி மக்களுக்குக் கொள்கை பற்றிய ஆழ்ந்த திட நம்பிக்கை ஏற்படுத்துகிறது. அறிவும் செயலும் ஒன்றுயிருத்தல், கம்யூனிஸக் குறிக்கோள்கள் பற்றிய தெளிந்த உணர்வு, அவற்றைச் செயல்படுத்துவதற்கான தீவிரப் போராட்டம் ஆகியவற்றில் இந்தத் திட நம்பிக்கை வெளிப்படுகிறது.

வாழ்க்கைப் போக்குடன் இணைந்து முன்செல்ல விரும்பும் எல்லோருக்கும் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவ அறிவு இன்றியமையாதது ஆகும். யாவற்றிலும் சிக்கலான இடையூறுகளையும் கஷ்டங்களையும் சமாளிப்பதற்கு வேண்டிய வலிமையையும் தன்னம்பிக்கையையும் அது மனிதனுக்குத் தருகிறது. அவன் செயலூக்கமும் லட்சியத்தை நோக்கிய முன்னேற்றமும் வாய்ந்தவன் ஆவதற்கு உதவுகிறது. ஆவேசம் பொங்கும், உண்மைத் தேட்டங்களும் படைப்புத் துணிவும் நிறைந்த இளமைப் பருவத்திலும் சரி, ஆழ்ந்த சிந்தனையும், அனுபவங்களையும் உண்மை நிலவரங்களையும் நிகழ்ச்சிகளையும் நிதானமாகப் பகுத்தாயும் பான்மையும் வாய்ந்த, பயன்பாடுள்ள படைப்புக்கள் புரியும் முதிர்ந்த பருவத்திலும் சரி, தத்துவம் மனிதனது நம்பகமான வழித்துணை ஆகும்.

''தத்துவம்: தொடக்கப் பயிற்சி நூல்'' என்னும் இந்தப் புத்தகம், மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் அடிப்படைக் கருத்துக்களைத் தற்கால விஞ்ஞானத்தின் தொடர்பிலும் சமூக நடைமுறையின் தொடர்பிலும் விளக்கி, வாசகர்களுக்குச் சுருக்கமான, எளிதில் புரியும் விதத்தில் அதை அறிமுகப் படுத்துகிறது.

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தைச் சுய முயற்சியால் கற்றுக்கொள்வோர் அனைவருக்கும் இந்நூல் உதவக்கூடும்.

அத்தியாயம் ஒன்று

# தத்துவமும் சமூக வாழ்க்கையில் அது ஆற்றும் பங்கும்

## § 1. தத்துவம் என்பது என்ன, அது எவ்வாறு தோன்றி வளர்ந்தது

தத்துவம் என்பது, நம்மைச் சுற்றி நிலவும் யதார்த்தம் பற்றி முழுமையாகவும் மனிதனுல் அது அறியப்படுதல் பற்றியும் உள்ள கருத்துக்களின் தொகுப்பாக விளங்குகிறது. பல்வேறு சமூக வர்க்கங்கள், குழுக்களின் நலன்களைத் தத்துவம் வெளியிடுகிறது.

பிரபஞ்சம் முழுவதற்கும் அடிப்படையாக இருப்பது எது என்பதை விளக்கவும், மனிதனது இயல்பையே புரிந்துகொள்ளவும், சமூகத்தில் மனிதன் வகிக்கும் இடம் யாது, பிரபஞ்சத்தின் இரகசியங்களை உட்புகுந்து தெரிந்துகொள்ளவும் இயற்கையின் பெருவிறல் வாய்ந்த சக்திகளைப் புரிந்துகொண்டு மக்களின் நன்மைக்காக அவற்றைப் பயன்படுத்தவும் மனிதனது அறிவால் முடியுமா என்பவற்றைத் தீர்மானிக்கவும் தத்துவம் தான் தோன்றிய கணம் முதலே முயன்று வந்திருக்கிறது. இவ்வாறுகத் தத்துவம் மிகவும் பொதுப்படையான, அதே சமயம் மிகவும் முக்கியமான அடிப்படைப் பிரச்சினைகளைக் கிளப்புகிறது. வாழ்க்கை, அறிவு, இவற்றின் மிக மிகப் பல்வகைப்பட்ட துறைகள்பால் மனிதனது அணுகுமுறையை நிர்ணயிப்பவை இவை. இந்தப் பிரச்சினைகளுக்கு மிகமிக வெவ்வேறுன, சில சந்தர்ப்பங்களில் ஒன்றை ஒன்று நிராகரித்து விடுகிற விடைகளைத் தத்துவவாதிகள் அளித்துவந்திருக்கிறுர்கள்.

தத்துவம் சுமார் மூவாயிரம் ஆண்டுகளாக நிலவிவருகிறது. ஒன்றுக்கொன்று எதிரான கருத்தோட்டங்களுக்கிடையே போராட்டம் அதில் இந்தக் காலமெல்லாம் தொடர்ந்து நடந்து வந்

திருக்கிறது. இந்தப் போராட்டம் தற்போதும் நின்றபாடில்லை. ஏன் இந்தப் போராட்டம் நடக்கிறது? அதன் காரணங்கள் யாவை?

தத்துவக் கருத்தோட்டங்களின் மோதுதலில் மைய இடம் வகிப்பது உணர்வுக்கும் இருத்தலுக்கும் இடையே நிலவும் உறவு பற்றிய பிரச்சினை. வேறு வார்த்தைகளில் சொல்வதானால் கருத்தியலானதற்கும் பொருளியலானதற்கும் இடையே நிலவும் உறவு பற்றிய பிரச்சினை. உணர்வு, கருத்தியலானது என்று சொல்லுகையில் நமது எண்ணங்கள், அனுபவங்கள், உணர்வுகள் ஆகியவற்றையே நாம் மனத்தில் கொள்ளுகிறோம் என்பதை இங்கே குறிப்பிட்டுவிட வேண்டும். இருத்தல், பொருளியலானது என்னும்போது புறநிலையில், நமது உணர்வுக்குச் சார்பு இன்றி நிலவுபவை அனைத்தும், அதாவது, வெளியுலகின் பொருள்களும் பண்டங்களும், இயற்கையிலும் சமூகத்திலும் நடைபெறும் நிகழ்ச்சிகளும் செயல்முறைகளும் குறிக்கப்படுகின்றன. தத்துவ அர்த்தத்தில் கருத்தியலானது (உணர்வு), பொருளியலானது (இருத்தல்) என்பவை மிக விரிவான விஞ்ஞானக் கருதுகோள்கள் (வகைப்பிரிவுகள்) ஆக விளங்குகின்றன. பிரபஞ்சப் பொருள்கள், நிகழ்ச்சிகள், செயல்முறைகள் ஆகியவற்றின் மிக மிகப் பொதுமை வாய்ந்த, அதே சமயம் எதிரெதிரான பண்புகளை அவை பிரதிபலிக்கின்றன.

உணர்வுக்கும் இருத்தலுக்கும், ஆன்மாவுக்கும் இயற்கைக்கும் இடையே நிலவும் உறவுபற்றிய பிரச்சினை தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினையாக விளங்குகிறது. இயற்கையையும், சமூகத்தையும், எனவே மனிதனையுமே பற்றிய தத்துவக் கண்ணோட்டத்தை நிர்ணயிக்கும் மற்ற எல்லாப் பிரச்சினைகளையும் தெளிவுபடுத்துவது இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பதையே முடிவில் பொறுத்திருக்கிறது.

தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினையை ஆராய்கையில் அதன் இரு அம்சங்களை வேறு பிரித்துக் காண்பது மிக முக்கியமானது ஆகும். முதன்மையானது எது—கருத்தியலானதா அல்லது பொருளியலானதா—என்ற கேள்விக்கு விடை காண்பது முதல் அம்சம். முதன்மையானதாக இருப்பது என்றால் இரண்டாவதற்கு முன்னர் நிலவுவது, அதற்கு முந்தியிருப்பது, முடிவில் அதை நிர்ணயிப்பது என அர்த்தம். ஆகவே இந்தக் கேள்விக்கு அளிக்கப்படும் ஒரு அல்லது வேறொரு விடை

தத்துவத்தில் எவ்வளவு பெருத்த பங்கு ஆற்றுகிறது என்பது தெளிவாகிவிடுகிறது.

தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினையின் மறு அம்சம் விடை அளிக்கும் கேள்வி என்னவெனில், சுற்றியுள்ள பிரபஞ்சத்தை, இயற்கை, சமூகம் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உரிய விதிகளை அறிவது மனிதனுக்கு இயலுமா என்பது. எனவே, புறநிலை யதார்த்தத்தைச் சரியாகப் பிரதிபலிப்பதற்கு மனிதனது சிந்தனைத்திறமை கொண்டுள்ள வல்லமையை விளக்குவதுதான் இந்த இரண்டாவது அம்சத்தின் சாரம்.

தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினைக்குத் தீர்வு காண்கையில் விஞ்ஞானிகள் இரு பெரும் முகாம்களாகப் பிரிவுபட்டிருக்கிறார்கள். பொருளை, இருத்தலை, இயற்கையை முதன்மையானது என்றும் உணர்வை, சிந்தனைத் திறமையை, ஆன்மாவை இரண்டாவது என்றும் ஏற்றுக்கொள்ளும் தத்துவ அறிஞர்கள் பொருள்முதல்வாதம் எனப்படும் தத்துவப் போக்கின் பிரதிநிதிகள் ஆவர்.

விஞ்ஞான விவரங்களையும் மக்களின் பல்வகைப்பட்ட நடைமுறைச் செயல்கள் யாவற்றையும் ஆதாரமாகக் கொண்டு பொருள்முதல்வாதித் தத்துவ அறிஞர்கள் பிரபஞ்சம் யாராலும் படைக்கப்படவில்லை என்றும், அது என்றுமுள்ளது என்றும் எல்லையின்றிப் பல்விதப்பட்டது என்றும் நிரூபிக்கிறார்கள். பொருளியலான பிரபஞ்சத்தின் நம்மைச் சூழ்ந்துள்ள வஸ்துக்களும் தோற்றங்களும் நம்மீது சார்பு இல்லாமலே நிலவிவருகின்றன. எந்த உணர்வையும் சாராத பெருந்தொகையான பல்வேறு நிகழ்முறைகள் புறநிலைப் பிரபஞ்சத்தில் எப்போதும் நடந்துவந்துள்ளன, என்றென்றும் நடந்துவரும். பொருளியலானது கருத்தியலானதற்கு முன்பே நிலவியது. மனிதனது சிந்தனைத்திறன் பொருளியலானது இன்றி நிலவ முடியாது. இப்படிப் பொருள்முதல்வாதித் தத்துவ அறிஞர்கள் கருதுகிறார்கள். சிந்தனை என்பது மூளையின் விளைபொருள். எனவே மூளை சிந்தனை உறுப்பாக விளங்குகிறது. சிந்தனைத் திறன், கருத்தியலானது என்பது, புறநிலைப் பிரபஞ்சத்தைப் பிரதிபலிப்பதற்கு மூளைக்கு உள்ள திறனே ஆகும். ஆதலால் கருத்தியலானது, அதாவது உணர்வு, புறநிலைப் பிரபஞ்சத்தின்மீது சார்பு இல்லாமல் முற்றிலும் தன்னிச்சையாக நிலவ முடியாது. இவ்வாறு பொருள்முதல்வாதித் தத்துவ அறிஞர்கள் சொல்கிறார்கள்.

பொருள்முதல்வாதத்துக்கு எதிர்நிலேயான கருத்துமுதல் வாதப் போக்கு தத்துவத்தில் நிலவுகிறது. நிலவுவது அனைத்திற் கும் தொடக்கமாக விளங்குவது உணர்வே, சிந்தனைத்திறனே, ஆன்மாவே, அதாவது கருத்தியலானதே எனக் கருத்துமுதல் வாதித் தத்துவ அறிஞர்கள் ஏற்கிறுர்கள்.

கருத்துமுதல்வாதப் போக்கு இரு அடிப்படை வகைகள் கொண்டது. அகநிலேக் கருத்துமுதல்வாதம், புறநிலேக் கருத்து முதல்வாதம் என்பன அவை. சிந்தனை செய்யும் அகநிலேப்பொருள் ஆகிய மனிதனது தனிப்பட்ட உணர்வே முதன்மையானது என்று ஒப்புக்கொள்ளும் தத்துவக் கருத்துமுதல்வாதத்தின் பிரதிநிதி கள் அகநிலேக் கருத்துமுதல்வாதிகள் ஆவர். பொருள்கள் எதார்த் தத்தில் நிலவுகின்றன, அவை நமக்கு வெளியே நிலவுகின்றன என்று நமக்கு வெறுமே தோன்ற மட்டுமே செய்கிறது. அவற் றை நாம் பார்க்கிறோம், கேட்கிறோம், தொடுகிறோம் என்பதே இதன் காரணம். உண்மையிலோ காணல், தொடுதல், கேட்டல் என்பவை புலனுணர்ச்சிகளே ஆகும். இவ்வாறு அவர்கள் சொல் லுகிறுர்கள். பிரபஞ்சம் முழுவதும் சிந்தனை செய்யும் அகத்தினுல், அகநிலேப்பொருளின் தன்னுணர்வால் படைக்கப்பட்டிருக்கிறது என்றோ, அல்லது நிலவும் பொருள்கள், வஸ்துக்கள், தோற்றங் கள் ஆகியவை அனைத்தும் நமது உணர்ச்சிகள், அனுபவங்கள் ஆகியவற்றின் மொத்தமே, தொகுதியே ஆகும் என்றோ நிரூ பிக்க அவர்கள் முயல்கிறுர்கள். திரிபான தத்துவவகைப்பட்ட இந்தப் பிரபஞ்ச அறிவு மனிதனுடைய உணர்வைப் பொருளி யலான பிரபஞ்சத்துக்கு எதிர்நிறுத்துகிறது. மனிதனுக்கு இயல் பாக வழங்கப்பட்டிருப்பவை அவனுடைய அறிவின் விளைபொ ருள்களான கருத்துக்களும் உணர்ச்சிகளும் மட்டுமே என்று அகநிலேக் கருத்துமுதல்வாதிகள் கூறுகிறுர்கள். மனித உணர் வே தொடக்கப் புள்ளி என்றும் பின்பு அதிலிருந்து இயற்கை வெளிப்படுகிறது என்றும் அவர்கள் வாதித்து, இந்த வாதத்தின் அடிப்படையில் பொருள்களும் பிரபஞ்சம் முழுவதுமே புறநிலே யாக நிலவுவதையும் அதன் வளர்ச்சியின் ஒழுங்குமுறையையும் ஒரு வகையில் அல்லது மறு வகையில் மறுக்கிறுர்கள்.

புறநிலேக் கருத்துமுதல்வாதிகள் மனித சிந்தனைகள், கருத்துக் கள் ஆகியவையும், இயற்கையுமே கூட, பரம கருத்து, பிரபஞ்ச வியாபகமான அறிவு, பொருளியலானதற்கு அப்பாற்பட்ட எதார்த்தம் ஒன்றின் துணுக்கு மட்டுமே எனக் கருதுகிறுர்கள்.

மனிதன்மீது சார்பு அற்ற பிரபஞ்சம் நிலவுவது சாத்தியமே எனப் புறநிலைக் கருத்துமுதல்வாதிகள் ஒப்புக்கொள்கிறார்கள். அகநிலைக் கருத்துமுதல்வாதிகள் போன்று அகநிலைப்பொருளின் தன்னுணர்வையோ, மனிதனது உணர்ச்சிகளையோ அவர்கள் முதன்மையாக ஏற்றுக்கொள்வதில்லை. தானேயான கருத்து, அதாவது ''பிரபஞ்சக் கருத்து'' தான் முதன்மையானது என்றும், இந்தக் கருத்தியலானதிலிருந்தே, ஆன்மீகமானதிலிருந்தே இயற்கை, வெளிப் பிரபஞ்சம், நிலவுபவை அனைத்தும் தோன்றின என்றும் அவர்கள் முடிவுகட்டுகிறார்கள்.

இவ்வாறாக, புறநிலைக் கருத்துமுதல்வாதமும் அகநிலைக் கருத்துமுதல்வாதமும் கருத்துமுதல்வாதத் தத்துவத்தின் வகைகள் ஆகும். ஆனால் முக்கியமான, அடிப்படையான விஷயத்தில் அவை ஒன்றுக்கொன்று வேறுபட்டவை அல்ல. இரண்டுமே கருத்தியல் தொடக்கத்தை அடிப்படையாக வைத்துக்கொள்கின்றன. கருத்து, ஆன்மா, அதாவது உணர்வு முதன்மையானது என்றும் யதார்த்தப் பிரபஞ்சம், அதாவது இயற்கை இரண்டாவது என்றும் இரண்டுமே ஒப்புக்கொள்கின்றன.

இங்கே ஒரு விஷயத்தைக் குறிப்பிடுவது அவசியம்: தத்துவக் கருத்துமுதல்வாதம் என்பது மனித அறிவின் தற்செயலான மருள் அல்ல. பிரபஞ்சம் பற்றிய கருத்துமுதல்வாதச் சிந்தனை மக்களின் சமூக வாழ்விலும் மனித ஞானத்தின் இயல்பிலேயுமே ஆழ்ந்து வேரூன்றியுள்ளதாகும்.

வரலாற்று வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களிலேயே, மக்களுக்கு இடையே சொத்து விஷயத்தில் ஏற்றத் தாழ்வு உண்டாகி அடிமைச் சொந்தக்கார அமைப்பு உருவானபோது, அறிவு உழைப்பு ஆளும் வர்க்கத்தாரின், அடிமைச் சொந்தக்கார வர்க்கத்தாரின் சிறப்புரிமை ஆக்கப்பட்டது. கடினமான உடலுழைப்போ ஒடுக்கப்பட்டோரின், அடிமைகளின் விதியாயிற்று. இந்த நிலைமைகளில் உடலுழைப்பு எல்லாவகையிலும் இழிவுபடுத்தப்பட்டு இகழப்பட்டது. அறிவு உழைப்பின் முக்கியத்துவம் ஒரேயடியாக மிகைப்படுத்தப்பட்டது. விஞ்ஞானத்திலும் கலையிலும் ஈடுபடுவது இன்னும் சிறப்பாக மதிக்கப்பட்டது. மனிதனது அறிவு உழைப்பு, ஆன்மீகச் செயல்கள் ஆகியவற்றின் பங்கு மிகைப்படுத்தப்படுவதில் ஆளும் வர்க்கத்தினர் எப்போதும் அக்கறை கொண்டிருந்தனர். இயற்கையிலும் சமூகத்திலும் நிகழும் மாறுதல்கள் இயற்கைக்கு மேற்பட்ட கருத்தையே,

பரமான்மாவையே சார்ந்திருக்கின்றன என்னும் மருட்சியை அவர்கள் ஆதரித்து வந்தார்கள்.

இன்னொரு விஷயத்தையும் கவனத்தில் கொள்வது அவசியம்: பிரபஞ்சம் பற்றிய கருத்துமுதல்வாதப் புலனறிவு தோன்றியது உற்பத்தி வளர்ச்சியின் தரம் மிகத் தாழ்ந்த நிலையில் இருந்தபோது, மிகவும் அற்ப அறிவும் சுற்றியுள்ள பிரபஞ்சம் பற்றி மக்களிடையே பெரிதும் பண்பற்ற, வளர்ச்சிபெருத எண்ணங்களும் நிலவிவந்த காலத்தில். இயற்கையின் மூலச் சக்திகள் (பூகம்பம், வறட்சி, பெருவெள்ளம் முதலியன) அப்போது மனிதனுக்கு மர்மமானவையாகவும் முற்றிலும் தடுக்க இயலாதவையாகவும் தென்பட்டன. இயற்கைச் சக்திகளைப் பற்றி அனேகமாக ஒன்றுமே அறியாமையால் மக்கள் அவற்றைத் தெய்விகம் ஆக்கிவிட்டார்கள்.

அதோடுகூட, இயற்கை நிகழ்ச்சிகளில் வியப்பூட்டும் ஒத்திசைவும் கண்டிப்பான ஒழுங்கும் விதிக்கு இணக்கமான தன்மையும் எங்கும் நிலவுவதை அவர்கள் கவனித்தார்கள். இரவும் பகலும் முறைப்படி ஒன்றை ஒன்று தொடர்வது, வான ஒளிக்கோளங்களின் அளவான இயக்கம், உயிருள்ள அங்கஜீவிகளின் கட்டமைப்பு செவ்வைப்பாடும் நோக்கப் பொருத்தமும் கொண்டிருத்தல் முதலியவற்றை அவர்கள் கண்டார்கள். இயற்கையின் அறிவுசான்ற படைப்பாளி, அல்லது இயற்கைக்கு மேற்பட்ட எல்லாம் வல்ல சக்தி ஒன்று நிலவுவதாகவும், ஒவ்வொரு மனிதனின் விதியும் உட்பட உலகில் உள்ளவை யாவும் அதையே சார்ந்திருப்பதாகவும் ஓர் எண்ணம் இந்தக் காரணங்களால் ஜனங்களுக்கு அவர்கள் அறியாமலே உதித்தது.

கற்பனைகளை ஆதாரபூர்வான அறிவிலிருந்தும் மருளை இயல்பான உண்மையிலிருந்தும் வேறுபிரித்து அறிய மக்கள் எடுத்த எடுப்பிலேயே கற்றுக்கொண்டுவிடவில்லை. பிரபஞ்சம் பற்றிய தத்துவப் புரிவின் பாதை மிகச் சிக்கலானது. அறிவில் எப்போதுமே ஒரு சிறிது கற்பனை அடங்கித்தான் இருக்கிறது. அறிவுச் செயல்முறையின் ஓர் அம்சத்தை, ஒரு பகுதியை ஒருதலைச் சார்பாக மிகைப்படுத்துவதும் முழுமையாகக் கருதிவிடுவதும் இந்தக் காரணத்தால் சாத்தியம் ஆகிவிடுகிறது. இதுவும் கருத்துமுதல்வாதத்துக்கு இட்டுச் செல்கிறது.

பின்னர், சுறண்டும் வர்க்கங்கள் தோன்றியதும் சமூகச் சக்திகள் பொதுமக்களுக்கு விளங்கா மர்மமான அர்த்தம் பெற்று

விட்டன. ஒடுக்குமுறையும் அடிமைப்படுத்தலும் கொண்ட அமைப்பு மேலுலகிலிருந்து நிலேநாட்டப்பட்ட ஒழுங்கு என்று சொத்துள்ளவர்களேத் திருப்திப்படுத்தும் பொருட்டு மதஸ்தாபனங்கள் பசப்பின. ஆதிக்கம் வகிப்பவர்களின் ஆட்சி அதிகாரத்தையும் தனியார் சொத்துரிமையையும் சமூக ஏற்றத் தாழ்வுகளேயும் ஆண்டவனுல் ஏற்படுத்தப்பட்டவை என அவை கூறின.

இவ்வாறு வரலாற்றுப்போக்கில் உருவாயிற்று கருத்துமுதல்வாதத்துக்கும் மதத்துக்கும் இடையே நெருங்கிய ஐக்கியம். நெடுங்காலமாக வழக்கொழிந்துபோன சுறண்டலின் பல்வேறு வடிவங்களேப் பாதுகாக்கவும் நியாயப்படுத்தவும் இன்றும் இவை சமூகத்தின் பிற்போக்குச் சக்திகளால் பயன்படுத்தப்படுகின்றன. சுறண்டுவோரின் எந்த அரசும் பிரபஞ்சம் பற்றிய மத கருத்துமுதல்வாதச் சிந்தனேயின் ஏதேனும் ஒரு வடிவத்தை இன்றும் ஆதரிக்கிறது, அதற்குப் பொருந்தும் கருத்துக்களேப் பரப்ப எல்லா விதத்திலும் முயற்சி எடுத்துக் கொள்கிறது.

மிகத் தொன்மைக் காலம் முதலே கருத்துமுதல்வாதமும் மதமும் பிரதானமாகப் பிற்போக்குச் சக்திகளுக்கே பயன்பட்டு வந்திருக்கின்றன. மாருக, பொருள்முதல்வாதம் வழக்கமாக எப்போதுமே சமூகத்தின் முன்னணிச் சக்திகளின் நலன்களே வெளியிட்டு வந்திருக்கிறது. பொருள்முதல்வாதத் தத்துவம் விஞ்ஞானம், சமூக-வரலாற்று நடைமுறை ஆகியவற்றின் விவரங்களேப் பொதுமைப்படுத்த உதவுகிறது, அவற்றின் வளர்ச்சிக்கு வாய்ப்பு அளிக்கிறது.

நாம் ஏற்கனவே கூறியதுபோன்று தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினே இரு பகுதிகள் கொண்டது. அதன் இரண்டாவது பகுதி **பிரபஞ்சத்தின் அறியப்படும்** தன்மை குறித்த கேள்விக்கு விடை அளிக்கிறது. இந்தக் கேள்விக்கு விடை காண்பதிலும் எதிரெதிரான கருத்துக்கள் மோதிக்கொள்கின்றன. மனிதனது சிந்தனேத்திறன் சுற்றியுள்ள பிரபஞ்சம் பற்றிய நம்பகமான அறிவை அவனுக்கு நல்குகிறது என்று பொருள்முதல்வாதிகள் எப்பொழுதும் வலியுறுத்தி வந்திருக்கிருர்கள். பிரபஞ்சத்தை அறிவது சாத்தியமே என்ற உணர்வு மனித அறிவின் ஆற்றல் மீது நமக்கு நம்பிக்கை உண்டாக்குகிறது, ஞானம் பெறுவதற்கும் மாற்றி அமைக்கும் ஊக்கம்மிக்க செய்கை புரிவதற்கும் நம்மைத் தூண்டுகிறது.

பிரபஞ்சத்தை அறிவது இயலும் என்பதை மறுப்பவர்கள் அறியொணுமைக் கொள்கையினர் எனப்படுவார்கள். அறியொணுமைக் கொள்கையினரின் கருத்துப்படி, நமது ஞானத்தின் நம்பற்குரிய தன்மையை நம்மால் நிர்ணயிக்கவே முடியாது, ஏனெனில் பொருள்கள், தோற்றங்கள், வஸ்துக்கள் ஆகியவற்றை அவற்றின் கருத்தியலான பிரதிபலிப்புடன் ஒப்பிடுவது இயலாது. பொருள்களேயும் தோற்றங்களேயும் பற்றிய எல்லாத் தகவல்களும் நமது சொந்தப் புலனுணர்ச்சிகள் வாயிலாகவே, புலனறிவு மூலமாகவே நமக்குக் கிடைக்கின்றன. ஆகவே, பொருள்களும் அவற்றின் பண்புகளும் அவை உண்மையில் உள்ள படியே புலன்களால் அறியப்படுகின்றன என்ற நம்பிக்கை நம்மிடம் இல்லே என்று அவர்கள் கூறுகிருர்கள்.

பொருள்கள் யதார்த்தத்தில் புறநிலேயாக நிலவுவதைச் சில அறியொணுமைக் கொள்கையினர் ஒப்புக்கொள்கிருர்கள் என்பது உண்மையே. ஆனுல் அவர்களும் அவற்றை அறிவது இயலும் என்பதைச் சந்தேகிக்கிருர்கள். பொருள்முதல்வாதத்தை இவ்வாறு ''கூச்சத்துடன்'' ஒப்புக்கொள்வது, பொருள்முதல்வாதத்துக்கும் கருத்துமுதல்வாதத்துக்கும் நடுவே ''இடைப்பட்ட'' நிலேயை மேற்கொள்வதிலும் இவ்விரண்டுக்கும் ''மேலே'' எழும்பும் முயற்சிகளே நியாயப்படுத்துவதிலும் அவர்களுக்கு உதவியாயிருக்கிறது. எனினும் தத்துவத்தில் இம்மாதிரியான ''நடுநிலேமை'' கருத்துமுதல்வாதத்துக்குப் போதிய விசாலமான இடத்தை எப்போதும் விட்டுக்கொடுக்கிறது. இது தவிர்க்க இயலாதவாறு குழப்பத்திற்கே இட்டுச் செல்கிறது.

தற்கால பூர்ஷ்வாக் கருத்துமுதல்வாதத் தத்துவத்தில், துலக்கமாக வெளிப்படும் அறியொணுமைக் கொள்கையின் போக்கு, அறிவின் ஆற்றலில் நம்பிக்கையில்லாத போக்கு கடைப்பிடிக்கப்படுகிறது. மனித அறிவின் வாய்ப்புக்களே வரையறைக்கு உட்படுத்திவிடுவதன் வாயிலாக அறியொணுமைக் கொள்கை ஏதோ மாயமான, இயற்கைக்கு மேற்பட்ட ஒன்றின் மீது நம்பிக்கைக்கு இடம் அளிக்கிறது. அதனுல்தான் அது கருத்துமுதல்வாதத்துடனும் மதத்துடனும் நெருங்கிய தொடர்புகொண்டிருக்கிறது.

ஒரு தத்துவக் கண்ணேட்டத்தின் தன்மை அது எதை முதன்மையாகக் கருதுகிறது, பிரபஞ்சம் அறியப்படக் கூடியது என ஒப்புக்கொள்கிறதா இல்லேயா என்பவற்ருல் மட்டுமே

நிச்சயிக்கப்படுவதில்லை. இந்தக் கண்ணோட்டத்தின் தன்மையைச் சித்திரிப்பதற்கு இன்னொரு விஷயத்தையும் கவனத்தில் கொள்வது முக்கியம். நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தை ஆராய்வதற்கு எந்த அறிதல் முறை கையாளப்படுகிறது என்பதே அந்த விஷயம். தத்துவத்தின் வரலாற்றை நாம் கூர்ந்து நோக்கினல் இம்மாதிரியான இரண்டு முறைகள், ஒன்றுக்கொன்று எதிரான இரண்டு சிந்தனை வழிகள் நிலவுவதைக் காண்போம். அவற்றில் ஒன்று இயக்க இயல், மற்றது மாருநிலைவாதம்.

இயக்க இயல் என்பதன் மூலச் சொல் டயலெக்டிக்ஸ் என்ற கிரேக்க வார்த்தை. தொன்மைச் சிந்தனையாளர்கள் உரையாடல்களையும் விவாதங்களையும் நிகழ்த்துவதற்கான முறையைக் குறிப்பதற்கு இச்சொல்லை வழங்கினர்கள். இம்முறையின் வாயிலாகத் தர்க்கங்களில் முரண்பாடுகள் வெளிப்படுகின்றன, உண்மை தெளிவுபடுகிறது, கருதுகோள்கள் துல்லியமாக வரையறுக்கப்படுகின்றன. பின்னர் இந்தச் சொல் தத்துவ முறை என்று, அதாவது சுற்றியுள்ள பிரபஞ்சத்தை அறிவதற்கான பொது விதிகளும் சாதனங்களும் என்று, எதன் உதவியால் சிந்தனைத் திறன் ஒரு குறிப்பிட்ட வஸ்துவை ஆராய்கிறதோ அந்த முறை என்று பொருள்படலாயிற்று.

ஒன்ருனது, தொடர்புள்ள முழுமை என்ற நோக்கில் பிரபஞ்சத்தை ஆராய்கிறது இயக்க இயல். எல்லாப் பொருள்களும் நிகழ்ச்சிகளும் அவற்றின் சிந்தனைப் பிரதிபலிப்பான நமது கருதுகோள்களும் ஒன்றன்மீது ஒன்று பாதிப்பு விளைக்கின்றன, இடையருத இயக்கமும் முரண்பாடுள்ள வளர்ச்சியும் கொண்டு விளங்குகின்றன என்பதை இயக்க இயல் அடிப்படையாகக் கொள்கிறது. இயற்கை, வரலாறு, மனிதச் சிந்தனை ஆகியவற்றின்மீது இயக்க இயல் கண்ணோட்டத்திற்கு, ஆராயப்படும் பொருளை அதன் எல்லாத் தொடர்புகளிலும் உறவுகளிலும் சோதித்து அறிவதும், அதன் யதார்த்தமான வளர்ச்சி வரலாற்றைத் துருவி ஆராய்வதும் அதன் மாற்றங்களின் சிக்கலான, முரண்பாடுள்ள செயல்முறைக்குரிய உண்மைக் காரணங்களை வெளிப்படுத்துவதும் தேவைப்படுகின்றன.

மாருநிலைவாதம் என்பதும் மெட்டாபிஸிக்ஸ் என்ற கிரேக்கச் சொல்லின் அடியாகப் பிறந்தது. தொன்மைக் காலத்தில் அது நிலவுபவை அனைத்தினதும் தொடக்கம் பற்றிய போதனை என்று பொருள்பட்டது. பிற்காலத்தில் இந்தச் சொல் ஒரு குறிப்

பிட்ட சிந்தனை முறையைக் காட்டுவதற்குப் பயன்படலாயிற்று. அந்த முறைப்படி பொருள்களும் தோற்றங்களும் இயக்கமற்றவை, என்றென்றும் ஒரே நிலையில் இருப்பவை, உள் முரண்பாடுகள் இல்லாதவை என்ற வகையில் அவற்றின் பரஸ்பரத் தொடர்புக்கு வெளியே ஆராயப்படுகின்றன.

16—17ம் நூற்றுண்டுகளில் மாருநிலைவாத அறிவு முறை இயற்கை விஞ்ஞானத்தில் நல்ல பயன் விளைக்கும் பங்கு ஆற்றியது. பி. எங்கெல்ஸ் ''டூரிங்குக்கு மறுப்பு'' என்னும் தமது நூலில் குறிப்பிட்டதுபோல, பௌதிகம், ரசாயனம், உயிரியல் முதலிய இயற்கை விஞ்ஞானங்களினது வளர்ச்சியின் தொடக்கக் காலத்தில் இயற்கையைத் தனித்தனிப் பகுதிகளாக வேறுபடுத்தி, இயற்கையின் பல்விதச் செயல்முறைகளைத் திட்டவட்டமான வகுப்புக்களாகப் பிரித்து, மற்ற நிகழ்ச்சிகளுடனும் செயல்முறைகளுடனும் தொடர்பற்ற தனித்த நிலையில் அவற்றைச் சோதித்து அறிவதன் வாயிலாக இயற்கையை ஆராய்வது இன்றியமையாததாக இருந்தது. அந்தக் காலத்தில் இயற்கை விஞ்ஞானம் பெற்ற மிகப் பெரிய வெற்றிகளுக்கு இது அடிப்படை நிபந்தனையாக விளங்கியது என எங்கெல்ஸ் கூறினார்.

ஆனல் மாருநிலைவாதத்தின் குறுகிய வரம்புக்கு உட்பட்ட தன்மை 18ம் நூற்றுண்டிலேயே வெளிப்பட்டுவிட்டது, ஏனெனில் அதன் வரம்புச் சட்டங்கள் விஞ்ஞானத்தின் வளர்ச்சியைத் தடைப்படுத்தலாயின. இயற்கை, சமூக விஞ்ஞானங்களால் திரட்டப்பட்ட யதார்த்தமான விவரங்கள் பிரபஞ்சம் பற்றிய மாருநிலைவாத அறிவின் குறுகிய தன்மையையும் ஒருதலைச்சார்பான தன்மையையும் காட்டின.

எனினும் பூர்ஷ்வாத் தத்துவத்தில் மாருநிலைவாதம் தாண்டப்படவில்லை. இன்றளவும் அது நிலவுகிறது. இயற்கையும் சமூகமும் வளர்கின்றன என்னும் உண்மையை முழுமையாகவும் நிபந்தனை இன்றியும் மறுக்கும் தத்துவ அறிஞன் எவனையும் காண்பது தற்போது கடினம் என்பது உண்மையே. முக்கிய விஷயமும் இது அல்ல. வழக்கமாகத் தற்கால மாருநிலைவாதிகள் பொதுத் தொடர்பின் தன்மையையும் வளர்ச்சியின் தன்மையையும் போலியாக எளிமைப்படுத்தியே புரிந்துகொள்கிருர்கள். இயக்கம், வளர்ச்சி இவற்றின் உண்மை ஊற்றுக்கண் பற்றிய கேள்வியை அவர்கள் மழுப்பலாக மறைவில் வைத்து

விடுகிருர்கள்; பொருளியலற்ற சக்திகளின் செயல்களில் அது இருப்பதாகப் பாவித்துக்கொள்கிருர்கள், அல்லது அது அறியொணுதது என்று பறைசாற்றுகிருர்கள். இந்தக் காரணத்திஞலேயே மாருநிலைவாதம் கருத்துமுதல்வாதத்துடனும் அறியொணுமைக் கொள்கையுடனும் ஒன்றிணைந்துவிடுகிறது.

பொருள்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் முரண்பாடுள்ள அம்சங்களையும் அவற்றின் பரஸ்பரச் செயல்பாட்டையும் ஆராய்வதற்கும், அடிப்படையான, பண்புவகைப்பட்ட மாற்றங்களின் தன்மையை வரையறுப்பதற்கும் மாருநிலைவாத அறிவுச் செயல்முறை வலிவற்றதாகி விடுகிறது. சமூக நிகழ்ச்சிகளை விளக்குகையில் தற்கால மாருநிலைவாதிகள் வர்க்க முரண்பாடுகளை மூடிமறைக்கிருர்கள், சமூகப் புரட்சிகளின் தவிர்க்க இயலாமையை மறுக்கிருர்கள், அல்லது அவை தாமே தோன்றும் அதிர்ச்சிகள் என்றும் அவற்றை முன்காண முடியாது என்றும் கூறிவிடுகிருர்கள். இவ்வாறு செய்கையில் அவர்கள் சமூக வளர்ச்சியின் புறநிலையான விதிமுறைக்குட்பட்ட தன்மையைப் புறக்கணிக்கிருர்கள். இரண்டாந்தர முக்கியத்துவமுள்ள அல்லது வெறுமே விஷயத்துக்குப் புறம்பான காரணிகளை (உதாரணமாக ஆட்சி அதிகாரம் பெற்ற தனி நபர்களின் செயல்களை) மேற்கோள்களாக எடுத்துக்கொண்டு அவற்றை முழுமை வாய்ந்தவையாகக் காட்ட முயல்கிருர்கள், சமூக முன்னேற்றத்தை மறுக்கிருர்கள்.

தற்கால பூர்ஷ்வாத் தத்துவத்தில் எஞ்சியிருக்கும் விஞ்ஞானத்துக்கு எதிரான மாருநிலைவாதச் சிந்தனைமுறை, வழக்கொழிந்த முதலாளித்துவச் சமூக உறவுகளை நிலையாக வைத்திருப்பதிலும் நியாயப்படுத்துவதிலும் அக்கறை கொண்ட சுறண்டும் வர்க்கத்தாருக்கே உதவியாயிருக்கிறது.

இயக்க இயல்வாதமும் மாருநிலைவாதமும் எதிரெதிரான இரு அறிதல் முறைகள், ஒன்றையொன்று நீக்கிவிடும் இரு சிந்தனை முறைகள். பொருள்முதல்வாதம், கருத்துமுதல்வாதம் இரண்டுமே இயக்க இயல்வாதப் போக்கோ, மாருநிலைவாதப் போக்கோ கொண்டிருக்க முடியும். ஆனுல் தர்க்கரீதியான பொருள்முதல்வாதம் மாருநிலைவாதத்துக்கு ஒவ்வாது. இவ்வாறே இயக்க இயல்வாதமும் கருத்துமுதல்வாதப் போக்கோ பொருள்முதல்வாதப் போக்கோ கொண்டிருக்கக் கூடும்.

எனினும் தர்க்கரீதியான இயக்க இயல்வாதம் கருத்துமுதல் வாதத்துக்கு ஒவ்வாது.

தொன்மைக்காலம் தொடங்கி நம் காலம்வரையுள்ள தத்துவத்தின் வரலாறு பொருள்முதல்வாதத்துக்கும் கருத்துமுதல் வாதத்துக்கும் இடையே, இயக்க இயல்வாதத்துக்கும் மாறு நிலேவாதத்துக்கும் இடையே போராட்டத்தால் நிறைந்துள்ளது. தத்துவக் கருத்துக்களின், தத்துவரீதியான பிரபஞ்சக் கண்ணேட்டங்களின் இந்தப் போராட்டம் கடைசியில் எதார்த்தமான சமூகச் சக்திகளின் — குறிப்பிட்ட வகுப்புக்கள், சமூகக் குழுக்கள் ஆகியவற்றின் — போராட்டமே என்பதைக் காண வேண்டும்.

பொருள்முதல்வாதமும் இயக்க இயல்வாதமும் மிகத் தொன்மைக் காலத்திலேயே தோன்றின. திட்டமான வரலாற்று நிபந்தனேகளேப் பொறுத்தும் தத்துவத்திற்குரிய விஷயங்களும் அதன் நோக்கமும் கடமையும் மாறியதைப் பொறுத்தும் அவை தமது வடிவங்களே மாற்றிக்கொண்டன. மார்க்ஸீயத்துக்கு முற்பட்ட பொருள்முதல்வாதத்தின் வரலாற்றில் பின்வருவன தனிப் பிரித்துக் காணப்படுகின்றன: அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தின் சிந்தனேயாளர்களது பொருள்முதல்வாதம்; பூர்ஷ்வா சமூகத்தின் மாருநிலேவாதப் பொருள்முதல்வாதம்; ருஷ்யாவிலும் பிற நாடுகளிலும் 19ம் நூற்ருண்டில் நிலவிய புரட்சிகர ஜனநாயகவாதிகளின் பொருள்முதல்வாதம். மார்க்ஸீயத்துக்கு முந்திய இயக்க இயல்வாதத்தின் வரலாற்றில் பின்வருவன தனிப் பிரித்துக் காணப்படுகின்றன: அடிமைச் சொந்தக் காரச் சமூகத்தின் சிந்தனேயாளர்களது இயல்பாயெழுந்த இயக்க இயல்வாதம்; ஜெர்மானிய சாஸ்திரீயத் தத்துவத்தின் கருத்துமுதல்வாத இயக்க இயல்வாதம்; புரட்சிகர ஜனநாயக வாதிகளின் இயக்க இயல்வாதம்.

கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ், இவர்களால் நிறுவப்பட்டு விளாதிமிர் இல்யீச் லெனினுல் வளர்வுறுத்தப் பட்ட இயக்க இயல் பொருள்முதல்வாதம் உண்மையிலேயே விஞ்ஞான முறையில் அமைந்த தத்துவமாக விளங்குகிறது. விஞ்ஞானம், சமூக-வரலாற்று நடைமுறை ஆகியவற்றின் தற்கால நிலேக்குப் பொருந்துகிற பொருள்முதல்வாதத்தின் சிறந்த வடிவம் ஆகும் இது. தற்காலச் சமூகத்தின் யாவற்றிலும் முன்னணியிலுள்ள வர்க்கமான புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்

தின் நலன்களை, உழைப்பாளி மக்கள் அனைவரதும் நலன்களை வெளியிடுவதன் காரணமாக மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் வாழ்க்கையுடன், கம்யூனிஸ நிர்மாண நடைமுறையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. உலகைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதற்கேற்ற நம்பகமான வழிகளை அது காட்டுகிறது. கம்யூனிஸத்தின் சித்தாந்த அடிப்படையாக அது செயலாற்றுகிறது.

ஆனால் மக்கள் வரலாற்றைக் கற்றுக்கொள்ளாமல் விட்டு விடக் கூடாது. ஏனெனில் சென்ற காலம் ஏதாவது ஒரு வகையில் நிகழ்காலத்தில் வாழ்கிறது. நிகழ்காலமோ வருங்காலத்தின் உள்ளார்ந்த பகுதியாகத் தவிர்க்க இயலாதவாறு விளங்குகிறது. எனவே, மார்க்ஸீயத்துக்கு முற்பட்ட தத்துவத்தில் பொருள்முதல்வாதம், இயக்க இயல்வாதம் ஆகியவற்றின் வளர்ச்சியின் பிரதானக் கட்டங்களை நாம் மேலே சுருக்கமாக ஆராய்வோம், அவற்றின் தன்மையைச் சித்திரிக்கும் சிறப்பியல்புகளை விவரிப்போம்.

## தொன்மைக் கிரேக்கர்களின்
## எளிய பொருள்முதல்வாதமும் இயக்க இயல்வாதமும்

தொன்மைக் காலக் கிழக்கு நாடுகளான எகிப்து, பாபிலோனியா, இந்தியா, சீனா ஆகியவற்றிலும் கிரீஸ், ரோம் ஆகிய ஐரோப்பிய நாடுகளிலும் அடிமைச் சொந்தக்காரச் சமூகம் நிலவியது என்பது வரலாற்றிலிருந்து தெரிகிறது. செல்வர்களான அடிமைச் சொந்தக்காரர்களும் மதகுருமாரும் வர்த்தகர்களும் இந்தச் சமூகத்தில் சுறண்டும் வர்க்கத்தினராக விளங்கினார்கள். உரிமைகள் அற்ற அடிமைகள், சொற்ப நிலம் படைத்த குடியானவர்கள், கம்மியர்கள் ஆகியோரின் உழைப்பைச் சுறண்டி இவர்கள் வாழ்ந்துவந்தார்கள்.

தங்களுக்குள் பகைமை கொண்டு, பொருளாதார, அரசியல் ஆதிக்கத்தின் பொருட்டு உக்கிரமான போராட்டம் நிகழ்த்தி வந்த அடிமைச் சொந்தக்காரர்களது குழுக்களின் கொள்கைவாதம் என்ற வகையில் தத்துவம் இந்நாடுகளில் தோன்றி வளர்ந்தது. அடிமைகளையும் சுதந்திரக் குடிமக்களில் ஏழைகளையும் பொறுத்தவரையிலோ, அவர்கள் தேவைகளாலும் அளவிட இயலாதவாறு கடினமான உழைப்பினாலும் நசுக்கப்

பட்டு, விஞ்ஞானத்திலோ தத்துவத்திலோ ஈடுபடும் வாய்ப்பே அற்றவர்களாக இருந்தார்கள்.

அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தில் நிலவிய மத-கருத்து முதல்வாதப் பிரபஞ்ச அறிவு, பிரபுவம்சத்தினரான ஒருசில அடிமைச் சொந்தக்காரர்களுக்கு லாபகரமான பிற்போக்குள்ள அரசாட்சி முறை வடிவங்களை என்றென்றும் நிலையாக வைத்திருப்பதையே நோக்கமாகக் கொண்டிருந்தது. ஆயினும் நெடுங்காலத்துக்கு முற்பட்ட அந்தச் சகாப்தத்திலும் சமூகத்தில் முன்னணிச் சக்திகளும் நிலவின, கொடுங்கோல் ஆட்சிமுறைகளை இவை எதிர்த்தன. பிரபஞ்சம் பற்றிய கருத்து முதல்வாத, மத-புராணக் கற்பனைகளை எதிர்த்து இவை போராடின. பல்வேறு சாயல்கள் கொண்ட தத்துவச் சிந்தனைகள் இந்தப் போராட்டத்தில் உருவாயின. நாளடைவில் இவை வெவ்வேறு தத்துவப் போக்குகளாக வளர்ந்தன.

அடிமைச் சொந்தக்காரச் சமூக நிலைமைகளில் தத்துவச் சிந்தனை சிறப்பாக உயர் வளர்ச்சி பெற்றது தொன்மைக் கிரீஸ் நாட்டில் ஆகும். தொன்மைக்காலக் கிழக்கு நாடுகளில் திரட்டப்பட்டிருந்த இயற்கை விஞ்ஞான அறிவையும் தத்துவக் கருத்துக்களையும் புரிந்துகொண்டு தொன்மைக் கிரேக்கச் சிந்தனையாளர்கள் அவற்றை மேலும் வளர்த்தார்கள். அப்போதுதான் தோன்றியிருந்த விஞ்ஞானத் துறையிலும் தத்துவத் துறையிலும் பல புதுமைகளை அவர்கள் புகுத்தினார்கள். தொன்மைக் கிரேக்கத் தத்துவத்தின் பிரதிநிதிகள் பொருள்முதல்வாதத்தையும் இயக்க இயல்வாதத்தையும் உருவாக்குவதில் ஆற்றிய பங்கை முதன்மையாகக் கருத்தில் கொண்டே அந்தத் தத்துவத்தின் வரலாற்று முக்கியத்துவத்தை நாம் நிச்சயிக்கிறோம்.

பண்டைக் கூட்டுச் சமூக அமைப்புக்குப் பதிலாக அடிமைச் சொந்தக்கார அமைப்பு வந்த காலப்பகுதியில் தோன்றியது தொன்மைக் கிரேக்கத் தத்துவம்.

தொன்மைக் கிரீஸின் முதல் தத்துவ அறிஞர்கள் இயல்பாயெழுந்த பொருள்முதல்வாதிகள் ஆவர். ஒரே முழுமை என்ற வகையில் பிரபஞ்சம் என்ன என்று புரிந்துகொள்ளவும் எல்லா இயற்கைப் பொருள்களுக்கும் முதல் அடிப்படையை, முதல் தொடக்கத்தைக் கண்டுகொள்ளவும் அவர்கள் முயன்றார்கள். தொன்மைக் கிரேக்கப் பொருள்முதல்வாதத்துக்கு வித்திட்டவராக தேலீஸ் (*Thales*) என்பவர் (சுமார் கி. மு. 624—547)

கருதப்படுகிறுர். நிலவுபவை எல்லாவற்றுக்கும் அடிப்படை ஆவது நீர் என அவர் கருதினுர். அவருடைய கருத்துப்படி எல்லாப் பொருள்களுக்கும் நீரே பொருளியல் முதல்தொடக்கம் ஆகும்: எல்லாம் அதிலிருந்தே தோன்றுகின்றன, எல்லாம் அதாகவே மாறுகின்றன. அவருக்குப் பின் வந்தவரான அனுக்ஸிமாண்டர் (*Anaximander*) (சுமார் கி. மு. 610—546) வரையறையற்ற ஊடகத்தை (அப்பெய்ரோன்) அடிப்படையாக எடுத்துக் கொண்டார். இந்த ஒரே பொருளியல் முதல்தொடக்கம் எப்போதும் இடையருத இயக்கத்தில் இருப்பதாக அவர் காட்டினுர். அனுக்ஸிமாண்டரின் எண்ணப்படி அப்பெய்ரோனிலிருந்து எதிர்நிலைகள் உண்டாகின்றன. இவை ஒன்று கூடுவதனுலேயே பொருள்களின் பல்வகைத் தொடக்கங்கள்(நிலம், நீர், நெருப்பு) உருவாகின்றன. அனுக்ஸிமாண்டரின் சீடரான அனுக்ஸிமெனிஸ் (*Anaximenes*) (சுமார் கி. மு. 588—525) நிலவுபவை யாவற்றுக்கும் முதல்தொடக்கம் காற்றே என்று கருதினுர். அவரது கருத்துப்படி, காற்றே எல்லாப் பொருள்களதும் அடிப்படையின் எல்லையற்ற, பண்புகள் அற்ற அடிப்படை. அது வெவ்வேறு நிலைகளில் காணப்பட வல்லது. அடர்த்தி குறைந்ததும் அது நெருப்பாக மாறுகிறது. அடர்ந்து இறுகியதும் அது வீசு காற்று, நீர், கல் முதலியன ஆகிறது.

பிரபஞ்சத்தின் ஒருமையையும் பல்வகைத் தன்மையையும் எல்லாப் பொருள்களும் எதனுல் ஆனவை என்பதையும் பற்றித் தொன்மைக் கிரேக்கத் தத்துவ அறிஞர்கள் கொண்டிருந்த கருத்துக்கள் இத்தகையன. இந்தக் கருத்துக்கள் இன்னும் தொடக்க நிலையில் இருந்தன. தெளிவற்ற அனுமானங்களின் தன்மையைக் கொண்டிருந்தன. ஆயினும் சுற்றியுள்ள பிரபஞ்சம் அவற்றின் உதவியால் புரிந்துகொள்ளப்பட்டது. பிரபஞ்சத்தில் நிகழும் பல்வித மாற்றங்களின் அடிப்படையில் இருந்த பொதுமை கிரகித்துக்கொள்ளப்பட்டது. இயற்கையின் விதிமுறைக்குட்பட்ட மாறுதல்களை விளக்குவதற்கு முதல் முயற்சிகள் செய்தவர்கள் தொன்மைக் கிரேக்கத் தத்துவ அறிஞர்களே ஆவர். எடுத்துக்காட்டாக அனுக்ஸிமாண்டர், உயிர்களின் தோற்றத்தை விளக்க முயல்கையில், சூரிய வெப்பம், ஈரம் இவை காரணமாகவே உயிர் தோன்றியது என்று வலியுறுத்தினுர். வானவில், மின்னல், பூகம்பம், சூரிய கிரகணம் போன்ற நிகழ்ச்சிகளுக்கும் காரணங்களைத் தொன்மைக் கிரேக்கர்கள்

தேடினர்கள். விண்ணக ஒளிக் கோளங்களின் தோற்றம் பற்றி அவர்கள் ஆழ்ந்து சிந்தித்தார்கள்.

பொருள்முதல்வாதமும் இயக்க இயல்வாதமும் பற்றிய கருத்தை மேற்கொண்டு விரிவுபடுத்தியவர் ஹெராக்ளிட்டஸ் *(Heraclitus)* (சுமார் கி. மு. 544—483) என்பவர். நிலவு பவை எல்லாவற்றுக்கும் அடிப்படையாக ஹெராக்ளிட்டஸ் நெருப்பை எடுத்துக்கொண்டார். இயற்கையின் ஒரே பொருளியல் அடிநிலைப்பொருள் நெருப்பே என அவர் கருதினர். ''எல்லாம் சேர்ந்த ஒருமையான பிரபஞ்சம் தேவர்களில் எவராலும் மனிதர்களில் எவராலும் படைக்கப்படவில்லை. விதிமுறைக்கிணங்க மூண்டெரிவதும் விதிமுறைக்கிணங்க அணைவதுமான உயிர்த்தியங்கும் நெருப்பாக அது இருந்தது, இருக்கிறது, என்றென்றும் இருந்துவரும்'' என்பது ஹெராக்ளிட்டஸின் புகழ்பெற்ற அடிப்படைக் கருத்து ஆகும். இது இயக்க இயல் பொருள்முதல்வாதத்தின் தொடக்கம் குறித்த மிகச் சிறந்த விளக்கவுரை என்று வி. இ. லெனின் கூறினர்.

இயற்கையில் விதிமுறை நிலவுவதை ஹெராக்ளிட்டஸ் சுட்டிக்காட்டினர். இந்த விதிமுறையை அவர் ''லோகோஸ்'' என அழைத்தார். பிரபஞ்சத்தில் எல்லாம் நிரந்தர இயக்க நிகழ்முறையில் இருக்கின்றன, எல்லாம் பெருகுகின்றன, விதிமுறைக்கு, ''லோகோஸுக்கு'' இணங்க எல்லாம் மாறிக்கொண்டிருக்கின்றன என்னும் கருத்தை அவர் விரித்துரைத்தார். இந்த மாற்றங்கள் எதிரெதிரான சக்திகளின் செயல்பாடுகளது விளைவு என்று அவர் கருதினர். அனைத்தும் போராட்டத்தின் ஊடாகச் செல்கின்றன என்றும் புதுப்பிக்கப்படுதல் இன்றியமையாமை காரணமாகவே தொடங்குகிறது என்றும் அவர் கூறினர்.

வளர்ச்சி என்பது வெறும் மறுநிகழ்வு அல்ல என்று ஹெராக்ளிட்டஸ் குறித்தார். சூரியன் ஒவ்வொரு நாளும் மட்டும் புதியது அல்ல, என்றென்றும் இடையீடின்றிப் புதியது என்றார் அவர். பிரபஞ்சம் ஏதோ பொருளியலானது, மாறுதலும் புதுமைப்பாடும் வளர்ச்சியும் கொண்ட நிரந்தரப் பெருக்கில் இருப்பது என்ற கருத்தே ஹெராக்ளிட்டஸின் தத்துவத்தில் உள்ள மதிப்புயர்ந்த சாரம் ஆகும். அடுத்துவந்த விஞ்ஞான ரீதியான தத்துவம் இதையே ஏற்றுக்கொண்டு எல்லா அம்சங்களிலும் விரிவுபடுத்தியது.

பிரபஞ்சத்தை அறிவது இயலும் என்று ஹெராக்ளிட்டஸ் உறுதியாக நம்பினார். மனித அறிவுக்கு வரம்பு கிடையாது என அவர் கருதினார். அதே சமயம், உண்மையை அறிவதன் கஷ்டத்தையும் சிக்கலையும் அவர் கண்டார். இயற்கை ஒளிந்துகொள்வதை விரும்புகிறது என்றார் அவர். ஆகவே, ஞானியும் அறிஞனும் ஆவதற்குக் கண்களையும் காதுகளையும் திறப்பது போதாது; மனிதனது மாபெரும் நற்பண்பான பகுத்தறிவால், சிந்தனைத் திறனால் இயற்கையை அறிந்துகொள்ள வேண்டும் என அவர் வலியுறுத்தினார்.

தொன்மைக்கால அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தின் சமூக உற்பத்தி, விஞ்ஞானம் இவற்றின் தாழ்ந்த தரம் ஹெராக்ளிட்டஸ் செய்த தத்துவப் பொதுமைப்பாடுகளது தன்மையைக் குறிப்பிடத்தக்க அளவு பாதித்தது என்பது கூறாமலே விளங்கும். அவரது கருத்துக்கள் பிற தொன்மைக்காலச் சிந்தனையாளர்களின் கருத்துக்கள் போன்றே பல அம்சங்களில் எளிமையானவை, குறைபாடுள்ளவை. இருப்பினும் ஹெராக்ளிட்டஸ் மிகப் பெரிய தொன்மைக் கிரேக்கப் பொருள்முதல்வாதத் தத்துவ அறிஞராகவும் தொன்மை இயக்க இயல்வாதத்தின் மிகத் தலைசிறந்த பிரதிநிதிகளில் ஒருவராகவும் நம் முன் காட்சியளிக்கிறார்.

பொருள்முதல்வாதத்தின் வளர்ச்சியில் பெரும் பங்கு ஆற்றியவர் டெமாக்ரிட்டஸ் (*Democritus*) (சுமார் கி. மு. 460—370). வர்த்தக, கைத்தொழில் வளர்ச்சியில் அக்கறை கொண்ட அடிமைச் சொந்தக்கார வட்டாரத்தினரின் விழைவுகளை வெளியிடுபவராக அவர் விளங்கினார். தொன்மைக் காலத்துச் சிந்தனையாளர்கள் பலர்போன்றே டெமாக்ரிட்டஸ் தத்துவ அறிஞராக மட்டும் இன்றி இயற்கைவிஞ்ஞானச் சோதனையாளராகவும் இருந்தார். பொருளியல் வஸ்துக்களின் உள் கட்டமைப்பு பற்றிய கருத்தை ஆதாரபூர்வமாக நிலைநாட்டியது தத்துவத்துக்கும் விஞ்ஞானத்துக்கும் அவர் புரிந்த தொண்டு ஆகும். எல்லா வஸ்துக்களும் கண்ணுக்குப் புலப்படாத எண்ணிறந்த துகள்களால் ஆனவை, இந்தத் துகள்களே அணுக்கள், இவை என்றும் உள்ளவை, மாறுதல் அற்றவை, துளைக்கவோ பகுக்கவோ முடியாதவை என்று டெமாக்ரிட்டஸ் நிரூபித்தார். சூறாவளி வேகத்தில் சுழன்று வெறும் வெளியில் இடம் பெயர்ந்தவாறு அணுக்கள் இடையறாது இயங்கிக்கொண்டிருக்கின்றன. இந்த

இயக்கத்தின் போது அவை தமக்குள் ஒன்றிணைந்து நெருப்பு, நீர், காற்று, மண் ஆகிய எல்லாக் கலப்புக்களையும் உண்டாக்கு கின்றன. டெமாக்ரிட்டஸின் கருத்துப்படி அணுக்கள்—இருத்தல், வெற்று வெளியோ—சூனியம்.

மேற்கூறியவற்றுல் தெரிவது போல, சடப் பொருள் நில வும் பொது வடிவங்களான இயக்கம், இடவெளி, நேரம் போன் றவற்றை வேறு பிரித்துக் காண டெமாக்ரிட்டஸ் முயன்றூர். இவ்வாறு செய்கையில் அவர் அணுக்கள் இல்லாமல், அதாவது எவ்வகைச் சடப் பொருளும் இல்லாமல் இடவெளி நிலவ முடி யும் என்ற தவருன கருத்துக்கு இடம் கொடுத்துவிட்டார். எனினும், இதுவும் வேறு அனேகத் தவருன அனுமானங்களும் கொண்டது ஆயினும், டெமாக்ரிட்டஸின் அணுக் கொள்கை விஞ்ஞானத்தின் வழிகாட்டும் வடமீனுகப் பல நூற்றுண்டுகளா கத் தொண்டாற்றியது. அணுக்கள் பற்றிய தற்காலப் போதனை டெமாக்ரிட்டஸின் கருத்திலிருந்து சாராம்சத்தில் வேருனது என்பது கூருமலே விளங்கும். ஆனுலும் பொருளியல் அணுக் கள் புறநிலையாக நிலவுவது பற்றிய அவரது பொதுத் தத்துவ முடிவு விஞ்ஞானம், தத்துவம் இவற்றின் வரலாற்றில் மிகப் பெரிய பங்கு ஆற்றியது.

அறிதல் பற்றிய பொருள்முதல்வாதச் சித்தாந்தத்தை டெமாக்ரிட்டஸ் விரிவுபடுத்தினுர். புறநிலையாக நிலவும் அணுக் கள் உணர் உறுப்புக்கள் மீது செயல்படுவதன் விளைவே மனி தனது உணர்வு ஆகும் என அவர் கருதினுர். ஆனுல் இந்தச் செயல்பாட்டை அவர் எளிமைப்படுத்திப் புரிந்துகொண்டார். அவரது எண்ணப்படி ஒவ்வொரு பொருளிலிருந்தும் அணுக் களின் பிரவாகங்கள் எல்லாத் திசைகளிலும் பெருகுகின்றன. இந்த அணுக்கள் உணர் உறுப்புக்களின் ஊடாக உட்புகுந்து புலனுணர்ச்சிகளை ஏற்படுத்துகின்றன. பண்படாத நிலையிலுள்ள இந்த எண்ணத்தில் ஓர் ஆழ்ந்த கருத்தும் அடங்கியிருக்கிறது. பொருளியலான இயற்கை புறநிலையாக நிலவுகிறது, நமது சிந்தனைகள் புறநிலைப் பிரபஞ்சத்தையே பிரதிபலிக்கின்றன என்பது அந்தக் கருத்து.

நமது பார்வை, கேள்வி, முகர்வு, சுவை, தொடுதல் ஆகிய உணர்வுகளுக்கு உரிய உறுப்புக்கள் சில பொருள்களையும் நிகழ்ச் சிகளையும் மட்டுமே புரிந்துகொள்ள வல்லவை, எல்லாவற் றையும் அல்ல என்ற அறிவை டெமாக்ரிட்டஸ் அணுகினுர். மனி

தனுல் காணவோ, தொட்டுணரவோ, சுவையால் அறியவோ முடியாத பொருள் பிரபஞ்சத்தில் உள்ளது, அது மிக மிகச் சொற்பமானது என்று அவர் சொன்னுர். இம்மாதிரி விஷயங் களை மனிதன் அறிந்துகொள்வது எவ்வாறு? இந்தக் கேள்விக்கு விடையளிக்கையில் டெமாக்ரிட்டஸ் பகுத்தறிவின் திறனை மேற்கோள் காட்டினுர். புலன்களின் அறிவுக்கு அகப்படாமல் நழுவிச் செல்பவை யாவும் பகுத்தறிவால் வெளிப்படுத்தப்படக் கூடும், வெளிப்படுத்தப்பட வேண்டும். உதாரணமாக அணுக்கள் பற்றிய அறிவு பெறுவது சிந்தனைத் திறனின் உதவியாலேயே, அறிவுக்கண்களாலேயே சாத்தியம் ஆகும். டெமாக்ரிட்டஸின் கருத்திற்கிணங்க, இயற்கையின் மர்மங்களைச் சிந்தனைத் திறன் கொண்டே அறியமுடியும். பகுத்தறிவு என்பது அறிதலுக்கான மிகச் செவ்விய கருவி, மிக நுண்ணிய அறிதல் உறுப்பு ஆகும்.

சிறிது காலத்துக்கு முன்புதான் உதித்திருந்த பொருள் முதல்வாத, இயக்க இயல்வாதப் பிரபஞ்ச அறிவு, விஞ்ஞானம், நடைமுறை இவற்றின் விவரங்களை ஆதாரமாகக் கொண்டு பிரபஞ்சத்தின் அந்தரங்க மர்மங்களுக்குள் இவ்வாறு படிப் படியாக மேலும் ஆழ்ந்து புகுந்து மக்களுக்கு மெய் ஞானம் புகட்டியது.

கருத்துமுதல்வாதப் பிரபஞ்சக் கண்ணேட்டத்தின் ஆதர வாளர்கள் பொருள்முதல்வாதத்தின் வளர்ச்சியை மிகத் தீவிர மாக எதிர்த்தார்கள். கி. மு. 5—4ம் நூற்றுண்டுகளில் வர்க்க முரண்பாடுகள் தொன்மைச் சமூகத்தில் மிகக் கடுமையாக வெளிப்பட்டன. அடிமைச் சொந்தக்கார ஜனநாயகத்துக்கும் அடிமைச் சொந்தக்கார உயர்குடிமக்களாட்சிக்கும் இடையே அரசியல் அதிகாரத்திற்கான போராட்டம் கூர்மையாயிற்று. கருத்துமுதல் வாதத்துக்கும் பொருள்முதல் வாதத்துக்கும் இடையே போராட்டம் அந்த நூற்றுண்டுகளில் சிறப்பாகக் கொடிய உக்கிரத்துடன் நடந்தது.

தொன்மைக் கிரீஸில் கருத்துமுதல்வாதத் தத்துவத்துக்கு மிகப் பெரும் பிரதிநிதியாகத் திகழ்ந்தவர் பிளேட்டோ (*Plato*) (கி. மு. 427—347). இவர் அடிமைச் சொந்தக்கார உயர் குடியில் பிறந்தவர். அடிமைச் சொந்தக்கார அரசின் பிற்போக்கு ஆட்சி முறைக்குச் சித்தாந்த ஆதாரத்தை இவர் கருத்துமுதல்வாதத் தில் தேடினுர். பொருள்முதல்வாதத்துக்கு எதிரான போருக்கு

இவர் பகிரங்கமாகத் தலைமை தாங்கினார். பொருள்முதல் வாதத் தத்துவத்தின் பாதிப்பினால் இளைஞர்கள் நாஸ்திகர்கள் ஆகிவிடுவதாக முறையிட்டார்.

பிளேட்டோ புறநிலைக் கருத்துமுதல்வாத முறையை வகுத்தார். புலனுணர்வுக்கு உட்படும் பொருள்கள் கொண்ட பிரபஞ்சமும் கருத்துக்களின் பிரபஞ்சமும் அதாவது பொருள்களின் பருமையற்ற நுண் வடிவங்கள் கொண்ட பிரபஞ்சமும் எதிர் எதிராக நிலவுவதாக அவர் கருதினார். கருத்துக்கள் புறநிலையாக, இயற்கைமீதும் பொருள்கள்மீதும் சார்பு இன்றி, நிலவுகின்றன என அவர் வலிந்துரைத்தார். எதார்த்தப் பொருள்கள் கொண்ட பிரபஞ்சத்தை நிழல்கள் கொண்ட பிரபஞ்சம் எனப் பிளேட்டோ அழைத்தார். பொருள்கள் கருத்துக்களின் மங்கிய பிரதிகளே, நிழல்களே என அவர் கூறினார். பிளேட்டோவின் கொள்கைப் படி, மனிதனால் புரிந்து கொள்ளப்படும் இயற்கை எந்த அளவுக்குக் கருத்துப் பிரபஞ்சத்தின் உறுப்பு அம்சமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு மட்டுமே உண்மையானது. கருத்துக்கள் பொருள்களின் நித்தியமான முன்மாதிரிகள். அவை சிந்திக்க மட்டுமே படுகின்றன, காணப்பட முடியாது. அவற்றின் நிழல்கள் — புலப்படும் பொருள்கள் — காணப்படுகின்றன, ஆனால் உண்மையான இருத்தல் அவற்றுக்குக் கிடையாது.

மனித உள்ளம் அல்லது ஆன்மா உடலின் சார்பு இன்றியே, புலனறிவுக்கு அப்பாற்பட்ட கருத்துப் பிரபஞ்சத்தில் நிலவுகிறது. அது பொருளியலற்றது, நித்தியமானது—இவ்வாறு போதித்தார் பிளேட்டோ. ஆன்மாவின் அமரத்தன்மை பற்றிய கற்பனை இவ்விதமாகப் பிரமாணப்படுத்தப்பட்டது. ஆன்மா தாற்காலிகமாக மட்டுமே மனிதனில் குடிபுகுவதாகவும் பிறகு அனந்தம் என்னும் அகாதத்துக்குத் திரும்பிவிடுவதாகவும் கூறப்பட்டது.

பிளேட்டோவின் தத்துவம் ஒருங்கிசைந்த கருத்துமுதல் வாதம் ஆகும். கருத்தியலானதைப் பொருளியலானதிலிருந்தும், எண்ணத்தைச் சடப்பொருளிலிருந்தும், பொதுக் கருதுகோள்களை (தானேயான ''பழம்'' தானேயான ''வீடு'') எதார்த்தப் பொருள்களிலிருந்தும் அது துணித்துவிடுகிறது. பிரபஞ்சம் நிலவுகிறது, அதன்மீது சார்பு இன்றியே பிரபஞ்சம் பற்றிய கருத்தும் கடவுளும் நிலவுகின்றன என்றும், மனிதன் நிலவு

கிறுன், அவன்மீது சார்பு இல்லாமலே ஆன்மா நிலவுகிறது என்றும் அது முடிவுக்கு வருகிறது. கருத்துமுதல்வாதம் மதத்துடன் எவ்வாறு சேர்ந்துகொள்கிறது என்பது இந்த உதாரணத்தில் துலக்கமாகப் புலப்படுகிறது. பிளேட்டோவும் அவருடைய சீடர்களும் கடவுளை ''டெமியுர்க்'' அதாவது படைப்பு முதல்வன், பிரபஞ்சத்தை, இயற்கையைச் சிருஷ்டித்தவன் எனக் கருதினுர்கள்.

சுற்றியுள்ள பிரபஞ்சத்தை மக்கள் எதார்த்தமானது எனக் கருதிவிடலாகாது என்றும், பொருளியல் பிரபஞ்சத்தின் வஸ்துக்களில் தன்மையை அவர்கள் தேடக்கூடாது என்றும் உண்மையான, கருத்தியல் இருத்தல் எனப்படுவதை அறிய அவர்கள் முயல வேண்டும் என்றும் அதன் பொருட்டு ''தெய்விக ஒழுங்கை'' அவர்கள் தியானிக்க வேண்டும் என்றும் மக்களுக்கு நம்பிக்கை ஊட்டுவதே பிளேட்டோவின் கருத்துமுதல்வாதத் தத்துவத்தின் நோக்கம். புலன்கள் எதார்த்தத்தைப் பற்றிய தகவல்களை மனிதனுக்குத் தருவதில்லை எனப் பிளேட்டோ எண்ணினுர். அவருடைய அபிப்பிராயப்படி நித்தியமான கருத்துக்களின் புலன்களுக்கு அப்பாற்பட்ட சாம்ராஜ்யம் பற்றிய ஞானமே மெய்ஞானம். புலன்களின் அறிவு ஆற்றும் பங்கை, அவதானிக்கை, அனுபவம் ஆகியவற்றின் பங்கை இழிவுபடுத்த அவர் முயன்ருர். நமக்கு உண்மையைக் காட்ட அவற்ருல் இயலாது என்றும் ஆன்மா ஒன்றுதான் புலன்களுக்கு அப்பாற்பட்ட பிரபஞ்சத்தை உட்புகுந்து அறிய வல்லது என்றும் அவர் கூறினுர். எதார்த்தமான அறிதல் செயல்முறை பிளேட்டோவின் கற்பனையில் இவ்வாறு திரிபான வடிவம் பெற்றது.

பிளேட்டோவின் பிற்போக்குக் கருத்துக்கள் கருத்துமுதல்வாதித் தத்துவ அறிஞர்களால் சென்ற காலத்தில் விரிவாகப் பயன்படுத்தப்பட்டன. இம்மாதிரிக் கருத்துக்களின் பல்வகை வேறுபாடுகள் தற்கால பூர்ஷ்வாத் தத்துவத்திலும் மிக அடிக்கடி எதிர்ப்படுகின்றன.

பிளேட்டோவினது புறநிலைக் கருத்துமுதல்வாதத்தின் பற்பல அடிப்படைக் கருத்துக்களின் ஆதாரமற்ற தன்மையைச் சுட்டிக்காட்டினுர் மாபெரும் தொன்மைக் கிரேக்கச் சிந்தனையாளர் அரிஸ்டாட்டில் (*Aristotle*) (கி. மு. 384—322). பருமையற்ற நுண்ணிய கருத்துக்களே முதன்மையானவை என்ற கருத்துமுதல்வாதக் கண்ணேட்டத்தை அரிஸ்டாட்டில் தமது பெருந்

தொகையான நூல்களில் தக்க ஆதாரங்களுடன் மறுத்தார். தத்துவ நூல்களும்(''மாருநிலேவாதம்'',''ஆன்மாவைப் பற்றி'') இத்தகைய நூல்களில் அடங்கும். பொதுவான கருதுகோள் களைப் புலன்களால் உணரப்படும் பொருள்களிலிருந்து வேறு படுத்துவது கூடாது என்று பிளேட்டோவை விமர்சிக்கையில் அரிஸ்டாட்டில் சரியாகக் குறிப்பிட்டார். கருத்துக்கள் பொருள் களின் தன்மையே ஆதலால் பொருள்களிலிருந்து தனிப் பிரிந்து நிலவ அவற்ருல் இயலாது என்ருர் அவர். எனினும் இவ்விஷயத்தில் அரிஸ்டாட்டில் முடிவுவரை ஒத்தியைந்த தர்க்க முறையைக் கடைப்பிடிக்கவில்லே. அடிப்படையான அனேகத் தத்துவப் பிரச்சினேகளுக்குத் தீர்வு காண்கையில் கருத்துமுதல் வாதத்துக்கும் பொருள்முதல்வாதத்துக்கும் இடையே உசலாடி ஞர். எல்லா வஸ்துக்களுக்கும் எல்லா வகை இருத்தலுக்கும் அடிப்படை என்ற வகையில் சடப்பொருளே அவர் ஏற்றுக் கொண்டார் ஆயினும், சடப்பொருள் திட்டவட்டமான அல்லது எதார்த்தமான இருத்தல் அல்ல என்றும் அது ஏதோ வடிவற்ற, செயலற்ற, உயிரற்ற அடிநிலேப்பொருளே என்றும் கூறினுர். சடப்பொருள் செயலுள்ளது ஆவதற்கு, உயிராற்றல் பெறு வதற்கு அது வடிவில் உருவாக வேண்டும் என்ருர் அவர்.

அரிஸ்டாட்டிலின் கருத்துப்படி வடிவம் என்பது ஒவ்வொரு பொருளினதும் இருத்தலின் சாரம், அதன் பொதுவான, முதன் மையான தன்மை ஆகும். வடிவத்துடன் ஒன்றுபடுகையிலேயே சடப்பொருள் புலனறிவுக்கு உட்படும் எதார்த்தப் பொருள் களில் தோற்றம் அளிக்கிறது. உதாரணமாகப் பளிங்குப் பாறை யில் மனித உருவத்தைச் செதுக்குவதன் வாயிலாகச் சிற்பி அதற்குத் திட்டவட்டமான வடிவத்தை அளிக்கிருன். இந்த வடிவமே சிலேயின் உள்ளர்த்தமாக அமைகிறது. இதேபோல, வடிவம் சடப்பொருளுக்குத் திட்டவட்டமான உள்ளடக்கத் தைத் தருவதனுலேயே இயற்கை வளர்ச்சி அடைகிறது என் பது அரிஸ்டாட்டிலின் கருத்து. இதை ஆதாரமாகக் கொண்டு அவர் ஒரு தவருன முடிவுக்கு வந்தார். இயற்கையில் உள்ள எல்லாத் தோற்றங்களும் அறிவுசான்ற செயல்புரியும் ஆற்றலே, குறிக்கோளே (*entelechy*) உள்ளடக்கியிருக்கின்றன என்பது அந்த முடிவு. அரிஸ்டாட்டிலின் கருத்திற்கு இணங்க, இருத்த லின் இந்தக் குறிக்கோளாகவும் தன்மையாகவும் விளங்குவது வடிவம் ஆகும். பிரபஞ்சத்தில் நிகழும் மாறுதல்களுக்கு

ஊற்றுக்கண் எது என்று விஞ்ஞான ரீதியில் விளக்கும் நிலையில் அரிஸ்டாட்டில் இல்லை. எனவே அவர் இந்த ஊற்றுக்கண்ணைச் சடப்பொருளுக்கு வெளியே, புலனுணர்வுக்கு அப்பாற்பட்ட வடிவத்தில் தேடினார். எல்லா வடிவங்களின் வடிவமாகவும் இயற்கை அனைத்தினதும் முதல் இயக்கு சக்தியாகவும் திகழ்வதே கடவுள் என்று அவர் வலிந்துரைத்தார். நிலவுபவை யாவற்றையும் படைத்த அறிவுசான்ற சிருஷ்டிகர்த்தாவை மேற்கோள் காட்டுவது அப்புறம் பிற்போக்குத் தத்துவத்தில் விரிவாக வழங்கலாயிற்று.

அறிதலைப் பற்றிப் பல ஆழ்ந்த கருத்துக்களை அரிஸ்டாட்டில் வெளியிட்டார். பொதுவான கருதுகோள்களும் வகைப்பிரிவுகளும் (பண்பு, தொகை, தன்மை, காலம் முதலியன) இருத்தலின் இயல்பையும் உறவையும் வெளியிடுகின்றன என்று அவர் குறித்தார். அரிஸ்டாட்டில் இயக்க இயலின் பல பிரச்சினைகளை ஆழ்ந்து ஆராய்ந்தார். சிந்தித்தலின் விதிகளையும் வடிவங்களையும் பற்றிய போதனையை உருவாக்கினார். அவருடைய தர்க்க ஆராய்ச்சிகள் இன்றளவும் மதிப்பு மிக்கவையாகத் திகழ்கின்றன.

இவ்விதமாக, தொன்மைக் கிரேக்கச் சிந்தனையாளர்கள் மதிப்புயர்ந்த பல தத்துவக் கருத்துக்களை வெளியிட்டார்கள். பிரபஞ்சத்தின் பொருளியல் ஒருமை குறித்தும், உணர்வுக்கும் சடப்பொருளுக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம் குறித்தும், சடப்பொருளின் கட்டமைப்பு குறித்தும் தொன்மைக்காலப் பொருள்முதல்வாதிகளின் அடிப்படைக் கருத்துக்கள் தத்துவத்தின் அடுத்துவந்த வளர்ச்சிமீது சிறப்பாகப் பயன் விளைக்கும் பாதிப்பை ஏற்படுத்தின. இயற்கையின் இயக்கப் போக்கு, பிரபஞ்சத்தின் நிரந்தர மாறுதலும் வளர்ச்சியும், எல்லா நிகழ்ச்சிகளுக்கும் உரிய இயல்பான விதிமுறை, காரணச் சார்பு ஆகியவை பற்றிய அவர்களது அனுமானங்கள் பெருத்த முக்கியத்துவம் உள்ளவையாக விளங்கின. தொன்மைத் தத்துவ அறிஞர்கள் பிரபஞ்சத்தை அறிவது இயலும் என்பதை ஆதார பூர்வமாக நிரூபித்தார்கள், உணர்வுகளுக்கும் பகுத்தறிவுக்கும், புலனுணர்ச்சிகளுக்கும் சிந்தனைகளுக்கும் உள்ள பரஸ்பர உறவுகளில் நிலவும் சில சிறப்புத் தன்மைகளைக் கவனித்துக் குறித்தார்கள், அனேகத் தத்துவக் கருதுகோள்களையும் வகைப்பிரிவுகளையும் வேறுபடுத்திக் கண்டார்கள்.

அடுத்துவந்த வரலாற்றுக் காலப்பகுதிகளில் உருவாக்கப் பட்ட பல்வேறு தத்துவ முறைகளின் அம்சங்கள், கருக்கள், தொன்மைக் கிரேக்கச் சிந்தனையாளர்களின் கருத்துக்களில் அடங்கியிருந்தன.

## நிலப்பிரபுத்துவக் காலகட்டத்திலும் பூர்ஷ்வாச் சமூகத்திலும் தத்துவப் போக்குகளின் போராட்டம்

வளர்ச்சி வாய்ப்புக்களைப் பயன்படுத்தித் தீர்த்த பிறகு அடிமைச் சொந்தக்கார அமைப்பு நிலப்பிரபுத்துவத்துக்கு இடம் கொடுத்துவிட்டு அகன்றுவிட்டது. இடைக்காலப் பகுதியில் மேலோங்கியிருந்தது மத-கருத்துமுதல்வாதப் பிரபஞ்சக் கண்ணோட்டம். நிலப்பிரபுக்கள், மதகுருக்கள் ஆகியோரின் ஆட்சி அதிகாரத்தை நிலையாக வைத்திருப்பதை நோக்கமாகக் கொண்டது இது. முந்திய தத்துவ முறைகளில் கருத்துமுதல் வாதிகளின் கருத்துக்களே யாவற்றிலும் விரிவாகப் பரவின. தத்துவ ஆராய்ச்சிகளில் இறை இயலாரே பெரும்பாலும் ஈடு பட்டார்கள். அவர்கள் அரிஸ்டாட்டிலின் தத்துவத்திலிருந்த உயிரோட்டமுள்ள அம்சங்களை எல்லாம் கொன்றுவிட்டார்கள். அவருடைய பொருள்முதல்வாதத் தேட்டங்களையும் இயக்க இயல் அணுகு முறைகளையும் நீக்கி எறிந்துவிட்டு அவரது போதனைகளின் கருத்துமுதல்வாத அம்சத்தை மட்டுமே மத ஸ்தாபனங்களின் நலன்களுக்கு இசைவித்துக்கொண்டு அவர்கள் பயன்படுத்தினார்கள்.

இடைக்காலச் சமூகத்தில் விஞ்ஞானம் இறை இயலின் பணியாளாக இருந்தது என்று குறிப்பிட்டார் எங்கெல்ஸ். மதகுருக்களும் நிலப்பிரபுக்களும் தத்துவத்தையும் அதே போல மதத்தின் பணியாள் ஆக்கிவிட்டார்கள். மதத்தினது, திருமறைகளது உண்மைத் தன்மையின் ''சான்றுக்கு'' எல்லாம் அடிப்படுத்தப்பட்டன. இறை இயல் பாண்டித்திய முறை எனப் பட்டது முக்கியப் பங்கு ஆற்றலுற்றது. கிறிஸ்தவ மத ஸ்தாபனங்களின் வறட்டுச் சூத்திரங்கள் பற்றிய அருவமான ஆலோசனைகளையும் பயனற்ற தத்துவப் பேச்சுக்களையும் ஆதார மாகக் கொண்டிருந்தது இந்த முறை. இடைக்கால இறை இயல் பாண்டித்தியம் மிகவும் லாகவமுள்ளதாக இருந்தது. அது

தனது வடிவங்களை அடிக்கடி மாற்றிக்கொண்டது. மதத்தின் உண்மையை நிருபிப்பதற்காக இயக்க இயலைப் பயன்படுத்த முயன்றது. இருத்தல், தன்மை, வடிவம் முதலிய தத்துவக் கருதுகோள்களுக்குத் திரிபான விளக்கம் தந்தது. அறிதல் சித்தாந்தத்தில் குழப்பம் விளைத்தது.

இடைக்கால இறை இயல் பாண்டித்தியத்தின் தலைசிறந்த பிரதிநிதியாக விளங்கியவர் தாமஸ் அக்வைனஸ் (*Thomas Aquinas*) (*1225—1274*)[1]. முதல் இயக்கு சக்தி, முதல் காரணம், எல்லா இன்றியமையாமைக்கும் ஊற்றுக்கண், எல்லாவகை இருத்தலுக்கும் குறிக்கோள்களை நிச்சயிக்கும் அறிவுசான்ற சிருஷ்டி கர்த்தா என்ற முறையில் கடவுள் நிலவுவதற்குச் ''சான்றுகள்'' தேடுவதே தமது தத்துவத்தின் நோக்கம் என்று அவர் அறிவித்தார். நம்மைச் சூழ்ந்துள்ள இயற்கை வஸ்துக்கள் பொருளியலானவை என்றும் வேறுபிரித்தறிய முடியாத துகள்களால் ஆனவை என்றும் இந்த இறை இயலார் ஒப்புக்கொண்டார். ஆனல் எதனல் எல்லாம் ஆக்கப்பட்டுள்ளனவோ அந்த அடிமுதல் பொருள் தூய செயலின்மையே என அவர் வலிந்துரைத்தார். அவருடைய கருத்துப்படி கடவுள் தூய செயல் வன்மையாக விளங்குகிருர். சடப்பொருளையும் பிரபஞ்சம் அனைத்தையும் கடவுள் வெறுமையிலிருந்து படைத்து ஒவ்வொரு பொருளுக்கும் நிலவுதலை அளித்தார்.

நிலப்பிரபுத்துவக் காலப்பகுதியில் கருத்துமுதல்வாதத் தத்துவமும் பயனற்ற இறை இயல் பாண்டித்தியமுமே மேலோங்கி இருந்தன எனினும் முற்போக்குள்ள பொருள்முதல்வாதச் சிந்தனை அந்தக் காலத்தில்கூட அழிக்கப்பட்டுவிடவில்லை. இருண்ட இடைக்கால ஆண்டுகளில்கூடத் தத்துவ விவாதங்கள் ஓய்ந்துவிடவில்லை. ஆன்மாவுக்கும் இயற்கைக்கும், சிந்தனைக்கும் இருத்தலுக்கும் உள்ள உறவு பற்றி நடந்த இந்த விவாதங்களின் உள்ளடக்கம், பிரபஞ்சம் கடவுளால் படைக்கப்பட்டதா அல்லது என்றென்றும் நிலவிவருகிறதா என்னும் கேள்விக்கு இட்டுவந்தது. அதிகத் துணிவுள்ள தத்துவ அறிஞர்களும் விஞ்ஞானிகளும், ''சடப்பொருள் சிந்திக்க வல்லதா அல்லவா?'' என்ற கேள்வியைக்கூடக் கிளப்பினர்கள்.

---

[1] தாமஸ் அக்வைனஸ் இத்தாலியில் அக்வைனே என்னும் நகரின் அருகே பிறந்தார்.

உற்பத்தி, விஞ்ஞானம், இவற்றின் வளர்ச்சியில் ஈடுபாடு கொண்ட சக்திகள் நிலப்பிரபுத்துவச் சமூகத்தின் உள்ளே தோன்றலாயின. உதயமாகிக்கொண்டிருந்த பூர்ஷ்வா வர்க்கச் சக்திகளே அவை. இந்த பூர்ஷ்வா வர்க்கம் நிலப்பிரபுத்துவ அமைப்பையும் இறை இயலையும் இறை இயல் பாண்டித்தியத்தையும் எதிர்த்தது. மதஸ்தாபனங்களின் ஆதிக்கத்துக்கு எதிராகச் சிறப்பாகத் தீவிரமான போராட்டம் 15—17ம் நூற்றாண்டுகளில் அதாவது ''மறுமலர்ச்சி யுகம்'' என வழக்கமாக அழைக்கப்படும் காலக்கட்டத்தில் நடந்தது. இயற்கையை அறியும் ஆர்வமும் தொன்மைக் கிரீஸின் அனுபவ ஞானத்தையும் முற்போக்குள்ள தத்துவத்தையும் பற்றிய அக்கறையும் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் தீவிரம் அடைந்தது இந்தக் காலக்கட்டத்தின் சிறப்புத் தன்மை ஆகும்.

பூர்ஷ்வாப் புரட்சியை முதன் முதலில் நிறைவேற்றிய நாடுகளில் ஒன்றான இங்கிலாந்து 17ம் நூற்றாண்டில் பொருள்முதல்வாதத்தின் புதிய தாய்நாடு ஆயிற்று. புது யுகப் பொருள்முதல்வாதத்தின் தந்தையாகத் திகழ்ந்தவர் பிரான்ஸிஸ் பேக்கன் (*Francis Bacon*) (1561—1626). இவர் இறை இயல் பாண்டித்தியத்தை உக்கிரமாக எதிர்த்தார். பேக்கனின் கருத்துப்படி, தத்துவத்தின் பொருள் மதத்தின் வறட்டுச் சூத்திரங்களின் உண்மையை நிரூபிப்பதில் அல்ல, இயற்கையை அறிவதற்கான முறைகளை வகுப்பதிலேயே அடங்கியிருக்கிறது. ஏனெனில், மனிதனுடைய வலிமை ஞானத்திலேயே உள்ளது என்றார் அவர். தொன்மைக் கிரேக்கப் பொருள்முதல்வாதத்துக்குப் புத்துயிர் அளிக்க பேக்கன் பெரு முயற்சி செய்தார். இயக்கமும் முயற்சியும் உயிருள்ள ஆன்மாவும் சடப்பொருளுக்கு இயல்பானவை என்று அவர் திர்மானமாக வலியுறுத்தினார்.

ஆயினும் பேக்கனின் கருத்துக்களில் பொருத்தமற்ற விஷயங்கள் நிறைய இருந்தன. உதாரணமாக, விஞ்ஞானத்துக்கும் கடவுள் நம்பிக்கைக்கும் தனித்தனித் துறைகள் உள்ளன என்றும் அவை ஒன்றில் ஒன்று தலையிட வேண்டியதில்லை என்றும் அவர் பல முறை கூறினார். ஆனால் இங்கே ஒரு விஷயத்தைக் கவனத்தில் வைத்துக்கொள்வது அவசியம்: மதத்தின் அதிகாரம் இன்னும் சக்தி மிக்கதாக இருந்த அந்தக் காலக்கட்டத்தில் இம்மாதிரியான கூற்றுக்கள் விஞ்ஞானத்தின் கட்டற்ற வளர்ச்சியை உறுதிப்படுத்தும் முயற்சியாகவே உண்மையில் விளங்கின.

பொருள்முதல்வாதத் தத்துவம் மதத்தையும் கருத்துமுதல் வாதத்தையும் மெதுவாக, ஒவ்வோர் அடியாக அந்தக் காலத்திலேயே நெருக்கிப் பின்னே தள்ளியது.

இருந்தாலும் மத-கருத்துமுதல்வாதத் தத்துவம் தனது நிலையை இன்னமும் உறுதியாகப் பற்றிக்கொண்டிருந்தது. முற்போக்குள்ள தத்துவ அறிஞர்களின் பொருள்முதல்வாத, நாஸ்திகக் கருத்துக்களுக்கு எதிராக வாதாடினுர் அகநிலைக் கருத்துமுதல்வாதத்தின் தலைசிறந்த பிரதிநிதிகளில் ஒருவரான ஆங்கிலப் பாதிரி ஜார்ஜ் பார்க்ளி (*George Berkeley*) (1685—1753). ''சடப்பொருள்'' என்ற சொல்லில் எவ்வித எண்ணமும் அடங்கியிருக்கவில்லை. சடப்பொருள் என்பது ஒன்றுமற்றது, நிலவாத தன்மை என்று அவர் எழுதினுர். அவருடைய கருத்துப்படி இயற்கையில் புறநிலைக் காரணத்துவம் கிடையாது, விதிமுறைக்கு உட்படும் இயல்பு கிடையாது. இந்த அகநிலைக் கருத்துமுதல்வாத நோக்கு நிலை தற்காலத்தில் புலக்கொள்கையால் மறையுருவில் ஆதரிக்கப்படுகிறது.

அகநிலைப்பொருளால் புரிந்துகொள்ளப்படுவதை மட்டுமே எதார்த்தமானது என பார்க்ளி ஒப்புக்கொண்டார். நம்மால் புரிந்துகொள்ளப்படும் பொருள்கள் (ஆப்பிள், திராட்சை) நமது புலனுணர்ச்சிகளின் (இனிப்புள்ளது, சிவப்பானது, சாறுள்ளது) தொகுப்பே என அவர் அதே சமயம் வலியுறுத்தினுர். இவ்வாருக, பார்க்ளியின் கருத்திற்கு இணங்க, பொருள்களின் இருத்தல், அவை நிலவுவது, அவற்றை நாம் புரிந்துகொள்கிரேமா இல்லையா என்பதையே பொறுத்திருக்கிறது. இந்த நோக்கின்படி, புலனறிவுக்கு உட்படும் பொருள்களின் எதார்த்தம் அவற்றை ஒருவன் புரிந்துகொள்கிருன் என்பதிலேயே அடங்கியிருக்கிறது. பார்க்ளியின் கொள்கைப்படி, நிலவுதல் என்ருல் புரிந்துகொள்ளப்படக் கூடியதாக இருத்தல் என்று அர்த்தம். இதை அடிப்படையாகக் கொண்டு, அறிவால் படைக்கப் படாதது எதுவும் நிலவுவதை அவர் மறுத்தார். சடப்பொருள் புறநிலையாக நிலவுகிறது என ஒப்புக்கொள்ளலாகாது என்றும், ஏனெனில் இவ்வாறு ஏற்பது நிரீசுவரவாதத்துக்கு இட்டுச் செல்லும் என்றும் அவர் வெளிப்படையாக எழுதினுர்.

17ம் நூற்ருண்டின் முடிவிலும் சிறப்பாக 18ம் நூற்ருண்டிலும் அநேக ஐரோப்பிய நாடுகளில் பூர்ஷ்வாப் போதகர்களும் ஜூலியேன் ஒப்ரே லா மெத்ரீ (*Julien Offroy de la Mettrie*)

*(1709—1751)*, டெனி டிட்ரோ *(Denis Diderot) (1713—1784)*, போல் அன்ரி ஹோல்பாஹ் *(Paul Henri Holbach) (1723—1789)*, க்ளாட் அத்ரியான் ஹெல்வேஷியஸ் *(Clande Adrien Helvetius) (1715—1771)* போன்ற பெயர்பெற்ற பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகளும் கருத்துமுதல்வாதத்தை எதிர்த்துப் போராடினுர்கள்.

மத-கருத்துமுதல்வாதக் கண்ணேட்டத்துக்கு எதிராகப் பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகளின் போராட்டம் பூர்ஷ்வா வர்க்கத்தின் அரசியல் போராட்டத்துடன் நேரான தொடர்பு கொண்டிருந்தது. நிலப்பிரபுத்துவச் சமூக அமைப்பையும் நிலப்பிரபுத்துவ மரபுகளேயும் கொள்கைவாதத்தையும் அரசியலேயும் நிர்த்தாட்சிண்ணியமாக விமர்சித்ததன் வாயிலாக அவர்கள் இடைக்கால அமைப்புமுறைகளே ஒழிக்கவும் பூர்ஷ்வா வர்க்கத்தின் நலன்களுக்கு ஏற்பச் சமூக அமைப்பை மாற்றவும் முயன்ருர்கள்.

உற்பத்தியும் எனவே விஞ்ஞானமும் மிக விரைந்த வளர்ச்சி அடைவதில் பூர்ஷ்வா வர்க்கம் அக்கறை கொண்டிருந்தது. விஞ்ஞானமோ, ஒவ்வோர் அடியிலும் இடைக்கால இறை இயல் பாண்டித்தியத்தையும் மதத்தையும் எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. ஆகவே பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் கல்வி, பொருள்முதல்வாதம் என்ற கொடியை உயர்த்தியவாறு இடைக்காலப் பழக்கவழக்கங்கள் மீது தாக்குதல் நடத்தியதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லே.

இயற்கைக்கு மேலான அதீத சக்திகள் நிலவுகின்றன என்று கருத்துமுதல்வாதிகள் பரப்பிவந்த எண்ணங்களேப் பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகள் மறுத்தார்கள். இயற்கையும் சமூக வாழ்வும் இயல்பான விதிமுறைகளுக்கு உட்பட்டவையே என்று அவர்கள் நிரூபித்தார்கள். பிரபஞ்சத்தில் நிகழும் மாற்றங்கள் யாவும் இயல்பான இயற்கைக் காரணங்களாலேயே ஏற்படுகின்றன என்று அவர்கள் சரியாகக் கருதினுர்கள். சடப்பொருள் அல்லாதது அதன் இயக்கு சக்தியாக இருக்க முடியாது என்று பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகள் வலியுறுத்தினுர்கள். சடப்பொருள் இயற்கை புறநிலேயாக நிலவுகிறது என்றும், ஆகையால் சடப்பொருளே எல்லாவகை இருத்தலினதும் தன்மையாகவும் முதல் தொடக்கமாகவும் ஆதி அடிப்படையாகவும் இருக்கிறது என்றும் அவர்கள் கூறினுர்கள். இயற்கை யாராலும் படைக்கப்படவில்லே, அது நித்தியமானது என்ருர்கள் அவர்கள்,

சடப்பொருள் எங்கிருந்து தோன்றியது என யாரேனும் நம்மிடம் வினவினுல் அது என்றென்றும் நிலவிவந்திருக்கிறது என்று நாம் பதில் அளிப்போம். சடப்பொருளில் இயக்கம் எங்கிருந்து தோன்றியது என்று கேட்டால் அதே ஆதாரத்தின்படி சடப்பொருள் நிரந்தரமாக இயங்க வேண்டிவந்திருக்கிறது, ஏனெனில் இயக்கம் சடப்பொருளுடைய நிலவுகையின், அதன் தன்மையின் இன்றியமையாத விளைவு ஆகும் என்று நாம் பதிலளிப்போம். இவ்வாறு எழுதினுர் ஹோல்பாஹ்.

பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகளின் கருத்துப்படி சடப்பொருள் என்பது நமது உணர் உறுப்புக்கள்மீது ஏதாவது ஒரு வகையில் செயல்படுபவை அனைத்தும் ஆகும். நமது புலன்களால் அறியப்படும் இருத்தல் ஆகும். சடப்பொருளையும் அதன் பண்புகளையும் பற்றிய ஆழ்ந்த கருத்துக்களை வெளியிட்டார் டிட்ரோ. சடப்பொருள் எவ்வாறு வளர்ச்சியுற்றது, உணர்ச்சியற்ற சடப்பொருள் உணர்ச்சியுள்ளதாக மாறியது எவ்வாறு நிகழ்ந்தது என்பதைப் புரிந்துகொள்ள அவர் முயன்ருர். புலனுணர்ச்சி உயிருள்ள அங்கஜீவிக்கே இயல்பானது என்றும், ஆனுல் புலனுணர்ச்சியுடன் உறவுள்ள ஒரு திறமையை மொத்தமாகச் சடப்பொருள் அனைத்தும் பெற்றிருக்கிறது என்றும் அவர் ஏற்கனவே அனுமானித்திருந்தார்.

பிரபஞ்சத்தை அறிவது சாத்தியமே என்ற ஆழ்ந்த நம்பிக்கையைப் பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகள் கொண்டிருந்தார்கள். புலன்களின் அறிவை அவர்கள் வெகுவாக மதித்தார்கள். கருத்துமுதல்வாதிகளை அவர்கள் கடுமையாக விமர்சித்தார்கள். கருத்துமுதல்வாதிகள் தாங்கள் நிலவுவதையும் தங்கள் உணர்ச்சிகள் நிலவுவதையும் மட்டுமே உண்மை என ஒப்புக்கொள்கிருர்கள் என்றும் வேறு எதையும் ஏற்றுக்கொள்வதில்லை என்றும் கூறினுர் டிட்ரோ. பிரபஞ்சம் அனைத்தும் நமது கற்பனையில் மட்டுமே நிலவுகிறது என்னும் கருத்துமுதல்வாதிகளின் அடிப்படைக் கருத்தை அவர் வீண் கட்டுக்கதை என அழைத்தார்.

பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகளின் தத்துவ நோக்குகளில் இயக்க இயலின் சில அம்சங்கள் அடங்கியிருந்தன. ஆனுல் மொத்தத்தில் அவர்களது பொருள்முதல்வாதம் பெருத்த குறைகள் கொண்டிருந்தது. ''லுத்விக் பாயர்பாகும் சாஸ்திரீய ஜெர்மானியத் தத்துவத்தின் இறுதியும்'' என்ற தமது நூலில் பிரெடெரிக் எங்கெல்ஸ் இக்குறைகளைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

முதலாவதாக, இந்தப் பொருள்முதல்வாதம் இயந்திரத் தன்மை கொண்டிருந்தது. அக்காலத்து விஞ்ஞான வளர்ச்சியின் தரம் காரணமாக இத்தகைய வரையறைக்குட்பட்ட தன்மை தவிர்க்க இயலாததாக இருந்தது. இயந்திர இயல் அந்தக் காலத்தில் மிகப் பெரிதும் வளர்ச்சி அடைந்திருந்தது. இரசாயனம், உயிரியல் போன்ற விஞ்ஞானங்களோ, அப்போதுதான் உருவாகத் தொடங்கியிருந்தன. எனவே, அங்கக இயற்கையின் மிகச் சிக்கலான செயல்முறைகளைக்கூடத் தூய இயந்திர இயலின் அடிப்படையில், இயந்திர இயலின் விதிகளை இயற்கையின் பிற நிகழ்ச்சிகளின் துறைகளுக்குப் பயன்படுத்துவதன் வாயிலாக விளக்குவதற்கு விஞ்ஞானிகள் முயன்ருர்கள். இரசாயனச் செயல்முறைகளைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை.

இரண்டாவதாக, பிரெஞ்சுப் பொருள்முதல்வாதம் மாரு நிலைவாதத் தன்மை கொண்டிருந்தது. இயற்கையை வரலாற்று வளர்ச்சியின் நிகழ்முறையில் அது ஆராயவில்லை. இயற்கையில் ஏற்படும் மாறுதல்களை அது ஒரே நிகழ்முறைகளின் மறுநிகழ்வுகளாக மட்டுமே புரிந்துகொண்டது. இயற்கை நிகழ்ச்சிகளை விளக்குவதற்கோ அறிதலுக்கோ இயக்க இயல் பயன்படுத்தப் படவில்லை.

இறுதியில் மூன்ருவதாக, பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகள் சமூக வாழ்வைத் தெளிவுபடுத்துவதில் கருத்துமுதல்வாதிகளாகவே இருந்துவிட்டார்கள். சமூகத்தின் வளர்ச்சியில் உள்ள புறநிலை விதிமுறைத் தன்மையை அவர்கள் கண்டுகொள்ளவில்லை. உற்பத்தியின் நிர்ணயிக்கும் பங்கையும் பகைமைகொண்ட வர்க்கங்களாகப் பிரிவுபட்டுள்ள சமூகத்தில் வர்க்கப் போராட்டத்தின் நிர்ணயகரமான முக்கியத்துவத்தையும் அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. சமூகத்தின் வளர்ச்சியை நிர்ணயிப்பவை எவையேனும் ஒருவகைக் கருத்துக்களே, நோக்குகளே என அவர்கள் எண்ணினர்கள். இந்தக் கருத்துக்களின் பொருளியல் ஊற்றுக்கண்ணைப் பற்றி, சமூக-பொருளாதார உறவுகளைப் பற்றி அவர்கள் கேள்வி எழுப்பவில்லை. 18வது நூற்ருண்டின் நிலப்பிரபுத்துவ முறையின் இடத்தில் மக்களின் சமத்துவம், நியாயம், சுதந்திரம், சகோதரத்துவம் ஆகிய ஆதர்சங்களின் அடிப்படையில் ''பகுத்தறிவின் ஆட்சி'' வரமுடியும் என்று பிரெஞ்சுப் பொருள்முதல்வாதிகள் தவருக முடிவு செய்தார்.

கள். உண்மையிலோ, கவர்ச்சியுள்ள இந்த கோஷங்களின் கொடியின் கீழ் பூர்ஷ்வாப் புரட்சி நடந்தேறியதே தவிர, அந்தக் காலத்தில் இவற்றைச் செயல்படுத்துவது இயலாதிருந் தது. ''பகுத்தறிவின் இந்த ஆட்சி, ஆதர்ச வடிவம் தரப்பட்ட பூர்ஷ்வா ஆட்சி தவிர வேறில்லை என்பதை இப்போது நாம் அறிவோம்'' என்று எழுதினர் பிரெடெரிக் எங்கெல்ஸ். ''நிரந்தர நியாயம்'' என்பது, சுறண்டுவோரின் சித்தத்தை வெளியிட்ட பூர்ஷ்வாச் சட்டமுறையின் வடிவில் செயல் படுத்தப்பட்டது. பூர்ஷ்வாச் சொத்துரிமை மனிதனது மிக அடிப்படை உரிமைகளில் ஒன்ருகப் பிரகடனம் செய்யப்பட்டது என அவர் மேலும் குறித்தார்.[1]

ஜெர்மானியத் தத்துவத்தில் கருத்துமுதல்வாதத்துக்கும் பொருள்முதல்வாதத்துக்கும் இடையேயும் மாருநிலைவாதத்துக் கும் இயக்க இயல்வாதத்துக்கும் இடையேயும் கடுமையான போராட்டம் 18ம் நூற்ருண்டின் இறுதியிலும் 19ம் நூற்ருண் டின் தொடக்கத்திலும் விரிவாக நடந்தது. எதார்த்தமான சமூக முரண்பாடுகளின் தனிப்பட்ட பிரதிபலிப்பாக விளங்கியது இந்தப் போராட்டம். ஜெர்மானிய பூர்ஷ்வா வர்க்கம் நிலப் பிரபுத்துவ முறைக்கு எதிராக முதன்முதலில் செயல்பட்டது அந்தக் காலத்தில்தான். எனினும் ஜெர்மானிய பூர்ஷ்வா வர்க்கம் மனவுறுதி அற்றதாக, பயங்கொள்ளியாக இருந்தமையால் புரட்சி வழியால் அன்றி, முடியரசு நிலவுகையிலேயே சில தனிப் பட்ட சலுகைகள், சீர்திருத்தங்களைப் பெறுவதன் வாயிலாகச் சமூக-பொருளாதார மாறுதல்களை ஏற்படுத்த முயன்றது. சமூக வாழ்வில் விட்டுக்கொடுத்தலுக்கும் சமரசங்கள் செய்து கொள்வதற்கும் ஆன முயற்சி, கொள்கைவாதத் துறையிலும் சமரசத்துக்குத் தவிர்க்க முடியாதபடி இட்டு வந்தது.

சாஸ்திரீயத் தத்துவம் என அழைக்கப்படும் அந்தக் காலத் திய ஜெர்மானியத் தத்துவத்தில் இரண்டு போக்குக்கள் தனித் தனியாகப் பிரிவுபடுகின்றன. அவையாவன கருத்துமுதல்வாதப் போக்கும் (இதன் மிகப் பிரபலமான பிரதிநிதிகள் இ. கான்ட், கி. ஹெகல் இருவருமாவர்) மாருநிலைவாதப் பொருள்முதல் வாதப் போக்கும் (லு. பாயர்பாக்).

---

[1] கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ். ''கற்பனவாதத் திலிருந்து விஞ்ஞானத்துக்கு சோஷலிஸத்தின் வளர்ச்சி'', நூல்திரட்டு, தொகுதி 19, பக்கம் 190 பார்க்க.

இம்மானுவேல் காண்ட் (*Immanuel Kant*) (*1724—1804*), வேறு விஷயங்களோடு, சூரிய மண்டலம் தொடக்கநிலை நெபுலாவிலிருந்து தோன்றியது என்ற விஞ்ஞானக் கற்பிதக் கொள்கையை, அனுமானத்தை வெளியிட்டதற்காகவும் புகழ் பெற்றவர். ஒளிக் கோளங்கள் இயற்கைவரலாற்று முறையில் தோன்றியவை என்ற இந்தக் கருத்து இயற்கை பற்றிய மாறுநிலைவாதக் கற்பனைக்குப் பெருத்த அடியாக விளங்கியது. உணர்வுச் செயல் முறையைப் பகுத்தாய்ந்ததன்மூலம் அருவமான, சித்தாந்தச் சிந்தனையின் பங்கைப் புரிந்து கொள்ளக் காண்ட் முயன்றார். ஞானங்களையே தர்க்கரீதியாகப் பகுத்தாய்வதன் இன்றியமையாமையை அவர் காட்டினார். ஆயினும் சர்வப்பொதுவானது, இன்றியமையாதது பற்றிய ஞானத்தை மனித ஆன்மாவின் இயல்பான திறன் காரணமாக இயற்கையையும் அனுபவத்தையும் சாராமலே (அனுபவ சார்பின்றி) பகுத்தறிவு பெற்றுவிடுகிறது என்ற கருத்துமுதல்வாத முடிவுக்கு அவர் வந்தார்.

பொருள்கள் புறநிலையாக, தாமாகவே நிலவுகின்றன என்று ஏற்றுக்கொண்டது காண்டினது தத்துவத்தின் நல்ல பகுதியாகும். ஆயினும் பிரபஞ்சம் கோட்பாட்டளவில் அறியொணாதது என்ற தவறான முடிவை அவர் ஆதாரமாகக் கொண்டார். மனிதனது பகுத்தறிவு வரையறைக்கு உட்பட்டது என்றும் பிரபஞ்சத்தை அறிந்துகொள்ள வல்லதல்ல என்றும் காட்டி அறியொணாமைக் கொள்கைப் போக்கை ஆதரித்தார். இந்தத் தத்துவ நிலையின் தன்மையைச் சித்திரிக்கையில் வி. இ. லெனின் பின்வருமாறு கூறினார்: ''காண்டினது தத்துவத்தின் அடிப்படை அம்சம் பொருள்முதல்வாதத்தைக் கருத்துமுதல்வாதத்துக்கு இணங்கச் செய்தல், இவ்விரண்டுக்குமிடையே சமரசம் ஏற்படுத்தல், பல்வகையான, எதிரெதிரான தத்துவப் போக்குகளை ஒரே தொகுப்பில் ஒன்று திரட்டல் ஆகும். நமக்கு வெளியிலுள்ள ஏதோ ஒன்று, தன்னிலைப் பொருள் எனப்படுவது, நமது எண்ணங்களுக்குப் பொருந்துகிறது என்று ஒப்புக்கொள்ளும் பொழுது காண்ட் பொருள்முதல்வாதி. இந்தத் தன்னிலைப் பொருள் அறியொணாதது, அனுபவ வரம்புக்கு அப்பாற்பட்டது, மறுவுலகைச் சேர்ந்தது என்று கூறும்பொழுது காண்ட் கருத்துமுதல்வாதியாகப் பேசுகிறார்.''[1]

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 206.

அறிதலின் கோட்பாட்டு வரம்பை நிலைநாட்டியதன் வாயிலாகக் கான்ட் மதத்துக்கு, இயற்கைக்கு மேலான, இயல்பு கடந்த ஒன்றின்மீது நம்பிக்கைக்கு உண்மையில் இடம் அளித்துவிட்டார். புறநிலை விதிமுறைகள் நிலவுவதை அவர் மறுத்தார். இயற்கைக்குரிய விதிகளைப் பகுத்தறிவே விதிக்கிறது என்று அவர் வலிந்துரைத்தார்.

இயக்க இயலைப் புறநிலைக் கருத்துமுதல்வாதத்துடன் பொருத்திச் சேர்ப்பதற்கு ஆழ்ந்த முயற்சி செய்தவர் **கியோர்க் வில்ஹெல்ம் பிரீட்ரிஹ் ஹெகல்** (*Georg Wilhelm Friedrich Hegel*) *(1770—1831)*. அவரது தத்துவமும் உள் முரண்பாடுகள் கொண்டதாகவும் முன்பின் இயைபு அற்றதாகவும் இருந்தது.

இயக்க இயலைச் செவ்வைப்படுத்தி, பிரபஞ்சம் அனைத்தும் —இயற்கை, சமூக வாழ்வு, சிந்தனை, யாவும்—முடிவற்ற இயக்கமும் மாறுதலும் வளர்ச்சியும் கொண்ட நிகழ்முறை என்று காட்டுவதற்கு ஹெகல் முயன்றார். இயக்க இயலின் அடிப்படைக் கோட்பாடுகளையும் விதிகளையும் வகைப்பிரிவுகளையும் அவர் தனித்தனியாகக் குறித்தார். இயற்கை, சமூகம், சிந்தனை ஆகியவற்றின் வளர்ச்சி இயக்க இயலின் ஒரே விதிகளுக்கு உட்பட்டது என்னும் அவரது கருத்து பெரும் பயன் விளைப்பதாக விளங்கியது.

எனினும் புறநிலைக் கருத்துமுதல்வாதியாக இருந்த ஹெகல், பிரபஞ்சத்தின் எல்லா நிகழ்ச்சிகளினதும் அடிப்படையாக, இயற்கை, சமூகம் ஆகியவற்றின் அடிப்படையாகப் பரம கருத்து, பிரபஞ்ச ஆன்மா எனப்படுவதை எடுத்துக்கொண்டார். நிலவுபவை யாவற்றுக்கும் எல்லா இருத்தலுக்கும் அடிப்படையாகவும் அதே சமயம் செயல்படும் தொடக்கமாகவும் இந்தப் பரம கருத்து ஹெகலின் சித்தாந்தத்தில் முன்வைக்கப்படுகிறது.

ஹெகலின் கொள்கைப் படி இயற்கை என்பது மறுவடிவு கொண்ட கருத்தே, அதன் வேறு இருத்தலே, பிரபஞ்ச ஆன்மாவின் வளர்ச்சியில் ஒரு படியே ஆகும். அவருடைய தத்துவத்தில் எல்லாம் திரிபாகக் கற்பனை செய்யப்பட்டிருக்கின்றன: எண்ணங்கள் புறநிலையாக நிலவும் பொருள்களின், பொருளியல் இருத்தலின் பிரதிபலிப்புக்கள் அல்ல; மாறாக, கருத்துதான், பிரபஞ்ச ஆன்மாதான் செயலாற்றும் சக்தி என்ற முறையில் இயற்கையைப் பிறப்பிக்கிறது. இந்த இயற்கையின் வளர்ச்சி சிந்திக்கும் பிராணியான மனிதன் தோன்றுவதற்குப் பின்னர்

காரணம் ஆகிறது. மனிதன் வாயிலாகக் கருத்து தன்னைத் தானே அறிந்துகொள்கிறது. ஹெகலின் தானே தோன்றி வளரும் இந்தப் பரமகருத்து, பிரபஞ்ச ஆன்மா, மதத்தினுல் கடவுள் எனப்படுவதேதான் என்பதைப் புரிந்துகொள்வது கடினம் அல்ல.

ஹெகலின் கொள்கைப்படி இயற்கை என்பது கருத்தின் வெறும் ''விலக்கம்'' தான். ஆகையால் ஒரு கணத்தில் (வளர்ச்சியில் ஆகும் செயல் நிகழ்கையில்) தூய இருத்தல் இயற்கையாக வடிவுற்றது என்று ஆகிறது. இதன்படி இயற்கையின் வளர்ச்சியில் தொடக்கம் இருந்தது என்று அர்த்தப்படுகிறது. புறநிலைக் கருத்துமுதல்வாதத்தால் வலியத் திணிக்கப்படும் இந்த முடிவு இயக்க இயலுக்கு எவ்வகையிலும் பொருந்தவில்லை. பி. எங்கெல்ஸ் இதுபற்றிப் பின்வருமாறு குறித்தார்: ஹெகலின் கொள்கைப்படி இயற்கை காலத்தில் வளர்ச்சியுறவல்லது அல்ல. எனவே பிரபஞ்சத்தின்மீது வரலாற்று நோக்கு செலுத்தப்பட வேண்டும் என்று கோரும் ஹெகலின் இயக்க இயல்வாதம் அவரது கருத்துமுதல்வாத முறைக்கு முரண்படுகிறது. கருத்துமுதல்வாதத்துக்கும் இயக்க இயல்வாதத்துக்கும் இடையே நிலவும் இந்தத் தீர்க்கமுடியாத முரண்பாட்டை அகற்ற ஹெகலுக்கு இயலவில்லை.

சமூக வாழ்வின் நிகழ்ச்சிகளைத் தெளிவுபடுத்துகையிலும் அறிதல் நிகழ்முறையை விளக்குகையிலும் கூட ஹெகலிடம் இயக்க இயல் வழிக்கும் கருத்துமுதல்வாத முறைக்கும் இடையே முரண்பாடுகள் மிக அடிக்கடி உண்டாகின்றன. இந்தச் சிந்தனையாளரின் வர்க்க நிலை இங்கே முழு அளவில் வெளிப்படுகிறது. ஹெகல் பிரஷ்யாவின் அரசரது அரண்மனைத் தத்துவாசிரியராக இருந்தார். பரம ஆன்மாவை ஒப்புக்கொள்வது முடியரசைச் சித்தாந்தரீதியில் நியாயப்படுத்துவதற்குச் சௌகரியமாக இருந்தது. நிலவுலகில் பிரபஞ்ச ஆன்மாவின் வெற்றி வலத்தின் வடிவில் முடியரசைச் சித்திரிக்க ஹெகல் முயன்ருர்.

ஹெகலின் புறநிலைக் கருத்துமுதல்வாதமும் மொத்தத்தில் கருத்துமுதல்வாதத் தத்துவமும் ஆதாரமற்றவை என்பதைக் காட்டினுர் ஜெர்மானியப் பொருள்முதல்வாதியான லுட்விக் பாயர்பாக் (*Ludwig Feuerbach*) (*1804—1872*). பரமகருத்து முதலாவது, இயற்கை இரண்டாவது என்ற ஹெகலின்

போதனையை அவர் கவனமாக அலசி ஆராய்ந்து ஆழ்ந்த விமர்சனத்துக்கு உள்ளாக்கினர். இயற்கை கடவுளால் படைக்கப்பட்டது என்னும் மதக் கட்டுக்கதையை நயப்பாங்குடன் வெளியிடுவதே இந்தப் போதனை என்று பாயர்பாக் காட்டினர்.

பாயர்பாக், கருத்துமுதல்வாதத்தை விமர்சித்து, புறநிலைப் பிரபஞ்சம், அதாவது இயற்கை, பொருளியலானது, பருவடிவுள்ளது, புலன்களால் உணரப்படக்கூடியது என்று நிரூபித்தார். சடப்பொருள் என்பது மனிதனுக்கு வெளியே, வானத்திலும் பூமியிலும் சிதறியிருப்பது மாத்திரமே அல்ல, மனிதனுக்குள் ஒருமுனைப்படுத்தப்பட்டுள்ளதுங்கூட என்று அவர் அழுத்திக் கூறினர். சடப்பொருள் யாராலும் படைக்கப்படவில்லை, அது நித்தியமாக நிலவுகிறது என்றார் அவர். கடவுளர்களால் அல்ல, இயல்பான சக்திகளாலேயே, இயல்பான விதிகளாலேயே இயற்கை இயக்கி நடத்தப்படுகிறது என அவர் கூறினர்.

இயற்கையின் இயல்பான வளர்ச்சி சிந்திக்கும் திறன் படைத்த மனிதனின் தோற்றத்துக்கு இட்டு வந்திருக்கிறது என்பதைக் குறிப்பிட்டு, சிந்தனை சடப்பொருளிலிருந்து தனிப் பிரிக்க முடியாதது என்றும் மூளையின் செயல்பாட்டின் விளைவே அது என்றும் பாயர்பாக் வலியுறுத்தினர். மனிதச் சிந்தனை தவிர வேறு எவ்விதச் சிந்தனையும் இல்லை, இருக்கவும் முடியாது என அவர் திண்ணமாகக் கூறினர். இருத்தல், சிந்தனை இவற்றின் ஒருமை எப்போது அர்த்தமுள்ளது ஆகிறது என்றால் இந்த ஒருமையின் ஆதாரமாக, அகநிலைப்பொருளாக எதார்த்தமான பிராணி, அதாவது மனிதன், எடுத்துக்கொள்ளப்படும் போது தான். சடப்பொருள் ஆன்மாவின் விளைவு அல்ல, ஆன்மாதான் சடப்பொருளின் உன்னத விளைவு — இவ்வாறு எழுதினர் பாயர்பாக்.

நமது உணர்வால் பிரதிபலிக்கப்படும் வெளிப் பிரபஞ்சம், பொருள்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் புறநிலை எதார்த்தத்தை ஒப்புக்கொண்டு, மனிதன் நிலவுவதற்கு ஏற்ற நிலைமைகள் இல்லாத காலத்திலுங்கூட இயற்கை நிலவியது என பாயர்பாக் சுட்டிக்காட்டினர். பொருளியலான, நமது புலன்களால் உணர்ந்து அறியக்கூடிய எந்தப் பிரபஞ்சத்தை நாமே சேர்ந்தவர்களோ, அது ஒன்றுதான் உண்மையான எதார்த்தமான பிரபஞ்சம், மற்றது எல்லாம் கருத்துமுதல்வாதப் பிதற்றல் என்றார் அவர்.

ஹெகலின் தத்துவத்தை அம்பலப்படுத்தி அதன் வாதங்களை ஆணித்தரமாக மறுத்தபோதிலும் பாயர்பாக் தமக்கு முந்திய பொருள்முதல்வாதத்தின் வரையறுத்த தன்மையை அகற்றவில்லை. அவருடைய தத்துவம் மாறுநிலைவாதப் பொருள் முதல்வாதம். ஹெகலின் கருத்துமுதல்வாத முறையை பாயர்பாக் நிராகரித்து ஒதுக்கினுர். ஆனுல் அதோடுகூடவே ஹெகலின் இயக்க இயல்வாதத்தையும், வளர்ச்சி பற்றிய அவரது விலைமிக்க கருத்துக்களையும் அவர் நிராகரித்துத் தள்ளிவிட்டார். மாறுநிலைவாதப் பொருள்முதல்வாத நிலையில் நின்றுவிட்ட பாயர்பாக் மனிதனது சமூக-வரலாற்றுச் சாரத்தை, அவனது மாற்றியமைக்கும் சமூக நடைமுறைச் செயலின் நிர்ணயகரமான பங்கைப் புரிந்துகொள்ள முடியவில்லை. மனிதனை அவர் உயிரியல் ஐந்துவாக மட்டுமே ஆராய்ந்தார். மனிதனது வளர்ச்சி சமூக உற்பத்தியின் வளர்ச்சியால் தீர்மானிக்கப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு அவர் முன்னேறவில்லை. மனிதனது உணர்வுகளும் விழைவுகளுமே வரலாற்றின் இயக்கு சக்திகள் என பாயர்பாக் கருதினுர். எனவே சமூக வாழ்வின் பொருள்முதல்வாத அர்த்தத்தை அவர் தெரிந்துகொள்ளவில்லை.

## தத்துவத்தின் வளர்ச்சியில் ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் ஆற்றிய பங்கு

ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் கருத்துமுதல்வாதத்திற்கு எதிராக முன்னணிப் பொருள்முதல்வாதத்தின் போராட்டத்தில் பெரும் பங்கு ஆற்றினுர்கள்.

19ம் நூற்ருண்டைச் சேர்ந்த ருஷ்யக் புரட்சிகர ஜனநாயகவாதிகளான விஸ்ஸரியோன் பெலீன்ஸ்க்கிய் *(1811—1848)*, அலெக்ஸாந்தர் ஹெர்ட்ஸென் *(1812—1870)*, நிக்கொலாய் செர்னிஷேவ்ஸ்க்கிய் *(1828—1889)*, நிக்கொலாய் தப்ரலியூபொவ் *(1836—1861)*, திமீத்ரிய் பீஸரெவ் *(1840—1868)* ஆகியோரும் பிறரும் ருஷ்யாவில் நிலப்பிரபுத்துவ-பண்ணையடிமை அமைப்பு நெருக்கடிக்கு உள்ளாகியிருந்த காலத்தில் செயலாற்றினுர்கள். செயலூக்கம் உள்ள அரசியல், சமூக ஊழியர்களாக விளங்கிய அவர்கள், ஆழ்ந்த புரட்சிகர மாற்றங்கள், முக்கியமாகப் பண்ணையடிமை முறையின் ஒழிப்பு ருஷ்யாவுக்

குத் தேவை என்பதைப் புரிந்துகொண்டார்கள். நாட்டின் குடி மக்களில் மிகப் பெருந்தொகையினரான குடியானவர்கள் பண்ணையடிமை முறையாலும் முதலாளித்துவத்தாலும் இரு வகையில் நசுக்கப்படுவதைப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் கண்டார்கள். பண்ணையடிமை முறைக்கு எதிரான சக்திகளின் நலன்களையும் பண்ணையடிமைக் குடியானவர்களின் எண்ணங் களையும் விழைவுகளையும் அவர்கள் வெளியிட்டார்கள். நிலப் பிரபுத்துவ-எதேச்சாதிகார ஒடுக்குமுறைக்கும் பண்ணையடி மைத் தனத்துக்கும் பூர்ஷ்வா அடிமைத்தனத்துக்கும் எதிராக மக்கள் திரளின் போராட்டத்தில் புரட்சிகர ஜனநாயகவாதி கள் ஒத்துழைத்தார்கள்.

ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் பொருள்முதல்வா தம், இயக்க இயல்வாதம் ஆகியவற்றின் வளர்ச்சியில் பெருத்த பங்கு ஆற்றினார்கள். தங்கள் காலத்து விஞ்ஞானச் சாதனைகளை யும் பொருள்முதல்வாதத் தத்துவத்தையும் ஆதாரமாகக் கொண்டு அவர்கள் தங்களுக்கு முந்திய பொருள்முதல்வாதி களைக் காட்டிலும் அதிகத் தர்க்கப் பொருத்தத்துடன் கருத்து முதல்வாதத்தை விமர்சித்தார்கள். மாறுநிலைவாதப் பொருள் முதல்வாதத்தின் வரையறுத்த தன்மையை அவர்கள் கணிச மான அளவு போக்கி விட்டார்கள். தத்துவ வளர்ச்சியில் நி. செர்னிஷேவ்ஸ்க்கியின் பங்கைக் குறிப்பிட்டு வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினார்: ''1850க்களிலிருந்து 1888ம் ஆண்டு வரை முழுமையான தத்துவப் பொருள்முதல்வாதத்தின் தரத் தில் தொடர்ந்து நிலைத்திருக்கவும் புதுக்கான்ட்வாதிகள், புலக் கொள்கையினர், மாஹீயவாதிகள் முதலிய குழப்பல்காரர் களின் பரிதபிக்கத்தக்க பிதற்றல்களை நிராகரித்து ஒதுக்கவும் வல்லமை கொண்டிருந்த உண்மையிலேயே மாபெரும் ஒரே ருஷ்ய எழுத்தாளர் செர்னிஷேவ்ஸ்க்கிய் தாம்.''[1]

பிரபஞ்சத்தின் பொருளியல்தன்மையையும் அதன் வளர்ச்சி விதிகளின் புறநிலை இயல்பையும் பற்றிய போதனையை ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் செவ்வைப்படுத்தினார்கள். நி. தப்ரலியூபொவ் பின்வருமாறு எழுதினார்: ''இயற்கையில்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 384.

எல்லாம் எளியதிலிருந்து அதிகச் சிக்கலானதற்கு, திருந்தாததி லிருந்து அதிகத் திருத்தமானதற்குப் படிப்படியாகச் செல்கிறது. ஆனால் எங்கும் அதே சடப்பொருள்தான் உள்ளது. அதன் வளர்ச்சித் தரங்கள் மட்டுமே வெவ்வேறானவை.''

நிரந்தரமாக மாறிக் கொண்டிருக்கும் இயற்கை தனது வளர்ச்சியின் குறித்த கட்டத்தில் சிந்திக்கும் பிராணிகளைத் தவிர்க்க இயலாதவாறு தோற்றுவிக்கிறது என்ற கருத்தைப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் விரிவுபடுத்தினார்கள். ஆன்மாவும் எண்ணமும் இயற்கையினதும் வரலாற்றினதும் வளர்ச்சியின் விளைவு. எனவே கருத்தை, சிந்தனையை முதலாவதாகக் கொள்ளலாகாது. இயற்கை, சடப்பொருள் உணர்விலிருந்து தோன்றியது என்பது அபத்தம் என அவர்கள் வாதித்தார்கள்.

ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் அறியொணாமைக் கொள்கையை எதிர்த்தார்கள். பிரபஞ்சத்தை அறிவது சாத் தியம் என்பது பற்றிய எல்லாவிதச் சந்தேகங்களையும் அவர்கள் நிராகரித்து விட்டார்கள். புறநிலையாக நிலவும் பொருள்களும் நிகழ்ச்சிகளும், அவற்றின் பண்புகளும் இயல்புகளும் உறவுகளும், அவை நிலவுவதற்கும் வளர்வதற்கும் உள்ள புறநிலை விதிகளும் நமது சிந்தனையில் சரியாகப் பிரதிபலிக்கின்றன என அவர்கள் உரைத்தார்கள்.

ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் இயற்கை, சமூகம், இவற்றின் இயக்க இயல் அர்த்தத்திற்கு மிக அருகே நெருங்கி விட்டார்கள். இயக்க இயலை அவர்கள் ''புரட்சியின் இயற்கணிதம்'' எனக் கருதினார்கள். ஆனால் புறநிலை வரலாற்று நிலைமை களும் ருஷ்ய வாழ்க்கையின் பிற்பட்ட தன்மையும் அவர்கள் ஒத்தியைந்த பொருள்முதல்வாதி-இயக்க இயல்வாதிகள் ஆவதற்குத் தடையாக இருந்தன. சமூக வாழ்வின் பொருள் முதல்வாத அர்த்தத்தையும் அவர்கள் முழுதும் புரிந்துகொள்ள வில்லை. சமூகத்தை ஆராய்கையில் அவர்கள் பொருள்முதல் வாதத்தின் அனேக அம்சங்களை வெளியிட்டுள்ளார்கள் என்பது உண்மையே. உதாரணமாக, ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதி கள் வரலாற்றில் மக்கள் திரள் ஆற்றும் மிகப் பெரிய பங்கைச் சுட்டிக் காட்டினார்கள், சமூக வாழ்வில் பொருளாதாரக் காரணிகளின் முக்கியத்துவத்தை வலியுறுத்தினார்கள், சமூக வளர்ச்சியில் கலைகள், முற்போக்குக் கருத்துக்கள் ஆகியவற்றின் பங்கை உயர்வாக மதித்தார்கள். செர்னிஷேவ்ஸ்கியின்

படைப்புக்களில் வர்க்கப் போராட்டத்தின் மணம் வீசுகிறது என்று எழுதினர் லெனின்.

*

மார்க்ஸுக்கு முந்திய தத்துவத்தின் சிறந்த பிரதிநிதிகளால்கூட ஒத்தியைந்த தத்துவச் சித்தாந்தத்தை, உண்மையில் விஞ்ஞான ரீதியான பிரபஞ்சக் கண்ணேட்டத்தை உருவாக்க முடியவில்லை என்பதைக் காண்கிறோம். இயற்கை, சமூகம், சிந்தனை ஆகியவற்றின் வளர்ச்சி நிகழ்முறையைச் சரியாகப் பிரதிபலிக்கும் செப்பமாக அமைந்த விஞ்ஞானரீதியான தத்துவக் கண்ணேட்டம், வரலாற்றில் முதன்முதலாக உருவாக்கப்பட்டது மார்க்ஸீயத்தினுல்தான்.

## § 2. மார்க்ஸீயத்தினுல் தத்துவத்தில் விளைக்கப்பட்ட புரட்சிகர மாற்றம்

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவ விஞ்ஞானம் அதற்கு முன்பு இருந்த தத்துவம், தற்கால பூர்ஷ்வாத் தத்துவம் ஆகியவை எல்லாவற்றிலுமிருந்து பண்பளவில் வேறுபட்டது ஆகும். கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ், இருவராலும் உருவாக்கப்பட்டு விளாதீமிர் இல்யீச் லெனினுல் விரிவுபடுத்தப்பட்ட இந்தத் தத்துவம் பொருள்முதல்வாதத்தையும் இயக்க இயல்வாதத்தையும் இணையுறுப்புக்களாகப் பொருத்துகிறது. இயற்கை, சமூகம், சிந்தனை ஆகியவற்றுக்கு உரிய நிகழ்ச்சிகளை அறிவதற்கு, ஒன்றுன இயக்க இயல்-பொருள்முதல்வாதச் சித்தாந்தமும் முறையும் இதில் கையாளப்பட்டன. முழுமையான, செப்பமாக அமைந்த விஞ்ஞான ரீதியான இந்தத் தத்துவக் கண்ணேட்டம் தொழிலாளி வர்க்கத்தினதும் உழைப்பாளி மக்கள் அனைவரதும் புரட்சிப் போராட்டத்தின் நோக்கங்களுக்கு வரலாற்றில் முதன் முறையாகத் தொண்டாற்றலாயிற்று.

மார்க்ஸீயம் சென்ற நூற்றுண்டின் 40க்களில் ஜெர்மனியில் உதயமாயிற்று. விஞ்ஞானம், சமூக-வரலாற்று நடைமுறை ஆகியவை அனைத்தினுடையவும் வளர்ச்சியின் விதிமுறைக்கு ஏற்ற விளைவாக விளங்கியது அது. அந்தக் காலத்திற்குள் பூர்ஷ்வாச் சமூகத்தில் முதலாளித்துவ உற்பத்திமுறையின் ஆழ்ந்த

முரண்பாடுகள் வெளிப்பட்டுவிட்டன. அதே சமயம் பாட்டாளி வர்க்கத்தைச் சுறண்டலிலிருந்து விடுவிப்பதற்கான எதார்த்தச் சூழ்நிலைமைகள் உருவாகியிருந்தன. பாட்டாளி வர்க்கத்துக்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் இடையே வர்க்கப் போராட்டம் இந்த அடிப்படையில் வளர்ந்து தீவிரம் அடைந்தது. அதன் நோக்கங்கள் போதிய தெளிவுடன் நிச்சயிக்கப்பட்டன. தொழிலாளி வர்க்கம் தனது பொருளாதார, அரசியல் உரிமைகளுக்காக ஊக்கத்துடன் போராடியது. லியோன் நகரில் பிரெஞ்சுத் தொழிலாளர்களின் கிளர்ச்சி *(1831, 1834)*, ஜெர்மனியில் ஸைலேஷிய நெசவாலைத் தொழிலாளர்களின் கிளர்ச்சி *(1844)*, இங்கிலாந்தில் சார்ட்டிஸ்டுகளின் இயக்கம் *(1830—1840)* ஆகியன இதற்குச் சான்று பகர்கின்றன. பாட்டாளி வர்க்கத்தின் வர்க்கச் சுதந்திரப் போக்கு, பூர்ஷ்வாச் சமூகத்தின் சமுதாய வாழ்க்கை நியமங்களை ஒழிப்பதுபற்றிய அதன் அசையா உறுதி ஆகியவற்றை அதனுடைய வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த போராட்டங்கள் காட்டின.

புரட்சிகரத் தொழிலாளி இயக்கத்துக்குத் தேவையாக இருந்தவை உழைப்பாளி மக்களது போராட்டத்தின் குறிக்கோள்கள், கடமைகள் ஆகியவற்றுக்கு உரிய விஞ்ஞான அடிப்படையை நிறுவுவதும் முதலாளித்துவ அமைப்பை ஒழித்துப் புதிய சமூகத்தை நிறுவுவதற்கு ஏற்ற வழிகளையும் சாதனங்களையும் நிச்சயிப்பதுமே. நவீனச் சமூகத்தின் மிகப் புரட்சிகரமானதும் எல்லா உழைப்பாளி மக்களின் நலன்களுக்காகவும் ஒத்தியைந்த முறையில் போராடுவதுமான பாட்டாளி வர்க்கத்தின் மூலாதார நலன்களின் சித்தாந்த வெளியீடாக விளங்கியது மார்க்ஸீயம்.

மார்க்ஸீயக் கண்ணோட்டத்தின் உதயம் அதற்கு முந்திய விஞ்ஞானச் சாதனைகளுக்கு மறுப்பாக அர்த்தப்படவில்லை. சாஸ்திரீய ஜெர்மானியத் தத்துவமும் (இ. கான்ட், கி. ஹெகல், லு. பாயர்பாக்), ஆங்கில அரசியல் பொருளாதாரமும் [ஆதம் ஸ்மித் *(Adam Smith)*, டேவிட் ரிக்கார்டோ *(David Ricardo)*], பிரெஞ்சுக் கற்பனை சோஷலிஸமும் [அன்ரீ ஸான்-ஸிமோன் *Henri Saint-Simon)*, ஷார்ல் பூரியே *(Charles Fourier)*] மார்க்ஸியத்தின் சித்தாந்த ஊற்றுக்கண்கள் என வி. இ. லெனின் குறிப்பிட்டுள்ளார். தனக்கு முந்திய வரலாற்று வளர்ச்சிக் காலம் முழுவதிலும் முற்போக்குச் சமூகச் சிந்தனையால்

உருவாக்கப்பட்ட சிறந்தவற்றை எல்லாம் மார்க்ஸீயம் தன்னுள் நிறைத்துக்கொண்டது. ''மார்க்ஸீயம் பூர்ஷ்வாச் சகாப்தத்தில் பெறப்பட்ட மதிப்பு மிக்க சாதனைகளைச் சற்றும் நிராகரித்து ஒதுக்கவில்லை. மாறாக, மனிதச் சிந்தனை, பண்பாடு ஆகியவற்றின் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட வளர்ச்சியில் இருந்த விலைமதிப்புள்ள அம்சங்களை எல்லாம் ஏற்றுக்கொண்டு சீர்படுத்திக் கொண்டது. புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் கொள்கைவாதம் என்ற முறையில் மார்க்ஸீயம் உலக வரலாற்று முக்கியத்துவம் பெற்றதற்குக் காரணம் இதுவே''[1]—இவ்வாறு எழுதினார் லெனின்.

இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் உருவாக்கப்பட்டது மார்க்ஸீயத்தின் வேறு இரண்டு உள்ளுறுப்புக்களான மார்க்ஸீயப் பொருளாதாரப் போதனை, விஞ்ஞான சோஷலிஸத்தின் சித்தாந்தம் ஆகியவை உருவாக்கப்பட்டதுடன் துணிக்க முடியாதவாறு தொடர்பு கொண்டிருந்தது. ''அரசியல் பொருளாதாரம் அனைத்தையும் அதன் அடிப்படையிலிருந்து தொடங்கிச் செப்பம் செய்வதற்கும் வரலாற்றுக்கும் இயற்கை விஞ்ஞானத்துக்கும் தத்துவத்துக்கும் தொழிலாளி வர்க்கத்தின் அரசியலுக்கும் செயல்முறைக்கும் பொருள்முதல்வாத இயக்க இயலைப் பயன்படுத்துவதுதான் மார்க்ஸுக்கும் எங்கெல்ஸுக்கும் எல்லாவற்றையும் விட அதிக அக்கறைக்கு உரியனவாக விளங்குகின்றன. அவர்கள் உட்புகுத்திய யாவற்றிலும் முக்கியமான, யாவற்றிலும் புதிய அம்சங்கள் இவையே. புரட்சிகரச் சிந்தனையின் வரலாற்றில் அவர்களது மேதை வாய்ந்த முன்னடிவைப்பு இவற்றிலேயே உள்ளது''[2] என்று எழுதினார் வி. இ. லெனின்.

வரலாறு இயக்கஇயல்-பொருள்முதல்வாத முறையில் புரிந்து கொள்ளப்பட்டது, முதலாளித்துவத்தின் ஆழ்ந்த முரண்பாடுகளும் அதன் வளர்ச்சிக்குரிய விதிமுறைகளும் திறந்து காட்டப்பட்டது, இவற்றின் விளைவாக முதலாளித்துவம் தவிர்க்க இயலாதவாறு மடிந்து ஒழியும், அடுத்துவரும் சோஷலிஸப் புரட்சியில் அது அழிக்கப்படுவது வரலாற்று ரீதியில் இன்றியமையா

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 41, பக்கம் 337.

[2] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 24, பக்கம் 264.

தது என்ற முடிவு முன் ஒருபோதும் இல்லாத அளவு தெளிவாகிவிட்டது. மார்க்ஸும் எங்கெல்ஸும் மிகச் செயலூக்கத்துடன் பங்கு கொண்ட தொழிலாளி வர்க்கப் போராட்டம் அவர்களது தத்துவத்துக்குப் புரட்சிகர உள்ளடக்கத்தைத் தந்தது.

கம்யூனிஸ உலகக் கண்ணேட்டத்தின் பொதுச் சித்தாந்த அடிப்படையாகத் தங்கள் தத்துவ முறையை உருவாக்கியதன் வாயிலாக மார்க்ஸும் எங்கெல்ஸும் கருத்துமுதல்வாத இயக்க இயல்வாதம், மாருநிலைவாதப் பொருள்முதல்வாதம் ஆகியவற்றின் கோளாறுகளையும் குறைகளையும் அகற்றுவதிலும் முந்திய தத்துவத்தில் இயக்க இயல்வாதத்துக்கும் பொருள்முதல்வாதத்துக்கும் இடையே நிலவிய பிளவை நீக்குவதிலும் மிகப் பெரிய தொண்டு ஆற்றினர்கள்.

நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, மார்க்ஸீயத்துக்கு முற்பட்ட பொருள்முதல்வாதம் இயக்க இயல்வாதத் தொடர்பு அற்றதாக, வரலாற்றுத் தொடர்பு அற்றதாக இருந்தது. வளர்ச்சியை அது மிக எளிய வகையில் புரிந்துகொண்டது. வளர்ச்சி பற்றிய போதனை பிரதானமாக ஹெகலின் இயக்க இயல்வாதத்தில் உருவாக்கப்பட்டது, ஆனல் அது கருத்துமுதல்வாத நோக்கு கொண்டிருந்தது. எங்கெல்ஸ் குறிப்பிட்டது போல, ''ஹெகலின் இயக்க இயலில் இருந்த திரிபின் அடிப்படை என்னவென்ருல், ஹெகலின் கருத்துப்படி அது 'கருத்தின் சுயவளர்ச்சியாக' இருக்க வேண்டும் என்பதே. இதன்படி, பொருள்களின் இயக்க இயல் கருத்தின் பிரதிபலிப்பே ஆகும். உண்மையிலோ, நமது மூளையில் தோன்றும் இயக்க இயல், இயற்கைப் பிரபஞ்சத்திலும் மனித சமூகத்திலும் ஏற்படுவதும் இயக்க இயல் வடிவுக்கு உட்பட்டதுமான எதார்த்த வளர்ச்சியின் பிரதிபிம்பமே.''[1]

மார்க்ஸீயத்தின் ஸ்தாபகர்கள் ஹெகலின் கருத்துமுதல்வாத இயக்க இயல்வாதத்தின்மீது விமர்சன ரீதியில் மீண்டும் சிந்தனை செலுத்தி, பொருள்முதல்வாத இயக்க இயல்வாதத்தை உருவாக்கினர்கள். இது பண்பளவில் புதிய இயக்க இயல்வாத முறையாகும். ''எனது இயக்க இயல்வாத முறை தன் அடிப்படையில் ஹெகலின் முறையிலிருந்து வேருனது மட்டும்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். நூல்திரட்டு, தொகுதி 38, பக்கம் 177.

அல்ல, அதன் நேர் எதிர்நிலை ஆகவும் விளங்குகிறது''[1] என்று எழுதினர் மார்க்ஸ்.

பொருள்முதல்வாத இயக்க இயல்வாதத்தைச் செவ்வையாக உருவாக்குகையில் மார்க்ஸும் எங்கெல்ஸும் 19ம் நூற்றுண்டின் மிகப் பெரிய இயற்கைவிஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களை ஆதாரமாக எடுத்துக்கொண்டார்கள். அங்கஜீவிகளின் உயிரணுக் கட்டமைப்பு பற்றிய சித்தாந்தம், ஆற்றலின் அழியாமையையும் மாற்றத்தையும் பற்றிய விதி, விலங்கினங்கள், தாவர இனங்கள் ஆகியவற்றின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் குறித்த டார்வினது போதனை, இவற்றை அவர்கள் முதன்மையாக ஆதாரமாக எடுத்துக்கொண்டார்கள். பொருளியல் பிரபஞ்சம் ஏதோ சதா சர்வ காலத்திற்கும் நிலைத்திருப்பது என்றும் மாறுதல் அற்றது என்றும் கருதிய மாருநிலைவாதக் கண்ணேட்டத்தை இந்தக் கண்டுபிடிப்புக்கள் ஆதாரத்துடன் மறுத்துவிட்டன. பிரபஞ்சத்தின் பொருள்களும் நிகழ்ச்சிகளும் மாறுதலும் வளர்ச்சியும் கொண்டவை, ஒன்ருனவை, பரஸ்பரத் தொடர்பு உள்ளவை என்ற இயக்க இயலின் அடிப்படைக் கோட்பாடுகளை இவை உறுதிப்படுத்தின். இந்தக் கண்டுபிடிப்புக்களின் தத்துவ முக்கியத்துவம் முதன்மையாக இவ்விஷயத்தில் தான் அடங்கியுள்ளது.

மார்க்ஸீயத் தத்துவப் பொருள்முதல்வாதமும் பழைய பொருள்முதல்வாதத்தின் மறு உயிர்ப்பாக மட்டுமே இருந்துவிடவில்லை. 19ம் நூற்றுண்டின் இயற்கை விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களைப் பயன்படுத்திக்கொண்டு மார்க்ஸும் எங்கெல்ஸும் பழைய, மாருநிலைவாதப் பொருள்முதல்வாதத்தை அடியோடு மாற்றிச் சீரமைத்தார்கள். பொருள்முதல்வாதத்தை இயக்க இயல்வாதத்துடன் ஒன்றிணைத்து இயக்க இயல் பொருள்முதல்வாதத்தை அவர்கள் உருவாக்கினர்கள். பிரபஞ்சத்தை மாற்றி அமைப்பதற்கான சித்தாந்தக் கருவி என்ற வகையில் இயக்க இயல் பொருள்முதல்வாதம் உருவாக்கப்பட்டது தத்துவச் சிந்தனை தோன்றிய காலம் முதற்கொண்டு அதன் வரலாறு முழுவதிலும் அதனுடைய மிகப் பெரும் நிறைவேற்றமாகவும் தத்துவத்தில் புரட்சிகர மாற்றமாகவும் திகழ்ந்தது.

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''மூலதனம்'', நூல்திரட்டு, தொகுதி 23, பக்கம் 21.

பழைய பொருள்முதல்வாதத்தின் வரையறுத்த இயல்பு மாறுநிலைவாதத் தன்மை கொண்டிருந்ததில் மட்டுமே அடங்கி யிருக்கவில்லை. அது கடைசிவரை ஒத்தியைந்ததாகவும் இருக்க வில்லை, ஏனெனில் மார்க்ஸீயத்துக்கு முந்திய பொருள்முதல் வாதிகள் அதைச் சமூக நிகழ்ச்சிகளுக்குப் பொருந்தச் செய்யத் திறனற்றவர்களாக இருந்தார்கள். மார்க்ஸும் எங்கெல்ஸும் பொருள்முதல்வாதத்தை உச்சிவரை ''நிறுவிப் பூர்த்தி செய்தார்கள்''. அவர்கள் வரலாற்று ரீதியான பொருள்முதல் வாதத்தை உருவாக்கினார்கள். சமூக வளர்ச்சிக்குரிய மிகப் பொதுவான விதிகள் பற்றிய விஞ்ஞானம் இது. தத்துவத்தில் அவர்கள் நிகழ்த்திய புரட்சிகரமான மாறுதலின் வெளியீடாக இதுவும் விளங்கியது.

மார்க்ஸீயத் தத்துவம் வெவ்வேறு வர்க்கங்களின், முதன்மையாகத் தொழிலாளி வர்க்கத்தின் வாழ்க்கைக்குரிய சமூக நிலைமைகளை எல்லாக் கோணங்களிலிருந்தும் ஆராய்ந்து, வரலாற்றில் உழைப்பாளி மக்கள் ஆற்றியுள்ள உண்மையான பங்கையும் அவர்களது புரட்சிகரச் செயல்களின் முக்கியத் துவத்தையும் காட்டியது. மார்க்ஸீயத்தின் தோற்றத்துக்குப் பின் தத்துவம் விரிவான மக்கள் திரளின் உடைமை, கோடானு கோடி மக்களது போராட்டக் கொடி ஆகிவருகிறது.

விஞ்ஞானச் சித்தாந்தத்தையும் புரட்சி நடைமுறையையும், தத்துவத்தையும் அரசியலையும் மார்க்ஸீயம்-லெனினீயம் இணையுறுப்புக்களாக ஒன்று சேர்த்துவிட்டது. மார்க்ஸீயத் தத்துவத்தின் புரட்சிகரமான மாற்றியமைக்கும் பங்கு கார்ல் மார்க்ஸின் பின்வரும் கருத்துக்களில் வெளியிடப்பட்டுள்ளது: முந்திய தத்துவ அறிஞர்கள் வெவ்வேறு விதமாகப் பிரபஞ்சத்தை விளக்க மட்டுமே செய்தார்கள்; உண்மையிலோ, பிரபஞ்சத்தை மாற்றுவது தத்துவ அறிஞனின் வேலையில் அடங்கியது. மார்க்ஸீயத் தத்துவத்தின் வலிமையும் உயிரோட்டமும் சமூகத்தைப் புரட்சிகரமாகப் புதுக்கி அமைப்பதற்குரிய திட்ட வட்டமான கடமைகளுடன் அதன் தொடர்பிலேயே உள்ளன.

பிரபஞ்சத்தை அறிவதற்கும் மாற்றி அமைப்பதற்குமான முறை என்ற வகையில் மார்க்ஸீயத் தத்துவ விஞ்ஞானம் மக்கள் திரளின் புரட்சிப் போராட்ட அனுபவம், விஞ்ஞானமும் நடைமுறையும் அளிக்கும் மதிப்புயர்ந்த படிப்பினைகள் ஆகிய வற்றின் அடிப்படையில் இடையறாது வளர்ச்சியும் வளமும்

பெற்று வருகிறது. தனது இயல்பு காரணமாகவே அது படைப்புத் தன்மை கொண்ட விஞ்ஞானமாக விளங்குகிறது.

மார்க்ஸீயத்தின் பொதுச் சித்தாந்த அடிப்படையான இயக்க இயல்வாத, வரலாற்று ரீதியான பொருள்முதல்வாதம் உட்பட அதன் எல்லா உறுப்புப் பகுதிகளேயும் மேற்கொண்டு விரிவும் வளமும் படுத்தியவர் ருஷ்ய, சர்வதேசப் பாட்டாளி வர்க்கத் தலேவரும் ருஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சியையும் சோவியத் அரசையும் ஸ்தாபித்தவரும் ஆன விளாதீமிர் இல்யீச் லெனின் ஆவார். மார்க்ஸீயத் தத்துவத்தில் லெனினது காலக் கட்டம் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் பொருட்டும் சோஷலிஸத்தின் வெற்றியின் பொருட்டும் தொழிலாளி வர்க்கத்தின் தலேமையில் உழைப்பாளி மக்கள் திரளின் போராட்டத்தில் புதிய வரலாற்றுச் சகாப்தத்தைக் குறிக்கிறது.

பொருள்முதல்வாத இயக்க இயல்வாதத்தையும், தத்துவப் பொருள்முதல்வாதத்தையும் அறிதல் சித்தாந்தத்தையும் வி. இ. லெனின் படைப்புத் தன்மையுடன் விரிவும் வளமும் படுத்திஞர். 19ம் நூற்ருண்டின் இறுதியிலும் 20ம் நூற்ருண்டின் தொடக்கத்திலும் விஞ்ஞானம் பெற்ற மிகப் புதிய சாதனேகளே அவர் பொதுமைப்படுத்திஞர். ஏகாதிபத்தியக் கட்டத்தில் முதலாளித்துவச் சமூகத்தில் நிகழும் சமூக-பொருளாதாரச் செயல்முறைகளே ஆழ்ந்து பகுத்தாய்ந்தார். சோஷலிஸப் புரட்சி பற்றிய மார்க்ஸீயச் சித்தாந்தத்தைப் புதிய நிலேமைகளுக்குப் பொருந்தும் வகையில் அவர் சீர்திருத்தி, அதைச் செயல்படுத்துவதற்குரிய வழிகளேயும் சாதனங்களேயும் விஞ்ஞான ரீதியாகத் திட்டப்படுத்திஞர். இந்த வழிகளும் சாதனங்களும் ருஷ்யாவிலும் பின்னர் அனேக பிற நாடுகளிலும் வெற்றிகரமாகக் கையாளப்பட்டன. தற்காலக் கட்டத்தில் சோஷலிஸத்திற்கான போராட்டத்தின் நடைமுறை ,லெனினது கருத்துக்கள் சரியானவை என்பதையும் அவற்றின் வலிமையையும் உறுதிப்படுத்துகிறது. புரட்சி நிகழ்முறையின் இயக்க இயல், பொருளாதாரத்துக்கும் அரசியலுக்கும் உள்ள பரஸ்பரத் தொடர்பு, புதிய சோஷலிஸச் சமூகத்தின் வளர்ச்சிக்கும் அது கம்யூனிஸச் சமூகமாகப் பரிணமிப்பதற்கும் உரிய விதிமுறைகள் ஆகியவை பற்றிய லெனினது கருத்துக்கள் சிறப்பான முக்கியத்துவம் உள்ளவை.

மிக மிக வெவ்வேருன வரலாற்றுச் சூழ்நிலேகளில் பொருளாதார, அரசியல் பிரச்சினேகளுக்குத் தீர்வு காண்பதற்கு

இயக்க இயல் கையாளப்படுவதற்கான சிறந்த மாதிரிகள் வி. இ. லெனினுடைய பல்தொகை நூல்களில் தரப்பட்டுள்ளன. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் பிற நாடுகளிலுள்ள மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகளும் உலகப் புரட்சி இயக்கம் குறித்த தற்காலப் பிரச்சினைகளைத் தீர்க்கவும் சோஷலிஸம், கம்யூனிஸம், இவற்றின் நிர்மாணச் செயல்களை நிறைவேற்றவும் மார்க்ஸீயத்தைக் கையாள்கின்றன, விரிவுபடுத்துகின்றன.

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் ஆழ்ந்த கட்சித்தன்மை கொண்ட விஞ்ஞானம் ஆகும். அதாவது இந்தத் தத்துவம் வர்க்கத்தன்மை கொண்டது, தொழிலாளி வர்க்கத்துக்கு, உழைப்பாளி மக்களுக்குத் தொண்டு ஆற்றுகிறது. எந்தத் தத்துவமும் ஏதாவது ஒரு வகையில் ஒரு குறிப்பிட்ட வர்க்கத்தின் நோக்கையும் நலன்களையும் வெளியிடுகிறது. ஆனால் தொழிலாளி வர்க்கத்தின் நலன்கள் பூர்ஷ்வாக்களின், சுறண்டுவோரின் நலன்களிலிருந்து பண்பில் வேறுபடுகின்றன. தற்காலச் சமூகத்தில் தனது எதார்த்த நிலை காரணமாக, சுற்றியுள்ள உண்மை நிலைமையைச் சரியாக, விஞ்ஞானரீதியில் புரிந்து கொள்வதிலும் அதைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதிலும் அக்கறை கொண்ட ஒரே வர்க்கம் பாட்டாளி வர்க்கமே. எனவே மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தில் கட்சித்தன்மை உண்மையான விஞ்ஞான எதார்த்தத்துடன் முற்ற முழுக்கப் பொருந்துகிறது. தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகர உலகக் கண்ணோட்டம் எல்லாம் வல்லது, ஏனெனில் அது சரியானது.

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்துக்கு மாறாக பூர்ஷ்வாத் தத்துவமும் மொத்தத்தில் பூர்ஷ்வாக் கொள்கைவாதம் அனைத்துமே சுறண்டும் வர்க்கங்களின் நலன்களுக்குத் தொண்டாற்றுகின்றன. திரிபான பிரபஞ்ச அறிவு இந்த வர்க்கங்களுக்குச் சாதகமானது. தனித் தனி பூர்ஷ்வாக் கொள்கைப் பிரசாரகர்களின் அகநிலை விருப்பங்களோ முயற்சிகளோ இதற்கு அவ்வளவு காரணம் அல்ல. சுறண்டுவோர் சமூகத்தில் அவர்கள் வகிக்கும் எதார்த்த நிலைகளே இதற்கு முக்கியக் காரணம். இந்த உண்மைக்குத் தெட்டத் தெளிவான உதாரணங்களாக விளங்குகின்றன தற்கால பூர்ஷ்வாத் தத்துவமும் சமூக இயலும். இவை புறநிலை விஞ்ஞானங்களாக இருந்த காலம் எப்போதோ போய்விட்டது. முதலாளித்துவச் சமூகத்தின் பிற்போக்குச் சக்திகளின் மக்கள் விரோதக் கொள்கையை நியாயப்படுத்து

வதற்கு இவை போட்டி போட்டுக்கொண்டு முயல்கின்றன.

நிகழ்ச்சிகள் வர்க்க நோக்கில் மதிப்பிடப்பட வேண்டும் என்றும் கம்யூனிஸ எதிர்ப்பின் எல்லாவகைத் தோற்றங்களுக்கும் எதிராக, பூர்ஷ்வாக் கொள்கைவாதத்துக்கும் அதன் சந்தர்ப்பவாதக் குற்றேவலர்களான வலதுசாரி ''இடதுசாரித் திரிபுவாதிகளுக்கும் எதிராகச் செயலூக்கத்துடன் இடையருத போராட்டம் நடத்தப்பட வேண்டும் என்றும் மார்க்ஸீயத் தத்துவத்தின் கட்சித்தன்மைக் கோட்பாடு கோருகிறது.

## § 3. மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் என்ன கற்பிக்கிறது

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் விஞ்ஞான ரீதியான பிரபஞ்சக் கண்ணேட்டத்தின் பொதுச் சித்தாந்த அடிப்படையாக விளங்குகிறது. இயற்கை, சமூகம், சிந்தனை ஆகியவற்றின் வளர்ச்சிக்குரிய மிக மிகப் பொதுவான விதிகளை அது ஆராய்ந்து பிரபஞ்சம் பற்றிய கருத்துக்களின் பொதுமைப்படுத்தப் பட்ட தொகுப்பை நமக்குத் தருகிறது. இதற்காக இது உதாரணமாகப் பின்வரும் கேள்விகளை ஆராய வேண்டும்: சடப்பொருள் என்பது என்ன? தனது இயற்கையின்படிப் பிரபஞ்சம் என்பது யாது? அதில் ஏற்படும் மாறுதல்களின் காரணங்களும் தன்மையும் யாவை? மனிதனும் அவனது சிந்தனைத்திறனும் என்ன? மனிதன் இயற்கையையும் சமூகத்தையும் எவ்வாறு அறிகிருன்? வர்க்கங்கள், நாட்டினங்கள், அரசு, விஞ்ஞானம், ஒழுக்க நெறி ஆகியவை எப்படித் தோன்றின, ஏன் நிலவுகின்றன? போர்களும் புரட்சிகளும் எப்போதும் நடந்து கொண்டிருக்குமா? சமூக வளர்ச்சியின் போக்கை இயக்கி நடத்த முடியுமா? மக்கள் திரளின் புரட்சி நடவடிக்கைகளும் அவர்களது ஒழுங்கமைப்பும் உணர்வும் வரலாற்றில் என்ன பங்கு ஆற்றுகின்றன?

இம்மாதிரியான தத்துவக் கேள்விகளுக்குச் சரியான விடைகள் விஞ்ஞான ரீதியான பிரபஞ்சக் கண்ணேட்டத்தால் அளிக்கப்படுகின்றன என்பதை எல்லா மனிதர்களும் ஒப்புக்கொள்வதில்லை என்பது திண்ணம். ஒவ்வொரு மனிதனிடமும் உள்ள அவனுக்கே உரிய மாதிரியான சிந்தனைகளும் பிரபஞ்சம் பற்றிய அறிவும் எந்தத் தத்துவத்தையும் சார்ந்திருப்பதில்லை எனச் சிலர் வெகுளித்தனமாக எண்ணுகிருர்கள். ஆனல் உண்மைக்

கும் இந்த எண்ணத்துக்கும் வெகு தூரம். மனிதன் தனியாக நிலவுவதில்லே. அவன் சமூகத்தில் வாழ்கிருன். எப்போதும் அவன் ஏதேனும் ஒரு குழுவுடன் தொடர்பு கொண்டிருக்கிருன். சமூகத்தில் வாழ்ந்துகொண்டு சமூகத்தைச் சாராதிருப்பது இயலாது. நமது சிந்தனேகளும் செயல்களும் மற்றவர்களது சிந்தனேகளுடனும் செயல்களுடனும் எப்போதும் ஏதாவது ஒரு வகையில் தொடர்பு உள்ளவை. ஒரு குறித்த சமூகத்தில் தனது கல்வி, பயிற்றி வளர்த்தல், உழைப்புச் செயல் ஆகிய வற்றின் நிகழ்முறையில், அந்தச் சமூகத்தில் ஆதிக்கம் செலுத்தும் கண்ணேட்டத்தின் பாதிப்பினுலேயே ஒவ்வொரு மனிதனும் தனது சொந்தக் கண்ணேட்டத்தை உருவாக்கிக் கொள்கிருன்.

உற்பத்தி சம்பந்தமான அல்லது வெறுமே அன்ருட வாழ்க்கை பற்றிய பிரச்சினேகளே மட்டுமே அல்ல, சிந்தனேக்கும் இருத்தலுக்கும் இடையிலுள்ள உறவு குறித்த பிரச்சினே போன்றவற்றையும் மனிதர்கள் ஒவ்வோர் அடியிலும் தீர்க்கிருர்கள். எனினும் இத்தகைய பிரச்சினேயைத் தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினே என அவர்கள் குறிப்பிடுவதில்லே. நம்மால் வகுக்கப்பட்ட குறிக்கோள்களும் திட்டங்களும் யதார்த்தமானவை தாமா என நாம் அடிக்கடி சிந்திக்கிருேம், அல்லவா? திட்டம், குறிக்கோள் என்பது என்ன? இது நமது எண்ணம், யதார்த்தத்தில் இன்னும் நிலவாததும் ஆனுல் படைக்கப்பட, உருவாக்கப்பட வேண்டியதுமான ஒன்றின் கருத்தியல் மாதிரி அமைப்பு இது. நமது குறிக்கோள்கள் அல்லது திட்டங்கள் எதார்த்தத்துக்குப் பொருத்தவில்லே, அல்லது எதார்த்தத்தின் எல்லா அம்சங்களேயும் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லே என்ருல், அவை எதார்த்தமற்றவை என்ருல் அவற்றைச் செயல்படுத்துவது இயலாது. இம்மாதிரிச் சந்தர்ப்பத்தில் நமது செயல்கள் எதிர்பாராத, பெரும்பாலும் விரும்பத்தகாத விளேவுகளுக்கு இட்டுச் செல்கின்றன. சுற்றியுள்ள பிரபஞ்சத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவும், சிக்கலான நிகழ்ச்சிகளேயும் மெய் விவரங்களேயும் ஆழ்ந்து தெளிவுபடுத்திக்கொள்ளவும், அவற்றைச் சரியாக மதிப்பிடவும் தங்கள் லட்சியங்களேயும் கடமைகளேயும் சரிவர நிச்சயித்துக்கொள்ளவும், அவற்றை நிறைவேற்றுவதற்கு வெற்றிகரமாகச் செயல்படவும் மக்களுக்கு உதவுவதே மார்க்ஸீயத் தத்துவத்தின் நோக்கம்.

பொதுச் சித்தாந்தத்தையும் பிரபஞ்சக் கண்ணோட்டத்தையும் பற்றிய பிரச்சினைகளை எதார்த்தத்தின் பொருள்முதல்வாதப் புரிவின் அடிப்படையில் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் தீர்த்துவைக்கிறது. பிரபஞ்சம் தனது அடிப்படையில் பொருளியலானது என்று அது கருதுகிறது, பிரபஞ்சத்தை அயல் விஷயங்களின் சேர்க்கையின்றி, அது உள்ளவாறே ஆராய்கிறது. மையமான, மூலாதாரமான தத்துவப் பிரச்சினைக்கும், அதாவது சிந்தனைக்கும் இருத்தலுக்கும் இடையிலுள்ள உறவு பற்றிய பிரச்சினைக்கும் அது இதே நிலையிலிருந்து தீர்வு காண்கிறது. அடிப்படையான இந்தப் பிரச்சினையின் ஒரே சரியான, பொருள்முதல்வாத அர்த்தம், நாம் ஏற்கனவே கூறியிருப்பது போல, சடப்பொருள், இருத்தல் முதலாவது என்றும் உணர்வு, சிந்தனை இரண்டாவது என்றும் ஒப்புக்கொள்வதே ஆகும்.

பிரபஞ்சம் பொருளியலானது என்பதையும் சடப்பொருள் முதலாவது என்பதையும் ஒப்புக்கொள்வதால் இயற்கை, சமூக இருத்தலின் வளர்ச்சிக்குரிய பொது விதிமுறைகளை ஆராய்வது இன்றியமையாதது ஆகிறது. இவற்றை ஆராய்கிறது பொருள்முதல்வாத இயக்க இயல்வாதம். பிரபஞ்ச நிகழ்ச்சிகள் அனைத்தையும் இடையறாத மாறுதலும் வளர்ச்சியும் கொண்ட செயல்முறையில் பரிசீலனை செய்கிறது இது. இந்த மாறுதல்கள் மிக மிக வெவ்வேறு வகையினவாக இருக்கலாம். பொருள்களின் எந்தத் தன்மையையும் அவற்றின் கட்டுக்கோப்பையும் உள் கட்டமைப்பையும் அவை பாதிக்கலாம். ஆனால் உயிருள்ள, உயிரற்ற இயற்கையிலும் சமூக வாழ்விலும் ஏற்படும் மாறுதல்கள் எவ்வளவுதான் பல்விதப்பட்டவையாகக் காணப்படினும் சரியே, அவற்றுக்குப் பொது இயல்புகள் எப்போதுமே உண்டு. எதார்த்தப் பிரபஞ்சத்தின் மாறுதலுக்கும் வளர்ச்சிக்கும் உரிய பொது விதிகளையே மார்க்ஸீய இயக்க இயல்வாதமும் ஆராய்கிறது.

இயற்கையிலும் சமூகத்திலும் எல்லாமே இயக்க இயல் ரீதியாக நிகழ்கின்றன. எதார்த்தப் பிரபஞ்சத்தின் புறநிலையான இந்த இயக்க இயலை நமது சிந்தனை அறிந்து அதை மிகப் பொதுவான தத்துவ விதிகளிலும் கோட்பாடுகளிலும் வெளியிடுகிறது. இவ்வாறு செய்கையில் அது வெகு விரிவான கருதுகோள்களை அல்லது வகைப்பிரிவுகளைப் பயன்படுத்துகிறது. புறநிலைப் பிரபஞ்சத்தின் இயக்க இயலைச் சரிவரப் பிரதிபலிக்கச்

சிந்தனை வல்லதாக இருப்பது ஏன்? இதைப் புரிந்துகொள்ள நமக்கு உதவுகிறது சிந்தனையையே பற்றிய இயக்க இயல்வாத நோக்கு. மார்க்ஸீயத் தத்துவம் எல்லா நிகழ்ச்சிகளையும், சிந்தனையையும் கூடத்தான், மாறுதலும் வளர்ச்சியும் கொண்ட செயல்முறையில் ஆராய்கிறது. சிந்தனை மனித அறிவின் விளைபொருள் என்றும் மனிதன் இயற்கையினதும் சமூகத்தினதும் விதிக்குட்பட்ட வளர்ச்சியின் விளைபொருள் என்றும் விஞ்ஞான விவரங்களின் ஆதாரத்துடன் அது நிரூபிக்கிறது. எனவே இயற்கையின் வளர்ச்சிச் செயல்முறையில் உதித்த சிந்தனை விதிகள் புறநிலைப் பிரபஞ்சத்தின் விதிகளுக்கு முரண்படுவது இல்லை, இன்றியமையாத விதத்தில் அவற்றுக்கு இசைகின்றன.

அறியும் சிந்தனைக்கும் நம்மைச் சூழ்ந்துள்ள எதார்த்தத்துக்கும் உரிய இயக்க இயல் தொடர்பைத் தெளிவுபடுத்தும் வகையில் வி. இ. லெனின் பின்வருமாறு குறித்தார்: "...எல்லாம் வளர்ச்சி அடைகிறது என்றால் சிந்தனையின் மிகப் பொதுவான கருதுகோளுக்கும் வகைப்பிரிவுக்கும் இது பொருந்துகிறதா இல்லையா? இல்லை என்றால் சிந்தனை இருத்தலுடன் தொடர்பு உள்ளது அல்ல என்று அர்த்தமாகிறது. பொருந்துகிறது என்றால் புறநிலைப் பொருள் உள்ள கருதுகோளின் இயக்க இயலும் அறிதலின் இயக்க இயலும் இருப்பதாக அர்த்தமாகிறது."[1]

பிரபஞ்சத்தை அறிவதற்குப் பொருள்முதல்வாத இயக்க இயல்வாதம் பயன்படுத்தப்படுவது அறிதல்பற்றிய மார்க்ஸீயச் சித்தாந்தத்துக்கு உரிய விஷயமாக விளங்குகிறது. எதார்த்த உண்மை மனிதனால் பிரதிபலிக்கப்படுவதற்குரிய சிக்கலான, முரண்பாடு கொண்ட செயல்முறையை எல்லாக் கோணங்களிலிருந்தும் ஆராய்கிறது இந்தச் சித்தாந்தம். அறிதல் பற்றிய மார்க்ஸீயச் சித்தாந்தம் அல்லது ஞான இயல் புறநிலைப் பிரபஞ்சம் பிரதிபலிக்கப்படுவதன் வெவ்வேறு வடிவங்களது சிறப்புத் தன்மைகளைப் பகுத்தாய்கிறது. உணர்வு ரீதியானதும் தர்க்க ரீதியானதும் ஆகிய அறிதலையும் இவ்விரண்டின் பரஸ்பரத் தொடர்பையும் அது ஆராய்கிறது. இவ்வாறு செய்வதன் வாயிலாகவே அது நமது புலனுணர்ச்சிகள், புலனறிவு,

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 229.

எண்ணங்கள், கருதுகோள்கள் ஆகியவற்றின் ஊற்றுக்கண்ணை யும் இயற்கையையும் விளக்குகிறது, அறிதலுக்குரிய மிகப் பொதுப்படையான விதிமுறைகளை வெளிப்படுத்துகிறது. நமது சிந்தனையும் நம்மால் உருவாக்கப்படும் விஞ்ஞானச் சித்தாந் தங்களும் வெளிப் பிரபஞ்சத்தின் உண்மையான பிரதிபலிப் பைத் தர வல்லவைதாமா? வல்லவைதாம் என்றால் உண் மையை அறிவதற்குரிய வழி எது? விஞ்ஞானச் சித்தாந்தம் உண்மையானது என்பதை நம்பகமாக எதார்த்தத்தில் நிச்சயிக் கக் கூடிய அளவுகோல் நிலவுகிறதா? சார்பு அற்றதும் சார்பு உள்ளதும் அறிதலில் எவ்வாறு பரஸ்பரம் தொடர்புபடுத்தப் படுகின்றன? விஞ்ஞான வகைப்பட்ட அறிதல் எவ்வாறு வளர்ச்சி அடைகிறது? இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத்தின் அறிதல் சித்தாந்தம் இந்தக் கேள்விகளுக்கும் விடை அளிக் கிறது.

வரலாற்றுப் பொருள்முதல்வாதம் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் பிரிக்க முடியாத பகுதியாகும். சமூகத்தின் வளர்ச்சி வரலாற்றையும் அதன் தற்போதைய நிலையையும் இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாத நோக்கில் விளக்குவதே இது. இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத்தின் பொதுக் கோட் பாடுகளை வழிகாட்டியாகக் கொண்டு, அதன் விதிகளையும் வகைப் பிரிவுகளையும் அறிதல் சித்தாந்தத்தையும் சமூக வாழ்க்கையை விளக்குவதற்குப் பயன்படுத்துவதன் வாயிலாக வரலாற்றுப் பொருள்முதல்வாதம் தத்துவப் பொருள்முதல்வாதத்தையும் இயக்க இயல்வாதத்தையும் மேலும் ஆழப்படுத்தி ஸ்தூலப் படுத்துகிறது. எடுத்துக்காட்டாக, வரலாற்றுப் பொருள் முதல்வாதம் தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினையைச் சமூகத்துக்கு இணக்கப்படுத்தி ஆராய்கையில் சமூக இருத்தல், உற்பத்தி முறை ஆகியவற்றுக்கும் மக்களது சமூக உணர்வு, அவர்களது அரசியல், சட்ட, தத்துவ நோக்குகள், பிற கருத்துக் கள் ஆகியவற்றுக்கும் உள்ள உறவை நிலைநாட்டுகிறது.

சமூக வளர்ச்சிக்குரிய மிகப்பொதுவான விதிகளையும் ஸ்தூல மான வரலாற்று நிலைமைகளில் அவை தோன்றியதன் சிறப்புத் தன்மைகளையும் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் ஆராய் கிறது. சமூக முன்னேற்றத்தின் இயக்கு சக்திகளையும் உற்பத்தி வளர்ச்சிக்குரிய விதிமுறைகளையும் வர்க்கப் போராட்டம், புரட்சி ஆகியவற்றின் விதிகளையும் அது பரிசீலிக்கிறது. சமூகக்

கருத்துக்களின் தோற்றத்தையும் அவை ஆற்றும் பங்கையும் சமூகத்தின் வளர்ச்சிப் போக்கின்மீது அவை விளைக்கும் பாதிப்பையும் தெளிவுபடுத்துகிறது.

இவ்வாறு, இயற்கை, சமூகம், இவற்றின் வளர்ச்சிக்குரிய மிகப் பொதுவான விதிகள் பற்றிய விஞ்ஞானம் என்ற முறையில் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் முழுமையான, முரண்பாடற்ற இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதப் பிரபஞ்சக் கண்ணோட்டமாக விளங்குகிறது. எதார்த்தத்தின் விதிமுறைகளைப் பொதுமைப்படுத்திய வடிவில் வெளியிடுவதன் வாயிலாக அது பிரபஞ்சத்தை அறிவதற்கும் மாற்றி அமைப்பதற்கும் ஏற்ற பொதுச் சித்தாந்த முறையாகச் செயல்படுகிறது. எனவே இயக்க இயல்வாத வரலாற்றுப் பொருள்முதல்வாதம் மற்ற எல்லா விஞ்ஞானங்களுக்கும் பொது ஆராய்ச்சி முறை இயலாகத் திகழ்கிறது.

இங்கே ஒரு கேள்வி எழலாம். கணிதம், பௌதிகம், உயிரியல், வரலாறு ஆகியவை போன்ற திட்டவட்டமான, அல்லது தனிவகைப்பட்ட விஞ்ஞானங்களுக்கு அவற்றுக்கே உரிய ஆராய்ச்சி முறைகள் இருக்கும்போது தத்துவமும் அதன் முறையும் அவற்றுக்கு எதற்காக? ஒருவேளை ஒவ்வொரு விஞ்ஞானமுமே தத்துவம்தானே? அவ்வாறானால் திட்டவட்டமான சமூக, இயற்கை விஞ்ஞானங்கள் தத்துவம் இல்லாமலே சமாளிக்க முற்றிலும் வல்லவை ஆகுமே. ஆனால் இம்மாதிரிக் கருத்துக்கள் நிச்சயமாகத் தவறானவை. எந்த விதத் தத்துவத்தையும் சாராமல் ‘‘சுதந்திரமாக’’ இருப்பது என்பது இயலவே இயலாது.

இயற்கை விஞ்ஞானங்கள், சமூக விஞ்ஞானங்கள் ஆகியவற்றின் தீவிர வளர்ச்சி விஞ்ஞான ரீதியான பொருள்முதல்வாதக் கண்ணோட்டத்திற்கு மாற்று ஆகவோ அதை நெருக்கித் தள்ளிவிடவோ முடியாது. ஏனெனில் மிக உயர்ந்த அளவில் பொதுமைப்பாட்டை அடைய வல்லது தத்துவம் மட்டுமே. திட்டவட்டமான எந்த விஞ்ஞானமும் நிகழ்ச்சிகளின் குறித்த துறைக்குமட்டுமே இயல்பான விதிமுறைகளையே ஆராய்கிறது. இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத்தின் விதிகளும் வகைப் பிரிவுகளுமோ, நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, விதிவிலக்கின்றிப் பிரபஞ்ச நிகழ்ச்சிகள் அனைத்தையும் உட்படுத்துகின்றன.

தவமுன தொடக்கத் தத்துவக் கோட்பாடுகள் மிகப் பெரிய விஞ்ஞானிகளைக்கூட மேல் செல்ல வழியற்ற முட்டுச்சந்துக்கு அடிக்கடி இட்டுவந்திருப்பதை விஞ்ஞான வளர்ச்சியின் வரலாறு காட்டுகிறது. இது புரியக்கூடியதே. ஒவ்வொரு விஞ்ஞானமும் தான் ஆராயும் நிகழ்ச்சிகளின் இயல்பையும் அதன் அடிப்படையில் உள்ள விதிகளையும் பற்றிய பிரச்சினைகளுக்கு ஏதாவது ஒரு வகையில் தீர்வு காண வேண்டியிருக்கிறது.

பெரிய கண்டுபிடிப்புக்கள் செய்யப்பட்டு, ஏற்கனவே நிலை பெற்றுவிட்ட பழைய விஞ்ஞானக் கருதுகோள்களும் கோட்பாடுகளும் தகர்வதும் தொடக்க வரையறுப்புக்களும் சில வேளைகளில் விதிகளுங்கூட மறுபடி சிந்தித்துத் திருத்தப்படுவதும் நிகழும் சந்தர்ப்பங்களில் விஞ்ஞானத்துக்கும் தத்துவத்துக்கும் உள்ள தொடர்பு சிறப்பான துலக்கத்துடன் வெளிப்படுகிறது. இயக்க இயல் பற்றிய அறிவு இன்மையும் பௌதிகச் சித்தாந்தங்களில் சார்பு அற்றதையும் சார்பு உள்ளதையும் தனிப்பிரித்துக் காணும் திறன் இன்மையும் பல பிரபல இயற்கை இயல் அறிஞர்களை விஞ்ஞானத்தின் விதிகள் புறநிலையானது எதையும் பிரதிபலிக்கவில்லை என்ற தவமுன கருத்துமுதல்வாத முடிவுக்கு, வலிந்துரைக்கு இட்டு வந்தன என வி. இ. லெனின் ''பொருள் முதல்வாதமும் அனுபவ விமர்சனவாதமும்'' என்னும் தமது நூலில் காட்டியுள்ளார். திண்ணமான தத்துவ அடிப்படை இல்லாவிட்டால் இயற்கை விஞ்ஞானங்கள் பிற்போக்குக் கண்ணோட்டங்களை எதிர்த்து ஒத்தியைந்த போராட்டம் நடத்த வல்லவை ஆக மாட்டா என்று அவர் பல முறை குறித்துள்ளார்.

மார்க்ஸீயத் தத்துவம் ''விஞ்ஞானங்களின் விஞ்ஞானமாக'' விளங்குகிறது என்றும் மற்ற எல்லா விஞ்ஞானங்களுக்கும் மேலே நிற்கிறது என்றும் எண்ணுவது பெருத்த தவமுகும் என்பது கூருமலே விளங்கும். இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதம் இயற்கை விஞ்ஞானங்களின் மிகப் புதிய விவரங்களைக் கருத்தில் கொள்கிறது, ஆழ்ந்த முறையில் பொதுமைப்படுத்துகிறது. அவற்றின் அடிப்படையிலேயே அது தன் விதிகளையும் கருதுகோள்களையும் வகைப்பிரிவுகளையும் வளமும் விரிவும் படுத்துகிறது. இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத் தத்துவத்துக்கும் இயற்கை இயலுக்கும் இடையே ஐக்கியம் இன்றியமையாதது என வி. இ. லெனின் எழுதியிருக்கிருர். இந்த ஐக்கியம் இயற்கை விஞ்ஞானங்களுக்கு எவ்வளவு அவசியமோ அவ்வள

வே தத்துவத்திற்கும் அவசியம். ஏனெனில் இந்த ஐக்கியம் இல்லாவிட்டால் தத்துவம் படைப்புத்தன்மையை இழந்து விடும், விஞ்ஞான வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை ஆகிவிடும்.

இயற்கை விஞ்ஞானங்கள் பற்றிக் கூறப்பட்டிருப்பவை சமூக வாழ்வின் பல்வேறு துறைகளையும் ஆராயும் விஞ்ஞானங் களுக்கும் பொருந்தும். வரலாறு, பொருளாதாரம், சட்டம், பிற விஞ்ஞானங்கள் ஆகியன வரலாறு, பொருளாதார உறவுகள், சட்ட வடிவங்கள் முதலியவற்றின் வளர்ச்சிக்குரிய விதிமுறைகளை வெளிப்படுத்துகின்றன. ஆனால் ஒவ்வொரு சமூக விஞ்ஞானமும் தனது ஆராய்ச்சித் துறையுடன் தொடர்பு கொண்ட விதிமுறைகளைப் பரிசீலனை செய்கையில் சமூகம் முழு வதன் வளர்ச்சிக்கும் உரிய பொது விதிகளை, அதாவது வரலாற் றுப் பொருள்முதல்வாதத்தால் ஆராயப்படும் விதிகளைப் புறக் கணித்துவிட முடியாது. இந்தப் பொது விதிகள் பற்றிய அறிவு இன்றிச் சமூக நிகழ்முறையின் வெவ்வேறு பகுதிகளின் பரஸ் பரப் பாதிப்பை விஞ்ஞான ரீதியாக விளக்க முடியாது.

ஆனால் பொது ஆராய்ச்சிமுறை இயல் பற்றிய பல பிரச்சினை கள் இங்கேதான் எழுகின்றன. உதாரணமாக, பொருளாதார மும் அரசியலும், விஞ்ஞானமும் உற்பத்தியும், உற்பத்தியின் வளர்ச்சித் தரமும் பொருள்வகை நலன்களது வினியோகத் தின் வடிவங்களும் பரஸ்பரம் என்ன உறவு கொண்டவை?

இவையும் பிற தத்துவப் பிரச்சினைகளும் சமூக விஞ்ஞானங் களுக்கு மட்டுமே அல்ல, பொருளாதாரத் திட்ட வகுப்பு, பொருளாதார நிர்வாக முறைகள் முதலியவற்றுடன் தொடர்பு கொண்ட பல ஜீவாதாரப் பிரச்சினைகளின் தீர்வுக்கும் கோட் பாட்டு ரீதியான முக்கியத்துவம் உள்ளவை.

வர்க்கங்களுக்கும் அரசுகளுக்கும் இடையிலுள்ள உறவு களின் சிக்கலான தன்மை, முதலாளித்துவச் சமூகத்தைப் புரட்சி வாயிலாக மாற்றியமைப்பதன் இன்றியமையாமை, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியினதும் மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் பிற எல்லாக் கட்சிகளதும் கொள்கையின் விஞ்ஞான அடிப்படைகள், சர்வதேசக் கம்யூனிஸ்ட், தொழிலாளர் இயக்கங்களது லட்சியங்கள் ஆகிய வற்றை முற்றிலும் தெளிவாகப் புரிந்துகொள்ள இயக்க இயல் வாத, வரலாற்றுப் பொருள்முதல்வாதம் உதவுகிறது. வர்க்கச் சக்திகளின் எதார்த்தத்தில் நிலவும் வரிசை, தேசிய உறவுகள்

ஆகியவற்றையும் சமூக வாழ்வின் மற்ற முக்கியமான புறநிலைக் காரணிகளையும் உழைப்பாளி மக்கள் திரளின் ஒழுங்கமைப்பு, உணர்வு, இவற்றின் தரத்தையும் விஞ்ஞானத் தத்துவத்தின் ஆதாரத்தின் பேரில் கவனத்தில் கொண்டே மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகள் தங்கள் கொள்கைகளை நிச்சயிக்கின்றன.

எனவே, திட்டவட்டமான விஞ்ஞானங்களின் வெற்றிகரமான வளர்ச்சிக்கும், தற்காலச் சமூக வாழ்வின் மிகச் சிக்கலான நிகழ்முறைகளது சாரத்தை ஆழ்ந்து புரிந்துகொள்வதற்கும், மனிதனது செயல்களின் எந்தத் துறையிலும் எதிர்ப்படும் நடைமுறைக் கடமைகளை நிறைவேற்றுவதற்கும் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவ அறிவு இன்றியமையாதது. இந்தக் காரணத்தினுல்தான் இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல் வாதம் கம்யூனிஸக் கட்டுமானத்தின் சித்தாந்த அடிப்படையாகத் தொண்டாற்றுகிறது.

தத்துவச் சித்தாந்தத்தைத் தயாரான சூத்திரங்கள், வரையறுப்புக்கள் அல்லது வறட்டுச் சூத்திரங்களின் தொகுப்பு என்றும் அவற்றைப் பொருத்தமான சந்தர்ப்பங்களில் மேற்கோள் காட்டுவதன் பொருட்டு மனப்பாடம் செய்வது, இயந்திரம் போலக் கற்றுக்கொள்வது மட்டுமே தேவை என்றும் எண்ணுவது கூடாது. இயற்கையிலும் சமூகத்திலும் நடைபெறும் எதார்த்தச் செயல்முறைகளையும் நிகழ்ச்சிகளையும்பற்றி ஆழ்ந்து சிந்திக்கவும் அவற்றைப் பகுத்தாயவும் பொதுமைப்படுத்தவும் நடைமுறைப் பிரச்சினைகளைத் தீர்க்கவும் தத்துவச் சித்தாந்தத்தைச் சரிவரப் புரிந்துகொள்வது இன்றியமையாதது ஆகும்.

மார்க்ஸீயம் செயலுக்கு வழிகாட்டியே தவிர வறட்டுச் சூத்திரம் அல்ல என்ற பி. எங்கெல்ஸின் சொற்களைச் சிறப்பாகக் குறித்துக் காட்டி வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினுர்: ''மார்க்ஸீயத்தின் மிக அடிக்கடி கவனிக்காது விட்டுவிடப் படுகிற ஓர் அம்சத்தைக் குறிப்பிடத்தக்க வலிவுடனும் பொருள் நிறைவுடனும் இந்தச் சாஸ்திரீயமான கூற்று வலியுறுத்துகிறது. இதைக் கவனிக்காது விட்டுவிடுவதன் மூலம் நாம் மார்க்ஸீயத்தை ஒருதலைப்பட்சமானதாக, உருக்குலைக்கப்பட்டதாக, உயிரற்றதாகச் செய்துவிடுகிருேம். உயிர்த்தியங்கும் ஆன்மாவை அதிலிருந்து பறித்துவிடுகிருேம். சர்வ வியாபகமாகவும் முரண்பாடுகள் நிறைந்ததாகவும் உள்ள வரலாற்று வளர்ச்சி பற்றிய போதனை ஆகிய இயக்க இயல் என்கிற மார்க்ஸீயத்தின்

மூலதாரத் தத்துவ அஸ்திவாரங்களைத் தகர்த்துவிடுகிறோம். வரலாற்றின் ஒவ்வொரு புதிய திருப்பத்திலும் மாறிவரக்கூடிய, நமது சகாப்தத்தின் திட்டவட்டமான நடைமுறைக் கடமைகளோடு மார்க்ஸியத்துக்கு உள்ள தொடர்புகளை அறுத்துவிடுகிறோம்.''[1]

விஞ்ஞானரீதியான இயக்க இயல்வாதப் பொருள் முதல்வாதக் கண்ணோட்டம் மக்கள்திரளின் கம்யூனிஸ உணர்வையும் சித்தாந்தத்தில் திடநம்பிக்கையையும் உருவாக்குவதற்கு அடிப்படையாக விளங்குகிறது. மார்க்ஸியத் தத்துவத்தை ஆழ்ந்த படைப்புமுறையில் கிரகித்துக்கொள்வதால் மக்களுக்குப் புதியதிலும் முற்போக்குள்ளதிலும் ஆர்வ உணர்வும் பிற்போக்குள்ளதன்பாலும் பழைமைப் பற்றுள்ளதன் பாலும் சமரசமற்ற போக்கும் பழக்கமாகிவிடுகின்றன. இந்தப் பிற்போக்கும் பழைமைப்பற்றும் அரசியல் அக்கறையின்மையாகவோ, சோஷலிஸத்தின் ஆதர்சங்கள், அதனால் பெறப்பட்ட நலன்கள், இவற்றின்பால் எதிர்மறுப்புப் போக்காகவோ, தனியார் சொத்துரிமைக்கால மிச்ச சொச்சங்களாகவோ, எதார்த்தம் பற்றிய பூர்ஷ்வா-பிலிஸ்டைன் புலனறிவாகவோ, எதுவாக இருப்பினும் சரியே, மார்க்ஸியத் தத்துவத்தை நன்கு புரிந்துகொண்டவர்கள் அவற்றின்பால் சமரசமற்ற எதிர்ப்பைக் கடைப்பிடிக்கிறார்கள்.

உயிர்த்துடிப்புள்ள மார்க்ஸியத் தத்துவம் மேலான, ஒளி திகழும் வாழ்வின்பொருட்டு ஊக்கத்துடன் போராடத் தூண்டுவதும், கம்யூனிஸத்தின் பொருட்டு உணர்வுபூர்வமாகப் போராடுவோரின் பயிற்சியையும் தற்பயிற்சியையும் சாத்தியமாக்குவதுமான பயன்விளைக்கும் சக்தியாக விளங்குகிறது. சோவியத் மக்கள் அனைவரதும் ஒவ்வொரு தனி மனிதனதும் படைப்பு ஆற்றலை அது பெருக்குகிறது, கம்யூனிஸச் சமூகத்தை வெற்றிகரமாக நிர்மாணிக்க அவர்களுக்கு உதவுகிறது.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 84.

அத்தியாயம் இரண்டு

# பிரபஞ்சத்தின் பொருளியல்தன்மை. சடப்பொருளும் உணர்வும்

## § 1. பிரபஞ்சம் ஒரே முழுமையானது

பிரபஞ்சம் ஒரே முழுமையானதா அல்லவா? முழுமையானது என்ருல் இந்த ஒருமை எதில் அடங்கியுள்ளது? இவை மிகத் தொன்மையான கேள்விகளில் சிலவாகும். சுற்றியுள்ள பிரபஞ்சத்தின் வெவ்வேறு செயல்முறைகளிலும் நிகழ்ச்சிகளிலும் பெருந்தொகையானவற்றைத் தனிப் பிரித்து அறியவும், தன்னைத் தானே, தன் அகத்தை உணரவும் மனிதன் பழகியதுமே இந்தக் கேள்விகளுக்கு விடை காணும் தேவை அவனுக்கு ஏற்பட்டது. நாளடைவில் இவை தத்துவப் பொருள் பொதிந்தவை ஆயின.

நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சம் ஒரே தொடக்க அடிப்படை கொண்டது என ஒப்புக்கொள்ளும் தத்துவப் போதனைகள் ஒருமைக்கொள்கையின எனப்படும். பிரபஞ்சத்தின் ஒருமைக்கு இரண்டு எதிரெதிரான அர்த்தங்கள் தத்துவத்தில் உருவாயின. பிரபஞ்சத்தின் தொடக்க அடிப்படை சடப்பொருளே என்று கருதுபவர்களும் பிரபஞ்சத்தின் ஒருமை அதன் பொருளியல் தன்மையிலேயே உள்ளது என ஒப்புக்கொள்பவர்களுமான தத்துவவாதிகள் பொருள்முதல்வாத ஒருமைக்கொள்கைப் போக்கை ஆதரிக்கிருர்கள். எதிராக, கருத்துமுதல்வாத ஒருமைக்கொள்கையின் ஆதரவாளர்கள், நிலவுபவை யாவற்றுக்கும் அடிப்படையில் உள்ளது கருத்தே, சிந்தனையே, ஆன்மாவே என்று வாதிக்கிருர்கள்.

பிரபஞ்சத்தின் ஒருமை அதன் இருத்தலில், அதாவது அது நிலவுகிறது என்பதில் அடங்கியுள்ளது என்று சில தத்துவவாதிகள் கூறுகிருர்கள். அவ்வாறு கொண்டால் பின்வரும்

கேள்வி எழுகிறது: இந்த இருத்தலை, நிலவுதலை எப்படிப் புரிந்து கொள்வது? ஏதோ ஒரு பிரபஞ்ச ஆன்மாவின், பொருளியலுக்கு மேற்பட்ட ஆற்றலின் தோற்றம் அது என்று கொண்டால், நாம் தவிர்க்க இயலாதவாறு விஞ்ஞானத்துக்கும் சமூக-வரலாற்று நடைமுறையின் விவரங்களுக்கும் முரணான நிலைக்கு வந்துசேர்கிறோம்.

பிரபஞ்சம் ஒருமையுள்ளது என்று கருதாதவர்களும் தத்துவவாதிகளிடையே இருக்கிறார்கள். உதாரணமாக இருமைக் கொள்கைப் போதனைகள் தத்துவத்தில் பிரசித்தமானவை. பிரபஞ்சத்துக்குச் சடப்பொருள், ஆன்மா என்னும் இரண்டு சம உரிமையுள்ள அடிப்படைகள் உள்ளன என்ற கருத்தை இந்தப் போதனைகள் ஆதாரமாகக் கொள்கின்றன. 17ம் நூற்றாண்டில் இருந்த பிரான்சு நாட்டுச் சிந்தனையாளர் ரெனே டேக்கார்ட் *(René Descartes)* இருமைக்கொள்கையின் சிறந்த பிரதிநிதியாக விளங்கினார். பொருளியலானதற்கும் ஆன்மீகவியலானதற்கும் உள்ள பரஸ்பர உறவை ஆராய்ந்து அவை ஒன்றை ஒன்று சாராமல் நிலவுவதாகவும் அவற்றுக்கிடையே பொதுமையானது எதுவும் இல்லை என்பதாகவும் இருமைக் கொள்கையினர் தவறான முடிவுக்கு வருகின்றனர்.

ஆன்மீகவியலானது பொருளியலானதை, உள்ளம் உடலைச் சார்ந்தது அல்ல என்ற கருத்து முதலாளித்துவ நாடுகளில் தற்கால அறிஞர்களிடையே (சில உடலியலாரிடையிலும் உளவியலாரிடையிலும்) வழங்கிவருகிறது. உயிர்ச் செயல்முறைகளில் முதன்மைப் பங்கு ஆற்றுவது இயற்கைக்கு மேலான ஆன்மாவே எனவும் உளச்செயல்முறைகள் அங்கஜீவியில் ஏற்படும் உடலியல் மாறுதல்களுடன் தொடர்புஅற்றவை எனவும் நிரூபிக்க அவர்கள் முயல்கிறார்கள். ஆனால் இந்தக் கொள்கை தற்கால விஞ்ஞானத்துடன் முரண்படுகிறது. இம்மாதிரிக் கருத்துக்களை மறுக்கும் ஏராளமான விவரங்களைத் தற்கால விஞ்ஞானம் சேகரித்துள்ளது.

பிரபஞ்சத்தின் ஒருமையை அதன் பொருளியல்தன்மையை ஆதாரமாகக் கொண்டு விளக்குவதற்குப் பொருள்முதல்வாதித் தத்துவ அறிஞர்கள் எப்போதும் முயன்றுவந்திருக்கிறார்கள். உதாரணமாக, 18 வது, 19வது நூற்றாண்டுகளில் இருந்த பொருள்முதல்வாதிகள் பிரபஞ்சம் பற்றிய இருமைக்கொள்கை எண்ணங்களையும் மத-கருத்துமுதல்வாத எண்ணங்களையும்

மறுத்து, பிரபஞ்சத்தின் பொருளியல் ஒருமை பற்றிய கருத்தை ஆதாரங்காட்டி நிலைநாட்ட முயற்சி செய்தார்கள். ஆயினும் பொருள்முதல்வாத ஒருமைக்கொள்கைக் கோட்பாட்டைக் கடைப்பிடிப்பதில் மார்க்ஸுக்கு முந்திய காலப் பொருள்முதல் வாதிகள் தர்க்கப்பொருத்தம் உள்ளவர்களாக இல்லை. இந்தக் கோட்பாட்டின் ஆதாரத்தில் இயற்கையை ஆராய்ந்து, அதன் எல்லாப் பொருள்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் அடிப்படையாக இருப்பது பொருளியல் முதல்தொடக்கமே என்று அவர்கள் வலியுறுத்தினார்கள். எனினும் முந்தைய பொருள்முதல்வாதிகள் மாறுநிலைவாதப் போக்கைக் கடைப்பிடித்தார்கள். இயற்கையின் பொருள்களதும் நிகழ்ச்சிகளதும் தொடர்பையும் பரஸ்பரப் பாதிப்பையும் வளர்ச்சியையும் அவர்கள் ஆராயவே இல்லை. ஆதலால் பிரபஞ்சத்தின் ஒருமை பற்றிய அவர்களது புரிவு எளிமை உள்ளதாக இருந்தது. வேறு சொற்களில் கூறுவதானால் இந்த ஒருமையை ஆழ்ந்து புரிந்துகொள்வதற்குத் தேவையான, பிரபஞ்சம் பற்றிய பொது இயக்க இயல்வாத நோக்கு அவர்களிடம் போதிய அளவு இல்லை.

தவிரவும், மார்க்ஸுக்கு முந்திய பொருள்முதல்வாதிகள் சமூக வாழ்வுத் துறைக்குப் பொருள்முதல்வாத ஒருமைக்கொள்கைக் கோட்பாடுகளைப் பொருத்திப் பார்க்கவில்லை. சமூக நிகழ்ச்சிகளை மாறுநிலைவாத நோக்கிலிருந்து மட்டுமல்ல, கருத்துமுதல்வாத நோக்கிலிருந்துங்கூட அவர்கள் பரிசீலனை செய்தார்கள். சமூக வாழ்வும் பொருளியல் அடிப்படை கொண்டிருக்கிறது, அந்த அடிப்படையாக விளங்குவது உற்பத்தி முறையே என்பதைப் புரிந்துகொள்ளும் அளவுக்கு அவர்கள் முன்னேறவில்லை.

பிரபஞ்சத்தின் ஒருமை குறித்த உண்மையில் விஞ்ஞான ரீதியான புரிவு இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாத நிலையிலிருந்து நோக்கினால்தான் சாத்தியம் ஆகும். இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதம் பொருள்முதல்வாத ஒருமைக்கொள்கையின் தலைசிறந்த வடிவமாக விளங்குகிறது. மார்க்ஸுக்கு முந்திய காலப் பொருள்முதல்வாதிகளின் ஒருமைக்கொள்கையிலிருந்து இது சாராம்சத்தில் வேறுபடுகிறது. இந்த வேறுபாடுகள் பின்வருவனவாகும்:

முதலாவதாக, புறநிலை எதார்த்தத்தின் பொருள்களும் நிகழ்ச்சிகளும் பொதுவான, சர்வவியாபகமான தொடர்பும்

பரஸ்பரப் பாதிப்பும் கொண்டவை என்ற இயக்க இயல்வாதக் கோட்பாடுகளின் ஆதாரத்தின் பேரில் பிரபஞ்சத்தின் ஒருமையை மார்க்ஸீயத் தத்துவம் ஆராய்கிறது.

இரண்டாவதாக, வளர்ச்சி பற்றிய கோட்பாட்டுடன் பிரிக்க முடியாத தொடர்புள்ளது என்ற வகையில் பிரபஞ்சத்தின் ஒருமை இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத்தால் பரிசீலிக்கப்படுகிறது.

முடிவில் மூன்றுவதாக, பிரபஞ்சத்தின் ஒருமைக் கோட்பாடு இயற்கைக்கு மட்டுமல்ல, சமூகத்துக்கும் பொருந்துவது என மார்க்ஸீயத் தத்துவம் கருதுகிறது.

பிரபஞ்சத்தின் ஒருமையையும் அதன் விதிமுறைக்கு உட்பட்ட வளர்ச்சியையும் பற்றிய அடிப்படைக் கருத்துக்கு விஞ்ஞான அறிவுப் போக்கு முழுவதும் சான்றுகள் தருகிறது. இந்த அடிப்படைக் கருத்தை ஆதாரபூர்வமாக நிலைநாட்டுவதற்கு, நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ள, 19ம் நூற்றுண்டில் செய்யப்பட்ட மூன்று கண்டுபிடிப்புக்கள் பேருதவி புரிந்தன. இவற்றில் முதலாவது உயிருள்ள அங்கஜீவிகள் எல்லாம் உயிரணுக் கட்டமைப்பு உள்ளவை என்ற கண்டுபிடிப்பு ஆகும். உயிரியற்கையின் கட்டமைப்பு ஒருமையை இது காட்டியது. உயிரியற்கையில் நிகழும் பல்வித மாற்றங்களின் அடிப்படையில் தாவரங்களினதும் விலங்குகளினதும் வளர்ச்சியின் பொது விதிகள் நிலவுகின்றன என்ற முடிவுக்கு இது இட்டுவந்தது.

19ம் நூற்றுண்டில் செய்யப்பட்ட இரண்டாவது இயற்கை விஞ்ஞானக் கண்டுபிடிப்பு ஆற்றலின் அழியாமையையும் மாற்றத்தையும் பற்றிய விதியின் கண்டுபிடிப்பு ஆகும். இயற்கையின் பொருளியல் ஒருமைக்கும் அதன் பல்வேறு செயல்முறைகளின் பரஸ்பரத் தொடர்புக்கும் இயற்கை விஞ்ஞானச் சான்றுக உதவியது இக்கண்டுபிடிப்பு. இயந்திர இயக்கம், வெப்பம், மின்சாரம், இரசாயன ஆற்றல் ஆகியவை போன்ற நிகழ்ச்சிகள் தமக்குள் பிரிக்க முடியாதபடி இணைந்தவை, ஒன்று மற்றென்றுக மாறக்கூடியவை என்பது இதனுல் தெரியவந்தது. சடப்பொருள் நித்தியமானது, அழிக்க முடியாதது என்ற பொதுத் தத்துவ முடிவை இந்தக் கண்டுபிடிப்பு உறுதிப்படுத்துகிறது.

19ம் நூற்றுண்டில் செய்யப்பட்ட மூன்றுவது இயற்கை விஞ்

ஞானக் கண்டுபிடிப்பு டார்வின் கொள்கை ஆகும். மனிதன் உள்ளிட்ட எல்லா அங்கஜீவிகளதும் தோற்றத்திலும் வளர்ச்சியிலும் உள்ள ஒருமையை அது காட்டியது.

ஒன்றன்மீது ஒன்று பரஸ்பரப் பாதிப்புள்ள சடப்பொருள்கள், நிகழ்ச்சிகளின் ஒரே தொகுப்பே இயற்கை என்னும் பொருள்முதல்வாதக் கருத்தை அடுத்துவந்த கண்டுபிடிப்புக்கள் மேலும் உறுதிப்படுத்தின. பிரபஞ்சத்தின் பொருளியல் தன்மையைப் பிரமாணப்படுத்துவதில் பெருந்தொண்டு நிறமாலைப் பகுப்பாய்வின் உதவியால் ஆற்றப்பட்டது. சூடேறிய வாயு நிலையில் உள்ள பொருள்களின் இரசாயன அமைப்பை நிச்சயப்படுத்துவது நிறமாலைப் பகுப்பாய்வால் இயன்றது. விண்வெளிக் கோளங்களும் விண்மீன்களும் ஒரே மாதிரி இரசாயனத் தனிமங்களால் ஆனவை, அதாவது பொதுவான பொருளியல் இயற்கை கொண்டவை என்று நிறமாலைப் பகுப்பாய்வு காட்டுகிறது. எல்லா இரசாயனத் தனிமங்களின் அணுக்களும் ஒரே மாதிரித் ''தனிமத்''துகள்களால் (புரோட்டோன்கள், நியூட்ரான்கள், எலெக்ட்ரான்கள் ஆகியவற்ருல்) ஆனவை என்பதும் அவை ஒன்று மற்றென்று ஆக முடியும் என்பதும் பொருளியல் வஸ்துக்களின் ஒருமையை நிரூபிக்கிறது. இந்தத் தனிமத் துகள்கள் பௌதிகத்தால் ஆராயப்படுகின்றன.

உயிர்ச் செயல்முறைகளின் பொருளியல் அடிப்படைகளையும், உயிர்ப் பொருளின் வளர்ச்சியை இயக்கி நடத்தும் விதிமுறைகளையும் பற்றிய நமது அறிவு மேலும் ஆழமாகியிருப்பதன் காரணமாக, பிரபஞ்சத்தைப் பற்றிய பொருளியல் கோட்பாடு சரியானது என்பதை உறுதிப்படுத்தும் புதிய விஞ்ஞானச் சான்றுகள் தற்காலத்தில் மேலும் மேலும் கிடைத்துவருகின்றன. தற்கால உயிரியலார் நவீன இயந்திரங்களையும் ஆராய்ச்சி முறைகளையும் கையாண்டு உயிரணுக்களைக் கூட்டணுத் தரத்தில் பரிசீலித்துவருகிருர்கள். ஜீவரசாயனம், கூட்டணு உயிரியல், பிறப்பியல் ஆகியவை, அல்புமனைத் தவிர நியூக்ளியன் அமிலங்களும் உயிர்ச் செயல்முறைகளில் பெரும் பங்கு ஆற்றுகின்றன என நிலைநாட்டியுள்ளன. பரம்பரைப் பண்புகளையும் குறிகளையும் எடுத்துச் செல்வதும் அளிப்பதுமான தனிப்பட்ட பொருளியல் சாதனமாக விளங்குகின்றன இந்த அமிலங்கள். பாரம்பரியத்தின் உயிரியல் பண்பு நியூக்ளியன் அமிலங்கள், அல்புமன் பொருள்கள் ஆகியவற்றின் குறித்த வகைப் பரஸ்பரப்

பாதிப்புடன் தொடர்புள்ளது என்று தற்போது தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது.

உயர் நரம்புச் செயல்களைப் பற்றிய நவீன உடலியல் விவரங்களும் உளவியல் விவரங்களும் மனிதனது உணர்வு பொருளியல் காரணிகளைச் சார்ந்தது என்பதை மேலும் மேலும் ஆழ்ந்த முறையில் வெளிப்படுத்துகின்றன. சடப்பொருளால் உண்டாக்கப்படாதது எதுவும் பிரபஞ்சத்தில் இல்லை என்பதை இவ்வாறு இந்த விவரங்கள் காட்டுகின்றன. உணர்வும் சிந்தனையும் மற்ற உயிர்ச் செயல்முறைகள் எல்லாவற்றையும்போன்றே பொருளியலானதற்குப் புறம்பாக, மூளையின் தொடர்போ சார்போ இல்லாமல் தோன்ற முடியாது.

சமூக வாழ்வின் பொருள்முதல்வாத விளக்கம் பிரபஞ்சத்தின் ஒருமையைப் புரிந்துகொள்வதற்கு மிக மிக முக்கியமானது. சமூக வாழ்வில் மர்மமானதோ, இயற்கைக்கு மேலானதோ எதுவும் இல்லை என்பதை நிரூபிப்பது சமூக வாழ்வின் பொருளியல் அடிப்படையும் அதன் வளர்ச்சிக்குரிய புறநிலை விதிகளும் வெளிப்படுத்தப்பட்டதனல் சாத்தியம் ஆயிற்று.

பிரபஞ்சத்தின் ஒருமை அதன் பொருளியல் தன்மையில் அடங்கியுள்ளது என்னும் இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதப் போதனையை விஞ்ஞான விவரங்கள் முழுமையாக உறுதிப்படுத்துகின்றன என்பதை இவ்வாறு நாம் காண்கிறோம். சடப்பொருள் என்பது என்ன? அதன் அடிப்படை இயல்புகள் யாவை?

## § 2. சடப்பொருள் பற்றிய கருதுகோள்

''சடப்பொருள்'' என்னும் சிறப்புச் சொல்லைப் பயன்படுத்தாமல் சமாளிக்கக் கூடிய தத்துவப் பிரிவையோ தத்துவவாதியையோ குறிப்பிடுவது கடினம். எனவே வெவ்வேறு சமயங்களிலும் வெவ்வேறு தத்துவச் சித்தாந்தங்களிலும் இந்தச் சிறப்புச் சொல் வெவ்வேறு அர்த்தமும் முக்கியத்துவம் பெற்றிருப்பதில் வியப்பில்லை. சடப்பொருளின் தன்மை பற்றித் தத்துவவாதிகளுக்கு இடையிலும் மற்ற விஞ்ஞானிகளுக்கு இடையிலும் உக்கிரமான விவாதம் தற்காலத்திலும் நடந்துவருகிறது.

தொன்மைக்காலப் பொருள்முதல்வாதிகள் சடப்பொருள் என்பதற்குப் பிரபஞ்சத்தின் முதல் அடிப்படை, பருப்பொருள்

கள் யாவும் எதனுல் ஆனவையோ அந்தக் ''கட்டுமானப் பொருள்'' என்று அர்த்தம் செய்து கொண்டார்கள். நாம் ஏற்கன வே அறிந்துள்ளது போல அவர்களில் சிலர் நீரையும், வேறு சிலர் காற்றையும் பின்னும் சிலர் நெருப்பையும் ஆதிமுதலாக, அடிப்படையாகக் கொண்டார்கள். நீர், காற்று அல்லது நெருப் பிலிருந்தே எல்லாம் தோன்றுகின்றன என்றும் எல்லாம் அவை யாகவே மீண்டும் மாறிவிடுகின்றன என்றும் அவர்கள் எண்ணி ஞர்கள். பிற்பாடு எல்லாப் பருப்பொருள்களும் அணுக்களால் ஆனவை என்ற மேதைவாய்ந்த அனுமானத்தைத் தத்துவ வாதிகள் வெளியிட்டார்கள். இந்த அணுக்கள் மிக நுண்ணிய பொருளியலான துகள்கள், மாற்றவோ பகுக்கவோ முடியாத வை, வெறும் வெளியில் அவை நிரந்தரமாக இயங்கிக்கொண் டிருக்கின்றன என அவர்கள் கூறினர்கள். இயற்கையின் பல்வகை வஸ்துக்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் பொது அடிப்படை யாக என்றென்றும் நிலவிவருவது சடப்பொருள் என அப்புறம் அர்த்தப்படுத்திக்கொள்ளத் தொடங்கினர்கள்.

மார்க்ஸீயத்துக்கு முந்திய பொருள்முதல்வாதத் தத்துவத் திலும் இயற்கை விஞ்ஞானத்திலும் சடப்பொருள்பற்றிய இத் தகைய கருத்துக்கள் எல்லோருக்கும் ஏற்புடையவையாக இருந் தன. அப்போது விவாதம் பின்வரும் பிரச்சினை குறித்தே நடந்து வந்தது: சடப்பொருளை எல்லா வஸ்துக்களுக்கும் இயற்கைக் காரணமாகக் கருத முடியுமா, அல்லது அதைத் தவிர வேறு ''முதல் காரணம்'' உள்ளதா? பொருளியல் வஸ்துக்கள் எல் லாம் இயங்கும்படி செய்தது யார்? இயக்கத்தின் ஊற்றுக்கண் எது? சடப்பொருள் ஒரே மாதிரியானது தானு? புலனறிவால் உணரப்படும் ஸ்தூல வஸ்துக்களிலிருந்து வேருனதாக அதைச் சிந்தனை செய்ய முடியுமா? அணுக்களின் இயந்திர இயக்கத் துக்கு உரிய விதிகளைக் கண்டுபிடித்துவிட்டால் சடப்பொருளே எல்லா வஸ்துக்களுக்கும் முதல் அடிப்படை என்பதை அறிந்து கொள்ள முடியும் எனக் கருதப்பட்டது. பௌதிக, இரசாயனச் செயல்முறைகளை அணுக்களின் இயந்திர இயக்கத்தால் நிகழ்பவை எனக் காட்ட அந்தக் காலத்தில் பல விஞ்ஞானிகள் முயன்ருர்கள்.

ஆனல் நிகழும் நூற்ருண்டின் தொடக்கத் தறுவாயில் தீர்க்க முடியாதவைபோலக் காணப்பட்ட சிக்கல்கள் விஞ்ஞானத் துக்கு எதிர்ப்பட்டன. சில பெரிய கண்டுபிடிப்புக்கள் அணுக்

களின் பகுக்கப்பட முடியாமையையும் பொருளியல் துகள்களின் வேறு சில பண்புகளையும் ஆற்றலையும் பற்றி அப்போது மேலோங்கியிருந்த கருத்துக்களை அடியோடு மாற்றிவிட்டன. நுண்ணுலகில், அதாவது அணு நிகழ்ச்சிகளின் உலகில், பௌதிகம் பிரவேசித்ததும், பொருளியல் துகள்களின் அசாதாரணப் பண்புகளையும் ஆற்றலின் புது வகைகளையும் அங்கே எதிர்ப்பட்டது.

எல்லாவற்றுக்கும் முன்னதாகக் கண்டுபிடிக்கப்பட்டது எலெக்ட்ரான். இது அணுவைக் காட்டிலும் மிகச் சிறியது. இந்தத் துகள் ஒளியின் வேகத்துக்கு (வினடிக்கு 3 லட்சம் கிலோ மீட்டர்) ஒப்பான விரைவுடன் இயங்க வல்லது. இத்தகைய நிலைமைகளில் துகளின் பொருண்மை நிலையாக இருப்பதில்லை. துகளின் இயக்க வேகத்தைப் பொறுத்து அது கணிசமாக மாறுகிறது. இந்தச் சார்பு அப்போது இன்னும் நிலைநாட்டப்படவில்லை. மாருநிலைவாதப் போக்கில் சிந்தித்த விஞ்ஞானிகள் எலெக்ட்ரானின் பொருண்மை மறைந்துவிடுகிறது என்ற முடிவுக்கு வந்தார்கள். சடப்பொருள் என்பது இயந்திரப் பொருண்மை கொண்ட முழு வஸ்துமயமானது என்று அந்தக் காலத்தில் கருதப்பட்டது ஆதலால் எலெக்ட்ரான் பொருளியலற்றது என்ற எண்ணத்தை இந்த முடிவு தூண்டிவிட்டது. அணு ''பொருளியல்தன்மை அற்றுவிடுகிறது'' என்றும் சடப்பொருள் மறைந்துவிடுகிறது என்றும் அர்த்தம் செய்துகொள்ளப்பட்டது.

கதிரியக்கம், அதாவது ரேடியம் போன்ற சில இரசாயனத் தனிமங்களுக்கு உள்ள கதிர்களை வெளிவிடும் பண்பு கண்டுபிடிக்கப்பட்டதும், அந்தக் கண்டுபிடிப்பிலிருந்தும் இதே முடிவு செய்யப்பட்டது. இந்தக் கதிர்ப்பு இடையீடின்றியும் ரேடியமே பொருண்மையை இழக்கும் அளவுக்குத் தீவிரமாகவும் வெளிப்படுவதாகத் தோன்றியது. சடப்பொருள் மறைந்துவிடுகிறது என்னும் முடிவைக் கதிரியக்கத்தின் கண்டுபிடிப்பும் உறுதிப்படுத்துகிறது என இந்த ஆதாரத்தின் பேரில் சில பௌதிக அறிஞர்கள் எண்ணினர்கள்.

பௌதிகத்தில் செய்யப்பட்ட புதிய கண்டுபிடிப்புக்கள் சடப்பொருளையும் அதன் பண்புகளையும்பற்றிய பழைய மாருநிலைவாதக் கற்பனைகளுக்கு முரண்பட்டன. பௌதிகத்தில் நெருக்கடி தோன்றியது. சடப்பொருள்பற்றிய கருதுகோள் பழையதாகிவிட்டது என்றும், நமது உணர்வுமீது சார்பு அற்ற புற நிலை எதார்த்தம் எதுவும் நிலவவில்லை என்றும் அனேக இயற்

கை விஞ்ஞானிகள் தவருக முடிவு செய்தார்கள். பௌதிகம் பொருள்களுக்கு இடையிலுள்ள தொடர்பை அல்ல, புலனுணர்ச்சிகளுக்கு இடையிலுள்ள தொடர்பையே ஆராய்கிறது என்றும், அணுக்கள் எதார்த்தத்தில் நிலவவில்லை என்றும், அவை நமது புலனுணர்ச்சிகளின் தொகுதிகள் மட்டுமே என்றும் ஆஸ்திரியக் கருத்துமுதல்வாதித் தத்துவவாதியும் பௌதிக அறிஞருமான எர்ன்ஸ்ட் மாஹ் (*Ernst Mach*) என்பவரும் அவரைப் பின்பற்றுவோரும் நிரூபிக்க முயன்ருர்கள். ஜெர்மானியக் கருத்துமுதல்வாதித் தத்துவவாதியும் இயற்கை இயல் அறிஞருமான வில்ஹெல்ம் ஓஸ்ட்வால்டு (*Wilhelm Ostwald*) ''சடப் பொருள்'', ''ஆன்மா'' என்ற கருதுகோள்களின் இடத்தில் ''ஆற்றல்'' என்ற கருதுகோளைக் கையாள்வது பொருத்தமாயிருக்கும் எனக் கருதினுர்.

விஞ்ஞானத்தில் உருவாகியிருந்த நிலைமையைப் ''பொருள்முதல்வாதமும் அனுபவவிமர்சனவாதமும்'' என்னும் தமது நூலில் வி. இ. லெனின் பகுத்தாய்ந்து, பௌதிகத்தில் உண்டாகியிருந்த நெருக்கடியின் காரணங்களை வெளிப்படுத்தினுர். நிலைபெற்றிருந்த கருதுகோள்கள் ஒரேயடியாகத் தகர்க்கப்பட்டுவிட்டதன் விளைவாக விஞ்ஞானத்துக்கு எதிர்ப்பட்ட சிக்கல்களைப் பயன்படுத்திக்கொண்டு அதன் சாதனைகளைக் கருத்துமுதல்வாதம் திரிக்கிறது என லெனின் காட்டினுர். ''பழைய விதிகளும் அடிப்படைக் கோட்பாடுகளும் தகர்க்கப்பட்டுவிட்டதும், உணர்வுக்கு வெளியே புறநிலை எதார்த்தம் நிலவுவது நிராகரிக்கப்பட்டுவிட்டதுமே, அதாவது பொருள்முதல்வாதத்துக்குப் பதிலாகக் கருத்துமுதல்வாதமும் அறியொணுமைக் கொள்கையும் மேற்கொள்ளப்பட்டுவிட்டதே தற்காலப் பௌதிகத்துக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியின் சாரம் ஆகும்''[1] என்று எழுதினுர் வி. இ. லெனின்.

பௌதிக அறிஞர்களிடையே அந்தக் காலத்தில் கருத்துமுதல்வாதத் திருப்பம் பரவத் தொடங்கியதன் காரணம் என்ன? புதிய பௌதிகம் ''வழிகெட்டுக்'' கருத்துமுதல்வாதத்தை மேற்கொண்டதற்கு முதன்மையான காரணம், இயற்கை விஞ்ஞானிகள் இயக்க இயலை அறியாதிருந்ததே என வி. இ. லெனின்

---

[1] வி. இ. லெனின், முழு நூல்திரட்டு, தொகுதி 18ம், பக்கங்கள் 272-273.

காட்டினர். பொருளியல் வஸ்துக்களின் பண்புகள் மாறுவதில்லை என்ற மாறுநிலைவாதக் கருத்தை அவர்களில் பலரால் அகற்ற முடியவில்லை. பொருண்மை, ஊடுருவ முடியாமை, சடத்துவம் போன்ற பொருள்களின் பண்புகள் சாசுவதமானவை, மாற முடியாதவை என முன்போலவே அவர்கள் எண்ணிவந்தார்கள். உதாரணமாக அணுக்கள் பகுக்கப்பட இயலாத தனிமங்கள், மாருத பண்புகளை எப்போதும் கொண்டிருப்பவை எனக் கருதப்பட்டன. பொருளியல் வஸ்துக்கள் (உதாரணமாக அணுக்களும் அவற்றின் பண்புகளும்) மாருதவை என ஒப்புக்கொள்வது மாறுநிலைவாத, இயந்திர இயல் பொருள்முதல்வாதத்தின் அடிப்படைக் கோட்பாடு ஆகும்.

சடப்பொருள் மறைந்துவிடுகிறது என்னும் முடிவுக்கு சில இயற்கை விஞ்ஞானிகள் வரக் காரணமாயிருந்தவை மாறுநிலைவாதக் கருத்துக்களே ஆகும். எனினும், வி. இ. லெனின் காட்டியதுபோல, புதிய பௌதிகக் கண்டுபிடிப்புக்களால் உண்மையில் தெரியவந்தது என்னவென்ருல், மறைவது சடப்பொருள் அல்ல, ''இதுவரை நாம் எந்த எல்லைவரை சடப்பொருளை அறிந்திருந்தோமோ, அந்த எல்லையே மறைகிறது, நமது அறிவு இன்னும் ஆழத்துக்குச் செல்கிறது. சடப்பொருளின் எந்தப் பண்புகள் சார்பற்றவையாகவும் மாருதவையாகவும் முதல் தொடக்கமாகவும் முன்னர் தென்பட்டனவோ, அவை மறைந்துவிடுகின்றன... இப்போது அவை சார்பு உள்ளவை, சடப்பொருளின் சில குறிப்பிட்ட நிலைகளுக்கு மட்டுமே இயல்பானவை என்பது வெளிப்பட்டிருக்கிறது.''[1]

மாறுநிலைவாதப் பொருள்முதல்வாதத்திற்கும் இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத்திற்கும் இடையே உள்ள வேறுபாடுகளைக் கவனிக்காது விட்டுவிடுவது, இயக்க இயலை மறந்துவிடுவது அல்லது அறியாதிருப்பது, சடப்பொருளை உணர்வினுல் உற்பத்தி செய்யப்படும் ஒன்ருக விளக்க முயலும் தத்துவக் கருத்துமுதல்வாதத்துக்குத் தவிர்க்க இயலாதவாறு இட்டுச் செல்கிறது. இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதம் கருத்துமுதல்வாதிகளின் தத்துவக் கற்பனைகளை விஞ்ஞானத்துக்கு மாருனவை, பிற்போக்கானவை என்ற முறையில் நிராகரித்து

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 275.

விடுகிறது. இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதப் பிரபஞ்ச அறிவின்படி, நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சம் முடிவின்றிப் பல்வகையானது. எல்லா வஸ்துக்களும் நிகழ்ச்சிகளும் தங்கள் சிறப்பியல்புகளிலும் பண்புகளிலும் ஒன்றுக்கொன்று வேறுபடுகின்றன. ஆனல் எல்லா வஸ்துக்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் பொதுப்படையான ஒரு பண்பு உள்ளது. உணர்வின் சார்பு இல்லாமல் நிலவுவதற்குரிய, புறநிலே எதார்த்தமாக விளங்குவதற்கான பண்பு இது. ''சடப்பொருள்'' என்ற எல்லேயின்றி விரிவான விஞ்ஞானக் கருதுகோள் அல்லது வகைப்பிரிவு புறநிலேயாக நிலவுவது அனேத்தையும் உள்ளடக்குகிறது சடப்பொருள் என்பதற்குத் திட்டவட்டமான விளக்கம் தருகையில் வி.இ. லெனின் பின்வருமாறு எழுதினுர்: ''சடப்பொருள் என்பது புறநிலே எதார்த்தத்தைக் குறிப்பிடுவதற்கான தத்துவ வகைப்பிரிவு ஆகும். இந்த எதார்த்தம் மனிதனுடைய புலனுணர்ச்சிகள் வாயிலாக அவனே அடைகிறது. நமது புலனுணர்ச்சிகளால் இது பிரதிசெய்யப்படுகிறது, படம்பிடிக்கப்படுகிறது, பிரதிபலிக்கப்படுகிறது, ஆனல் அவற்றின் சார்பு இன்றி நிலவுகிறது.''[1]

சடப்பொருள் பற்றிய லெனினது விளக்கம் விஞ்ஞானப் பொருள்முதல்வாதப் பிரபஞ்சக் கண்ணேட்டத்தின் முக்கிய அடிப்படைகளே வெளியிடுகிறது. சடப்பொருள் என்பது உணர்வின் சார்பு இன்றி நிலவும் புறநிலேப் பிரபஞ்சம். மனிதன் பொருளியல் எதார்த்தத்தைப் புரிந்துகொள்கிருன், சடப்பொருளினது தோற்றத்தின் பல்வகை வடிவங்களேப் புலன்களால் உணர்கிருன், வெளிப் பிரபஞ்சத்தையும் அதன் வளர்ச்சியின் விதிமுறைகளேயும் அறிந்துகொள்கிருன். சடப்பொருளேயும் உணர்வையும், பொருளியல் இருத்தலேயும் சிந்தனேயையும் திட்டவட்டமாக வரையறுத்திருப்பது பொருள்முதல்வாதத்தைக் கருத்துமுதல்வாதத்திலிருந்து வேறுபிரித்துக் காட்டும் பிரதான வித்தியாசங்களில் ஒன்ருகும்.

சடப்பொருள் என்பது புறநிலே எதார்த்தமே என்னும் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் போதனே கருத்துமுதல்வாதத்துக்கு எதிரான போராட்டத்தில் தற்கால விஞ்ஞானத்துக்கு ஆயுதபலம் அளிக்கிறது. தற்காலப் பௌதிகத்தினல் ஆராயப்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 131.

படும் வஸ்துக்களின் எதார்த்தம் பற்றிய பிரச்சினைக்குக் கருத்துமுதல்வாதிகள் இன்றளவும் திரிபான விளக்கம் தருகிறார்கள். நுண்மங்கள் (''தனிமத்'' துகள்கள்) நேரடியாக அவதானிக்கப்பட முடியா என்பதன் ஆதாரத்தில் அவை புறநிலையாக நிலவுவதையே அவர்கள் சந்தேகிக்கிறார்கள் அல்லது ஒரேயடியாக மறுக்கிறார்கள்.

நுண்மங்களின் எதார்த்தம் நமது அவதானிக்கைமீது சார்பு உள்ளது என்று கருத்துமுதல்வாதிகள் கற்பிப்பதிலிருந்தே இத்தகைய எண்ணங்கள் ஆதாரமற்றவை என்பது தெரிகிறது. நவீன விஞ்ஞானமும் நடைமுறையும் நிருமித்துள்ள இயந்திரக் கருவிகள் ''தனிமத்'' துகள்களை நிலைப்படுத்திப் பதிவு செய்கின்றன. இந்தத் துகள்கள் புறநிலையாக நிலவுவதை இவ்வாறு செய்வதன் மூலமே இவை உறுதிப்படுத்துகின்றன. இத்தகைய கருவிகளைப் படைத்ததன்வாயிலாக நவீன விஞ்ஞானமும் நடைமுறையும் கருத்துமுதல்வாதப் புனைசுருட்டுக்களை நிராகரிக்கின்றன. ''தனிமத்'' துகள்களை ஊகமாகத்தான் நிலைப்படுத்த முடியும் என்று வைத்துக்கொண்டாலுங்கூட, அவை புறநிலை எதார்த்தமாக விளங்குவதை மறுப்பதற்கு இது ஆதாரம் ஆகிவிடாது. தம்மை ஒருவன் புரிந்துகொள்கிறானா இல்லையா என்பதன் சார்பு இன்றியே அவை நிலவுகின்றனவே.

பொருளியல் பிரபஞ்சம் முடிவின்றிப் பல்வகைப்படுவது; அதன் ஒவ்வொரு வஸ்துவும், அது நீர்த்துளி ஆயினும் சரியே, அல்லது அந்தத் துளியின் ஏதேனும் ஓர் அணு ஆயினும் சரியே, முடிவற்ற சிக்கல்கள் கொண்டது, வளங்குன்றாத பண்புகள் உள்ளது என்னும் விஞ்ஞானத்துக்கு மிக மிக முக்கியமான முடிவை இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதம் ஆதாரத்துடன் நிலைநாட்டுகிறது. சடப்பொருள் உள் ஆழத்தில் வளங்குன்றாதது என்னும் கோட்பாட்டை, இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில், எலெக்ட்ரான் கண்டுபிடிக்கப் பட்டதும் வி. இ. லெனின் ஆதாரம் காட்டி நிலைநாட்டினார். அடுத்து வந்த ஆண்டுகளில் இன்னும் எத்தனையோ ''தனிமத்'' துகள்கள் (புரோட்டோன், நியூட்ரான், மெஸோன், ஹைப்பரோன் முதலியன) தெரியவந்தன. சடப்பொருள் எல்லையற்ற சிக்கல் கொண்டது, அதன் தோற்றங்கள் எல்லையற்றவை என்னும் வி. இ. லெனினது முடிவை இந்தத் துகள்களின் கண்டுபிடிப்பு உறுதிப்படுத்தியது. சடப்பொருள் உள் ஆழத்தில் வளங்குன்

ருதது என்பதை, நவீன விஞ்ஞானம் மேலும் மேலும் புதிய ''தனிமத்'' துகள்களைக் கண்டுபிடிக்கிறது என்ற அர்த்தத்தில் மட்டும் புரிந்துகொள்வது கூடாது. ஒவ்வொரு துகளின் பண்புகளுங்கூட வளங்குன்றுதவை என விஞ்ஞான விவரங்கள் காட்டுகின்றன.

சடப்பொருள் வெறும் **வஸ்துவாக** (அதாவது ''தனிமத்'' துகள்களால் ஆன மணல் முதல் விண்வெளிக் கோளங்கள், விண்மீன்கள் வரை நம்மைச் சூழ்ந்துள்ள பொருள்கள் யாவும்) மட்டுமே அல்ல, **புலம்** (மின்காந்தப் புலம், அணுக்கருப் புலம், ஈர்ப்புப் புலம்) ஆகவும் நிலவுகிறது என்ற உண்மையும் சடப் பொருளின் பல்வகைப்பாட்டின் முடிவின்மைக்குச் சான்று பகர்கிறது. சடப்பொருளின் இந்த இரு வகைகளும் தமக்குள் நெருங்கிய தொடர்பு கொண்டவை. இவை இடையறுத பரஸ் பரப் பாதிப்பு விளைத்த வண்ணமாக இருக்கின்றன.

மனித அறிவு இயற்கையில் உள்ள எத்தனையோ அற்புதங்களை வெளிப்படுத்தியிருக்கிறது, இன்னும் நிறைய வெளிப்படுத்தும் என்று வி. இ. லெனின் கூறினர். ஆனல், பௌதிகம், இரசாய னம், உயிரியல் ஆகிய துறைகளிலும் வேறு எந்த விஞ்ஞானத் திலேனும் மேற்கொண்டு எவ்விதக் கண்டுபிடிப்புக்கள் செய்யப் பட்டாலும் சரியே, புறநிலை எதார்த்தத்தைக் குறிப்பிடுவதற்குப் பயன்படும் தத்துவ வகைப்பிரிவு என்ற முறையில் சடப் பொருள்பற்றிய கருதுகோளை அவற்றுல் அசைக்க முடியாது, நிராகரிக்கவோ முடியவே முடியாது.

சடப்பொருள்பற்றிய லெனினது வரையறுப்பு சமுதாய எதார்த்தத்தையும், அதாவது சமூக இருத்தலையும் உள்ளடக்கு கிறது. இந்தச் சமூக இருத்தலும் மனிதர்களின் சித்தத்தின் மீதும் உணர்வின்மீதும் சார்பு இன்றி நிலவுகிறது. ''புறநிலை யாக எதார்த்தமான இருத்தல் (சடப்பொருள்) மனிதகுலத் தின் உணர்வு, புலனுணர்ச்சி, அனுபவம் முதலியவற்றின்மீது சார்பு அற்றது எனப் பொருள்முதல்வாதம் பொதுவாக ஒப்புக் கொள்கிறது. சமூக இருத்தல் மனிதகுலத்தின் சமூக உணர் வின்மீது சார்பு அற்றது என்று பொருள்முதல்வாதம் வரலாற்று அடிப்படையில் ஒப்புக்கொள்கிறது. இவ்விரு சந்தர்ப்பங்களி லும் உணர்வு என்பது இருத்தலின் பிரதிபலிப்பு மட்டுமே.சிறப் பான நிலைமைகளில் அது இருத்தலின் கிட்டத்தட்டச் சரியான

(போதிய, ஆதர்சரீதியில் துல்லியமான) பிரதிபலிப்பு மட்டுமே''[1] என்று எழுதினர் வி. இ. லெனின். சமூக இருத்தல் என்பது சமூக உற்பத்தியின் தன்மையைப் பொறுத்து மனிதர்களுக்கு இடையே உருவாகும் புறநிலே உறவுகள் ஆகும். உற்பத்திச் சாதனங்கள்பால் உள்ள உறவுகள், செயல்களின் பரஸ்பரப் பரிவர்த்தனை, வர்க்கங்களுக்கு இடையே நிலவும் உறவுகள், சமூக உணர்வு ஆகியவற்றை இவற்றுக்கு உதாரணமாகக் காட்டலாம். குறித்த வரலாற்றுக் காலக்கட்டத்துக்குச் சிறப்பாக உரிய அரசியல், சட்டக் கருத்துக்களும் பிற கருத்துகளும் சமூக இருத்தலில் அடங்கியவையே.

சமூக உணர்வு சமூக இருத்தலே எவ்வாறு பிரதிபலிக்கிறது என்பதும் இதனுடன் தொடர்பு கொண்ட அனேகத் தத்துவப் பிரச்சினைகளும் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் பற்றிய அடுத்துவரும் அத்தியாயங்களில் விசேஷமாக ஆராயப்படும். இங்கே ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிடுவது அவசியம்: சமூக இருத்தல் சமூக உணர்வுமீது சார்பு அற்றது என்ற தத்துவ முடிவு சமூக விஞ்ஞானத்துக்கும் மனிதகுலத்தின் எல்லாச் செயல் துறைகளிலும் ஜீவாதாரக் கடமைகளை நிறைவேற்றுவதற்கும் பெருத்த முக்கியத்துவம் வாய்ந்தது.

சடப்பொருள்பற்றிய மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் போதனை பொருளியல் பிரபஞ்சம் புறநிலேயாக நிலவுகிறது என்ற முடிவுடன் தீர்ந்துவிடவில்லே. சடப்பொருள் நிலவுவதற்குரிய வடிவங்கள் பற்றிய பிரச்சினையையும் அது உள்ளடக்கியிருக்கிறது.

### §3. இயக்கம், இடவெளி, காலம்—சடப்பொருள் நிலவுவதன் வடிவங்கள்

இயக்கம், இடவெளி, காலம் என்பவை யாவை? எதார்த்தப் பிரபஞ்சத்தின் எல்லா வஸ்துக்களுக்கும் நிகழ்முறைகளுக்கும் இயல்பான இன்றியமையாத பண்புகள்தாமா அவை? இந்தக் கேள்விகள் ஆழ்ந்த தத்துவ அர்த்தம் கொண்டவை.

இயக்கம் என்ன என்பதை முதலில் ஆராய்வோம்.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 346.

இயக்கம் என்பது என்ன என்று சரியாகப் புரிந்துகொள் வதற்கு, மாருநிலேவாதத்தையும் கருத்துமுதல்வாதத்தையும் அப்பால் தள்ளிவிட்டு இயக்க இயல்வாதப் பொருள்முதல் வாத நிலேயிலிருந்து அதை ஆராய வேண்டும். மார்க்ஸீயத் தத்துவ ஸ்தாபகர்கள் இதையே செய்தார்கள். பி. எங்கெல்ஸ் பின்வருமாறு எழுதினர்: ''இயக்கம் என்பது, அந்தச் சொல் லின் மிகப் பொதுவான அர்த்தத்தில் ஆராயப்படும்போது, அதாவது, சடப்பொருள் நிலவுவதற்கான முறை என்ற வகை யில், சடப்பொருளின் உள் இயல்பான குணம் என்ற வகையில் புரிந்துகொள்ளப்படும் போது, எளிய இடப்பெயர்விலிருந்து தொடங்கி சிந்தனேயில் முடிபவையான, பிரபஞ்சத்தில் ஏற் படும் எல்லா மாறுதல்களேயும் நிகழ்முறைகளேயும் உள்ளடக்கு கிறது''.[1]

இந்த விதமாக, சடப்பொருளுக்குப் பொருத்திப் பார்க்கை யில் இயக்கம் என்பது மொத்தத்தில் மாறுதலேக் குறிக்கிறது. பொருளியல் வஸ்துக்களில் ஏற்படும் எந்தவிதமான மாறுதல் களும், அவை பொருள்களின் பௌதிக அல்லது இரசாயன இயல்புகளின் மாறுதல்கள் ஆயினும், சூரியனிலோ அல்லது விண்வெளிப் பரப்பிலோ, உயிர் உலகிலோ அல்லது சமூக வாழ் விலோ எதில் நிகழும் மாற்றங்கள் ஆயினும் சரியே, இயக்க மே ஆகும். அதோடு, எங்கும் எப்போதும் இயக்கத்தின் ஊற் றுக்கண்ணுகச் செயல்படுபவை வஸ்துக்களின் உள் இயல்பான முரண்பாடுகளே ஆகும். இம்முரண்பாடுகள் விதிவிலக்கின்றி எல்லா வஸ்துக்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் இயல்பானவை. இட வெளியிலும் காலத்திலும் சடப்பொருள், சக்தி, இவற்றின் ஒரே மாதிரி அல்லாத வினியோகமே பிரபஞ்சத்தில் நடக்கும் பொரு ளியல் செயல் முறைகளே ஒட்டி நிகழும் மாற்றங்களுக்குக் கார ணம் ஆகிறது. தானே இயங்கும் சடப்பொருளுக்கு இயற்கைக்கு மேற்பட்ட இயக்குவிப்பி தேவைப்படுவதில்லே. இயக்கம் என் பதே சடப்பொருள் நிலவுவதற்கான முறை ஆகும். இதன் அர்த் தம் என்னவென்ருல், சடப்பொருள் இயக்கத்துக்குப் புறம்பாக நிலவ முடியாது, எனவே சடப்பொருள் போன்றே இயக்கமும் புறநிலேயானது என்பதாகும்.

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''இயற் கையின் இயக்க இயல்'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 391.

சடப்பொருள் நித்தியமானது, ஆக்கப்பட முடியாதது, அழிக்கப்பட முடியாதது ஆதலால் அதன் வேறுபிரிக்க முடியாத மூலப் பண்பு ஆகிய இயக்கமும் நித்தியமானது, ஆக்கப்பட முடியாதது, அழிக்கப்பட முடியாதது. மிக முக்கியமான இந்தத் தத்துவ வரையறுப்பு சக்தி அழியாமையையும் மாற்றத்தையும் பற்றிய விதியால் உறுதிப்படுத்தப்படுகிறது. எந்த விதமான பொருளியல் உருமாற்றங்களிலும் ஆற்றலின் மொத்த அளவு எப்போதும் நிலையாக, மாறுதலின்றித் தங்கியிருக்கிறது, அதாவது இயக்கத்தின் அளவு அழியாது இருக்கிறது என்று இந்த விதி நிலைநாட்டுகிறது. தவிர, அளவில் மட்டுமல்ல, பண்பிலும் இயக்கம் அழிக்கப்படுவதில்லை. ஏனெனில் பொருளியல் இயக்கம் ஒரு வடிவிலிருந்து மறு வடிவுக்கு முடிவின்றி மாற வல்லது. ஆற்றலின் பண்புவகையில் வேறான வடிவங்கள் (இயந்திர ஆற்றல், வெப்ப ஆற்றல், மின்காந்த ஆற்றல், அணுக்கரு ஆற்றல் முதலியன) இடையறாது ஒன்று மற்றொன்றாக மாறிய வண்ணமாக இருக்கின்றன. இவ்வாறு மாறுகையில் ஒரு வடிவினது இயக்கத்தின் குறித்த அளவு மற்றொரு வடிவினது இயக்கத்தின் குறித்த அளவை ஒத்திருக்கிறது.

இயக்கத்தைச் சடப்பொருளிலிருந்து தனிப்பிரிக்க முடியாது. சடப்பொருளுக்கும் இயக்கத்துக்கும் உள்ள துணிக்க முடியாத தொடர்பு இயற்கை விஞ்ஞானத்தில் பொருண்மைக்கும் ஆற்றலுக்கும் உள்ள பரஸ்பரத் தொடர்பு பற்றிய விதியின் வாயிலாக வெளியிடப்படுகிறது. பொருண்மை உள்ள எந்தப் பொருளியல் வஸ்துவும் இந்தப் பொருண்மைக்கு ஏற்ற அளவு ஆற்றல் கொண்டிருக்கிறது என இவ்விதி கூறுகிறது. எனவே சடப்பொருள் உள்ள இடத்தில் இயக்கம் எப்போதும் இருக்கிறது என்றும் அதே போல இயக்கம் உள்ள இடத்தில் சடப்பொருள் எப்போதும் இருக்கிறது என்றும் சொல்லலாம்.

தற்காலக் கருத்துமுதல்வாதத் தத்துவவாதிகள் இயக்கத்தைச் சடப்பொருளிலிருந்து தனிப்பிரித்து, சடப்பொருள் இல்லாத ''தூய'' இயக்கம் நிலவுவதாகச் ''சித்தாந்தங்களை'' உருவாக்குகிறார்கள். பொருண்மைக்கும் ஆற்றலுக்கும் உள்ள பரஸ்பரத் தொடர்பை, பொருண்மை ஆற்றலாக மாறுவது என அவர்கள் விளக்குகிறார்கள். இத்தகைய கருத்துக்கள் ஆதாரமற்றவை என்பது தெளிவு. ஏனெனில் உண்மையில், பொருண்மை ஆற்றலுடன் தொடர்பு கொண்டது ஆயினும் சடப்பொ

ருள் எப்படி இயக்கமாக மாற முடியாதோ அப்படியே பொருண்மை ஆற்றலாக மாற முடியாது. இயக்கம் சடப்பொருளின் பிரிக்க முடியாத பண்பு, அதன் இருத்தலின் வடிவம் ஆதலால் சடப் பொருளுடன் எப்போதும், எங்கும் தொடர்பு உள்ளது. சடப்பொருளும் எப்போதும், எங்கும் இயக்கத்திலேயே இருக்கிறது.

இயக்கம் புறநிலையானது, இயக்கமும் சடப்பொருளும் பிரிக்க முடியாதவை என்ற மார்க்ஸீயத் தத்துவத்தின் வரையறுப்பு, இயங்கும் சடப்பொருளின் திட்டமான பண்புகளையும் இயற்கையின் பல்வேறு வகைத் தோற்றங்களையும் அறிவதற்கான வழிகளை விஞ்ஞானத்துக்குக் காட்டுகிறது. கருத்துமுதல்வாத, மதத் தவறுகளை நீக்க விஞ்ஞானத்திற்கு உதவுகிறது.

இயக்கம் தன் இயல்பில் முரண்பாடு உள்ளது. நிலையின்மை, நிலைப்புத்தன்மை போன்ற அதன் தன்மைகள் பிரிக்க முடியாத தொடர்பில் செயல்படுகின்றன என்பதில் இயக்கத்தின் முரண்பாடு வெளிப்படுகிறது. பிரபஞ்சத்தின் நிரந்தரமான, எல்லாவற்றுக்கும் பொதுவான நிலையின்மை காரணமாக ஒப்புநோக்கான நிலைப்புத்தன்மை, ஒப்புநோக்கான ஓய்வு நிலவும் கணங்கள், பொருள், வஸ்து, நிகழ்ச்சி ஆகியவற்றின் தாற்காலிகச் சமநிலைகள் ஏற்படும் கணங்கள் அற்றுப்போய்விடுவதே இல்லை. இந்த நிலைப்புத்தன்மை இல்லாவிட்டால் பிரபஞ்சம் தெளிவாகப் பிரித்தறிய முடியாத குழப்பம் ஆகியிருக்கும்.

பிரபஞ்சத்தில் சடப்பொருளின் பல்வேறு பண்புகள் கொண்ட வகைகள் (அணுக்கள், கூட்டணுக்கள், மின்காந்தப் புலம், ஈர்ப்புப் புலம், உயிர் இயற்கையின் பெருந்தொகையான நிகழ்ச்சிகள், பல்வேறு சமூக நிகழ்ச்சிகள் முதலியன) நிலவுகின்றன. சடப்பொருளின் இந்த எல்லா வகைகளும் இடையறாத இயக்கத்தில் இருக்கின்றன. குறித்த வகைச் சடப்பொருளின் பண்புச் சிறப்புக்களைப் பொறுத்துப் பண்புவகையில் வெவ்வேறு வடிவங்களில் இந்த இயக்கம் தோன்றுகிறது. சடப்பொருளது இயக்கத்தின் பின்வரும் பிரதான வடிவங்கள் பாகுபடுத்தப்படுகின்றன: இயந்திர இயக்கம், பௌதிக இயக்கம், இரசாயன இயக்கம், உயிரியல் இயக்கம், சமூக இயக்கம்.

இயந்திர இயக்கத்தில் இடவெளியில் வெவ்வேறு பொருள்களின் இடப்பெயர்வு அடங்கும்: அணுக்களின் பகுதிகளான மிக நுண்ணிய துகள்களின் இயக்கம், அணுக்கள், கூட்டணுக்

கள், இவற்றின் இடப் பெயர்வு, கோளங்கள், விண்மீன்கள் உட்படப் பெரும் பொருள்களின் இயக்கம்.

பௌதிக இயக்கம் வெப்ப, மின்காந்த நிகழ்முறைகள், அணுக்கருக்களுக்கு உள்ளும் அணுக்களுக்கு உள்ளும் ஏற்படும் உருமாற்றங்கள், ''தனிமத்'' துகள்களின் பரஸ்பரச் செயல்பாடு முதலியன அடங்கியது.

அங்கக இயற்கையிலும் அனங்கக இயற்கையிலும் நடைபெறும் அணுக்கள், கூட்டணுக்களின் இணைவுகளும் பிரிவுகளும் பொருள்களின் அமைவுகளும் சிதைவுகளும் இயக்கத்தின் இரசாயன வடிவத்தில் அடங்கும்.

இயக்கத்தின் உயிரியல் வடிவம் என்பது, உயிரின் பல்வகைத் தோற்றங்களும் உயிருள்ள அங்கஜீவிகள் தங்களுக்கிடையிலும் அனங்கக இயற்கையுடனும் கொள்ளும் பரஸ்பர உறவுகளும் ஆகும்.

இயக்கத்தின் சமுதாய வடிவம் சமூகத்தில் நிகழும் பல்வகைச் செயல்முறைகளை உள்ளடக்கியது. உற்பத்தித் துறையில் ஏற்படும் மாற்றங்கள், வர்க்க, நாட்டின உறவுகள், பொருளியல், உளப் பண்பாட்டின் வளர்ச்சி நிகழ்முறைகள், சமூகம், இயற்கை, இவற்றின் பரஸ்பரப் பாதிப்பு ஆகியவை இவற்றைச் சேர்ந்தவை.

இயக்கத்தின் பிரதான வடிவங்களை இங்கு தரப்பட்டுள்ள வரிசையில் கூர்ந்து நோக்கினல் அவற்றில் எந்த ஒன்றும் மற்ற எல்லாவற்றுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதும் அவற்றின் பரஸ்பரத் தொடர்பின் ஆதாரம் இயங்கிக்கொண்டிருக்கும் பொருளியல் வஸ்துக்களின் இடையே நிலவும் உறவே என்பதும் புலப்படும். தவிர, சடப்பொருளின் ஒவ்வொரு இயக்க வடிவமும் தனக்கு முந்தியதைக் காட்டிலும் அதிகச் சிக்கலானது, மேலானது. இயக்கத்தின் அதிகச் சிக்கலான வடிவம் அதிக எளிமையான வடிவங்களிலிருந்தே வளர்ச்சி அடைகிறது. எளிய வடிவங்களை அது அடங்கிய உருவத்தில் தன்னுள் கொண்டிருக்கிறது. முடிவாக, இயக்கத்தின் ஒவ்வொரு வடிவமும் பண்புவகையில் மற்றவற்றிலிருந்து வேறுபடுகிறது. இயக்கத்தின் மற்ற வடிவங்களுக்கு அது மாற்றப்பட முடியாது.

சடப்பொருளுடைய இயக்கத்தின் உயிரியல் வடிவத்தின் உதாரணத்தைக் கொண்டு மேற்கூறியவற்றை எல்லாம் பரிசிலிப்போம். இயக்கத்தின் இந்த வடிவம் பௌதிக, இரசாயன

நிகழ்முறைகளின் விதிமுறைக்கு ஒத்த வளர்ச்சியின் விளைவாகப் பூமியில் தோன்றியது. உயிரின் பொருளியல் வாகிகளான அல்புமன் கூட்டுக்கள் உண்டாவதற்குத் தேவையான நிலைமைகள் இந்த வளர்ச்சி காரணமாக உருவாயின. இயக்கத்தின் இயந்திர, பௌதிக, இரசாயன வடிவங்களுடன் ஒப்பிடுகையில் சடப் பொருளினது இயக்கத்தின் அதிக உயர்வான வடிவம் தோன்றியதை உயிரின் உற்பத்தி குறித்தது.

அதே சமயம் இயக்கத்தின் உயிரியல் வடிவம் தாழ்நிலை வடிவங்களை ஒதுக்கித் தள்ளிவிடாமல் தனக்குள் அடக்கிக் கொள்கிறது. உதாரணமாக, உயிருள்ள அங்கஜீவியில் பெருந் தொகையான பௌதிக, இரசாயன மாற்றங்கள் நிகழ்கின்றன. வெளிச் சூழலிலிருந்து இன்றியமையாத பொருள்களையும் ஆற்றலையும் பெறுவதற்கு இந்த மாற்றங்கள் அங்கஜீவிக்கு உதவி செய்கின்றன.

ஆனால் ஒன்று: இயக்கத்தின் உயிரியல் வடிவம் தாழ்நிலை வடிவங்களைத் தன்னுள் கொண்டிருக்கிறது எனினும் அது அவற்றுக்கு மாற்றப்படுவதில்லை, பண்புவகையில் அது அவற்றிலிருந்து வேறுபடுகிறது. இயக்கத்தின் உயிரியல் வடிவினுடைய இந்தப் பண்புச் சிறப்பு உயிருள்ள அங்கஜீவிகளுக்கு இயல்பான குணத்திலும், இரசாயன அமைப்பின் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளலிலும், சுற்றுச் சூழலுடன் சுயமாக முறைப்படுத்தப் படும் உயிர்ப்பொருள் இரசாயன மாற்றத்திலும் அதற்கேற்ப, இயற்கைக் காரணிகளின் பாதிப்பினால் மேலும் மேலும் செவ்வை அடையும் இயற்கைத் திறனிலும் அடங்கியுள்ளது.

தற்கால விஞ்ஞானம் இயற்கையின் மர்மங்களில் மேலும் மேலும் உட்புகுந்து, சடப்பொருளின் புதிய வகைகளையும் அதன் உறுப்பமைப்பின் வெவ்வேறு தரங்களையும் கண்டுபிடித்து, சடப் பொருளது இயக்கத்தின் வடிவங்களையும் அவற்றின் பரஸ்பரத் தொடர்பையும் பண்பு வேறுபாட்டையும் பற்றிய நமது அறிவை விரிவுபடுத்துகிறது.

சடப்பொருளது இயக்கத்தின் வடிவங்களையும் அவற்றின் பரஸ்பரத் தொடர்பையும் பரஸ்பர மாற்றத்தையும் இயக்க இயல்வாத நோக்கில் புரிந்துகொள்வது பிரபஞ்சக் கண்ணோட்டத்திற்கும் ஆராய்ச்சி முறை இயலுக்கும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. விஞ்ஞான விரோதக் கருத்துக்களை எதிர்த்து நடக்கும் போராட்டத்தில் இது கூரிய ஆயுதமாகப் பயன்படு

கிறது. இந்தக் கருத்துக்கள் சடப்பொருளது இயக்கத்தின் உயர்நிலை வடிவங்களைத் தாழ்நிலை வடிவங்களுக்குக் கொண்டு வருகின்றன, அல்லது இயக்கத்தின் தாழ்நிலை வடிவங்களுக் குரிய விதிகளை உயர்நிலை வடிவங்களுக்குப் பொருந்தச் செய் கின்றன. உதாரணமாக, உயிரியல் மாற்றங்களை பௌதிக— இரசாயன நிகழ்முறைகளின் வெறும் மொத்தம் என அவை கற்பனை செய்கின்றன. உயிர்ப்பொருளை இயக்கும் அடிப்படை விதிகள் பௌதிகம், இரசாயனம், இவற்றின் விதிகளே என்று இவற்றால் வலிந்துரைக்கப்படுகிறது. உயிரியற்கையின் பண்புச் சிறப்பு, அனங்கக இயற்கையிலிருந்து அதன் அடிப் படை வேறுபாடு இந்தக் கூற்றினால் பூசி மெழுகப்படுகிறது.

சமுதாய வாழ்வின் சிக்கலான நிகழ்ச்சிகளைப் பகுத்தாராய் கையில் பூர்ஷ்வா விஞ்ஞானிகள் பௌதிக, உயிரியல் கருது கோள்களையும் விதிகளையும் அடிக்கடி இயந்திரரீதியில் சமூகத் துக்குப் பொருத்துகிறார்கள். இந்த விஞ்ஞானிகளில் ஒரு சா ரார் இயற்கைத் தேர்வுபற்றிய உயிரியல் விதியை மேற்கோள் காட்டி மானிட இனங்களைத் தாழ்ந்தவை, உயர்ந்தவை எனப் பாகுபடுத்துகிறார்கள். மற்றொரு சாராரோ, பௌதிகமும் உயிரியலும் சமூக உறவுகளின் துறைக்குப் பொருந்துமாறு செய் யப்பட்டால்தான் சமூகம் பற்றிய போதனை துல்லியமான விஞ் ஞானம் ஆக முடியும் என்று அழுத்திக் கூறுகிறார்கள். கூடவே, சமுதாய நிகழ்ச்சிகள் பற்றிய விதிகளைப் பௌதிக, உயிரியல் விதிகளாக அவர்கள் மாற்றுகிறார்கள். ''சமூக ஆற்றலியல்,'' ''சமூகவியல் அணுக்கள்'' முதலியவை குறித்துச் சர்சசை செய்கிறார்கள்.

இயற்கை விஞ்ஞானத்தின் கருதுகோள்களுக்கும் விதிகளுக் கும் சமுதாய விதிமுறைகளைப் பொருந்தச் செய்வதன் வாயிலாக அவற்றை மறுப்பது தற்கால முதலாளித்துவச் சமூகத்தில் நில வும் வர்க்க முரண்பாடுகளை மூடி மறைப்பதையே நோக்க மாகக் கொண்டிருக்கிறது. ''உண்மையில் சமூக நிகழ்ச்சிகளின் எந்த ஆராய்ச்சியையும் சமூக விஞ்ஞான ஆராய்ச்சிமுறையின் எவ்வித விளக்கத்தையும் இந்தக் கருதுகோள்களின் உதவியால் தர முடியாது. நெருக்கடிகள், புரட்சிகள், வர்க்கங்களின் போராட்டங்கள் முதலியன போன்ற நிகழ்ச்சிகள் மீது ''ஆற்றலியல் வகைப்பட்ட'', ''உயிரியல்-சமூகவியல் வகைப் பட்ட'' என்ற சீட்டுக்களை ஒட்டுவதைக் காட்டிலும் சுலபமா

னது வேறு எதுவும் இல்லை. ஆனால் இந்த வேலையைக் காட்டிலும் பயனற்ற, வறட்டுப் பண்டிதத்தன்மை கொண்ட, உயிரற்ற வேலை வேறு எதுவும் இல்லை''[1] இவ்வாறு எழுதினர் வி.இ.லெனின். இயற்கை விஞ்ஞானங்கள், சமூக விஞ்ஞானங்கள் ஆகியவற்றின் கருதுகோள்களையும் விதிகளையும் ஒன்றே என இயந்திர ரீதியாக நிரூபிக்க முயல்வது சமூகம் பற்றிய தற்காலக் கருத்துமுதல்வாதப் போதனைகளின் நெருக்கடிக்குத் துலக்கமான சான்று ஆகும்.

இயக்கத்தின் இயல்பு பற்றிய தத்துவ முடிவுகள் இடவெளி, காலம் இவற்றின் தன்மையைப் புரிந்துகொள்வதற்குக் கோட்பாட்டு ரீதியான முக்கியத்துவம் உள்ளவை. இயக்கத்தைப் போன்றே இடவெளியும் காலமும் சடப்பொருளது இருத்தலின் வடிவங்களாக விளங்குகின்றன.

இடவெளியைப் பற்றிக் கூறுகையில் ஒரு வஸ்து குறிப்பிட்ட இடத்தை வியாபித்துள்ளது, நீளம், அகலம், உயரம் என்ற மூன்று பரிமாணங்களைக் கொண்டிருக்கிறது என்பதை நாம் வழக்கமாகக் கருத்தில் கொள்கிறோம். காலத்தை நிகழ்ச்சிகளின் தொடக்கம் அல்லது நீடிப்பு என நாம் விவரிக்கிறோம். தத்துவம் இத்துடன் நின்றுவிடுவதில்லை. இடவெளி, காலம் இவற்றின் புறநிலைத் தன்மையை, இயங்கும் சடப்பொருளுடன் அவற்றிற்கு உள்ள தொடர்பை அது ஆராய்கிறது.

இடவெளி என்னும் கருதுகோள் பொருளியல் வஸ்துக்களின் உடன் நிலவுகையையும் அவற்றின் பரஸ்பர நிலையையும் வெளியிடுகிறது. எல்லாப் பொருளியல் வஸ்துக்களும் நிகழ்ச்சிகளும், இடவெளிப்பரப்பும் வடிவமும் அளவுகளும் கொண்டவை. தமக்கு இடையே உள் இணைவு கொண்ட பொருளியல் நிகழ்முறைகளின் பரஸ்பரப் பாதிப்பு என்ற வகையில் பரப்பு இயங்கும் சடப்பொருளின் பண்புகளால் நிர்ணயிக்கப்படுகிறது.

காலம் என்ற கருதுகோள் பொருளியல் நிகழ்முறைகளின் வரிசைகளது தொடர்பையும் அவற்றின் நீடிப்பையும் வெளியிடுகிறது. சடப்பொருள் எந்த வகையிலும் நிலையிலும் காலப் பண்பைப் பெற்றிருக்கிறது. ஒரு பொருளியல் வஸ்துவின் மாற்றங்கள் மற்றப் பொருளியல் வஸ்துக்களில் பொருத்தமான

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 348.

மாற்றங்களை ஏற்படுத்துவதற்குக் குறித்த காலம் இன்றியமைமை யாதது. சடப்பொருளின் திரும்ப முடியாத பண்பு மாற்றங்களிலும் வளர்ச்சியிலும் வெளிப்படும் காலத்திற்குச் செல்திசை உண்டு. அது கடந்ததிலிருந்து வருவதை நோக்கிப் பெருகுகிறது. திரும்பமுடியாமை என்னும் பண்பு கொண்டது அது. கடந்ததை மாற்ற முடியாது. கடந்ததற்குத் திரும்ப முடியாது.

இடவெளியும் காலமும் சடப்பொருளது இருத்தலின் பொது வடிவங்கள். சடப்பொருளின் எல்லா நிலைகளுக்கும் அவை இயல்பானவை. எந்தப் பொருளியல் இயக்கமும் எங்காயினும், ஏதேனும் இடவெளியில், எப்போதாயினும், ஏதேனும் காலத்தில்தான் நடைபெறுகிறது.

இடவெளியும் காலமும் புறநிலையானவை. மனிதர்களின் உணர்வின் சார்பு இன்றியே அவை நிலவுகின்றன. பொருளியல் வஸ்துக்கள், நிகழ்ச்சிகள் ஆகியவற்றின் புறநிலைப் பண்புகளதும் உறவுகளதும் மொத்தத்தை அவை வெளியிடுகின்றன. நெடுந்தொலையிலுள்ள நட்சத்திர உலகுகளிலிருந்து வரும் குறியொலிகளை மனிதன் பெறுகிறான். பல நூறுகோடி ஆண்டுகளை வியாபித்துள்ள மாறுதல்களை ஆராய்கிறான். வினாடியின் பத்து லட்சத்தில் ஒரு பங்குக் காலமே நிலவும் ''தனிமத்'' துகள்களைப் பரிசீலிக்கிறான். எங்குமே இடவெளியும் காலமும் இயங்கும் சடப்பொருளின் புறநிலை வடிவங்களாக எதிர்ப்படுகின்றன. பொருளியல் நிகழ்முறைகளின் சார்பு இன்றி இடவெளியும் காலமும் நிலவ முடியாது. காலத்திற்கும் இடவெளிக்கும் புறம்பாக இருத்தல் நிலவுகிறது என்ற கருத்துமுதல்வாத, மத வரையறுப்பை பி.எங்கெல்ஸ் விமர்சித்தார். காலத்துக்குப் புறம்பான இருத்தல் இடவெளிக்குப் புறம்பான இருத்தல் போன்றே மிகப்பெரிய வெற்றுரை ஆகும் என அவர் கூறினார். புறநிலைப் பிரபஞ்சத்தில் இயங்கும் சடப்பொருள் தவிர வேறு எதுவும் இல்லை. சடப்பொருளோ, இடவெளியிலும் காலத்திலும் இன்றி வேறு விதமாக இயங்க முடியாது.

இடவெளியும் காலமும் புறநிலையானவை என்பதை மார்க்ஸியத்துக்கு முற்பட்ட பொருள்முதல்வாதிகள் ஒப்புக்கொண்டார்கள். எனினும் அவற்றைப் புரிந்துகொள்வதில் அவர்கள் மாறாநிலைவாதிகளாகவே இருந்துவிட்டார்கள். இடவெளியும் காலமும் இயங்கும் சடப்பொருளின் சார்பு அற்ற, சுதந்திர

மான பௌதிக எதார்த்தங்கள் என்று மாறுநிலைவாதப் போக்கில் சிந்திக்கும் இயற்கை விஞ்ஞானிகள் போலவே அவர்களும் எண்ணினர்கள். இடவெளி என்பது பெட்டி போன்று பொருள்களுக்கான பெரிய வைப்பிடம் என்றும், காலம் என்பது பொருளியல் மாறுதல்களைச் சாராத நீடிப்பு என்றும் அவர்களால் புரிந்து கொள்ளப்பட்டன. ஒப்பு நோக்கில் குறைந்த வேகத்துடன் (உதாரணமாக, மோட்டார், விமானம், பீரங்கிக் குண்டு, விண்வெளி விமானம் முதலியவற்றின் இயக்கம்) இயங்கும் பெரும் பொருள்களின் தன்மைச் சித்திரிப்பை இடவெளியின் தொடர்பிலும் காலத்தின் தொடர்பிலும் ஓரளவு துல்லியமாகத் தருவது இம்மாதிரி எண்ணத்தின் மூலம் சாத்தியம் ஆகிறது. ஆனல் ஒளியின் வேகத்துடன் ஒப்பிடக்கூடிய விரைவுகளை (''தனிமத்'' துகள்களின் இயக்கம்) விஞ்ஞானம் எதிர்ப்பட்ட போதோ, இத்தகைய நோக்குக்களும், அவற்றிலிருந்து பெறப்படும் இடவெளி, காலம் இவற்றின் பண்புகள் மாருதவை என்ற எண்ணங்களும் துலக்கமாகக் குறையுள்ளவை, சரியல்லாதவை கூட என்பது தெரியவந்தது.

இடவெளியினதும் காலத்தினதும் பண்புகள் இயங்கும் சடப்பொருளைச் சார்ந்தவை என்ற இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதத்தின் வரையறுப்பை இந்நூற்ருண்டில் ஏற்பட்டுள்ள விஞ்ஞான வளர்ச்சி உறுதிப்படுத்துகிறது. பொருள்களின் இடவெளிப் பண்புகளும் காலப் பண்புகளும் நெருங்கிய பரஸ்பரத் தொடர்புள்ளவை என்பதைத் தற்கால விஞ்ஞான விவரங்கள் காட்டுகின்றன.

பொருளியல் வஸ்துக்களின் இடவெளிப் பண்புகளுக்கும் காலப் பண்புகளுக்கும் உள்ள பரஸ்பரத் தொடர்பு இயக்கத்தின் கணிசமான வேகங்களில் துலக்கமாக வெளிப்படுகிறது. உதாரணமாக ''தனிமத்'' துகள்களான மெஸோன்கள் இயக்கமற்ற நிலையில் வினடியின் பத்து லட்சத்தில் ஒரு பங்கு நேரமே நிலவுகின்றன. ஆனல் பெருத்த வேகத்தில் இயங்குமாறு செய்யப்பட்டால் அவை நிலவும் நேரம் நூறு மடங்கு அதிகரிக்கிறது.

பிரபஞ்சம் கடவுளால் படைக்கப்பட்டது என்றும் இடவெளியிலும் காலத்திலும் அது வரம்புக்கு உட்பட்டது என்றும் கருத்துமுதல்வாதிகளும் மதவாதிகளும் பரப்பும் புனைந்துரைகளைத் தற்கால விஞ்ஞானமும் நடைமுறையும் நிராகரிக்

கின்றன. இடவெளி வரம்பற்றது, காலம் முடிவற்றது என அவை நிரூபிக்கின்றன. இடவெளியின் வரம்பின்மை, அதில் எந்தத் திசையில், எவ்வளவு தூரந்தான் நாம் சென்றாலும் அதன் எல்லையை அடைய நம்மால் முடியாது என்ற அர்த்தத்தில் புரிந்துகொள்ளப்படுகிறது. காலம் முடிவற்றது என்பதற்கு, ஏதேனும் ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கொண்டால், அது நிகழ்வதற்கு முன்புவரை எல்லையற்ற அளவு நேரம் கழிந்துவிட்டது, அதேபோல, அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு காலம் ஒருபோதும் முடிவுறாது என்று அர்த்தம். பிரபஞ்சம் இடவெளியிலும் காலத்திலும் இயங்கும் சடப்பொருளே ஆகும். எனவே இடவெளியும் காலமும் சடப்பொருள் போலவே நித்தியமானவை, முடிவற்றவை.

## § 4. உணர்வு, அதன் தோற்றமும் தன்மையும். எதார்த்தத்தின் பிரதிபலிப்பினது வடிவம் என்ற முறையில் உணர்வு

உணர்வு என்பது என்ன என்ற கேள்விக்கு விடை காண்பதற்கு முன்பு தொடர்ச்சியான அநேகப் பிரச்சினைகள் தீர்க்கப்படுவது அவசியம் ஆகிறது. இந்த விஷயத்தை ஆராய்கையில் உணர்வு எவ்வாறு தோன்றியது, அதன் இயல்பு என்ன, உணர்வு சடப்பொருளுடன் எவ்வாறு இணைந்திருக்கிறது, ஏன் சடப்பொருள் முதன்மையானது, உணர்வு இரண்டாவது, அதனடியாகப் பிறந்தது என்பவற்றை எல்லாம் தெளிவுபடுத்துவது இன்றியமையாதது ஆகும்.

நமது உணர்வு எத்தகையது, எண்ணங்கள் எங்கிருந்து வருகின்றன, நமது ஆன்மீக உலகம் எத்தன்மையது என்பவற்றைப் புரிந்துகொள்ள மனிதன் நெடுங்காலமாக முயன்று வந்தான். ''ஆன்மா'' சரீரத்திலிருந்து தனியாக நிலவ வல்லது என்றும், உணர்வு ''ஆன்மாவின்'' பண்பு என்றும் பண்டைக் கால மக்கள் போதிய அறிவு இல்லாமையால் முடிவு செய்தார்கள். கனவு அல்லது நோய் போன்ற நிகழ்ச்சிகளை விளக்க முயல்கையில் இம்மாதிரி எண்ணங்கள் அவர்களிடையே எழுந்தன. உறங்கும் போது ''ஆன்மா'' உடலை விட்டு அகன்றுவிடுவதால்தான் கனவுகள் உண்டாகின்றன என்றும், மனிதனுக்குள் ''கெட்ட ஆன்மா'' குடிபுகுவதன் விளைவாகவே நோய்கள்

வருகின்றன என்றும் பண்டைக்கால மக்கள் நினைத்தார்கள்.

''நல்ல ஆன்மாக்கள்'', ''கெட்ட ஆன்மாக்கள்'', பிசாசு கள், தெய்வங்கள் ஆகியவை கொண்ட உலகம் பல நாட்டு மக்களின் பண்டைக் கர்ணபரம்பரைக் கதைகளிலும் புராணங் களிலும் வருணிக்கப்பட்டிருக்கிறது. கடவுள் நிலவுவதை, அல் லது உடலின் சார்பு அற்ற ''ஆன்மா'' நிலவுவதையும் அதன் நித்தியத்துவத்தையும் தற்காலத்தில்கூட நிறைய மக்கள் நம்பு கிருர்கள். உணர்வு என்பது ஏதோ தனிப்பட்ட பொருளியலற்ற அடிப்படையிலிருந்து, ''ஆன்மாவிலிருந்து'' தோன்றுகிறது என்ற திரிபான கருத்து மக்கள்மீது கருத்துமுதல்வாதத் தத்து வத்தாலும் மதத்தாலும் சுமத்தப்படுகிறது.

உணர்வு மனித மூளையின் இயல்பாக விளங்குகிறது என்பதை யும் மூளையிலிருந்து தனியாக அது நிலவ முடியாது என்பதை யும் கருத்துமுதல்வாதிகள் இன்றளவும் மறுக்கிருர்கள். கருத்து முதல்வாத மூடநம்பிக்கைக்கு ஆளாகியிருக்கும் தற்கால பூர்ஷ்வா விஞ்ஞானிகள் சிலர், ஏதோ ஒரு வெளிச் சக்தியினது தலையீட்டின் விளைவாகவே மனிதன் தோன்றியிருக்க முடியும் என்று வலிந்துரைக்கிருர்கள்.

உணர்வின் இயற்கைக்கு மேற்பட்ட தன்மை பற்றிய கற்பனை களைப் பொருள்முதல்வாதிகள் எப்பொழுதும் நிராகரித்து வந்திருக்கிருர்கள். சிந்திப்பது உருவமற்ற ஏதோ அறிவு அல்ல, மனிதனே என்றும் சுற்றியுள்ள பிரபஞ்சத்தின் வஸ்துக்களும் நிகழ்ச்சிகளும் அவனுடைய உணர் உறுப்புக்கள்மீது பாதிப்பு விளைக்கின்றன என்றும் அவர்கள் விஞ்ஞான விவரங்களின் ஆதாரத்துடன் நிரூபித்திருக்கிருர்கள்.

அதே சமயம் சில பொருள்முதல்வாதிகளால் சடப்பொரு ளுக்கும் உணர்வுக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தத்தைச் சரியா கப் புரிந்துகொள்ள முடியவில்லை. விஞ்ஞானக்கேடான பொருள் முதல்வாதிகள் எனப்பட்ட இவர்கள் உணர்வு சடப்பொரு ளின் ஒரு வகை என்று அனுமானித்தார்கள். பித்தநீர் கல்லீர லால் சுரக்கப்படுவது போலவே சிந்தனை மூளையால் சுரக்கப் படுகிறது என அவர்கள் கருதினுர்கள். மூளையின் வேலையை அவர்கள் மிக மிக எளிமையாகப் புரிந்துகொண்டார்கள். மூளை யின் விளைபொருள் என்ற முறையில் சிந்தனை தனி வகையான வஸ்து என்று வலிந்துரைத்தார்கள். மூளையில் நடக்கும் உட லியல் செயல்முறைகளுடன் உணர்வுக்கு உள்ள தொடர்பைச்

சரியாகக் கண்டறிந்தார்கள் எனினும், உளவியலானதை உடலியலானதுடன், சிந்தனையை வஸ்துவுடன் ஒன்ருக எண்ணும் மோசமான தவற்றுக்கு அவர்கள் இடம் கொடுத்துவிட்டார்கள். உளச் செயலை ஜீவரசாயன அல்லது பிற செயல்முறைகளுடன் இயந்திரரீதியில் ஒன்ருக எண்ணும் இம்மாதிரி முயற்சிகளை பூர்ஷ்வா விஞ்ஞானிகளிடம் இப்போதும் காணலாம்.

இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதம் உணர்வின் தன்மையை ஆராய்கையில் கருத்துமுதல்வாதத்தையும் மதத்தையும் எதிர்ப்பதுபோலவே விஞ்ஞானக்கேடான பொருள்முதல்வாதத்தையும் எதிர்க்கிறது. உயிரியற்கையினது வளர்ச்சியின் ஒரு குறித்த கட்டத்தில் உணர்வு தோன்றியது என்ற கருத்தை மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் அடிப்படையாகக் கொள்கிறது. உயர் உறுப்பமைப்பு கொண்ட சடப்பொருளின் பண்பாக விளங்குகிறது உணர்வு. எனவே சடப்பொருள் இல்லாமல், பொருளியல் மாறுதல்களைச் சாராமல் அதனுல் நிலவ முடியாது. அதே சமயத்தில் உணர்வையும் சடப்பொருளையும் ஒன்ருக எண்ணவோ, அதைப் பொருளியலானது என்று கருதவோ கூடாது. ஏனெனில் சடப்பொருளுக்கும் உணர்வுக்கும் இடையே உள்ள, விஞ்ஞானத்தால் நிரூபிக்கப்பட்டிருக்கும் பண்பு வேறுபாட்டை இம்மாதிரி ஒன்ருக எண்ணுவது புறக்கணிக்கிறது.

## உணர்வின் தோற்றம்

உணர்வு என்பது பொருளியல் பிரபஞ்சத்தைப் பிரதிபலிப்பதற்குரிய மனித மூளையின் திறனே ஆகும். இந்தத் திறன் சடப்பொருளுடைய வரலாற்று வளர்ச்சிப் போக்கில் தோன்றியது. வெளிப் பாதிப்பினுல் உயிரிலாப் பொருள்களில் ஏற்படும் பிரதிச்செயலும் சுற்றியுள்ள எதார்த்தத்தின் ஒரு வகைப் பிரதிபலிப்பே. ஆயினும் உணர்வு பண்புவகையில் அதிலிருந்து வேருனது. எனவே எல்லா விதப் பிரதிபலிப்பையும் உணர்வு என்று கூற முடியாது. பிரதிபலிப்பு என்பது சடப்பொருள் அனைத்துக்கும் இயல்பான புறநிலைப் பண்பு. பொருளியல் வஸ்துக்களின் பரஸ்பரப் பாதிப்பில் அது வெளிப்படுகிறது. பிற வஸ்துக்களின் பாதிப்பைப் பதித்துக்கொள்ள, நிலைப்படுத்திக்

கொள்ள ஒரு வஸ்துவுக்கு உள்ள திறனே இது. தவிர, பிரதிபலிப்பின் இயல்பு வஸ்துக்களின் தனித்தன்மைகளேயும் அவற்றின் பரஸ்பரப் பாதிப்புக்குரிய முறையையும் பொறுத்தது. ஆகவே, வெளிப் பிரபஞ்சத்தின் நிகழ்ச்சிகளேப் பிரதிபலிக்க மூளேக்கு உள்ள திறன் என்ற வகையில் உணர்வைப் பற்றிப் பேசுவதற்கு முன்னுல் இயற்கையில் உள்ள பிரதிபலிப்பின் வெவ்வேறு வகைகளேயும், மனித உணர்வின் முன்வரலாற்றையும், விலங்குகளின் மனப்பான்மைக்குரிய சில தனித்தன்மைகளேயும் ஆராய்வோம்.

உயிரற்ற இயற்கையில் இயந்திரவியல், பௌதிகம், இரசாயனம் ஆகியவற்றின் விதிகளுக்கு இணங்கப் பிரதிபலிப்பு நிகழ்கிறது. உயிரற்ற பொருள்கள் வெளிக் காரணிகளின் பாதிப்பினுல் தங்கள் கட்டமைப்பை மாற்றிக்கொள்கின்றன, சிதைகின்றன, அல்லது புது வடிவங்களில் உருமாறுகின்றன. எடுத்துக்காட்டாக, வெப்பநிலேயின் ஏற்றத்தாழ்வுகள், நீர், காற்று, இவற்றின் பாதிப்பினுல் கல் சிதைந்து மணலாகவும் புழுதியாகவும் மாறுகிறது. உலோகம் குறித்த நிலேமைகளில் ஆக்சிகரணத்துக்கு உள்ளாகிறது.

உயிருள்ள அங்கஜீவிகளில் பிரதிபலிப்பு பண்புவகையில் வேறு வடிவங்களில் நிகழ்கிறது. இவற்றில் வெளி, உள் காரணிகளின் பாதிப்பினுல் தனிவகைப்பட்ட உயிர்ப்பொருள் இரசாயன மாற்றம் ஏற்படுகிறது. அங்கஜீவிக்கும் சூழ்நிலேக்கும் இடையே நடக்கும் உயிரியல் பரஸ்பரப் பாதிப்புக்களின் அடிப்படையில் துல்லியமான பொருத்தம் உள்ள பெருந்தொகையான பிரதிச்செயல்கள் உள்ளன. ஊட்டம், தன்னேப் புதுப்பித்துக்கொள்ளல், இனப்பெருக்கம், வளர்ச்சி ஆகிய உயிர் நிகழ்முறைகள் இவற்ருலேயே முறையாக இயங்குகின்றன. மாறுந்தன்மை, பாரம்பரியம், இயற்கைத் தேர்வு—இவையே சூழ்நிலேக்கு ஏற்பப் பிராணி தகவமைப்பு பெறுவதற்கான அடிப்படைக் காரணிகள் ஆகும்.

உயிருள்ள அங்கஜீவிகளில் பிரதிபலிப்பின் வடிவங்கள் வெவ்வேருனவை. முதலாவதாக, வெளிச்சம், ஈரம், இரசாயனப் பொருள்கள் முதலியவற்றுக்குத் தேர்வுமுறையில் பிரதிச்செயல் புரியும் திறனே ஒவ்வோர் அங்கஜீவியும் பெற்றிருக்கிறது. உயிர் இயற்கையின் பண்பான பிரதிபலிப்பின் இந்த வடிவம் தூண்டலுக்குத் துலங்கல் எனப்படும். தூண்டலுக்குத் துலங்

கல் உடலியல் நிகழ்ச்சி ஆகும். மிகமிக எளியவற்றிலிருந்து தொடங்கி எல்லா உயிருள்ள அங்கஜீவிகளுக்கும் இயல்பானது இது.

தூண்டலுக்குத் துலங்கலின் அடிப்படையிலும் அதன் விளைவாகவும் தோன்றுகிறது பிரதிபலிப்பின் பண்பளவில் புதிய, உளவியல் வடிவம். இதுதான் புலனுணர்ச்சி. மிக மிக எளிய அங்கஜீவிகளிடம்கூடப் பிரதிபலிப்பினது இந்த வடிவத்தின் தொடக்கநிலை காணப்படுகிறது. அங்கஜீவிகளின் கட்டமைப்பு அதிகச் சிக்கல் அடைதல், குறிப்பிட்ட தூண்டல்களை உணர்வதற்குத் தனித்தேர்ச்சி பெற்றுள்ள உறுப்புக்கள் உண்டாதல், நரம்பு மண்டலம் தோன்றி வளர்தல் ஆகியவை காரணமாகப் புலனுணர்ச்சித் திறன் மேற்கொண்டு வளர்ச்சி அடைந்தது. மைய நரம்பு மண்டலம் படைத்துள்ள உயர்நிலை விலங்குகளில் புலனுணர்ச்சிகள் மூளையினுடைய செயல்பாட்டின் விளைவாக ஏற்படுகின்றன.

உயிருள்ள அங்கஜீவிகள் வாழ்க்கை நிலைமைகளுக்கு ஏற்பத் தங்களைத் தீவிரமாக இசைவித்துக் கொண்டதன் விளைவாக உண்டானதே புலனுணர்ச்சித் திறன் ஆகும். பரிணும நிகழ்முறையின்போது விலங்குகளுக்குத் தனித்தனி உறுப்புக்கள் உருவாயின. இவற்றின் உதவியால் விலங்குகள் சுற்றியுள்ள உலகில் திசையறிகின்றன, பொருள்களின் ஜீவாதாரமான குணங்களையும் பண்புகளையும் பற்றிய தகவல்களைப் பெறுகின்றன. புலனுணர்ச்சிகள் இந்தப் பங்கை ஆற்றுவதற்குக் காரணமாக இருப்பது வெளிப் பிரபஞ்சத்தின் நிகழ்ச்சிகளது மாதிரிகளாக, மாடலாக அவை விளங்குவதே ஆகும். ஆனுல் இவை பௌதிக மாதிரிகள் அல்ல, பொருளியலானவை அல்ல. புலனுணர்ச்சிகள் பிரதிபலிப்பின் கருத்து வடிவம் ஆகும்.

எனவே, புலனுணர்ச்சிகளுக்கும் வெளி வஸ்துவுக்கும் பொருளுக்கும் உள்ள உறவு கருத்தியலானதற்கும் பொருளியலானதற்கும் உள்ள உறவே ஆகும். இங்கே முதன்மையாக விளங்குவது பிரதிபலிக்கப்படுவதான பொருளியல் வஸ்து. அதன் கருத்து வடிவம், புலனுணர்ச்சி, அதாவது மாதிரி, இரண்டாவதே. பொருள் இல்லையானுல் அதன் மாதிரியும் இருக்காது.

முடிவாகப் பார்க்கும்போது, மூளையில் நிகழும் உளவியல் செயல்கள் பொருளியலான தூண்டுவிப்பியின் பாதிப்பினுலேயே நிச்சயிக்கப்படுகின்றன. இந்தத் தூண்டுவிப்பிகள் பகு உறுப்புக்

கள் எனப்படும் உணர் உறுப்புக்களைப் பாதிக்கின்றன. பார்வை, ஒலியுணர்வு, சுவை முதலியவற்றுக்கு உரிய பகு உறுப்புக்கள் உள்ளன. ஒவ்வொன்றுக்கும் அதற்குரிய கிரகிக்கும் கருவியும் (வாங்கி), கிளர்ச்சியை மூளைப் புறணிக்குக் கொண்டு செல்லும் கடத்திகளும் உள்ளன. எடுத்துக்காட்டாக, கண் விழித்திரையின் வாயிலாக ஒளித் தூண்டல்களை (மின்காந்த அதிர்வுகளைக்) கிரகித்துக்கொண்டு அவற்றை மின் உந்தல்களாக, அதாவது உயிர்மின்னேட்டங்களாக மாற்றுகிறது. பின்னர் இவை மூளைக்குக் கொண்டு செல்லப்படுகின்றன. பகு உறுப்புக்களிலிருந்து பெறப்படும் உந்தல்களை மூளை கிரகித்துக்கொண்டு அவற்றை மாற்றி விலங்கின் பல்வேறு உறுப்புக்களுக்கு அனுப்புகிறது. இந்த உறுப்புக்களின் செயல் வெளித் தூண்டலுக்கு அங்கஜீவியின் துலங்கலாக வெளிப்படுகிறது. அங்கஜீவியின் இந்தத் துலங்கல் **மறிவினை** எனப்படும்.

வளர்ச்சியுற்ற நரம்பு மண்டலம் கொண்ட உயர்நிலைப் பிராணிகள் மறிவினைகள் என்னும் சிக்கலான இயந்திர அமைப்பைப் பெற்றுள்ளன. மறிவினைகள் இயல்நிலை மறிவினைகள், ஆக்கநிலை மறிவினைகள் என இரு வகைப்படும். ஒரு குறித்த இனத்தின் பரிணாமப் போக்கில் இயல்நிலை மறிவினைகளை விலங்குகள் பெறுகின்றன. சூழ்நிலையுடன் அங்கஜீவியின் உடன் பிறந்த,பாரம்பரியத்தால் உறுதிப்படுத்தப்பட்ட தொடர்புகளே இவை. யாவற்றிலும் சிக்கலான இயல்நிலை மறிவினைகள் இயல்பூக்கங்கள் எனப்படும். ஆக்கநிலை மறிவினைகள் அங்கஜீவியினது தனி வாழ்வின் போக்கில் உண்டாகின்றன. இடையறாது மாறிக் கொண்டிருக்கும் சூழ்நிலைமைகளை இவை பிரதிபலிக்கின்றன. மாறும் சூழ்நிலைக்கும் வெவ்வேறு வாழ்க்கை நிலைமைகளுக்கும் ஏற்ப விலங்கு தகவமைப்பு பெறுவதற்கு ஆக்கநிலை மறிவினைகள் இருப்பது உதவுகிறது. மறிவினைச் செயல் காரணமாக விலங்குகள் தங்களுக்கு உயிரியல் முக்கியத்துவம் உள்ள தூண்டல்களுக்குத் துலங்குவது சாத்தியம் ஆகிறது.

பெரும்பாலும் பெருமூளை அரைக் கோளங்களில் ஏற்படும் தூண்டல்கள் மூலமாகவும் அவற்றின் தடங்களின் மூலமாகவுமே விலங்குகளுக்கு எதார்த்தம் சங்கேதங்களால் தெரிவிக்கப்படுகிறது என்றும் இந்தத் தூண்டல்களும் அவற்றின் தடங்களும் பார்வை, ஒலியுணர்வு, இவற்றின் வாங்கிகளுடையவும் பிற வாங்கிகளுடையவும் தனிப்பட்ட உயிரணுக்களுக்கு நேரடியாக

வருகின்றன என்றும் இ. பெ. பாவ்லவ் குறிப்பிட்டார். இந்தத் தொகுப்பு முதல் சங்கேத மண்டலம் எனப்படும். இது விலங்குகளுக்கும் மனிதனுக்கும் பொதுவானது. நம்மைச் சூழ்ந்துள்ள வெளிச் சூழ்நிலை பற்றி, சொல்லும் அதன் அர்த்தமும் நீங்கலாக இயற்கை, சமூகச் சூழ்நிலைபற்றிப் புலனுணர்ச்சிகள், எண்ணங்களின் உருவில் நாம் நமக்குள் பெற்றிருப்பதுதான் மனிதனது முதல் சங்கேத மண்டலம் என்று இ. பெ. பாவ்லவ் எழுதினர்.

விலங்குகளுடையவும் மனிதனுடையவும் புலனுணர்ச்சிகளும் புலனறிவும் தமக்குள் எத்தனையோ பொதுத்தன்மைகள் கொண்டிருந்தபோதிலும் பண்புவகையில் ஒன்றுக்கொன்று வேறுபடுகின்றன. புலனுணர்ச்சிகளின் அடிப்படையில் விலங்குகள் பொருள்களையும் நிலைமைகளையும் பற்றியும் அவற்றின் பரஸ்பர உறவுகளைப் பற்றியுங்கூட முழுமையான எண்ணங்கள் பெறக் கூடும். ஆனல் விலங்குகள் தங்கள் உயிரியல் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொருள்களின் பண்புகளையே முதன்மையாகப் புலன்களால் அறிந்து மதிப்பிடுகின்றன. எந்தப் புலனுணர்ச்சிகள், எண்ணங்களின் உதவியால் விலங்குகள் சுற்றுச் சார்பில் திசையறிகின்றனவோ அவை விலங்குகளால் புரிந்து கொள்ளப்படுவதில்லை. மாருக, மனிதனது புலனுணர்ச்சிகள் அறிவார்ந்தவை. அவை அவனுடைய உணர்வின் மூல வடிவமாக விளங்குகின்றன.

## மனித உணர்வின் தன்மை. அதன் ஆக்கத் தொண்டு

நிலவுலகில் உயிர்களின் பரிணமம் அடைந்துள்ள மிக உயர்ந்த நிலையாக விளங்குபவன் சிந்திக்கும் மனிதன். சமூகப் பண்புகளின் வாகியாக இருப்பதனல் மனிதன் பிரபஞ்சத்தில் சிறப்பான இடம் பெற்றுள்ளான். சமூகக் காரணிகளின் பாதிப்பு மனிதனுடைய பரிணமத்தைக் கணிசமாகத் துரிதப்படுத்தியது, அவனது உணர்வின் வளர்ச்சியில் மிகப் பெரும் பங்கு ஆற்றியது. மனிதன் சமூகப் பிராணி. அவனது உணர்வும் சமுதாய-வரலாற்று நிகழ்ச்சியாக விளங்குகிறது. மனித உணர்வின் இந்தச் சிறப்புத் தன்மையை முதன்முதலாக ஆழ்ந்து ஆராய்ந்தவர்கள் மார்க்ஸியத்தின் ஸ்தாபகர்களே ஆவர். உணர்வு தொடக்கத்தி

லிருந்தே சமூக விளைபொருளாக உள்ளது, மனிதர்கள் நிலவும் வரை அது அவ்வாறே இருந்துவரும் என்று எழுதினர்கள் கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும்.

மனிதனுடைய உணர்வு அவனது உழைப்புச் செயலின் போக்கில் தோன்றி வளர்ந்தது. உற்பத்தி உழைப்பே மனிதனை உருவாக்கியது. ஆனுல் உழைப்பு கூட்டத்துக்குப் புறம்பாக, சமூகத்துக்கு வெளியே நடக்க முடியாது. எனவே மக்களுக்கிடையே தொடர்பும் உறவும் இன்றி, அதாவது மொழி இன்றி அது நடக்க முடியாது. உணர்வு போன்றே மொழியும் மக்களின் உழைப்புச் செயலின் போக்கில் பிறந்து வளர்கிறது. ''உணர்வு போலவே மொழி தொன்மையானது. மொழி என்பது மற்ற மனிதர்களுக்காக நிலவுவதும் அந்தக் காரணத்தினுல் மட்டுமே எனக்காகவும் நிலவுவதுமான நடைமுறை எதார்த்த உணர்வு ஆகும். உணர்வு போன்றே மொழி மற்ற மனிதர்களுடன் உறவுகொள்வதன் தேவையிலிருந்தே, அத்தியாவசியத்திலிருந்தே தோன்றுகிறது.''[1]

உழைப்பு சமூகத்துக்கு வெளியே நிலவ முடியாது என்பதையும், அதே போல, சமூகமும் மனிதர்களின் உழைப்புச் செயல் இல்லாமல் நிலவ முடியாது என்பதையும் நிலைநாட்டிய பின், மனிதனுடைய உடல், அறிவுத் திறன்களைச் செவ்வைப் படுத்துவதில், அவனது மூளையை வளர்ப்பதில், உழைப்பும் மொழியும் ஆற்றியுள்ள தொண்டையும் மார்க்ஸீயத்தின் ஸ்தாபகர்கள் ஆராய்ந்தார்கள். இந்தக் காரணிகளின் பாதிப்பினுல் மனிதனுடைய மூளை எவ்வாறு மாறியிருக்கிறது என்பதை ''குரங்கிலிருந்து மனிதனுக மாறிய செயல்முறையில் உழைப்பின் பாத்திரம்'' என்னும் தமது நூலில் பிரெடெரிக் எங்கெல்ஸ் காட்டினுர்: ''தொடக்கத்தில் உழைப்பு, அதன்பின்னும் அதனுடனும் தெளிவான ஒலிப்புக்கள் கொண்ட பேச்சு, இந்த இரு பிரதானத் தூண்டல்களின் பாதிப்பினுலேயே குரங்கின் மூளை மனித மூளையாகப் படிப்படியாக மாறியது. மனித மூளை குரங்கின் மூளையை எவ்வளவுதான் ஒத்திருந்தாலும் அளவிலும்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''ஜெர்மன் கொள்கைவாதம்'', தொகுதி 1. லு. பாயர்பாக். நூல்திரட்டு, தொகுதி 3, பக்கம் 29.

செவ்வைப்பாட்டிலும் அதை மிக மிக விஞ்சிவிடுகிறது''.[1] மனித மூளை உழைப்பு, தெளிவான ஒலிப்புக்கள் கொண்ட பேச்சு ஆகியவற்றின் காரணமாக எதார்த்தத்தின் பொதுமைப் படுத்தும் பிரதிபலிப்பைக் கருதுகோள்களிலும் அபிப்பிராயங் களிலும் தீர்மானங்களிலும் வெளியிடும் திறன் உள்ளது.

மூளையில் நடக்கும் நரம்புச் செயல்முறைகளே மனிதச் சிந்தனையின் உடலியல் அடிப்படையாக விளங்குகின்றன என்று தற்காலஇயற்கை விஞ்ஞான விவரங்கள் காட்டுகின்றன. மனிதனு டைய மூளை வெவ்வேறு அமைப்புப் படிவுகளால் ஆனது. சில மில்லிமீட்டர்கள் பருமனுள்ள அதன் மேற்படிவு சிறப்பான பங்கு ஆற்றுகிறது. இந்தப் படிவு பெருமூளைப் புறணி எனப்படும். கோடானுகோடி நரம்பணுக்களால் ஆனது இது. இவை பெருந் தொகையான கிளைகளால் ஒன்றிணைக்கப்பட்டிருக்கின்றன. மிக மிகப் பெருத்த எண்ணிக்கையுள்ள தொடர்புகளை உருவாக்க வும் நரம்பணுக்களின் ஒரு குழுவிலிருந்து மற்றொரு குழுவுக்கு நரம்பு உந்தல்களை ஒரு நொடியில் மாற்றவும், வரும் சங்கே தங்களை எல்லாக் கோணங்களிலிருந்தும் பகுத்தாயவும் இந்த நரம்பணுக்கள் வல்லவை. புறணியடிப் படிவுகளும் முக்கியப் பங்கு ஆற்றுகின்றன. மூளைப் புறணியின் முறையான செயல் பாட்டை இவை உறுதிப்படுத்துகின்றன.

அமைப்பில் வெவ்வேறான பகுதிகள் (புலங்கள்) புறணியில் உள்ளன. இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகைச் செயலை நிறைவேற்றுகிறது. ஒவ்வொரு பகுதியும் ஒரு குறித்த விதமான தூண்டல்களை (பார்வை, ஒலியுணர்வு முதலியன) பகுத்தாயவும் பொதுமைப்படுத்தவும் திறன் உள்ளது. சில புலங்கள் (உதார ணமாக, பேச்சு-இயக்க, பேச்சு-ஒலியுணர்வு, பேச்சு-பார்வைப் புலங்கள்) தமக்குரிய உறுப்புக்களுடன் ஏராளமான வேறு நரம் பணுக்கள் மூலம் இணைக்கப்பட்டிருக்கின்றன. மிகச் சிக்கலான கட்டமைப்பு உள்ள புறணிப் பகுதிகள் நரம்பு மண்டலத் தினது வளர்ச்சியின் கடைசிக் கட்டங்களில் தோன்றின என விஞ்ஞானத்தால் நிலைநாட்டப்பட்டிருக்கிறது.

மனிதனால் வெளிப் பிரபஞ்சம் பிரதிபலிக்கப்படும் சிக்க லான செயல்முறையில் பின்வரும் கட்டங்கள் வேறுபடுத்திக்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும், ''இயற்கை யின் இயக்க இயல்'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 490.

காணப்படுகின்றன: சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தின் பொருள்கள். நிகழ்ச்சிகளின் பாதிப்பினுல் ஏற்படும் தூண்டல்கள் கிரகிக்கப் படுதல்; இந்தத் தூண்டல்கள் நரம்பு உந்தல்களின் வடிவில் மூளைக்குக் கொண்டுசெல்லப்படுதல்; மறிவினைச் செயல்பாடு, புலனுணர்ச்சிகள், எண்ணங்கள், கருதுகோள்கள் ஆகியவற்றின் அடிப்படையில் எதார்த்தப் பொருள்கள், நிகழ்ச்சிகள் பற்றிய கருத்து மாதிரிகள் உருவாதல்; வருங்காலத்தில் யாவற்றிலும் சாத்தியமான நிலைமையை முன்காணலும் அதை மதிப் பிடலும் அதற்கேற்ற செயல்திட்டம் வகுத்தலும்; செயல் களின் விளைவுகளை முன்காணல்; செயலின் நிகழ்முறையும் அதன் போக்கையும் விளைவுகளையும் பற்றிய தகவலும்; நோக்கங்களின் நிறைவேற்றம். நிலைமையின் சிக்கலைப் பொறுத்துச் சில தனிக் கட்டங்கள் அதிக அல்லது குறைந்த நேரம் எடுத்துக்கொள்ளக் கூடும். தவிர, சில செயல்முறைகள் உணர்வுபூர்வமாக அன்றித் தாமாகவே சாதாரணமாக நிகழ்கின்றன.

மனிதர்களின் உளச் செயல்களின் சிறப்புத்தன்மைகள் குறித்துச் சர்ச்சை செய்கையில் இ. பெ. பாவ்லவ் பின்வருமாறு எழுதினுர்: எதார்த்தத்தைப் பிரதிபலிப்பதற்கு, விலங்கு களுடன் ஒப்பிடுகையில் பண்பளவில் புதிய மண்டலம் ஒன்று வரலாற்று வளர்ச்சிப் போக்கில் மனிதனிடம் உருவா யிற்று. இது இரண்டாவது சங்கேத மண்டலம் எனப்படும். பேச்சு, சொல் இது. முதலாவது சங்கேத மண்டலத்தால் (புலனுணர்ச்சி, புலனறிவு, எண்ணம் ஆகியவற்ருல்) பெறப் படும் ஏராளமான விவரங்களைப் பண்படுத்துவதன் அடிப்படை யில் எதார்த்தம் பொதுமைப்படுத்திப் பிரதிபலிக்கப்படுவதே இரண்டாவது சங்கேத மண்டலத்தின் சிறப்பான அம்சம் ஆகும். மொழியை, பேச்சைப் பயன்படுத்துவதன் வாயிலாக இந்தச் செயல் நிறைவேற்றப்படுகிறது. புலன்களின் மூலம் பெறப்படும் ஸ்தூலமான அறிவு, எண்ணங்கள், இவற்றி லிருந்து பொதுக் கருதுகோள்களுக்கும் அபிப்பிராயங்களுக்கும் முடிவுகளுக்கும், அதாவது சிந்தனைக்கு மனிதன் சொல்லின் உதவியால் பரிணமிக்கிருன்.

எதார்த்தத்தின் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் குறிக்கும் வெளித் தூண்டுவிப்பியாகச் சொல் மனிதனுல் புரிந்துகொள் ளப்படுகிறது. நம்மில் ஒவ்வொருவரும் சொற்களைக் கேட் கையில் அல்லது படிக்கையில் எதார்த்தப் பொருள்களையும்

நிகழ்முறைகளையும் கற்பனை செய்துகொள்கிறோம், நமது முந்திய அனுபவங்களை நினைவுபடுத்திக்கொள்கிறோம். ஆகவே, புறநிலைப் பிரபஞ்சத்தின் பொருள்களுடனும் நிகழ்ச்சிகளுடனும் மனிதனது சிந்தனையின் உறவு சொற்களையே ஊடகமாகக் கொண்டிருக்கிறது. மொழி சிந்தனையைக் கடத்துவதற்கான சாதனமாக, சிந்தனையின் நேர்ப் பொருளியலான, புலன்களால் புரிந்துகொள்ளப்படக் கூடிய மேலுறையாக விளங்குகிறது.

உணர்வு மனித மூளையினது செயல்பாட்டின் விளைவே என்றும், புலனுணர்ச்சிகள், எண்ணங்கள், கருதுகோள்கள் ஆகியவற்றின் வடிவில் எதார்த்தத்தின் கருத்தியல் பிரதிபலிப்பு மூளையில் நடக்கும் நரம்புச் செயல்களின் காரணமாகவே நிகழ்கிறது என்றும் விஞ்ஞானம் மறுக்க முடியாதவாறு நிரூபிக்கிறது. சமூக இருத்தலின் மொத்தத் தொகுப்பாக விளங்கும் சமூகக் காரணிகளின் குறிப்பிட்ட பாதிப்பினால் சிந்தனை உறுப்பு என்ற வகையில் மனிதனுடைய மூளை வளர்ச்சி அடைந்தது. இந்தச் சமூக இருத்தலின் அடிப்படையாகத் தொண்டாற்றுகிறது பொருளியல் உற்பத்தி. சமூக உழைப்பின் போக்கில் உற்பத்திக் கருவிகள் செவ்வைப்படுத்தப்படுகின்றன. உற்பத்தித் துறையில் மேலும் மேலும் புதிய இயற்கைப் பொருள்கள் ஈடுபடுத்தப்படுகின்றன. உற்பத்தித் தொடர்புகளின் புதிய வடிவங்களும் புதிய சமூக அலுவலகங்களும் ஸ்தாபனங்களும் உருவாகின்றன. இவற்றோடு கூடவே மனிதனும் செவ்வைப்படுகிறான். அவனுடைய மூளையும் உணர் உறுப்புக்களும், அவனது உணர்வும் அறிவும் செப்பம் அடைகின்றன.

மனிதனுடைய உணர்வு எதைப் பிரதிபலிக்கிறது, இந்தப் பிரதிபலிப்பு எவ்விதம் நிகழ்கிறது என்பதை இதுவரை விவரித்தோம். ஆனால் மனித உணர்வு வெளிப் பிரபஞ்சத்தின் செயலற்ற பிரதிபலிப்பு மட்டுமே அல்ல. இயற்கைமீது அது எதிர்ப் பாதிப்பும் நிகழ்த்துகிறது.

பிரபஞ்சத்தில் தனது இடத்தையும் தனது செயலையும் (அதே போல மற்ற மனிதர்களின் செயலையும்) மனிதன் புரிந்துகொள்வது மனித அறிவின் மிக முக்கியமான சிறப்பு. பிரபஞ்சத்துடன் மனிதனுடைய உறவு, எதார்த்தம் பற்றிய ஒருமுனைப்பாடுள்ள ஞானமும், அதோடுகூட, எதார்த்தத்தை நோக்கத்

துக்குப் பொருந்த ஊக்கமாக மாற்றி அமைத்தலும் கொண்ட செயல்முறை ஆகும்.

பிரபஞ்சத்தைத் தீவிரமாக மாற்றி அமைக்கும் செயல்முறை மனித அறிவின் ஆக்கத் தொண்டை வெளியிடுகிறது. இயற்கையை நடைமுறையில் மாற்றி அமைக்கையில் மனிதன் தனது உழைப்பால் புதிய வஸ்துக்களை நிறுவுகிறான். அவனுடைய உணர்வு இவற்றில் ஒரு விதத்தில் பதிவு செய்யப்படுகிறது. அல்லது, வழக்கமாகச் சொல்வதுபோல, இவற்றில் பிரத்தியட்சம் ஆகிறது, பருப்பொருள் ஆகிறது. மனிதனது கை வேலையாக விளங்கும் பொருள்களின் உலகம்—எளிய உழைப்புக் கருவிகள், கட்டிடங்கள், கட்டுமானங்கள் முதல் விண்வெளி விமானங்களை உள்ளிட்ட மிக மிகச் சிக்கலான இயந்திர சாதனங்கள், உபகரணங்கள் வரை—முடிவாகப் பார்க்கும்போது இந்தப் பொருள்களில் உருப்பெற்றுள்ள மனிதச் சிந்தனையே தான். மனிதனால் நிறுவப்பட்டுள்ள வெளிப் பிரபஞ்சம், எத்தனையோ தலைமுறைகளினது திரண்ட அனுபவத்தின் உண்மையான கலவையாகும். மனித அறிவின் சிறந்த திறமைகளுக்கும் அவனது புதுப்புனைவு ஆற்றலுக்கும் படைப்புத் திறனுக்கும் இது சான்று பகர்கிறது. ''மனிதனுடைய உணர்வு புறநிலைப் பிரபஞ்சத்தைப் பிரதிபலிப்பது மட்டுமல்ல, படைக்கவும் செய்கிறது''[1] என்று எழுதினார் வி. இ. லெனின்.

நாம் ஏற்கனவே கூறியதுபோல, சிந்தனையின் பொருளியல் வெளியீடாக விளங்குகிறது பேச்சு, மொழி. சொல் சிந்தனையை நிலைப்படுத்துகிறது, பதிவுசெய்கிறது. சிந்தனையை வெளியிடுவதற்கான சொல் வடிவத்தின் உதவியால் மக்கள் முந்திய தலைமுறைகளால் திரட்டிச் சேர்க்கப்பட்ட அனுபவத்தையும் ஞானத்தையும் சேமித்து வைக்கிறார்கள், எதார்த்தத்தை மேலும் மாற்றி அமைப்பதற்கு அவற்றை வெற்றிகரமாகப் பயன்படுத்துகிறார்கள்.

இயற்கையை மட்டுமே அல்ல, சமூகத்தையும் மனிதன் மாற்றி அமைத்திருப்பதில் வெளியாகிறது உணர்வின் ஆக்கத் தொண்டு. சமூக இருத்தலை, முதன்மையாகச் சமூகத்தில் நிலவும் பொருளாதார உறவுகளையும் புறநிலையான வாழ்க்கை

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 194.

நிலைமைகளையும் சமுதாய எதார்த்தத்தின் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளையும் பிரதிபலிப்பதுடன் மனிதர்களின் உணர்வு சமூகத்தின் வாழ்க்கை முழுவதையும் தீவிரமாகப் பாதிக்கிறது. சமுதாய மாற்றங்களுக்கான உடனடித் தேவைகளை வெளியிடும் முற்போக்குக் கருத்துக்கள் சமூக வளர்ச்சிமீது சிறப்பாகப் பெருத்த செல்வாக்கு செலுத்துகின்றன. ஆனால் முற்போக்குக் கருத்துக்கள் சமூகத்தின் வளர்ச்சியில் ஆக்கத் தொண்டு தாமாகவே புரிந்துவிடுவதில்லை. வரலாற்றை உண்மையில் ஆக்குபவர்களான பொதுமக்களின் உடைமை ஆகும்போதே அவை அவ்வாறு தொண்டு ஆற்றுகின்றன. பொது மக்களை ஆட்கொண்டுவிட்ட முற்போக்குக் கருத்துக்கள், சமூக வளர்ச்சியைப் புரட்சிகரமாக்கி விரைவுபடுத்தும் விறல்மிக்க பொருளியல் ஆற்றல் ஆகிவிடுகின்றன.

அத்தியாயம் மூன்று

# பொருள்முதல்வாத இயக்க இயல்வாதத்தின் அடிப்படை விதிகள்

## § 1. நிகழ்ச்சிகளின் வளர்ச்சியும் பொதுத் தொடர்பும்

*பிரபஞ்சம் அதன் இயற்கையில் யாது, அதற்கும் மனிதனுடைய உணர்வுக்கும் உள்ள தொடர்பு என்ன என்பதைச் சென்ற அத்தியாயங்களில் விளக்கினேம். பிரபஞ்சமும் அதைப் பற்றிய நமது அறிவும் எப்படி மாறுகின்றன, இந்த மாறுதல்கள் எந்த விதிகளுக்கு உட்பட்டவை என்பதைப் புரிந்துகொள்வது இப்போது அவசியமாகிறது.*

இயக்கம் சடப்பொருளினது நிலவுகையின் ஒரு வடிவம், அதன் பிரிக்கமுடியாத மூலப் பண்பு என ஏற்கனவே கூறியுள்ளோம். அன்ருட வாழ்வில் இயக்கம் என்பது பொருள்களின் சாதாரண இடப்பெயர்ச்சி என வழக்கமாகப் புரிந்துகொள்ளப் படுகிறது. இயக்கம் பற்றிய இம்மாதிரிக் கருத்தே முந்தையப் பொருள்முதல்வாதிகளும் கொண்டிருந்தார்கள். இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதம் இயக்கத்தை இன்னும் ஆழ்ந்த முறையில்—எவ்விதமான மாறுதலும் எனப்—புரிந்து கொள்கிறது. பொருள்களும் நிகழ்ச்சிகளும் தமது இடநிலையை மட்டுமே மாற்றிக்கொள்வதில்லை, அளவில் மட்டுமே அவை மாறுவதில்லை. பண்பிலும் அவை உள்ளார்ந்த மாறுதல்கள் அடைகின்றன, வேருகின்றன, அதாவது வளர்ச்சியுறுகின்றன.

வளர்ச்சி பொதுவான தன்மை கொண்டது. மனிதனைச் சூழ்ந்துள்ள எல்லாப் பொருள்களும் நிகழ்ச்சிகளும்—விண்மீன்கள், சூரியன், பூமி, பல்வகையான விலங்கு, தாவர உலகம் ஆகியவையும்—மனிதன் தானேயும்கூட வளர்ச்சிப் போக்கில் தோன்றியுள்ளன, தொடர்ந்து மாறுதலும் வளர்ச்சியும் அடைந்து வருகின்றன. சமூக வாழ்வும் ஆழ்ந்த மாற்றங்களுக்கு உள்ளாகிவருகிறது. நிலப்பிரபுத்துவ அமைப்பின் இடத்தில்

வந்ததும் சர்வவல்லமை உள்ளதாகத் தோன்றுவதும் ஆன முதலாளித்துவம் ஏற்கனவே தனது ஆயுளை வாழ்ந்து தீர்க்கும் நிலையை எட்டிவிட்டது. அதன் இடத்தைப் படிப்படியாக வியாபித்துக்கொண்டிருக்கிறது சோஷலிஸம். தன் முறைக்கு அது கம்யூனிஸமாக வளர்ச்சி அடையும்.

பொது வளர்ச்சி எவ்வாறு நிகழ்கிறது? அதன் அம்சங்களும் விதிகளும் யாவை? மார்க்ஸீயத் தத்துவத்தின் தனிப் பிரிக்க முடியாத அம்சமாக விளங்கும் பொருள்முதல்வாத இயக்க இயல்வாதம் இந்தக் கேள்விகளுக்கு விடை அளிக்கிறது. பொருளியல் பிரபஞ்சம், ஞானம் இவற்றின் வளர்ச்சியை இயக்க இயல்வாதம் ஆராய்கிறது. வளர்ச்சி பற்றிய கருத்து இயக்க இயல்வாதத்தின் பிரதானக் கருத்து, அதன் அடிப்படைக் கோட்பாடு ஆகும்.

எல்லா வகை மாறுதலும் வளர்ச்சி ஆகாது. பொருள்கள், நிகழ்ச்சிகளின் பண்புவகையான உருமாற்றங்கள், மூல மாறுதல்கள், ஒரு வகையின மறைதலும் வேறு புது வகையின தோன்றுதலும் எதில் கட்டாயமாக அடங்கியுள்ளனவோ அத்தகைய மாற்றமே வளர்ச்சி ஆகும். அது திருப்ப முடியாதது, அதாவது நிச்சயமான திசையில் இயங்குவது, முந்திய நிலைக்கு முழுமையாகத் திரும்ப இயலாதது. பொருள்கள், நிகழ்ச்சிகளின் வளர்ச்சிக்கு ஊற்றுக்கண்ணாக விளங்குபவை அவற்றின் உள் முரண்பாடுகளே. எனவே வளர்ச்சி சுயவளர்ச்சியாக நிகழ்கிறது. அதாவது, எவையேனும் வெளிச் சக்திகள் காரணமாக அல்ல, உள் தூண்டல்களின் விளைவாகவே நிறைவு பெறுகிறது.

நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தின் வளர்ச்சி புறநிலையானது. தனது சொந்த விதிகளுக்கு ஏற்பவே அது நடக்கிறது. மனிதனுடைய உணர்வு வெளிப் பிரபஞ்சத்தையும் அதன் இயக்கத்தையும் பிரதிபலிக்க மட்டுமே செய்கிறது. கருத்து முதல்வாத இயக்க இயல்வாதத்தின்படி முதன்மையானதும் வளர்வதுமாக விளங்குவது ஆன்மீகமான ஒன்று: அது பரம ஆன்மா எனப்படுவது அல்லது மனிதனுடைய சிந்தனை. பொருள்முதல்வாத இயக்க இயல்வாதம் அடிப்படையில் இதிலிருந்து வேறுனது.

பொருள்முதல்வாத இயக்க இயல்வாதம் வளர்ச்சி பற்றிய சித்தாந்தம் மட்டுமே அல்ல, அறிதலின் ஆராய்ச்சி முறையும்

ஆகும். இதன் பொருள் என்னவென்ருல், அதனுல் கண்டு பிடிக்கப்படும் வளர்ச்சி பற்றிய புறநிலை விதிகள், எந்த விஞ்ஞான ஆராய்ச்சிக்கும் அடிப்படையாகச் செயல்படுகின்றன, எதார்த்தத்தை அறிவதற்கும் மாற்றுவதற்கும் உரிய சரியான வழியை வரையறுக்கின்றன என்பதாகும்.

இயக்க இயல்வாதத்துக்கு எதிர்நிற்கிறது வேருெரு சிந்தனை முறை. அதுதான் மாருநிலைவாதம். எதார்த்தத்தை ஒருதலைச் சார்பாக அணுகுதலும், அதன் ஒருவகை அம்சங்களை மிகைப் படுத்தலும் மற்றவற்றைப் புறக்கணித்தலும், அறியப்படும் பொருள்கள் அல்லது நிகழ்முறைகளின் எல்லா அம்சங்களையும் தொடர்புகளையும் கருத்தில் கொள்ளத் திறன் அற்று இருத்த லும் மாருநிலைவாதத்துக்கு இயல்பான பண்புகள். உதாரண மாக, சில மாருநிலைவாதிகள் பொருள்கள், நிகழ்முறை களின் சார்புநிலையான, பண்புவகையான நிலைப்பை, நிச்சயத் தன்மையை மிகைப்படுத்துகிருர்கள். அவற்றின் வளர்ச்சியை, அவற்றின் பண்பு மாற்றத்தை மறுக்கிருர்கள். வளர்ச்சியைப் பற்றி அவர்கள் பேசினுலுங்கூட, அளவு மாற்றம் எனவே, வெறுமே மிகுதல் அல்லது குறைதல் என்றே அதை அர்த்தப் படுத்திக் கொள்கிருர்கள். மாருக, வேறு சில மாருநிலைவாதி களோ, வளர்ச்சி என்பது புதிய பண்புகள் கொண்ட பொருள் கள், நிகழ்ச்சிகளின் முற்றிலும் எதிர்பாராததும் விளக்க முடி யாததும் ஆன தோற்றம் என்று, இயற்கைக்கு மேற்பட்ட படைப்புச் செயல்களின் இடையருத வரிசை என்று கருது கிருர்கள்.

இயக்கம், வளர்ச்சி, இவற்றின் ஊற்றுக்கண் பற்றிய கேள் விக்கும் மாருநிலைவாதிகள் இவ்வாறே மேலெழுந்தவாரியாக வும் ஒருதலைச்சார்பாகவும் விடை காண்கிருர்கள். எந்தப் பொருளினதும் மாற்றத்துக்குக் காரணமாக எப்போதும் விளங் குவது வெளிச் சக்தியே என இயந்திரரீதியான கற்பனையை ஆதாரமாகக் கொண்டு அவர்கள் கருதுகிருர்கள். பொருளியல் பிரபஞ்சம் அனைத்தின் இயக்கத்தையும் தொடங்கிவைத் தது வெளியிலிருந்து வந்த ஏதோ முதல் உந்தலே என்ற எண்ணத்துக்கு இந்தக் கருத்து தவிர்க்க இயலாதவாறு இட்டு வருகிறது. சடப்பொருளுக்கு வெளியிலிருப்பது பொருளிய லற்ற, இயற்கைக்கு மேலான ஒன்ருகவே, அல்லது கடவுளாக

வே இருக்க முடியும். இவ்விதமாக மாறுநிலைவாதம் கருத்து முதல்வாதத்துக்கும் மதத்துக்கும் இட்டுச் செல்கிறது.

எனவே, வளர்ச்சி பற்றிய இயக்க இயல்வாத, மாறுநிலை வாத அர்த்தங்களை, இரு கருத்தோட்டங்களை வேறு படுத்தி அறிந்துகொள்வது இன்றியமையாதது ஆகும். இவற்றில் முதலாவது விஞ்ஞான ரீதியானது, பயன்விளைப்பது. இரண்டாவதோ, பயனற்றது, உயிரில்லாதது. குறித்த இவ்விரு கருத்தோட்டங்களையும் வேறுபடுத்தி அறிந்துகொள்வதன் அவசியம் பற்றி ''இயக்க இயல்வாதம் பற்றிய பிரச்சினை'' என்னும் தமது கட்டுரையில் வி. இ. லெனின் எழுதியுள்ளார்.

ஆராயப்படும் நிகழ்முறையை வளர்ச்சியின் நோக்குநிலை யிலிருந்து அணுகுவது விஞ்ஞானரீதியான அறிதலின் பயனுடை மைக்கு மிக முக்கியமான நிபந்தனைகளில் ஒன்றாகும். எந்த ஒரு நிகழ்ச்சியும் எவ்வாறு தோன்றி உருவாயிற்று, எம்மாதிரி மாறுதல்களுக்கு அது உள்ளாயிற்று, உள்ளாகிக் கொண்டிருக் கிறது என்பதை ஆராய்ந்தால் அதன் தன்மையைக் கண்டுபிடிப் பதும் புரிந்துகொள்வதும் இயலும்.

நிகழ்ச்சிகளின் வளர்ச்சி அவை தமக்குள் கொண்டுள்ள தொடர்பின் அடிப்படையில் நடைபெறுகிறது. இந்தத் தொ டர்பு காரணமாக அவை ஒன்றை ஒன்று பாதிக்கின்றன. எல்லாப் பொருள்களுடையவும் மாறுதலுக்கு யாவற்றிலும் ஆழ்ந்த காரணமாகத் திகழ்வது அவற்றின் பரஸ்பரப் பாதிப்பே என்று ''இயற்கையின் இயக்க இயல்'' என்னும் தமது நூலில் எங்கெல்ஸ் சுட்டிக்காட்டியுள்ளார்.

சுற்றிலும் உள்ள பிரபஞ்சத்தின் பொருள்கள், நிகழ்ச்சி களின் பரஸ்பரத் தொடர்பு புறநிலையான பொதுத்தன்மை கொண்டிருக்கிறது. மற்ற நிகழ்ச்சிகளுடன் பல்வகைத் தொடர் புகள் இல்லாமல் எந்த நிகழ்ச்சிகளும் நிலவுவதில்லை (நிலவவும் முடியாது). உதாரணமாக, தனது உயிர்ச் செயலின் நிகழ் முறையில் தாவரம் மண்ணுடன் தொடர்பு கொண்டது, நீரில் கரைந்த பல்வகைப் பொருள்களை அதிலிருந்து பெறுகிறது என்பதும், நீர் கிடைப்பது பருவநிலையைப் பொறுத்திருக்கிறது என்பதும் தெரிந்தவையே. தாவரம் காற்றுடனும் பரஸ்பரப் பாதிப்பு நிகழ்த்துகிறது. அங்கக (கரிமக்) கூட்டுக்களுக்கான பொருளாகக் கரியமில வாயுவைத் தாவரம் காற்றிலிருந்து உட்கொள்கிறது. காற்றில் தாவரம் ஆக்சிஜனை வெளிவிடுகிறது.

அதைப் பிராணிகள் சுவாசிக்கின்றன. அங்ககப் பொருள்களை உருவாக்குவதற்கு இன்றியமையாத ஆற்றலைத் தாவரம் சூரிய னிடமிருந்து பெறுகிறது. இந்த ஆற்றலோ, சூரியனின் உட் பாகத்தில் நிகழும் வெப்ப அணுக்கருப் பிரதிச்செயல்களின் விளைவு என்பது தெரிந்த விஷயம்.

இவ்வாறு, பல்வேறு வகைத் தொடர்புகளின் மிகச் சிக்கலான வலையில் தாவரம் பின்னிப் பிணைந்ததுபோல் இருக் கிறது (இவ்வகைத் தொடர்புகளில் ஒரு சிலவற்றை மட்டுமே நாம் குறித்துள்ளோம்). விலக்கின்றி எல்லா நிகழ்ச்சிகள் குறித் தும் இதையே நாம் சொல்ல முடியும். ஆதலால், நிகழ்ச்சி களின் தொடர்புகளது தொகுப்பு முழுவதையும் கருத்தில் கொண்டால், முடிவில் ஒவ்வொரு நிகழ்ச்சியும் மற்ற எல்லா நிகழ்ச்சிகளுடனும் தொடர்புள்ளதாகக் காண்கிறது. எனவே, தொடர்புகள் பொதுத் தன்மை கொண்டிருக்கின்றன. பிர பஞ்சமோ ஒன்றுக இணைந்த முழுமையாக விளங்குகிறது.

வளர்ச்சி போன்றே பொதுத் தொடர்பும் பொருள்முதல் வாத இயக்க இயல்வாதத்தால் ஆராயப்படுகிறது. பொருள் களின் பொதுத் தொடர்பு பற்றிய வரையறுப்பு இயக்க இயல் வாதத்தின் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்று ஆகும்.

தொடர்புகள் வடிவத்திலும் முக்கியத்துவத்திலும் உள் ளடக்கத்திலும் பல்வகைப்பட்டவை. பொதுத் தொடர்பின் மிக முக்கியமான வடிவங்கள் இயக்க இயலின் விதிகளாலும் வகைப் பிரிவுகளாலும் வெளியிடப்படுகின்றன.

பொதுத் தொடர்பு பற்றிய கோட்பாட்டிலிருந்து அறித லுக்கும் நடைமுறைக்கும் முக்கியமான முடிவுகள் பெறப்படு கின்றன. நிகழ்ச்சிகளுக்கு இடையிலுள்ள தொடர்பின் எதார்த்த முக்கியத்துவத்தைக் கருத்தில் கொள்ளாத மாரு நிலைவாதத்தைப்போல் அன்றி, இயக்க இயல்வாதம் கற்பிப்பது என்ன என்ருல், நிகழ்ச்சிகளை அறிவதற்கு வளர்ச்சியின் நோக்கு நிலையிலிருந்து மட்டும் அல்ல, அவற்றின் உள், வெளித் தொடர்பு களின் நோக்கு நிலையிலிருந்தும் அணுக வேண்டும் என்பது ஆகும். குறித்த பொருள் மற்றவற்றுடன் கொண்டுள்ள தொடர்பையும் அதன் எல்லா உள் தொடர்புகளையும் கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் அதன் தன்மையைப் புரிந்துகொள்ள முடியாது என்ற உண்மையையே ''ஒப்பிடுவதன் மூலமாகவே எல்லாம் அறியப்படுகின்றன'' என்ற பிரசித்திபெற்ற சூத்திர

வாக்கியம், பிரதிபலிக்கிறது. இயக்கத்துக்கு வெளியே, மற்றப் பொருள்களுடன் எல்லாவகைத் தொடர்புகளுக்கும் வெளியே, பொருள்களைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது என்றார் எங்கெல்ஸ்.

ஒவ்வொரு நிகழ்ச்சியும் பெருந்தொகையான பல்வேறு தொடர்புகள் கொண்டிருப்பதால் நிகழ்ச்சிகளை எல்லாப் புறங்களிலிருந்தும் ஆராய்வது, அதாவது இந்தத் தொடர்புகளில் ஒவ்வொன்றையும் வெளிப்படுத்துவதும் ஆராய்வதும் இன்றியமையாதது ஆகும். எந்த ஒரு நிகழ்ச்சிபற்றியும் அதன் தனிப்பட்ட தொடர்பைக் கொண்டு முடிவுகட்டுவது கூடாது. அதன் தொடர்புகளின் தொகுப்பு முழுவதையும் முடிந்தவரையில் பரிசிலிக்க முயல்வது அவசியம்.

வளர்ச்சியையும் தொடர்பையும் பற்றிய கோட்பாடுகளின் படி நிகழ்ச்சிகளை ஆராய்வதற்கு ஸ்தூலமான-வரலாற்று அணுகு முறையை மேற்கொள்வது, எந்த வரலாற்று நிலைமையையும் ஸ்தூலமாகப் பகுத்தாய்வது இன்றியமையாதது. இதன் அர்த்தம் என்னவென்றால், ஒவ்வொரு நிகழ்ச்சியும் அல்லது விவரமும் அது தோன்றி வளர்ந்த ஸ்தூல நிலைமைகளையும் இடத்தையும் காலத்தையும் கருத்தில் கொண்டே பரிசீலிக்கப் பட வேண்டும் என்பது ஆகும். வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினார்: ''ஒவ்வொரு நிலைமையும் (அ) வரலாற்று ரீதியில் மட்டுமே; (ஆ) மற்ற நிலைமைகளின் தொடர்பில் மட்டுமே; (இ) வரலாற்றின் ஸ்தூல அனுபவத்தின் தொடர்பில் மட்டுமே பரிசிலிக்கப்பட வேண்டும் என்று மார்க்ஸீயத்தின் ஆன்மா முழுவதும், அதன் முறை அனைத்தும் கோருகிறது.''[1]

உதாரணமாக, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் அடங்கியுள்ள தற்போதையக் காலக்கட்டம் பற்றிய வரையறுப்பு படைப்புத்தன்மைகொண்ட ஸ்தூலமான வரலாற்றுப் பகுப்பாய்வுக்கு மாதிரியாகத் திகழ்கிறது. சோவியத் யூனியனிலும் மக்கள் ஜனநாயகக் குடியரசு நாடுகளிலும் சோஷலிஸப் புரட்சி வெற்றி அடைவதற்கு முன்புவரை அந்தக் காலக்கட்டம் ஏகாதிபத்தியம், போர்கள், புரட்சிகள் ஆகியவற்றின் காலக்கட்டம் என்று வரையறை செய்யப்பட்டு வந்தது.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 49, பக்கம் 329.

நவீனக் காலக்கட்டத்தை ஏகாதிபத்தியக் காலக்கட்டம் என்று கூறுவது இப்போது சரியாகாது. ஏனெனில் ஏகாதிபத்தியம் உலக வளர்ச்சியை நிர்ணயிக்கும் சக்தியாக, எங்கும் பரவிய உலக அமைப்பாக இப்போது இல்லை. சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு தோன்றிவிட்டது. அது வளர்ந்து விரிவடைந்து கொண்டு போகிறது. தற்காலச் சமூகத்தின் வளர்ச்சியை நிர்ணயிக்கும் காரணி ஆகி வருகிறது அது.

தற்போதையக் காலகட்டத்தை யுத்தங்களின் காலக்கட்டம் என்று கூறுவதும் கூடாது. ஏனெனில் யுத்தங்கள் தவிர்க்க முடியாதவையாக இருந்த காலம் போய்விட்டது. போரின் ஊற்றுக்கண் ஆன ஏகாதிபத்தியம் ஒரே ஒரு பொருளாதார அமைப்பாக இருந்த காலம் போய்விட்டது. சமாதானத்தைப் பாதுகாக்கும் சோஷலிஸ நாடுகளின் அமைப்பும் இப்போது நிலவுகிறது. சமாதானப்பற்று உள்ள சோஷலிஸ்ட் அல்லாத அரசுகளின் பெரிய குழுவும் தோன்றியிருக்கிறது. ஏகாதிபத்திய நாடுகளிலேயே நடக்கும் பொது மக்கள் திரளின் இயக்கம் சமாதானத்துக்காகப் போராடும் பெரிய சக்தியாகிவிட்டது. ஆகவே, ஏகாதிபத்தியம் இன்னும் நிலவுகிறது, போர்கள் மூள்வதற்கான வாய்ப்பும் நிலவுகிறது எனினும் இந்தப் புதிய நிலைமைகள் அவற்றை மூளாது தடுப்பதைச் சாத்தியம் ஆக்குகின்றன.

இந்தக் காலக்கட்டத்தின் கட்டாயமான அறிகுறி ஆன சோஷலிஸ, தேசீய விடுதலைப் புரட்சிகளைப் பொறுத்த வரையில் இந்த அறிகுறி முன்போலவே நிலவுகிறது.

அதனால்தான் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் முழு ஆதாரத்துடன் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது: ''முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு தற்போதையக் காலக்கட்டத்தின் பிரதான உள்ளடக்கம் ஆகும். இது, எதிரெதிரான இரு சமூக அமைப்புக்களின் போராட்டக் காலக்கட்டம், சோஷலிஸ, தேசீய விடுதலைப் புரட்சிகளின் காலக்கட்டம், ஏகாதிபத்தியத்தின் நசிவும் காலனி ஆட்சி முறையின் முடிவும் நிகழும் காலக்கட்டம், மேலும் மேலும் புதிய நாட்டினர் சோஷலிஸப் பாதைக்கு மாறுவதும், அகில உலகப் பரிமாணத்தில் சோஷலிஸமும் கம்யூனிஸமும் வெற்றி பெறுவதும் நிகழும் காலக்கட்டம்.''

மாறிக்கொண்டிருக்கும் வரலாற்று நிலைமைகளை ஸ்தூல மாகப் பகுத்தாயும் திறனின்மை, நிகழ்ச்சிகள், பிரச்சினைகள் குறித்த வறட்டுச் சூத்திரவாத, மாறுநிலைவாத அணுகு முறைக்கு இயல்பான தன்மை ஆகும்.

நிகழ்ச்சிகள் பற்றிய ஸ்தூல-வரலாற்று அணுகு முறை குறித்தும், அவற்றை எல்லாப் புறங்களிலிருந்தும் ஆராய்தல் குறித்தும் இயக்க இயல்வாதத்தின் அடிப்படைக் கருத்து வர லாற்று நிகழ்ச்சிச் சங்கிலியின் அடிப்படைக் கணுபற்றிய லெனினது போதனையில் வெளியிடப்பட்டிருக்கிறது. சமூக வாழ்வு சம்பவங்களும் நிகழ்ச்சிகளும் கொண்ட சிக்கலான வலைப்பின்னல் ஆகும். எண்ணிறந்த கணுக்களின் தொடரான சங்கிலிக்கு அதை ஒப்பிடலாம். எதிர்நிற்கும் பிரச்சினைகளின் தொகுப்பு அனைத்திற்கும் தீர்வு காண்பது எதைப் பொறுத்திருக்கிறதோ அந்தக் கணுவை நிகழ்ச்சிகளின் சங்கிலியில் கண்டறியும் திறனிலேயே அடங்கியிருக்கிறது அரசியல் கலைத் தேர்ச்சி. உதாரணமாக, கம்யூனிஸக் கட்டுமானம் சம்பந்தமான பிரச்சினைகளின் தொகுப்பு முழுவதிலும் பிரதானக் கணுவாக விளங்குவது கம்யூனிஸத்தின் பொருளியல் தொழில்நுட்ப அடிப்படையை நிறுவுவது ஆகும். ஏனெனில் சமூக உறவுகளை மாற்றி அமைத்தல், புதிய மனிதனைப் பயிற்றி வளர்த்தல் என்னும் மற்றப் பிரதானக் கடமைகளின் நிறைவேற்றம் இதையே சார்ந்துள்ளது.

நிகழ்ச்சிகளின் ஆராய்ச்சிக்குரிய விஞ்ஞான இயக்க இயல் வாத அணுகுமுறை வளர்ச்சியையும் தொடர்பையும் பற்றிய கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டது. இதற்கு எதிரானவை குதர்க்கவாதமும் கலப்படவாதமும்.

குதர்க்கவாதம் என்பது வாத விவாதங்களில் தர்க்க விதிகளை மீறுபவையும் ஆனல் பிரமாணபூர்வமானவை, சரியானவை போலத் தோன்றுபவையும் ஆன சரியற்ற வழிகளையும் எல்லா வகைச் சூழ்ச்சிகளையும் கையாளல் ஆகும். இத்தகைய சூழ்ச்சி களில் ஒன்று, பொதுத் தொடர்பிலிருந்து தனி விவரங்களையும் தனி நிகழ்ச்சிகளையும் பிரித்து எடுத்துக்கொண்டு அவற்றின் உண்மை முக்கியத்துவத்தை மிகைப்படுத்துவதாகும். உதாரண மாக, பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் தற்கால முதலாளித் துவம் மாறுதலடைந்து ''மக்களுடையது'' ஆகிவிட்டது என்று வலிந்துரைக்கிருர்கள். சில முதலாளித்துவ நாடுகளில் தொழி

லாளர்கள் பங்குகள் வாங்குவதை அவர்கள் இந்தக் கூற்றுக்கு ஆதாரமாகக் காட்டுகிருர்கள். உண்மையிலோ, தொழிலாளர் கள் மொத்தப் பங்குகளின் அற்பப் பகுதியையே வாங்குகிருர் கள் என்பது ஒரு புறம் இருக்க, இந்த விஷயம் மட்டுமே முத லாளித்துவத்தின் தன்மையை எவ்விதத்திலும் மாற்றிவிட முடியாது. ஏனெனில் தனியார் சொத்துரிமையையும் அதை அஸ்திவாரமாகக் கொண்ட சமூக அமைப்பின் சுறண்டல் தன்மையையும் இது அகற்றிவிடவில்லை.

கலப்படவாதம் என்பது, வெவ்வேறு கருத்துப் போக்குக் களையும் எதார்த்தம் பற்றிய வெவ்வேறு அணுகுமுறைகளை யும், முக்கியமானதை, நிர்ணயகரமானதை வெளிக்காட்டாமல், கோட்பாடின்றி, இயந்திரரீதியாகக் கலப்படம் செய்த கூட்டு ஆகும். மார்க்ஸீயத்தின் அடிப்படை வரையறுப்புக்களை மறு பரிசீலனை செய்ய முயலும் திரிபுவாதிகளுக்குச் சிறப்பாக இயல் பானது இந்தக் கலப்படவாதம்.

ஒருதலைச்சார்பு, நிகழ்ச்சிகளுக்கிடையே உள்ள எதார்த்தத் தொடர்புகளைப் புறக்கணித்தல், முதன்மையானதை, அடிப் படையானதைக் காணும் திறனின்மை முதலியன குதர்க்கவாதத் துக்கும் கலப்படவாதத்துக்கும் இயல்பானவை ஆதலால் அவை மாருநிலைவாதத்தின் தனிப்பட்ட வகைகளே ஆகும்.

எதார்த்தத்தின் பல்வகைத் தொடர்புகளை ஆராய்கையில் மனிதன் ஒரு அல்லது மற்றொரு வகை நிகழ்முறைகளுக்குரிய நிலையான, சாராம்சமான, பிரதானத் தொடர்புகளைக் கண்டறிந்து அவற்றை வேறு பிரித்துக்கொள்கிருன். இவ்வாறு செய்வதன் வாயிலாகவே இந்த நிகழ்முறைகளை இயக்கும் விதி களை அவன் கண்டுபிடிக்கிருன். விதி என்பது முதன்மையாகத் தொடர்பே ஆகும். ஆனல் இது தனி வகையான தொடர்பு, அனேக அறிகுறிகளில் வேறுபடுவது.

விதிமுறைகளுக்கு ஒத்த தொடர்புகள் புறநிலையானவை. அதாவது, மனிதர்களுடைய உணர்வையும் சித்தத்தையும் சாராமல் அவை நிலவுகின்றன, செயல்படுகின்றன. அவை பொதுத் தன்மை வாய்ந்தவை. தனித் தனிப் பொருள்களுக்கோ நிகழ்ச்சிகளுக்கோ அன்றி அவற்றின் குறித்த குழுக்களுக்கோ அல்லது எல்லாப் பொருள்களுக்கும் நிகழ்ச்சிகளுக்குமோ இயல் பானவை இந்தத் தொடர்புகள். விதிமுறைகளுக்கு ஒத்த தொடர்புகள் சாராம்சமானவை, இன்றியமையாதவை. அதாவது,

அவை நிகழ்முறைகளின் சாராம்சத்தைச் சேர்ந்தவை, குறித்த நிலைமைகள் நிலவுமானல் அவை கட்டாயமாக உருவாகித் தீரும். முடிவாக, இந்தத் தொடர்புகள் ஒப்புநோக்கில் நிலையானவை. அதாவது, அவை தாறுமாருக அன்றி, குறித்த ஒழுங்கில், குறிப்பிட்ட வடிவத்தில் திரும்ப நிகழ்கின்றன, செயல்படுகின்றன.

பொருள்கள், நிகழ்முறைகளின் நிலைமையையும் அவற்றினுடைய வளர்ச்சியின் போக்கையும் தன்மையையும் விதிமுறைகளுக்கொத்த தொடர்புகள் வரையறுக்கின்றன. ''விதி'' என்ற கருதுகோள், நிகழ்ச்சிகளினது வளர்ச்சியின் போக்கையும் இயல்பையும் வரையறுக்கிற, நிகழ்ச்சிகளுக்கு இடையே உள்ள புறநிலையானதும் பொதுவானதும் சாராம்சமானதும் இன்றியமையாததும் ஆகிய தொடர்பின் நிலையான வடிவத்தைப் பிரதிபலிக்கிறது.

இயற்கை, சமூகம், இவற்றின் விதிகள் பற்றிய அறிவு மக்களின் வெற்றிகரமான நடவடிக்கைகளுக்கு இன்றியமையாத நிபந்தனையாக விளங்குகிறது, இந்த நடவடிக்கைக்கு இத்தகைய அறிவு மிக மிக முக்கியமானது. எந்த விஞ்ஞானத்தினதும் பிரதானக் கடமை, அதனல் ஆராயப்படும் நிகழ்முறைகளின் விதிகளை வெளிப்படுத்துவதும் இந்த விதிகளைப் பயன்படுத்துவதற்கான வழிகளை வகுப்பதுமே ஆகும்.

விதி பற்றி நாம் கொடுத்துள்ள வரையறுப்பு எல்லா விதிகளுக்கும் பொருந்தும். ஆனல் விதிகள் வெவ்வேருனவை. சில விதிகள் எதார்த்தத்தின் குறுகிய துறைகளுக்கு மட்டுமேயும் வேறு சில அதிக விரிவான துறைகளுக்கும் பின்னும் சில எல்லையின்றி விரிவான துறைகளுக்கும் இசைகின்றன. உதாரணமாக, பௌதிக, இரசாயன, உயிரியல் விதிகள் சடப்பொருளினது இயக்கத்தின் குறித்த வடிவங்களுக்குப் பொருந்துகின்றன. சம்பந்தப்பட்ட விஞ்ஞானங்களால் இவை ஆராயப்படுகின்றன. அதே சமயம் வேறு சில விதிகள் உள்ளன. அவை சடப்பொருளது இயக்கத்தின் எல்லா வடிவங்களுக்கும் எதார்த்தத்தின் எல்லாத் துறைகளுக்கும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் பொருந்துபவை, எங்கும், எப்போதும் செயல்படுபவை. இவை எல்லாவற்றுக்கும் பொதுவானவை அல்லது மிகப் பொதுவானவை எனக் கூறப்படுகின்றன. இந்த விதிகளின் ஆராய்ச்சியிலேயே ஈடுபடுகிறது இயக்க இயல்வாதம்.

எல்லாவற்றுக்கும் பொதுவானவையாக இருப்பதால் இவ்விதிகள் பொருளியல் பிரபஞ்சத்தில் மட்டுமே அன்றி அறிதலிலும், சிந்தனை நிகழ்முறையிலும் செயல்படுகின்றன. பொருளியல் பிரபஞ்சம், அறிதல், இவற்றினது வளர்ச்சியின் பொது விதிகளையும் வடிவங்களையும் பற்றிய போதனையாக விளங்குகிறது இயக்க இயல்.

பொருளியல் பிரபஞ்சத்தினது வளர்ச்சியின் இயக்க இயல் **புறநிலையானது** எனப்படுகிறது. புறநிலை எதார்த்தத்தின் நிகழ்ச்சிகள், செயல்முறைகளின் விதிமுறைகளுக்கொத்த தொடர்பு அது. அறிதலின் இயக்க இயல் **அகநிலையானது** எனப்படுகிறது. மனிதர்களின் உணர்வில் உள்ள புறநிலை இயக்க இயலை அது பிரதிபலிக்கிறது. சிந்தனைச் செயல்முறையில் உள்ள கருதுகோள்கள், அபிப்பிராயங்கள், முடிவுகள் ஆகியவற்றின் விதிமுறைகளுக்கு ஒத்த தொடர்பு அது. புறநிலை இயக்க இயல், அகநிலை இயக்க இயல், இரண்டின் விதிகளும் ஒன்றே ஆயினும், அவை வெவ்வேறு துறைகளில் செயல்படுவதனால், ஒவ்வொரு துறையிலும் அவை கட்டாயமாகத் தனிப்பட்ட வகையில் தோன்றுகின்றன.

எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி, அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தல் பற்றிய விதி, நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி ஆகியவை இயக்க இயலின் பிரதான, அடிப்படை விதிகள் ஆகும். நிகழ்ச்சிகளின் பொது வளர்ச்சிப் போக்கில் இவற்றின் மிக முக்கியமான தொடர்புகளை இந்த விதிகள் வெளியிடுகின்றன. நிகழ்ச்சிகளின் நிலவுகைக்குரிய பிற சாராம்சமான தொடர்புகளும் பண்புகளும் வடிவங்களும் இயக்க இயலின் வகைப்பிரிவுகளில் வெளியிடப்படுகின்றன.

எந்த ஒரு விஞ்ஞானத்தினுடையவும் அடிப்படைக் கருதுகோள்கள் **வகைப்பிரிவுகள்** எனப்படுகின்றன. உதாரணமாக, பொருண்மை, ஆற்றல், ஈர்ப்பு முதலியன பௌதிகத்தின் வகைப்பிரிவுகள் ஆகும். இனம், இயற்கைத் தேர்வு, பாரம்பரியம் முதலியன உயிரியலின் வகைப்பிரிவுகள். உற்பத்தி உறவுகள், பண்டம், மதிப்பு முதலியவை அரசியல் பொருளாதாரத்தின் வகைப்பிரிவுகள். தத்துவத்திலும் வகைப்பிரிவுகள் உண்டு. மற்ற விஞ்ஞானங்களின் வகைப்பிரிவுகளுக்கும் தத்துவ வகைப்பிரிவுகளுக்கும் உள்ள வேறுபாடு என்னவென்றால் அவை மிக

மிகப் பொதுவான (எல்லையின்றிப் பொதுவான என்று கூடச் சொல்லலாம்) கருதுகோள்களாக இருப்பதுதான். வெவ்வேறு வகைப்பிரிவுகள் எதார்த்தத்தின் வெவ்வேறு தொடர்புகளை யும் அம்சங்களையும் பண்புகளையும் பிரதிபலிக்கின்றன.

தத்துவ வகைப்பிரிவுகளில் சிறப்பான இடம் பெற்றிருப் பவை ஒப்புநிலை வகைப்பிரிவுகள் எனப்படுபவையாகும். இவை இரட்டையாக (உருவமும் உள்ளடக்கமும், தன்மையும் தோற்றமும், தற்செயலும் இன்றியமையாமையும் முதலியன) ஆராயப்படுகின்றன. இந்த வகைப்பிரிவுகளின் சிறப்பு என்ன வென்றால் நிகழ்ச்சியின் வெவ்வேறு அம்சங்களுக்கு இடையே உள்ள பொது இயக்க இயல் விதிமுறைகளையும் பொதுவான நிலைத்த தொடர்புகளையும் இவற்றின் ஒப்புநிலை வெளியிடுகிறது என்பதே. பிரதான, அடிப்படை விதிகளால் வரையறுக்கப் பட்ட தொடர்புகளிலிருந்து இந்தத் தொடர்புகள் கோட் பாட்டுரீதியில் வேறுபடுவதில்லை. எனவே இந்தத் தொடர்பு கள் இயக்க இயலின் அடிப்படையற்ற விதிகள் எனச் சில வேளைகளில் கூறப்படுகின்றன.

தனித்தனித் தத்துவ வகைப்பிரிவுகள் எதார்த்தத்துடைய நிகழ்ச்சிகளின் எவையேனும் சாராம்சமான தரப்புக்களையும் (பண்பு, அளவு, எதிர்நிலை) வளர்ச்சியின் சாராம்சமான கட்டங்களையும் (நிலை மறுப்பு, பாய்ச்சல்) பிரதிபலிக்கின்றன. இந்த வகைப்பிரிவுகளைப் பயன்படுத்தி நாம் இயக்க இயலின் அடிப்படை விதிகளைச் சூத்திரங்களாக அமைக்கிறோம்.

சுற்றியுள்ள எதார்த்தம் பற்றிய மனிதனது பல நூற்றாண் டுக்கால அறிவின் மொத்தத் தொகையாக விளங்குகின்றன வகைப்பிரிவுகள். இயற்கையின் மர்மங்களை வசப்படுத்துகையில் மனிதனுடைய அறிவு எவற்றின் வழியாக மேலேறி வந்துள் ளதோ அந்தப் படிகளே இவை. அதோடு கூடவே வகைப் பிரிவுகள் மேற்கொண்டு அறிவதற்கு உரிய கருவிகளாகவும், நிகழ்ச்சிகளையும் விவரங்களையும் பிரச்சினைகளையும் சரியாக, விஞ்ஞானரீதியாகப் பகுத்தாய்வதற்கு ஏற்ற சாதனங்களாக வும் திகழ்கின்றன.

வகைப்பிரிவுகளின் பொருள்முதல்வாத அர்த்தம் கருத்து முதல்வாத அர்த்தத்திலிருந்து மூலத்தில் வேறானது. எதார்த் தத்தில் புறநிலையாக நிலவும் உறவுகள் பொதுவாக எல்லாக் கருதுகோள்களிலும் போலவே வகைப்பிரிவுகளில் பிரதிபலிக்

கின்றன என்று பொருள்முதல்வாதிகள் கருதுகிருர்கள். மாருகக் கருத்துமுதல்வாதிகளோ, வகைப்பிரிவுகள் சிந்தனையின் சுதந்திரமான, எதார்த்தத்தைச் சாராத வடிவங்கள் என்று எண்ணுகிருர்கள்.

## § 2. எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும்

இயற்கையிலும் சமூகத்திலும் அவதானிக்கப்படும் மாறுதல்கள் ஏன் நிகழ்கின்றன என்பதையும், வளர்ச்சியின் ஊற்றுக்கண், இயக்கு சக்திகள் எவை என்பதையும் பற்றி மனிதர்கள் நெடுங்காலமாகச் சிந்தித்து வந்திருக்கிருர்கள்.

இந்த விஷயம் பற்றிப் பல்வேறு அனுமானங்கள் முன்வைக்கப்பட்டன. இவற்றில் சில உண்மையை ஒட்டியவையாக இருந்தன. நிகழ்ச்சிகளின் வெளித் தோற்றங்களை அடிக்கடி அடிப்படையாகக் கொண்ட வேறு சிலவோ உண்மைக்கு வெகு புறம்பாக இருந்தன. உதாரணமாக, நாம் ஏற்கனவே கூறியது போல, மாருநிலைவாதிகள் இந்தப் பிரச்சினைக்கு இயந்திரரீதியாகத் தீர்வுகாண முயன்ருர்கள். இயக்கத்துக்கும் மாறுதலுக்கும் ஊற்றுக்கண்ணை வெளிச் சக்தியில், முதல் உந்தலில் அவர்கள் தேடினுர்கள். விளைவாகக் கருத்துமுதல்வாதத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

வளர்ச்சியின் ஊற்றுக்கண் பற்றிய கேள்விக்கு விஞ்ஞான ரீதியான விடை மார்க்ஸீயத் தத்துவத்தால் தரப்பட்டிருக்கிறது. எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி இந்த விடையை வெளியிடுகிறது. இவ்விதி பொருள் முதல்வாத இயக்க இயல்வாதத்தின் சாரம், கரு என்று வி. இ.லெனின் கூறியுள்ளார். வளர்ச்சியின் உள் காரணத்தை இந்த விதி வெளிப்படுத்துகிறது. நிகழ்ச்சிகள், செயல்முறைகள், இவற்றின் முரண்பாடுகளில், அவற்றுக்கு இயல்பான எதிர்நிலைகளின் பரஸ்பரப் பாதிப்பில், போராட்டத்தில்தான் வளர்ச்சியின் ஊற்றுக்கண் உள்ளது என்று இது காட்டுகிறது.

ஆகவே, இந்த விதியின் உள்ளடக்கத்தை வெளிப்படுத்துவதற்கு முன்னர், எதிர்நிலைகள் என்பவையும் முரண்பாடுகள் என்பவையும் யாவை என்று விளக்குவது இன்றியமையாதது. எதிர்நிலைகள் என்பவை, நிகழ்ச்சிகளின் ஒன்றுக்கொன்று எதிர் நிற்கும் அம்சங்களும் சக்திகளும் போக்குகளும் ஆகும். அவை ஒன்றை ஒன்று மறுக்கின்றன, விலக்குகின்றன, அதே சமயம்

ன்றுக்கு ஒன்று காரணம் ஆகின்றன. கூடவே எதிர்நிலைகள் முரண்பாட்டின் அம்சங்களாக, பகுதிகளாக விளங்குகின்றன. முரண்பாடு எதிர்நிலைகளின் பரஸ்பர உறவைக் குறிக்கிறது.

இயக்க இயல் எவ்வகைப் பொருளையும் எதிர்நிலைகளின் மொத்தமாகவும் ஒருமையாகவும் கருதி ஆராய்கிறது என்று வி. இ. லெனின் தமது ''தத்துவக் குறிப்புப் புத்தகங்களில்'' எழுதினர். எல்லா நிகழ்ச்சிகளிலும் செயல்முறைகளிலும் உள் எதிர்நிலைகளும் அவற்றின் பரஸ்பர உறவுகளும் நிலவுவது முரண்பாடுகளின் சர்வவியாபகத்திற்கும் அதனுலேயே எதிர் நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதியின் சர்வ வியாபகத்துக்கும் சான்று பகர்கிறது.

இதைக் காட்டுவதற்கு, உயிரற்ற இயற்கையை முதலில் கவனிப்போம். அணுக் கருவின் உள்ளே எதிர்நிலைச் சக்திகள்—ஈர்ப்புச் சக்தியும் தள்ளும் சக்தியும்—செயல்படுகின்றன என்று தற்கால பௌதிகம் நிலைநாட்டியிருக்கிறது. அணுவின் கருவும் மேலுறையும் இவ்வாறே எதிர்நிலையில் இருக்கின்றன. ஏனெனில் கரு நேர் மின்னேற்றம் கொண்டது, எலெக்ட்ரான்களால் ஆன மேலுறை எதிர் மின்னேற்றம் கொண்டது. எல்லாத் ''தனிமத்'' துகள்களும் எதிர்நிலைப் பண்புகள் பெற்றிருக்கின்றன.

அங்கக உலகில் வளர்ச்சியின் முரண்பாடு இன்னும் துலக்கமாகச் செயல்படுகிறது. உயிருள்ள அங்கஜீவி எதுவும் காலத்தின் ஒவ்வொரு கணத்திலும் அதே அங்கஜீவியாக இருக்கிறது, தனது திட்டவட்டமான பண்புகளை நிலையாக வைத்திருக்கிறது. ஆயினும் அதே சமயம் அது வேறு ஒன்ருக விளங்குகிறது, ஏனெனில் இடையருது நிகழும் உயிர்ப்பொருள் இரசாயன மாற்றம் காரணமாக அது எப்போதும் புதுமை அடைந்த வண்ணமாக இருக்கிறது. உதாரணமாக, எதிர்நிலைச் செயல்முறைகளான தன்மயமாக்கலும் சிதைதலும் போன்ற பரஸ்பரப் பாதிப்புகள் உயிருள்ள அங்கஜீவிக்கு இயல்பானவை. தன்மயமாக்கல் என்பது சுற்றுச் சார்பிலிருந்து ஊட்டப்பொருள்கள் அங்கஜீவியால் உட்கொள்ளப்படுவதும் அவை அங்கஜீவியின் உயிரணுக்களாகவும் திசுக்களாகவும் மாறுவதும் ஆன செயல்முறை. சிதைதல் என்பது தன்மயமாக்கலுக்கு எதிர்நிலையானது. அங்கஜீவியின் உயிரணுக்களும் திசுக்களும் சிதைதல் இதில் அடங்கும்.

சமூக வாழ்வைக் கவனித்தோமானால், உதாரணமாகச் சுரண்டுவோரின் சமூகம் பகைமை கொண்ட வர்க்கங்களால் ஆனது என்பதைக் காண்கிறோம். இவ்வர்க்கங்களின் நிலைமையும் நலன்களும் எதிர்நிலையானவை, ஒன்றை ஒன்று நீக்குபவை. இவ்வர்க்கங்களாவன அடிமைகளும் அடிமைச் சொந்தக்காரர்களும், குடியானவர்களும் நிலப்பிரபுக்களும், பூர்ஷ்வாக்களும் பாட்டாளிகளும்.

எதிர்நிலைகள் அறிதலுக்கும் இயல்பானவை. உண்மையும் மருளும், சார்புள்ளதும் சார்பற்றதும் முதலிய எதிர்நிலைக் கட்டங்கள் அறிதலிலும் நிலவுகின்றன.

எதிர்நிலைகள் எதார்த்தத்தின் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் செயல்முறைகளுக்கும் இயல்பானவை. நிகழ்ச்சிகளின் முரண்பாடு பொதுத்தன்மை கொண்டது.

நிகழ்ச்சிகளுக்கு உள்ளே எதிர்நிலைகளின் பரஸ்பரப் பாதிப்பு எத்தகையது? எதிர்நிலைகளின் ஒருமையும் அவற்றின் போராட்டமும் இந்தப் பரஸ்பரப் பாதிப்பில் அடங்கியுள்ளன.

எதிர்நிலைகளின் ஒருமை, அவை ஒரே நிகழ்ச்சியின் பிரிக்க முடியாத அம்சங்கள், ஒன்றுக்கு ஒன்று காரணம் ஆகின்றன என்பதைக் குறிக்கிறது. எதிர்நிலைகள் ஒன்றிலிருந்து ஒன்று தனித்து நிலவ முடியாது. ஒவ்வொரு பொருளும் நிகழ்ச்சியுமோ எதிர்நிலைகளின் ஒருமைக்கும் பரஸ்பரப் பாதிப்புக்கும் வெளியே நிலவ இயலாது. எடுத்துக்காட்டாக, காந்தத்தின் வட துருவத்தை அதன் தென் துருவத்திலிருந்து தனிப்படுத்த முடியாது. ஏனெனில் காந்தம் அவற்றின் ஒருமையாக எப்போதும் விளங்குகிறது. இவ்வாறே சிதைவு இல்லாவிட்டால் தன்மயமாக்கலும் இராது. உயிருள்ள அங்கஜீவியோ, அவற்றின் ஒருமையும் பரஸ்பரப் பாதிப்பும் இன்றி நிலவ முடியாது.

குறித்த நிலைமைகளில் எதிர்நிலை அம்சங்கள் சமநிலை அடைகின்றன, சமமான பாதிப்பு நிகழ்த்துகின்றன என்பதிலும் எதிர்நிலைகளின் ஒருமை வெளிப்படுகிறது. சமநிலை, அதாவது எதிர்நிலைகளின் ஒரு அம்சத்தின் மிகுதல் இன்மை பொருள்களின் வளர்ச்சியில் அது நிலையாக இருக்கும் கட்டத்தைக் காட்டுகிறது. எதிர்நிலைகளின் சமநிலை ஒப்புநோக்கானது, தாற்காலிகமானது. வளர்ச்சிப் போக்கில் அது குலைகிறது. முடிவில் இந்தக் குலைவினால் ஒரு பொருளின் மறைவும் வேறொரு பொருளின் தோற்றமும் நிகழ்கின்றன. இந்தப் பொருளுடன் கூடவே

எதிர்நிலைகளின் புதிய ஒருமையும் தோன்றுகிறது. உதாரண மாக, இளம் அங்கஜீவியில் அதன் வளர்ச்சிக் காலப்பகுதியில் தன்மயமாக்கல் செயல்முறை மேலோங்கியிருக்கிறது. முதிர்ந்த அங்கஜீவியில் தன்மயமாக்கல், சிதைதல் செயல்முறைகள் சமநிலை அடைகின்றன. முதுமையடையும் அங்கஜீவியிலோ, சிதைதல் செயல்முறை மேலோங்குகிறது.

ஒருமையில் இருக்கும் போதே எதிர்நிலைகள் தமக்குள் ''போராடுகின்றன'', அதாவது ஒன்றையொன்று மறுக்கின் றன, ஒன்றையொன்று நீக்குகின்றன. எதிர்நிலைகளின் ஒருமை ஒப்புநோக்கானது என்ருல் அவற்றின் போராட்டம், வி.இ.லெனின் கற்பித்திருப்பது போல,''முழுமையானது,எப்படி வளர்ச்சியும் இயக்கமும் முழுமையானவையோ அப்படியே.''[1] பொருள்களிலும் செயல்முறைகளிலும் முரண்பாடுள்ள அம் சங்கள், போக்குக்களின் ஒருமையும் போராட்டமுமே அவற் றின் வளர்ச்சிக்கு உரிய நிபந்தனைகளாக விளங்குகின்றன. ஒரு மையில் இருக்கும் ஒன்றையொன்று நீக்குபவையான அம்சங்கள், போக்குக்களின் போராட்டம் இயக்கத்தையும் மாற்றத்தையும் தூண்டி ஊக்குகிறது. பழைய பண்புகளும் வடிவங்களும் மறை வதற்கும் புதியவை தோன்றுவதற்கும் அது இட்டுச்செல்கிறது. இயற்கை, சமூகம் இவற்றின் வளர்ச்சியும், மனிதகுலத்தின் விஞ்ஞான, நடைமுறைச் செயல்களும் மார்க்ஸீயத்தின் இந்த மிக முக்கியமான அடிப்படைக் கருத்தை விவாதத்துக்கு இடமின்றி உறுதிப்படுத்துகின்றன.

உதாரணமாக, அங்கஜீவியின் பாரம்பரியத்துக்கும் மீண்டும் தன்மயமாக்கப்படும் பொருள்களுக்கும் சூழ்நிலையின் நிலைமை களுக்கும் இடையே நிலவும் முரண்பாடு உயிருள்ள இயற்கை யின் முக்கியமான முரண்பாடுகளில் ஒன்ருகும். அங்கஜீவியில் உருவாகியுள்ள பாரம்பரியம் அதன் நிலைப்பின் வெளியீடு. ஆதலால் சூழ்நிலையில் குறிப்பிட்ட நிலைமைகள் இருப்பது அதற்குத் தேவைப்படுகிறது. சூழ்நிலையோ எப்போதும் மாறிய வண்ணமாக இருக்கிறது. அவ்வாறு அது மாறும்போது பாரம் பரியத்தின் இந்தத் தேவைகளுக்கும் சூழ்நிலையின் புதிய நிலை மைகளுக்கும் இடையே முரண்பாடு தோன்றுகிறது. சூழ்நிலை

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 317.

மிகத் தீவிரமாக மாறி, அங்கஜீவி தன்னை மாற்றி அமைத்துக் கொள்ளும் நிலையில் இல்லாவிட்டால் அது மடிந்துபோகிறது. மாறுதல்கள் அங்கஜீவியின் சாத்தியப்பாட்டின் வரம்புகளைக் கடக்கவில்லை என்றால் அது தன்னை மாற்றி அமைத்துக் கொள்கிறது, புதிய நிலைமைகளுக்குத் தன்னைத் தகவமைத்துக் கொள்கிறது. விளைவாக அது பிழைத்திருக்கிறது, தன்னைச் செவ்வைப்படுத்திக் கொள்கிறது. இதன்மூலம் தனது வாழ்திறனை அது மிகுதியாக்கிக் கொள்கிறது. தோன்றியுள்ள முரண்பாட்டின் தாற்காலிகமான, ஒப்புநோக்கான தீர்வை இது குறிக்கிறது. அப்புறம் சூழ்நிலையில் உண்டாகும் புதிய மாறுதல்களின் தொடர்பில் முரண்பாடு மீண்டும் தோன்றுகிறது, மீண்டும் தீர்க்கப்படுகிறது. இவ்வாறே மேலும் மேலும் இந்த நிகழ்முறை தொடர்கிறது. ஆகவே, பாரம்பரியத்துக்கும் சூழ்நிலைக்கும் இடையே நிலவும் மேற்குறித்த முரண்பாடும் எதிர்நிலையான இந்த இரு போக்குகளின் போராட்டமுமே ஒவ்வொரு அங்கஜீவியினதும் வளர்ச்சிக்குக் காரணம் ஆகின்றன.

சமூக வாழ்வின் முன்னேற்ற வளர்ச்சிக்கும் ஊற்றுக்கண்ணுக விளங்குவது எதிர்நிலைகளின் போராட்டமே ஆகும். உதாணமாக, சுரண்டுவோரது அமைப்பின் இயக்கு சக்தியாகத் திகழ்வது வர்க்கங்களின் போராட்டம். இதே போராட்டத்தின் வாயிலாகவும் அதனுடைய மேலான வடிவமாகிய சமூகப் புரட்சியின் வாயிலாகவுமே ஒரு சமூக அமைப்பிலிருந்து இன்னும் உயர்ந்த மற்ருெரு அமைப்புக்குப் பரிணமிப்பு நிறைவேற்றப்படுகிறது.

எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி புறநிலைப் பிரபஞ்சத்திற்கு மட்டுமே உரிய விதி அல்ல, அறிதலுக்கும் உரிய விதி ஆகும். அறிதலின் வளர்ச்சிக்கு ஊற்றுக் கண்ணுகச் செயல்படுபவை அதற்கு இயல்பான முரண்பாடுகளே. இம்மாதிரி முரண்பாடுகளில் ஒன்று புறநிலையானவற்றுக்கும் அகநிலையானவற்றுக்கும் இடையே உள்ள முரண்பாடு ஆகும். புறநிலையான இயற்கை, சமூகச் செயல்முறைகளும் அவற்றின் விதிகளும் ஒரு புறமும் மக்களால் இந்த விதிகள் அறிந்து கொள்ளப்படுதல் மறு புறமுமாக இவ்விரு புறங்களுக்கும் இடையே ஏற்படும் முரண்பாடு இது. இந்த முரண்பாடு நிரந்தரமாகத் தீர்க்கப்படுவதும் தோன்றுவதும் மீண்டும் தீர்க்கப்படுவதுமே அறிதல், விஞ்ஞானம், நடைமுறைச் செயல்கள்,

இவற்றின் வளர்ச்சிச் செயல்முறையின் சாராம்சம் ஆகும். நிலவும் ஒரு சித்தாந்தத்துக்கும் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட விவரங்களுக்கும் இடையே ஏற்படும் முரண்பாடு இந்த முரண்பாடு தோன்றுவதன் ஒரு வடிவம் ஆகும். புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட விவரங்கள் காரணமாகச் சித்தாந்தத்தில் மாறுதல்களும் சீர்திருத்தங்களும் தேவைப்படுகின்றன. சில வேளைகளில் குறித்த சித்தாந்தத்துக்குப் பதிலாக, தெரிய வந்துள்ள விவரங்களின் தொகுப்பை இன்னும் முழுமையாக விளக்கும் புதிய சித்தாந்தம் உருவாக்கப்படுவது கூட அவசியமாகிறது.

விஞ்ஞானத்தில் வெவ்வேறு அபிப்பிராயங்களுக்கும் கருத்துக்களுக்கும் போக்குக்களுக்கும் இடையே ஏற்படும் முரண்பாடுகளும் அறிதலின் வளர்ச்சிக்கு முக்கியமானவை. இந்த அபிப்பிராயங்கள், கருத்துக்கள், பழைய, புதிய சித்தாந்தங்கள் ஆகியவற்றின் போராட்டம் அறிதலை முன்னே செலுத்துகிறது. உண்மைகளை விளக்க அது உதவுகிறது. விஞ்ஞானத்தின் எவையேனும் முடிவுகள் கட்டிதட்டிய வறட்டுச் சூத்திரங்களாக மாறுவதைத் தடுக்கிறது. விஞ்ஞானத்தில் தனி நபர்கள் அல்லது குழுக்களின் ஏகபோக நிலைமையும் ஆக்கத் தன்மை கொண்ட விவாதங்கள் இன்மையும் விஞ்ஞான முன்னேற்றத்துக்குப் பெருத்த முட்டுக்கட்டை ஆகிவிடுகின்றன.

ஆக, முரண்பாடுகள் பொதுத் தன்மை கொண்டவை. எனவே, அவை பல்வகைப்பட்டவை, மிக மிக வெவ்வேறான பொருள்களுக்கும் செயல்முறைகளுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் இயல்பானவை. திட்டவட்டமான முரண்பாடுகளின் சிறப்புக்களும் தனித்தன்மைகளும் தனித்தனி விஞ்ஞானங்களால் ஆராயப்படுகின்றன. எனினும் சிறப்பு அம்சங்கள், தனித்தன்மைகள் ஆகியவற்றோடு கூடவே முரண்பாடுகளுக்குப் பொதுப் பண்புகளும் உள்ளன. இவற்றைத் தத்துவம் ஆராய்கிறது. முரண்பாடுகள் உள்ளார்ந்தவையாகவும் வெளியில் உள்ளவையாகவும், அடிப்படையானவையாகவும் அடிப்படையற்றவையாகவும், சமரசப்படுத்த முடியாதவையாகவும் சமரசப்படுத்தக் கூடியவையாகவும் இருக்கக் கூடும்.

உள் முரண்பாடுகள் குறித்த நிகழ்ச்சி அல்லது செயல்முறையின் எதிர்நிலை அம்சங்களாக உருவாகின்றன. வெளி முரண்பாடுகள் என்பவை குறித்த நிகழ்ச்சிக்கும் வேறு நிகழ்ச்சிகள் அல்லது செயல்முறைகளுக்கும் இடையில் ஏற்படும்

முரண்பாடுகள். ஒரு குறித்த நிகழ்ச்சியின் வளர்ச்சியில் நிர்ணயகரமான முக்கியத்துவம் கொண்டவை உள் முரண்பாடு கள். ஏனெனில் அவை அதன் உள்ளடக்கத்துடனும் தன்மை யுடனும் தொடர்பு கொண்டவை. அதன் வளர்ச்சிக்கும் மாற்றத்துக்கும் அடிப்படை ஆனவை. உதாரணமாக அணுவில் நேர் மின்னேற்றம் கொண்ட கருவுக்கும் எதிர் மின்னேற்றம் கொண்ட எலெக்ட்ரான்களுக்கும் இடையே உள்ள முரண் பாடு, உயிருள்ள அங்கஜீவியில் தன்மயமாக்கலுக்கும் சிதை தலுக்கும் இடையே நிலவும் முரண்பாடு, அடிமைச்சொந்தக் கார, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவச் சமூகங்களில் சுறண்டு வோருக்கும் சுறண்டப்படுவோருக்கும் இடையில் உள்ள முரண்பாடு ஆகியவை உள் முரண்பாடுகள் ஆகும். இந்த முரண்பாடுகள் குறித்த நிகழ்ச்சிகளின் இயல்பிலேயே வேரூன்றியுள்ளவை.

வெளி முரண்பாடுகளும் நிகழ்ச்சிகளின் உள் முரண்பாடு கள் வாயிலாகச் செயல்பட்டு நிகழ்ச்சிகளின் வளர்ச்சிமீதும் அவற்றின் உள் செயல்முறைகள்மீதும் பாதிப்பு விளைக்கின்றன. எனவே நிகழ்ச்சிகளை ஆராயும்போது வெளி முரண்பாடு களையும் கருத்தில் கொள்வது அவசியம்.

ஒரு அல்லது மற்றொரு நாட்டில் சோஷலிஸத்தை வெற்றி கரமாக நிறுவுவதற்கு அனேக உள் முரண்பாடுகள் தீர்க்கப் படுவது தேவை. இவற்றில் முதன்மையானவை உழைப்பாளி மக்களுக்கும் ஆட்சியிலிருந்து அகற்றப்பட்ட சுறண்டும் வர்க் கங்களுக்கும் இடையிலுள்ள முரண்பாடுகள் ஆகும். ''யார் யாரை'' (வெல்வார்கள்) என்ற பிரசித்திபெற்ற முரண்பாடு இது. சோவியத் ஆட்சிக்காலத்தில் இயற்றப் பெற்ற தமது படைப்புக்களில் வி. இ. லெனின் இதைப்பற்றிப் பல தடவை குறிப்பிட்டிருக்கிறார். இந்த முரண்பாட்டோடு கூடவே வெளி முரண்பாடுகளும் — சோஷலிஸ நாடுகளதும் முதலாளித்துவ நாடுகளதும் உலக அமைப்புக்களுக்கு இடையே உள்ள முரண் பாடுகளும்—சோஷலிஸக் கட்டுமானத்தின் போக்கு மீது பாதிப்பு நிகழ்த்துகின்றன. ஆயினும் இந்த முரண்பாடுகள் தீர்க்கப்படு வது சோஷலிஸ நாடுகளதும் முதலாளித்துவ நாடுகளதும் உள் வளர்ச்சியையே முதன்மையாகப் பொறுத்திருக்கிறது.

அதே சமயத்தில் இம்மாதிரிப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்கையில் வெளி, உள் என்பவற்றின் ஒப்புநிலையைக் கருத்

தில் கொள்வது அவசியம். இரண்டு உலக அமைப்புக்களுக்கு இடையே நிலவும் முரண்பாடுகள் அவற்றில் ஒவ்வொன்றுக்கும் ஒப்புநோக்கில் வெளி முரண்பாடுகள் என்ருல் மனிதகுலம் அனைத்திற்கும் அவை உள் முரண்பாடுகளாக விளங்குகின்றன.

ஒரு பொருள் அல்லது நிகழ்ச்சியின் வளர்ச்சியில் நிர்ணயகரமான பங்கு ஆற்றும் முரண்பாடு அடிப்படை முரண்பாடு எனப்படும். இது குறித்த பொருள் அல்லது நிகழ்ச்சியின் தன்மையைச் சார்ந்தது. பிற முரண்பாடுகளும் பொருளின் வளர்ச்சி அனைத்தினது இயல்பும் இந்த முரண்பாட்டைப் பொறுத்துள்ளன. உதாரணமாக, பல உயிரியல் அறிஞர்களின் கருத்துப்படி, உயிருள்ள அங்கஜீவியின் அடிப்படை முரண்பாடு தன்மயமாக்கல், சிதைதல், இவற்றின் பரஸ்பரப் பாதிப்பே ஆகும்.

அடிப்படை முரண்பாடு ஒவ்வொரு சமூக பொருளாதார அமைப்புக்கும், ஒவ்வொரு காலக்கட்டத்துக்கும் இயல்பானது. முதலாளித்துவத்தின் அடிப்படை முரண்பாடு என்னவென்ருல், உற்பத்தியின் சமூக இயல்புக்கும் உடைமையாக்கிக்கொள்ளுவதன் தனி முதலாளித்துவ வடிவத்துக்கும் இடையே உள்ள முரண்பாடுதான். முதலாளித்துவத்தின் மற்ற எல்லா முரண்பாடுகளையும் (பாட்டாளி வர்க்கத்துக்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும், நாடு முழுவதற்கும் விரல்விட்டு எண்ணக் கூடிய ஏகபோகவாதிகளுக்கும், உற்பத்திக்கும் நுகர்வுக்கும் இடையே உள்ள முரண்பாடுகளும் ஏனைய பிறவும்) இதுவே நிர்ணயிக்கிறது. இந்த முரண்பாடு எவ்வளவு வளர்ந்திருக்கிறது, எந்த அளவுக்குக் கூர்மையாகியிருக்கிறது என்பதையே பொறுத்திருக்கிறது முதலாளித்துவத்தின் தலைவிதி.

தற்போதையக் காலக்கட்டத்தின் அடிப்படை முரண்பாடாக விளங்குவது இரு உலக அமைப்புக்களுக்கு இடையே நிலவும் முரண்பாடு ஆகும். இந்த முரண்பாட்டின் வளர்ச்சியையும் தீர்வையுமே மனிதகுல வளர்ச்சிப் போக்கு சார்ந்திருக்கிறது. சோஷலிஸ அமைப்பு இந்த முரண்பாட்டின் தலையான, வலிமையில் மிகுந்துகொண்டுபோகும் அம்சம் ஆகும். உலகம் முழுவதிலும் சோஷலிஸமும் கம்யூனிஸமும் வெற்றி பெறுவதுடனேயே இந்த முரண்பாடு தீரும்.

அடிப்படை முரண்பாடு பற்றிய வரையறுப்பு ஆராய்ச்சி முறை இயல் நோக்கில் மிகவும் முக்கியமானது. ஏனெனில்

எந்த ஒரு செயல்முறையினதும் அடிப்படை முரண்பாட்டை வெளிப்படுத்துவது அதன் தன்மையைக் கண்டறிவது ஆகும்.

சமரசப்படுத்த முடியாதவை, சமரசப்படுத்தக் கூடியவை என்ற இரு வகை முரண்பாடுகள் சமூக வாழ்வில் தனிப் பிரித்துக் காணப்படுகின்றன. உற்பத்திச் சாதனங்கள் மீது தனியார் சொத்துரிமை நிலவுவதும், ஒன்றையொன்று நீக்கும் நலன்கள் கொண்ட வர்க்கங்களாகச் சமூகம் பிரிவு பட்டிருப்பதும் முரண் பாடுகளின் சமரசப்படுத்த முடியாத தன்மைக்குக் காரணமாக அமைகின்றன. இவை கூரிய, பகைமையுள்ள முரண்பாடுகள். இவற்றின் இயல்பு என்னவென்றால் எந்தச் சமூக அமைப்பின் நிலைமைகளில் இவை தோன்றினவோ, அந்த நிலைமைகளில் இவை தீர்க்கப்பட முடியாது என்பதே. சமரசப்படுத்த முடி யாத முரண்பாடுகள் வர்க்கப் போராட்டத்தின் மூலமாகவும் சமூகப்புரட்சி மூலமாகவும் தீர்க்கப்படுகின்றன. புரட்சி பழைய சமூக அமைப்பை ஒழித்துக்கட்டிவிட்டுப் புதியதை நிறுவு கிறது. இத்தகைய முரண்பாடுகள் அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவச் சமூகங்களுக்கு இயல்பான வை. முதலாளித்துவத்தின் அடிப்படை முரண்பாடு சமரசப் படுத்த முடியாத இயல்பு கொண்டது. இது வளர்ச்சி அடைந்து முதலாளித்துவத்தைத் தவிர்க்க முடியாத அழிவுக்கு இட்டுச் செல்கிறது.

தற்கால முதலாளித்துவத்தின் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள், உழைப்புக்கும் மூலதனத்துக்கும், ஏகபோகங் களுக்கும் மக்களுக்கும், முதலாளித்துவ அரசுகளுக்கும் இடை யிலுள்ள முரண்பாடுகளும் இவைபோன்ற பிறவும் ஆகும். இம்முரண்பாடுகள் மேலும் மேலும் தீவிரமும் ஆழமும் ஆகிக் கொண்டுபோகின்றன. முதலாளித்துவத்தின் விதிக்கு முடிவு கட்டப்பட்டுவிட்டது என்பதை, மொத்தத்தில் முதலாளித்துவச் சமூகம் சோஷலிஸப் புரட்சிக்குப் பக்குவம் ஆகிவிட்டது என் பதை இந்த விஷயம் பிரமாணப்படுத்துகிறது.

முதலாளித்துவ, சோஷலிஸ நாடுகளின் உலக அமைப் புக்களுக்கு இடையே உள்ள முரண்பாடுகளும் சமரசப்படுத்த முடியாத தன்மை கொண்டவை.

மிக முக்கியமான நலன்கள் பொதுவாக இருக்கும் நிலையில் சமூகத்தின் வெவ்வேறு சமுதாயக் குழுக்களுக்கு இடையே தோன்றுகின்றன சமரசப்படுத்தக் கூடிய முரண்பாடுகள். குட்டி

பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் தொழிலாளி வர்க்கத்துக்கும் இடையே உள்ள முரண்பாடுகள் முதலாளித்துவத்தின் நிலைமைகளில் சமரசப்படுத்த முடியாதவை அல்ல. குட்டி பூர்ஷ்வா வர்க்கத்துக்குத் தனி உடைமை உள்ளது (குடியானவர்களிடம் நிலமும் கால்நடைகளும் வேளாண்மைச் சாதனங்களும் உள்ளன; நகரக் குட்டி பூர்ஷ்வாக்களுக்குச் சிறு தொழில் நிலையங்கள், கடைகள் முதலியன சொந்தமாயிருக்கின்றன). இந்த உடைமையைப் பாதுகாக்க அது முயல்கிறது. தொழிலாளி வர்க்கம் தனி உடைமை அற்றது. எல்லா விதத் தனியார் சொத்துரிமையையும் அழிப்பதில் அது அக்கறை கொண்டிருக்கிறது. இந்தக் காரணத்தால் குட்டி பூர்ஷ்வாக்களதும் தொழிலாளிகளதும் நலன்களுக்கு இடையே ஓரளவு முரண்பாடு ஏற்படுகிறது. ஆனால் இரு வர்க்கங்களும் ஏகபோக பூர்ஷ்வா வர்க்கத்தின் அடக்குமுறைக்கு உள்ளாகியிருக்கின்றன, அதைத் தீர்த்துக்கட்ட விரும்புகின்றன. எனவே இவ்விரு சமுதாயக் குழுக்களின் நலன்களும் முதன்மையான அம்சங்களில் ஒன்றாயிருக்கின்றன. இதனால் முதலாளித்துவத்துக்கு எதிரான போராட்டத்தில் குட்டி பூர்ஷ்வா வர்க்கத்தைத் தன் தரப்பில் சேர்த்துக்கொள்வது தொழிலாளி வர்க்கத்துக்குச் சாத்தியம் ஆகிறது. இவற்றுக்கு இடையில் உள்ள முரண்பாடுகள் சோஷலிஸக் கட்டுமானத்தின் போது முடிவாகத் தீர்க்கப்படுகின்றன.

ஆனால் சமரசப்படுத்தக்கூடிய முரண்பாடுகள் முதலாளித்துவச் சமூகத்திலும் வர்க்க முரண்பாடுகள் கொண்ட பிற சமூக அமைப்புக்களிலும் சமூக அமைப்பின் சிறப்பை வெளியிடும் பிரதானமான, இயல்பைக் காட்டும் முரண்பாடுகளாக இருப்பதில்லை. இவை பிரதானமாகவும் இயல்பைக் காட்டுபவையாகவும் அமைவது சமூகத்தின் எல்லாச் சமுதாயக் குழுக்களதும் சமூக, அரசியல், கருத்து ஒருமை உருவாகிக்கொண்டிருக்கும் சோஷலிஸச் சமூகத்தில் தான். இந்த ஒருமைக்குக் காரணமாக இருப்பது உற்பத்திச் சாதனங்கள் சமூக உடைமை ஆவதே. சோஷலிஸச் சமூகத்தினது முரண்பாடுகளின் சமரசப் படுத்தக் கூடிய இயல்பு அவற்றின் மிக முக்கியமான தனிச் சிறப்பு ஆகும். இங்கே சமூகத்தின் எல்லா வர்க்கங்களுக்கும் சமுதாயக் குழுக்களுக்கும் உறுப்பினருக்கும் அடிப்படையான பொருளாதார நலன்களும் ஒழுக்கநெறி, அரசியல் கோட்பாடுகளும் ஒன்றே ஆனவை. புதியதற்கு ஆதரவாக மிகப் பெரும்

பான்மையான மக்கள் செயல்படுகிருர்கள். பின்தங்கியவை யும் அர்த்தமற்ற சடங்குமுறை கொண்டவையும் வழக்கிறந் தவையுமான எல்லாவற்றையும் எதிர்த்துப் போராடியவாறு இவர்கள் ஒரே பொதுக் குறிக்கோளை நோக்கி முன்னேறு கிருர்கள்.

இவை எல்லாவற்றையும் மொத்தமாகப் பரிசீலனை செய் தால், சோஷலிஸம் நிலவுகையில் முரண்பாடுகளை வெளிப் படுத்துவதற்கும் அகற்றுவதற்கும் உரிய புது முறைகளும் வடிவங்களும் உருவாகின்றன என்பது புலனுகிறது. இங்கே முரண்பாடுகளது தீர்வுகளின் வடிவங்களாக விளங்குபவை வர்க்க முரண்பாடுகள் கொண்ட அமைப்புக்களில்போல வர்க்கப் போராட்டமும் புரட்சியும் அல்ல, மக்கள் அனைவரதும் முயற்சி களும், சமூகத்தின் புதிய இயக்கு சக்திகளின் செயலுமே. சமூக, அரசியல், கருத்து ஒருமை, நாட்டினங்களின் நட்பு, தேசபக்தி ஆகியன இந்த இயக்கு சக்திகளில் சில. தவிரவும், முந்திய அமைப்புக்களில் முரண்பாடுகள் தற்செயலாகக் கண் டறியவும் தீர்க்கவும் பட்டுவந்தன. மாருக, சோஷலிஸ அமைப் பில், கம்யூனிஸ்ட் கட்சியால் வழிநடத்தப்படும் மக்களின் உணர்வுபூர்வமான செயல்களின் வாயிலாக அவை வெளிப் படுத்தவும் தீர்க்கவும் படுகின்றன. கம்யூனிஸ்ட் கட்சியோ, சமூக வாழ்வின் அறியப்பட்ட விதிகளின் அடிப்படையில் தனது கொள்கையை நிறுவுகிறது.

இந்தக் காரணத்திஞலும் பழைய அமைப்பைக் காப்பதில் அக்கறை கொண்ட ஒழுங்கமைக்கப்பட்ட சமூகச் சக்திகள் சோ ஷலிஸ அமைப்பில் இல்லாமையாலும் சமரசப்படுத்தக் கூடிய முரண்பாடுகள் ஒப்புநோக்கில் உரிய தருணத்தில், அவை அபாய கரமாகக் கூர்மை அடைவதற்கு முன்பே, இங்கே தீர்க்கப் படக் கூடும். இத்தகைய முரண்பாடுகளின் தீர்வுக்கு நிலவும் அமைப்பின் அஸ்திவாரங்களை மாற்றுவது தேவைப்படுவதில்லை. மாருக அது இந்த அஸ்திவாரங்களை மேலும் வலுப்படுத்துகி றது. சோஷலிஸச் சமூகத்தின் வளர்ச்சிக்கும் கம்யூனிஸத்தை நோக்கி அதன் இயக்கத்துக்கும் அது துணை புரிகிறது.

உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளின் தனித் தனி அம்சங்களுக்கும் இடையிலும், சமூக உறுப்பினரின் இடை யருது அதிகரிக்கும் தேவைகளுக்கும் உற்பத்தியின் வளர்ச்சித் தரத்துக்கும் இடையேயும், சோஷலிஸ வாழ்க்கைக்கும் மக்களின்

உணர்விலுள்ள பழைமையின் மீத மிச்சங்களுக்கும் இடையிலும் உள்ள முரண்பாடுகளும் வேறு முரண்பாடுகளும் சோஷலிஸச் சமூகத்தில் கம்யூனிஸக் கட்டுமானம் நிகழ்கையில் தீர்க்கப்படுகின்றன. இவற்றைத் தீர்ப்பதற்குரிய பிரதான வழிகளாவன உற்பத்திச் சக்திகளை எல்லா வகையிலும் வளர்வுறுத்தலும் உற்பத்தி உறவுகளைச் செவ்வைப்படுத்தலும் உழைப்பாளி மக்களைக் கம்யூனிஸ முறையில் பயிற்றலும்.

சோஷலிஸம் என்பது வரலாற்றிலேயே முதன்முறை உணர்வு பூர்வமாக, திட்டத்துக்கு ஏற்ப வளர்ச்சி அடைந்துவரும் சமூகம் ஆகும். திட்டப்படி அமைந்த சமூக வாழ்வு இங்கே புறநிலையான அவசியம் ஆகிறது. இதுதான் புதிய, சோஷலிஸ அமைப்பின் மிகப் பெரும் மேம்பாடு. தொடர்ந்து முன்னேறும் வளர்ச்சிக்கான முன்னறியா வாய்ப்புக்களை இது சோஷலிஸ அமைப்புக்கு அளிக்கிறது.

ஆனால் இந்த மேம்பாடுகளும் வாய்ப்புக்களும் செயல்படுத்தப்படுவதற்கு, புறநிலையான பொருளாதாரச் செயல்முறைகளின் தன்மையை ஆழமாக உட்புகுந்து அறிவதும், புறநிலை வாய்ப்புக்களுக்கும் அவை அறியப்படுதல், செயல்படுத்தப்படுதல் ஆகியவற்றுக்கும் இடையில் ஏற்படும் முரண்பாடுகளை உரிய சமயத்தில் தீர்ப்பதும் அவசியம் ஆகின்றன. தேசியப் பொருளாதாரத் திட்டங்கள் ஆழ்ந்த முறையிலும் ஆதாரபூர்வமாகவும் வகுக்கப்படுவது இந்த முரண்பாடுகளைத் தீர்ப்பதற்கான ஒரு வழி ஆகும்.

தேசியப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கும் நிர்வாக வடிவங்களுக்கும் இடையில் ஏற்படும் முரண்பாடு இந்த வகையானவற்றைச் சேர்ந்தது. சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசும் நாட்டில் தேசியப் பொருளாதார நிர்வாகத்தை மேம்படுத்துவதற்காக இம்மாதிரி முரண்பாட்டைத் தீர்க்க உதவும் நடவடிக்கைகளை ஒழுங்காக மேற்கொண்டுவருகின்றன. இவற்றின் ஒரு பகுதியாக ஜனநாயக மத்தியத்துவக் கோட்பாடு மேலும் விரிவாகிறது. அதோடு, மத்தியத்துவமும் ஜனநாயகச் சுயநிர்வாகமும் தனி வகை எதிர்நிலைகளாகச் செயல்படுகின்றன: இவை ஒன்றுக்கு ஒன்று காரணம் ஆகின்றன, அதே சமயம் தம்மில் ஒன்று ஒருதலையான வளர்ச்சி அடைந்து விடாதவாறு, ஒன்றின் பங்கு மிகைப்படுத்தப்பட்டு விடாதவாறு தடுக்கின்றன. கண்டிப்பாக ஒழுங்கமைக்கப்பட்ட

சிக்கலான சமூக உறுப்பி முறையாகச் செயல்படுவதற்கு இவ்விருஅம்சங்களும் இன்றியமையாதவை.

ஒன்றித்த அரசாங்கத் திட்ட வகுப்பைத் தொழில் நிலையங்களின் முழுமையான செலவுத் தற்பொறுப்புடனும், மையப் படுத்தப்பட்ட தொழில்களின் நிர்வாகத்தை விரிவான ஸ்தலப் பொருளாதார முன்முயற்சியுடனும், ஒன்றித்த நிர்வாகத் தலைமைக் கோட்பாட்டை உற்பத்தித் தொழிலர் குழுக்களுடைய பங்கின் அதிகரிப்புடனும் பொருந்துமாறு இணைக்கின்றன தேசீயப் பொருளாதார நிர்வாகச் சீர்திருத்தத்திற்காகக் கட்சியால் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள்.

மேற்கூறப்பட்டுள்ளவை எல்லாவற்றிலும் இருந்து தெரிய வருவது என்னவென்ருல், எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி எல்லாவகை இயக்கத்தினதும் வளர்ச்சியினதும் சாரத்தை வெளியிடுகிறது என்பதும், ஒவ்வொரு நிகழ்ச்சியுடையவும் பிரிக்க முடியாத அம்சங்களான உள் எதிர்நிலைகளின் பரஸ்பரப் பாதிப்பின் போக்கில் இயக்கமும் வளர்ச்சியும் நடக்கின்றன என்பதுமாம். இந்தப் பரஸ்பரப் பாதிப்பே எல்லா நிகழ்ச்சிகள், செயல்முறைகளின் இயக்கத்துக்கும் வளர்ச்சிக்கும் ஊற்றுக்கண்ணுக விளங்குகிறது.

எவையேனும் பொருள்களேயோ அல்லது நிகழ்ச்சிகளேயோ ஆராயும்போது அவற்றின் முரண்படும் தன்மையை ஆதாரமாகக் கொள்ள வேண்டும்; எதிர்நிலையான அம்சங்கள், பண்புகள், போக்குகள் என்ற வகையில் அவற்றைப் பற்றிச் சிந்திக்க வேண்டும்; இந்த அம்சங்களின் பரஸ்பரத் தொடர்பைத் தெளிவுபடுத்த வேண்டும். ''ஒன்ருனது இரு பாகங்களாகப் பிரிவதும் அதன் முரணுன பகுதிகள் பற்றிய அறிதலுமே... இயக்க இயலின் சாரம் ஆகும்''[1] என்று எழுதினுர் வி.இ.லெனின். ஒவ்வொரு பொருளிலும் நிகழ்ச்சியிலும் காண வேண்டியது நேரானதை அல்லது எதிரானதை மட்டுமே அல்ல, புதியதை அல்லது பழையதை மட்டுமே அல்ல, இவற்றில் ஒவ்வொன்றையும் தனித் தனியாகவும் அல்ல. அவற்றின் ஒருமையை, அவற்றின் பரஸ்பர உறவை, அவற்றின் முரண்பாடுள்ள பரஸ்பரப் பாதிப்பை வெளிப்படுத்த வேண்டும். பொருள்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 316.

களையும் நிகழ்ச்சிகளையும் இவ்வாறு கூர்ந்து நோக்கினல்தான் அவற்றின் தன்மையை வெளிப்படுத்துவது இயலும். ஆகவே, இயக்க இயல் கோருவது போல, நிகழ்ச்சிகளை அவற்றின் வளர்ச்சியிலேயே ஆராய்வதற்கு அவற்றுக்கு இயல்பான எதிர் நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய நோக்கு நிலையிலிருந்து அவற்றைக் கூர்ந்து கவனிப்பது இன்றியமையாதது. ''பிரபஞ்சத்தின் எல்லாச் செயல்முறைகளையும் அவற்றின் 'சுய இயக்கத்தில்', அவற்றின் தானுக ஏற்படும் வளர்ச்சியில், அவற்றின் உயிரோட்டமுள்ள வாழ்க்கையில் அறிவதற்கான நிபந்தனை, எதிர்நிலைகளின் ஒருமையாக அவற்றை அறிவது தான். எதிர்நிலைகளின் 'போராட்டம்' தான் வளர்ச்சி''[1] என்று குறித்தார் வி. இ. லெனின்.

ஆராயப்படும் நிகழ்ச்சிகளிலுள்ள முரண்பாடுகளை வெளிப்படுத்துவது இந்த நிகழ்ச்சிகளின் வளர்ச்சியை இயக்கும் சக்திகளைக் கண்டறியத் துணை புரிவதோடு அவற்றின் வளர்ச்சிக்குரிய விதிகளை அறிந்துகொள்ளவும் உதவுகிறது. இதன் காரணம் என்னவென்ருல் ஏதேனும் ஒரு நிகழ்ச்சியின் பிரதான உள்ளடக்கமாகவும் அதன் இயக்கத்தின் ஊற்றுக்கண்ணுகவும் விளங்கும் சிறப்பான முரண்பாடுகள் அதன் வளர்ச்சிக்கு உரிய முக்கிய விதிகளுடன் தொடர்பு கொண்டிருப்பதே. எனவே, ஒரு குறித்த நிகழ்ச்சியின் தன்மையையும் அதன் வளர்ச்சிக்கு உரிய அடிப்படை விதிகளையும் கண்டு அறிவதற்கு, அதற்கு இயல்பாயுள்ள சாராம்சமான முரண்பாடுகளையும் அவற்றின் முறையையும் பரஸ்பரத் தொடர்பையும் தெரிந்துகொள்வதும் குறித்த நிலைமைகளில், குறித்த வளர்ச்சிக் கட்டத்தின்மீது பாதிப்பு விளைக்கும் பிரதான முரண்பாடுகளைத் தேடிக் காண்பதும் இன்றியமையாதவை என்று ஆகிறது. ''உண்மையான அர்த்தத்தில் இயக்க இயல் என்பது பொருள்களின் தன்மையிலேயே முரண்பாடுகளை ஆராய்ந்து அறிவதாகும்''[2] என்று எழுதினர் வி. இ. லெனின்.

பொருள்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் இயல்பான முரண்பாடுகளைப் புறக்கணிக்கக் கூடாது. அவற்றைக் கண்டறியவும் தீர்க்கவும் வேண்டும்.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 317.

[2] அதேநூல், பக்கம் 227.

முரண்பாடுகளும் அவற்றைத் தீர்ப்பதற்கான முறைகளும் பல்வகைப்பட்டவை. ஆதலால் நடைமுறையில் எதிர்ப்படும் முரண்பாடுகளின் சிறப்புத் தன்மைகளைத் தெரிந்துகொள்ள வும் குறித்த ஸ்தூல நிலைமைகளில் அவற்றைத் தீர்ப்பதற்கு மிக ஏற்ற முறைகளைத் தேடிக் காணவும் வேண்டும்.

எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி வளர்ச்சியின் அடிப்படை உள்ளடக்கத்தையும் அதன் ஊற்றுக் கண்ணையும் வெளியிடுகிறது. எனினும் வளர்ச்சியின் எல்லா அம்சங்களையும் அது வெளிப்படுத்தித் தீர்த்துவிடுவதில்லை. வளர்ச்சிச் செயல்முறையில் புதிய பண்பு எப்படி உருவாகிறது என்பதையும் வளர்ச்சியின் பொதுப் போக்கு எத்தகையது என்பதையும் அது காட்டுவதில்லை. இவையும் வளர்ச்சியின் வேறு சில அம்சங்களும் இயக்க இயலின் பிற விதிகளால் விளக்கப்படுகின்றன.

## § 3. அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தல்

பொருள்கள், நிகழ்முறைகளின் அளவு அம்சங்கள், பண்பு அம்சங்கள் போன்ற எதிர்நிலைகளின் பரஸ்பரத் தொடர்பை அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமிப்பது பற்றிய விதி வெளியிடுகிறது. இந்த விதியின் சாரத்தை விவரிப் பதற்கு முன்னுல் பண்பு என்பது என்ன, அளவு என்பது என்ன என்று கூறுவது அவசியம் ஆகிறது.

எந்தப் பொருளும் எந்த நிகழ்ச்சியும் ஒப்பு நோக்கில் நிலைப்புள்ளவை, திட்டவட்டமானவை. தமக்கே இயல்பான சிறப்புத் தன்மையை அவை எப்போதும் கொண்டிருக்கின்றன. இதனுலேயே அவை ஒன்றிலிருந்து ஒன்று வேறுபடுகின்றன. உதாரணமாக, உயிர் இயற்கை உயிரற்றதிலிருந்து வேறு படுகிறது. விலங்குகள், தாவரங்களின் இனங்கள் பல்வேருக இருக்கின்றன. அதே சமயம், எல்லாப் பொருள்களும் ஏதேனும் ஓர் அம்சத்தில் ஒன்றை ஒன்று ஒத்திருக்கின்றன. அவற்றுக்குப் பொதுவான ஏதேனும் ஒரு அம்சம் இருக்கிறது. உயிருள்ள இயற்கையும் உயிரற்ற இயற்கையும் பொருளியலானவை. எல்லா விலங்கினங்களும் தாவர இனங்களும் பொதுவான வாழ்க்கைப் பண்புகள் பெற்றிருக்கின்றன.

பொருள்களின் வேறுபாட்டுக்கும் ஒப்புமைக்கும் உரிய அம்சங்கள் பண்பு என்ற கருதுகோளில் வரையறுக்கப்படுகின்றன. ஒரு பொருளின் இயற்கையையும் சிறப்பையும் வெளியிடும் முக்கிய அம்சங்களின் தொகுப்பு **பண்பு** என அழைக்கப்படுகிறது. ஒரு பொருளின் ஒப்புநோக்கான நிலைப்பையும் வரையறுப்பையும் பண்பு சுட்டிக் காட்டுகிறது. பொருளின் இந்த வரையறுப்பு அதன் இருத்தலுடன் பிரிக்க முடியாதவாறு தொடர்பு கொண்டது. ஒரு குறித்த பொருளின் பண்பில் ஏற்படும் மாற்றம் அந்தப் பொருளிலேயே ஏற்படும் மாற்றமே ஆகும். உதாரணமாக உயிருள்ள அங்கஜீவியில் உயிர்ப்பொருள் இரசாயன மாற்றம் நின்றுவிடுவது அதன் இறப்பையும் அழிவையும் குறிக்கிறது.

பண்புகள் பொருள்களுக்கு உரியவை. பொருள்கள் போன்றே அவையும் புறநிலையானவை. அதே சமயம் பண்புகள் ஒப்பு நோக்கானவை. பொருள்களில் ஏற்படும் மாற்றங்களுடன் கூடவே அவை மாறுகின்றன. ஒவ்வொரு பொருளும் மற்றப் பொருள்களுடன் ஏதேனும் ஒரு பொதுத் தன்மை கொண்டிருக்கிறது ஆகையால் ஒரு பொருள் வேறு ஒன்ருக மாறுவதற்கு, ஒரு பண்பிலிருந்து மற்ருெரு பண்புக்குப் பரிணமிப்பதற்கு வாய்ப்பு உள்ளது.

பொருள்களின் பண்புகளை நிச்சயப்படுத்திக் கொள்வது எல்லாவகை அறிதலுக்கும் இன்றியமையாத அம்சங்களில் ஒன்ருகும். ஒரு பொருளை ஆழ்ந்து அறிவதற்கு அதை மற்றப் பொருள்களிலிருந்து வேறுபடுத்திக் காண்பதும் அவற்றுக்கு இடையே உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளை நிச்சயப்படுத்திக் கொள்வதும் அவற்றைத் தரம் பிரிப்பதும் அவசியம் ஆகும்.

ஒவ்வொரு பொருளும் தனது பொதுவான, முழுமையான தன்மைச்சித்திரிப்பாக விளங்கும் அடிப்படைப் பண்பு கொண்டிருக்கிறது என்பது பண்பு பற்றி நாம் கொடுத்துள்ள வரையறுப்பில் அடங்கியிருக்கிறது. அதே சமயம், எந்தப் பொருளிலும் பிரதானமற்ற வேறு அநேகப் பண்புகளும் உள்ளன. பிரதானப் பண்புகள் போலவே பொருள்களின் பிரதானமற்ற பண்புகளும் அவற்றின் இயல்புகள் வாயிலாக வெளிப்படுகின்றன.

மற்றப் பொருள்களுடன் ஒரு பொருளின் பரஸ்பரப் பாதிப்பின்போது அதன் பண்பின் வெளிப்பாடே இயல்பு எனப்

படுவது. அது ஏதேனும் ஒரு அம்சத்திலிருந்து பொருளின் தன்மையைச் சித்திரிக்கிறது. ஒரு பொருளுக்கு உள்ள பண்புகள் பல. அவற்றில் சில மாறுவதாலோ மறைவதாலோ பொருள் மாறிவிடுவதில்லே. இயல்புகள் தங்கள் முக்கியத்துவத்தின்படி வெவ்வேருனவை. பொருளின் அடிப்படையான, சாராம்சமான இயல்பு அதன் பண்புக்கு மிக நெருங்கியது.

பண்பைத் தவிர, அளவு வரையறுப்பாலும் பொருள்கள், செயல்முறைகளின் தன்மை விவரிக்கப்படுகிறது. அளவு தான் மட்டுமே நிலவுவதில்லே. எப்போதுமே அது ஏதேனும் ஒரு பண்பின் அளவாக இருக்கிறது. உதாரணமாக, ஒரு மனிதன் குறிப்பிட்ட வயது உள்ளவனுக இருக்கிருன், அவன் அதிக அல்லது குறைந்த உயரம் உள்ளவனுகவும் குறித்த எடை உள்ளவனுகவும் இருக்கலாம். இவ்வாறே பிறவும். இவை எல்லாம் அளவு விவரணங்கள்.

அளவு என்பது, குறிப்பிட்ட பண்பினது வளர்ச்சியின் பரிமாணம், கட்டம், வேகம், தரம், வியாபகம், தீவிரம் ஆகியவற்றை விளக்கும் வரையறுப்பு ஆகும். பெரும்பாலும் அது எண்ணிக்கையால் வெளியிடப்படுகிறது. நிகழ்ச்சிகள், செயல்முறைகளேப் பண்புகளின் நோக்கில் மட்டும் அல்ல, அளவுகளின் நோக்கிலும் பகுத்தாய்வது எதார்த்தத்தை ஆழ்ந்து அறிவதற்கு இன்றியமையாதது. ஒரு விஞ்ஞானம் எவ்வளவு வளர்ச்சி அடைந்திருக்கிறதோ அவ்வளவு அதிகமாக அது அளவுபற்றிய விவரணங்களேக் கையாளுகிறது, பொருள்களே அளவுப் பகுப்பாய்வுக்கு உட்படுத்துகிறது.

பொருள்களின் அளவு அம்சங்களும் பண்பு அம்சங்களும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்பு உள்ளவை. அவை பிரிக்க முடியாத ஒருமை கொண்டவை, ஒன்றுக்கு ஒன்று காரணமாக இருப்பவை, எந்தப் பொருளுடையவும் எந்த நிகழ்ச்சியுடையவும்இரு தரப்புக்களாக விளங்குபவை. பொருளின்அளவு, பண்பு அம்சங்களின் ஒருமை பரிமாணம் எனப்படும். குறிப்பிட்ட பண்புக்குப் பொருந்துவது எந்தவிதமான அளவும் அல்ல, ஆனுல் கண்டிப்பாக வரையறுக்கப்பட்ட அளவு மட்டுமே என்பதை வெளியிடுகிறது பரிமாணம் என்ற வகைப்பிரிவு. உதாரணமாக, ஒவ்வொரு ஒலிக்கும் மீள்விசையுள்ள ஊடகத்தினது குறிப்பிட்ட அதிர்வெண் பொருந்துகிறது. அதே போல

ஒவ்வொரு வண்ணத்துக்கும் குறிப்பிட்ட மின்காந்த அதிர்வெண் பொருந்துகிறது.

பண்பில் மாற்றம் இல்லாமல் அளவில் மாற்றம் ஏற்படுவது குறித்த வரம்புகளுக்குள் மட்டுமே முடியும். இந்த வரம்புகளே பொருளின் பரிமாணத்தை உருவாக்குகின்றன. அளவு மாற்றங்கள் இந்த வரம்புகளை எட்டியதும் பரிமாணம் சிதைகிறது, பொருளின் பண்பு மாறத் தொடங்குகிறது. உதாரணமாக நீரினுடைய திரவ நிலையின் பரிமாணம் (முறையான வாயு மண்டல அழுத்தத்தில்) $0°$ யிலிருந்து $100°$ வரை ஆகும். வெப்ப நிலை மாற்றங்கள் இந்த வரம்புகளுக்கு வெளியே போய்விட்டால் நீர் வாயுநிலைக்கோ திட நிலைக்கோ மாறிவிடுகிறது.

பரிமாணம் என்ற தத்துவக் கருதுகோள் குறித்த அர்த்தத்தில் சாதாரண அனுமானத்துக்குப் பொருந்துவது. இதன்படி பரிமாணம் சிதையும்போது நேரானது எதிரானது ஆகிவிடுகிறது, பயனுள்ளது தீயது ஆகிவிடுகிறது. உயிர் வாழ்க்கைக்கும் ஆரோக்கியத்துக்கும் இன்றியமையாதது ஆன ஊட்டம்கூட அளவு கடந்துவிடும்போது உயிர்ப்பொருள் இரசாயன மாற்றம் சிதைவதற்குக் காரணம் ஆகிறது, ஆரோக்கியத்தைக் கெடுக்கிறது.

எனவே, பரிமாணம் சிதையும்போது பழைய பண்பு புதிய அளவுக்குப் பொருந்தாமல் போய்விடுகிறது. அவற்றுக்கு இடையே முரண்பாடுகள் தோன்றித் தீவிரம் அடைகின்றன. புதிய பண்பு உருவாகி, புதிய பரிமாணம் தோன்றியதும் இவை தீர்ந்துவிடுகின்றன. இந்த நிகழ்முறையே அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தல் என அழைக்கப்படுகிறது.

அளவு மாற்றங்களுக்கும் பண்பு மாற்றங்களுக்கும் உள்ள தொடர்பு விதிமுறைக்கு உட்பட்டது. அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தல் பற்றிய விதியை விவரிக்கையில் எங்கெல்ஸ் பின்வருமாறு எழுதினர்: ''...இயற்கையில் பண்பு மாற்றங்கள்... சடப்பொருள் அல்லது இயக்கத்தின் அளவு அதிகரிப்பின் வாயிலாகவோ, அளவு குறைவதன் வாயிலாகவோ நிகழ முடியும்....''[1] அதாவது,

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''இயற்கையின் இயக்க இயல்'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 385.

அளவு மாற்றங்களின் வாயிலாகவே பண்பு மாற்றங்கள் ஏற்படுகின்றன.

இந்த விதி பொதுத் தன்மை கொண்டது. அது புறநிலைப் பிர பஞ்சத்திலும் அறிதலிலும் செயல்படுகிறது. உதாரணமாக உயி ரற்ற இயற்கையில், ஒரு இரசாயனத் தனிமம் மற்ருென்ருகப் பரிணமித்தல் போன்ற பண்பு மாற்றம் தொடக்கத் தனிமத்தின் அணுக்கருவில் புரோட்டோன்களின் அளவு மாறுவதன் வாயி லாகவே நிகழ்கிறது. இயற்கை நிலைமைகளில் தனிமங்கள் இவ்வாறே மாறுகின்றன. சோதனையாளர்கள் இத்தகைய முறையினுலேயே அவற்றை மாற்றக் கற்றுக்கொண்டிருக்கிருர் கள். இயற்கையில் முன்னர் காணப்படாத அனேகப் புதுத் தனிமங்களைப் (புளுட்டோனியம் முதலியவற்றைப்) பெறுவது இதனுல் விஞ்ஞானிகளுக்கு முடிந்திருக்கிறது.

முதல் கட்டங்களில் சிறிதளவாகவே ஏற்படும் அங்கஜீவி களின் அளவு மாற்றங்கள் ஒன்று திரண்டு பண்பு மாற்றங்கள் ஏற்படுவதற்கு, புதிய விதங்களும் இனங்களும் தோன்றுவதற் குக் காரணம் ஆகலாம். பயிர்களின் புதிய ரகங்களையும் பிராணி களின் புதிய வகைகளையும் உண்டாக்குவதற்கு இந்த நிகழ்ச்சி யைக் கையாள மனிதர்கள் கற்றுக்கொண்டிருக்கிருர்கள்.

அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமிப்பது சமூக வாழ்வின் எல்லாத் துறைகளிலும்கூட நிகழ்கிறது. கூட் டுறவு, அதாவது ஒரு உற்பத்திச் செயல்முறையில் உள்ள பல தொழிலாளர்களின் ஒன்றிணைவு, புதிய சமூக உற்பத்திச் சக்தி யை உருவாக்குகிறது. அதில் உறுப்பு வகிக்கும் சக்திகளின் வெறும் மொத்தத்திலிருந்து இது சாராம்சத்தில் வேருன தாகும்.

சமூக அமைப்பின் தன்மையை அடிப்படையில் மாற்றிவிடும் சமூகப் புரட்சிகள் சமூக வாழ்வில் ஏற்படும் மிக முக்கியமான உருமாற்றங்களாக விளங்குகின்றன. குறித்த சமூகத்தின் முந்திய சமூக, பொருளாதார வளர்ச்சி முழுவதனுலும் இந்தப் புரட்சிகளுக்கான முன்னேற்பாடுகள் செய்யப்படுகின்றன. ருஷ்யாவில் மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி, முத லாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்கு சோவியத் நாட்டின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பரிணமிப்பின் தொடக்க மாகவும் அதே சமயம் உலகு பரவிய சோஷலிஸப் புரட்சியின் ஆரம்பமாகவும் திகழ்ந்தது.

எதார்த்தத்தின் வெவ்வேறு துறைகளிலும் வெவ்வேறு நிகழ்ச்சிகளிலும் பண்பு மாற்றங்கள் வெவ்வேறு விதமாக நிகழ்கின்றன, தங்களுக்கு உரிய சிறப்புக்கள் கொண்டிருக்கின்றன. ஆனல் இந்த மாற்றங்கள் எப்போதும் விதிமுறைப்படி, படிப்படியான அளவு மாற்றங்களின் விளைவாக ஏற்படுகின்றன.

அளவு மாற்றங்களும் பண்பு மாற்றங்களும் ஒன்றுக்கொன்று காரணம் ஆகும் தன்மை கொண்டவை. அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமிப்பது மட்டுமே அல்ல, பண்பு மாற்றங்கள் அளவு மாற்றங்களாகப் பரிணமிப்பதும் இயற்கையிலும் சமூகத்திலும் நிகழ்கிறது. எனவேதான் அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தலும் பின்னவை முன்னவையாகப் பரிணமித்தலும் பற்றிய விதி என்று இதை எங்கெல்ஸ் குறித்தார். அளவு பண்பாகப் பரிணமிப்பது போலவே பண்பும் அளவாகப் பரிணமிக்கிறது. இங்கு நிகழ்வது பரஸ்பரப் பாதிப்பு.

எந்த ஒரு நிகழ்ச்சியும் புதிய பண்பைப் பெற்றதும் புதிய அளவு விவரணங்களையும் பெறுகிறது. பண்பு அளவாகப் பரிணமிப்பது இவ்வாறே வெளியிடப்படுகிறது.

அளவு மாற்றங்கள் படிப்படியாக, சரளமாக, சில வேளைகளில் புலப்படா வகையிலும் நிகழ்கின்றன என்ருல், பண்பு மாற்றங்கள் எப்போதுமே மிக அதிக விரைவாக, தீர்மானமாக, சில வேளைகளில் திடீரென நிகழ்ந்துவிடுகின்றன. வேறு விதமாகச் சொன்னல், பண்பு மாற்றங்கள் பாய்ச்சல் முறையில் நிகழ்கின்றன. பொருள்களுக்கு இடையே எதார்த்தமான, புறநிலை எல்லைகள் தோன்றக் காரணமாயிருக்கும் பண்புகள் நிலவுவதனல் வளர்ச்சிப் போக்கில் பாய்ச்சல்கள் இன்றியமையாதவை ஆகின்றன. இந்த எல்லைகள் கடக்கப்படுவதையே பாய்ச்சல்கள் குறிக்கின்றன. அதோடுகூட, பாய்ச்சல்கள் இருப்பதன் காரணமாக எல்லாவித வளர்ச்சியும் ஏககாலத்தில் இடையீடு உள்ளதாகவும் இடையீடு அற்றதாகவும் விளங்குகிறது. படிப்படியான அளவு மாற்றங்கள் வளர்ச்சியின் இடையருத் தன்மையையும் பாய்ச்சல்கள் அதன் இடையீடு உள்ள தன்மையையும் காட்டுகின்றன.

**பாய்ச்சல்** என்பது பண்பு மாற்றம் ஆகும். ஒரு நிகழ்ச்சியோ அதன் ஏதேனும் ஒரு அம்சமோ ஒரு பண்பிலிருந்து மற்ருென்றுக்குப் பரிணமிப்பது ஆகும். அளவு மாற்றங்களின் படிப்படியான

கிரமத்தில் இடையீட்டைப் பாய்ச்சல்கள் குறிக்கின்றன. தமக்கு முந்திய அளவு மாற்றங்களுடன் ஒப்பிடும்போது பாய்ச்சல்கள் குறைவான நேரமே எடுத்துக்கொள்கின்றன. எனினும் இந்த நேரத்திற்குள் பொருள்களிலும் நிகழ்ச்சிகளிலும் ஆழ்ந்த உருமாற்றங்கள் ஏற்படுத்திவிடுகின்றன.

அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமிப்பது பற்றிய விதி பொதுத்தன்மை கொண்டது ஆயினும், வெவ்வேறு ஸ்தூல நிலைமைகளில் வெவ்வேறு விதமாக வெளிப்படுகிறது. பாய்ச்சல்கள் தங்கள் இயல்பு, நீடிப்பு, முக்கியத்துவம் ஆகிய வற்றில் வெவ்வேறானவை. பழைய பண்பிலிருந்து புதியதற்குப் பரிணமித்தல் உடனே நிகழும்போது அவை திடீர்ப் பாய்ச்சல் களாக இருக்கக் கூடும். அனேக இடைநிலைக் கட்டங்கள், பரி ணமிப்பு வடிவங்கள் ஆகியவற்றின் மூலம், புதிய பண்பின் அம் சங்கள் குவிந்து திரள்வதன் வாயிலாக இந்தப் பரிணமிப்பு ஏற் படும்போது அவை படிப்படியான பாய்ச்சல்களாக இருக்கலாம். சமுதாயப் புரட்சிகளின் போது அரசியல்அதிகாரம் மாறு வது, அது ஆயுதப் போராட்டத்தால் நிறைவேற்றப்பட்டால், விரைவாக, வெடியதிர்ச்சி போன்று நிகழ்ந்துவிடுகிறது. பொரு ளாதார, கொள்கைவாதத் துறைகளிலோ மாறுதல்கள் வழக்க மாக ஓரளவு படிப்படியாகவே நிறைவேற்றப்படுகின்றன.

அளவு மாற்றங்களின் படிப்படியான கிரமத்தையும் பண்பு மாற்றங்களின் படிப்படியான கிரமத்தையும் வேறு பிரித்து அறிவது அவசியம் ஆகும். முதல் சந்தர்ப்பத்தில் பொருள்களின் பண்பு குறித்த காலம்வரை மாறுவதில்லை,முன்போன்றே இருந்து வருகிறது. அளவு மாற்றங்கள் அடிப்படையான, பண்பு மாறு தல்களுக்கான முன்னேற்பாடுகள் மட்டுமே செய்கின்றன. இரண் டாவது சந்தர்ப்பத்தில் பொருளின் பண்பிலேயே படிப்படியான அனேக மாற்றங்கள் நிகழ்கின்றன. அவற்றின் விளைவாக முந்தியதிலிருந்து வேறான புதிய பண்பு உருவாகிறது.

படிப்படியான அளவு மாற்றங்கள் தத்துவ இலக்கியத்தில் பரிணாமம் என்று அடிக்கடி கூறப்படுகின்றன. ஆனால் இந்தச் சொல் அதிக விரிவான வேறொரு அர்த்தத்திலும் வழங்குகிறது. அப்போது அது வளர்ச்சி என்ற கருதுகோளுக்குப் பொருந்து கிறது.

சமூக வாழ்க்கையில் ஏற்படும் பாய்ச்சலைப் பற்றிக் கூறுகை யில் புரட்சி என்ற கருதுகோள் வழங்கப்படுகிறது. ஆனால் சமூ

கத்தின் வாழ்வில் ஏற்படும் ஒவ்வொரு பாய்ச்சலும் புரட்சி எனக் கருதப்பட முடியாது. ஏனெனில் இங்கும்கூடப் பாய்ச்சல்கள் தங்கள் பரப்பிலும் ஆழத்திலும் மிக மிக வெவ்வேறுனவையாக இருக்கலாம். சமூகம் முழுவதும் அடிப்படையில் மாற்றி அமைக் கப்படுவதை, பழைய அமைப்பின் அஸ்திவாரமே தகர்க்கப் படுவதையும் அதிக முற்போக்குள்ள சமூக அமைப்புக்குப் பரிணமிப்பதையும் எவை குறிக்கின்றனவோ அந்தப் பாய்ச்சல் கள் மட்டுமே சமுதாயப் புரட்சிகள் ஆகும்.

சமூகம் அனைத்தையும் பாதிப்பவை ஆயினும் நிலவும் சமூக அமைப்பின் வரம்புகளுக்கு வெளியே அதை இட்டுச்செல்லாத வையான பாய்ச்சல்கள் சமுதாயப் புரட்சிகள் ஆக மாட்டா. சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பது அத் தகையதே. இது கம்யூனிஸச் சமூக அமைப்பின் எல்லைகளுக்கு உள்ளே நிகழும் பாய்ச்சல் ஆகும்.

சமூக அமைப்பின் தனித்தனிப் பகுதிகளில் அடிப்படையான மாறுதல்களை உண்டாக்கும் பாய்ச்சல்களும் புரட்சிகள் (ஆனல் சமுதாயப் புரட்சிகள் அல்ல) எனப்படுகின்றன, விஞ்ஞான-தொழில்நுணுக்கப் புரட்சி இத்தகைய பாய்ச்சலுக்கு எடுத்துக்காட்டு ஆகக் கூடும்.

நிகழ்ச்சிகளின் இரண்டு அம்சங்களுக்கும் மாறுதல்களின் இரண்டு வகைகளுக்கும் இணங்க எந்த வளர்ச்சியும் அளவு மாற் றங்கள், பண்பு மாற்றங்கள் என்ற இரு அம்சங்கள் கொண்டது, அவற்றின் பிரிக்கமுடியாத ஒருமையாக விளங்குகிறது. வளர்ச்சி பண்பு வகைப்பட்டதான மாற்றமாக (பாய்ச்சல்) மட்டுமோ அல்லது அளவு வகைப்பட்டதான மாற்றமாக (பரிணமம்) மட்டு மோ இருக்க முடியாது. இவ்விரு அம்சங்களின் பரஸ்பரச் செயல்பாட்டிலேயே அது நிகழ்கிறது. சமூக வாழ்வில் பரிணமம் புரட்சிக்கு முன்னேற்பாடுகள் செய்து அதை விளைவிக்கிறது. தன் முறையில் புரட்சி பரிணமத்தை நிறைவுபடுத்துகிறது. ஆனல் இங்கேயும் மாருநிலைவாதிகளுக்கு இயல்பான ஒரு தலைச்சார்பான அணுகுமுறை சாத்தியமே. வளர்ச்சி என்பது அளவு மாற்றம் என்றும், பாய்ச்சல்களோ இடையீடுகளோ இன்றி, நேர் கோட்டில் செல்லும் ஒரு சீரான இயக்கம் என்றும் மாருநிலைவாதிகளில் சிலர் நினைக்கிருர்கள். மற்றவர்களோ, எதனுலும் முன்னேற்பாடு செய்யப்படாத, புயல்வேகப் பண்பு மாற்றங்களின் வரிசையே வளர்ச்சி என்று எண்ணுகிருர்கள்.

இத்தகைய தவருன கருத்துக்கள் விஞ்ஞான, அரசியல் நடவடிக்கைகளுக்குப் பெரும் தீங்கு விளேக்கின்றன.

விஞ்ஞானக்கேடான பரிணுமவாதம் சீர்திருத்தவாதத்துக்கும் திரிபுவாதத்துக்கும் ஆராய்ச்சி முறை இயல் அடிப்படையாக விளங்குகிறது என்பதை நினைவுபடுத்துவதே போதுமானது. முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பது சீர்திருத்தத்தின் மூலம், முதலாளித்துவத்தின் ஆழ்ந்த அஸ்திவாரங்களேப் பாதிக்காத அற்ப மாறுதல்கள் வாயிலாக இயலும் என்று காட்டுவதற்கு இவற்றின் பிரதிநிதிகள் முயல்கிருர்கள். இத்தகைய பரிணமிப்புக்குப் புரட்சிப் பாய்ச்சல் இன்றியமையாதது என்பதை அவர்கள் மறுக்கிருர்கள். இவ்வாறு செய்வதன் மூலமே அவர்கள் முதலாளித்துவத்தைப் பாதுகாக்கிருர்கள், ஏனெனில் சமூகப் புரட்சி இல்லாமல் சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பது இயலாது.

''இடதுசாரிச்'' சந்தர்ப்பவாதிகள் மற்ருெரு கடைக்கோடி நிலேயை மேற்கொள்கிருர்கள். புரட்சிப் பாய்ச்சல்களுக்குப் பரிணுமரீதியான முன்னேற்பாடுகள் இன்றியமையாதவை என்பதை அவர்கள் புரிந்துகொள்வதில்லே. சோஷலிஸக் கட்டுமானத்தில் உற்பத்திச் சக்திகளின் விஞ்ஞான அடிப்படை கொண்ட படிப்படியான வளர்ச்சிக்குப் பதிலாகப் பாய்ச்சல் வகைப்பட்ட வளர்ச்சியை மட்டுமே அவர்கள் முழுமையாக நம்புகிருர்கள். ஆனுல் பூர்வாங்கமான அளவு மாற்றங்கள் இன்றிப் பண்பு மாறுதல்கள் நிகழ்வது சாத்தியம் அல்ல. இந்த நிலேமையைக் கணக்கில் எடுத்துக்கொள்வது முன்னேற்பாடற்ற நடவடிக்கைகளேத் தவிர்க்க உதவுகிறது, துர்ச்சாகசப் போக்கிலிருந்து காக்கிறது.

அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமிப்பது பற்றிய விதி சோஷலிஸத்தில் செயல்படுகிறதா? செயல்படுகிறது என்பது கூருமலே விளங்கும். இயந்திரத் தொழில் பெருக்கமும் விவசாயத்தில் கூட்டுப்பண்ணே முறை அமைப்பும் சோவியத் யூனியனில் சோஷலிஸத்தின் வளர்ச்சியில் பாய்ச்சல்களுக்கு எடுத்துக்காட்டுகள் ஆகும். சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பு பிரமாண்டமான பாய்ச்சல். இது சர்வாம்ச ரீதியான பெருத்த முன்னேற்பாடுகளின்றி நிகழவே முடியாது. உற்பத்திச் சக்திகளேப் பெருமளவு உயர்த்துவதும் கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படையை

நிறுவுவதும் சோவியத் நாட்டின் முதன்மையான பொருளாதாரக் கடமைகளாக விளங்குகின்றன. சமூக உறவுகளைச் சீர்திருத்துவதுடனும் உழைப்பாளி மக்களைக் கம்யூனிஸ முறையில் பயிற்றுவதுடனும் தொடர்பு கொண்ட மிக முக்கியக் கடமைகளின் நிறைவேற்றம் இவற்றையே சார்ந்துள்ளது.

அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமிப்பது பற்றிய விதி சோஷலிஸ அமைப்பில் செயல்படுவது முதலாளித்துவ அமைப்பிலும் தனியார் சொத்துரிமையை அடிப்படையாகக் கொண்ட பிற சமூக அமைப்புக்களிலும் அது செயல்படுவதிலிருந்து வேறுபடுகிறது. சோஷலிஸத்திலும் கம்யூனிஸத்துக்குப் பரிணமிக்கும் காலப் பகுதியிலும் நிகழும் பாய்ச்சல்களின் சிறப்புக்களில் இந்த வேறுபாடு வெளிப்படுகிறது. முதன்மையாக இந்தப் பாய்ச்சல்கள் சமுதாய-அரசியல் புரட்சிகள் அல்ல, அவை வெடியதிர்ச்சிகளின் வடிவில் நிகழ்வதில்லை. அவை ஏறுமுகமான, முற்போக்குள்ள வளர்ச்சி நடவடிக்கைகளாக விளங்குகின்றன. நாட்டின் பொருளாதார நிலை, மக்களின் நல்வாழ்வு, பண்பாடு ஆகியவற்றின் மேம்பாட்டுடன் அவை தொடர்புள்ளவை. புறநிலைத் தன்மை கொண்ட இந்தப் பாய்ச்சல்கள் சோஷலிஸ அமைப்பில் உணர்வுபூர்வமாக முன்னேற்பாடு செய்யப்பட்டு நிறைவேற்றப்படுகின்றன. தவிர, சோஷலிஸத்தின் நிலைமைகளிலும் கம்யூனிஸக் கட்டுமானத்தின் நிலைமைகளிலும் மாற்றங்களின் உணர்வுபூர்வமான தன்மை சோவியத் சமூகத்தின் சிறப்பு அம்சமாக விளங்குகிறது. இந்தச் சமூகத்தில் ஒழுங்கற்ற பொருளாதார வளர்ச்சியின் இடத்தில் உற்பத்தியுடையவும் சமூக வாழ்க்கை அனைத்தினதும் திட்டமிட்ட ஒழுங்கமைப்பு நிலைபெற்றுவிட்டது. சோஷலிஸ அமைப்பில் பெருத்த பண்பு மாற்றங்கள் படிப்படியாக, அடுத்தடுத்து வரும் கட்டங்களில் ஏற்படுகின்றன. அதே சமயம், படிப்படியான பண்பு மாற்றங்கள் விரைவாக நிகழ்கின்றன, புதிய பண்பு வரலாற்றில் மிகக் குறுகிய காலக்கெடுவுக்குள் உறுதிப்பட்டுவிடுகிறது. ஏனெனில், படிப்படியான தன்மை இயக்கத்தின் தாமதப் போக்கைக் குறிக்கவில்லை.

சோஷலிஸம் படிப்படியாகக் கம்யூனிஸமாக வளர்வது பற்றிய விஞ்ஞான விளக்கத்திற்கு ஆதாரம் சோஷலிஸத்தின் நேரான தொடர்ச்சியே கம்யூனிஸம் என்ற உண்மையே. எனவே கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பு சோஷலிஸத்தின் அஸ்திவாரங்

களை விரிவுபடுத்துவதாலும் செவ்வைப்படுத்துவதாலும் பூர்த்திச் செய்யப்படுகிறதே அன்றி அவற்றைத் தகர்ப்பதன் வாயிலாக அல்ல. எனினும் கம்யூனிஸம் சோஷலிஸத்திலிருந்து பண்பில் வேறுபட்டது ஆகையால் இந்தப் பரிணமிப்பு பாய்ச்சலாகவே விளங்குகிறது.

மேலே கூறியவற்றைப் பின்வருமாறு தொகுத்துரைப் போம்: வளர்ச்சிப் போக்கில் ஒரு பண்பு நிலையிலிருந்து மற்றொரு பண்பு நிலைக்குப் பரிணமிப்பு எவ்வாறு நிறைவேறுகிறது என் பதை அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித் தல் பற்றிய விதி காட்டுகிறது. இதன் மூலமாகவே இந்தச் சட்டம் வளர்ச்சியின் முக்கியமான திருப்பக் கட்டங்களை விவரித்து, புதியதன் தோற்றச் செயல்முறையின் ஒரு பிரதான அம்சத்தை வெளிப்படுத்துகிறது.

ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் பண்பு அம்சங்களும் அளவு அம் சங்களும் ஒருமையில் இருப்பதால் இந்த இரு அம்சங்களையும் இவற்றின் ஒருமையையும் கணக்கில் எடுத்துக்கொண்டால்தான் நிகழ்ச்சியின் முழுமையான தன்மைச் சித்திரிப்பு சாத்தியம் ஆகும். ஆராயப்படும் செயல்முறைகளின் பண்புவகையானவும் அளவுவகையானவும் பகுப்பாய்வு விஞ்ஞான அறிதலில் இன்றி யமையாதது. அளவு அல்லது பண்பு வகைப்பட்ட ஒருதலைச் சார்பான அணுகுமுறை சரியானதல்ல.

அளவு மாற்றங்களை மட்டுமே பரிசீலிக்கும் அணுகுமுறை சிறப்பாக இயந்திர இயல்வாதத்துக்கு இயல்பானது. இது இன் றளவும் விஞ்ஞானத்தில் எதிர்ப்படுகிறது. இயற்கை நிகழ்ச்சி களையும் சமூக நிகழ்ச்சிகளையும் தூய கணித முறையில் விளக்கு வது பல பூர்ஷ்வா விஞ்ஞானிகளுக்கு இயல்பாக இருக்கிறது. நிகழ்ச்சிகளின் பண்பு அம்சம் பற்றிய ஆராய்ச்சியின் பங்கை அவர்கள் அடிக்கடி குறைத்து மதிப்பிடுகிறார்கள். சில வேளை களில் இது ஆழ்ந்த சித்தாந்தத் தவறுகளுக்குக் காரணமாகி விடுகிறது.

அளவு மாற்றங்களையோ பண்பு மாற்றங்களையோ மட்டுமே கணக்கில் எடுத்துக்கொள்ளும் ஒருதலைச்சார்பான அணுகு முறை மாறுநிலைவாத அணுகுமுறை ஆகும்.

அடிப்படையான பண்பு மாற்றங்கள் அளவு வகையான முன்னேற்பாடுகளின் விளைவாக மட்டுமே செய்யப்பட முடியும். ஆனால் அவை திட்டவட்டமாகவும் ஒப்புநோக்கில் விரை

வாகவும் நிறைவேறுகின்றன. புதியது பாய்ச்சல் முறையில் தோன்றுகிறது. சமூக வளர்ச்சியிலோ இது புரட்சி முறையில் தோன்றுகிறது.

## § 4. நிலை மறுப்பின் நிலை மறுப்பு

வளர்ச்சியின் வெவ்வேறு கட்டங்களும் புதியதும் பழைய தும் தங்களுக்குள் எப்படி இணைந்துள்ளன என்பதை நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி காட்டுகிறது. வளர்ச்சியின் பொதுப் போக்கு, திசை எது என்ற கேள்விக்கு இந்த விதி விடை அளிக்கிறது. இந்த விதியின் சாராம்சத்தைத் தெளிவு படுத்துவதற்கு, இயக்க இயல் நிலை மறுப்பு என்பது என்ன என்று அறிந்துகொள்வது அவசியம்.

புதியது பழையதன் இடத்துக்கு வருகிறது, அதாவது, வளர்ச்சியின் ஒரு கட்டம் மற்றொன்றுக்குப் பதிலாகத் தொடங்குகிறது என்பதிலேயே நிலைமறுப்பு அடங்கியிருக்கிறது. பழையதிலிருந்து புதியதற்குப் பரிணமிக்கும், ஒரு கட்டத்தின் இடத்துக்கு மற்றொரு கட்டம் வரும் செயல்முறைதான் தத்துவத்தில் நிலை மறுப்பு எனப்படுகிறது.

நிலை மறுப்பின் முக்கிய இயல்புகளையும் சிறப்புத் தன்மை களையும் பரிசீலனை செய்வோம்.

முதன்மையாக நிலை மறுப்பு பொதுத் தன்மை கொண்டது. இதற்கையிலும் சமூகத்திலும் நிகழும் எல்லா வித வளர்ச்சிக் கும் அது இயல்பானது, அதன் கட்டாய அம்சமாக விளங்குவது. உதாரணமாக, உயிர் இயற்கையில் நூற்றாண்டுக் கணக்கான காலத்தில் வளர்ச்சி எவ்வாறு நிகழ்ந்துவருகிறது என்றால் பழைய உயிர் இனங்கள் அவற்றின் அடிப்படையில் தோன்றுபவை யும் அதிக வாழ்திறன் கொண்டவையும் ஆன புதிய இனங்களால் மறுக்கப்படுகின்றன. சமூகத்தின் வரலாற்று வளர்ச்சிப் போக்கு ஒரு வகைச் சமூக அமைப்புக்களின் இடத்தில் அவற்றைவிட உயர்ந்த வேறு வகைச் சமூக அமைப்புக்கள் வருவதே ஆகும். அறிதலின் வளர்ச்சியில் விஞ்ஞானத்தின் ஒரு வகை வரையறுப்புக்கள் எதார்த்தத்தின் தொடர்பை அதிகத் துல்லியமாகப் பிரதிபலிக்கும் வேறு வரையறுப்புக்களுக்கு இடம் கொடுத்து விலகிக் கொள்கின்றன.

பொருள்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் இயல்பான எதிர்நிலை அம்சங்களின் ஒருமையிலும் போராட்டத்திலும் நிலை மறுப்பு

அடங்கியிருக்கிறது. முரண்பாடுகளின் அம்சங்கள் வெவ்வேறு முக்கியத்துவம் கொண்டவை என்பதையும் பொருள் அல்லது நிகழ்ச்சியின் வளர்ச்சியில் அவை வெவ்வேறு பங்கு ஆற்று கின்றன என்பதையும் நாம் ஏற்கனவே பார்த்தோம். அவற்றில் ஒன்று குறித்த பொருளையோ நிகழ்ச்சியையோ மாற்றுவதை நோக்கமாகக் கொண்டது, எனவே முற்போக்கான பங்கு ஆற்றுகிறது. மறு அம்சம் இந்தப் பொருள் அல்லது நிகழ்ச்சியின் நிலைப்புத்தன்மையை வெளியிடுகிறது, பழைமையைப் பாது காக்கும் தன்மை கொண்டிருக்கிறது. இந்த உள் முரண்பாடு அதன் பழைய, பழைமையைப் பாதுகாக்கும் அம்சம் அகன்று புதிய, முற்போக்குள்ள அம்சம் உறுதிப்படுவதன் மூலம் தீர்க்கப்படுவதே நிலை மறுப்பு ஆகும்.

எனவே, பழையது இடையறாது மறுப்புக்கு உள்ளாவதும் புதியதால் மாற்றப்படுவதுமாக இருக்கும் செயல்முறையே வளர்ச்சி எனப்படுவது. இது இல்லாவிடில் வளர்ச்சி இல்லை. கார்ல் மார்க்ஸ் பின்வருமாறு எழுதினார்: ''எந்த வளர்ச்சியை யும், அதன் உள்ளடக்கம் எதுவாக இருப்பினும், ஒன்று மற் றொன்றின் நிலை மறுப்பாக விளங்கும் விதத்தில் ஒன்றோடொன்று தொடர்புள்ள வெவ்வேறு வளர்ச்சிக் கட்டங்களின் வரிசை யாகக் கருதலாம்.... தான் நிலவிய முந்திய வடிவங்களை மறுக் காத வளர்ச்சி ஒரு துறையிலும் நிகழ முடியாது.''[1]

நிலை மறுப்பின் அடுத்த முக்கிய அம்சம் என்னவென்றால் அது எல்லா வளரும் செயல்முறைக்கும் உள் இயல்பானது, வெளியி லிருந்து கொண்டுவரப்படும் அயலான ஒன்று அல்ல. நிலை மறுப்பு வளர்ச்சிச் செயல்முறைக்கு உள் இயல்பானது என்று புரிந்து கொள்வது பொருள்முதல்வாத இயக்க இயல்வாதத்தை மாறாநிலைவாதத்திலிருந்து வேறுபடுத்துகிறது.

இயற்கையிலும் சமூகத்திலும் மாறுதல்களின் வெவ்வேறு வடிவங்களை, ஒரு பண்பின் இடத்தில் மற்றொரு பண்பு வரு வதை நாம் காண்கிறோம். உதாரணமாக ஏதேனும் தாவரத்தின் விதை பறவையால் தின்றுவிடப்படவோ இயந்திரத்தால் அரைக்கப்படவோ கூடும். இதுவும் நிலை மறுப்புதான். ஒரு பொருள் வெளிச் சக்திகளின் செயல்பாடு காரணமாக

---

1 கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். நூல் திரட்டு, தொகுதி 4, பக்கங்கள் 296-297.

அழிக்கப்படுகிறது, எனவே அதன் அடுத்த வளர்ச்சி நின்று விடுகிறது என்பதே இந்த நிலை மறுப்பில் அடங்கியுள்ள சாரம். இத்தகைய இயந்திர இயல்வாத வகைப்பட்ட நிலைமறுப்பு வெளிநிலை மறுப்பு ஆகும். இது இயக்க இயல் நிலை மறுப்பாகக் கருதப்பட முடியாது.

உள்ளார்ந்த, இயக்க இயல் நிலை மறுப்பு வளர்ச்சியை நிறுத்துவதில்லை என்பது மட்டுமின்றி வளர்ச்சிக்கு நிபந்தனையாகவும் விளங்குகிறது. விதை பற்றிய அதே உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். அது மண்ணில் விழுந்து, வெப்பமும் ஈரமும் இருந்தால் முளைக்கிறது. அதிலிருந்து வளர்கிறது தாவரம். அது விதையின் நிலை மறுப்பாக விளங்குகிறது. நிலை மறுப்பு வளர்ச்சியின் இன்றியமையாத அம்சம் ஆகும். குறித்த செயல்முறையின் இயற்கையாலேயே அது நிச்சயிக்கப்படுகிறது. சோஷலிஸத்தால் முதலாளித்துவம் மறுக்கப்படுவது முதலாளித்துவத்தினுடையவே விதிகளின் செயல்பாடு காரணமாகத் தவிர்க்க முடியாதபடி நிகழ்கிறது.

நிலை மறுப்புச் செயல்முறையில் உள் காரணிகளின் நிர்ணயகரமான பங்கை வலியுறுத்தும் அதே சமயத்தில் வெளிக் காரணிகளின் முக்கியத்துவத்தையும் புறக்கணிப்பது கூடாது. நிலை மறுப்பு செயல்படுவதன் சாத்தியம், அதன் போக்கின் சிறப்புத் தன்மைகள், அதன் வடிவங்கள் ஆகியவற்றின்மீது இந்த வெளிக் காரணிகள் சாராம்சமான பாதிப்பு நிகழ்த்தக் கூடும்.

மாறுநிலைவாதிகள் எல்லாவித நிலை மறுப்பையும் வெளியிலிருந்து தோன்றும் இயந்திர இயல்வாத நிலை மறுப்பு என்று கருதுகிறார்கள். இதன் மூலம் அவர்கள் வளர்ச்சியின் எதார்த்தத் தன்மையைத் திரிக்கிறார்கள், வளர்ச்சிச் செயல்முறையின் பொதுப் போக்கைச் சரியாக நிர்ணயிக்கும் வாய்ப்பை இழந்துவிடுகிறார்கள். இதற்கு மாறாக இயக்க இயல்வாதம் அகற்றப்படும் பழையதன் இடத்தில் புதியது நிலைபெறும் வளர்ச்சி வடிவமே நிலை மறுப்பு எனக் கருதுகிறது. இந்தப் புதியது உண்டாவதற்குச் காரணமாக இருந்ததும் முன்னேற்பாடுகள் செய்ததும் பழையதுதான். பழையதன் கருவிலேயே இது தோன்றியது, பழையதன் விளைவே இது. ஆகவேதான் நிலை மறுப்புச் செயல்முறையில் எந்த விதமான புதியதும் தோன்றிவிடுவதில்லை. பழையதில் அடங்கியுள்ள சக்திகள், விதிகளது செயல்பாட்டின் இன்றியமையாத விளைவாக இருக்கும் புதியது மட்டு

மே தோன்றுகிறது. எடுத்துக்காட்டாக, விதை தாவரம் தோன்றுவதற்குக் காரணம் ஆகிறது. முதலாளித்துவம் சோஷலிஸம் தோன்றக் காரணம் ஆகிறது. இவ்வாறு இயக்க இயல் நிலை மறுப்பு பழையதை அகற்றுவது மட்டும் இன்றிப் புதியதை உறுதிப்படுத்தவும் செய்கிறது.

ஆனல் புதியது பழையதை வெறுமே நிராகரித்துவிடுகிறது என்று நினைப்பது சரியாகாது. புதியது பழையதை முழுமையாக ஒருபோதும் அழித்துவிடுவதில்லை. அவற்றுக்கு இடையே வெற்ருன அகாதம் எதுவும் கிடையாது. பழையதில் இருந்த சிறந்த அம்சங்களை எல்லாம் இயக்க இயல் நிலை மறுப்பு பாதுகாக்கிறது. முந்திய வளர்ச்சியின் எல்லா நிறைவேற்றங்களையும் பழையதிடமிருந்து புதியது கிரகித்துக் கொள்கிறது. வாழ்ந்து தீர்ந்துவிட்டதை மறுப்பது ஆரோக்கியமானதையும் முற்போக்கானதையும் பாதுகாப்பதற்கும் அதன் அடுத்த வளர்ச்சிக்கு ஏற்ற நிலைமைகளை உருவாக்குவதற்குமே இன்றியமையாதது. உதாரணமாக, முதலாளித்துவ உற்பத்தி உறவுகளைத் தகர்த்துவிட்டு சோஷலிஸப் புரட்சி உற்பத்திச் சக்திகளைப் பாதுகாக்கிறது. சமூகத்தின் மேல்கட்டுமானத்தை மாற்றுகையில் விஞ்ஞானம், பண்பாடு ஆகிய துறைகளில் உள்ள விலைமிக்க செல்வங்கள் அனைத்தையும் அது பாதுகாக்கிறது. முந்திய வளர்ச்சிக் கட்டங்களில் தோன்றிய முற்போக்கு அம்சங்களைப் பாதுகாப்பது மரபைப் பேணுவதை, பழையதுடன் புதியதன் தொடர்பைக் குறிக்கிறது.

காலங்கடந்துவிட்டவை எல்லாவற்றையும் அகற்ருவிட்டால் முற்போக்குள்ள வளர்ச்சி சாத்தியம் ஆகாது. ஆனல் மரபைப் பேணுவிட்டாலும் அது சாத்தியம் ஆகாது. வரலாற்றின் வளர்ச்சிப் போக்கில் மக்களது உழைப்பாலும் சிந்தனையாலும் பெறப்பட்ட நன்மைகள் எவ்வாறு பாதுகாக்கவும் சேமிக்கவும் படுகின்றன என்பதை மனிதகுல வரலாறு முழுவதும் காட்டுகிறது. இத்துடன் வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டமும் மேலும் மேலும் அதிக வளமும் அதிக உள்ளடக்கமும் கொண்டதாகிறது. ஒவ்வொரு தலைமுறையினரும் எல்லாவற்றையும் ஆதியிலிருந்து தொடங்க ஆரம்பித்தால் சமூக முன்னேற்றம் அசாத்தியம் ஆகியிருக்கும்.

இவ்வாறு, பயன் முடிந்த அம்சங்களை நீக்குவதும் அதே போலப் பழையதில் உள்ள பயனுள்ள அம்சங்களைத் தேக்கி

நிறுத்துவதும் பாதுகாப்பதும் அடங்கியது இயக்க இயல் நிலை மறுப்பு. இந்தக் காரணத்தினாலேயே அது முன்னேற்றத்துக்கு உரிய நிபந்தனை ஆகிறது. எனவே, புரட்சிகர மாறுதல்களின் இன்றியமையாமையை,சிறப்பாக சோஷலிஸப் புரட்சியின் இன்றி யாமையை எதிர்க்கும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள், திரிபு வாதிகள், சீர்திருத்தவாதிகள் ஆகியோரின் நிலை சித்தாந்த ரீதியில் தவறானது, அரசியல் நோக்கில் பிற்போக்கானது. பழைய தன் கருவிலேயே புதியது தோன்றுகிறது என்பதை ஆதார மாகக் கொண்டு அவர்கள் புதிய, சோஷலிஸ அமைப்பு நிலைபெறு வதற்குப் பழைய, முதலாளித்துவச் சமூகம் சிதைக்கப்படுவது தேவை என்பதைக் கவனிக்காமல் விட்டுவிடுகிறார்கள்.

புரட்சி என்பது மொட்டையான, ''வீணான'', மரபைப் பேணுதல் அற்ற நிலை மறுப்பு என்ற மாறாநிலைவாத, அராஜக, இடதுசாரிக் கருத்தும் இவ்வளவே தவறானது. முந்திய பண் பாடு முழுவதையும் நிராகரித்து ஒதுக்கிவிட வேண்டும் என்று கோரிய ''பாட்டாளிப் பண்பாட்டுச்'' சிந்தாந்தவாதிகளை வி. இ. லெனின் கடுமையாக விமர்சித்தார்.

பாட்டாளிப் பண்பாடு பூர்ஷ்வாப் பண்பாடு உள்ளிட்ட முந்திய பண்பாடு அனைத்திலிருந்தும் பண்பில் வேறுபட்டது, முந்தியதன் நிலை மறுப்பாக விளங்குகிறது என்றாலும், அது வெற்றிடத்தில் தோன்றுவதில்லை என்றும் மனிதகுலத்தின் பற்பல நூற்றாண்டுக்கால வளர்ச்சியால் படைக்கப்பட்ட சிறந்த அம்சங்கள் யாவற்றையும் அது தனதாக்கிக் கொள்கிறது என்றும் வி. இ. லெனின் விளக்கினார். இயக்க இயல்வாதப் பொருள்முதல்வாதப் பிரபஞ்சக் கண்ணோட்டத்தை உருவாக்கு கையில் மார்க்ஸும் எங்கெல்ஸும் முந்திய சகாப்தங்களில் பெறப்பட்ட மனிதகுல ஞானத்தின் திண்ணமான அஸ்தி வாரத்தை ஆதாரமாகக் கொண்டார்கள். தற்காலத்திலும் கூட சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி மொத்தத்தில் பூர்ஷ்வாப் பண்பாடு அனைத்தையும் விமர்சித்தாலும், பூர்ஷ்வா விஞ்ஞானமும், தொழில் நுணுக்கமும், உற்பத்தியின் ஒழுங்கமைப்பும் விலைமதிப்புள்ள எந்த அம்சங்களைத் தர வல்லவையோ அவற்றை ஏற்றுக்கொள்ளவும் பயன்படுத்தவும் கற்பிக்கிறது.

நிலை மறுப்பின் இயக்க இயல் அர்த்தத்தின் அடிப்படை அம்சங்களை நாம் விளக்கிவிட்டோம். இப்பொழுது பின்வரும்

கேள்வி எழுகிறது; பழையதன் இடத்துக்குப் புதியது வந்ததன் பின் வளர்ச்சி நின்றுவிடுகிறதா? இல்லை, வளர்ச்சி இத்துடன் நின்றுவிடுவதில்லை என்றால், அது மேற்கொண்டு எப்படி நிகழ்கிறது? எத்தகைய போக்கை, திசையைக் கொண்டிருக்கிறது?

புதியது எதுவும், வளர்ச்சி அடைந்தபின் விரைவிலோ தாமதித்தோ பழையது ஆகிவிடுகிறது. பழையது எதையும் போன்றே அது குறித்த காலப் பகுதியில் புதியதால் அகற்றிவிடப்படுகிறது. அதாவது எது தானே நிலை மறுப்பாக விளங்கியதோ அதற்கே நிலை மறுப்பு உண்டாகிறது. எனவே, வளர்ச்சியின் விதியாக விளங்குகிறது நிலை மறுப்பின் நிலை மறுப்பு, பழையதன் இடத்துக்குப் புதியதும் இந்தப் புதியதன் இடத்துக்கு இன்னும் புதியதும் வருதல். நிலை மறுப்பு வெறுமே அகற்றிவிடமட்டும் செய்வதில்லை, பயனுள்ளதைப் பாதுகாக்கவும் செய்கிறது. இது எல்லாவகை நிலை மறுப்புக்கும் பொருந்தும். எனவே, வளர்ச்சி முன்செல்லும் தன்மை கொண்டது, அது திரும்ப முடியாதது, பின்னோக்கிச் செல்ல இயலாதது என்பது இதிலிருந்து தெரிகிறது.

ஆயினும் எதார்த்தத்தின் எல்லாத் துறைகளிலும் நிகழும் மாறுதல்களை முன்னேற்றம் என்று எண்ணுவது முற்றிலும் சரியாகாது. முன்னேற்றம் என்ற கருதுகோள் சமூக வாழ்வுக்கு முழு அளவில் பொருத்தமானது, உயிர் இயற்கைக்கு ஒரு குறித்த அர்த்தத்தில் பொருந்தக் கூடியது. உயிரற்ற இயற்கையில் சுற்றுவட்டங்களும், ஏறுமுகமும் இறங்குமுகமும் ஆன வளர்ச்சிக் கிளைகளும் உள்ளன. சடப்பொருள் இயக்கத்தின் உயர்நிலை வடிவங்களும் தாழ்நிலை வடிவங்களும் ஏககாலத்தில் நிலவுவதற்கு இடமிருக்கிறது.

அதே சமயம் மாறுதல்களின் இந்தப் பல்வகைப்பாட்டுடன் கூடவே இயற்கையில் வளர்ச்சியின் ஏறுமுகமான போக்கு: சடப்பொருள் இயக்கத்தின் மேலும் மேலும் உயர்நிலை வடிவங்கள் தோன்றுதல் துலக்கமாகச் சுவடுகளைப் பதித்திருக்கிறது. வளர்ச்சியின் குறித்த கட்டத்தில் உயிருள்ள அங்கஜீவிகள் தோன்றுகின்றன, பின்பு மனிதன் தோன்றுகிறான், மனித சமூகம் உருவாகிறது. சமூகம் உருவானது சடப்பொருள் இயக்கத்தின் யாவற்றிலும் உயர்நிலை வடிவத்தின் தோற்றத்தைக் குறிக்கிறது.

சமூக வாழ்வில் பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பின் இடத்தில் அடிமைச் சொந்தக்கார அமைப்பும், அதன் இடத்தில் நிலப்பிரபுத்துவ அமைப்பும், அதன் இடத்தில் முதலாளித்துவ அமைப்பும் ஒன்றை அடுத்து ஒன்ருக வந்தது தாழ்நிலையிலிருந்து உயர்நிலைக்கு ஏறும் இயக்கமாக விளங்குகிறது. தற்காலத்தில் முதலாளித்துவத்தின் இடத்தில் இன்னும் உயர்ந்த சமூக அமைப்பான கம்யூனிஸம் வருவது உலகில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. பழையதிலிருந்து உண்மையில் புதியதற்குப் பரிணமித்தல் எப்போதும் முற்போக்கானது. வாழ்க்கையில் புதியதன் வெற்றி தவிர்க்க முடியாதது. ஏனெனில் புதியது விதிப்படி தோன்றுகிறது, பழையதைக் காட்டிலும் அதிக செவ்வைப்பாடு உள்ளதாகவும் வாழ்திறன் கொண்டதாகவும் விளங்குகிறது.

ஏறுமுகமான வளர்ச்சியின் சிறப்புத் தன்மைகள் யாவை? முதன்மையாக அது நேராகச் செல்லும் எளிய இயக்கம் அல்ல. இதன் காரணம் என்னவென்ருல், வளர்ச்சிச் செயல்முறை பொதுவாகவும் மொத்தத்திலும் ஏறுமுகமான செயல்முறையாகவே இருப்பினும் அதில் தாற்காலிகமான தனித்தனிப் பிறழ்ச்சிகளும் வளைவு நெளிவுகளும் இறங்குமுகமான வளர்ச்சிக் கிளைகளும் உண்டாகின்றன. சமூக வாழ்வில் இத்தகைய வளைவு நெளிவுகளும் தாற்காலிகமான பின்வாங்கலும் பழையதன் எதிர்ப்புடனும் தாற்காலிக வெற்றியுடனும் வழக்கமாகத் தொடர்புள்ளவை. ஒரு அல்லது மற்ருெரு நாட்டில் புரட்சியின் தோல்வியும் பிற்போக்கின் வெற்றியும், பாசிஸத்தின் வெற்றியும், முதலாளித்துவ அமைப்பில் பொருளாதார நெருக்கடிகளும்இவ்வகையானவையே. ஆனுல் இம்மாதிரிப் பின்வாங்கல்கள் எப்போதுமே அம்ச ரீதியானவையாகவும் தாற்காலிகமானவையாகவும் இருக்கின்றன. மொத்தத்தில் வளர்ச்சி முற்போக்குள்ளதாக விளங்குகிறது. ஏனெனில் பழையது வளர்ச்சி வேகத்தைக் குறைக்க வல்லதே எனினும் அதை நிறுத்திவிடவோ அதற்கு இயல்பான தன்மையை மாற்றவோ வல்லது அல்ல. சமூக வாழ்வின் தாழ்ந்த தொடக்க வடிவங்களிலிருந்து ஆரம்பித்து மேலும் மேலும் அதிகச் செவ்வைப்பாடு கொண்ட உயர்ந்த வடிவங்களுக்குச் செல்லும் மனிதகுல வரலாறு முழுவதும் இந்த உண்மைக்குச் சான்று பகர்கிறது.

வளர்ச்சி நேர் கோட்டில் செல்லாததற்கு இன்னுெரு காரணம் என்னவென்ருல் அதன் ஒரு குறித்த கட்டத்தில் பழைய,

சென்றுபோன கட்டத்தின் இயல்புகள் திரும்பத் தோன்றுவது தான். இத்தகைய மறு தோற்றம் பழையதன் முழுமையான திருப்பம் அல்ல. ஏனெனில் அது பழையதன் சில அம்சங்களை மட்டுமே திரும்ப உண்டாக்குகிறது, வளர்ச்சியின் அதிக உயர்ந்த மட்டத்தில், புதிய அடிப்படையில் நிகழ்கிறது. அதே சமயம் வளர்ச்சியின் இந்தச் சிறப்பு பொதுத் தன்மை கொண்டது. இயற்கைக்கும் சமூகத்துக்கும் அறிதலுக்கும் இது இயல்பானது.

இவ்வாறாக, பொருள்முதல்வாத இயக்க இயல்வாதத்தின் நோக்கில் பார்க்கையில் வளர்ச்சி என்பது எளிய நேர்கோட்டு இயக்கமோ பழையது முழுமையாகத் திரும்பத் தோன்றும் வட்ட இயக்கமோ அல்ல. முன்னோக்கிய இயக்கம், சார்புநிலையான மறு நிகழ்வு ஆகியவற்றின் இயக்க இயல் ஒருமையே வளர்ச்சி. இத்தகைய போக்குக்களின் தொகுப்பான வளர்ச்சி புரிவடிவில்போல நிகழ்கிறது. இம்மாதிரி (''புரி வடிவான'') வளர்ச்சி எதார்த்தத்தின் எல்லாத் துறைகளிலும் காணப் படுகிறது.

நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி பொது விதி ஆகும். ஆனால், இயக்க இயலின் மற்ற விதிகள் போலவே, இது சிறப் பான வகையில், வெவ்வேறு செயல்முறைகள், பொருள்கள் ஆகியவற்றின் சிறப்புத் தன்மைகளுக்கும் அவற்றின் வளர்ச்சி நிலைமைகளுக்கும் ஏற்ப விசேஷமான வடிவில் எப்பொழுதும் செயல்படுகிறது. ''டூரிங்குக்கு மறுப்பு'' என்னும் தமது நூலில் எங்கெல்ஸ் பின்வருமாறு எழுதினார்: ''நிலை மறுப்பின் முறை நிர்ணயிக்கப்படுவது... முதலாவதாகச் செயல்முறை யின் பொது இயல்பாலும் இரண்டாவதாகச் சிறப்பு இயல் பாலுமே.... எனவே, ஒவ்வொரு வகைப் பொருளுக்கும், ஒவ் வொரு வகை எண்ணத்துக்கும் கருதுகோளுக்கும் உள்ளது போன்றே, அதற்கே உரிய வகையான நிலை மறுப்பு நிலவுகிறது. எதனால் வளர்ச்சி உண்டாகிறதோ அந்த வகையான நிலை மறுப்பே இது.''[1]

இதன் தொடர்பாக, சோஷலிச அமைப்பில் நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதியினது செயல்பாட்டிற்குரிய சில சிறப் புத் தன்மைகளை ஆராய்வோம். உற்பத்திச் சாதனங்கள் பொது

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''டூரிங் குக்கு மறுப்பு'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கங்கள் 145-146.

உடைமையாக இருப்பதை அடிப்படையாகக் கொண்ட சோஷலிஸ அமைப்பின் புதிய இயல்பாலும், மக்களது சமுதாய, அரசியல், கருத்து ஒருமையாலும், சோஷலிஸச் சமூகத்தின் வளர்ச்சிக்குரிய தன்மை பற்றிய புரிவாலும் நிர்ணயிக்கப்படுகின்றன இந்தச் சிறப்புத் தன்மைகள். எனவே, சமரசப்படுத்த முடியாத சமூக நிலைமைகளில், உதாரணமாக முதலாளித்துவ அமைப்பில் உள்ளதோடு ஒப்பிடுகையில், இங்கே நிலை மறுப்பு சாராம்சத்தில் வேருன தன்மை கொண்டிருக்கிறது.

சோஷலிஸ அமைப்பிலும் கம்யூனிஸத்துக்குப் பரிணமிக்கும் செயல்முறையிலும் இயக்க இயல் நிலை மறுப்பின் சிறப்புத் தன்மைகள் யாவை?

சமூக வாழ்வை அடியோடு மாற்றி அமைக்கும் சமுதாய-அரசியல் புரட்சிகளின் வடிவில் நிலை மறுப்பு இங்கே நிகழ முடியாது என்பதை எல்லாவற்றுக்கும் முன்னர் குறிப்பிட வேண்டும். இதன் காரணம் என்னவென்ருல் கம்யூனிஸ அமைப்பில் உள்ள முரண்பாடுகள் சமரசப்படுத்த முடியாதவை அல்ல என்பதும் அவற்றைத் தீர்ப்பதற்குச் சமூக வாழ்வின் அஸ்திவாரங்களைத் தகர்த்து மீண்டும் நிறுவுவது தேவைப்படுவதில்லை என்பதுமே. இங்கே நிலை மறுப்புக்கு உள்ளாகுபவை சமூக அமைப்பின் அஸ்திவாரங்கள் அல்ல, சமூகக் கட்டுமானத்தின் பழையவை ஆகிவிட்ட தனித்தனி அம்சங்களும் வாழ்வு தீர்ந்த நிகழ்ச்சிகளும் கடக்கப்பட்ட வளர்ச்சிக் கட்டங்களுமே.

உதாரணமாக, சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பு, முன்னதற்குப் பின்னதன் மறுப்பு ஆகும். ஏனெனில் சோஷலிஸமும் கம்யூனிஸமும் ஒரே சமூக அமைப்பின் இரு கட்டங்கள் ஆயினும் இவை வெவ்வேறு முதிர்ச்சித் தரம் கொண்ட கட்டங்கள். சோஷலிஸம் கம்யூனிஸமாக வளர்வதற்கு மாறுதல்கள் தேவைப்படுகின்றன. சமூக அமைப்பின் தனித்தனி அம்சங்களுக்கு மறுப்பும் கம்யூனிஸக் கட்டத்துக்குப் பொருத்தமான புதிய அம்சங்கள் அவற்றின் இடத்துக்கு வருவதும் தேவைப்படுகின்றன.

சோஷலிஸ அமைப்பில் நிலை மறுப்புச் செயல்முறையின் போது தீர்க்கப்படுபவை சமரசப்படுத்தக் கூடிய முரண்பாடுகளே ஆதலால் இந்தத் தீர்வு வர்க்கங்களின் போராட்ட வடிவில் செயல்படுவதில்லை. கம்யூனிஸ்ட் கட்சியாலும் அரசினுலும் தலைமைதாங்கி நடத்தப் பெறும் மக்களது ஒழுங்கமைந்த

நடவடிக்கைகளின் வடிவிலேயே இது செயல்படுகிறது. பழைய தன் இடத்தில் புதியது வருவதற்கு இங்கும் பெருத்த முயற்சிகளும் போராட்டமும் தேவைப்படவே செய்கின்றன. ஆனுல் சோஷலிஸத்தின் நிலைமைகளில் மிகப் பெரும்பான்மையினரான மக்கள் புதியதற்கு ஆதரவாகச் செயல் ஆற்றுகிருர்கள்.

கம்யூனிஸச் சமூக அமைப்பின் நிலைமைகளில் நிலை மறுப்புக்கள் திட்டமிட்ட, உணர்வுபூர்வமான முறையில் நிறைவேறுகின்றன. அவை புறநிலையான தன்மையைப் பாதுகாத்து வைத்துக் கொள்கின்றன. ஏனெனில் அவற்றின் தேவை புறநிலையாக ஏற்பட்டு முதிர்வு அடைகிறது. ஆனுல் அவை முன்புபோல இயற்கையாகவே நிறைவேறுவதில்லை. சமூக வளர்ச்சி விதிகளை அறிந்த மக்களின் உணர்வுபூர்வமான நடவடிக்கைகளால் நிறைவேற்றப்படுகின்றன.

சோஷலிஸத்திலும் கம்யூனிஸத்திலும் பெரிய அளவில் நிலை மறுப்புக்கள் படிப்படியாக, அநேக இடை நிலைகள், கட்டங்கள் வழியாக நிகழ்கின்றன. ஒற்றைச் செயலுள்ள சிறு நிலை மறுப்புக்கள் ஒன்று சேர்வதால் இவை உருவாகின்றன. சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பது இத்தகைய பெருத்த, படிப்படியான நிலை மறுப்பாகும். சமூகத்தின் உடல் முழுவதிலும் வியாபித்துள்ள இந்த நிலை மறுப்பு சமூக வாழ்வின் வெவ்வேறு அம்சங்களுக்கு உரிய ஒற்றைச் செயலுள்ள படிப்படியான நிலை மறுப்புக்களின் வரிசையைத் தன்னுள் கொண்டிருக்கிறது.

மொத்தத்தில் சமூக வளர்ச்சி சோஷலிஸ அமைப்பில் முற்போக்குத்தன்மை கொண்டது. கம்யூனிஸ அமைப்பில் சமூக முன்னேற்றத்தின் புது வகை உருவாகிறது. இந்த முன்னேற்றம் திட்ட அமைப்பு உள்ளதாகவும் இடையருததாகவும் விரைவானதாகவும் அட்சயமானதாகவும் விளங்கும்.

சமூக முன்னேற்றத்தின் திட்டப்படி அமையும் தன்மை கம்யூனிஸச் சமூகத்தினது வளர்ச்சியின் அறிவார்ந்த இயல்பினுல் ஏற்படுகிறது. சமூக வாழ்விலும் கம்யூனிஸக் கட்டுமானத்திலும் பொதுமக்கள் ஊக்கத்துடன் பங்கு ஆற்றுகிருர்கள். தங்கள் செயல்களின் சமூக, வரலாற்று விளைவுகளை அவர்கள் அறிந்திருக்கிருர்கள்.

வளர்ச்சியின் இடையருத்தன்மை எதைக் குறிக்கிறது என்ருல் சோஷலிஸ அமைப்பில் நிறுத்தங்களோ, பின்னேக்கிய

பாய்ச்சல்களோ, பின்செல்கையின் வேறு நிகழ்ச்சிகளோ சாத்தியம் அல்ல என்பதையே. புதியதை ஒழிப்பதில் அக்கறை கொண்ட பிற்போக்குள்ள வர்க்கங்களோ, ஒழுங்கமைக்கப் பட்ட பிற சமூகச் சக்திகளோ இங்கே இல்லை. இடையரூத் தன்மை சோஷலிஸத்தின் வளர்ச்சிக்கு உரிய விரைந்த வேகத்துக்கு உள்ள நிபந்தனைகளில் ஒன்று ஆகும். கம்யூனிஸ அமைப்பின் எல்லா மேம்பாடுகளும் முன்னேற்றத்தின் விரைந்த வேகத்துக்குக் காரணமாக் இருக்கின்றன. சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு முதலாளித்துவ அமைப்பைக் காட்டிலும் அதிக விரைவாக வளர்ச்சி அடைகிறது என்பதற்கு உண்மை விவரங்கள் சான்று பகர்கின்றன.

கம்யூனிஸ முன்னேற்றம் அட்சயமானது. கம்யூனிஸ அமைப்பு தன் சொந்த அடிப்படை மீதே இடைவிடாது வளரும், செவ்வை அடைந்துகொண்டு போகும்.

இவ்வாருக, நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி வளர்ச்சியின் வரிசைக் கிரமமான கட்டங்களின் பரஸ்பரத் தொடர்பையும் அதன் பொதுத் திசையையும் வெளியிடுகிறது. வளர்ச்சியின் ஸ்தூலச் செயல்முறைகளை ஆராய்கையில் இந்தச் சட்டத்தில் பிரதிபலிக்கப்படும் அதன் பொது அம்சங்களையும், முதன்மையாக நிலை மறுப்பின் இயக்க இயல் தன்மையையும் கணக்கில் எடுத்துக்கொள்வது அவசியம் ஆகும். விதியின் இந்த அம்சம் காட்டுவது என்னவென்ருல், புதியது கட்டாயமாக வெற்றிபெறும், ஆனுல் வழக்கொழிந்தவற்றுக்கு எதிராகவும் புதியதற்கும் முற்போக்குள்ளதற்கும் ஆதரவாகவும் தீர்மான மான போராட்டம் இல்லாமல் சமூக வாழ்வில் முன்னேற்றம் சாத்தியம் ஆகாது என்பதே.

முன்னேக்கிய இயக்கத்துக்குத் துணை செய்யும் விலைமிக்க வை அனைத்தையும் பாதுகாக்கவும் பயன்படுத்தவும், கடந்த காலத்தின் மரபு வழி வந்த நல்ல அம்சங்களை விமர்சன ரீதியில் புரிந்துகொண்டு செப்பம் செய்யவும் இயக்க இயல் கற்பிக்கிறது. சமூகத்தின் பொருளியல் வாழ்வுக்கும் ஆன்மீக வாழ்வுக்கும் இது பொருந்தும்.

பழைய வடிவங்கள் குறித்த வளர்ச்சிக் கட்டத்தில் முன் னேக்கிய இயக்கத்துக்குத் தடைவிளைக்கும் முட்டுக்கட்டைகள் ஆகிவிடுகின்றன ஆதலால் அவற்றை மறுப்பதில் தாமதம் செய் யலாகாது. அதே சமயம், தங்கள் சாதக வாய்ப்புக்களை இன்

னும் பயன்படுத்தித் தீர்த்துவிடாத வடிவங்களைத் தருணத்துக்கு முந்தி மறுப்பதும் கூடாது.

வளர்ச்சியின் முற்போக்குத் தன்மையைப் பிரதிபலிப்பதான நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி, நடைமுறைச் செயல்களில் ஏற்கனவே பெற்ற வெற்றிகளுடன் நின்றுவிடக் கூடாது, மேலே செல்ல வேண்டும், புதிய வெற்றிகளைப் பெற வேண்டும் என்பதை ஆழ்ந்து அறிய உதவுகிறது. இவ்வாறு முன்னேறுவிடில் பின்தங்குதலும் ஆழ்ந்த தவறுகளும் தவிர்க்க இயலாதவை ஆகிவிடும். ஏனென்றால் வாழ்க்கை எப்போதும் முன் சென்ற வண்ணமாக இருக்கிறது.

சமூக இயக்கத்தின் முன்னேக்குத் தன்மையிலும் புதியதன் வெல்ல முடியாமையிலும் தொழிலாளி வர்க்கமும் உழைப்பாளி மக்கள் அனைவரும் திடமான உறுதி கொண்டிருக்கிறார்கள். தங்கள் புரட்சிப் போராட்டம் வெற்றியுடன் முடியும், முதலாளித்துவம் தவிர்க்க இயலாதவாறு அழியும், சோஷலிஸமும் கம்யூனிஸமும் தொடங்கும் என்ற அவர்களது நம்பிக்கை இதனால் இன்னும் வலுப்படுகிறது. கம்யூனிஸப் பிரபஞ்சக் கண்ணேட்டத்துக்கு இயல்பான வரலாற்று ரீதியான வருங்கால நம்பிக்கை வாதத்தின் விஞ்ஞான வெளியீடாக விளங்குகிறது நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி.

இயக்க இயலின் மூன்று பிரதான விதிகளை நாம் ஆராய்ந்தோம். எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி, அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தல் பற்றிய விதி, நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி ஆகியன அவை. வளர்ச்சிச் செயல்முறையின் பிரதான அம்சங்களையும் இயல்புகளையும் இவை வெளியிடுகின்றன, அதை மிகப் பொது வடிவில் விவரிக்கின்றன. ஆனால் இயக்க இயல் இந்த விதிகளுடன் தீர்ந்துவிடவில்லை. வளர்ச்சியின் மற்ற அம்சங்கள் இரட்டை (சார்புநிலை) வகைப்பிரிவுகள் வாயிலாக வெளியிடப்படுகின்றன. இவற்றில் சில வகைப்பிரிவுகள் அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்படுகின்றன.

அத்தியாயம் நான்கு

# பொருள்முதல்வாத இயக்க இயலின் வகைப்பிரிவுகள்

## § 1. தனியானதும் சிறப்பானதும் பொதுவானதும்

பொருள்கள், நிகழ்ச்சிகளின் பண்பு வரையறுப்பைப் பரிசிலனை செய்து அவை ஒன்றிலிருந்து ஒன்று வேறுபடுகின்றன என்பதை நாம் நிலைநாட்டினோம். முழுமையாக ஒரே மாதிரியான பொருள்கள் கிடையா. மரத்தில் ஒரே மாதிரியான இரண்டு இலைகள் கூட இருப்பதில்லை. அவற்றில் ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு விதத்தில் மற்றவற்றிலிருந்து வேறுபடுகின்றது, தனக்குமட்டுமே உரிய சொந்தச் சிறப்பைக் கொண்டிருக்கிறது. ஒரு தனிப் பொருளுக்கு உரியவையும் அதை மற்ற எல்லாப் பொருள்களிலிருந்தும் வேறுபடுத்துபவையும் ஆன தனிவகைப்பட்ட, ஒப்பற்ற அம்சங்களின் தொகுப்பு தனியானது எனப்படுகிறது. உதாரணமாக இம்மாதிரி அம்சங்களின் அடிப்படையில்தான் நமக்கு அறிமுகமான மனிதனைப் பல்லாயிரம் ஜனங்களிலிருந்து தனிப்படுத்திக் கண்டுகொள்ள நம்மால் முடிகிறது.

ஆனால் பொருள்கள் தனித்தன்மையும் வேற்றுமையும் மட்டும் கொண்டிருக்கவில்லை. தமக்குள் ஒற்றுமையும் கொண்டிருக்கின்றன. பொதுவான அம்சம் எதுவும் இல்லாத பொருள்களே கிடையா. உதாரணமாக மனிதர்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் வேறுபட்டிருப்பினும் அவர்களிடம் சில பொது அம்சங்கள் உள்ளன. இவற்றின் காரணமாகவே அவர்கள் மனிதர்களாக விளங்குகிறார்கள். முதல் பார்வைக்குப் பொது அம்சங்கள் எவையும் அற்றவை போன்று தோன்றும் பொருள்கள் கூடச் சில முக்கியமான இயல்புகளிலும் அம்சங்களிலும் பண்புகளிலும் ஒற்றுமை கொண்டிருப்பது அதிகக் கவனமாகக் கூர்ந்து நோக்குகையில் தெரிய வருகிறது.

உதாரணமாக, வைரம், காரீயம் என்னும் இரு கனியங்களை எடுத்துக்கொள்வோம். வைரம் படிகம். உறுதியில் மற்ற எல்லா இயற்கைப் பொருள்களையும் விஞ்சும் இரத்தினக் கல். பெரும்பாலும் அது நிறம் அற்றது. ஆனால் சிவப்பு, ஆரஞ்சு, பச்சை நிறங்கள் கொண்டதாகவும் இருக்க முடியும். வைரம் மின்சாரத்தை நன்கு கடத்துவதில்லை. காரீயமோ, கரியது, தொடுவதற்குக் கொழுகொழுப்பானது, மிகவும் மிருதுவானது. அது மின்சாரத்தை நன்கு கடத்துகிறது, ஒளிபுகாதது, உலோகப் பளபளப்பு உள்ளது. இத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் வைரமும் காரீயமும் ஆழ்ந்த உள் ஒற்றுமை கொண்டவை எனத் தெரிகிறது. அவை கார்பன் என்ற ஒரே இரசாயனத் தனிமத்தின் இயற்கையான விதங்கள் ஆகும். அவற்றின் பௌதிக இயல்புகளில் தீவிர வேற்றுமைக்குக் காரணம் வெவ்வேறு கூட்டணுக் கட்டமைப்பே.

அதாவது, வைரமும் காரீயமும் தங்களுக்குரிய வேறு வேறு தனி இயல்புகளோடு கூடவே கார்பனின் எல்லா இயல்புகளையும் கொண்டிருக்கின்றன. கார்பன் இரசாயனத் தனிமம் ஆதலால் வைரமும் காரீயமும் இரசாயனப் பொருள்களுக்கு உரிய இயல்புகளைப் பெற்றிருக்கின்றன. முடிவாக வைரமும் காரீயமும் பொருள்கள், பொருளியல் வஸ்துக்கள். எனவே எல்லாப் பொருளியல் வஸ்துக்களுக்கும் உரிய அம்சங்கள் அவற்றுக்கு இயல்பானவை.

அநேகப் பொருள்களுக்கு உரிய ஒத்த, ஒரே மாதிரியான, திரும்ப நிகழும் அம்சங்கள் பொதுவானவை எனப்படுகின்றன. இத்தகைய பொருள்கள் வகுப்பு அல்லது தொகை எனப்படுகின்றன.

வைரத்தையும் காரீயத்தையும் பற்றிய உதாரணம் காட்டுவதுபோல, பொருள்களின் முக்கிய இயல்புகள் அல்லது அம்சங்களின் பொதுமை முதல் பார்வைக்கு எப்போதும் தென்பட்டுவிடுவதில்லை. அது எப்போதும் மேல் பரப்பில் நிலவுவதில்லை. அது தோற்றத்தின் பொதுமையையோ, ஒரே விதிகளுக்கு உட்பட்டிருப்பதையோ அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். அல்லது, குறிப்பிட்ட பொருள்கள் ஒரே வளர்ச்சிச் சங்கிலியின் கணுக்களாக இருப்பதைச் சார்ந்திருக்கலாம்.

பொதுமையின் தன்மையும் அவ்வாறே வெவ்வேறாக இருக்கிறது. வைரத்துக்கு உள்ள அனேக இயல்புகள் கார்பனின்

மற்றெரு விதமான காரியத்திலிருந்து அதை வேறுபடுத்து கின்றன. அதே சமயம் வைரம் கார்பனுக விளங்குகிறது. முடிவில் வைரம் சாதாரணப் பொருளாக இருக்கிறது. கார்பனுக இருக்கும் இயல்பு வைரமாக இருக்கும் இயல்புடன் ஒப்பிடுகையில் அதிகப் பொதுவானதாக இருக்கிறது என்ருல், சாதாரணப் பொருளாக இருக்கும் இயல்புடன் ஒப்பிடுகையில் அது குறைவாகவே பொதுவானதாக இருக்கிறது. அதிகப் பொதுவான அம்சத்துடன் ஒப்புநோக்கில் குறைவாகப் பொதுவான இயல்பு சிறப்பானது எனக் கூறப்படுகிறது.

விதிவிலக்கின்றி எதார்த்தத்தின் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் உரிய இயல்புகளும் அம்சங்களும் சர்வப்பொதுவானவை அல்லது மிக மிகப் பொதுவானவை என்று சொல்லப்படுகின்றன. பொருள்கள், நிகழ்ச்சிகளினது வளர்ச்சியின் சர்வப்பொதுவான அம்சங்களும் அவை நிலவுவதற்கான வடிவங்களும் இயக்க இயலால் ஆராயப்படுகின்றன. இயக்க இயலின் விதிகளிலும் வகைப்பிரிவுகளிலும் அவை பிரதிபலிக்கின்றன. இந்த வகைப் பிரிவுகள் யாவற்றிலும் மிக முக்கியமானதும் எல்லையின்றிப் பொதுவானதும் சடப்பொருள் என்ற வகைப்பிரிவு ஆகும். பொருள்கள் நிகழ்ச்சிகள் கொண்ட பிரபஞ்சத்தின் முடிவற்ற பண்பு, அளவுப் பல்வகைப்பாட்டை, புறநிலை எதார்த்தமாக விளங்கும் அவற்றின் சர்வப்பொதுவான இயல்பின் அடிப்படையில் இது உள்ளடக்குகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் அறிதல் தனித்தனிப் பொருள்கள், நிகழ்முறைகளின் ஸ்தூல அம்சங்களிலும் தொடர்புகளிலுமிருந்து கவனத்தைத் திருப்பி, பிரதானமான, நிர்ணயகரமான, அவை எல்லாவற்றுக்கும் பொதுவான அம்சத்தை, அதாவது அவற்றின் புறநிலைத் தன்மையை மட்டுமே கிரகித்துக்கொள்கிறது.

ஆகவே புறநிலைத்தன்மை கொண்டது தனியானது மாத்திரம் அல்ல, பொதுவானதுங் கூடத்தான். பொதுவானதன் புறநிலை இருத்தலுக்கு உரிய சிறப்புத்தன்மை, அது ஸ்தூல வஸ்துக்களிலிருந்து தனித்து அல்ல, அவற்றின் பொது இயல்புகள், சாயல்கள், அம்சங்கள் என்ற வகையில் அவற்றிலேயே நிலவுகிறது என்பதில்தான் அடங்கியுள்ளது. உதாரணமாக ஆப்பிள், பேரிக்காய், ஆல்பகோடா முதலியவற்றை எடுத்துக் கொள்வோம். எல்லாவற்றுக்கும், பொதுவாக எந்தப் பழத்துக்கும் உரிய இயல்புகளை அவை கொண்டிருக்கின்றன. தனி

மையிலும் தனியானதன் வாயிலாகவும் நிலவும் பொதுவானது இதுவே.

பொதுவானது தனியானதிலிருந்து, ஸ்தூலப் பொருள்களிலிருந்து தனித்து, சுதந்திரமானதாக நிலவுகிறது, என்றும் பொதுவானது தனியானதற்கு முற்பட்டது, அதைப் படைக்கிறது என்றும் முந்திய புறநிலைக் கருத்துமுதல்வாதிகள் போன்றே தற்காலப் புறநிலைக் கருத்துமுதல்வாதிகளும் எண்ணுகிறார்கள். இவ்வாறு புரிந்துகொள்ளப்படும் பொதுவானது பரம கருத்தாக, ஸ்தூலப் பொருள்களின் கருத்துத் தன்மையாக மாறிவிடுகிறது. ஸ்தூலப் பொருள்களின் இருத்தலை அதுவே நிர்ணயிப்பதாகக் கருதப்படுகிறது. உண்மையிலோ ''தானேயான வீட்டையோ'' ''தானேயான குதிரையையோ'' எவரும் கண்டதில்லை. ''தானேயான பழத்தை'' எவரும் ஒருபோதும் உண்டதில்லை. எதார்த்தத்தில் மக்கள் புழங்குபவை ஸ்தூலமான வீடுகளும் குதிரைகளும் பழங்களுமே ஆகும்.

பல தத்துவவாதிகள் இதற்கு எதிர்க்கோடித் தவற்றில் விழுந்துவிட்டார்கள். பொதுவானது புறநிலையாக நிலவுவதை அவர்கள் மறுத்தார்கள். தனித்தனிப் பொருள்கள் மட்டுமே புறநிலையாக நிலவுகின்றன என்றார்கள். அவர்களது கருத்துப்படி பொதுவானது மனிதச் சிந்தனையின் விளைவு தவிர வேறு இல்லை. மனிதனுடைய அறிவால் தனது சொந்த உபயோகத்துக்காக அது ஆக்கப்படுகிறது. இந்த நோக்கின்படி பொதுவானது என்பது நமது மொழிச் சொல்லின் அர்த்தம் மட்டுமே.

தனியானதும் பொதுவானதும் பரஸ்பரத் தொடர்பில் நிலவுகின்றன என்பதைப் பொருள்முதல்வாத இயக்க இயல் ஆதாரமாகக் கொள்ளுகிறது. வி. இ. லெனின் ''தத்துவக் குறிப்புப் புத்தகங்களில்'' பின்வருமாறு எழுதினார்: ''...தனியானது பொதுவானதற்கு இட்டுச் செல்லும் தொடர்பில் அன்றி வேறு விதமாக நிலவுவதில்லை. பொதுவானது தனியானதிலேயே, தனியானதன் வாயிலாகவே நிலவுகிறது. எந்தத் தனியானதும் (ஒரு அல்லது மறு வகையில்) பொதுவானது ஆகும். எந்தப் பொதுவானதும் தனியானதன் (பகுதி, அம்சம் அல்லது தன்மையே) ஆகும். எந்தப் பொதுவானதும் எல்லாத் தனி வஸ்துக்களையும் கிட்டத்தட்ட மட்டுமே உட்படுத்துகிறது. எந்தத்

தனியானதும் பொதுவானதில் ஓரளவுதான் அடங்குகிறது இத்தியாதி, இத்தியாதி.''[1]

ஒவ்வொரு ஸ்தூலப் பொருளும் பொதுவானது, சிறப்பானது, தனியானது, இவற்றின் ஒருமை ஆகும். உதாரணமாக ஒவ்வொரு பாட்டாளியும் தனக்கே உரிய அம்சங்களைக் கொண்டிருக்கிறுன் (தனியானது). அவன் கப்பல் துறைத் தொழிலாளி என்றுல் துறைமுகத் தொழிலாளர்களுக்கு உரிய சிறப்புத் தன்மைகளை அவன் பெற்றிருக்கிறுன் (சிறப்பானது). எந்தப் பாட்டாளிக்கும் இயல்பான அம்சங்களும் அவனிடம் உள்ளன. தனது உழைப்புச் சக்தியை விற்று அவன் பிழைக்கிறுன் (பொதுவானது).

பொதுவானதையும் தனியானதுடன் அதன் பரஸ்பரத் தொடர்பையும் பற்றிய இயக்க இயல், பொருள்முதல்வாதப் புரிவு எதார்த்தத்தைச் சரியாக அறிந்துகொள்வதற்கு அவசியமானது. பொதுவானது பொருள்களின் தன்மையிலேயே வேரோடியிருக்கிறது என்பதையும் அவற்றின் உள் ஒருமையின் வெளியீடாக விளங்குகிறது என்பதையும் நாம் ஏற்கனவே பார்த்தோம். எனவே, பொருள்கள், நிகழ்ச்சிகளின் தன்மையையும் அவற்றின் வளர்ச்சி விதிகளையும் பற்றிய அறிவு பொதுவானது பற்றிய அறிதலில் அடங்கிவிடுகிறது. பொதுவானதோ, தனியானதன் வாயிலாக அறியப்படுகிறது. முதலில் உணர் உறுப்புக்களின் உதவியால் மனிதன் தனியான, பிரத்தியேகமான நிகழ்ச்சிகளையும் அவற்றின் வெவ்வேறு இயல்புகளையும் புரிந்துகொள்கிறுன். பிறகு சிந்தனை புலனறிவு விவரங்களைப் பகுத்தாய்கிறது, முக்கியமானவற்றை முக்கியம் அற்றவற்றிலிருந்தும் பொதுவானதைத் தனியானதிலிருந்தும் பிரிக்கிறது. ஏதேனும் ஒரு வகுப்பைச் சேர்ந்த நிகழ்ச்சிகளுக்கு உரிய பொதுவான, முக்கிய அடையாளங்களைத் தொகுத்து இந்த நிகழ்ச்சிகள் பற்றிய கருதுகோளை உருவாக்குகிறது. நிகழ்ச்சிகளின் ஒரு குறித்த வகுப்புக்கு இயல்பான பொதுமையும் அதே சமயம் முக்கியமும் வாய்ந்த அம்சங்களையே கருதுகோள் எப்போதும் வெளியிடுகிறது. மொத்தத்தில் அறிதல் செயல்முறை தனியானதிலிருந்து சிறப்பானதன் வாயிலாகப் பொதுவானதற்கும் சர்வப் பொதுவானதற்கும் செல்கிறது.

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 318.

தனியானது, பொதுவானது என்னும் வகைப்பிரிவுகள் புதியது தோன்றும் செயல்முறையைச் சரியாகப் புரிந்துகொள்ளவும் உதவுகின்றன. விஷயம் என்னவென்ருல், இயற்கையிலும் சமூகத்திலும் புதியது பெரும்பாலும் உடனடியாகத் தோன்றிவிடுவதில்லை. ஆரம்பக் கட்டங்களில் அது தனியானதாகத் தோற்றம் எடுக்கிறது. பின்பு உறுதிப்பட்டுத் துலக்கமாக உருவாகிறது, சிறப்பானது ஆகிறது. அப்புறம் பொதுவானது அல்லது சர்வப்பொதுவானதுகூட ஆகிவிடுகிறது. கம்யூனிஸச் சமூக அமைப்பு முதலில் ஒரு நாட்டில் உருவாகத் தொடங்கியது. தற்போதோ உலக சோஷலிஸ அமைப்பாக உருவாகியுள்ள நாடுகளின் பெரிய குழுவில் சோஷலிஸப் புரட்சி வெற்றி பெற்றுவிட்டது. இப்பொழுது கம்யூனிஸம் ஏற்கனவே சிறப்பானதாக விளங்குகிறது. உலகம் முழுவதிலும் கம்யூனிஸத்தின் தவிர்க்கமுடியாத வெற்றியின் விளைவாக அது சர்வப்பொது ஆகிவிடும்.

பொதுவானதற்கும் தனியானதற்கும் உள்ள பரஸ்பர உறவு பற்றிய கேள்விக்குத் தவருன விடை காண்பது பெருத்த சித்தாந்த, அரசியல் பிழைகள் ஏற்படக் காரணம் ஆகும். உதாரணமாக, பொதுவானது சிறப்பானதிலும் தனியானதிலும் நிலவுகிறது என்பதையும், எனவே நிகழ்ச்சியின் வளர்ச்சிக்கு உரிய நிலைமைகளையும் ஸ்தூலமான சூழ்நிலையையும் தனிப்பட்ட சிறப்புத் தன்மைகளையும் பொறுத்து அது எப்போதும் ஒரு அல்லது மற்றெரு ஸ்தூல வடிவில் தோற்றம் அளிக்கிறது என்பதையும் புரிந்து கொள்ளாதிருப்பது வறட்டுச் சூத்திரவாதத்துக்கு இயல்பானது. தனியானதன் சிறப்புத்தன்மைகளை அசட்டை செய்வதும், சந்தர்ப்பங்கள், சூழ்நிலைமைகளின் மாறுதல்களைப் பொருட்படுத்தாமல் பொதுவானதைக் கையாள்வதற்குப் பிரதான முக்கியத்துவம் கொடுப்பதும் காரணமாக வறட்டுச் சூத்திரவாதிகள் புதிய சூழ்நிலைமைகளைத் தேவையான அளவு பகுத்தாராயாமல் பொதுச் சூத்திரங்களைத் திரும்பத் திரும்பச் சொல்லும் நிலைக்குத் தவிர்க்க இயலாதவாறு இழிந்து, அதனுலேயே வாழ்க்கையிலிருந்தும் மக்கள் திரளிலிருந்தும் தொடர்பை அறுத்துக் கொள்கிருர்கள்.

பொதுவானதற்கும் தனியானதற்கும் உள்ள பரஸ்பர உறவு பற்றிய கேள்விக்குத் தவருன விடை காண்பதற்குச் சான்று கூறும் இன்னெரு பிழை, பொதுவானதன் பங்கைக்

குறைத்து மதிப்பிடுவதும் அல்லது ஒரேயடியாக மறுப்பதும், சிறப்பானது, தனியானது ஆகியவற்றின் பங்கை மிகைப்படுத்து வதும் ஆகும். திரிபுவாதிகள் எல்லா நாடுகளுக்கும் பொதுவான சோஷலிஸப் புரட்சி விதிகள் நிலவுவதை மூடி மறைக்கிருர்கள் அல்லது நேரடியாக மறுக்கிருர்கள் என்பதும் தனித்தனி நாடு களின் சிறப்புக்களை மிகைப்படுத்துகிருர்கள் என்பதும் தெரிந்த விஷயங்கள். சோஷலிஸப் புரட்சிக்குரிய பொது விதிகள் நிர் ணயகரமான முக்கியத்துவம் உள்ளவை ஆதலால் அவை செயல்படுவது கட்டாயமானது என்பதைப் படைப்புத் தன்மை வாய்ந்த மார்க்ஸீயம்-லெனினீயம் அடிப்படையாகக் கொள் கிறது. அதே சமயம், ஒவ்வொரு நாட்டிலும் அதன் ஸ்தூல மான, வரலாற்று நிலைமைகளைப் பொறுத்து இந்த விதிகள் வெளிப்படுவதன் சிறப்புத் தன்மைகளைத் தெரிந்துகொள்ளவும் கணக்கில் எடுத்துக்கொள்ளவும் வேண்டும் என்று மார்க்ஸீயம்-லெனினீயம் கோருகிறது.

## § 2. காரணமும் விளைவும்

நமக்கு அறிமுகம் அற்ற தோற்றத்தையோ நிகழ்ச்சியையோ எதிர்ப்படும்போது, நாம் வழக்கமாகப் பின்வருமாறு எண்ண மிடுகிருேம்: அது ஏன் நிலவுகிறது? அது ஏன் தோன்றியது அல்லது நிகழ்ந்தது? இந்தக் கேள்விகள் குறித்துச் சிந்திப்பதன் மூலம் அந்தத் தோற்றம் அல்லது நிகழ்ச்சிக்கு உரிய காரணத் தை நாம் தேடுகிருேம். இது தற்செயலாக அல்ல. காரணம் இல் லாத நிகழ்ச்சிகள் எவையும் கிடையா, எல்லா நிகழ்ச்சிகளும் குறிப்பிட்ட காரணங்களின் விளைவுகளே என்று அனுபவம் காட் டுகிறது. ஒரு தோற்றம் அல்லது நிகழ்ச்சியின் காரணத்தை நிலை நாட்டுவது அது பற்றிய அறிதலின் மிக முக்கியமான கட்டம் ஆகும். காரண-விளைவுத் தொடர்பு எங்கு வெளிப்படுகிறதோ அங்கு விஞ்ஞானம் தொடங்குகிறது.

காரணம், விளைவு என்பவை யாவை? அவற்றுக்கு இடையே உள்ள தொடர்பு என்ன?

காரண-விளைவுத் தொடர்பு அல்லது காரணம் உடைமை என்பது சர்வப்பொதுவான தொடர்பின் ஒரு வடிவம் ஆகும். திட்டவட்டமாகக் கூறினுல், ஒரு நிகழ்ச்சி அல்லது சந்தர்ப்பம் எதில் மற்ருென்றுக்குக் காரணம் ஆகிறதோ, மற்ருென்றைத்

தோற்றுவிக்கிறதோ, தொடர்பின் அந்த வடிவம் ஆகும் இது. ஏதேனும் ஒரு நிகழ்ச்சியைத் தோற்றுவிக்கும் காரணி அல்லது சூழ்நிலை காரணம் எனப்படுகிறது. ஒரு நிகழ்ச்சியின் தோற்றத்தையும், அதன் நிலையின் மாற்றத்தையும் அதன் மறைவையும் ஏற்படுத்துகிறது காரணம். காரணத்தினது .செயல்பாட்டின் பயன் விளைவு எனப்படுகிறது.

காரண-விளைவுத் தொடர்பு அனேக முக்கிய அம்சங்களைத் தன்மையாகக் கொண்டிருக்கிறது. முதன்மையாக நிகழ்ச்சிகளின் காரணச் சார்பு சர்வப்பொதுத் தன்மை உள்ளது. தனக்கு உரிய இயற்கைக் காரணங்கள் இல்லாத தோற்றமோ நிகழ்ச்சியோ ஒன்று கூடக் கிடையாது. காரணம் உடைமை என்பது புறநிலைப் பிரபஞ்சத்தின் விதிவிலக்கு அற்ற சர்வப்பொது விதி என்று கூறலாம்.

எனினும் காரணம் உடைமை தவிரத் தொடர்பின் வேறு வடிவங்களும் நிலவுகின்றன என்பதைக் குறிப்பிட வேண்டும். அவற்றில் பல காரணச் சார்புடன் பின்னிப் பிணைந்துள்ளன என்ருலும் அதுவாகவே ஆகிவிடுவதில்லை. தொடர்பின் மிக முக்கியமான வடிவங்கள் தனியானதும் பொதுவானதும், இன்றியமையாமையும் தற்செயலும், உருவமும் உள்ளடக்கமும், சாத்தியப்பாடும் எதார்த்தமும் முதலிய ஒப்புநிலை வகைப்பிரிவுகளால் பிரதிபலிக்கப்படுகின்றன. இந்த வகைப்பிரிவுகளை நாம் மேலே ஆராய்வோம். நிகழ்ச்சிகளின் சர்வப்பொதுவான பரஸ்பரச் செயல்பாடு என்னும் முடிவற்ற சங்கிலித் தொடரில் காரணத் தொடர்பு ஒரு கணு மாத்திரமே ஆகும்.

காரணத் தொடர்பு புறநிலையானது. அதாவது பொருளியல் பிரபஞ்சத்தின் நிகழ்ச்சிகளுக்கு அது இயல்பானது, மனிதர்களின் உணர்வைச் சார்ந்தது அல்ல. உதாரணமாக, அங்கஜீவிகளின் பரிணும ரீதியான மாறுதலின் ஒரு காரணம் மாறும் சூழ்நிலைக்கும் அவற்றுக்கும் உள்ள பரஸ்பரப் பாதிப்பு ஆகும். இந்தத் தொடர்பு இயற்கையிலேயே நிலவுகிறது. எந்த உணர்வையும் இது சார்ந்திருக்கவில்லை. காரணச் சார்பு பொருள்களிலேயே அடங்கியிருக்கிறது, வெளியிலிருந்து அவற்றில் புகுத்தப்படுவதில்லை என்று எழுதினுர் வி. இ. லெனின்.

காரணத் தொடர்பின் சர்வப்பொதுத் தன்மையையும் புறநிலைத் தன்மையையும் பற்றிய பிரச்சினை குறித்துப் பிரதானத் தத்துவப் போக்குகளான பொருள்முதல்வாதத்துக்கும்

கருத்துமுதல்வாதத்துக்கும் இடையே கடுமையான போராட்டம் நெடுங்காலமாக நடந்து வருகிறது. பொருள்முதல்வாதிகள் நிர்ணய நியதிக் கொள்கையின் நோக்கைக் கடைப்பிடிக்கிறார்கள். இந்தப் போதனையின்படி காரணச் சார்புத்தன்மை சர்வப்பொதுவான, புறநிலை இயல்பு கொண்டது.

காரணத் தொடர்பின் புறநிலைத் தன்மையையும் சர்வப் பொதுத் தன்மையையும் மறுக்கும் போதனை நிர்ணய நியதி இன்மைக் கொள்கை எனப்படுகிறது. இதன் ஆதரவாளர்கள் நிர்ணய நியதி இன்மைக் கொள்கையினர் எனப்படுகிறார்கள். இவர்களில் சிலர் காரணம் உடைமையையே மறுக்கிறார்கள். இது புலனுணர்ச்சிகளின் வழக்கமான, மீண்டும் மீண்டும் நிகழ்கிற தொடர்வரிசையே என்று அவர்கள் கருதுகிறார்கள். காரணம் உடைமை மனிதனுடைய பகுத்தறிவிற்கு இயல்பானது என்றும், எவ்வித அனுபவமும் ஏற்படும் முன்பே, அதாவது அனுபவச் சார்பின்றியே அது அவனுக்கு வாய்த்துள்ளது என்றும், அவன் காரணம் உடைமையை நிகழ்ச்சிகள்மீது சுமத்தி, அதன் உதவியால் அவற்றை வரிசைப்படுத்துகிறான் என்றும் வேறு சிலர் எண்ணுகிறார்கள். வேறு வார்த்தைகளில் சொன்னால் காரணம் உடைமை பற்றிய புரிவில் நிர்ணய நியதி இன்மைக் கொள்கையினர் அகநிலைக் கருத்துமுதல்வாதிகளின் நிலையையே மேற்கொள்கிறார்கள்.

நுண்பொருள் பிரபஞ்சத்திலும் உளச் செயல்முறைகளிலும் சமூக வாழ்விலும் காரணம் உடைமை இல்லை என்பதையே நவீன விஞ்ஞான விவரங்கள் காட்டுகின்றன என்று அவர்கள் சொல்கிறார்கள். ''பௌதிகக்'' கருத்துமுதல்வாதிகள் காரணத் தொடர்பை மறுப்பதற்கு ஆதரவாக நுண்பொருள் பிரபஞ்சம் பற்றிய பௌதிகத் துறையிலிருந்து தங்கள் வாதங்களைப் பெறுவதற்கு முயல்கிறார்கள். சாஸ்திரீய இயந்திர இயல் விதிகள் செயல்படும் பெருங் கோளங்களின் பிரபஞ்சத்தில் கோளத்தின் ஆயத்தொலைகளையும் அதன் வேகத்தையும் நாம் ஒரே சமயத்தில் துல்லியமாக நிச்சயிக்க முடியும் என்பதை அவர்கள் ஆதாரமாகக் கொள்கிறார்கள். இங்கே காரணம் என்பது ஒரு கோளத்தில் வெளியிலிருந்து புகுத்தப்படும் சக்தி என்று புரிந்துகொள்ளப்படுகிறது. இடவெளியில் கோளத்தின் நிலை அல்லது வேகம் மாறுவதே விளைவு ஆகும். கோளங்கள் ஒன்றன் மீது ஒன்று செலுத்தும் பரஸ்பர வெளிப் பாதிப்பு காரண

முடைமையின் இந்த வடிவில் அடங்கியுள்ளது. இது இயந்திர வகைப்பட்ட வடிவம் ஆகும்.

நுண்செயல்முறைகளில் நுண்துகள்களின் ஆயத்தொலைகளையும் உந்தல்களையும் ஏககாலத்தில், வரம்பற்ற துல்லியத்துடன் நிச்சயிப்பது இயலாது. எனவே, ஒரு நுண்துகள்கூடக் காரணமுடைமை விதிக்கு உட்படுவதில்லை என்று நிர்ணய நியதி இன்மைக் கொள்கையினர் முடிவுகட்டுகிறுர்கள். அவர்களது கருத்துப்படி, நுண்பொருள் தனது இயக்க வழியைச் சுயேச்சையாகத் தெரிந்தெடுத்துக்கொள்கிறது. நுண்பொருள் பிரபஞ்சத்தில் காரணச் சார்பு இல்லை என்பதற்கு இது சான்று பகர்கிறது.

உண்மையிலோ, நுண்பொருள் பிரபஞ்சத்தில் நுண்துகள்களின் ஆயத்தொலைகளையும் உந்தல்களையும் ஒரே சமயத்தில் நிச்சயிக்க இயலாது என்பதிலிருந்து பெறப்படும் முடிவு முற்றிலும் வேறுக இருக்க வேண்டும். காரணத் தொடர்பின் இயந்திர ரீதியான வடிவம் அங்கே இல்லை, இந்தத் தொடர்பின் வேறு விதங்கள் அங்கே செயல்படுகின்றன என்பதே இம்முடிவு. காரணத் தொடர்புகளின் மாதிரிகள் பல்வகைப்பட்டவை என்பதையே இயக்க இயல் பொருள்முதல்வாதம் அடிப்படையாகக் கொள்கிறது. இந்தத் தொடர்பை ஏதேனும் ஒரு விதத்துக்கு அது கொண்டுவந்து விடுவதில்லை. எதார்த்தத்தின் வெவ்வேறு துறைகளில் காரணத் தொடர்பு வெவ்வேறு விதமாக வெளிப்படுகிறது என அது கருதுகிறது.

புறநிலைக் கருத்துமுதல்வாதிகள் நிர்ணய நியதி இன்மைக் கொள்கையை வழக்கமாக ஆதரிப்பதில்லை. காரணத் தொடர்பை அவர்கள் ''ஒப்புக்கொள்கிறுர்கள்.'' ஆனுல் அவர்களது கொள்கைப்படி, காரணங்கள் கருத்தியலானவை, இயற்கைக்கு மேற்பட்டவை. அவை பரம கருத்தை, ஆன்மாவை, கடவுளை, இன்னும் இத்தகையவற்றை நோக்கி மேலே ஏறுகின்றன. இம்மாதிரி எண்ணங்கள் விஞ்ஞானத்துக்கு முரண்படுகின்றன. மதகுருக்களின் செல்வாக்குக்கும் மாயாவாதத்துக்குமே இவை வழி கோலுகின்றன. உதாரணமாக, தற்காலக் கத்தோலிக்க நவதாமஸீயத் தத்துவவாதிகள், நிலவுபவை யாவற்றுக்கும் முடிவான காரணம் கடவுளே என்று நேரடியாக வலிந்துரைக்கிறுர்கள்.

காரணத் தொடர்பின் மிக முக்கிய அம்சமாக விளங்குகிறது அதன் இன்றியமையாத தன்மை. இதன் அர்த்தம் என்ன என்றுல்

குறிப்பிட்ட காரணம், பொருத்தமான நிலைமைகள் நிலவும் போது, குறிப்பிட்ட விளைவைக் கட்டாயமாக, தவிர்க்க இயலாத வாறு ஏற்படுத்துகிறது என்பதாகும்.

எனினும், தமக்கு உரிய காரணங்கள் கொண்ட எல்லா நிகழ்ச்சிகளும் இன்றியமையாதவை என்று மேற்கூறியவற்ருல் அர்த்தப்படவில்லை. காரணத்துக்கும் விளைவுக்கும் இடையே தொடர்புஇன்றியமையாததே. ஆனுல்ஏதேனும்ஒரு செயல்முறை யைப் பொறுத்தவரை காரணம் தானே தற்செயலானதாக இருக்கக்கூடும். அவ்வாருனல் இந்தக் காரணத்தின் விளைவும் தற்செயலானதாகவே இருக்கும். உதாரணமாக, நோய் உண் டாக்கும் பாக்டீரியங்கள் மனிதனது உடலில் புகுந்துவிட்டால் குறித்த நிலைமைகள் (உடல்நிலை பலவீனமடைதல் முதலியன) இருக்கும்போது அவன் கட்டாயமாக நோய்ப்படுகிருன். பாக்டீரியங்களோ, இன்றியமையாத முறையில் அல்ல, தற்செயலாகவே உடலில் புகுகின்றன. எனவே நோய் தற் செயலானது என்று ஆகிறது.

குறித்த காரணம் குறித்த விளைவை ஏற்படுத்துவது பொ ருத்தமான நிலைமைகள் நிலவும் போது மட்டுமே நிகழ்கிறது என மேற்காட்டிய உதாரணங்களால் தெரிய வருகிறது. காரணம் என்பது நிகழ்ச்சியைத் தோற்றுவிப்பது. நிலைமைகள் என்பவை விளைவு தொடங்குவதற்குத் தேவையான விஷயங்கள். இவை விளைவு தொடங்குவதற்குத் துணை புரிகின்றன, ஆனுல் தாமே விளைவை ஏற்படுத்த இவற்ருல் முடியாது. உதாரண மாக, நெருப்புக்குச்சி பற்றி எரிவதற்கு நிலைமைகளின் ஒரு முழுத் தொடர் தேவைப்படுகிறது: நெருப்புக்குச்சி உலர்ந் திருக்க வேண்டும், அதே சமயம் எளிதில் நொறுங்கக் கூடியதாக இருக்கக் கூடாது, சுற்றுச் சூழலில் போதிய ஆக்சிஜன் இருக்க வேண்டும், இத்தியாதி.

காலத்தில் காரண-விளைவுத் தொடர்பின் கண்டிப்பான வரி சைக் கிரமம் இவ்வளவே முக்கியமான அதன் அம்சம் ஆகும். காரணமாக விளங்கும் நிகழ்ச்சி கட்டாயமாக விளைவுக்கு முந் தியதாக இருக்கும். விளைவு இந்த நிகழ்ச்சிக்கு முன்னரோ, அத னுடன் ஒரே நேரத்திலோ தோன்ற முடியாது. விளைவு எப்போது மே சற்று பின்னரே தொடங்கும். ஆனுல் காலக் கிரமத்தில் முந்தியிருப்பது ஒரு குறித்த நிகழ்ச்சியைக் காரணமாகக் கருது வதற்கு இன்றியமையாதது எனினும் போதிய நிபந்தனை அல்ல.

ஒரு குறித்த நிகழ்ச்சிக்கு முந்தி இருந்தவை எல்லாம் அதன் காரணம் ஆகிவிடா. ''இதன்பின்'' என்பது ''இதனுல்'' அல்லது ''இதன் காரணமாக'' என எப்போதும் அர்த்தப்படாது. கோடைகாலம் எப்போதும் இளவேனிலின் பின் வருகிறது, கூதிர்காலம் கோடைகாலத்தின் பின் வருகிறது, இவ்வாறே பிறவும். ஆனுல் இளவேனில் கோடையின் காரணம் அல்ல, கோடைகாலம் கூதிர்காலத்தின் காரணம் அல்ல. ஆண்டின் பருவமாறுதல்கள் சூரியனைச் சுற்றி பூமியின் இயக்கத்தினுலும் பூமியின் கிரகப்பாதையின் மட்டத்தை நோக்கி அதன் அச்சின் சாய்வினுலும் ஏற்படுகின்றன.

விஞ்ஞானம் இன்னும் போதிய வளர்ச்சி பெருமலும் விஞ்ஞான அறிவு பெருந்தொகையான மக்களுக்குக் கிடைக்காமலும் இருந்தபோது ஜனங்கள் காரணத் தொடர்பையும் காலவரிசைக் கிரமத்தையும் அடிக்கடி ஒன்ருகவே கருதினுர்கள். பல வித மூட நம்பிக்கைகளுக்கும் காழ்ப்புகளுக்கும் ஒரு ஊற்றுக்கண்ணுக விளங்கியது இந்த எண்ணம். இந்த மூட நம்பிக்கைகளும் காழ்ப்புகளும் ஒரு அல்லது மற்ருெரு வடிவில் இன்றளவும் நிலைத்திருக்கின்றன.

காரண-விளைவுத் தொடர்பு பற்றிய அறிவு சரியானது என்பதை நிர்ணயிக்கும் அளவுகோலாகவும், காரணத் தொடர்பை வெறும் கால வரிசைக் கிரமத்திலிருந்து வேறுபடுத்திக் காண்பதற்கான அளவுகோலாகவும் பயன்படுவது மனிதனுடைய நடைமுறை மட்டுமே. மறுபுறம் காரணத் தொடர்பு பற்றிய அறிவு மனிதனுடைய நடைமுறைக்கும் எதார்த்தச் செயல்முறைகளை விஞ்ஞான ரீதியாக முன்கண்டு தனக்குத் தேவையான திசையில் அவற்றை மாற்றுவதற்கும் பெருத்த முக்கியத்துவம் உள்ளதாக விளங்குகிறது.

காரணத் தொடர்பை ஆராய்கையில் ஒரு விஷயத்தைக் கருத்தில் கொள்வது இன்றியமையாதது. காரணம் எந்த நிகழ்ச்சி மீது பாதிப்பு விளைக்கிறதோ அதற்கு வெளியிலுள்ளதாக எப்போதும் இருப்பதே இல்லை. காரணங்கள் வெளியானவையாகவும் இருக்கலாம் உள்ளார்ந்தவையாகவும் இருக்கலாம். குறித்த பொருளின் மாற்றத்துக்குரிய உள் காரணங்கள் இந்தப் பொருள்களின் இயல்பிலேயே வேரூன்றியுள்ளன, அதன் எவையேனும் அம்சங்களின் பரஸ்பரப் பாதிப்பாக விளங்குகின்றன. உள் காரணங்கள் வெளிக் காரணங்களைவிட அதிக முக்கியமான

பங்கு ஆற்றுகின்றன. உதாரணமாக எவ்விதச் சமுதாயப் புரட்சிக்கும் உள் காரணமாக விளங்குவது ஒரு குறித்த நாட்டில் குறித்த உற்பத்தி முறையின் உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் இடையே ஏற்படும் முரண்பாடு தானே தவிரஎவையேனும் வெளிச் சக்திகளின் பாதிப்பு அல்ல.

காரணம் வெளியானதாக இருக்கும்போதுகூட, விளைவு இந்தக் காரணத்தால் கொண்டுவரவோ உண்டாக்கவோ படுவதில்லை. மாறாக, காரணமும் அது பாதிப்பு ஏற்படுத்தும் நிகழ்ச்சியும் பரஸ்பரம் செயல்படுவதன் பயனாகவே அது விளங்குகிறது. எனவேதான் ஒரே காரணம் வெவ்வேறு விளைவுகளை ஏற்படுத்தக் கூடும். சூரிய கிரணங்களின் பாதிப்பினால் பனிக்கட்டி உருகுகிறது, தாவரம் கரியமில வாயுவை உட்கொண்டு வளர்கிறது, மனிதன் வெயில் காய்கிறான், அவனுடைய சரீரத்தில் சிக்கலான உடலியல் செயல்முறைகள் நிகழ்கின்றன. வெவ்வேறு காரணங்கள் ஒரே விளைவை ஏற்படுத்துவதும் நிகழ்கிறது. தானியப் பயிர்களின் குறைவான விளைச்சல் மழையின்மை காரணமாகவோ, விவசாய இயல் நடவடிக்கைகள் முறிக்கப்பட்டதன் காரணமாகவோ, மாற்றிப் பயிரிடுவதில் செய்யப்பட்ட தவறு காரணமாகவோ, கெட்ட விதைகள் பயன்படுத்தப்பட்டதன் காரணமாகவோ, இத்தகைய பிறவற்றின் காரணமாகவோ ஏற்பட்டிருக்கலாம்.

ஆகவே, ஒரு நிகழ்ச்சிக்குக் காரணமாகப் பயன்படுவது பல்வேறு வஸ்துக்களின் பரஸ்பரச் செயல்பாடோ அல்லது ஒரே வஸ்துவுடைய அம்சங்களின் பரஸ்பரச் செயல்பாடோ அல்லது இவ்விரண்டுமேயோ, அதாவது உள் வெளிக் காரணிகளின் தொகுப்போ ஆகும். ''...பரஸ்பரச் செயல்பாடுதான் பொருள்களின் உண்மையான *causa finalis*[1] ஆக விளங்குகிறது''[2] என்று எழுதினார் எங்கெல்ஸ்.

காரண-விளைவுத் தொடர்பின் இயல்பான அம்சங்களில் ஒன்று என்னவெனில் காரணம் பாதிப்பை ஏற்படுத்திய பின்னரும் காரணத்துக்கும் விளைவுக்கும் உள்ள தொடர்பு நின்று

---

[1] முடிவான காரணம்.—(ப-ர்.)

[2] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''இயற்கையின் இயக்க இயல்'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 546.

விடுவதில்லை என்பதாகும். இந்தத் தொடர்பு நிலைத்திருக்கிறது, வளர்கிறது. இது பின்வருவனவற்றில் வெளிப்படுகிறது.

முதலாவதாக, விளைவு இரண்டாவதாகவும் காரணத்தைச் சார்ந்ததாகவும் இருந்து கொண்டே காரணத்தின் மீது திரும்பப் பாதிப்பு நிகழ்த்தக் கூடும். உதாரணமாக, புதிய சமூகக் கருத்துக்களும் சித்தாந்தங்களும் முடிவில் பார்க்கும் போது சமூக வாழ்வின் பொருளாதார நிலைமைகளில் ஏற்படும் மாறுதல்களின் விளைவே ஆகும். எனினும் தோன்றிய பிறகு இந்தக் கருத்துக்களும் சித்தாந்தங்களும் பொருளாதாரம் உள்படச் சமூக வாழ்வின் எல்லாத் துறைகள் மீதும் பலத்த பாதிப்பை ஏற்படுத்துகின்றன.

இரண்டாவதாக, காரணமும் விளைவும் தங்கள் இடங்களையும் தாங்கள் ஆற்றும் பங்கையும் மாற்றிக்கொள்ளக் கூடும். அதிலும் இம்மாறுதல்கள் இரு வகைகளில் வெளிப்படும். விளைவு காரணமாகவும் காரணம் விளைவாகவும் மாறலாம். உதாரணமாக, பண்பு மாற்றம் அளவு மாற்றத்தின் விளைவு என்றால் புதிய பண்பு புதிய அளவுக்குக் காரணம் ஆகிறது.

காரணமும் விளைவும் இடங்களை மாற்றிக்கொள்ளலாம் என்ற விவரம் பின்வருவதிலும் வெளியாகிறது: இங்கே அல்லது இப்போது விளைவாக விளங்கும் நிகழ்ச்சி மற்றொரு தொடர்பில் அல்லது காலத்தில் காரணம் ஆகலாம். ஏனென்றால் எந்த ஒரு நிகழ்ச்சியும் ஏதேனும் ஒரு காரண-விளைவுத் தொடர்பில் இருப்பதில்லை. மாறாக, இம்மாதிரித் தொடர்புகளின் முழு வலைப் பின்னலில் அது அடங்கியுள்ளது. எனவே அதன் வெவ்வேறு முடிச்சுக்களில் ஒரு நிகழ்ச்சி ஒரு சமயம் காரணமாகவும் மறு சமயம் விளைவாகவும் விளங்கலாம்.

காரணத் தொடர்புகள் தங்கள் இயல்பிலும் வடிவங்களிலும் முக்கியத்துவத்திலும் மிக வெவ்வேறானவை. அவை எதார்த்தத்தின் வெவ்வேறு துறைகளில் செயல்படுகின்றன, இந்தத் துறைகளின் சிறப்புத் தன்மைகளுக்கு ஏற்ப வெவ்வேறு வடிவங்களில் வெளிப்படுகின்றன. ஆதலால் அவை ஒன்றிலிருந்து ஒன்று சாரரூபத்தில் வேறாயிருக்கலாம். நுண்பொருள் பிரபஞ்சத்தில் காரணம் உடைமை நிலவுவது பெரும்பொருள் பிரபஞ்சத்தில் நிலவும் வடிவில் அல்ல என்பதை நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். சடப்பொருள் இயக்கத்தின் வெவ்வேறு வடிவங்களுக்கு ஏற்பக் காரணத் தொடர்பின் மாதிரிகள் வெவ்

வேருக இருக்கின்றன. இந்தக் காரணத்தினுல்தான் உயிரற்ற இயற்கையிலோ அங்ககப் பிரபஞ்சத்திலோ செயல்படும் காரணத் தொடர்பின் உதவியால் சடப்பொருள் இயக்கத்தின் சமுதாய வடிவத்தினது பண்புச் சிறப்பை விளக்குவது இயலாததாக இருக்கிறது. பொருளியல் நலங்களின் உற்பத்தியும் அதனுல் மனிதர்களுக்கு இடையே உருவாகும் உறவுகளும் சமூக வாழ்வின் அடிப்படையாக விளங்குகின்றன. எனவே இங்கே காரணம் உடைமையின் மிக அதிகச் சிக்கலான வடிவங்கள் செயல்படுகின்றன.

எல்லா நிகழ்ச்சிளதும், சிறப்பாகச் சிக்கலான நிகழ்ச்சிகளின் அடிப்படையில் உள்ளன ஏராளமான காரணங்கள். ஆனுல் அவை எல்லாம் ஒரே மாதிரியான முக்கியத்துவம் கொண்டவை அல்ல. அடிப்படையான, நிர்ணயகரமான காரணங்களும் அடிப்படையற்ற காரணங்களும் உள்ளன, பொதுவான காரணங்களும் நேரடியான காரணங்களும் உள்ளன. எல்லாக் காரணங்களுக்கும் இடையே அடிப்படையான, நிர்ணயகரமான காரணத்தைக் கண்டறிவது மிக அவசியம். வழக்கமாக உள் காரணங்களே அடிப்படையாக இருக்கின்றன என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

முக்கியமானதையும் முக்கியமற்றதையும் அடிப்படையானதையும் அடிப்படை அற்றதையும் கலந்து குழப்புவது கலப்பட வாதத்துக்கு இயல்பானது ஆகும். அதன் பிரதிநிதிகள் பிரதானத் தொடர்புகளையும் காரணங்களையும் வேறுபடுத்திக் காண்பதில்லை. அவர்களுக்கு ''எல்லாம் ஒரே மாதிரி முக்கியமானவை''. உதாரணமாக, சமூகத்தின் வளர்ச்சி, மக்கள் தொகையின் செறிவும் மிகுதலும், இயற்கை நிலைமைகள், பொருளியல் நலங்களின் உற்பத்தி, நிலவும் கருத்துக்கள், சித்தாந்தங்கள் முதலிய பற்பல காரணங்களைச் சார்ந்திருக்கிறது. கலப்பட வாதத்தின்' ''காரணிகள் பற்றிய சித்தாந்தம்'' பூர்ஷ்வாச் சமூக இயலில் இன்றளவும் வழக்கில் இருக்கிறது. அதன்படி இந்த எல்லாக் காரணங்களும் ஒரே மாதிரி முக்கியமானவை. எனவேதான் சமூக வாழ்வு பற்றிய பிரச்சினைகளுக்கு விஞ்ஞான ரீதியான தீர்வு காண்பது அதற்கு இயலவில்லை. மார்க்ஸீயச் சமூக இயலோவெனில் இந்த எல்லாக் காரணங்களுக்கும் இடையிலிருந்து சமூக வளர்ச்சிக்குரிய நிர்ணயகரமான, பிரதானச் சக்தியை வேறுபடுத்திக் காண்கிறது. இந்தச் சக்திதான் பொரு

ளியல் நலங்களின் உற்பத்தி முறை. சமூக வாழ்வின் மற்ற எல்லாக் காரணிகளின் பங்கும் முக்கியத்துவமும் முடிவில் இந்தக் காரணத்தையே சார்ந்துள்ளன.

காரணம் உடைமை பற்றிய இயக்க இயல் பொருள்முதல் வாதப் போதனை உலகக் கண்ணோட்டத்திற்கும் விஞ்ஞான நாஸ்திகவாதத்திற்கும் பெருத்த முக்கியத்துவம் வாய்ந்தது. நோக்கம் பற்றிய கருத்துமுதல்வாத, மதப் போதனையான இயல்திட்டவாதத்துக்கு இது எதிர்நிற்கிறது. பிரபஞ்சத்தில் உள்ளவை எல்லாம் நோக்கப் பொருத்தம் உடையவையாக இருக்கின்றன, ஏனெனில் அதைப் ''படைத்தவனுல்'' அவ்வாறு திட்டமிடப்பட்டிருக்கிறது என்று இயல்திட்டவாதிகள் வலிந்துரைக்கிருர்கள். பிரெடெரிக் எங்கெல்ஸ் நகைச்சுவையுடன் குறிப்பிட்டதுபோல, இயல்திட்டத்தின்படி பார்த்தால் பூனைகள் படைக்கப்பட்டிருப்பது சுண்டெலிகளைத் தின்றுதீர்ப்பதற்காக, சுண்டெலிகள் படைக்கப்பட்டிருப்பதோ, பூனைகளால் தின்றுதீர்க்கப்படுவதற்காக, இயற்கை அனைத்தும் படைக்கப்பட்டிருப்பது படைத்தவனின் விவேகத்துக்குச் சான்று காட்டுவதற்காக.[1]

தங்களது கருத்துக்களை உறுதிப்படுத்துவதற்காக இயல்திட்டவாதிகள் மற்ற விஷயங்களோடு, உயிர் இயற்கையை மேற்கோள் காட்டுகிருர்கள். அங்கஜீவிகளுக்கும் அவற்றின் வாழ்க்கை நிலைமைகளுக்கும் உள்ள வியப்பூட்டும் பொருத்தத்தையும் விலங்குகள், தாவரங்களது கட்டமைப்பின் செவ்வைப்பாட்டையும் நாம் உயிர் இயற்கையில் உண்மையாகவே எதிர்ப்படுகிரேம். ஆனுல் டார்வின், அவரைப் பின்பற்றியவர்கள் ஆகியோரின் வடிவில் விஞ்ஞான உயிரியல் காட்டியுள்ளது போல, அங்கஜீவிகளின் இந்த ஒப்புநோக்கான செவ்வைப்பாடு ''படைத்தவனின்'' விவேகத்தினுல் உண்டாக்கப்படவில்லை. நீண்ட காலப் பரிணுமப் போக்கில் சூழ்நிலையுடன் அங்கஜீவிகளின் பரஸ்பரப் பாதிப்பு, இயற்கைத் தேர்வு, மற்ற உயிரியல் விதிகள் ஆகியவற்றின் விளைவாகவே இது தோன்றியிருக்கிறது.

இயற்கையில் எல்லாமே இயல்பான, புறநிலை விதிகளின் படியே, அம்சரீதியில் நிகழ்ச்சிகளின் காரணச் சார்பின்

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும், ''இயற்கையின் இயக்க இயல்'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 350 பார்க்க.

விளைவாகவே நடக்கின்றன. அறிவுள்ள உயிர்கள்—மனிதர்கள்—செயல்படும் இடங்களிலேயே, அதாவது சமூக வளர்ச்சிப் போக்கிலேயே, நோக்கங்கள் வெளிப்படுகின்றன. ஆனால் மனிதர்கள் குறித்த நோக்கங்களைத் தங்களுக்கு முன் வைத்துக் கொண்டாலுங்கூட, சமூக வாழ்வின் வளர்ச்சியினது புறநிலையான, காரணம் உள்ள, விதிக்கு இசைந்த தன்மையை அது அகற்றி விடுவதில்லை.

## § 3. உள்ளடக்கமும் உருவமும்

நாம் ஏற்கனவே கூறியுள்ளது போல, எதார்த்தத்தின் பொருள்களும் நிகழ்ச்சிகளும் வெவ்வேறு விதமான பற்பல அம்சங்கள் கொண்டிருக்கின்றன, பல்வகைத் தொடர்புகளுக்கு உட்பட்டிருக்கின்றன. எனவே நிகழ்ச்சிகள் பற்றிய அறிதல் அவற்றின் காரண-விளைவுத் தொடர்பின் விளக்கத்துடன் நின்றுவிடுவதில்லை. அது மேலே சென்று, அவற்றின் மற்ற அம்சங்களையும் உறவுகளையும் வெளிப்படுத்துகிறது. பொருள்கள், நிகழ்ச்சிகளின் இத்தகைய அம்சங்களைச் சேர்ந்ததே உள்ளடக்கமும் உருவமும். ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் ஒவ்வொரு பொருளுக்கும் உரிய உள்ளடக்கமும் உருவமும் உள்ளன. இவை அந்த நிகழ்ச்சி அல்லது பொருளின் எதிர்நிலை அம்சங்களாக விளங்குகின்றன.

உள்ளடக்கம் என்பது குறித்த பொருளின் அம்சங்களும் செயல்முறைகளும் அடங்கிய முழுத் தொகுப்பு, எதனால் குறித்த பொருள் ஆகியிருக்கிறதோ அது ஆகும். எந்த இரசாயனப் பொருளினதும் கூட்டணுவின் உள்ளடக்கம் அதில் அடங்கியுள்ள அணுக்களால் ஆனது. கலைப் படிமங்களின் தொகுப்பில் ஒரு குறித்த அழகியல் ஆதர்சத்தின் நோக்கு நிலையிலிருந்து கலைஞனால் பிரதிபலிக்கப்பட்ட எதார்த்தமே, மக்களது வாழ்க்கையே ஒரு கலைப் படைப்பின் உள்ளடக்கமாக விளங்குகிறது.

உருவம் என்பது உள்ளடக்கத்தின் கட்டமைப்பு, அது நிலவுவதற்கான சாதனம். வேறு வார்த்தைகளில் சொன்னால் உருவம் என்பது உள்ளடக்கத்தின் அமைப்பை, காலத்திலும் இட வெளியிலும் அதன் அம்சங்கள், பாகங்களது திட்டவட்டமான உறுப்பமைப்பைக் குறிக்கிறது. உதாரணமாக ஒரு அணுவின் உருவம் அதில் அடங்கிய ''தனிமத்'' துகள்களின் இடநிலையினது திட்டவட்டமான ஒழுங்கினால் ஆனது. அணுக்களின்

திட்டவட்டமான உறுப்பமைப்பு முறையே கூட்டணுக்களின் உருவத்தை வடிவாக்குகிறது. சடப்பொருள் நிலவுவதற்குரிய சாதனமாக, அதன் இருத்தலின் உருவமாக விளங்குகின்றன இயக்கமும் இடவெளியும் காலமும். கலைப் படைப்பில் உருவமாக இலங்குவது உள்ளடக்கத்தை வெளியிடுவதற்குரிய சாதனமாகப் பயன்படும் அதன் உள் உறுப்பமைப்பே. புனைவு, மொழி, சந்தம், விஷயம் ஆகியவையும் மற்றச் சித்திரிப்புச் சாதனங்களும் இதைச் சேர்ந்தவை.

உள்ளடக்கமும் உருவமும் தமக்குள் நெருக்கமாக இணைந்தவை, ஒருமை கொண்டவை. அவை பொருள்களின் பிரிக்க முடியாத அம்சங்களாக விளங்குகின்றன. உருவமோ உள்ளடக்கமோ இல்லாத பொருள்களே கிடையா. அதே சமயம் பொருள்களின் இந்த அம்சங்கள் ஒன்றுக்கு ஒன்று காரணம் ஆகின்றன.

பொருள்களின் நிர்ணயகரமான அம்சம் உள்ளடக்கமே. அது உருவத்துக்குக் காரணம் ஆகிறது. பொதுவிலும் மொத்தத்திலும் உருவம் உள்ளடக்கத்துக்குப் பொருந்துகிறது. ஏனெனில் உள்ளடக்கம் எத்தகையதோ உருவமும் முடிவில் இத்தகையதே ஆகும். உருவம் உள்ளடக்கத்துக்குப் பொருந்துவது பொருள்கள், நிகழ்ச்சிகளின் முறையான வளர்ச்சிக்கு முக்கிய நிபந்தனையாக விளங்குகிறது. உயிருள்ள அங்கஜீவி ஒவ்வொன்றும் மொத்தத்திலும் அதன் தனித்தனி உறுப்புக்களிலும் குறிப்பிட்ட நிலைமைகளில் தன் உயிர்ச் செயல்களை ஆகச் சிறந்த முறையில் நிறைவேற்றுவதற்கு ஏற்ப அமைக்கப்பட்டிருக்கிறது. கலைத் துறையை எடுத்துக்கொண்டால் அதன் உண்மையான படைப்புக்களைத் தனியாகத் தூக்கிக்காட்டும் அம்சம் உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் உள்ள பொருத்தமே, அவற்றின் ஒருமையே. இங்கே உருவம் உள்ளடக்கத்தின் மிக முழுமையும் துலக்கமும் கொண்ட வெளியீடாகப் பயன்படுகிறது.

ஆயினும் உள்ளடக்கத்துக்கு உருவத்தின் பொருத்தத்தைப் பூரணமானதாக எண்ணிவிடக் கூடாது. அதாவது இது முழுமையான, எனவே உறைந்துபோய்விட்ட, மாறுத, சாசுவதமான பொருத்தம் என்று கருதக்கூடாது. இயற்கை, சமூகம் ஆகியவற்றின் நிகழ்ச்சிகளுடைய மாறுந்தன்மை உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் முழுமையான பொருத்தம் ஏற்படுவதை அசாத்தியம் ஆக்குகிறது. அடிப்படையில், மொத்தத்தில் அவற்றுக்குள்ள பொருத்தத்தை மட்டுமே வழக்கமாகக் குறிப்பிட

முடியும். தவிரவும் உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் இடையே ஓரளவு முரண்பாடு எப்போதுமே நிலவுகிறது. ஏனெனில் வளர்ச்சிப் போக்கில் உள்ளடக்கமே முதலில் மாறுகிறது. வடிவத்தில் மாற்றம் அதைப் பின்பற்றியே தொடங்குகிறது.

உருவம் உள்ளடக்கத்தையே சார்ந்திருக்கிறது என்ருலும் அது செயலற்றது அல்ல. வடிவடைந்த பிறகு உருவம் ஒப்பு நோக்கில் சுதந்திரம் அடைந்து உள்ளடக்கத்தின் வளர்ச்சிமீது தீவிரமாகப் பாதிப்பு விளைக்கிறது. இந்தப் பாதிப்பு இரு வகையானதாக இருக்கக்கூடும். உருவம் உள்ளடக்கத்துக்குப் பொருந்திஞல் அது உள்ளடக்கத்தின் வளர்ச்சிக்குத் துணை புரிகிறது. இந்தப் பொருத்தம் இல்லாவிட்டால் உருவம் உள்ளடக்கத்தின் வளர்ச்சியைத் தடைப்படுத்துகிறது. பழையதாகிவிட்ட உருவம் உள்ளடக்கத்துக்குப் பொருந்துவதில்லை. தனது வளர்ச்சியின் சில சிறப்புத்தன்மைகள் காரணமாக அது பழையதாகி விடுகிறது.

விஷயம் என்னவென்ருல் உருவம் அதிக நிலைப்புள்ளது, உள்ளடக்கம் போன்று அவ்வளவு இயக்கமுள்ளது அல்ல. ஆகையால் அது உள்ளடக்கத்தின் வளர்ச்சியிலிருந்து பின்தங்கி விடுகிறது. அவற்றுக்கு இடையே முரண்பாடு வளர்கிறது. உள்ளடக்கம் இடையருது மாறிக்கொண்டிருக்கிறது என்ருல் உருவம் குறித்த காலம்வரை முக்கிய மாறுதல் எதுவும் இன்றி நிலைத்திருக்கும் போக்கைக் கொண்டிருக்கிறது. ஆஞல் குறிப்பிட்ட நேரத்தில் அதன் பாய்ச்சல் முறையான மாற்றம் நிறைவேறுகிறது. இத்தகைய ஒரு பாய்ச்சலுக்கும் மறு பாய்ச்சலுக்கும் நடுவிலுள்ள இடைக்காலத்தின் கடைசித் தறுவாயில் வளர்ந்து கொண்டிருக்கும் உள்ளடக்கத்திலிருந்து உருவம் வெகுவாகப் பின்தங்கிவிடுகிறது. அவற்றுக்கு இடையே முரண்பாடு தீவிரம் அடைந்து பிணக்கு ஆகிவிடுகிறது. ஏனெனில் பழைய உருவம் உள்ளடக்கத்தின் வளர்ச்சியைத் தடைப்படுத்துகிறது, அதன் விலங்கு ஆகிவிடுகிறது. விளைவாக, குறித்த நிகழ்ச்சியின் வளர்ச்சியில் நெருக்கடி நிலைமை தொடங்குகிறது.

ஆஞல் உள்ளடக்கம் வளராமல் இருக்க முடியாது ஆகையால் உள்ளடக்கம் பழைய உருவத்தை உடைத்து எறிந்துவிட்டுத் தனக்குப் பொருத்தமான புது உருவத்தை மேற்கொள்கிறது, இவ்வாறு இந்தப் பிணக்கு தீர்கிறது, நெருக்கடி அகற்றப்படுகிறது. புதிய உருவம் உள்ளடக்கத்தின் முழுமூச்சான

செயல்பாட்டுக்குத் துணை புரிகிறது, அதன் மேல் வளர்ச்சியைத் தூண்டி ஊக்குகிறது—அதனுடன் மறுபடி முரண்படும் வரையில். உருவம், உள்ளடக்கம், இவற்றின் பரஸ்பரப் பாதிப்பு நிகழ்ச்சிகள், செயல்முறைகளின் வளர்ச்சிக்கு ஒரு ஊற்றுக்கண் ஆகும்.

ஒரே உள்ளடக்கம் வெவ்வேறு உருவங்களில் வளரக்கூடும். முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பதற்கான வடிவங்களின் பல்வகைப்பாடு, ஒரே மாதிரியான அரசுகளில் ஆட்சி முறையின் வடிவங்களது பல்வகைப்பாடு முதலியன இதற்கு உதாரணங்களாக விளங்குகின்றன. ஆனால் ஒன்று: ஒரு குறித்த உள்ளடக்கத்துக்கு எல்லாவித உருவங்களும்அல்ல, குறித்த ஒரு சில உருவங்கள் மட்டுமே பொருந்துகின்றன.

அதேபோல, புதிய உள்ளடக்கம் ஒரு சில பழைய உருவங்களைக் கையாளக் கூடும். உதாரணமாக, சோஷலிஸ, கம்யூனிஸக் கட்டுமானத்தில் முந்திய பொருளாதார உறவுகளின் சில உருவங்கள்—பண்டம், சந்தை வியாபாரம், பாங்குகள் முதலியன—கையாளப்படுகின்றன.

இவ்வாறு உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் இடையே பரஸ்பரத் தொடர்பு நிலவுகிறது. சித்தாந்த, நடைமுறைச் செயல்களில் இந்தத் தொடர்பைக் கருத்தில் கொள்வது இன்றியமையாதது. உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் உள்ள தொடர்புபற்றிய பிரச்சினையை ஒருதலைச்சார்பாக அணுகுவதும் அவற்றின் இயக்க இயல் ஒருமையை வெளிப்படுத்த இயலாதிருப்பதும் மாறுநிலைவாதிகளுக்கும் கருத்துமுதல்வாதிகளுக்கும் இயல்பான தவறுகள் ஆகும். அவர்கள் உருவத்தை உள்ளடக்கத்திலிருந்து தனிப்படுத்துகிறார்கள். அவற்றின் பரஸ்பரச் சார்பை அவர்கள் காண்பதில்லை. உருவம் உள்ளடக்கத்தின் மீது சார்பு அற்றது என்று கருதி அதன் சுயேச்சைத் தன்மையை முழுமையானதாக அவர்கள் அடிக்கடி காட்டுகிறார்கள்.

பழைய உள்ளடக்கத்தைப் புதிய உருவங்களின் பின்னே மறைக்க பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் செய்யும் முயற்சிகளில் இது வெளிப்படுகிறது. முதலாளித்துவத்தைச் ''சுதந்திர உலகம்'', ''உண்மை ஜனநாயகம்'' அல்லது ''ஜனநாயக சோஷலிஸம்'' என்ற வடிவில் சித்திரிக்க அவர்கள் முயல்கிறார்கள்.

புதுக் காலனியாட்சிக் கொள்கையை வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கு ''முற்போக்கின்'' பெயரால் அளிக்கப்படும் தன்னலமற்ற உதவி என அவர்கள் வர்ணிக்கிறார்கள். இவ்வாறே வேறு முயற்சிகள் செய்கிறார்கள்.

கலைப் படைப்பு உள்ளடக்கம் அற்றது என்றும், வாழ்க்கையுடனும், சமாதானத்திற்காகவும் ஜனநாயகத்திற்காகவும் சோஷலிஸத்திற்காகவும் உழைப்பாளி மக்கள் புரியும் போராட்டத்துடனும் அதற்கு எவ்விதச் சம்பந்தமும் கிடையாது என்றும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் கலைத்துறையில் பிரசாரம் செய்கிறார்கள். உருவவாதப் போக்குகளை அவர்கள் பிரமாதப் படுத்துகிறார்கள். இந்தப் போக்கு கலையைத் ''தூய உருவமாக'' மட்டுமே கருதுகிறது. அதன் கருத்து உள்ளடக்கத்தையும் கட்சித் தன்மையையும் மறுக்கிறது. இம்மாதிரிப் ''படைப்புக்குப்'' பிரதிநிதித்துவம் வாய்ந்த எடுத்துக்காட்டு, ஓவியத்தில் கடைக்கோடி உருவவாதப் போக்கான மறைபொருள் வாதம். இது முதலாளித்துவ நாடுகளில் பெரிதும் பரவியுள்ளது.

உண்மையான கலைப் படைப்புக்களில் ஆழ்ந்த கருத்து உள்ளடக்கத்துக்கும் கம்யூனிஸக் கட்டுமானம் என்னும் மாபெரும் லட்சியத்தின் நோக்கிலிருந்து வாழ்வின் மெய்யான பிரதிபலிப்புக்கும் பொருந்துவதாக உயர்ந்த கலை உருவம் விளங்க வேண்டும் என்று உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் உள்ள ஒருமையின் அடிப்படையில் மார்க்ஸீய-லெனினீய அழகியல் கருதுகிறது.

உருவமும் உள்ளடக்கமும் பற்றிய பிரச்சினையை ஆராய்கையில் சோஷலிஸச் சமூகத்தில் அவற்றின் இயக்க இயல் வகைப்பட்ட பரஸ்பரப் பாதிப்பின் சில சிறப்புத் தன்மைகளைக் குறிப்பிட வேண்டும். சோஷலிஸத்தில் உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் இடையே உள்ள முரண்பாடுகள் சமரசப்படுத்தக் கூடிய தன்மை கொண்டிருப்பதும் இதன் விளைவாக ஆழ்ந்த சமூகப் பிணக்குகள் அகற்றப்படுவதன் சாத்தியப்பாடும் முதன்மையாக இத்தகைய சிறப்புத்தன்மைகளைச் சேர்ந்தவை ஆகும்.

உருவத்துக்கும் உள்ளடக்கத்துக்கும் உள்ள பரஸ்பர உறவைச் சரியாகப் புரிந்துகொள்வது நடைமுறை வேலையில் முக்கியப் பங்கு ஆற்றுகிறது.

## § 4. இன்றியமையாமையும் தற்செயலும்

இன்றியமையாமைக்கும் தற்செயலுக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம் குறித்த பிரச்சினை மிக முக்கியமான தத்துவப் பிரச்சினைகளில் ஒன்று ஆகும். மார்க்ஸீயத்துக்கு முற்பட்ட தத்துவத்தில் இதற்கு வழக்கமாக ஒருதலைச்சார்பான தீர்வு காணப்பட்டது. பொருள்முதல்வாதத் தத்துவவாதிகளும் நிர்ணய நியதிக் கொள்கையினரும் (டெமாக்ரிட்டஸ், ஸ்பினோஸா (*Spinoza*), 18ம் நூற்றுண்டைச் சேர்ந்த பிரெஞ்சுப் பொருள் முதல்வாதிகள் ஆகியோர்) இயற்கையில் எல்லாவற்றுக்கும் அவ்வவற்றுக்கு உரிய காரணம் உள்ளது எனவும், ஆதலால் எல்லாம் இன்றியமையாதவை எனவும், தற்செயல் என்பது எதுவும் இல்லை எனவும் கருதினுர்கள். அவர்களது கருத்துப்படி எதன் காரணம் மக்களுக்குத் தெரியவில்லையோ அதை அவர்கள் தற்செயல் என்று கூறுகிருர்கள். ஆனுல் தற்செயலானதாகத் தென்படும் நிகழ்ச்சியின் காரணம் நிலைநாட்டப்பட்டதுமே அது தற்செயலானதாக இருப்பது முடிந்துவிடுகிறது. பொருள் முதல்வாதிகள் இன்றியமையாமையின் ஆதிக்கத்தைத் தாங்கிப் பேசினர். நிகழ்ச்சிகள் காரணங்களினுல் தோற்றுவிக்கப்படுவதில்லை என்றும், ஆகவே இயற்கையிலும் சமூகத்திலும் இன்றியமையாமை கிடையாது என்றும் தற்செயலே ஆதிக்கம் வகிக்கிறது என்றும் வலிந்துரைத்த கருத்துமுதல்வாதிகளுக்கு எதிரான போராட்டத்தில் இந்த நோக்கு வளர்ச்சி அடைந்தது. மக்களின் ''சுதந்திரச் சித்தம்'', விருப்பம் ஆகியவற்றினது தோற்றத்தின் விளைவாகவே எல்லாம் நிகழ்கின்றன என்று இந்தக் கருத்துமுதல்வாதிகளில் பலர் எண்ணினுர்கள். இத்தகைய நோக்குநிலையை விஞ்ஞானரீதியானது எனக் கருத முடியாது.

ஆனுல் நிர்ணய நியதிக் கொள்கையினரான மாருநிலை வாதிகளும் ஆழ்ந்த தவறுகளுக்கு இடம் கொடுத்தார்கள். முதன்மையாக, இன்றியமையாமையும் காரணத் தொடர்பும் ஒன்றே என நிரூபிக்க அவர்கள் முயன்ருர்கள். உண்மையிலோ இவ்விரண்டும் ஒன்ருனவை அல்லவே அல்ல. இன்றியமையாமை மட்டுமே அல்ல, தற்செயலுங்கூடக் காரணத்தின் விளைவாகவே உண்டாகிறது என்று கூறுவதே போதுமானது. ஆகவே இன்றியமையாமையையும் காரணம் உடைமையையும் ஒன்ருகக் கருது

வது சரியல்ல. தவிரவும் மாறுநிலைவாதி நிர்ணய நியதிக் கொள்கையினர் இன்றியமையாமையையும் தற்செயலையும் வேறு பிரித்து அவற்றை ஒன்றுக்கு ஒன்று எதிர்நிறுத்தினர்கள். இன்றியமையாமை உள்ள இடத்தில் தற்செயல் இருக்க முடியாது என்றும் தற்செயல் உள்ள இடத்தில் இன்றியமையாமை இல்லை என்றும் அவர்கள் அனுமானித்தார்கள். எதார்த்தத்திலோ இன்றியமையாமையும் தற்செயலும் பரஸ்பரத் தொடர்புள்ளவை. அவற்றை ஒருமையில், பரஸ்பரச் சார்புத்தன்மையில் ஆராய்ந்தால்தான்அவற்றைச் சரியாகப் புரிந்துகொள்ளமுடியும்.

புறநிலைப் பிரபஞ்சத்தில் ஆதிக்கம் வகிப்பது இன்றியமையாமை ஆகும். இது நிகழ்ச்சிகளின் தவிர்க்க இயலாத வளர்ச்சிப் போக்கு. அவற்றின் தன்மையிலிருந்தே இது உண்டாகிறது, அவற்றின் முந்திய வளர்ச்சி, பரஸ்பரப் பாதிப்பு ஆகியவை அனைத்தினாலும் தோற்றுவிக்கப்படுகிறது. இன்றியமையாமை என்னும் வகைப்பிரிவு இயற்கையினதும் சமூகத்தினதும் வளர்ச்சியுடைய விதிமுறைக்கு உட்பட்ட தன்மையை வெளியிடுகிறது.

அதே சமயம் தற்செயல் நிலவுவதையும் இயக்க இயல்பொருள்முதல்வாதம் ஒப்புக்கொள்கிறது. தற்செயலை ஆராய்ந்து அதன் அனேக முக்கிய இயல்புகளை வேறுபடுத்திக் காண முடியும்.

முதலாவதாக, ஏற்கனவே கூறப்பட்டுள்ளதுபோல, இன்றியமையாத நிகழ்ச்சிகளை ஒப்பவே தற்செயல் நிகழ்ச்சிகளுக்கும் உரிய காரணங்கள் உண்டு. தற்செயலும் காரணம் இன்மையும் ஒன்றே என எண்ணுவது தவறாகும். காரணமற்ற நிகழ்ச்சிகள் கிடையவே கிடையா.

இரண்டாவதாக, தற்செயல் புறநிலையானது. அதன் காரணத்தை நாம் அறிவோமா இல்லையா என்பதை அதன் நிலவுகை சார்ந்திருக்கவில்லை. தற்செயலின் புறநிலைத் தன்மையை மறுப்பது வளர்ச்சியின் முக்கியமான, முக்கியம் அற்ற காரணிகளைக் கலந்து குழப்புவதற்கு இட்டுச் செல்கிறது. அவ்வாறு செய்வதால் சமூக வரலாறும் தனி மனித வாழ்க்கையும் விதிவசமான, மர்மத் தன்மை பெற்றுவிடுகின்றன.

மூன்றாவதாக, தற்செயல் சார்புள்ளது. பூரணமான தற்செயல் கிடையாது. எல்லா வகையிலும் தற்செயலான, இன்றியமையாமையுடன் தொடர்பே அற்ற நிகழ்ச்சிகள் கிடையா. தற்செயல் நிகழ்ச்சி பூரணமாக அல்ல, திட்டவட்டமான விதி

முறைத் தொடர்பின் நோக்கில் மட்டுமே தற்செயலானது. வேறு தொடர்பில் அதே நிகழ்ச்சி இன்றியமையாததாக இருக்கலாம். உதாரணமாக, ஒரு குறித்த விஞ்ஞானி ஒரு அல்லது மற்ருெரு கண்டுபிடிப்பைச் செய்தார் என்பது விஞ்ஞான வளர்ச்சியின் பொதுப் போக்கின் நோக்கிலிருந்து பார்க்கையில் தற்செயலானது. ஆனுல் இந்தக் கண்டுபிடிப்பு உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியுடைய குறிப்பிட்ட தரத்தினதும் விஞ்ஞானத்தினுடையவே முன்னேற்றத்தினதும் இன்றியமையாத விளைவு ஆகும். விஞ்ஞானியின் திறமை, அக்கறைகள், ஒருமுனைப்பாடுள்ள உழைப்பு ஆகியவற்றின் நோக்கிலிருந்தும் அது இன்றியமையாததே.

ஆக, தற்செயல் என்பது குறித்த நிகழ்ச்சி அல்லது செயல்முறைக்கு வெளியே உள்ளது ஒன்று என்று தெரிகிறது. எனவே அது அந்த நிகழ்ச்சி அல்லது செயல்முறைக்குச் சாத்தியமானது, ஆனுல் கட்டாயமானது அல்ல. அது இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்.

தற்செயல் என்பது அடிப்படையும் காரணமும் கொண்ட புறநிலை நிகழ்ச்சி. ஆனுல் இதன் அடிப்படையும் காரணமும் குறித்த செயல்முறையின் தன்மையில் அல்ல, வேறு செயல்முறைகளில் உள்ளன. இது உள் தொடர்புகளிலிருந்து அல்ல, வெளியிலுள்ள, முக்கியமற்ற தொடர்புகளிலிருந்து தோன்றுகிறது.

ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போல, இன்றியமையாமையும் தற்செயலும் நெருங்கிய பரஸ்பரத் தொடர்பு கொண்டவை. ஒரே நிகழ்ச்சி ஒரு நோக்கிலிருந்து பார்க்கையில் தற்செயலானதாகவும் மறு நோக்கிலிருந்து பார்க்கையில் இன்றியமையாததாகவும் விளங்குகிறது. இன்றியமையாமைக்கும் தற்செயலுக்கும் உள்ள தொடர்பு முதன்மையாக இதிலேயே அடங்கியுள்ளது. ஆனுல் இந்தத் தொடர்பு இத்துடன் தீர்ந்துவிடுவதில்லை. இன்றியமையாமையினது தோற்றத்தின் சேர்ப்பாகவும் ஒரு வடிவமாகவும் விளங்குகிறது தற்செயல். பிரெடெரிக் எங்கெல்ஸால் கூறப்பட்டுள்ள இந்த அடிப்படைக் கருத்து[1], இன்றியமையாமைக்கும் தற்செயலுக்கும்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். நூல் திரட்டு, தொகுதி 39, பக்கம் 175 பார்க்க.

உள்ள பரஸ்பரத் தொடர்பின் இன்னொரு ஆழ்ந்த அம்சத்தை வெளியிடுகிறது.

நெருக்கமாகக் கூர்ந்து கவனிக்கையில், தற்செயல்கள் அற்ற ''தூய'' இன்றியமையாமை புறநிலை எதார்த்தத்தில் இருப்பதில்லை, இருக்கவும் முடியாது என்பது புலனாகிறது. இன்றியமையாமை எப்போதும் ஏராளமான தற்செயல்கள் வாயிலாகவே வெளித் தோன்றுகிறது. பெருந்தொகையான தற்செயல்களின் ஊடாக வழி செய்துகொண்டு நிலையான, மீண்டும் நிகழ்கிற ஒன்றாக அது வெளிப்படுகிறது. உதாரணமாக, மிக மிக வெவ்வேறான முயற்சிகளும் குறிக்கோள்களும் இயல்புகளும் கொண்ட பெருந்தொகையான மனிதர்களின் செயல்களால் சமூக வளர்ச்சி உருவாகிறது. இந்த எல்லா முயற்சிகளும் ஒன்றோடு ஒன்று பின்னிப்பிணைந்து, கலந்து மோதிக்கொள்வது கண்டிப்பான இன்றியமையாத் தன்மை கொண்ட திட்டவட்டமான வளர்ச்சிப் போக்குக்கு முடிவில் இட்டுச் செல்கிறது.''எங்கே மேற்பரப்பில் தற்செயலின் விளையாட்டு நிகழ்கிறதோ அங்கே இந்தத் தற்செயலே உள்ளார்ந்த, மறைவான விதிக்கு உட்பட்டதாக எப்போதும் விளங்குகிறது.''[1]

தற்செயல்கள் எப்போதும் இன்றியமையாமையின் உடன் செல்கின்றன, அதை இட்டு நிரப்புகின்றன. எனவே அவை வரலாற்றுப் போக்கில் ஓரளவு பங்கு ஆற்றுகின்றன. இன்றியமையாமை மட்டுமே நிலவியது, தற்செயல்கள் எந்தப் பங்கும் ஆற்றவில்லை என்றால் வரலாறு மிகுந்த மாயத்தன்மை கொண்டிருக்கும் என்று குறித்தார் கார்ல் மார்க்ஸ்.

இன்றியமையாமை தற்செயல்களின் வாயிலாகவே வெளிப்பட முடியும் என்ற இந்த நிலைமையிலிருந்து தற்செயல்கள் இன்றியமையாமையை இட்டுநிரப்புவது மட்டுமின்றி அதன் தோற்ற வடிவமாகவும் விளங்குகின்றன என்பது பெறப்படுகிறது. இன்றியமையாமை, தற்செயல் ஆகியவற்றின் இயக்க இயலைப் புரிந்துகொள்வதற்கு இது மிக முக்கியமானது. மூடி அடைக்கப்பட்டுள்ள பாத்திரத்தில் இருக்கும் வாயுக் கூட்டணுக்களின் இயக்கம் ஒழுங்கற்றது என்பது தெரிந்ததே. எந்தக் கூட்டணு, எங்கே, எப்போது பாத்திரத்தின் சுவர்களுடன்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''லுத்விக் பாயர்பாகும் சாஸ்திரிய ஜெர்மானியத் தத்துவத்தின் இறுதியும்'', நூல்திரட்டு, தொகுதி 21, பக்கம் 306.

மோதிக்கொள்ளும் என்பது எல்லாம் தற்செயலான விஷயங்கள். ஆனால், பாத்திரச் சுவர்களின் மீது தனித்தனிக் கூட்டணுக் களின் மோதல்கள் தற்செயலானவை என்றாலும் மொத்தத்தில் அவற்றின் இயக்கம் திட்டவட்டமான விதிக்கு உட்பட்டது. இந்த விதியின்படி பாத்திரச் சுவர்களின் எந்தச் சதுர சென்டி மீட்டர் இடத்தின் மீதும் வாயுவின் அழுத்தம் எப்போதும் ஒரே மாதிரியானது, எல்லாப் புறங்களிலும் ஒரு சீராகச் செலுத்தப் படுகிறது. தற்செயல்கள் (பாத்திரத்தின் சுவர்கள் மீது தனித் தனிக் கூட்டணுக்களின் மோதல்கள்) குறித்த விதியால் வெளியிடப்படும் இன்றியமையாமையினது தோற்றத்தின் ஒரு வடிவமாக விளங்குவதை இங்கே நாம் காண்கிறோம்.

சமூக வாழ்விலும் இதுவே நிகழ்கிறது. விதிமுறைக்கு ஒத்த சமூக நிகழ்ச்சிகள், உதாரணமாகச் சமுதாயப் புரட்சிகள் நிறை வேறுவது எத்தனையோ தற்செயல் சந்தர்ப்பங்களுடன் தொ டர்பு கொண்டது. ஒரு அல்லது மற்றொரு வகை நிகழ்ச்சிகள் நடக்கும் இடமும் காலமும், இயக்கத்திற்குத் தலைமை தாங்கும் நபர்களின் குழு முதலியன இந்தச் சந்தர்ப்பங்கள். வரலாற்று வளர்ச்சியைப் பொறுத்தவரையில் இந்த நிலைமைகள் தற்செயலானவை, ஆனால் இன்றியமையாத செயல்முறைகள் இவற்றின் மூலமாகவே நிறைவேறுகின்றன.

இன்றியமையாமைக்கும் தற்செயலுக்கும் உள்ள தொடர்பு இன்னொன்றிலும் வெளிப்படுகிறது. வளர்ச்சிப் போக்கில் தற்செயலானது இன்றியமையாதது ஆகவும் இன்றியமையாதது தற்செயலானது ஆகவும் மாறக் கூடும் என்பது அது. உதாரண மாக, பண்டைக்கூட்டுச் சமூக அமைப்பின் நிலைமைகளில் பண்ட மாற்றம் தற்செயல் தன்மை கொண்டிருந்தது. இந்தச் சமூக அமைப்பின் பொருளாதார விதிகளிலிருந்து அது ஏற்பட வில்லை. முதலாளித்துவத்தில் பண்ட மாற்றம் இன்றியமை யாத நிகழ்ச்சி ஆகிவிடுகிறது. ஆதிக்கம் வகிக்கும் பொருளாதார உறவுகளின் தன்மையை அது வெளியிடுகிறது. நிலப்பிரபுத் துவச் சமூகத்தில் இன்றியமையாததாக இருந்த இயற்கைப் பொருளாதாரம் முதலாளித்துவத்தில் தனியான, தற்செயல் நிகழ்ச்சி ஆகிவிடுகிறது.

சோஷலிஸ, கம்யூனிஸச் சமூகங்களில் சமூக வளர்ச்சி திட்டத் துக்கு இணங்க நிகழ்கிறது. எனவே விரும்பத்தகாத தற்செயல் களின் பாதிப்பைக் கணிசமாகக் குறுக்குவதைச் சாத்தியம்

ஆக்கும் சாதக நிலைமைகள் அங்கே உருவாகின்றன. உதாரண மாக, விஞ்ஞானரீதியான விவசாய முறைகள் மேற்கொள்ளப் படுதல், விரிவான நிலச் சீராக்கம், வேறு நடவடிக்கைகள் ஆகியன விவசாயத்தின் மீது பருவநிலைத் தற்செயல்களின் கேடான பாதிப்பைக் கணிசமாகக் குறுக்கிவிடுகின்றன.

விஞ்ஞானம் தற்செயல்களைப் புறக்கணிப்பதில்லை, அவற்றை ஆராய்கிறது. இந்த ஆராய்ச்சியின் நோக்கம் ஒரு புறம் விரும்பத்தகாத தற்செயல்கள் நேரக்கூடும் என்பதை முன் கண்டு அவற்றைத் தவிர்த்தல் அல்லது குறுக்குதல், மறு புறம் சாதகமான தற்செயல்களைப் பயன்படுத்துதல். ஆனால் விஞ் ஞானத்தின் முக்கிய நோக்கம் தற்செயல்களின் அடிப்படையில் உள்ள விதிகளைக் காணலும் இன்றியமையாமையை அறிந்து கொள்ளலுமே. விதிகள்பற்றிய அறிவு இயற்கை, சமூகச் செயல்முறைகளை இயக்குவதையும், அவற்றின் போக்கை விஞ்ஞான ரீதியில் முன்காண்பதையும் தேவையான திசையில் பயனுள்ள வகையில் அவற்றை மாற்றுவதையும் சாத்தியம் ஆக்குகிறது.

### § 5. தன்மையும் தோற்றமும்

எதார்த்தத்தின் பொருள்களையும் நிகழ்முறைகளையும் அறி கையில் மனிதர்கள் நேரடியான புலன் அறிவுக்கு எட்டுவதை, பொருள்களின் வெளி அம்சமாக விளங்குவதை, ஒரு வகையில் சொன்னால் மேற்பரப்பில் கிடப்பதை முதலில் கவனிக்கிறார்கள். பொருள்கள், நிகழ்முறைகளின் இந்த வெளிப்படையான, மேற்பரப்பிலுள்ள, ஒப்புநோக்கில் மாறுதல் அடைகிற அம்சம் தத்துவத்தில் தோற்றம் எனப்படுகிறது.

அதே சமயம் தோற்றத்தின் பின்னே மறைந்திருப்பதும் நேரடியான புலனறிவுக்கு எட்டாததும் உள்ளார்ந்ததும் ஒப்பு நோக்கில் நிலைப்புள்ளதும் நிர்ணயகரமானதும் ஆகிய அம்சம் எல்லாப் பொருள்களுக்கும் இயல்பானது. அது தான் தன்மை எனப்படுவது. சுருங்கக் கூறின், தன்மை என்பது பொருளின் உள்ளடக்கத்தில் பிரதானமானது, அதன் அடிப்படையாக விளங்குவது.

தன்மையும் தோற்றமும் பொருளின் வெவ்வேறான, எதிர் நிலையாகக்கூட விளங்கும் அம்சங்கள் என்பது மேற்கூறியவற்

ருல் தெளிவாகிறது. அவற்றின் மற்றொரு முக்கிய வேறுபாடு இதை உறுதிப்படுத்தும். தன்மை சாதாரணமாகப் பொதுவான தாக விளங்குகிறது. தோற்றமோ தனியானதாக, ஒற்றையான தாக இருக்கிறது. ஒரே தன்மை பல தோற்றங்களில் வெளிப் படக் கூடும். எனவே தன்மை என்பது குறித்த வகுப்பைச் சேர்ந்த பொருள்களுக்கு இயல்பான பொதுவானதும் அதே சமயம் அடிப்படையானதும் இன்றியமையாததும் ஆக விளங்குகிறது. தோற்றமோ, தனியானது, திரும்ப நிகழ முடியாதது.

தன்மையும் தோற்றமும் எதிர்நிலையானவை ஆயினும் எந்தப் பொருள் அல்லது நிகழ்முறையினுடையவும் இன்றியமையாத அம்சங்களாக இருக்கின்றன. ஆகவே அவை திட்டவட்டமான பரஸ்பரத் தொடர்பு, ஒருமை கொண்டுள்ளன. தோற்றம் இல்லாத தன்மை எப்படிக் கிடையாதோ அப்படியே தன்மை இல்லாத தோற்றமும் கிடையாது. ''... தன்மை தோற்றம் அளிக்கிறது. தோற்றம் தன்மை உள்ளது''[1] என்று எழுதினார் வி. இ. லெனின்.

தன்மை பொருளின் அடிப்படையான, நிர்ணயகரமான அம்சம் ஆதலால் அதன் மாற்றம் தோற்றத்தின் மாறுதலுக்குக் காரணம் ஆகிறது. அதே சமயம் தோற்றத்தின் மாறுதல்களிலே யே தன்மையின் மாறுதல்கள் வெளிப்படுகின்றன. தோற்றம் என்பது தன்மையின் புற வெளியீடு ஆகும். இதன் அர்த்தம் என்னவென்றால் ''தூய'' தன்மைகள், எவையேனும் ஸ்தூல இயல்புகள், நிகழ்ச்சிகள் முதலியவற்றில் வெளிப்படாத, தாமே தனித்து நிற்கும் தன்மைகள் கிடையா என்பதே. தவிரவும் தன்மை பொதுவானது ஆகையால் தனியான தோற்றங் களுக்குப் புறம்பாக அதனால் நிலவ முடியாது. அது தனியானதிலேயே நிலவுகிறது, அதன் வாயிலாகவே வெளிப் படுகிறது.

பொருள்முதல்வாதம் தன்மையும் தோற்றமும் என்ற வகைப்பிரிவுகளைப் பொருளியல் எதார்த்தத்தின் திட்டவட்ட மானஅம்சங்களின் பிரதிபலிப்பு எனக் கருதுகிறது. ஆனால் கருத்து முதல்வாதமோ அதற்குத் தவறான, திரிக்கப்பட்ட விளக்கம்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 227.

தருகிறது. எடுத்துக்காட்டாக, எல்லாப் பொருள்களின் தன்மையும் பரமான்மாவே என்று புறநிலைக் கருத்துமுதல்வாதிகள் எண்ணுகிறார்கள். கிட்டத்தட்ட இது போன்ற கருத்தையே நவதாமஸீயவாதிகள் பிரசாரம் செய்கிறார்கள். நிலவுபவை யாவற்றுக்கும் அடிப்படையில் உள்ளது ஆன்மீக, தெய்விகத் தொடக்கமே என்றும் அதுவே எல்லாத் தோற்றங்களினதும் தன்மையாக விளங்குகிறது என்றும் அவர்கள் வலிந்துரைக்கிறார்கள்.

தன்மைக்கும் தோற்றத்துக்கும் உள்ள பரஸ்பர உறவு பற்றிய அகநிலைக் கருத்துமுதல்வாத விளக்கத்துக்கு எடுத்துக்காட்டாகக் கான்ட்டின் கருத்துக்கள் பயன்படக் கூடும். தோற்றங்கள் உணர்வு மண்டலத்தை மட்டுமே சேர்ந்தவை என அவர் கருதினார். அறிவினால் நிறுவப்பட்டவை என்ற முறையில், தனி நபரின் படைப்புச் செயலின் விளைவு என்ற முறையில், அவர் அவற்றை ஆராய்ந்தார். எதார்த்தப் பொருள்கள், செயல் முறைகளிலிருந்தும் அவற்றின் தன்மைகளிலிருந்தும் தோற்றங்கள் தனிப்பிரிந்து நிற்பவை என அவர் எண்ணினார். அதே சமயம் தன்மை புலன்களால் அறிய முடியாதது என்று கான்ட் வலிந்துரைத்தார். தன்மையும் தோற்றமும் என்னும் வகைப் பிரிவு பற்றிய அகநிலைக் கருத்துமுதல்வாதக் கருத்துக்கள் புதுப்புலக்கொள்கை, பயன்வழிவாதம் ஆகியவற்றாலும் பூர்ஷ்வாத் தத்துவத்தின் பிற போக்குக்களாலும் மேற்கொள்ளப்படுகின்றன.

தன்மைக்கும் தோற்றத்துக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம் பற்றிய தவறான புரிவு மனித அறிதலின் சாத்தியப்பாடு குறித்த தவறான கற்பனைக்கு இட்டுச்செல்கிறது. உதாரணமாக, தோற்றத்தையும் ''தன்னிலைப் பொருள்களையும்'' (எதார்த்தப் பொருள்கள்) தனிப் பிரித்து அவற்றை எதிரெதிராக நிறுத்தினார் கான்ட். அவரது அறியொணாமைக் கொள்கை இதன் தொடர்பாகவே எழுந்தது. கான்ட் பின்வருமாறு வலிந்துரைத்தார்: மனிதர்களின் அறிவு தோற்றங்களின் துறைக்கு உள்ளேயே அடங்கியது. ''தன்னிலைப் பொருள்களை'' அணுகுவதும் அவற்றின் தன்மையைக் கண்டறிவதும் மனிதர்களுக்கு இயலாது. ஏனெனில் தோற்றங்களுக்கும் ''தன்னிலைப் பொருள்களுக்கும்'' நடுவில் கடக்கமுடியாத வரம்பு உள்ளது.

அறியொணாமைக் கொள்கைக்கு எதிராக இயக்க இயல்

~~கருத்து~~முதல்வாதம் ஆதரிக்கும் அடிப்படைக் கருத்து, பொருள்களின் தன்மை புலன்களால் அறியப்படக் கூடியது என்பதாகும். நடைமுறையும் வாழ்க்கையும் இந்தக் கருத்தை இடைவிடாது உறுதிப் படுத்திவருகின்றன.

தோற்றமும் தன்மையும் மெய்யாகவே பொருந்துவதில்லை. ஏனெனில், ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போன்று, அவை பொருள்களின் வெவ்வேறு அம்சங்களாகும். தவிர, தன்மை எப்போதும் ஆழத்தில் மறைந்திருக்கிறது. நேர்முகச் சிந்தனை வாயிலாக அதைக் கண்டறிய முடிவதில்லை. பொருள்களின் தன்மையும் அதன் தோற்றமும் நேரடியாகப் பொருந்தினால் அறிதல் இத்தகைய சிக்கலான, நீண்ட செயல்முறையாக இருந்திராது, விஞ்ஞானம் தேவையாக இருந்திராது.

ஆனால் தன்மையும் தோற்றமும் பிரிக்க முடியாதபடித் தொடர்பு கொண்டவை, தன்மை தோற்றங்களிலேயே வெளிப்படுகிறது ஆகையால் அது அறியப்பட முடியும். எனினும் அது அறியப்படுவது வெறும் உணர்வுகளாலான புலனறிவின் உதவியால் அல்ல, பகுப்புமுறைத் தர்க்கரீதியான சிந்தனையின் வாயிலாகவே. உதாரணமாக, மதிப்பு, உபரிமதிப்பு ஆகியவற்றின் தன்மையை எந்த இயந்திரக் கருவிகளாலும் சோதனைகளாலும் கண்டறிய முடியாது என்றும் இவ்விரண்டிற்கும் பதிலாகப் பகுப்புமுறைச் சக்தி பயன்படுகிறது என்றும் கார்ல் மார்க்ஸ் எழுதினார்.

ஆனால் பகுப்புமுறைச் சிந்தனைகூட எடுத்த எடுப்பிலேயே, உடனடியாக, நேர்முகமாகத் தன்மையை வெளிப்படுத்திவிட முடியாது. தோற்றத்தை, அதாவது புலன்களால் உணரப்படும் பொருளை, தர்க்கரீதியாகப் பகுத்து ஆய்வதன் வாயிலாகவே சிந்தனை தன்மையைக் கண்டுகொள்கிறது. உதாரணமாக உயிர் வாழ்க்கையை எடுத்துக்கொள்வோம். தானாகவே முறைப்படுத்தப்பட்ட உயிர்ப்பொருள் இரசாயன மாற்றத்தில் அடங்கியது இது. இதை அறிவது, ஊட்டம், வளர்ச்சி, இனப்பெருக்கம், தூண்டல்களுக்குத் துலங்கல், இயக்கம் முதலியவை போன்ற இதன் தோற்றங்களைப் பகுத்து ஆய்வதன் விளைவாகவே இயலும். மனிதனுடைய செயல்களையும் நடத்தையையும் தர்க்கரீதியாகப் பகுத்து ஆயாமல் அவனது இயல்பை அறிவதும் முடியாது.

ஒரு அல்லது மற்றொரு வகைச் செயல்முறைகளின் தன்

மையை அறிவதன்மூலம் அவற்றை இயக்கி நடத்தும் விதிகளை விஞ்ஞானம் வெளிப்படுத்துகிறது. தன்மையும் விதியும் மிக நெருங்கிய, ஒரே வரிசையைச் சேர்ந்த கருதுகோள்கள் ஆகும். பார்க்கப் போனல் விதி என்பது முக்கியமான, உள்ளார்ந்த, நிர்ணயகரமான தொடர்பு, தன்மையின் உள்ளேயோ தன்மைகளுக்கு இடையிலோ நிலவும் தொடர்புதானே.

அறிதல் எப்போதுமே தோற்றத்திலிருந்து தன்மைக்கு, பொருள்களின் வெளி அம்சத்திலிருந்து ஆழ்ந்த விதிமுறைத் தொடர்புக்குச் செல்கிறது. ஆனல் தன்மை முழுவதும் ஏக காலத்தில் அறியப்படுவதில்லை, ஏனெனில் அது அட்சயமானது. எனவே, தன்மையின் குறித்த அம்சத்தை வெளிப்படுத்திய பின் அறிதல் அதனுடன் நின்றுவிடுவதில்லை. ஒரு வகையில் சொன்னல், முதல் வரிசைத் தன்மையிலிருந்து இன்னும் ஆழ்ந்த இரண்டாவது வரிசைத் தன்மைக்கும் இவ்வாறே மேலும் மேலும் முடிவின்றிச் செல்கிறது அது.

சூரிய மண்டலத்தின் கட்டமைப்பு பற்றிய மனிதர்களது ஆராய்ச்சி, தன்மையின் இத்தகைய அறிதலுக்கு எடுத்துக்காட்டாக விளங்கக் கூடும். சூரியன் பூமியைச் சுற்றி இயங்குவதைக் கண்டு, உண்மை அதுவே என மனிதர்கள் நெடுங்காலமாக எண்ணிவந்தார்கள். ஆனல் இது வெறும் புறக் காட்சி மட்டுமே. அதாவது, தன்மையைத் தவருக, திரிபுபடுத்திக் காட்டும் தோற்றம் இது. சூரிய மண்டலத்தின் மையமாக விளங்குவது சூரியனே என்று 16ம் நூற்ருண்டில் கொப்பேர்னிக்கஸ் (*Copernikus*) நிருபித்தார். அதன் வாயிலாகவே அவர் முதல் வரிசைத் தன்மையை வெளிப்படுத்தினர். சூரியனைச் சுற்றிக் கோளங்களின் இயக்கம் பற்றிய விதிகளைப் பிற்பாடு கெப்ளர் நிலைநாட்டினர். கெப்ளரின் விதிகளுக்கு ஆதாரமான பிரபஞ்ச ஈர்ப்பு விதியை நியூட்டன் கண்டுபிடித்தார். இது இரண்டாவது வரிசையைச் சேர்ந்த தன்மை ஆகும். ஆயினும் ஈர்ப்பு விதி அனுபவபூர்வமானது, விவரமானது. பொருள்கள் தமது பொருண்மைக்கு நேர் விகிதத்திலும், தமக்கு இடையிலுள்ள தொலைவின் வருக்கத்துக்குத் தலைகீழ் விகிதத்திலும் உள்ள ஆற்றலுடன் ஒன்றை ஒன்று ஈர்க்கின்றன என்று இந்த விதி நிலைநாட்டுகிறது. ஆனல் இவ்வாறு இருப்பது ஏன் என்ற கேள்விக்கு இந்த விதி விடை அளிக்கவில்லை. ஈர்ப்பின் இயல்பு இன்றளவும் கண்டுபிடிக்கப்படாமலே இருந்துவருகிறது. தற்கால பௌதி

கத்தின் மிக முக்கியப் பிரச்சினைகளில் ஒன்ருக இது விளங்குகிறது. இதன் தீர்வு மூன்ருவது வரிசையைச் சேர்ந்த தன்மையை வெளிப்படுத்தும்.

நடைமுறைச் செயல்களில் புறநிலை நிகழ்முறைகளின் தோற்றத்தையும் தன்மையையும் கண்டிப்பாக வேறு பிரித்து அறிவதும் தோற்றத்தின் பின் மறைந்துள்ள தன்மையைத் தேடிக் காண முயல்வதும் அவசியம் ஆகும். உதாரணமாக, தற்போதையச் சகாப்தம் உலகு முழுவதும் பரந்த அளவில் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பதற்கான சகாப்தம் என்ற வரையறுப்பு அதன் தன்மையை வெளிப்படுத்துகிறது. இந்தத் தன்மையோ, சிக்கலான சூழ்நிலையில் சரியான திசையில் செல்வதையும், தொழிலாளர் இயக்கம், தேசீய விடுதலை இயக்கம் ஆகியவற்றின் ஸ்தூலமான கடமைகளை வெற்றிகரமாக நிறைவேற்றுவதையும் கம்யூனிஸ்ட் கட்சிகளுக்குச் சாத்தியம் ஆக்குகிறது.

## § 6. சாத்தியப்பாடும் எதார்த்தமும்

புறநிலைப் பிரபஞ்சத்தில் நிலவும் பல்விதப் பொருள்களும் நிகழ்முறைகளும் சாசுவதமானவை அல்ல. இயல்பான இன்றியமையாமை ஏற்பட்டதனுல், அவை தோன்றுவதற்கு ஏற்ற குறித்த முன்னிலைகளும் காரணங்களும் நிலைமைகளும் உருவானதன் விளைவாக, அவை உரிய காலத்தில் தோன்றுகின்றன. எனவேதான் வளர்ச்சிப் போக்கில் ஒரு குறித்த கட்டம் எப்போதும் காணப்படுகிறது. அந்தக் கட்டத்தில் புதிய பொருளோ செயல்முறையோ இன்னும் இராது. அது இன்னும் தோன்றியிருக்காது. ஆனுல் அதன் உதயத்துக்கு ஏற்ற நிலைமைகள் உருவாகியிருக்கும். முந்திய வளர்ச்சியால் அவை ஏற்படுத்தப் பட்டிருக்கும்.

புதியது தோன்றுவதற்கு உரிய அடிப்படை, அதற்கேற்ற முன்னிலைகள், காரணங்கள், நிலைமைகள் ஆகியவற்றின் தொகுப்பு நிலவுவது சாத்தியப்பாடு எனப்படுகிறது. சாத்தியப்பாடு என்ற வகைப்பிரிவு எதார்த்தத்தினது வளர்ச்சியின் புறநிலைப் போக்கைப் பிரதிபலிக்கிறது.

''எதார்த்தம்'' என்னும் கருதுகோள் விரிவான அர்த்தத்திலும் குறுகிய அர்த்தத்திலும் வழங்குகிறது. விரிவான அர்த்தத்

தில் புறநிலைப் பிரபஞ்சத்தில் நிலவுபவை அனைத்தையும், குறுகிய அர்த்தத்தில் சாத்தியப்பாட்டின் இயக்க இயல் எதிர் நிலையையும் அது குறிக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் எதார்த்தம் என்பதனால் செயல்படுத்தப்பட்ட, நிறைவேற்றப்பட்ட சாத்தியப்பாடு குறிக்கப்படுகிறது.

சாத்தியப்பாடும் எதார்த்தமும் தமக்குள் நெருக்கமாக இணைந்தவை. சாத்தியப்பாடு எதார்த்தத்தின் வளர்ச்சியால் பிறக்கிறது. எதார்த்தமோ சாத்தியப்பாட்டினால் முன்னேற்பாடு செய்யப்படுகிறது. எனவே அவற்றை ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாது.

சாத்தியப்பாட்டை எதார்த்தத்திலிருந்து துணிப்பது ஆதாரமற்ற, நிறைவேற முடியாத சாத்தியப்பாடுகள் பற்றிய அருவத் தர்க்கங்களுக்கு இட்டுச் செல்கிறது. ஏனெனில் எதார்த்தத்துடன் எப்போதும் இணைந்திருப்பதும் அதனால் தோற்றுவிக்கப்படுவதும் மெய்யான சாத்தியப்பாடே அன்றி அர்த்தமற்ற சாத்தியப்பாடு அல்ல. எதார்த்தத்தைச் சாத்தியப்பாட்டிலிருந்து துணித்துவிடுவதன் விளைவாகவோ, புதியது பற்றிய உணர்வையும் தொலைக்காட்சியையும் இழக்க நேரிடுகிறது.

சாத்தியப்பாடும் எதார்த்தமும் ஒன்றே எனக் கொள்வதும் கூடாது. ஏனெனில் சாத்தியப்பாடு எதார்த்தம் ஆவதற்குரிய சிக்கலான செயல்முறை. சில வேளைகளில் நீண்ட, கடினமான வளர்ச்சிக் கட்டம் அவற்றை ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கிறது. எடுத்துக்காட்டாக, சமூக வாழ்வில் சாத்தியப்பாடு எதார்த்தம் ஆவதற்குத் தீவிரப் பிரயாசை தேவைப்படுகிறது. அது பல்வேறு சமூகச் சக்திகளின் போராட்டத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறது. சாத்தியப்பாட்டையும் எதார்த்தத்தையும் ஒன்றெனக் கொள்வது தன்முயற்சி ஓய்வுக்கும் பெற்ற வெற்றிகளைக்கொண்டு திருப்தி அடைந்துவிடுவதற்கும் இட்டுச் செல்கிறது. மக்கள் திரளின் செயலூக்கம் குலைவதே இதனால் விளையும்.

அருவமான (வெற்றுச் சடங்கு முறையான) சாத்தியப்பாட்டை நிறைவேறக்கூடிய சாத்தியப்பாட்டிலிருந்து வேறு பிரித்து அறிவது அவசியம். எது செயல்படுவதற்கு உரிய நிலைமைகள் ஏற்கனவே உருவாகியுள்ளனவோ, அது நிறைவேறக் கூடிய சாத்தியப்பாடு எனப்படுகிறது. இயற்கை, சமூகம் ஆகியவற்றின் விதிகளுக்குப் பொருந்துவது ஆயினும், அவற்றுடன் முரண்படுவது அல்ல ஆயினும் ஒரு சாத்தியப்பாடு எதார்த்

தம் ஆவதற்குத் தேவையான நிலைமைகள் நிலவவில்லை என்றால் அது அருவமான சாத்தியப்பாடு ஆகும்.

இந்த நிலைமைகள் உருவாகும்போது அருவமான சாத்தியப் பாடு நிறைவேறக்கூடிய சாத்தியப்பாடு ஆகிவிடுகிறது. எடுத்துக் காட்டாக, முதலாளித்துவத்தின் தோற்றத்துடன் சோஷலிஸப் புரட்சிக்கு உரிய சாத்தியப்பாடும் உதித்துவிடுகிறது. ஏனெனில் இந்தச் சாத்தியப்பாடு முதலாளித்துவ அமைப்பின் முரண்பாடுகளில் அடங்கியிருக்கிறது. எனினும் தொடக்கத்தில் அது அருவ இயல்பே கொண்டிருக்கிறது. ஏனென்றால் அப்போது வளர்ச்சியுற்ற பாட்டாளி வர்க்கம் இருப்பதில்லை, முதலாளித்துவத்தின் முரண்பாடுகள் இன்னும் போதிய அளவு கூர்மை அடைந்து இருப்பதில்லை, புரட்சிகரமான நிலைமை இன்னும் உருவாகி இருப்பதில்லை, இவ்வாறே பிறவும். ஆனால் முதலாளித்துவத்தின் வளர்ச்சிக்கு ஏற்ப அருவமான இந்தச் சாத்தியப்பாடு நிறைவேறக்கூடியது ஆகிவிடுகிறது. நம் காலத்தில் அனேக நாடுகளில் இத்தகைய நிறைவேறக்கூடிய சாத்தியப் பாடு ஏற்கனவே எதார்த்தமாகச் செயல்படுத்தப்பட்டு விட்டது. இது போலவே மற்றக் கிரகங்களுக்கு மனிதனது பறப்பின் சாத்தியப்பாடு பத்து ஆண்டுகளுக்கு முன்புவரை அருவமான சாத்தியப்பாடு ஆகவே இருந்தது. இப்போதோ, விஞ்ஞான, தொழில்நுட்ப வளர்ச்சி காரணமாகவும் விண்வெளியை வெற்றி கொள்வதில் பெறப்பட்ட முதல் நிறைவேற்றங்களின் விளைவாகவும் இந்தச் சாத்தியப்பாடு நிறைவேறக்கூடியது ஆகிவிட்டது. இத்தகைய பறப்புக்கள் எதார்த்தம் ஆகும் காலம் இப்போது தொலைவில் இல்லை.

அருவமான சாத்தியப்பாடுகள் நிறைவேறுவதற்கான வாய்ப்பு வெவ்வேறானது. சில அருவமான சாத்தியப்பாடுகள் அசாத்தியத்தின் எல்லையை எட்டும் அளவுக்கு நிறைவேற்றத்திலிருந்து தொலைவில் உள்ளவை. ஆயினும் அருவச் சாத்தியப்பாட்டையும் அசாத்தியத்தையும் ஒன்றாகக் கொள்வது கூடாது. ஏனெனில் அசாத்தியம் இயற்கை விதிகளுக்குப் பொருந்துவது இல்லை, எனவே அது எதார்த்தம் ஆக முடியாது.

அருவமான சாத்தியப்பாடுகளுக்கும் நிறைவேறக்கூடிய சாத்தியப்பாடுகளுக்கும் இடையிலுள்ள வேறுபாடு சாராம்சமானது என்றாலும் ஒப்புநோக்கானது என்பது மேற்கூறியவற்றால் பெறப்படுகிறது. பல அருவச் சாத்தியப்பாடுகள்

போராட்டம். அதனுல்தான் வேறு எந்தச் சமூகத்தைக் காட்டிலும் சோஷலிஸத்திலும் கம்யூனிஸத்திலும் புதியது அதிக வெற்றிகரமாக அமுலுக்குக் கொண்டுவரப்படுகிறது, அதிக முழுமையாகச் செயல்படுத்தப்படுகிறது.

சோவியத் யூனியனிலும் சோஷலிஸ முகாமைச் சேர்ந்த நாடுகளிலும் கம்யூனிஸக் கட்டுமானத்தின் விஞ்ஞான அடிப்படை கொண்ட சாத்தியப்பாடும் இன்றியமையாமையும் இப்போது செயலாக்கப்பட்டு வருகின்றன. உலகம் முழுவதிலும் அதன் வெற்றி சாத்தியம் என்பது தெளிவாகி வருகிறது. புதிய சமூகத்தின் கட்டுமானத்தில் அகநிலைக் காரணியின் பங்கு, வழிகாட்டித் தலைமை வகித்து இயக்கிச் செல்லும் சக்தி என்ற முறையில் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்கு நிரூபணமாகி வருகிறது. கம்யூனிஸம் என்னும் மாண்புயர் மாளிகையை நிறுவுவதற்கு ஏற்ற எல்லா நிலைமைகளும் சோவியத் யூனியனில் நிலவுகின்றன. மக்கள் திரளின் ஒழுங்கமைந்த செயல், படைப்புத்தன்மை வாய்ந்த முன்முயற்சி, இவற்றின் விளைவாக அந்த மாளிகை நிறுவப்படும்.

*

பொருள்முதல்வாத இயக்க இயலின் மிக முக்கியமான வகைப்பிரிவுகளையும் அவற்றின் அடிப்படையான சிறப்புத் தன்மைகளையும் பொது அம்சங்களையும் நாம் பார்த்தோம். வகைப்பிரிவுகள் விஞ்ஞானத்தின் அடிப்படைக் கருதுகோள்கள் ஆதலால், நம்மைச் சுற்றியுள்ள பிரபஞ்சத்தை அறிவதற்கு இவை மிகப் பெருத்த முக்கியத்துவம் கொண்டிருக்கின்றன. மனித குலத்தால் பெறப்பட்ட ஞானம் விதிகளில் போலவே இவற்றில் பொதுமைப்படுத்தப்பட்டு இறுகிய வடிவில் நிலைப்படுத்தப்படுகின்றது. ஆனுல் வகைப்பிரிவுகளின் பங்கு இது மட்டுமே அல்ல. இயற்கையையும் சமூக வாழ்வையும் ஆய்ந்தறிவதற்கும் ஆராய்ச்சி ஆர்வம் கொண்ட மனித அறிவு பொருள்களின் தன்மையில் அதிக ஆழமாகப் புகுந்து நோக்குவதற்கும் ஏற்ற நம்பகமான சாதனங்களில் ஒன்ருகவும் அவை பயன்படுகின்றன.

எதார்த்தத்தின் பொருள்களையும் செயல்முறைகளையும் ஆராய்கையில் ஆராய்ச்சியாளர்கள் அவற்றின் வெவ்வேறு அம்சங்களையும் உறவுகளையும் தெளிவு படுத்துகிருர்கள்.

இவ்வாறு செய்வதற்கு, உள்ளடக்கமும் உருவமும் தன்மையும் தோற்றமும் அவற்றுக்கு இயல்பானவை என்பதையும், அவை குறித்த விதத்தில் தமக்குள் தொடர்பு கொண்டிருக்கின்றன என்பதையும், இந்த உறவுகள் இன்றியமையாதவையாகவும் தற்செயலானவையாகவும் தனியானவையாகவும் பொதுவானவையாகவும் இருக்கக்கூடும் என்பதையும், இவை போன்ற பிறவற்றையும் அறிந்திருப்பது அவசியம். வகைப்பிரிவுகள் பற்றிய அறிவு பொருள்களையும் செயல்முறைகளையும் பல கோணங்களிலிருந்து அணுகுவதை உறுதிப்படுத்துகிறது. ஆகவே தான் அவை சர்வாம்சமான, போதிய அளவு முழுமையான ஆராய்ச்சிக்குத் தக்க கருவிகளாகப் பயன்படுகின்றன.

குறித்த வகைப்பிரிவுகளால் வெளியிடப்படும் நிகழ்ச்சிகளின் அம்சங்கள், தொடர்புகளது சிறப்புத் தன்மைகளைக் கணக்கில் எடுத்துக்கொள்வது, அதாவது ஒவ்வொரு வகைப் பிரிவினுடையவும் தனிப்பட்ட உள்ளடக்கத்தை அறிந்து கொள்வது இன்றியமையாதது ஆகும்.

விளைவாக, வகைப்பிரிவுகள் இயக்க இயலின் கோட்பாடுகளுடனும் விதிகளுடனும் சேர்ந்து ஆராய்ச்சிக்குரிய விஞ்ஞான முறை ஆகின்றன. வகைப்பிரிவுகள் சித்தாந்தச் சிந்தனையின் வடிவங்களாகவும் விளங்குகின்றன. இந்தச் சிந்தனை கருதுகோள்களிலும் வகைப்பிரிவுகளிலுமே செய்யப்படுகிறது. இவை இன்றிச் சிந்தனை சாத்தியமாகாது. எனவே, மனிதச் செயலின் எந்தத் துறையிலும் சித்தாந்தப் பொதுமைப்பாடுகளின் விளைவுகள், விஞ்ஞான ரீதியான, இயக்க இயல் வகைப்பிரிவுகளை மனிதர்கள் பயன்படுத்துகிறார்களா அல்லவா என்பதைக் கணிசமான அளவுக்குப் பொறுத்திருக்கின்றன.

## § 7. முறை என்ற நோக்கில் இயக்க இயல்

நம்மால் பரிசீலிக்கப்பட்ட இயக்க இயலின் கோட்பாடுகளும் விதிகளும் வகைப்பிரிவுகளும் அதன் பிரதான உள்ளடக்கம் ஆகும். எதார்த்தத்தின் வளர்ச்சிக்கு உரிய மிக மிகப் பொதுவான விதிகளை இவை விவரித்து, அதைப் பற்றிய சரியான கருத்தைத் தருகின்றன. அதோடுகூட, எதார்த்தத்தை அறிவதற்கும் மாற்றி அமைப்பதற்கும் ஏற்ற விஞ்ஞான முறைகளை இவை மனிதர்களுக்கு அளிக்கின்றன. இயற்கையும் சமூகமும்

எந்த வழிகளிலும் விதங்களிலும் மாற்றப்படுகின்றன என்பதை இவை சுட்டிக்காட்டுகின்றன.

விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் உற்பத்தியும் நம் காலத்தில் முன் கண்டிராத மலர்ச்சி பெற்றுள்ளன. எனினும் அறிதல், இயற்கையின் மர்மங்களையும் மனிதர்களது பொருளாதார, அரசியல், ஆன்மீக வாழ்வின் விதிகளையும் வெளிப்படுத்தும் மிகச் சிக்கலான, கடினமான, நீண்ட செயல்முறையாக இருந்து வந்தது, இருந்து வருகிறது. ஆதலால், விஞ்ஞானம், வாழ்க்கை, இவற்றின் எந்தத் துறையிலும் வெற்றிகரமான, பயன் விளைக்கும் செயல் புரிவதற்கு விஞ்ஞான முறையைப் பெற்றிருப்பது பிரதான நிபந்தனைகளில் ஒன்றாக விளங்குகிறது. ஆராயப்படும் செயல்முறைகளின் தன்மையை வெளிப்படுத்துவதற்கு உரிய வழிகளையும் விதங்களையும் முறை காட்டுகிறது. தேட்டங்களில் சரியான திசையைத் தெரிந்தெடுத்துக்கொள்ள அது விஞ்ஞானிக்கு உதவுகிறது. சித்தாந்தத்திலும் நடைமுறையிலும் பல தவறுகள் ஏற்படாதவாறு தவிர்க்கிறது. ஆங்கில தத்துவவாதி பேக்கன் முறையை இருளில் பாதையை ஒளியுறுத்தும் விளக்கிற்கு ஒப்பிட்டார். சரியான பாதையில் செல்லும் நொண்டி கூட, பாதையில்லாமல் ஓடுபவனை முந்திவிடுவான் என்றார் அவர். அதனால்தான் தத்துவமும் பிற விஞ்ஞானங்களும் தோன்றிய கணம் முதலே பயன்விளைக்கும் முறை குறித்த விடாப்பிடியான தேட்டங்கள் தொடங்கிவிட்டன.

விஞ்ஞான, உற்பத்தி வாழ்க்கையில் மனிதர்கள் மிக மிக வெவ்வேறான முறைகளைக் கடைப்பிடிக்கிறார்கள். இவை தங்கள் இயல்பிலும் (அளவு அல்லது பண்பு முறைகள்), தாங்கள் கையாளப்படும் துறைகளின் (பௌதிகம், உயிரியல் முதலியன) தன்மையிலும், ஆராய்ச்சி நோக்கிலும் (சோதனை முறை ஆராய்ச்சி அல்லது சித்தாந்த ஆராய்ச்சி) ஒன்றிலிருந்து ஒன்று வேறுபட்டவை. பொதுமையின் தரத்திலும் இவை வேறுபடுகின்றன. இவற்றில் சில மிகக் குறுகிய துறையிலும் வேறு சில இன்னும் விரிவான துறையிலும் பின்னும் சில எதார்த்தத்தின் எந்தத் துறையிலும் கையாளப்படுகின்றன.

எதார்த்தத்தின் எல்லாத் துறைகளையும், எல்லாப் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் ஆராய்வதற்குக் கையாளப்படும் முறை சர்வப்பொதுவானது எனப்படுகிறது. அது தத்துவத்தால் வகுக்கப்பட்டு ஆராயப்படுகிறது. ஒரு அல்லது சில துறை

களில் மட்டுமே பயன்படும் முறைகள் அம்சரீதியானவை எனப் படுகின்றன. இவை ஸ்தூல விஞ்ஞானங்களில் வகுக்கப்படு கின்றன. அம்சரீதியான முறைகள் ஆராயப்படும் பொருள் களின் சிறப்புத் தன்மைகளின் அடியாக உருவாகின்றன. ஒரு அறிவுத் துறைக்குத் தக்கவையாக இருக்கும் இத்தகைய முறைகள் மற்ருெரு துறையில் கையாளத் தகாதவையாக இருக்கக் கூடும்.

எடுத்துக்காட்டாக, பௌதிக அல்லது இரசாயன முறைகள் சடப்பொருள் இயக்கத்தின் பௌதிக அல்லது இரசாயன வடிவத்தின் விதிகளை ஆராய்வதற்குக் கடைப்பிடிக்கப்படு கின்றன. உயிரியல், வானவியல், புவியியல், தொல்பொருளியல் ஆகியவற்றின் சில பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கும் அவை கையாளப்படலாம். கணித முறைகள் பௌதிகம், இரசாயனம், உயிரியல் ஆகியவற்றிலும் ஸ்தூலமான சமூக விஞ்ஞானங்களி லும் (உதாரணமாக, பொருளாதாரத்திலும் மொழி இயலிலும்) விரிவாகக் கையாளப்படுகின்றன. ஆனுல் பௌதிக, இரசாயன, கணித முறைகள் ஒழுக்கவியல், அழகியல் போன்ற விஞ்ஞானங்களுக்குக் கணிசமாக உதவ வல்லவை அல்ல.

எந்த ஸ்தூல விஞ்ஞானத்துக்கும் உரிய அம்சரீதியான முறை கள் அறிதலின் சில பொது விதிமுறைகளுக்கு உட்படுகின்றன. இந்தப் பொது விதிமுறைகள் பொருளியல் பிரபஞ்சத்தின் வளர்ச்சிக்கு உரிய மிகப் பொதுவான விதிகளிலிருந்து தோன்று கின்றன, அறிவின் எல்லாத் துறைகளுக்கும் கட்டாயமாகத் தேவைப்படுகின்றன. அறிதலுக்கு உரிய இந்தப் பொது விதி முறைகள் தாம் சர்வப்பொதுவான முறையின் உள்ளடக்க மாக விளங்குகின்றன. இந்த உள்ளடக்கம் பற்றிய போதனை ஆராய்ச்சி முறை இயல் எனப்படுகிறது. விஞ்ஞான வரலாற்றில் எதார்த்தம் குறித்த இரண்டு அணுகுமுறைகள் உருவாகி யுள்ளன. சர்வப்பொதுவான முறையாகப் பங்காற்றுவதாக இவை இரண்டுமே உரிமை கொண்டாடுகின்றன. இவையாவன மாருநிலைவாத அணுகுமுறையும் இயக்க இயல்வாத அணுகு முறையும்.

மாருநிலைவாதம் விஞ்ஞான அறிதலுக்கு உரிய முறை யாக இருக்க முடியாது. ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போல, தனித்துறை விஞ்ஞானங்கள் தோன்றிய காலப்பகுதியில் அது வரலாற்று ரீதியாக உருவாயிற்று. அந்தக் காலப்பகுதியில்

பொருள்கள் அவற்றின் தொடர்புகளுக்கும் வளர்ச்சிக்குப் வெளியே ஆராயப்பட்டன. மாறுநிலைவாதம் பிரபஞ்சத்தின் எதார்த்தக் காட்சிக்குப் பொருந்தவில்லை. பிரபஞ்சத்தை அதன் முழுச்சிக்கலுடன் உள்ளடக்குவதற்கு அது திறன் அற்றது. பொருள்களையும் அவற்றின் உறவுகளையும் ஒருதலைச் சார்பாக அணுகுதல், வளர்ச்சியை உண்மையில் மறுத்தல், பண்புவேறுபாடு களைப் பூரணமானவையாகக் கருதுதல் ஆகிய அதன் போக்குக் களே இந்தத் திறனின்மைக்குக் காரணம். பிரபஞ்சத்தில் நிறை வேறியுள்ள வளர்ச்சியையும் பண்புவகையான பரிணமிப்புக் களையும் காணுமல், மாறுதலின் பிரபஞ்சப் பொதுவான ஒரே விதம் அளவு மாற்றங்கள் மட்டுமே என மாறுநிலைவாதம் கருது கிறது.

விஞ்ஞான ரீதியான முறையாகப் பங்காற்றுவதாக உரிமை கொண்டாட வல்லது பொருள்முதல்வாத இயக்க இயல் மட்டு மே. அது பொருள்களை அவற்றின் பரஸ்பரத் தொடர்பின்நோக்கி லும் வளர்ச்சியின் நோக்கிலும் ஆராய்ந்து இந்த வளர்ச்சியின் சர்வப்பொதுவான விதிகளையும் வடிவங்களையும் கண்டு பிடிக்கிறது. பொருள்முதல்வாதத்தை ஆதாரமாகக் கொள் ளும்போது தான் இயக்க இயல் உண்மையிலேயே விஞ்ஞான ரீதியான முறை ஆக முடியும்.

வெளிப் பிரபஞ்சத்தின் இயல்பு குறித்த பிரச்சினைகளுக்கும், உணர்வின் தன்மை பற்றிய பிரச்சினைகளுக்கும், எதார்த்தத்தை அறிதல் என்பது என்ன என்ற பிரச்சினைக்கும் கருத்துமுதல் வாதம் போல் அன்றிப் பொருள்முதல்வாதம் விஞ்ஞான ரீதி யாக விடைகள் காண்கிறது. ஆராயப்படும் பொருள்களைப் புறநிலையாக அணுக அது கற்பிக்கிறது. இயற்கைக்குப் புறம் பான, மாயாவாதப் போக்குக்கள் அனைத்தையும் அது அறவே விலக்கிவிடுகிறது. எனவே இயக்க இயல் பொருள்முதல்வாதத் துடன் பிரிக்க முடியாத ஒருமையில் இருக்கும் போதுதான், பொருள்முதல்வாத இயக்க இயல் ஆகும் போதுதான் அதன் ஆற்றல் முழுவதும் வெளிப்படுகிறது. அதே சமயம் பொருள் முதல்வாதமும் இயக்க இயலுடன் ஒருமையில் இருக்கும்போது மட்டுமே, இயக்க இயல் பொருள்முதல்வாதம் ஆகும்போது மட்டுமே உண்மையிலேயே விஞ்ஞான ரீதியானதும் ஒத்தி சைந்ததும் ஒருதலைச்சார்பு அற்றதும் குறைகள் இல்லாததும் ஆகிறது.

கருத்துமுதல்வாதம் எதார்த்தத்துக்குத் திரிபான விளக்கம் தருகிறது. மனித அறிதல் என்பது என்ன என்ற கேள்விக்குத் தவருன விடை காண்கிறது. பிரபஞ்சத்தில் நிலவும் எதார்த்தத் தொடர்புகளுக்குப் பதில் போலியான, இயற்கைக்குப் புறம்பான தொடர்புகளை அது கற்பனை செய்கிறது. எனவே தான் இயக்க இயல் கருத்துமுதல்வாதத் தன்மை கொண்டிருந் தால் விஞ்ஞான ரீதியான அறிதலுக்கு உரிய முறை என்ற வகையில் அது தகுதி அற்றது ஆகிவிடுகிறது. இதற்கு எடுத்துக் காட்டாக ஹெகலின் இயக்க இயலைக் குறிப்பிடலாம்.

இயக்க இயல் பொருள்முதல்வாதம் அறிதலின் சித்தாந்த மாகவும் முறையாகவும் ஒரே சமயத்தில் விளங்குகிறது. இயக்க இயல் பொருள்முதல்வாதத்தின் ஆராய்ச்சி முறை இயல் கருத்தில் கொள்ளப்படும் போது அது பொருள்முதல் வாத இயக்க இயல் என்று வழக்கமாகக் கூறப்படுகிறது.

பொருள்முதல்வாத இயக்க இயல் சர்வப்பொதுவான முறையாக ஏன் பயன்பட வல்லதாக இருக்கிறது? ஏனெனில் முதலாவதாக எதார்த்தத்தை அது புறநிலையாக எவ்வாறு நிலவுகிறதோ அவ்வாறே அது பிரதிபலிக்கிறது. அறியப்படும் பிரபஞ்சம் தானே இயக்க இயல் தன்மை கொண்டது. எனவே பொருள்முதல்வாத இயக்க இயல் கற்பனை அல்லது வெறும் ஊகத்தின் விளைவு அல்ல, வளர்ந்துகொண்டிருக்கும் எதார்த்தத் தின் ஒப்பு ஆக விளங்குகிறது.

இரண்டாவதாக, இயக்க இயல் முறை ஆதாரமாகக் கொண் டிருப்பவை அம்சரீதியான விதிகள் அல்ல. இயற்கை, சமூகம், அறிதல் என்ற எதார்த்தத்தின் எல்லாத் துறைகளிலும் விலக் கின்றிச் செயல்படுகிற சர்வப்பொதுவான விதிகளே ஆகும். எனவே, அறிதலுக்கு உரிய சரியான வழிகள் பற்றியும், உண்மைக்கு இட்டுச் செல்பவையான சிந்தனையின் விதங்கள், உபாயங்கள் பற்றியும் முடிவுகள் செய்ய அது வல்லதாக இருக் கிறது. இந்த முடிவுகள் எதார்த்தத்தின் எல்லாத் துறைகளை யும் பற்றிய ஆராய்ச்சிக்குப் பொருந்துகின்றன.

அறியப்படும் செயல்முறையின் பொதுத்திசையை இயக்க இயல் வெளியிடுகிறது எனினும் அம்சரீதியான விஞ்ஞானங் களின் முறைகளுக்கு அது பதிலி ஆகிவிடுவதில்லை. மாருக, பொருள்முதல்வாத இயக்க இயலின் கோட்பாடுகளையும் அடிப்படைக் கருத்துக்களையும் சார்ந்த தனிப்பட்ட முறைகள்

அவற்றுக்கு உள்ளன என்று அது அனுமானிக்கிறது. இதோடு கூடவே, தனிப்பட்ட விஞ்ஞானங்களின் நிறைவேற்றங்களையும் அவற்றின் முறைகளையும் இயக்க இயல் முறை ஆதாரமாகக் கொள்ளுகிறது. பல விஞ்ஞானங்களுக்கு அல்லது எல்லா விஞ்ஞானங்களுக்குங்கூடப் பொதுவான முறைகளை (தொகுப்பு, பகுப்பு, பாகுபாடு, சேர்க்கை முதலியன) அது தன்னுள் அடக்குகிறது.

ஸ்தூல ஞானம் நடைமுறைக்கு நேரடியான முக்கியத்துவம் உள்ளது. அம்சரீதியான கேள்விகளுக்கு விடைகள் தரும் இத் தகைய ஞானத்தை இயக்க இயல் அளிப்பதில்லை. வெவ்வேறு அம்சரீதியான விஞ்ஞானங்களால் தங்களது சிறப்பான முறை களின் உதவியைக் கொண்டு செய்யப்படும் விசேஷ ஆராய்ச்சி களின் விளைவாகவே இத்தகைய ஞானம் பெறப்பட முடியும். ஆனால் அம்சரீதியான விஞ்ஞானங்கள்பொருள்முதல்வாத இயக்க இயலால் வழிகாட்டப்பட்டால் இந்த ஆராய்ச்சிகள் அதிக வெற்றிகரமாக விளங்குகின்றன. மொத்தத்தில் இயற்கையின் தன்மை பற்றியும் அதன் தனித்தனிப் பகுதிகளின் பரஸ்பரத் தொடர்பு பற்றியும் அறிதலின் தன்மை பற்றியும் சரியான கருத்து இருந்தால் தனித்தனி நிகழ்ச்சிகள் குறித்த ஆராய்ச்சி எப்போதுமே அதிகப் பயன் விளைப்பதாக இருக்கிறது. இயக்க இயல் முறை இத்தகைய சரியான கருத்தையே தருகிறது.

இயக்க இயலின் விதிகளையும் வகைப்பிரிவுகளையும் கற்று அறிவது சித்தாந்தச் சிந்தனைத் திறனை விரிவுபடுத்துகிறது, அதை அதிக வெற்றியுள்ளது ஆக்குகிறது. வேலையில் படைப்புத் தன்மை வாய்ந்த நடையையும் நிகழ்ச்சிகள்பாலும் வாழ்க்கைச் சம்பவங்கள் பாலும் புறநிலையான விஞ்ஞான அணுகு முறையை யும் உருவாக்க அது உதவுகிறது. இயக்க இயல் நோக்குக்களை விரிவுபடுத்தத் துணை புரிகிறது. முன்னே பார்வை செலுத்தவும் பொருள்களைப் பல கோணங்களிலிருந்து பகுத்தாராயவும், பொருள்களிலும் நிகழ்ச்சிகளிலும் முரண்பாடுகளையும் பண்பு மாற்றங்களையும் காணவும், அவற்றின் வளர்ச்சிக்கு உரிய காரணங்களையும் இயக்கு சக்திகளையும் கண்டுபிடிக்கவும், பொருள்களிலும் செயல்முறைகளிலும் வெளியிலுள்ளதையும் உள்ளார்ந்ததையும், முக்கியமானதையும்முக்கியம்அற்றதையும், இன்றியமையாததையும் தற்செயலானதையும், உருவத்தையும் உள்ளடக்கத்தையும் வேறு பிரித்து அறியவும் இயக்க இயல்

கற்பிக்கிறது. எல்லா வித அகநிலைவாதத்துக்கும் வறட்டுச் சூத்திரவாதத்துக்கும் அது எதிராகச் செல்லுகிறது.

இயக்க இயலின் விதிகளும் வகைப்பிரிவுகளும் வளர்ச்சிச் செயல்முறையின் வெவ்வேறானவை ஆயினும் தமக்குள் தொடர்பு கொண்ட இயல்புகளையும் அம்சங்களையும் முக்கியக் கட்டங்களையும் பிரதிபலிக்கின்றன ஆதலால், எந்தப் பொருளையோ நிகழ்ச்சியையோ ஆராய்கையில், விஞ்ஞானரீதியான இயக்க இயலால் வகுக்கப்பட்டுள்ள எல்லா விதிகளையும் வகைப்பிரிவுகளையும் அவற்றின் பரஸ்பரத் தொடர்பிலும் ஒருமையிலும் பயன்படுத்துவது தேவைப்படுகிறது. இந்தத் தேவை திட்டவட்டமான, சர்வாம்சமான, ஆழ்ந்த அறிதலுக்கு முக்கிய நிபந்தனையாக விளங்குகிறது.

தத்துவத்தைக் கற்காத மனிதர்களது சிந்தனையில் கூட இயக்க இயலின் அம்சங்கள் வெவ்வேறு அளவில் அடங்கியிருக்கின்றன. தங்கள் செய்கைகளில் அவர்கள் இந்த அம்சங்களைத் தாறுமாறாகப் பயன்படுத்துகிறார்கள். ஆனால் இயக்க இயலை ஆராய்ச்சியில் உணர்வுபூர்வமாகக் கையாளுவது பெருத்த பயன் அளிக்கிறது. அறிதலில் பொருள்முதல்வாத இயக்க இயலை உணர்வுபூர்வமாக, திறமையுடன் கையாளும் கலை கடினமானது. அதைக் கிரகித்துக்கொள்வதற்கு விடா முயற்சி தேவை.

இயக்க இயலின் அடிப்படைக் கருத்துக்கள் வாழ்க்கையின் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் ஒரே மாதிரிப் பயன்படுத்தப்படக் கூடிய, எந்த நிகழ்ச்சிக்கும் செயல்முறைக்கும் பொருந்தக் கூடிய பொதுத் திட்டங்கள் என எண்ணுவது தவறு ஆகும். இந்த அடிப்படைக் கருத்துக்கள் சர்வப்பொதுத் தன்மை கொண்டவையே ஆயினும், அவற்றைக் கையாளும் போது ஆராயப்படும் நிகழ்ச்சிகள் செயல்முறைகளின் சிறப்புக்களையும் தனித்தன்மைகளையும் அம்சரீதியான வளர்ச்சி விதிகளையும் ஒவ்வொரு திட்டவட்டமான சந்தர்ப்பத்திலும் கவனத்தில் இருத்திக் கொள்வது அவசியம். இயக்க இயலின் விதிகளைச் சரிவரக் கையாள்வதற்கு நிகழ்ச்சியின் இந்தத் திட்டவட்டமான நிலைமைகளையும் சிறப்புத்தன்மைகளையும் கூர்ந்து ஆராய்வதும், ஒவ்வொரு திட்டவட்டமான நிலைமையையும் திட்டவட்டமான பகுப்பாய்வுக்கு உட்படுத்துவதும் இன்றியமையாதவை ஆகும். இங்கே தேவைப்படுவது வறட்டுச் சூத்திரவாத அணுகு

முறை அல்ல, படைப்புத் தன்மை கொண்ட, கருத்தூன்றிய அணுகுமுறை.

இயக்க இயல் மார்க்ஸீய-லெனினீயத்தின் மெய்யான ஆன்மா, இந்த மாண்புசால் போதனையின் படைப்புத் தன்மைக்கும் உயிரோட்டத்துக்கும் ஊற்றுக்கண் ஆகும். இயக்க இயலிலிருந்து பிறழ்வது மார்க்ஸீய-லெனினீயத்திலிருந்து பிறழ்வது ஆகும். இது பெருத்த தவறுகளுக்கு, உதாரணமாக வறட்டுச்சூத்திர வாதத்துக்கும் திரிபுவாதத்துக்கும் இட்டுச் செல்லும்.

அத்தியாயம் ஐந்து

# சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தை மனிதன் எவ்வாறு அறிகிருன்

## § 1. மனிதனது உணர்வில் எதார்த்தத்தின் பிரதிபலிப்புச் செயல்முறை என்ற வகையில் அறிதல்

இயக்க இயலால் ஆராயப்படும் இயற்கையினதும் சமூகத்தினதும் வளர்ச்சிக்கு உரிய மிகப் பொதுவான விதிகள் அறிதலுக்கு உரிய விதிகளாகவும் விளங்குகின்றன. பொருள்முதல்வாத இயக்க இயலின் விதிகளேயும் வகைப்பிரிவுகளேயும் பற்றிய அறிவு மையமான தத்துவப் பிரச்சினேகளில் ஒன்றைப் புரிந்துகொள்ள உதவுகிறது. இந்தப் பிரச்சினே தத்துவத்தின் பின்வரும் அடிப்படைக் கேள்வியின் இரண்டாவது அம்சத்தை வெளிப்படுத்துகிறது: புறநிலே எதார்த்தத்தை அறிய மனிதன் வல்லவன் தானு? அறிதல் செயல்முறை எவ்வாறு நிகழ்கிறது?

பிரபஞ்சம் அறியப்படக் கூடியதா, மனிதச் சிந்தனே உண்மையைப் புரிந்துகொள்ளத் திறன் உள்ளதுதானு என்ற பிரச்சினே விஞ்ஞானத்துக்கும் நடைமுறைக்கும் மிகப் பெருத்த முக்கியத்துவம் வாய்ந்தது. பிரபஞ்சமும் அதன் வளர்ச்சிக்கு உரிய விதிகளும் அறியக்கூடியவை, நமது அறிவு எதார்த்தத்தைச் சரியாகப் பிரதிபலிக்கிறது என்றுல், இயற்கை, சமூகம் இவற்றின் அறியப்பட்ட சக்திகள் மனிதனுடைய தொண்டில் ஈடுபடுத்தப்படக் கூடும்.

எனினும் பிரபஞ்சம் அறியப்படக்கூடியது என்ற பிரத்தியட்சமான உண்மையை எல்லாத் தத்துவவாதிகளும் ஒப்புக்கொள்வதில்லே. முற்காலத்திய, தற்காலத்திய பூர்ஷ்வாத் தத்துவத்தில் அறியொணுமைக் கொள்கையினர் பிரபஞ்சத்தின் அறியப்படும் தன்மையை வெளிப்படையாக மறுத்துவந்தார்கள், மறுத்துவருகிருர்கள். நமது அறிதல் எதார்த்தத்தின் சரியான காட்சியைத் தருவதில்லே என்றும், எதார்த்தத்தைப்

புலன்களின் உதவியாலோ அறிவின் உதவியாலோ அறிந்து கொள்ள முடியாது என்றும் அவர்கள் சொல்லுகிருர்கள்.

அறியொணுமைக் கொள்கையின் சில வகைகள் உள்ளன. மனிதனுடைய ஞானத்துக்கு ஊற்றுக்கண் அனுபவமே என்ற அடிப்படையில் சில அறியொணுமைக் கொள்கையினர் வாதிக்கிருர்கள். அனுபவமோ அவர்களது கருத்துப்படி நமது புலனுணர்ச்சிகள், புலனறிவு ஆகியவற்றின் தொகுப்பே ஆகும். வஸ்துக்கள் பற்றிய நமது எண்ணங்கள் நம்பத்தக்கவை தாமா என்று நிர்ணயிப்பது இந்த நோக்கின்படி நமது எண்ணங்களை நமதே சொந்தப் புலனுணர்ச்சிகளுடனே புலனறிவுடனே ஒப்பிடுவதாக அர்த்தப்படும். ஆகவே நமது சொந்தப் புலனுணர்ச்சிகளையும் புலனறிவையும் தவிர வேறு எதையும் நம்மால் அறிய முடியாது என்று ஆகிறது.

இந்த முடிவு தவருனது. ஏனெனில் அனுபவம் என்பதே கருத்துமுதல்வாதப் பான்மையில் விளக்கப்படுகிறது. உண்மையில் மனிதனது அனுபவத்தில் உள்ளவை அவனுடைய புலனுணர்ச்சிகளும் புலனறிவும் மட்டுமே, இவற்றுக்குப் பின்னே வேறு எதுவுமே இல்லை என்பது சரியல்ல. மனிதனுடைய புலனுணர்ச்சிகளிலும் புலனறிவிலும் சரியாக, பிழையின்றிப் பிரதிபலிக்கின்றன புறநிலையாக நிலவும் பொருள்களும் அவற்றின் இயல்புகளும்.

அறியொணுமைக் கொள்கையினரில் வேறு சிலர் இருக்கிருர்கள் (கான்ட்டும் அவரைப் பின்பற்றுவோரும்). மனித உணர்வு மீது சார்பு இன்றிப் பொருள்கள் நிலவுவதை இவர்கள் ஒப்புக்கொள்கிருர்கள். ஆயினும் அவை அறியப்பட முடியாதவை என்று கருதுகிருர்கள். இதற்கு அவர்கள் கூறும் வாதம் பின்வருமாறு: பொருள்கள் நமது புலன்களைப் பாதித்துப் புலனுணர்ச்சியும் புலனறிவும் நமக்கு ஏற்படச் செய்கின்றன. ஆனாலும் இந்த உணர்வு விவரங்களில் பொருள்களின் தன்மை பற்றிய தகவல்கள் அடங்கியிருக்கவில்லை. மேலே இவர்கள் அறிதலின் புலன்வகைப்பட்ட கட்டங்களையும் அறிவுவகைப்பட்ட கட்டங்களையும் மாருநிலைவாதப் பாங்கில் ஒன்றுக்கொன்று எதிர்நிறுத்துகிருர்கள். அனுபவ வாயிலாகப் பெறப்படும் விவரங்களையும் சித்தாந்தச் சிந்தனையையும் தனிப் பிரிக்கிருர்கள். இவ்வாறு இந்த அறியொணுமைக் கொள்கையினர் புறநிலையாக நிலவும் பொருள்கள் அறியப்பட முடியாதவை, கான்ட் கூறியது

போல அவை ''தன்னிலைப் பொருள்கள்'' என்ற தவறான முடிவுக்கு வருகிறார்கள். பொருள்களின் தன்மையையும் அவற்றின் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளையும் பற்றிய ஞானத்தைப் புலன்கள் வாயிலாகவோ சித்தாந்த அறிதல் வாயிலாகவோ பெற மனிதனால் முடியாது என்ற முடிவுக்கு இது இட்டு வருகிறது.

சமூக வளர்ச்சிக்கு உரிய விதிகளை அறிதல் சாத்தியம் அல்ல என்ற அறியொணாமைக் கொள்கையினரின் கூற்று சிறப்பாகப் பிற்போக்கானது. தற்கால பூர்ஷ்வாத் தத்துவத்தில் அறியொணாமைக் கொள்கை விரிவாகப் பரவியிருப்பது தற்செயலாக அல்ல. ஏனெனில் உலகைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதற்கான வழியையும் சாதனங்களையும் சுட்டிக்காட்டும் விஞ்ஞானச் சித்தாந்தத்தின்பால் மக்களுக்கு உள்ள நம்பிக்கையைக் குலைக்க இந்தத் தத்துவம் முயல்கிறது.

மார்க்ஸுக்கு முன்பு இருந்த பொருள்முதல்வாதிகளும் அறியொணாமைக் கொள்கையை எப்போதும் எதிர்த்து வந்தார்கள். மனித உணர்வில் புறநிலைப் பிரபஞ்சத்தின் பிரதிபலிப்பே அறிதல் என்று அவர்கள் நிரூபித்துவந்தார்கள். எனினும் அவர்கள் மாறாநிலைவாதிகளாக இருந்தமையால் பிரதிபலிப்பு பற்றிய சித்தாந்தத்துக்கு, அறிதல் செயல்முறையின் விளக்கத்துக்கு, இயக்க இயலைக் கையாள அவர்களால் முடியவில்லை. பண்பில் வெவ்வேறான அறிதலின் தரங்களுக்கு இடையிலுள்ள தொடர்பின் இயக்க இயல் தன்மையை வெளிப்படுத்துவதும், அறிவின்மையிலிருந்து அறிவுக்கும் முதல் வரிசையைச் சேர்ந்த தன்மையிலிருந்து அதிக ஆழ்ந்த தன்மைக்கு இவ்வாறே பிற வகையிலும் நிகழும் பரிணமிப்பை விளக்குவதும் மார்க்ஸுக்கு முந்திய பொருள்முதல்வாதிகளுக்கு இயலவில்லை. அவர்களது நோக்கின்படி அறிதல் என்பது பொருள்களும் அவற்றின் பண்புகளும் மனித மூளையில் ஏற்படுத்தும் பதிவே ஆகும். முந்திய பொருள்முதல்வாதிகள் மனிதனைச் சமூக உறவுகளிலிருந்து தனிப்படுத்தி எடுத்துக்கொண்டார்கள். உலகை மாற்றுவதை நோக்கமாகக் கொண்ட சமூக நடைமுறைச் செயல்களே அறிதலின் அஸ்திவாரமாக அமைகின்றன என்பதை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. இந்த விஷயத்தைப் புரிந்துகொள்ளும் திறன் தற்கால பூர்ஷ்வாத் தத்துவவாதிகள் பலருக்கும் இல்லை. ஏனெனில் அவர்களது அக்கறை எல்லாம் முதலாளித்துவ அமைப்பை

என்றென்றும் நிலைத்திருக்கச் செய்வதே அன்றி அதைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பது அல்ல.

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் அறியொணுமைக் கொள்கையின் பிற்போக்குத் தன்மையை அம்பலப்படுத்தியது. அதோடு கூட, அறிதல் பற்றிய முந்திய பொருள்முதல்வாதச் சித்தாந்தங்களில் இருந்த குறைகளையும் அது நீக்கிவிட்டது. மார்க்ஸீயத்தின் ஆசிரியர்கள் காட்டியதுபோல, கருத்தியலானதைப் பொருளியலானதற்கும் உணர்வு வகைப்பட்ட விவரங்களைச் சிந்தனைக்கும் மாறுநிலைவாதப் பாங்கில் எதிர் நிறுத்தியதுதான் அறியொணுமைக் கொள்கையின் முக்கியத் தீங்கு. பிரபஞ்சத்தை அறிவது அசாத்தியம் என்பதை அடிப்படையாகக் கொண்டு அறியொணுமைக் கொள்கையினர் அனுபவத்திற்குத் தவறுன விளக்கம் தருகிருர்கள், அறிதல் சித்தாந்தத்திலிருந்து நடைமுறையை விலக்கி அகற்றுகிருர்கள், மனித அறிவை இழிவுபடுத்துகிருர்கள், மக்களுக்குச் செயலின்மையை விதிக்கிருர்கள். எனினும் பிரபஞ்சத்தின் அறியப்பட முடியாமை பற்றிய அவர்களது முடிவு மனிதர்களின் நடைமுறை உழைப்புச் செயல்களின் வெற்றிகளால் நிராகரிக்கப்படுகிறது. மனிதர்கள் இயற்கையையும் சமூகத்தையும் மேலும் மேலும் ஆழ்ந்து அறிந்து தங்கள் நோக்கங்களுக்கு இணங்க அவற்றை மாற்றி அமைக்கிருர்கள் என்பதே மனித அறிவின் ஆற்றலில் நம்பிக்கை அற்ற அறியொணுமைக் கொள்கைக்குச் சிறந்த மறுப்பாக விளங்குகிறது.

வெளிப் பிரபஞ்சம் புறநிலையாக நிலவுகிறது, மனித உணர்வில் பிரதிபலிக்கிறது என்பதை ஏற்றுக்கொள்வதே இயக்க இயல் பொருள்முதல்வாதத்தின் அறிதல் சித்தாந்தத்துக்கு அடிப்படையாகத் திகழ்கிறது. இதன் அர்த்தம் என்னவென்ருல், எதார்த்தத்தின் பொருள்களும் நிகழ்ச்சிகளும், அவற்றின் இயல்புகளும் உறவுகளும் மனிதனது புலன்களைப் பாதித்து, பொருத்தமான புலனுணர்ச்சிகளையும் புலனறிவையும் ஏற்படுத்துகின்றன. இவற்றின் அடிப்படையில் மனிதன் கருதுகோள்களை உருவாக்குகிருன். வெளிப் பிரபஞ்சமும் அதன் பொருள்களும் செயல்முறைகளும் நமது ஞானம் அனைத்திற்கும் தலையூற்ருக விளங்குகின்றன.

ஆனுல் மாறுநிலைவாதப் பொருள்முதல்வாதிகள் அனுமானித்ததுபோல, அறிதல் செயல்முறை, அகநிலைப்பொருள் ஆன

மனிதனால் சூழ்ந்துள்ள பிரபஞ்சம் செயலற்ற முறையில் பதிவு செய்துகொள்ளப்படுவது அல்ல. தங்கள் உழைப்புச் செயலின் போது மனிதர்கள் இயற்கையையும் சமூகத்தையும் தீவிரமாக மாற்றி அமைக்கிறார்கள். இந்தச் செயல் திட்டவட்டமான பிரச்சினைகளை அவர்களுக்கு முன்னே எழுப்புகிறது. இப்பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு இயற்கையையும் சமூகத்தையும் பற்றிய விதிகளை அறிதல் தேவைப்படுகிறது. எனவே அறிதல் என்பது எதார்த்தத்தின் செயலூக்கமுள்ள, ஒருமுனைப்பாடு கொண்ட பிரதிபலிப்பே தவிர வெறுமே அது பற்றிய செயலற்ற தியானம் அல்ல.

மனிதனது அறிதலை, அவனது சிந்தனைத் திறனை, சமூக வளர்ச்சியின் விளைவு என்ற முறையில், சூழ்ந்துள்ள பிரபஞ்சம் சமூக மனிதனால் செயலூக்கத்துடன் மாற்றி அமைக்கப்பட்டதன் பயன் என்ற முறையில், இயக்க இயல் பொருள்முதல்வாதம் பரிசீலிக்கிறது. இயற்கையையும் சமூகத்தையும் மாற்றி அமைப்பதை நோக்கமாகக் கொண்டு மக்கள் ஆற்றும் பொருளியல் செயல்களே அறிதலின் அடிப்படையாகவும் அதன் குறிக்கோளாகவும் அமைகின்றன.

மனிதச் சிந்தனையின் ஆக முக்கியமான அடிப்படையாக விளங்குவது மனிதனால் இயற்கை மாற்றப்பட்டதே என்றும் மனிதன் சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தை எந்த அளவுக்கு மாற்றக் கற்றுக்கொண்டானோ அந்த அளவுக்கே அவனது அறிவு வளர்ந்தது என்றும் பிரெடெரிக் எங்கெல்ஸ் வலியுறுத்தினார்.[1] நடைமுறையின்போதே, மனிதர்களின் ஒன்றுசேர்ந்த உழைப்புச் செயலின்போதே அறிதலின் எல்லா வடிவங்களும் உருவாகின்றன. சமூகத்தில் இருந்தவாறு, முந்திய தலைமுறைகளால் சேமிக்கப்பட்டதும் உற்பத்திக் கருவிகளில் பருவடிவு பெற்றுள்ளதும் மொழி, விஞ்ஞானம், பண்பாடு முதலியவற்றில் நிலைப்படுத்தப்பட்டுள்ளதும் ஆன அனுபவத்தைப் பயன்படுத்தி மனிதன் பிரபஞ்சத்தை அறிகிறான்.

அறிதல் செயல்முறை எவ்வாறு நிகழ்கிறது? இந்தக் கேள்விக்குப் பதில் அளித்தார்கள் மார்க்ஸீயத்தின் ஸ்தாபகர்கள். ''உயிரோட்டமுள்ள தியானத்தில் இருந்து பகுப்புமுறைச்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''இயற்கையின் இயக்க இயல்'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 545 பார்க்க.

சிந்தனைக்கும் அதில் இருந்து நடைமுறைக்கும் — இதுவே உண்மை பற்றிய அறிதலின், புறநிலை எதார்த்தம் பற்றிய அறிதலின் இயக்க இயல் வழி ஆகும்''[1] என்று எழுதினார் வி.இ. லெனின். எனவே, உணர்வுவகைப்பட்ட அறிதலும் (உயிரோட்டமுள்ள தியானம்) விவேகம் உள்ள அறிதலும் (பகுப்புமுறைச் சிந்தனை) நடைமுறையும் அடங்கியது அறிதல் செயல்முறை.

உணர்வுவகைப்பட்ட அறிதலில் மூன்று வடிவங்கள் உள்ளன: புலனுணர்ச்சி, புலனறிவு, எண்ணம் என்பன அவை. இந்த வடிவங்கள் ஒன்றிலிருந்து ஒன்று எதில் வேறுபடுகின்றன? தமக்குள் அவை எவ்வாறு தொடர்பு கொண்டிருக்கின்றன?

மனிதனால் பிரபஞ்சம் பிரதிபலிக்கப்படுவதன் தொடக்க வடிவமாக விளங்குவது புலனுணர்ச்சி. புலன்கள் மீது பொருளியல் வஸ்துக்களின், பொருள்களின் நேரடியான பாதிப்பின் விளைவாக ஏற்படுகின்றன புலனுணர்ச்சிகள். ''புலனுணர்ச்சி என்பது வெளிப் பிரபஞ்சத்துடன் உணர்வின் உண்மையிலேயே நேரடியான தொடர்பே ஆகும், வெளித் தூண்டலின் ஆற்றல் உணர்வின் மெய்மையாக மாறுவதே ஆகும்''[2] என்று குறித்தார் வி. இ. லெனின். பொருள்களின் மிக மிக வெவ்வேறான இயல்புகள் புலன்கள்மீது பாதிப்பு விளைக்கக் கூடும். வஸ்துவின் திடத் தன்மையை நாம் தொட்டு உணரலாம், ஒலிகள், நிறங்கள் முதலியவற்றைப் புலன்களால் அறியலாம். வெவ்வேறு வஸ்துக்களும் நிகழ்ச்சிகளும் புலன்கள்மீது வெவ்வேறு பாதிப்புக்களை விளைக்கின்றன. ஒரு சந்தர்ப்பத்தில் புலன்கள் பொருள்களுடன் நேர்த் தொடர்பு கொள்ளுகின்றன. உதாரணமாக, இனிப்பு அல்லது உப்பு, மீள்விசை, மழமழப்பு முதலியவற்றைப் பற்றிய புலனுணர்ச்சிகள் இவ்வாறே தோன்றுகின்றன. வேறு சந்தர்ப்பத்தில் நாம் பொருள்களைத் தொலைவிலிருந்து புலன்களால் அறிகிறோம். இந்த விதமாகவே ஒரு பொருளினால் பிரதிபலிக்கவோ கதிர்வீசவோ படும் ஒளி விழித்திரையைப் பாதிப்பதன் விளைவாக அதன் காட்சி உருவம் ஏற்படுகிறது. ஆனால் ஒரு பொருள் நமது புலன்கள்மீது எப்படிச் செயல்பட்டாலும் சரியே, அவற்றின்மீது வெளித் தூண்டுவிப்பியினது (மின்காந்த

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கங்கள் 152-153.

[2] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 46.

அல்லது ஒலி அதிர்வுகள், இயந்திர அழுத்தம் முதலியவற்றி னுடைய) பாதிப்பின் விளைவாகவே புலனுணர்ச்சி தோன்றுகிறது.

உதாரணமாக, காட்சிப் புலனுணர்ச்சிகளுக்கு ஊற்றுக்கண் ணுக விளங்குவது ஒளி என்ற வெளித் தூண்டுவிப்பி. ஒளி என்பது ஒரு குறித்த அலை நீளம் கொண்ட மின்காந்த அதிர்வுகள் ஆகும். ஒரு மில்லிமீட்டரின் ஒரு மில்லியனில் 760 முதல் 647 வரை பங்குகளுக்கு உட்பட்ட அலைநீளம் கொண்ட மின்காந்த அதிர்வு களை மனித விழிகள் சிவப்பு நிறமாக அறிந்துகொள்கின்றன. இன்னும் குறுகிய அலைநீளம் கொண்ட அதிர்வுகள் ஆரஞ்சு, மஞ் சள், பச்சை, இளநீல, கருநீல, ஊதா நிறங்களாகப் புரிந்துகொள் ளப்படுகின்றன. ஆயிரக் கணக்கான நிறங்களையும் வண்ணச் சா யல்களையும் வேறு பிரித்துக் காண நமது விழி வல்லது. அதே போல, ஒளியின் பிரகாசம், நோக்கப்படும் வஸ்துவின் பகுதி கள், தென்படும் பொருள்களின் வடிவங்கள் ஆகியவற்றையும் வஸ்துக்களின் வேறு பல இயல்புகளையும் அது பிரித்து அறிகிறது. தனிப்பட்ட சுவைப் புலன்கள் மீது பாதிப்பு விளைக்கும் பல்வித இரசாயனப் பொருள்கள் சுவை உணர்ச்சி உண்டாக்கும் வெளித் தூண்டுவிப்பிகள் ஆகும்.

புலனுணர்ச்சிகள் நமது ஞானம் அனைத்திற்கும் ஊற்றுக்கண் களாக விளங்குகின்றன. ''புலனுணர்ச்சிகளின் வாயிலாக அன்றி வேறு வகையில் பொருள்களின் எந்த வடிவங்களைப் பற்றியும் இயக்கத்தின் எந்த வடிவங்களைப் பற்றியும் எதுவுமே அறிய நம்மால் முடியாது. இயங்கும் சடப்பொருள் நமது புலன்கள் மீது செயல்படுவதால் புலனுணர்ச்சிகள் விளைவிக்கப்படுகின்றன''[1] என்று எழுதினுர் வி. இ. லெனின். வெவ்வேறு புலனுணர்ச்சி களை ஒப்பிட்டு ஒன்ருேடொன்று சீர்தூக்கிப் பார்ப்பதன் மூலம் பொருள்களின் ஒத்த இயல்புகளை நிச்சயம் செய்வதும் அவற்றின் கட்டமைப்பு பற்றிய இன்றியமையாத தகவல்களைப் பெறுவதும் இயலும்.

புலனுணர்ச்சிகள் புறநிலை எதார்த்தத்தின் அகநிலைத் தோற்றங்களாகவும் பொருள்களது இயல்புகளின் உணர்வுத் தோற்றங்களாகவும் இருப்பதால்தான் அவை நமது ஞானத்தின் ஊற்றுக்கண்களாக விளங்குகின்றன. அதே சமயம் புலனுணர்ச்சி

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 320.

கள் தங்கள் உள்ளடக்கத்தில் புறநிலையானவை, ஏனெனில் பொருள்களின் புறநிலை இயல்புகள் அவற்றில் பிரதிபலிக்கின்றன. உதாரணமாக, இனிப்பு, நிறம், வடிவம் ஆகியவையும் பொருள்களின் இவைபோன்ற பிற இயல்புகளும் பண்புகளும் ஒவ்வொரு மனிதனுலும் தனித்தனியாக, அகநிலையில் புலன்களால் அறியப்படுகின்றன. ஆனுல் இந்த அகநிலைத் தோற்றம் பொருள்களின் புறநிலை இயற்கைக்குப் பொருந்துகிறது. உதாரணமாக, சுவைப் புலனுணர்ச்சி என்ற வகையில் இனிப்பு சர்க்கரை அல்லது பிற இனிப்புப் பொருளின் புறநிலை இயல்பைப் பிரதிபலிக்கிறது.

புறநிலையாக நிலவும் எதார்த்தத்தைப் புலனுணர்ச்சிகள் சரியாகப் பிரதிபலிக்கின்றன. வெளிப் பிரபஞ்சத்தின் நிகழ்ச்சிகள் பற்றி அவை நமக்குச் சரியாகத் தகவல்கள் தருகின்றன. எல்லா விதப் புலனுணர்ச்சிகளும் மனிதனுடைய வாழ்க்கையில் ஒரே மாதிரி முக்கியத்துவம் உள்ளவை அல்ல என்பது உண்மையே. அவற்றில் சில மனிதனது நடைமுறையான, அறிதல் செயலுக்கு அதிக மதிப்பு உள்ள தகவல்களைத் தருகின்றன. மற்றவை மதிப்பு குறைந்த தகவல்களைக் கொடுக்கின்றன. எல்லாவற்றிலும் அதிகமான தகவல்களை மனிதனுக்கு அளிப்பது பார்வை. அதை அடுத்து வருகின்றன ஒலி, ஸ்பரிச, சுவை, மோப்ப உணர்ச்சிகள்.

புலன்களின் வளர்ச்சியில் உள்ள வெவ்வேறு தரங்கள் மார்க்ஸியத்தின் பின்வரும் அடிப்படைக் கருத்தை வலியுறுத்துகின்றன: மனிதனுடைய உணர்ச்சிகள் இயற்கையின், முதன்மையாக சமூகப் பிராணி என்ற வகையில் மனிதனின், விதிமுறைக்கு உட்பட்ட வளர்ச்சியின் விளைவே. இயற்கை, சமூகச் சூழ்நிலையும் நடைமுறைச் செயல்களும் மனிதனுடைய உணர்ச்சிகளை உருவாக்குகின்றன, அவற்றைக் கூராக்குகின்றன. உதாரணமாக, தேர்ச்சியுள்ள உருக்காலைத் தொழிலாளி உருகிய உலோகத்தின் வண்ணச் சாயலைக் கொண்டு அதன் வெப்ப நிலையைத் தீர்மானிக்க வல்லவனுக இருக்கிறுன். நோயாளியின் உடல் ஒலிகளைக் கேட்டு மருத்துவன் தனது புலன்களால் உணரும் அந்த ஒலிகளினுலோ நாடித் துடிப்பாலோ நோயாளியின் உடல் நிலையை நிச்சயித்துவிடுகிறுன். மருத்துவன் செய்யும் முடிவுகள் புலனுணர்ச்சிகளை மட்டுமே ஆதாரமாகக்கொண்டவை என்று இதற்கு அர்த்தம் அல்ல. மாறுக, அவனது முடிவுகள்

அவன் உணர்ந்தவற்றின் ஆழ்ந்த பகுத்தாய்வினுடைய விளைவு ஆகும். பழக்கமும் அனுபவமும் ஞானமும் இங்கே மிகப் பெரிய பங்கு ஆற்றுகின்றன.

புலனுணர்ச்சிகள் வெளிப் பிரபஞ்சம் பற்றிய நம்பகமான அறிவின் ஊற்றுக்கண்களாக இருக்க முடியும், அதன் புறநிலை யான, சரியான பிரதிபலிப்பைத் தர முடியும் என்பதைக் கருத்து முதல்வாதிகள் மறுக்கிறார்கள். புலனுணர்ச்சிகளால் பிரதிபலிக் கப்படுபவை பொருள்களின் புறநிலை இயல்புகள் அல்ல, பொருள் களின் பாதிப்பால் புலன்களில் நிகழும் மாறுதல்கள் மட்டுமே என்று பல பூர்ஷ்வாத் தத்துவவாதிகளும் இயற்கை விஞ்ஞானி களும் கருதுகிறார்கள். இதன்படி பார்த்தால், புலனுணர்ச்சி களின் உள்ளடக்கம் வெளித் தூண்டுவிப்பிகளின், அதாவது வெளிப் பிரபஞ்சத்தைச் சேர்ந்த பொருள்கள், நிகழ்ச்சிகளின் இயல்புகளைச் சார்ந்ததே அல்ல என்றும் புலன்களினுடைய இயல்புகளாலும் பண்புகளாலும் மட்டுமே முழுமையாகத் தீர்மானிக்கப்படுகிறது என்றும் அர்த்தம் ஆகிறது.

இந்த நோக்கின்படி புலனுணர்ச்சிகள் வெளிப் பிரபஞ்சத் தின் பொருள்களுடைய தோற்றங்கள் அல்ல, அறிகுறிகள் அடையாளங்கள், குறி எழுத்துக்கள் என்று ஆகிறது. இந்த நிலையை மேற்கொண்டால் நமது புலனுணர்ச்சிகள் நிச்சய மாக எதைப் பிரதிபலிக்கின்றன, அவற்றுக்குப் பொருந்துபவை எவை என்று சொல்ல முடியாது. எனவே பொருள்கள் எவ்வாறு அறியப்பட முடியும் என்றும் விளக்க முடியாது. இதன் அர்த்தம் என்னவென்றால், பொருள்கள் எதார்த்தத்தில் யாவை என நம்மால் அறிய முடியாது என்பதே. ஏனெனில் அடையாளம் எந்தப் பொருளையும், எந்த நிகழ்ச்சியையும் குறிக்கக் கூடும். ஆனால் தன்னால் குறிக்கப்படுவதை அது ஒத்திருக்க வேண்டும் என்பது கட்டாயம் இல்லை. அறிதலுக்கு உரிய கருவிகள் என்ற வகையில் புலன்கள்மீது நம்பிக்கை இன்மை இவ்வாறு அறியொணாமைக் கொள்கைக்கு இட்டுச் செல்கிறது.

''குறி எழுத்துச் சித்தாந்தத்தின்'' மிகச் சிறந்த மறுப்பு நடைமுறையே ஆகும். புலனுணர்ச்சிகள் பொருள்களின் புற நிலை இயல்புகளைப் பிரதிபலிக்காவிட்டால், இயற்கையையும் சமூகத்தையும் அறிவதில் மனிதர்களின் வெற்றிகளும், அவர் களுடைய ஒருமுனைப்பாடுள்ள உழைப்புச் செயல்களும் சாத் தியம் ஆகியிருக்கமாட்டா.

உணர்வுவகைப்பட்ட அறிதலின் அதிகச் சிக்கலான வடிவம் புலனறிவு ஆகும். புலன்கள் மீது நேரான பாதிப்பு விளைக்கும் பொருளை முழுமையாகப் பிரதிபலிக்கிறது இது. வழக்கமாக நமது புலனுணர்ச்சிகள் ஒன்றிலிருந்து ஒன்று தனிப்படுத்தப் பட்ட விதத்தில் அல்ல, குறிப்பிட்ட சேர்க்கையில் நமக்கு அளிக் கப்பட்டுள்ளன. ஒரு பொருள் வெவ்வேறு புலன்கள்மீது தனது வெவ்வேறு இயல்புகளால் பாதிப்பு விளைக்கிறது. இந்த இயல்பு களோ அப்பொருளில் பிரிக்கமுடியாத ஒருமையில் நிலவு கின்றன. தனித்தனிப் புலனுணர்ச்சிகள் பொருளின் முழுமை யான தோற்றமாகச் சேர்ந்து ஒன்றுகும் செயல்முறையில் தான் புலனறிவு உதிக்கிறது. ஆகவே, புறநிலையாக நிலவும் பொருள்கள் வெவ்வேறு இயல்புகள், பண்புகளின் திட்டவட் டமான ஒருமையாக, முழுமையாக விளங்குவதே புலனறிவுத் திறனுக்கு, அதாவது ஒரு பொருளை ஒன்றுன முழுமையாகப் பிரதிபலிக்கும் திறனுக்குக் காரணம் ஆகிறது.

மனிதனுடைய உணர்வுவகைப்பட்ட அறிதல் புலனறிவுத் திறனுக உருவாகியுள்ளது. நாம் புலன்களால் அறிவது ஏதேனும் ஸ்தூலமான, திட்டவட்டமான வஸ்துவே (மேஜை, நாற்காலி எலுமிச்சம்பழம் முதலியன) தவிர தனித்தனிப் புலனுணர்ச்சி களின் (நிறம், வடிவம், மணம் முதலியன) கோவை அல்ல. எனவே புலனறிவு புலனுணர்ச்சிகளது அஸ்திவாரத்தின் மீது மட்டுமே அல்ல, அவற்றோடு கூடவும் தோன்றுகிறது.

புலனுணர்ச்சிகள் போலவே புலனறிவும் பொருள்களின் கருத்தியலான தோற்றம் ஆகும். அதைத் தொடவோ பார்க்க வோ முடியாது. பெரும்பாலும் தனியான பொருள்களை அவற் றின் வெளி அம்சங்களுடன் அவை பிரதிபலிக்கின்றன. ஆயினும் குறித்த நிலைமைகளில் இம்மாதிரிப் பிரதிபலிப்பு முற்றிலும் துல்லியமானதாக இல்லாதிருக்கலாம். புலன்களின் நிலைமை, புலன்களால் அறியப்படும் பொருளின் நிலை முதலியவற்றை இது பொறுத்திருக்கிறது. உதாரணமாக, நீர் நிறைந்த கண் ணுடித் தம்ளரில் இருக்கும் கரண்டி கோணியது போலக் காணப் படுகிறது. சூரியன் ஒப்பு நோக்கில் சிறியதாகத் தென்படுகிறது. இவ்வாறே பிறவும். ஆனல் இந்தச் சூழ்நிலை அறிதலுக்குக் கடக்க முடியாத தடையாக இருப்பதில்லை. மனித அறிதல் புலனு ணர்ச்சியையும் புலனறிவையும் விட அதிகச் செவ்வைப்பாடுள்ள வேறு வடிவங்களிலும் நடைபெறுகிறது. புலனுணர்ச்சி அல்லது

புலனறிவு வாயிலாகப் பெறப்படும் ஞானம் சிந்தனையால் துல்லியமாக்கப்படுகிறது, திருத்தப்படுகிறது. சிந்தனையின் முடிவுகள் நடைமுறையால் சரி பார்க்கப்படுகின்றன. இவ்வாறு அறிதலின் தரங்கள், வடிவங்கள் ஆகியவையும் நடைமுறையும் ஒன்றன்மீது ஒன்று செயல்படுவதன் விளைவாக, வெளிக் காட்சிக்கும் வெளித் தோற்றத்துக்கும் பின்னே உள்ள விஷயங் களின் புறநிலையான நிலைமையைத் தெளிந்து அறிவது மனி தனுக்கு இயல்கிறது. வெவ்வேறு பொருள்கள், நிகழ்ச்சிகளின் மொத்தமான முக்கிய இயல்புகளை அதிகத் துல்லியமாகப் பிரதி பலிப்பது இதனுல் அவனுக்குச் சாத்தியம் ஆகிறது.

மனிதன் முன்பு எப்போதோ புலன்களால் அறிந்ததைத் தன் நினைவில் காப்பாற்றி வைத்திருக்கவும், பொருள்கள் இல்லாத போது, புலன்களால் அறியப்பட்ட அவற்றின் தோற்றங்களைத் திரும்ப உண்டாக்கவும் மூளை வல்லது. குறித்த சந்தர்ப்பத்தில் புலன்களைப் பாதிக்காத ஒரு பொருளின் இவ்வாறு திரும்ப உண்டாக்கப்பட்ட தோற்றம் எண்ணம் எனப்படுகிறது.

எண்ணங்கள் பொதுமைப்படுத்துவதைச் சாத்தியம் ஆக்குகின்றன. ஏனெனில் நினைவில் சேமித்து வைக்கப்பட்டுள்ள பொருள்களின் தோற்றங்களைக்கொண்டு ஒப்பீடு, சீர்தூக்கல், பாகுபடுத்தல் ஆகிய செயல்முறைகளை நிகழ்த்துவது இயல் கிறது. இவற்ருல் பொருள்களின் அடையாள மாதிரியான, தன்மை விளக்கம் உள்ள அம்சங்கள் வேறுபிரித்து அறியப் படுகின்றன. ஆகவே, புலனறிவுகள் பொருள்களைஅவற்றின் எல்லா ஸ்தூலமான, அவற்றுக்கே உரிய இயல்புகளிலும் விவரங் களிலும் பிரதிபலிக்கின்றன என்ருல் எண்ணங்கள் அவற்றின் பொது அம்சங்களைத் தனியாகத் துலக்கிக் காட்டுகின்றன. பொதுவானதைத் தனிப் பிரித்துத் தெரிந்துகொள்வது பொருள் களின் தன்மையை அறிய உதவுகிறது. ஏதேனும் பொருள் பற்றிய எண்ணம் நமக்கு இருக்கும்போது அதன் சிறப்புத் தன்மைகளையும் நோக்கத்தையும் நாம் அதிக விரைவாகப் புரிந்து கொள்கிருேம்.

புலனுணர்ச்சியும் புலனறிவும் எண்ணமும், அதாவது உணர்வு வகைப்பட்ட அறிதலின் வடிவங்கள், எதார்த்தத்தின் பிம்பங் களாக விளங்குகின்றன. ''கருத்துமுதல்வாதத் தத்துவத்தின் ஆதரவாளனிலிருந்து பொருள்முதல்வாதிக்குள்ள அடிப்படை யான வேறுபாடு என்னவென்ருல், புலனுணர்ச்சியும் புலனறிவும்

எண்ணமும், மொத்தத்தில் மனிதனது உணர்வும் புறநிலை எதார்த்தத்தின் பிம்பமாகப் புரிந்துகொள்ளப்படுவதே. நமது உணர்வினால் பிரதிபலிக்கப்படும் இந்தப் புறநிலை எதார்த்தத்தின் இயக்கமே பிரபஞ்சம்''[1] என்று எழுதினார் வி. இ. லெனின். அடையாளம் போலன்றி, பிம்பம் தான் பிரதிபலிக்கும் பொருளை ஒத்திருக்கிறது. தோற்றங்கள் பொருள்களின் புறநிலை இயற்கைக்குப் பொருந்துவது நடைமுறையால் சரிபார்க்கப் படுகிறது.

மனிதன் உணர்வுவகைப்பட்ட அறிதலின் கட்டத்திலேயே நின்றுவிடுவதில்லை. அதன் எல்லைகளுக்கு அப்பால் செல்லவும், பொருள்களின் சர்வப்பொதுவான, இன்றியமையாத, முக்கிய இயல்புகளையும் உறவுகளையும் தெரிந்துகொள்ளவும், நேரடியான உணர்வு வகைப்பட்ட தியானத்துக்கு எட்டாத அவற்றின் விதிமுறைக்கு உட்படட தொடர்புகளை அறியவும் மனிதனால் முடியும். சிந்தனைச் செயலின் உதவியால் பகுத்தறிவு வகைப்பட்ட அல்லது தர்க்கரீதியான கட்டத்தில் இந்த அறிவு அடையப்படுகிறது. தற்போது எதைக் காண முடியாதோ அல்லது எதை நேரடியாக அவதானிப்பது பொதுவாகவே இயலாதோ அதைஅப்பிரத்தியட்சமானவழியில் நிலைநாட்ட வல்லது சிந்தனை. எடுத்துக்காட்டாக, நிலவுலகில் உயிர் தோன்றிய நிலைமைகளையோ, ஒளியின் இயக்க வேகத்தையோ நம்மால் உணர்வு மூலம் தெரிந்துகொள்ள முடியாது. ஆனால் இத்தகைய நிகழ்ச்சிகளையும் செயல்முறைகளையும்கூடச் சிந்தனையால் மனிதன் கண்டறிகிறான்.

உணர்வுவகைப்பட்ட அறிதலில் இருந்து பகுத்தறிவுவகைப்பட்ட, சித்தாந்த ரீதியான அறிதலுக்குப் பரிணமிப்பு பாய்ச்சல் ஆகும். அறிதலின் கீழ்க் கட்டத்துக்கு மேல்கட்டத்தின் இயக்க இயல் பாங்கான மறுப்பு ஆகும் இது. எனவே, ஒரே செயல் முறையின் இரு கட்டங்களாக விளங்கும் உணர்வுவகைப்பட்டதும் பகுத்தறிவுவகைப்பட்டதும் ஆன அறிதல்கள் பண்பில் வெவ்வேறானவை என்பதோடு தமக்குள் நெருக்கமாக இணைந்தவை.

பகுப்புமுறைச் சிந்தனை அறிதலின் பண்பில் புதிய கட்டம், அதன் உச்ச கட்டம் ஆகும். எனவே பொருள்களின் வெளி இயல்புகளையும் உறவுகளையும் மட்டுமின்றி அவற்றின் ஆழ்ந்த,

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கங்கள் 282-283.

உள்ளார்ந்த சர்வப்பொதுவான தொடர்புகளையும் இயற்கை, சமூகம், அறிதல் ஆகியவற்றின் மாறுதல்களுக்கும் வளர்ச்சிக்கும் உரிய விதிகளையும் வெளிப்படுத்துவதையும், நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சத்தின் மிக மிக அந்தரங்கமான மர்மங்களை உட்புகுந்து காண்பதையும் அது சாத்தியம் ஆக்குகிறது.

சமூகத்துக்கு வெளியேயும் மொழிக்கு வெளியேயும் சிந்தனை நிலவுவது இல்லை. சமூக நடைமுறையின் வரலாற்று ரீதியான வளர்ச்சியின் விளைவாகும் அது. இந்த வளர்ச்சியிலிருந்தே அது உண்டாகிறது. அறிதலின் உணர்வுவகைப்பட்ட வடிவங்களுக்கு மாறாக, சிந்தனை எதார்த்தத்தின் பொதுவான, அப்பிரத்தியட்சமான பிரதிபலிப்பாக விளங்குகிறது. சிந்தனைக்கும் வெளிப் பிரபஞ்சத்துக்கும் தொடர்பு ஏற்படுத்தும் கணுவாகச் செயல்படுபவை புலன்களால் பெறப்பட்ட விவரங்களே. சிந்தனையின் அப்பிரத்தியட்சத் தன்மை இதிலேயே அடங்கியுள்ளது. அறிதலின் ஒரே ஊற்றுக்கண் புலனுணர்ச்சியும் புலனறிவும் மட்டுமே. ஆதலால் சிந்தனை உணர்வுவகைப்பட்ட அறிதலின் வாயிலாகவே வெளிப் பிரபஞ்சத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறது. புலன்களே சிந்தனைக்கு இன்றியமையாத விஷயங்களைத் திரட்டித் தருகின்றன. புலன்களின் வாயிலாகப் பெறப்படும் இந்த விவரங்களை ஆய்ந்து சீர்படுத்துவதே சிந்தனையின் செய்கை ஆகும். எனவே, உணர்வுவகைப்பட்ட விவரங்களின் அடிப்படையிலேயே சிந்தனை சாத்தியம் ஆகும்.

பொருள்கள், செயல்முறைகளின் பொதுவான, முக்கியமான இயல்புகளைத் தனிப் பிரித்து அறிவது சிந்தனைச் செயலின் நோக்கம். யதார்த்தத்தின் பொதுமைப்படுத்தப்பட்ட அறிதல் என்ற வகையில் சிந்தனைச் செயல் இதிலேயே வெளிப்படுகிறது. பொருள்களுக்குப் புறநிலையாக உரிய பொது இயல்புகளைச் சிந்தனை பிரதிபலிக்கிறது. அந்தக் காரணத்தாலேயே இவ்வாறு தனிப்பிரித்து அறிவது சாத்தியம் ஆகிறது. ''...சிந்தனை இலக்குத் தவறுவிட்டால், உணர்வின் அம்சங்களை ஓரளவு ஒருமையில் ஒன்றுபடுத்த அதனால் எப்போது முடியும் என்றால் உணர்வின் அம்சங்களிலோ அவற்றின் எதார்த்த மூல முன்மாதிரிகளிலோ இந்த ஒருமை இதற்கு முன்பே நிலவியிருந்தால் மட்டுமே''[1] என்று குறித்தார் பிரெடெரிக் எங்கெல்ஸ்.

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''டூரிங்குக்கு மறுப்பு'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 41.

மொழி இல்லாவிட்டால் பொதுமைப்படுத்தும் செயல்முறை சாத்தியம் ஆகியிராது. சிந்தனையும் மொழியும் பிரிக்க முடியாத படி ஒன்றோடு ஒன்று இணைந்துள்ளன. பொருள்களிலும் நிகழ்ச்சிகளிலும் உள்ள பொது அம்சங்களைத் தனிப்பிரித்து, இந்தப் பொது அம்சங்களை நாம் மொழியிலேயே, சொற்களி லேயே வெளியிடுகிறோம். மொழி ஆற்றும் பொதுமைப்படுத் தும் பங்கு காரணமாகவே தனது எண்ணங்களை மற்ற மனிதர் களுக்குத் தெரிவிப்பதும் அவர்களுடைய எண்ணங்களைத் தெரிந்துகொள்வதும், அறிவைத் திரட்டுவதும் மனிதனுக்கு இயல்கிறது. ''உணர்ச்சிகள் எதார்த்தத்தைக் காட்டுகின்றன; எண்ணமும் சொல்லும் பொதுவானதைக் காட்டுகின்றன.'' ''எந்தச் சொல்லும் (பேச்சும்) பொதுமைப்படுத்துகிறது''[1] என்று எழுதினர் வி. இ. லெனின்.

சித்தாந்த நடவடிக்கையின் இன்றியமையாமை நடைமுறை யின் தேவை காரணமாகவே உண்டாயிற்று. கார்ல் மார்க்ஸ் வலியுறுத்தியது போல, மனிதர்கள் தங்கள் நடவடிக்கையைத் தொடங்குவது பொருள்கள்பால் சித்தாந்த உறவிலிருந்து அல்ல, ஊக்கமுள்ள செயல்களிலிருந்து, தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்கையில் பொருள்கள்பால் ஏற்படும் நடை முறை உறவிலிருந்துதான்.[2] நடைமுறை நடவடிக்கை மனிதர் களுக்கு முன் வைக்கும் கடமைகளை நிறைவேற்றும் பொருட்டு மனிதன் பொருள்களின் நேரடியாக அறிய முடியாத, தேவை யான இயல்புகளையும் பண்புகளையும் சித்தாந்த ரீதியில் தனிப் பிரித்து அறிந்து மதிப்பிடுகிறான். சித்தாந்த ரீதியான ஒரு வகைக் கடமைகளின் நிறைவேற்றம் வேறுவகைக் கடமைகளை முன் வைக்கிறது, அவற்றின் நிறைவேற்றம் பின்னும் ஒரு வகைக் கடமைகளை முன் வைக்கிறது. இவ்வாறு இந்த நிகழ்முறை மேலும் மேலும் தொடர்கிறது. இவ்வாறு, நடைமுறை போல வே, சிந்தனையும் செயலூக்கமும் ஒருமுனைப்பாடும் கொண்ட நடவடிக்கையாக விளங்குகிறது.

உணர்வுவகைப்பட்ட அறிதல் போன்றே சிந்தனையும் குறித்த

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 246.

[2] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். நூல் திரட்டு, தொகுதி 19, பக்கம் 377 பார்க்க.

வடிவங்களில் நிகழ்கிறது. இந்த வடிவங்களாவன கருது கோள்களும் அபிப்பிராயங்களும் தீர்மானங்களும்.

கருதுகோள் என்பது, பொருள்களுடையவும் நிகழ்ச்சிகளுடையவும் பொதுவான, முக்கியமான அடையாளங்களைப் பிரதிபலிக்கும் சிந்தனை வடிவம் ஆகும். இத்தகைய பொது அடையாளங்களே கருதுகோளின் உள்ளடக்கமாக விளங்குகின்றன. மொழியில் கருதுகோள்கள் தனிச் சொல்லாலோ சொற்களின் தொடராலோ (உதாரணமாக ''அமிலம்'', ''தாவரம்'', ''உற்பத்தி'', ''வர்க்கம்'', ''அழகு'', ''சாதாரணப் பொருள்'', ''ஒருபோகான நேர் கோடுகள்'' முதலியன) வெளியிடப்படுகின்றன.

புலனறிவுகள், எண்ணங்கள் ஆகியவற்றின் அடிப்படையிலேயே கருதுகோள்கள் தோன்றுகின்றன. ஆனுல் கருதுகோளின் உள்ளடக்கத்தைத் துலக்கமான தோற்றத்தின் வடிவில் கற்பனை செய்வது இயலாது. உதாரணமாக, ஒரு குறித்த செடியைக் கற்பனை செய்துகொள்ள முடியும். ஆனுல் பொதுவாகத் தாவரத்தைக் கற்பனை செய்துகொள்வது இயலாது. ஸ்தூலமான அழகிய மனிதனைக் கற்பனை செய்துகொள்ள முடியும். ஆனுல் அழகைத் துலக்கமான தோற்றத்தின் வடிவில் கற்பனையால் காண்பது அசாத்தியம். இவ்வாறே விதி அல்லது காரணம் போன்ற தொடர்புகளைப் பற்றித் துலக்கமான கற்பனை செய்துகொள்ள முடியாது. ஆனுல் அவற்றைப் புரிந்துகொள்ள, அதாவது அவைப்பற்றிய கருதுகோள்களை உருவாக்க முடியும்.

எந்த விஞ்ஞானத்துக்கும் உரிய கருதுகோள்களின் முழுத் தொகுப்பு உண்டு. அதனுல் கண்டுபிடிக்கப்படும் விதிகள் இவற்றின் உதவியால்தான் வெளியிடப்படுகின்றன, அதன் அடிப்படைக் கோட்பாடுகள் சூத்திரப்படுத்தப்படுகின்றன. சடப்பொருள், இயக்கம், உணர்வு, காரணம் உடைமை முதலிய அடிப்படையான தத்துவக் கோட்பாடுகளை நாம் ஏற்கனவே அறிவோம். மற்ற எல்லா விஞ்ஞானங்களுக்கும் அவற்றுக்கே உரிய கருதுகோள்கள் உண்டு. உதாரணமாக, அணு, பொருண்மை, சக்தி ஆகியவையும் இன்னும் பற்பல கருதுகோள்களும் பௌதிகத்தில் நிலவுகின்றன. மதிப்பு, பண்டம் முதலிய கருதுகோள்கள் அரசியல் பொருளாதாரத்தில் உள்ளன. விஞ்ஞானக் கருதுகோள்கள் உருவாவது நடைமுறைக் கடமைகளுடன்,

மனிதனுடைய செயலூக்கமுள்ள, ஒருமுனைப்பாடு கொண்ட நடவடிக்கைகளுடன் தொடர்புள்ளது.

கருதுகோள் என்பது புலனறிவு, எண்ணங்கள் ஆகியவற்றின் வெறும் மொத்தம் மட்டும் அல்ல. சிக்கலான, நீடித்த அறிதல் செயல்முறையின் விளைவு அது. ஏராளமான தனி நிகழ்ச்சிகள், உண்மைகள் ஆகியவை பற்றிய ஆராய்ச்சி இந்த முறையில் அடங்கியது. விஞ்ஞான ஆராய்ச்சிக்கு உரிய மிக வெவ்வேறு வழிகளான பாகுபாடு, சேர்க்கை, அவதானிக்கை, சோதனை, அனுமானம் முதலியன இதில் கையாளப்படுகின்றன. இதன் பயனாக, தனித்தனி நிகழ்ச்சிகளின் பின் உள்ள அவற்றின் பொதுவான, முக்கியமான, இன்றியமையாத புறநிலைத் தொடர்புகள் கண்டுபிடிக்கப்படுகின்றன.

இவ்வாறு, விஞ்ஞானக் கருதுகோள்களில் எதார்த்தத்தின் பொதுமைப்படுத்தப்பட்ட பிரதிபலிப்பு தரப்படுகிறது. வரலாற்றுக் காலப்பகுதி முழுவதிலும் விஞ்ஞானத்தாலும் நடைமுறையாலும் திரட்டப்பட்ட ஞானமும் அனுபவமும் செறிந்த வடிவில் அவற்றில் சேமிக்கப்பட்டுள்ளன. எனவே அவை அறிதலின் வளர்ச்சி குறித்த ஒருவகைத் தொகுப்பாகவும் புறநிலைப் பிரபஞ்சம் பற்றிய அறிதலின் படிகளாகவும் எந்த விஞ்ஞானச் சித்தாந்தத்திலும் முக்கியப் பகுதிகளாகவும் விளங்குகின்றன. நிகழும் மாறுதல்களின் காரணத்தையும் அவற்றின் இயற்கையையும் சிறப்புக்களையும் விளக்குவதும், அவற்றை இயக்கி நடத்தும் விதிகளை வெளிப்படுத்துவதும் கருதுகோள்களின் உதவியால் விஞ்ஞானத்துக்கு இயல்கிறது. எதார்த்தத்தை மேற்கொண்டு அறிவதற்கு உரிய சாதனங்களாகப் பயன்படும் கருதுகோள்களது அறிதலுக்கான மதிப்பு இதில்தான் அடங்கியுள்ளது. எடுத்துக்காட்டாக, கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் சமூக உறவுகளின் முழு மொத்தத்திலுமிருந்து உற்பத்தி உறவுகளை அடிப்படையானவை, முக்கியமானவை, நிர்ணயகரமானவை என்ற வகையில் தனிப்பிரித்து, எதார்த்தமான சமூக முரண்பாடுகளையும், சமரசப்படுத்த முடியாத அமைப்புக்களில் வர்க்கப் போராட்டத்தின் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைக்கு உட்பட்ட தன்மையையும், சமூக வாழ்வின் பிற முக்கியச் செயல்முறைகளையும் ஆராய்வதற்கான வழியைக் காட்டினார்கள்.

சிந்தனைச் செயல்முறையில் கருதுகோள்கள் அபிப்பிராயத்

தின் அம்சங்கள் என்ற வகையில் வழக்கமாகச் செயல்படு கின்றன. அபிப்பிராயம் என்பது சிந்தனையின் ஒரு வடிவம். ஒரு அடையாளம் ஒரு குறித்த பொருளை அல்லது பொருள்களின் தொகுதியைச் சேர்ந்தது என்பதும், பொருள்களுக்கு இடை யில் உள்ள உறவுகளும், எவையேனும் பொருள்களின் நிலவுகை யும் உறுதிப்படுத்தவோ மறுக்கவோ படுகின்றன. மொழியில் அபிப்பிராயங்கள் வாக்கியங்களால் வெளியிடப்படுகின்றன.

எடுத்துக்காட்டாக, ''ஏகாதிபத்தியம் அழுகிக்கொண்டும் மடிந்துகொண்டும் இருக்கும் முதலாளித்துவமே ஆகும்'' என்ற வாக்கியத்தில் வெளியிடப்பட்டுள்ள கருத்து, ஒரு அபிப்பிரா யம் ஆகும். அழுகிக்கொண்டும் மடிந்துகொண்டும் இருக்கும் முதலாளித்துவமாக இருப்பதற்கான அடையாளத்தை ஏகாதி பத்தியம் கொண்டிருக்கிறது என்பது இதில் உறுதிப்படுத்தப் படுகிறது. ''நீரில் வசிக்கும் பாலூட்டிகள் கிடையா'' என்ற வாக்கியம், குறித்த வகையைச் சேர்ந்த பாலூட்டிகள் நிலவுவதை மறுக்கும் அபிப்பிராயத்தை வெளியிடுகிறது. மேற்கோள் காட்டப்பட்டுள்ள அபிப்பிராயங்கள் எதார்த்தத் தை வெவ்வேறு விதமாக அணுகுகின்றன. முதல் அபிப்பிராயம் எதார்த்தத்துக்குப் பொருந்துகிறது, இரண்டாவது பொருந்த வில்லை. முதலாவது உண்மையானது, இரண்டாவது பொய் யானது. அபிப்பிராயத்தின் மெய்மை அல்லது பொய்மை முடி வில் நடைமுறையிலேயே சரிபார்க்கப்படுகிறது.

ஒரு குறித்த அபிப்பிராயத்தை மனிதன் இரு வழிகளில், அதாவது, நேரடியான அவதானிக்கை மூலமாகவோ, பிற அபிப்பிராயங்களை ஆதாரமாகக் கொண்டு அப்பிரத்தியட்ச மான வழியிலோ பெற முடியும். எடுத்துக்காட்டாக, ''மூர்மன்ஸ்க் கில் வெண் இரவுகள் உண்டு'' என்ற அபிப்பிராயத்தை, கோடைகாலத்தில் மூர்மன்ஸ்க் நகருக்குப் போய், அங்கே மெய் யாகவே இரவுகள் வெளிச்சமாக இருப்பதை நேரில் கண்டு அறிந்து நாம் வெளியிடலாம். மூர்மன்ஸ்க் துருவ வட்டத்துக்கு அப்பால் அமைந்துள்ளது என்பதையும், துருவ வட்டத்துக்கு அப்பால் உள்ள எல்லா நகரங்களிலும் வெண் இரவுகள் ஏற்படுகின்றன என்பதையும் அறிந்து, அதன் மூலமாகவும் நாம் இந்த அபிராயத்துக்கு வர முடியும்.

சிந்தனையின் எந்த வடிவத்தின் மூலமாக ஒரு அல்லது அனேக அபிப்பிராயங்களிலிருந்து ஒரு புதிய அபிப்பிராயம் பெறப்

படுகிறதோ, அந்த வடிவம் தீர்மானம் அல்லது முடிவு எனப் படும். எவற்றின் ஆதாரத்தின் பேரில் குறித்த முடிவு செய் யப்படுகிறதோ அந்த அபிப்பிராயங்கள் முற்கூற்றுக்கள் எனப் படுகின்றன. புதிய அபிப்பிராயம் தீர்மானம் அல்லது விளைவு எனப்படுகிறது. நேர்முக அவதானிக்கைக்கு எட்டாதவையும் ஆனால் திட்டவட்டமான, நிலைநாட்டப்பட்டுள்ள விதிகளுக்கு உட்படுபவையும் ஆகிய நிகழ்ச்சிகள் பற்றி அறிவு பெறுவதற்கு அறிதலில் தீர்மானங்கள் விரிவாகக் கையாளப்படுகின்றன. தீர்மானங்களின் உதவியால் ஒரு அல்லது மற்றொரு வகை அடிப்படைக் கருத்துக்களின் மெய்மை அல்லது பொய்மை பிரமாணப்படுத்தப்படுகிறது (அதாவது, அவற்றுக்கு உரிய சான்றோ மறுப்போ தரப்படுகிறது). நிலைநாட்டப்பட்ட உண்மை களுக்கும் விதிகளுக்கும் விளக்கம் கூறப்படுகிறது. இயற்கை, சமூகம், இவற்றின் அறியப்பட்டுள்ள விதிமுறைகளின் ஆதா ரத்தின்பேரில் விஞ்ஞான ரீதியான முன்னறிவிப்புகள் செய்யப் படுகின்றன.

அறிதலின் உணர்வுவகைப்பட்டதும் பகுத்தறிவுவகைப்பட் டதுமான கட்டங்களை ஆராய்கையில் அவை ஒன்றோடொன்று பிரிக்க முடியாதபடி இணைந்தவை என்பதை இன்னொரு தடவை வலியுறுத்துவது அவசியம் ஆகும். பொருள் அல்லது நிகழ்ச்சி யின் மேற்பரப்பில் உள்ள தனித்தனி அம்சங்களையும் தொடர்பு களையும் பற்றிய நேரடியான புலனறிவிலிருந்தே விஞ்ஞான ரீதி யான அறிதல் தொடங்குகிறது. பின்னர் ஆய்வுகளும் சோதனை களும் செய்யப்படுகின்றன. இவை இந்த அம்சங்களையும் தொ டர்புகளையும் ஒப்பிடுவதற்கும் சீர்தூக்கிப் பார்ப்பதற்கும் பொது வானதைத் தனிப் பிரித்து அறிவதற்கும் வேண்டிய விஷயா தாரங்களைத் தருகின்றன. பின்னர் தொடர்கிறது பகுப்பு, அதா வது, பொருள்கள், நிகழ்ச்சிகளின் ஒரு வகை இயல்புகள், உற வுகளைப் பிரித்தெடுத்தலும், பொதுமைப்படுத்தலும், அதா வது அவற்றின் பிரதானமான, நிர்ணயகரமான, பிற இயல்பு களையும் உறவுகளையும் தனிப்பிரித்து அறிதலும். கவனமான தேர்வின் அடிப்படையில், மிக ஏராளமான விஷயாதாரங்களைப் பொறுக்கி எடுத்து ஆராய்வதன் மூலம் நிகழ்த்தப்படுகிறது பாகுபாடு.

இயற்கை, சமூகம், இவற்றின் பொருள்களையும் செயல் முறைகளையும் பற்றிய விஞ்ஞான ரீதியான அறிதல், இந்தப்

பொருள்கள், செயல்முறைகளது வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளை நிர்ணயிக்கும் அவற்றின் அதிக ஆழத்திலுள்ள உள்தொடர்புகளையும் அவற்றின் பரஸ்பரப் பாதிப்பையும், பரஸ்பரப் பரிணமிப்பையும் வெளிப்படுத்தும். மேலும் மேலும் அதிக ஆழத்தில் உள்ள தொடர்புகள் பற்றிய அறிதலின் அளவுக்கு ஏற்ப, இந்தத் தொடர்புகள், உறவுகள், அல்லது ஆராயப்படும் வஸ்துவேகூட, உணர்வுவகைப்பட்ட துலக்கத்தை இழந்து விடுவதாகத் தோன்றலாம். ஆனால் இந்த விஷயம் அறிதலுக்குத் தடையாக இருப்பதில்லை. மனிதன் நேர்முகமாக அவதானிக்காததைப் புரிந்துகொள்ள விஞ்ஞான ரீதியான பகுப்புமுறையின் சக்தி உதவுகிறது.

சித்தாந்த ரீதியான அறிதல் சிக்கலுள்ள, முரண்பாடுகள் கொண்ட செயல்முறை ஆதலால் மனித சிந்தனை எதார்த்தத்திலிருந்து அப்பால் அகன்று, விலகிவிடுவதற்கான வாய்ப்பு அதனுள் மறைந்திருக்கிறது. ''தனித்த பொருளின்பால் மனித) மூளையின் அணுகுமுறை, அதிலிருந்து வார்ப்படம் (=கருதுகோள்) எடுத்தல், எளிய, நேரடியான, கண்ணாடிபோல உயிரற்ற செயல் அல்ல. மாறாக அது சிக்கலான, இரு பகுதிகள் கொண்ட, சுற்றும் சுழற்சியும் உள்ள செயல். அதிசயக் கற்பனை வாழ்க்கையிலிருந்து அப்பால் அகன்றுவிடுவதற்கான வாய்ப்பைத் தன்னுள் அடக்கியது. அது மட்டும் அல்ல. பகுப்புமுறைக் கருதுகோள், கருத்து, அதிசயக் கற்பனையாக (*in letzter Instanz*[1]= கடவுளாக) மாறிவிடுவதற்கான (அதிலும் புலப்படாத, மனிதனால் உணரப்படாத முறையில் மாறிவிடுவதற்கான) வாய்ப்பைத் தன்னுள் அடக்கியது அது. ஏனென்றால் மிக மிக எளிய பொதுமைப்பாட்டில், யாவற்றிலும் எளிதான பொதுமைக் கருத்தில் (தானேயான ''மேஜை'') அதிசயக் கற்பனையின் ஓரளவு துணுக்கு இருக்கிறது.''[2] அதிசயக் கற்பனை வாழ்க்கையிலிருந்து இவ்வாறு அப்பால் அகன்றுவிடுவதன் விளைவாக உதிக்கின்றது மதம், கருத்துமுதல்வாதம், எதார்த்தத்தின் திரிக்கப்பட்ட பிரதிபலிப்பு.

தத்துவக் கருத்துமுதல்வாதம் என்பது அறிதலின் சாயல்களில், அம்சங்களில், பக்கங்களில் ஒன்றை ஒருதலைச்சார்பாக

---

[1] முடிவில்.—(ப-ர்.)
[2] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 330.

மிகைப்படுத்தல், பிரமாதப்படுத்தல், பூரணமானதாக மாற்றல் என்று எழுதினர். வி. இ. லெனின். கருத்துமுதல்வாதப் பிரபஞ்ச அறிவு, மெய்யானதும் புறநிலையானதும் சர்வவல்லமை உள்ளதும் ஆன மனித அறிதல் என்னும் உயிருள்ள மரத்தில் வளர்ந்த மலட்டுப் பூ என்று வி. இ. லெனின் கூறினர்.

புறநிலைக் கருத்துமுதல்வாதம் பொதுவானதைத் தனியானதிலிருந்தும் பகுத்தறிவுவகைப்பட்டதை உணர்வுவகைப் பட்டதிலிருந்தும் வேறு பிரிக்கிறது. அறிதலில் பொதுக் கருதுகோள்களினதும் கருத்தினுடையவும் பங்கைப் பூரணமானதாகக் காட்டுகிறது. அகநிலைக் கருத்துமுதல்வாதிகள் அறிதலில் புலனுணர்ச்சியினதும் புலனறிவினதும் முக்கியத்துவத்தைப் பூரணப்படுத்துகிறுர்கள். அறிதலின் தர்க்க முறையான வடிவங்களையோ, அனுபவத்துடன், நடைமுறையுடன் தொடர்பு அற்றவையாக அவர்கள் கருதுகிறுர்கள். அறிதலின் ஒரு அல்லது மற்றொரு கட்டத்தை இவ்வாறு தனிப்படுத்தல், பூரணப்படுத்தல், மிகைப்படுத்தல் ஆகியவற்றில்தான் கருத்துமுதல்வாதத்தின் சித்தாந்த அறிதல்வகைப்பட்ட, அல்லது ஞான இயல் கொள்கைவகைப்பட்ட வேர்கள் அடங்கியுள்ளன.

உண்மையிலோ, சிந்தனையும் அதன் வடிவங்களும் மனிதர்களது நடைமுறையில் வேரூன்றியவை, அதிலிருந்து வளர்ந்தவை ஆகும். வி. இ. லெனின் கூறியதுபோல, மனிதனுடைய நடைமுறை பல நூறு கோடி முறை திரும்பத்திரும்ப நிகழ்த்தப்பட்டு மனிதனுடைய உணர்வில் தர்க்க உருவகங்களாகப் பதிந்துவிடுகிறது.

தோற்றத்திலிருந்து தன்மையை நோக்கி, வெளியில் உள்ளதிலிருந்து உள்ளார்ந்ததை நோக்கிச் செல்லும் இயக்கம் மனித அறிதலின் வளர்ச்சி விதி ஆகும். விஞ்ஞானத்தின் வரலாறு முழுவதும் இதற்குச் சான்று பகர்கிறது. உதாரணமாக, பௌதிகம் தனது வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களிலேயே மின் நிகழ்ச்சிகளை ஆராய்ந்துவந்தது. ஆனல் அணுவின் கட்டமைப்பையோ அதன் பகுதிகளான துகள்களின் பரஸ்பரப் பாதிப்புக்கு உரிய விதிகளையோ அப்போது விஞ்ஞானம் அறிந்திருக்கவில்லை. ஆதலால் இந்த நிகழ்ச்சிகளின் தன்மையை உட்புகுந்து அறிய அதற்கு முடியவில்லை. 19ம் நூற்றுண்டின் முடிவிலும் 20ம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் விஞ்ஞானிகள் அணுவின் கட்டமைப்பை மேலும் மேலும் உட்புகுந்து அறியத்

தலைப்பட்டார்கள். அணுவின் பகுதிகளான எலெக்ட்ரான் போன்ற ''தனிமத்'' துகள்களே மின் கடத்திகள் என்பதைக் கண்டுபிடிப்பது இதனால் சாத்தியம் ஆயிற்று. விளைவாக, மின் சாரத்தின் தன்மை என்ன என்பது நிரூபணம் ஆயிற்று. ஆனால் அறிதல் இத்துடன் முடிந்துவிடவில்லை. தனிமத் துகள்களின் கட்டமைப்பைத் தெரிந்துகொள்ளவும் பொருளியல் பிரபஞ் சத்தின் தொடர்புகளை இன்னும் ஆழமாக அறியவும் பௌதி கம் இப்போது முயன்றுவருகிறது.

அறிதலின் மேற்குறித்த அம்சங்கள் சமூக விஞ்ஞானங்களுக் கும் இயல்பானவை. கார்ல் மார்க்ஸுக்கு முன்னர் பூர்ஷ்வா அரசியல் பொருளாதாரம் பண்டத்தில் வெளிப்படும் வெளி இயல்புகளை, அவற்றின் பயன்பாட்டையும் (நுகர்வு மதிப்பு) பரிவர்த்தனைத் திறனையும் (பரிவர்த்தனை மதிப்பு) மட்டுமே கண்டது. ஆனால் பண்டத்தின் இயல்புகளது வெளிப்பாட்டின் நேரடியான வடிவத்தின் பின்னே மறைந்திருந்தன ஆழ்ந்த உள் தொடர்புகள். இந்தத் தொடர்புகளை வெளிப்படுத்தினார் கார்ல் மார்க்ஸ். எல்லாப் பண்டங்களுக்கும் இடையே பொது அம்சம் ஒன்று உள்ளது என்றும் அவற்றின் உற்பத்திக்கு இன்றியமையாத சமூக உழைப்பே அது என்றும் அவர் நிலை நாட்டினார்.

பண்டம் என்பது இரட்டைத் தன்மை கொண்டது. நுகர்வு மதிப்பு, பரிவர்த்தனை மதிப்பு, இரண்டினதும் ஒருமையே அது. எனவே, பண்டத்தில் பருவடிவு பெற்றுள்ள உழைப்பும் இரட் டைத் தன்மை கொண்டதாக இருக்கவேண்டும். இதை வெளிப் படுத்தியபின், பண்டத்தின் மதிப்பு உழைப்பின் சமூகத் தன்மை யை, மனிதர்களின் சமூக உறவுகளை வெளியிடுகிறது என்று கார்ல் மார்க்ஸ் காட்டினார். வி. இ. லெனின் பின்வருமாறு குறித் துள்ளார்: ''மார்க்ஸின் 'மூலதனத்தில்' முதலில் பகுத்தாராயப் படுகிறது பூர்ஷ்வா (பண்ட வர்த்தக) சமூகத்தின் யாவற் றிலும் எளிய, சாதாரணமான, அடிப்படையான, யாவற்றிலும் பெருமளவாகக் காணப்படுகிற, மிக மிக வழக்கமான, கோடானு கோடி முறை எதிர்ப்படுகிற உறவு. அதுதான் பண்டங்களின் பரிவர்த்தனை. இந்த மிக எளிய நிகழ்ச்சியில் (பூர்ஷ்வாச் சமூகத்தின் இந்த 'உயிரணுவில்') தற்காலச் சமூகத்தின் எல்லா முரண்பாடுகளையும் (*respective*[1] எல்லா முரண்பாடுகளதும்

[1] அதற்கு இணங்க.—(ப-ர்.)

கருவை) இந்தப் பகுத்தாராய்வு வெளிப்படுத்திவிடுகிறது.''[1]

விஞ்ஞான ரீதியான சித்தாந்தச் சிந்தனை பிரபஞ்சத்தை அறிவதற்குரிய விறல்மிக்க கருவியாக விளங்குகிறது. இதுவே அதன் மிகப் பெரிய மதிப்பு ஆகும்.

### § 2. உண்மை என்பது என்ன

விஞ்ஞான ரீதியான அறிதலின் முதலாவதும் அடிப்படையானதும் ஆகிய கடமை உண்மையை வெளிக்காட்டுவது ஆகும். புறநிலை எதார்த்தம் மனிதனுல் சரியாக, பிழையின்றிப் பிரதிபலிக்கப்படுதல், அது எப்படி நிலவுகிறதோ அப்படியே உணர்வில் மீண்டும் உண்டாக்கப்படுதல் என்பதே உண்மை என்ற சொல்லுக்கு மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் கொள்ளும் அர்த்தம். புலனறிவுகள், எண்ணங்கள், கருதுகோள்கள், அபிப்பிராயங்கள், சித்தாந்தங்கள் இவற்றின் உள்ளடக்கம் உண்மையாக இருக்கலாம். வெளிப் பிரபஞ்சத்தின் பொருள்களையும் செயல்முறைகளையும் உண்மைகள் என்று கூறுவது அர்த்தம் அற்றது. புறநிலைப் பிரபஞ்சத்தின் பொருள்களுடன் பொருந்துவதான அவைபற்றிய ஞானமே உண்மை என்பது. எது மெய்யாகவே, எதார்த்தத்தில் நிலவுகிறதோ, ஞானம் அதற்குப் பொருந்தாவிட்டால் அது மருள், அது பொய்யே தவிர உண்மை அல்ல.

இங்கே ஒரு கேள்வி எழுகிறது: மனிதனைச் சாராமல், பிரதிபலிக்கப்படும் பொருளையே சார்ந்த உள்ளடக்கம் நமது ஞானத்தில் இருக்க முடியுமா? உண்மை என்பது புறநிலைப் பிரபஞ்சத்தின் சரியான பிரதிபலிப்பு ஆதலால் நமது கேள்வியைச் சுருக்கமாகச் சூத்திரப்படுத்தலாம்: புறநிலை உண்மை நிலவுகிறதா?

புறநிலை உண்மை நிலவுகிறது என்ற அடிப்படையிலிருந்தே இயக்க இயல் பொருள்முதல்வாதம் தொடங்குகிறது. மனிதகுலத்தின் விஞ்ஞான, நடைமுறைச் செயல்களின் வரலாறு அனைத்தும் இதை உறுதிப்படுத்துகிறது. நமது ஞானத்தில் புறநிலை உள்ளடக்கம் இருக்கிறது என்று இந்த வரலாறு காட்டுகிறது. ''பொருள்முதல்வாதமும் அனுபவ விமர்சனவாதமும்''

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 29, பக்கம் 318.

என்னும் தமது நூலில் வி. இ. லெனின் இதை நம்பிக்கை ஊட்டும் வகையில் வெளிப்படுத்தி உள்ளார்.

நடைமுறையில் உறுதிப்படுத்தப்படும் விஞ்ஞான விவரங்கள், விஞ்ஞானத்தால் நிலைநாட்டப்பட்டுள்ள செய்திகள், விதிகள் ஆகியவை அனைத்தினதும் உள்ளடக்கம் புறநிலை உண்மை ஆகும். உதாரணமாக ''நிலவுலகம் மனிதனுக்கு முன்பு நிலவியது'' என்ற அபிப்பிராயம் புறநிலை உண்மை. விஞ்ஞானத்தின் விதிகள் பொருள்களிலும் நிகழ்ச்சிகளிலும் புறநிலையாக நிலவும் தொடர்புகளையும் உறவுகளையும் பிரதிபலிக்கின்றன ஆதலால், அவற்றில் அடங்கியுள்ள ஞானம் புறநிலைப் பிரபஞ்சம் பற்றிய, மனிதனைச் சாராத, தகவல்களை நமக்குத் தருகிறது. உதாரணமாக, எல்லா உலோகங்களும் மின்சாரத்தைக் கடத்தக் கூடியவை என்று கூறும் பௌதிக விதியைக் கவனிப்போம். உலோகங்களின் இந்த இயல்பு மனிதன்மீது சார்பு உள்ளதா? இல்லை. மனிதர்களால் கண்டுபிடிக்கப்படுவதற்கு முன்பே அது உலோகங்களின் இயல்பாக இருந்தது. உலோகங்களுடைய அணுக்களின் கட்டமைப்பில் உள்ள சிறப்புத் தன்மையால் அது ஏற்பட்டது. நமது ஞானத்தின் எந்த உள்ளடக்கம் மனிதன் மீதோ, மனிதகுலத்தின் மீதோ சார்பு அற்றதோ, அது புறநிலை உண்மை எனப்படுகிறது.

புறநிலை உண்மையை ஒப்புக்கொள்வது பிரதிபலிப்பு பற்றிய சித்தாந்தத்தின் பொருள்முதல்வாத அர்த்தத்திலிருந்து தோன்றுகிறது. நமது உணர்வு புறநிலை எதார்த்தத்தை, மெய்யாகவே நிலவும் பிரபஞ்சத்தைப் பிரதிபலிக்கிறது, நகல் எடுக்கிறது. ''நமது புலனுணர்ச்சிகளை வெளிப் பிரபஞ்சத்தின் தோற்றங்களாகக் கருதுதல், புறநிலை உண்மையை ஒப்புக்கொள்ளல், அறிதல் பற்றிய பொருள்முதல்வாத நோக்குநிலையை மேற்கொள்ளல்—இவை எல்லாம் ஒன்றே''[1] என்று எழுதினர் வி. இ. லெனின்.

புறநிலை உண்மையை மறுப்பது தற்கால பூர்ஷ்வாத் தத்துவவாதிகளுக்கு இயல்பானது. எது தனிநபருக்கு நன்மை செய்கிறதோ, லாபம் உண்டாக்குகிறதோ, வெற்றி பெற உதவுகிறதோ அதுதான் உண்மை என்று இந்தத் தத்துவவாதிகளில்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம், 132.

சிலர் எண்ணுகிருர்கள். உண்மைக்கு இவ்வாறு அர்த்தம் கற்பிப்பது விஞ்ஞானத்துக்கு எதிரானது, மிக மிகப் பிற்போக்கானது. தனி நபருக்கு, தனிப்பட்ட மனிதனுக்கு நன்மை செய்வது தான் உண்மை என்ருல் ஏகாதிபத்தியக் கொள்கைவாதம் (அது ஏகாதிபத்தியவாதி பூர்ஷ்வா வர்க்கத்துக்கு நன்மை செய்வதால்) உண்மை என்று ஆகிறது. இவ்வாறே பிறவும். தவிரவும், உண்மைக்கு இம்மாதிரி அர்த்தம் கற்பிப்பது எந்தத் தான் தோன்றித்தனத்தையும் பலாத்காரத்தையும் நியாயப்படுத்தி விடும்.

மெய்யாகப் பார்த்தால் உண்மைக்கும் நன்மைக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் வலிந்துரைப்பதற்கு நேர்மாருனது: எது உண்மையானதோ அதுவே நன்மை செய்வது. ஏனெனில் உண்மையான ஞானம் மட்டுமே மனிதனுக்கு வெற்றி பெற உதவ முடியும். ஞானத்தின் முடிவுகளை ஆதாரமாகக் கொண்டு மனிதர்கள் நடைமுறையில் தங்கள் குறிக்கோள்களை அடைகிருர்கள் என்ருல் அந்த ஞானம் உண்மையானது. பிரயோசனம் உண்மையின் காரணம் அல்ல, விளைவு ஆகும்.

எது பெரும்பான்மையினரின் கருத்துக்குப் பொருந்துகிறதோ, பொது முக்கியமுள்ளதாக விளங்குகிறதோ, அதுவே உண்மை என்று சில கருத்துமுதல்வாதிகள் எண்ணுகிருர்கள். ஆனுல் வெவ்வேறு வகையான மருள்கள், உதாரணமாக மத வறட்டுச் சூத்திரங்கள், மூட நம்பிக்கைகள் முதலியன, பொது முக்கியத்துவம் உள்ளவையாக இருக்கலாம். எனவே உண்மைக்கு இம்மாதிரி அர்த்தம் கற்பிப்பது விஞ்ஞானத்துக்கு எதிரானது. அகநிலைக் கருத்துமுதல்வாதம் உண்மைக்குத் தரும் விளக்கம் விஞ்ஞான ரீதியான அறிதலுக்கும் நடைமுறை வாழ்க்கைக்கும் பயனற்றது. ஏனெனில் அது உண்மையை மக்களின் தான் தோன்றித்தனத்தின்மீது, எதை மனிதர்கள் தாமே உண்மை என்று கருதுகிருர்களோ அதன்மீது சார்பு உள்ளது ஆக்கிவிடுகிறது. புறநிலைக் கருத்துமுதல்வாதிகள் புறநிலை உண்மையை மறுப்பதில்லை என்ருலும் அதன் தலையூற்று எதார்த்தமே அல்ல, பரமான்மா அல்லது ஆண்டவனின் திருவெளிப்பாடு என்று கருதுகிருர்கள்.

மார்க்ஸிய-லெனினியத் தத்துவத்தால் புறநிலை உண்மை ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பது விஞ்ஞானத்துக்கும் நடைமுறைச்

செயல்களுக்கும் அசாதாரண முக்கியத்துவம் உள்ளது. செய்தி களைத் தனது கருத்து அல்லது பிறரது விருப்பத்தின் கோணத்தில் திரிக்காமல், விஞ்ஞானத்தின் விவரங்களை மதிக்க வேண்டும், அவற்றைக் கருத்தில் கொள்ள வேண்டும் என்று அது கோரு கிறது. உண்மை தவருமை திடநம்பிக்கையுடனும் நேர்மை யுடனும் குடிமகனுக்கு உரிய ஆண்மையுடனும் நெருக்கமாக இணைந்துள்ளது.

புறநிலை உண்மையை மனிதன் எவ்வாறு அறிந்துகொள் கிருன்? அவனுடைய கருதுகோள்களிலும் அபிப்பிராயங்களி லும் சித்தாந்தங்களிலும் அது ஒரேயடியாக, மொத்தமாக, முழுமையாக, பூரணமாக வெளிப்படுகிறதா, அல்லது கிட்டத் தட்ட, அம்சரீதியாக மட்டுமே தாஞ? இந்தக் கேள்விக்கு விடை சார்பற்ற பூரண உண்மைக்கும் சார்புநிலை உண்மைக்கும் உள்ள பரஸ்பர சம்பந்தத்தை வெளிப்படுத்துகிறது.

பூரண உண்மைக்கும் சார்புநிலை உண்மைக்கும் இடையே உள்ள வேறுபாடு, அறிதலின் ஆழத்தினுடையவும் எதார்த்தம் பற்றிய நமது ஞானத்தின் முழுமையினுடையவும் அளவுகளில் உள்ள வேறுபாடே ஆகும். அறிதலின் வளர்ச்சிச் செயல் முறையில் ஏற்கனவே அறியப்பட்டுள்ளதற்கும் இனி அறியப் படப் போவதற்கும் இடையே, சரிப்படுத்தவோ மாற்றவோ படப்போவதற்கும் மாற்ற முடியாததாக நிலைத்திருக்கப் போவதற்கும் இடையே, உள்ள பரஸ்பர சம்பந்தத்தைப் பூரண உண்மை, சார்புநிலை உண்மை என்னும் வகைப்பிரிவு கள் வெளிப்படுத்துகின்றன.

பூரண உண்மை என்பது எதார்த்தத்தின் முற்றிலும் துல்லியமான, முழுவதையும் உள்ளடக்கிய, பூர்த்தியான பிரதிபலிப்பு. இது முழுப் பரிமாணத்தில் பூரணமான உண்மை. பூரணமாக உண்மையான ஞானம் வருங்காலத்தில் நிராகரிக்க வோ மேலும் துல்லியமாக்கவோ பட முடியாது. அது நிபந்தனை அற்றது, நித்தியமானது.

சார்புநிலை உண்மையோ கிட்டத்தட்டச் சரியான, அடிப் படையில் துல்லியமான ஞானம். ஆனல் அது நிறைவு அற்றது. அறிதலின் போக்கில் அது மேலும் மேலும் நிறைவுள்ளது ஆகும், துல்லியம் அடையும், திருத்தப்படும். சார்புநிலை உண்மை நமது ஞானத்தின் வரலாற்று ரீதியான நிபந்தனைக்கு உட்பட்ட தன் மையை, குறித்த காலக்கட்டத்தில் அதன் வரம்புக்கு உட்பட்ட

தன்மையை வெளியிடுகிறது. விஷயம் என்னவென்ருல், ஒவ்வொரு வரலாற்றுக் கட்டத்திலும் விஞ்ஞானமும் உற்பத்தியும் அடைந்துள்ள வளர்ச்சித் தரமே மனிதர்களின் ஞானத்தை நிர்ணயிக்கிறது. விஞ்ஞானத்தின் அடிப்படைக் கருத்துக்களும் அதன் விதிகளும் குறித்த நிலைமைகளில் ஏற்படும் தொடர்புகளையும் உறவுகளையும் பிரதிபலிக்கின்றன. இந்த நிலைமைகளோ மிகமிகப் பல்வகைப்பட்டவை, மாறிக்கொண்டிருப்பவை. விஞ்ஞான ரீதியான அறிதலின் முன்னேற்றம் புதிய செய்திகளும் விதிகளும் கண்டுபிடிக்கப்படுவதை மட்டுமே அல்ல, எந்த நிலைமைகளில் இவ்விதிகள் சரியானவையோ அந்த நிலைமைகள் திருத்தப்படுவதையும் உள்ளடக்கியது. ஆகவே, விஞ்ஞான உண்மைகள் ஆராயப்படும் நிகழ்ச்சிகளின் துறையைப் பற்றி, முழுவதையும் உள்ளடக்கிய ஞானத்தைத் தருவதில்லை, திருத்தவும் மாற்றவும் படுகின்றன என்ற அர்த்தத்தில் சார்புநிலையானவை.

எடுத்துக்காட்டாக, 18—19 வது நூற்ருண்டுகளில் அணுக் கொள்கை பொருள்களின் கட்டமைப்பு பற்றிய பௌதிக-ரசாயனச் சித்தாந்தமாக மாறியது. பொருள் அணுக்களால் ஆனது என்ற சரியான அடிப்படைக் கருத்து இந்தச் சித்தாந்தத்தில் அடங்கியிருந்தது. இந்தக் கருத்து பூரண உண்மையின் வித்தாக விளங்கியது. அதே சமயம் அணுக்கள் பகுக்க முடியாதவை என்று ஒப்புக்கொள்ளும் மருளின் அம்சமும் இந்தச் சித்தாந்தத்தில் அடங்கியிருந்தது. 19ம் நூற்ருண்டின் இறுதியில் எலெக்ட்ரானும் கதிரியக்கமும் கண்டுபிடிக்கப்பட்டன. விஞ்ஞான அறிதலில் வேறு பல சாதனைகளும் நிறைவேற்றப்பட்டன. இந்தத் துறையில் நமது ஞானத்தைத் துல்லியப்படுத்திக் கொள்ளவும், அணுக்கள் பகுக்க முடியாதவை என்ற தவருன எண்ணத்தை அகற்றவும் சரியான எண்ணங்களை விரிவும் ஆழமும் படுத்தவும், இதன் மூலமாகவே பூரண உண்மையை அடையும் திசையில் அடுத்த அடி எடுத்து வைக்கவும் இந்தக் கண்டுபிடிப்புக்களும் நிறைவேற்றங்களும் வாய்ப்பு அளித்தன. பூரண உண்மையைச் சார்புநிலை உண்மைக்கு எதிர்நிறுத்துவது கூடாது. அவை ஒன்றை ஒன்று அகற்றிவிடுவது இல்லை. அவற்றுக்கிடையே கடக்க முடியாத எல்லைகள் இல்லை. பார்க்கப்போனுல் சார்புநிலை உண்மை பூரண உண்மையின் ஒரு துளியை உள்ளடக்கித்தான் இருக்கிறது. சார்புநிலை உண்மைகளின் மொத்தம் பூரண உண்

மையாக அமைகிறது. நிறைவு அற்ற, கிட்டத்தட்ட மட்டுமே சரியான ஞானத்திலிருந்து மேலும் நிறைவான, துல்லியமான ஞானத்தை நோக்கிச் செல்லும் எண்ணங்களின் இயக்கமே உண்மை என்பது. உண்மை ஒரு செயல்முறையாகும். ஆகவே சார்புநிலை உண்மை என்பது பூரண உண்மைக்குச் செல்லும் வழியில் உள்ள கட்டமே தவிர வேறில்லை.

மிக முக்கியமான இந்த அடிப்படைக் கருத்துக்களை விளக்குகையில் வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினர்: ''தற்காலப் பொருள்முதல்வாதத்தின், அதாவது மார்க்ஸீயத்தின் நோக்கு நிலையிலிருந்து பார்க்கும்போது, நமது ஞானம் புறநிலையான பூரண உண்மையை நெருங்கும் வரம்புகள் வரலாற்று நிபந்தனைகளுக்கு உட்பட்டவை. ஆனல் இந்த உண்மை நிலவுவது சந்தேகமற்றது. நாம் அதை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் என்பதும் சந்தேகமற்றது''.[1] எனவே நமது ஞானம் சார்புநிலையானது என்பது அதில் பூரண உண்மை அடங்கியிருக்கவில்லை என்ற அர்த்தத்தில் அல்ல, இந்த உண்மையை நமது ஞானம் நெருங்குவது படிப்படியான, வரலாற்று நிபந்தனைகளுக்கு உட்பட்ட செயல்முறை என்ற அர்த்தத்தில்தான்.

நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சம் முடிவு அற்றது, இடையருத இயக்கமும் வளர்ச்சியும் உள்ளது. எனவே அறிதல் சார்புநிலை உண்மைகளின் மொத்தத்தின் வழியே பூரண உண்மையை இடையருது, முடிவின்றி நெருங்கிக் கொண்டிருக்கும் செயல்முறையாக விளங்குகிறது. சாசுவதமாகத் தயாரான, பூரணமாகத் துல்லியமான, எந்த நிலைமைகளிலும் சரியான முடிவுகளையும் கட்டளைகளையும் தருவது எந்தச் சித்தாந்தத்தாலும் முடியாது. ஆனல் மனித அறிதலின் வாய்ப்புக்கள் எல்லையற்றவை. மனித அறிதல் முடிவின்றி மேலே செல்லும் செயல்முறையாக விளங்குகிறது.

சார்புநிலை உண்மையிலிருந்து பூரண உண்மையை நோக்கிச் செல்லும் அறிதலின் இயக்கத்தினது இயக்க இயல் தன்மையை விஞ்ஞானம், சமூக நடைமுறை ஆகியவற்றின் வரலாறு முழுவதும் உறுதிப்படுத்துகிறது. எந்த விஞ்ஞானக் கருதுகோளின், எந்த விஞ்ஞானச் சித்தாந்தத்தின் வளர்ச்சியினது உதாரணத்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 138.

தாலும் இதைக் காட்ட முடியும். சக்தி மாற்றம் பற்றிய ஞானத்தின் வளர்ச்சி வரலாற்றை எடுத்துக்கொள்வோம். உராய்வு வெப்பம் உண்டாக்குகிறது என்ற தனியான செய்தி தொடக்கத்தில் நிலைநாட்டப்பட்டது. இந்தத் துறையில் ஞானத்தின் அடுத்த வளர்ச்சிக் கட்டத்தைக் குறித்தது எந்த இயந்திர வகைப்பட்ட இயக்கமும் வெப்பமாக மாற வல்லது என்ற அடிப்படைக் கருத்து. இது இன்னும் ஆழ்ந்த ஞானம். ஏனெனில் எந்த வகையான இயந்திர இயக்கமும் வெப்பமாக மாறுவது பற்றி இது விவரித்தது. கடைசியில் இயக்கத்தின் எந்த வடிவமும் இயக்கத்தின் வேறு எந்த வடிவமாக வேண்டுமானாலும் மாற வல்லது என்பது நிலைநாட்டப்பட்டது.

ஆக இந்தச் சந்தர்ப்பத்தில் விஞ்ஞான அறிவின் வளர்ச்சி ஆரம்பத்தில் பெறப்பட்ட ஞானத்தைச் சீர் செய்வதன் வாயிலாகவும் பொதுமைப்படுத்துவதன் வாயிலாகவும் நிகழ்ந்தது. இங்கே உண்மை மேலும் மேலும் வளம் அடைந்து, நிறைவு பெற்று மரபைப் பாதுகாத்தவாறு கட்டம் கட்டமாக வளர்ந்தது.

விஞ்ஞான ரீதியான அறிதலில் உண்மையை நோக்கிச் செல்லும் இயக்கமும் உண்மையை அடைதலும் கருத்துக்கள், நோக்குகளின் உக்கிரமான போராட்டத்தில் அடிக்கடி நிகழ்கிறது. நடைமுறையில் உறுதிப்படுத்தப் பெறாத கற்பிதக்கொள்கைகளும் பொய்ச் சித்தாந்தங்களும் விஞ்ஞானப் பாங்கு அற்ற கருதுகோள்களும் இந்தப் போராட்டத்தின்போது நிராகரிக்கப்படுகின்றன.

பகுப்புமுறைகளையும் கருதுகோள்களையும் உருவாக்கியும், பிரபஞ்சத்தின் விஞ்ஞானச் சித்திரத்தை அமைத்தும் மனிதன் புறநிலை எதார்த்தத்தை மேலும்மேலும் துல்லியமாகப் பிரதிபலிக்கிறான். பிரபஞ்சத்தின் பொருள்கள், நிகழ்ச்சிகளின் தொடர்புகளும் உறவுகளும் வெளிப்படுவது பற்றிய புறநிலை இயக்க இயலும், உண்மையை அறிதலுக்கான செயல்முறை பற்றிய இயக்க இயலும் இத்தகையவையே.

உண்மை ஞானம் என்பது எதார்த்தத்துக்குப் பொருந்தும் ஞானமே. ஆதலால் அது எதார்த்தத்திலிருந்து துணிக்கப்பட முடியாது. எதார்த்தம் மாறுவதுடன் அதைப் பற்றிய நமது ஞானமும் மாற வேண்டும். எனவே, ஞானத்தின் மெய்மை அது உருவாவதற்கான இடம், காலம், சூழ்நிலைகள், இதர நிலை

மைகள் ஆகியவற்றைப் பொறுத்திருக்கிறது. இந்த நிலைமைகள் மாறுவதன் விளைவாக உண்மை ஞானம் உண்மை அற்றதாகி விடுகிறது. அருவ உண்மை கிடையாது, உண்மை எப்போதும் ஸ்தூலமானது என்பதை இது காட்டுகிறது. புறநிலைத் தொடர்புகள், நிலைமைகள், இடம், காலம், வரலாற்றுச் சிறப்புக்கள் ஆகியவற்றின் சர்வாம்சரீதியான ஆராய்ச்சி வாயிலாகவும் அவற்றைக் கணக்கில் எடுத்துக்கொள்வதன்மூலமுமே உண்மை பெறப்படுகிறது. ஏனென்றால் ஒருவகை நிலைமைகளில் உண்மையாக இருப்பது வேறொரு வகை நிலைமைகளில் பொய்யாக இருக்கலாம், முன்னது பின்னதாகவும் இருக்கலாம்.

பூரண உண்மை, சார்புநிலை உண்மை, இவற்றின் இயக்க இயலைப் புரிந்துகொள்ளாமை, உண்மையின் ஸ்தூலத் தன்மையைப் புறக்கணிப்பது, இரண்டு கடைக்கோடி நோக்கு நிலைகளுக்கு இட்டுச் செல்கிறது. அவையாவன வறட்டுச்சூத்திரவாதமும் சார்பு அறிவுக்கொள்கையும். வறட்டுச்சூத்திரவாதம் அறிதலின் பூரணக் கட்டத்தை மிகைப்படுத்தி, அதன் சார்புநிலைத் தன்மையை மறுக்கிறது. அறிதல் என்பது உறைந்துபோன, இயக்கம் அற்ற ஒன்று என்ற மாறுநிலைவாத நோக்கையே அது குறிக்கிறது. ஒரு அல்லது மற்றொரு வகை அடிப்படைக் கருத்துக்களையும் முடிவுகளையும் சூத்திரங்களையும், ஸ்தூல நிலைமைகள், இடம், காலம், இவற்றைக் கருத்தில் கொள்ளாமல் பூரணப்படுத்துவதன் விளைவாகத் தோன்றுகிறது வறட்டுச்சூத்திரவாதம். வறட்டுச்சூத்திரவாதத்தை எதிர்த்துப் போராடுகையில் வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினார்: "... மார்க்ஸீய இயக்க இயலின் முக்கியமான அடிப்படைக் கருத்து என்னவென்றால், இயற்கையிலும் சமூகத்திலும் உள்ள எல்லா வரம்புகளும் நிபந்தனைகளுக்கு உட்பட்டவை, இயங்கிக்கொண்டிருப்பவை என்பதும், குறிப்பிட்ட நிலைமைகளில் தனது எதிர்நிலையாக மாற முடியாத நிகழ்ச்சி ஒன்று கூட இல்லை என்பதுமே."[1]

வாழ்க்கையுடனும் நடைமுறையுடனும் தொடர்பு அறுத்துக்கொண்டுவிட்ட வறட்டுச்சூத்திரவாதிகள் உறைந்துபோன கருதுகோள்களையும் சூத்திரங்களையும் கையாள்கிறார்கள்,

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 30, பக்கம் 5.

அவை பயன்பட மாட்டாத நிகழ்ச்சிகள் அல்லது சம்பவங்களுக்கு அவற்றைப் பொருத்துகிருர்கள். வறட்டுச்சூத்திரவாதம் மிக மிகப் பல்விதமான செயற்களங்களில் வெளிப்படக் கூடும்.

மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தத்தை ஆழ்ந்து கற்கையில் அதன்பால் வறட்டுச்சூத்திரவாதப் போக்கைத் தவிர்ப்பதற்கு, கற்றுக்கொண்ட அடிப்படைக் கருத்துக்களை வெறுமே மனப்பாடம் செய்வதுடனும் பொட்டை உருப்போடுவதுடனும் நின்று விடக் கூடாது. சித்தாந்தத்தை ஆழ்ந்த முறையில், படைப்புத் தன்மையுடன் கிரகித்துக் கொள்வதன் மூலம் வலுப்படுத்திக் கொள்ளாமல் இவ்வாறு மார்க்ஸீயத்தைக் கற்பது தேவையான பயன்களைத் தராது. நன்ருக மனப்பாடம் செய்யப்பட்ட சரியான அடிப்படைக் கருத்துக்கள் சொந்தத் திட நம்பிக்கை ஆகாவிடில் அவற்ருல் குறைந்த நலமே உண்டாகும். மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தம் பற்றிய ஞானம் நடைமுறைச் செயல்களில் வழிகாட்டியாகப் பயன்பட வேண்டும், நிறைவேற்றம் அடைய வேண்டும், செயல்களில் பருவடிவு பெற வேண்டும்.

வறட்டுச்சூத்திரவாதத்துக்கு மாருகச் சார்பு அறிவுக்கொள்கை அறிதலின் சார்புநிலையான, நிபந்தனைக்கு உட்பட்ட கட்டத்தைப் பூரணப்படுத்தி, அந்த அடிப்படையில் பூரண உண்மையை மறுக்கிறது. வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினுர்: ''அறிதல் சித்தாந்தத்தின் அடிப்படை என்ற வகையில் சார்பு அறிவுக்கொள்கை நமது ஞானத்தின் சார்புநிலையை ஒப்புக்கொள்வது மட்டுமே அல்ல, மனித குலத்தின்மீது சார்பு இன்றி நிலவும் புறநிலையான அளவு அல்லது மாதிரி உண்டு, நமது சார்புநிலையான அறிதல் அதை நோக்கிச் செல்கிறது என்பதை மறுப்பதும் ஆகும்.''[1] சார்பு அறிவுக்கொள்கை தவிர்க்க இயலாதவாறு அறியொணுமைக் கொள்கைக்கும் விஞ்ஞான வகைப்பட்ட ஞானம் நம்பகமானது என்பதை மறுப்பதற்கும், அகநிலைவாதத்துக்கும் இட்டுச் செல்கிறது.

புரட்சிச் சித்தாந்தம் சார்பு அறிவுக்கொள்கையால் திரிக்கப்படுவதும் வறட்டுச்சூத்திரவாதத்தால் உணர்ச்சி அற்றது

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 139.

ஆக்கப்படுவதும் சிறப்பாக அபாயகரமானவை. சார்பு அறிவுக் கொள்கையும் வறட்டுச்சூத்திரவாதமும் வலதுசாரி, ''இடது சாரிச்'' சந்தர்ப்பவாதிகளாலும் எல்லா விதமான திரிபுவாதி களாலும் எப்போதும் விரிவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## § 3. அறிதல் செயல்முறையில் நடைமுறை ஆற்றும் பங்கு

நடைமுறை என்பது மனிதர்களின் பொருளியலான, பயன் பாடுள்ள சமூகச் செயல். இயற்கையையும் சமூகத்தையும் மாற்றி அமைப்பது இந்தச் செயல். முதலாவதாக, பொருளியல் உற்பத்திச் செயல்முறையும் இரண்டாவதாக, வர்க்கங்களின், பொது மக்கள் திரளின் சமூக-அரசியல் வகைப்பட்ட, புரட் சிகரமாக மாற்றி அமைக்கும் செயலும் மூன்றாவதாக, விஞ்ஞான அவதானிக்கைகளும் சோதனைகளும் நடைமுறையில் அடங்கியுள்ளன.

வாழ்க்கையின், நடைமுறையின் நோக்குநிலை அறிதல் சித் தாந்தத்தின் முதலாவது, அடிப்படை நோக்குநிலையாக இருக்க வேண்டும் என்று எழுதினார் வி. இ. லெனின். அறிதல் சித்தாந் தத்தில் நடைமுறையை ஈடுபடுத்துவது கட்டாயமாகப் பொ ருள்முதல் வாதத்துக்கு இட்டுச் செல்லும் என்றார் அவர்.[1]

அறிதலில் நடைமுறை என்ன பங்கு ஆற்றுகிறது? முதன் மையாக, நாம் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, மனிதர் களின் நடைமுறைச் சமூக நடவடிக்கை அறிதலின் தொடக்கப் புள்ளியாகவும், பிரதான, முக்கிய அடிப்படையாகவும் அமை கிறது. இதன் அர்த்தம் என்னவென்றால் அறிதலே, எதார்த்தத் தைப் புரிந்துகொள்ளலே, நடைமுறையின் அடிப்படையில், முக் கியமாக மனிதர்களின் உற்பத்திச் செயல்களின் காரணமாகவே தோன்றியது, வளர்ந்து வருகிறது என்பது ஆகும். மெய்யான விஞ்ஞான வகைப்பட்ட அறிதல் வெளிப் பிரபஞ்சத்துடன் நடைமுறைப் பரஸ்பரப் பாதிப்பின் போக்கில் மட்டுமே சாத்தி யம் ஆகும். நடைமுறைக்கு வெளியே, நடைமுறைமீது சார்பு இன்றி அது நடக்கவே முடியாது.

---

1 வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 145 பார்க்க.

மேலும் நடைமுறை அறிதலின் இயக்கு சக்தியாகத் திகழ்கிறது. நடைமுறையின் தேவைகள், முதன்மையாக உற்பத்தியின் தேவைகள் சித்தாந்தத்தையும் விஞ்ஞானத்தையும் முன்னே செலுத்துகின்றன. விஞ்ஞானத்தின்முன் பொருத்தமான கடமைகளை வைக்கின்றன. அதன் வளர்ச்சியின் அடிப்படையான போக்கைத் திட்டப்படுத்துகின்றன.

விஞ்ஞானம் மனித அறிவின் சுதந்திரமான கண்டுபிடிப்பு என்றும் இதன் முன்னேக்கிய இயக்கத்தின்தூண்டி ஊக்கும்காரணமாகச் செயலாற்றுபவை அறிவார்வமும் கவர்ச்சியும் அக்கறையுமே என்றும் சில வேளைகளில தோன்றக்கூடும். இடையருத படைப்புத் தேட்டம் இன்றேல் விஞ்ஞானம் சாத்தியம் இல்லை என்பது உண்மையே. ஆனல் எந்த விஞ்ஞானமும் தோன்றுவதும் வளர்வதும் நடைமுறையின் தேவைகள் காரணமாகவே, வாழ்க்கையின் அவசியங்களின் பொருட்டே. ஜீவாதாரப் பிரச்சினைகள் முற்றிவிட்டால் விஞ்ஞானம் அவற்றுக்குத் தீர்வு காண வேண்டியிருக்கிறது, காண்கிறது. எந்த விஞ்ஞானத்தின் வளர்ச்சியையும் உதாரணமாக எடுத்துக்கொண்டு இதை நிரூபிக்க முடியும்.

சோவியத் மக்கள் கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில் நுட்ப அடிப்படையை நிறுவிக் கொண்டிருக்கிருர்கள், புதிய சமூக உறவுகளைப் படைத்துக்கொண்டிருக்கிருர்கள். இந்தப் பாதையில் ஒவ்வோர் அடிவைப்பும் இயற்கை, சமூக விஞ்ஞானங்களுக்கு முன் மிக முக்கியமான பிரச்சினைகளை எழுப்புகிறது. இந்தப் பிரச்சினைகள் வெற்றிகரமாகத் தீர்க்கப்படுகின்றன. தற்சமயம் சோவியத் சமூகத்தில் விஞ்ஞானம் விறல்மிக்க உற்பத்திச் சக்தியாக மாறியிருக்கிறது. உற்பத்திச் செயல்முறையைப் பகுத்தறிவுக்கு இயைந்த வகையில் ஒழுங்கமைப்பதற்கும், தொழில்நுட்ப முன்னேற்றம் சம்பந்தமான கடமைகளை நிறைவேற்றுவதற்கும், பொருளியல், பண்பாட்டு நலங்களின் இடைவிடாத அதிகரிப்பை உறுதிப்படுத்துவதற்கும் மனிதனது வாழ்க்கையை மேம்படுத்துவதற்கும் அது வாய்ப்பு ஏற்படுத்துகிறது.

விஞ்ஞான அறிவு எந்த அளவுக்குப் பயன்படுத்தப்படுகிறது என்பது சமூக உறவுகளின் தன்மையைப் பொறுத்திருக்கிறது. தற்போதைய முதலாளித்துவச் சமூகத்தில் விஞ்ஞானத்தாலும் தொழில் நுட்பத்தாலும் விளைக்கப்பட்டுள்ள லாபங்கள் அனைத்தும் மனிதனது தொண்டில் நிச்சயமாக ஈடுபடுத்

தப்படுவதே இல்லை. எடுத்துக்காட்டாக, அணு சக்தியின் கண்டு பிடிப்புகூட முதன்மையாக இராணுவ நோக்கங்களுக்காகவே பயன்படுத்தப்பட்டது. இவ்வாறே பிறவும். சோஷலிஸ அமைப்பினது வெற்றியின் விளைவாக விஞ்ஞானம் மூலதனத்தின் சிடுக்கிலிருந்து விடுபடுகிறது. அது புதிய பணிகளை மேற்கொள்கிறது. மக்கள் அனைவரதும் நலன்களுக்காகப் பயன்படுத்தப்படுகிறது. சமூக விஞ்ஞானம், இயற்கை விஞ்ஞானம் ஆகியவற்றின் தலை சிறந்த நிறைவேற்றங்களின் அடிப்படையிலேயே கம்யூனிஸச் சமூகம் நிறுவப்படுகிறது. சோஷலிஸ்ட் நட்புறவு நாடுகளில் சமூக வளர்ச்சிக்கு வழிகாட்டும் விஞ்ஞான அஸ்திவாரமாக அமைந்திருக்கிறது மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தம். கம்யூனிஸக் கட்டுமானத்திற்கு உரிய விதிமுறைகளை வெளிப்படுத்தவும், பகைமை கொண்ட பூர்ஷ்வாக் கொள்கைவாதத்துக்கு எதிராகப் போராட்டம் நடத்தவும் அது உதவுகிறது. இயற்கையை மனிதனுக்குக் கீழ்ப்படுத்துதல், சமூக நலன்களுக்கு ஏற்ப அதை மாற்றி அமைத்தல் என்னும் நோக்கத்துக்கே சோஷலிஸத்தில் இயற்கை விஞ்ஞானம் தொண்டாற்றுகிறது.

நடைமுறை, அறிதலின் அடிப்படையாகவும் அதன் ஊக்கு சக்தியாகவும் மட்டுமே அல்ல, நமது ஞானத்தின் உண்மைக்கு அளவுகோலாகவும் திகழ்கிறது. நமது கருதுகோள்களையும் சித்தாந்தங்களையும் அது சரி பார்க்கிறது, அவற்றில் சில மெய்யானவை என்றும் வேறு சில பொய்யானவை என்றும் நிலைநாட்டுகிறது, சரியற்ற சித்தாந்தங்களை நிராகரிக்கிறது.

நடைமுறை என்னும் அளவுகோல் ஒரே சமயத்தில் பூரணமானதாகவும் சார்புநிலையுள்ளதாகவும் இருக்கிறது. நடைமுறைச் செயலின் போக்கில்தான் மனிதர்கள் தங்கள் ஞானத்தின் புறநிலை மெய்மையை உறுதிப்படுத்திக் கொள்ளவோ நிராகரிக்கவோ முடியும். இந்த அர்த்தத்தில் நடைமுறை பூரணமான அளவுகோல். நமது ஞானம் நம்பத்தகுந்ததா என்ற பிரச்சினை சித்தாந்தத்துக்கு மட்டும் அல்ல, நடைமுறைக்கும் உரிய பிரச்சினை ஆகும்.

அதே சமயம் நடைமுறை என்ற அளவுகோல் சார்புநிலையானது. ஏனெனில் ஒவ்வொரு குறித்த காலக்கட்டத்திலும் சமூக-வரலாற்று நடைமுறையின் தரம் வரையறைக்கு உட்பட்டது. இந்த விஷயம் அறிதல் செயல்முறைமீது தனது முத்திரையைக் கட்டாயமாகப் பதித்துவிடுகிறது. வேறு வகையில்

சொன்னுல், சமூக உற்பத்தியும் சமுதாய உறவுகளும் தங்கள் வளர்ச்சியில் எந்த எல்லேகளை எட்டியுள்ளனவோ அந்த எல்லே களுக்கு உள்ளேயே நமது ஞானத்தைச் சரி என்று உறுதிப்படுத்த வோ தவறு என்று தள்ளிவிடவோ நடைமுறையால் முடியும். இந்தக் காரணத்தால் உண்மையின் அளவுகோல் என்ற நோக்கில் நடைமுறை சார்பு நிலேயுள்ளது. இந்த அர்த்தத்தில் நடைமுறை விஞ்ஞானத்தின் ஒரு அல்லது மற்ருெரு முடிவை முழுமொத்தமாக நிராகரித்துவிடவோ உறுதிப்படுத்தவோ முடியாது. எனினும் அறியொணுமைக் கொள்கை வகைப்பட்ட முடிவுகள் செய்வதற்கு இது எவ்வித ஆதாரமும் தரவில்லே. நமது நடைமுறை எதை உறுதிப்படுத்துகிறதோ அது ஒன்றே புறநிலே உண்மை ஆகும்.[1]

நடைமுறை போலவே சித்தாந்தமும் இடையருத வளர்ச்சி அடைந்த வண்ணமாக இருக்கிறது. இதில் நிர்ணயகரமான பங்கு ஆற்றுவது நடைமுறைதான். உழைப்புக் கருவிகளும் இயந்திரங்களும் விஞ்ஞானச் சோதனேக்குரிய சாதனங்களும் நடைமுறைச் செயலின்போது செவ்வைப்படுத்தப்படுகின்றன. மிகச் சிக்கலான எலெக்ட்ரானிக் இயந்திரங்களும் கணக்கீட்டு நிலேயங்களும் விறல்மிக்க அணு ரியாக்டர்களும் அறிதலுக்கான பிற சாதனங்களும் தற்போது நிறுவப்பட்டுள்ளன. விண் வெளி விமானங்களும் பறக்கும் தானியங்கி நிலேயங்களும் பூமிக்கு அருகிலுள்ள இடவெளியிலும் விண்வெளியிலும் பிற கோள்களிலும் நிகழும் செயல்முறைகளே ஆராய்வதைச் சாத் தியம் ஆக்குகின்றன. இயந்திரங்களும் உழைப்புக் கருவிகளும் மனிதனுடைய சக்தியைப் பன்மடங்கு அதிகமாக்குகின்றன. அவனுடைய புலன்களே அவை ஒரு வகையில் மேலும் முழுமை யாகக் கட்டிமுடிக்கின்றன. இதனுல் பிரபஞ்சத்தின்மீது மனி தனுடைய பாதிப்பு அளவிட முடியாதவாறு அகன்று பெருகி யுள்ளது. விஞ்ஞானமும் சித்தாந்தமும் வளர்வதற்கு இவை எல்லாம் மிக மிக வளமான வாய்ப்புக்களே முன்வைக்கின்றன.

இயற்கை, சமூகம், இவற்றின் வளர்ச்சியை இயக்கி நடத்தும் விதிகள் பற்றிய அறிதல், விஞ்ஞானத்துக்கும் நடைமுறைக்கும் உள்ள பரஸ்பரப் பாதிப்பின் அடிப்படையில் நிகழ்கிறது. சித்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 146 பார்க்க.

தாந்தமும் நடைமுறையும் அறிதல் செயல்முறையின் இரண்டு பிரிக்கமுடியாத அம்சங்கள் ஆகும். அவை ஒன்றை ஒன்று வளப்படுத்துகின்றன. விஞ்ஞானம், உற்பத்தி, இவற்றின் ஒருமையில் இது தோற்றம் அளிக்கிறது.

தனது வளர்ச்சியின் தர்க்கப் பொருத்தமான போக்கின் பலத்தால் விஞ்ஞானம் சார்புநிலையான சுதந்திரம் பெறவும் உற்பத்தியை முந்திவிடவும் முடியும். அதன் நிறைவேற்றங்களின் அடிப்படையில் உற்பத்தியின் புது வகைகள் உருவாகின்றன. எடுத்துக்காட்டாக, மின்னோட்டம், காந்தக் கவர்ச்சி ஆகியவை பற்றிய விதிகள் கண்டுபிடிக்கப்பட்டதனால் புதிய இயந் திரங்கள் நிறுவப்பட்டன. இவை நிறுவப்பட்டது பௌதிகச் சித்தாந்தத்தை மேற்கொண்டு செவ்வைப்படுத்துவதற்குப் பெருத்த தூண்டுதல் ஆயிற்று. மின் ஆற்றலின் பொருளியல் வாகிகளான எலெக்ட்ரான்களின் இயக்கம் பற்றிய விதிமுறைகள் ஆராயப்பட்டதும் எலெக்ட்ரானிக்ஸ் முன்னேறியதும் ரேடியோ தொழில்நுட்ப இயலை ஊக்கி இயக்கும் வலிமை மிக்க தூண்டல்களாகப் பயன்பட்டன. அண்மை ஆண்டுகளில் ஒளியையும் வானொலி அலைகளையும் உண்டாக்கும் குவாந்தம் ஜெனரேட்டர்கள் எனப்படுபவை விஞ்ஞானத்தின் நிறை வேற்றங்களின் அடிப்படையில் உருவாக்கப்பட்டன. ஒரு புதிய தொழில்நுட்பத் துறை வளர்வதற்குரிய வருங்கால வாய்ப்புக்களை இவை ஏற்படுத்தியுள்ளன.

உற்பத்தியின் புது வகைகள் (உதாரணமாக, எலெக்ட்ரான்-கணக்கீட்டு இயந்திரங்கள்)விஞ்ஞான வளர்ச்சியின்அடிப்படையில் தோன்றுகின்றன என்றால், புதிய விஞ்ஞானங்களும் உற்பத்தியின் தேவைகளின் விளைவாகப் பிறக்கின்றன (ஸைபெர்னெட்டிக்ஸ், உயிரியல் எலெக்ரட்ரானிக்ஸ், விண்வெளி உயிரியல், உற்பத்தி அழகியல், பொறி இயல் உளவியல் முதலியன).

தற்கால நிலைமைகளில் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சி மின்னாற்றல் வளங்களையும் உற்பத்தி மின்னாற்றல் சாதனங்கள் கொண்டிருப்பதையும் பெரும் அளவுக்குப் பொறுத்திருக்கிறது. தற்போதைய விஞ்ஞானத்தின் பிரதானக் கடமைகளில் ஒன்று கட்டுப்படுத்தி இயக்கப்படும் வெப்ப அணுக்கருச் சேர்க்கை பற்றிய பிரச்சினையைத் தீர்ப்பது ஆகும். வெப்ப அணுக்கருச் செயல்முறைகளைக் கட்டுப்படுத்தி இயக்குவதனால் நடைமுறை நோக்கில் எல்லையற்ற அளவு மின் ஆற்றலைப் பெறுவது சாத்தி

யம் ஆகும். மிக மிகச் சிக்கலான ஒரு பிரச்சினையின், அதாவது நிலையான பிளாஸ்மா (இதன் வெப்பம் லட்சக் கணக்கான, பத்து லட்சக் கணக்கான டிகிரிகளால் அளக்கப்படுகிறது) தயாரிக்கும் பிரச்சினையின் தீர்வை விஞ்ஞானிகள் மிக நெருக்கமாக அணுகிக்கொண்டிருக்கிறார்கள். பிளாஸ்மாப் பொருளை அறிதலும் அதில் நடக்கும் செயல்முறைகளைக் கட்டுப்படுத்தி இயக்கலும் சூரியனிலும் பிற விண்மீன்களிலும் நடக்கும் நிகழ்ச்சிகளைத் திரும்ப ஏற்படுத்துவதைக் குறிக்கும்.

சமூக விஞ்ஞானங்களின் வளர்ச்சியும் அவற்றின் யோசனைகள் நடைமுறையில் புகுத்தப்படுதலும் சோஷலிஸச் சமூகத்தில் இயற்கை விஞ்ஞானத்தின் நிறைவேற்றங்கள் பயன்படுத்தப்படுதல் போன்றே முக்கியத்துவம் உள்ளவை. பொருளியல் உற்பத்தி, ஆன்மீகப் பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உரிய விதிகளைச் சரியாகப் புரிந்துகொள்வதும், உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கு விஞ்ஞான ரீதியான திட்டங்கள் வகுப்பதும், எல்லாப் பொருள் வளங்களையும் ஆற்றல் வளங்களையும் பகுத்தறிவுக்கு இயைந்த வகையில் பயன்படுத்துவதும், தானியங்கி முறை அமைப்பின் சமூக விளைவுகளை ஆராய்வதும், இவை போன்ற வேறு பல பிரச்சினைகளும் முதல்தரமான சித்தாந்த, நடைமுறை முக்கியத்துவம் பெற்றுவிடுகின்றன.

சித்தாந்தம் சமூக-வரலாற்று நடைமுறையின் அடிப்படையில் வளம் பெறுவது மட்டும் இன்றி, தானும் பிரபஞ்சத்தைப் புரட்சிகரமாக மாற்றுவதற்கான வழியை நடைமுறைக்குக் காட்டுவதன் வாயிலாகப் பெருத்த மாற்றியமைக்கும் சக்தியாகத் தொண்டாற்றுகிறது. இந்த உண்மையைக் கருத்தில் கொண்டு சித்தாந்தத்தையும் நடைமுறையையும் ஒருமையில் ஆராய வேண்டும்,

## அத்தியாயம் ஆறு

# வரலாற்றுப் பொருள்முதல்வாதம் எதை ஆராய்கிறது

வரலாற்றுப் பொருள்முதல்வாதம் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் உறுப்பாக அமைந்த பகுதியாகும். சமூக வளர்ச்சிக்கு உரிய மிகப் பொதுவான விதிகளையும் இயக்கு சக்திகளையும் சமூக இருத்தல், சமூக உணர்வு, இவற்றின் பரஸ்பர சம்பந்தத்தையும் பற்றிய விஞ்ஞானம் ஆகும் அது. வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என்பது, சமூகம் பற்றிய தத்துவச் சித்தாந்தம், சமூக வாழ்க்கையை அறிவதற்கும் மாற்றி அமைப்பதற்கும் உரிய விஞ்ஞான முறை.

இந்த விஞ்ஞானம் திட்டவட்டமாக எதை ஆராய்கிறது எதைக் கற்பிக்கிறது? இந்தக் கேள்விகளுக்கு விடை அளிப்பதற்கு, கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ், இருவருக்கும் முன்பு சமூக வாழ்வு பற்றி நிலவிய புரிவைக் கூர்ந்து கவனிப்பதும், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் எப்படித் தோன்றியது, மார்க்ஸீயத்தின் ஸ்தாபகர்கள் சமூகம் பற்றிய கருத்துக்களில் விளைத்த புரட்சிகரமான மாற்றத்தின் சாரம் என்ன என்பவற்றை விளக்குவதும் அவசியம் ஆகும்.

## § 1. மார்க்ஸீயத்துக்கு முந்திய சமூக இயலில் சமூக வாழ்க்கை எவ்வாறு புரிந்துகொள்ளப்பட்டது

கார்ல் மார்க்ஸுக்கும் பிரெடெரிக் எங்கெல்ஸுக்கும் முன்பு சமூகம் பற்றி உண்மையான விஞ்ஞானம் நிலவவில்லை. ஆனால் சமூகத்தின் அமைப்பு பற்றியும் அதன் வளர்ச்சிக்கு உரிய

காரணங்கள், இயக்கு சக்திகள் ஆகியவை பற்றியும் அறிய மனிதர்கள் அக்கறை கொண்டிருக்கவில்லை என்று இதற்கு அர்த்தம் அல்ல. உதாரணமாக, பிரெஞ்சுக் கற்பனு-சோஷலிஸவாதிகள் அன்ரி ஸான்-ஸிமோன், ஷார்ல் பூரியே ஆகியோரும் ஆங்கிலேயர் ராபர்ட் ஓவனும் (*Robert Owen*) சமூக வாழ்வில் உற்பத்தி ஆற்றும் பெருத்த பங்கைச் சுட்டிக் காட்டினுர்கள். அரசியல் பொருளாதாரத்தையே சார்ந்திருக்கிறது என்று அவர்கள் வலியுறுத்தினுர்கள். மனிதனை மனிதன் சுறண்டுவது இல்லாத சோஷலிஸச் சமூகம் பற்றி அனேக ஊகங்களை அவர்கள் வெளியிட்டார்கள். 18ம் நூற்ருண்டின் இறுதியிலும் 19ம் நூற்ருண்டின் தொடக்கத்திலும் ஆங்கில அரசியல் பொருளாதாரத்தின் பிரதிநிதிகளாக இருந்த ஆதம் ஸ்மித்தும் டேவிட் ரிக்கார்டோவும் சமூகத்தின் வர்க்க அமைப்பு பொருளாதாரத்தாலேயே நிர்ணயிக்கப்படுகிறது என்பதைப் புரிந்து கொண்டிருந்தார்கள். 19ம் நூற்ருண்டின் தொடக்கத்தில் இருந்த பிரெஞ்சு வரலாற்று ஆசிரியர்களான ஔகுஸ்தேன் தியெர்ரி (*Augustin Thierry*), பிரான்சுவா கிஸோ (*Francois Guizot*), பிரான்சுவா மினியே (*Francois Mignet*), ஆகியோர் சமூகம் வர்க்கங்களாகப் பிரிவுபட்டிருப்பதையும் வர்க்கப் போராட்டத்தையும் பற்றிக் கூறினுர்கள்.

மார்க்ஸீயத்துக்கு முந்திய சமூக இயல் அனைத்திற்கும் இரண்டு முக்கியக் குறைபாடுகள் இயல்பாக இருந்தன என்று ''கார்ல் மார்க்ஸ்'' என்னும் தமது நூலில் வி. இ. லெனின் சுட்டிக்காட்டினுர். மார்க்ஸுக்கு முன்பு இருந்த சமூக இயலார், அதிகமாய்ப் போனல், மனிதர்களின் வரலாற்று நடவடிக்கைகளின் கருத்துவகையான நோக்கங்களை மட்டுமே ஆராய்ந்தார்கள். இந்த நோக்கங்கள் தோன்றுவதற்குக் காரணம் யாது என்பதை அவர்கள் ஆராயவில்லை. சமூக உறவுகளினது தொகுப்பின் வளர்ச்சியில் உள்ள புறநிலையான விதிமுறைகளை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை. இந்த உறவுகளின் வேர்களைப் பொருளியல் உற்பத்தியின் வளர்ச்சித் தரத்தில் அவர்கள் தேடிக் காணவில்லை. இதுதான் மார்க்ஸீயத்துக்கு முந்திய சமூக இயலின் குறைபாடுகளில் முதலாவது ஆகும்.

உதாரணமாக, ஜெர்மானியக் கருத்துமுதல்வாதித் தத்துவவாதி ஹெகலை எடுத்துக்கொள்வோம். மனிதர்கள் சொந்தத் தான்தோன்றித்தனத்தின்படி வரலாற்றை உருவாக்குவதில்லை

என்றும், இன்றியமையாத, விதிமுறைகளுக்கு உட்பட்ட செயல் முறை என்ற வகையிலேயே வரலாறு வளர்ச்சி அடைகிறது என்றும் ஹெகல் சரியாக எண்ணினர். ஆயினும் குறை என்னவென்ருல், ஹெகலின் கருத்துப்படி இந்த விதிமுறைகள் வரலாற்றுக்கே உரிய புறநிலே விதிமுறைகள் அல்ல, வெளியிலிருந்து அதற்குள் புகுத்தப்படுபவை. பரம கருத்து எனப்படும் ஒன்றின் இயக்கத்திலிருந்து அவை பிறக்கின்றன. வரலாற்று வளர்ச்சியின் எதார்த்தச் செயல்முறையை ஹெகல் இவ்வாறு திரித்து விட்டார்.

வரலாற்றைப் புரிந்துகொள்வதில் கருத்துமுதல்வாத நிலேகளேப் பொருள்முதல்வாதிகளும் மேற்கொண்டார்கள். சமூகத்தில் செயல்படுபவர்கள் உணர்வு உள்ள மனிதர்களே என்பதை அடிப்படையாகக் கொண்டு, மனிதர்களின் உணர்வே சமூக வளர்ச்சியின் முதன்மையான, நிர்ணயகரமான சக்தியாக விளங்குகிறது என்ற தவருன முடிவை அவர்கள் செய்தார்கள். மார்க்ஸீயத்துக்கு முற்பட்ட தத்துவத்தில் சமூக வளர்ச்சி பற்றிய பொருள்முதல்வாத விளக்கத்தை மற்ற எல்லோரையும்விட அருகாக நெருங்கியவர்கள் ருஷ்யப் புரட்சிகர ஜனநாயகவாதிகள் ஆவர். எனினும் அவர்கள்கூட, சமூக வளர்ச்சியின் தலேயூற்று மனிதர்களின் உணர்வே, மனிதச் சிந்தனே, கல்வி, இவற்றின் வளர்ச்சியே என்று எண்ணினுர்கள்.

மார்க்ஸீயத்துக்கு முந்திய சமூக இயலின் இரண்டாவது முக்கியக் குறைபாடு என்னவென்ருல், பொது மக்கள் திரளின் நடவடிக்கைகளே அது பரிசீலனே செய்யவில்லே என்பதே. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் வரலாற்றை உண்மையில் படைப்பவர்கள் திரளான பொதுமக்கள் அல்ல, அரசர்கள், படைத்தலேவர்கள், சமூக ஊழியர்கள் போன்ற தனிப்பட்ட பிரபல நபர்களே என்று மார்க்ஸுக்கு முற்பட்ட சமூக இயலார் கருதிவந்தார்கள். உதாரணமாக, கற்பனு-சோஷலிஸவாதிகளால் சமூக வளர்ச்சிக்கு உரிய விதிகளேப் புரிந்துகொள்ள முடியவில்லே. எனவே, முதலாளித்துவச் சமூகத்தின் வாழ்க்கை நிலேமைகளிலிருந்து அல்ல, ‘‘பகுத்தறிவு, நியாயம்’’ ஆக்கியவற்றின் தேவைகளிலிருந்து, மேதா விலாசம் பொருந்திய ஒரு தனி நபரின் விருப்பத்திலிருந்தும் சித்தத்திலிருந்தும் சோஷலிஸத்தைத் தோற்றுவிக்க அவர்கள் முயன்ருர்கள்.

தங்கள் காலம்வரை சோஷலிஸ அமைப்பு இன்னும் தோன்ருதது ஏன் என்பதைக் கற்பனு-சோஷலிஸவாதிகள் சிந்தித்து, சோஷலிஸத்தின் மேம்பாடுகளை மக்கள் நம்புமாறு செய்யக் கூடிய மேதாவி எவனும் இல்லாததே இதன் காரணம் என்று விளக்கம் கூறினர்கள். வேறு வார்த்தைகளில் சொன்னுல், அவர்கள் கருத்துப்படி சோஷலிஸம் சமூக வளர்ச்சியின் இன்றியமையாத விளைவு அல்லவே அல்ல. அது வெறும் நல்வாய்ப்பு, மேதை வாய்ந்த அறிவின் விளைவு எனவே அவர்கள் கருதினர்கள்.

சமூக வளர்ச்சியின் புறநிலையான, விதிமுறைக்கு ஒத்த தன்மையை முந்திய சமூக இயலார் புரிந்துகொள்ள முடியாதவாறு கருத்துமுதல்வாதமும் மாருநிலைவாதமும் குறுக்கிட்டன. மார்க்ஸுக்கு முந்திய சமூக இயலார், அதிகமாய்ப் போனுல், துண்டு துணுக்குகளாகப் பொறுக்கப்பட்ட பண்படாத விவரங்களை மட்டுமே, வரலாற்றுச் செயல்முறையின் தனித்தனி அம்சங்களது சித்திரிப்பையே தந்தார்கள் என்று கூறினர் வி. இ. லெனின். மொத்தத்தில் சமூகம் என்பது என்ன, அதன் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகள் யாவை என்பவற்றைப் புரிந்துகொள்ள அவர்களால் முடியவில்லை. தவிரவும், சமூக வாழ்வில் புறநிலையான விதிமுறைகள் எவையும் இல்லை, இருக்கவும் முடியாது என்ற கருத்து அவர்களில் சிலரிடையே பரவியிருந்தது.

சமூக வளர்ச்சிக்கு உரிய புறநிலை விதிமுறைகளை ஒப்புக்கொள்ள மறுப்பது மார்க்ஸுக்கு முந்திய சமூக இயலாருக்கு மட்டுமே அல்ல, சிறப்பாக நம் காலத்து ஏகாதிபத்திய பூர்ஷ்வாச் சமூக இயலாருக்கும் இயல்பானது ஆகும். இது முற்றிலும் புரியக்கூடியதே. ஏனென்ருல், சமூக வளர்ச்சிக்கு உரிய புறநிலை விதிமுறைகளை ஒப்புக்கொள்வது முதலாளித்துவத்தின் அழிவும் கம்யூனிஸத்தின் வெற்றியும் தவிர்க்க இயலாதவை என்ற முடிவையும் ஒப்புக்கொள்வது ஆகுமே.

### § 2. வரலாறு பற்றிய பொருள்முதல்வாதப் புரிவின் சாரம்

வரலாற்றுப் பொருள்முதல்வாதம் உருவாக்கப்பட்டது விஞ்ஞானச் சிந்தனையின் ஆகப் பெரிய வெற்றியாகத் திகழ்கிறது. மார்க்ஸும் எங்கெல்ஸும் ஆற்றிய பணி, மனித வரலாற்றின் வளர்ச்சி விதியைக் கண்டுபிடித்தார்கள் என்பதே. மனி

தர்கள் முதன்முதலில் உண்ணவும் பருகவும் உடுக்கவும் வசிக்கும் இடம் பெறவும் வேண்டும், அதன் பிறகே அரசியல், விஞ்ஞானம், கலை முதலியவற்றில் ஈடுபடவேண்டும் என்ற சாதாரண உண்மையை அவர்கள் சுட்டிக்காட்டினர்கள். வேறு வார்த்தைகளில் சொல்வதானல் மனிதர்களுக்கு முதன்மையாகத் தேவைப்படுபவை வாழ்க்கைக்கு உரிய பொருளியல் சாதனங்களே. ஆனல் இவற்றைப் பெறுவதற்கு மனிதர்கள் இவற்றை உற்பத்தி செய்வது அவசியம். இதன் அர்த்தம் என்னவென்றல் சமூகத்தின் வாழ்க்கைக்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையாக இருப்பது பொருளியல் நலங்களின் உற்பத்தியே என்பதே. அரசாங்க நிறுவனங்களும் உரிமைகள் பற்றிய கருத்தோட்டங்களும் கலையும் ஒழுக்க நெறியும் மனிதர்களின் மதக் கருத்துக்களுங்கூட இந்த அடிப்படைமீதே நிலவுகின்றன, வளர்கின்றன. ''மனிதர்களின் இருத்தலை நிர்ணயிப்பது அவர்களது உணர்வு அல்ல, மாருக, அவர்களது சமூக இருத்தலே அவர்களுடைய உணர்வை நிர்ணயிக்கிறது''[1] என்று எழுதினர் கார்ல் மார்க்ஸ். பொருள்முதல்வாதம் சமூக வாழ்வுக்குப் பொருந்துவதை இந்த நோக்குநிலைதான் குறிக்கிறது.

சமூக இருத்தல் என்பதில் சமூகத்தின் பொருளியல் வாழ்வு அனைத்தும் அடங்கும். முதன்மையாக உற்பத்தி முறையும், மனிதர்களின் சித்தத்தின்மீதோ உணர்வுமீதோ சார்பு இன்றி, பொருளியல் நலங்களின் உற்பத்திச் செயல்முறையில் உருவாகும் மனிதர்களின் பொருளாதார உற்பத்தி உறவுகளும் இதனல் குறிக்கப்படுகின்றன. உற்பத்தி முறை சமூக இருத்தலின் பிரதான, நிர்ணயகரமான அம்சமாக விளங்குகிறது. சமூக வளர்ச்சியை நிர்ணயிக்கும் செயல் உற்பத்தி முறைக்கே உரியது

சமூக இருத்தல் சமூக உணர்வில் பிரதிபலிக்கிறது. அரசியல், ஒழுக்கநெறி, அழகியல், தத்துவம் ஆகியவை பற்றிய நோக்குகளும் கருத்துக்களும் சித்தாந்தங்களும் வெவ்வேறு மத எண்ணங்களும் சமூக உணர்வில் அடங்கியவை. சமூக உணர்வு சமூகத்தின் ஆன்மீக வாழ்வின் பரப்பு எல்லையை உருவாக்குகிறது.

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய விமர்சனத்துக்கு'' முன்னுரை, நூல்திரட்டு, தொகுதி 13, பக்கம் 7.

சமூக இருத்தல் சமூக உணர்வை நிர்ணயிக்கிறது, அதற்கு முதலானதாக விளங்குகிறது. அதே சமயம் இவை ஒன்ருேடு ஒன்று பிரிக்க முடியாதபடி இணைந்தவை. சமூக வாழ்வின் இரு அம்சங்களாக இவை விளங்குகின்றன. இவற்றை ஒன்றே எனக் கருதுவதோ ஒன்றிலிருந்து ஒன்றைத் தனிப் பிரிப்பதோ கூடாது. சமூக இருத்தல் முதலாவது, சமூக உணர்வு இரண்டாவது என் பதை ஒப்புக்கொள்வதுதான் சமூகம் பற்றிய அடிப்படையான தத்துவப் பிரச்சினை குறித்த மார்க்ஸீயப் புரிவின் சாரம் ஆகும்.

சமூக வாழ்வை ஆராய்கையில் தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினைக்குச் சரியான, பொருள்முதல்வாதத் தீர்வு காண்பது மிகப் பெருத்த முக்கியத்துவம் உள்ளது. சமூக வாழ்வில் முதன் மையானதும் நிர்ணயகரமானதும் பொருளியல் உற்பத்தியே என்ற முடிவுக்கு வர இது உதவுகிறது. பொருளியல் நலங்களை நேர்முகமாகப் படைக்கும் உழைப்பாளி மக்களே உற்பத்தியின் பிரதானச் சக்தியாக விளங்குகிருர்கள் ஆதலால் வரலாற்றில் நிர்ணயகரமான பங்கு ஆற்றுபவர்களும் அவர்களே ஆவர். பழைய கருத்துமுதல்வாதத் தப்பபிப்பிராயத்தின்படி அசாதா ரணமான தனி நபர்களே வரலாற்றைப் படைப்பவர்கள் என்று கருதப்பட்டது. வரலாற்றில் திரளான பொதுமக்கள் ஆற்றும் பங்கே நிர்ணயகரமானது என்பது புரிந்துகொள்ளப்பட்டதனுல் இந்தத் தப்பபிப்பிராயம் அகற்றப்பட்டுவிட்டது.

உற்பத்தி முறையின் நிர்ணயகரமான முக்கியத்துவம் கண்டறி யப்பட்டதால், சமூகம் எந்த விதிகளின்படி வாழ்ந்து வளர்ந்து வருகிறதோ அவற்றைப் புரிந்துகொள்வது சாத்தியம் ஆயிற்று. வி. இ. லெனின் சுட்டிக்காட்டியதுபோல, சமூக வளர்ச்சி பற்றிய விதிகள் கண்டறியப்பட்டதுமே, வரலாற்றையும் அரசி யலையும் குறித்த நோக்குக்களில் விரிவாக நிலவிய குழப்பமும் தான்தோன்றித்தனமும் மறைந்து, ''அவற்றின் இடத்தில் வியப் பூட்டும் முழுமையும் இசைவும் கொண்ட விஞ்ஞானச் சித்தாந் தம் வந்துவிட்டது. சமூக வாழ்வின் ஒரு அமைப்பிலிருந்து, உற்பத்திச் சக்திகளது வளர்ச்சியின் விளைவாக, இன்னும் உயர்ந்த வேருெரு அமைப்பு எவ்வாறு வளர்கிறது என்பதை இது காட்டுகிறது....''[1]

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 23, பக்கம் 44.

சமூக வாழ்வு ஏறுமுகமாக வளர்ச்சி அடைகிறது. மனிதர்கள் உற்பத்திச் சக்திகளை அபிவிருத்தி செய்கிறார்கள். விளைவாக, இயற்கைமீது மனிதனுடைய ஆதிக்கம் மிகுகிறது. உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியோடு கூடவே மனிதர்களின் உற்பத்தி உறவுகளும் அவர்களது அரசியல், ஆன்மீக வாழ்க்கையும் செவ்வைப்படுகின்றன. வரலாற்று வளர்ச்சிச் செயல்முறையில் தாழ்நிலையில் உள்ள ஒரு சமூக அமைப்பின் இடத்தில் அதை விட உயர்ந்த வேறொரு அமைப்பு வருகிறது. சமூகத்தில் முன்னேற்றம் நிலவுகிறது என்பதை இவை எல்லாம் காட்டுகின்றன.

பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பின் இடத்திற்கு அடிமைச் சொந்தக்கார அமைப்பும், அடிமைச் சொந்தக்கார அமைப்பின் இடத்திற்கு நிலப்பிரபுத்துவ அல்லது பண்ணையடிமை அமைப்பும் அதற்குப் பதிலாக முதலாளித்துவ அமைப்பும் வந்ததையும் முதலாளித்துவ அமைப்பின் இடத்துக்குக் கம்யூனிஸ அமைப்பு வருவதையும் வரலாறு அறிவிக்கிறது. சமூக வளர்ச்சிக்கு உரிய திட்டவட்டமான சட்டங்களின் காரணமாக இந்தச் செயல்முறை புறநிலையாக நிறைவேற்றப்படுகிறது. முன்னேற்றப் பாதையில் சமூகத்தின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்துவது சாத்தியம் அல்ல. இந்த விஞ்ஞானத்துக்கு உரிய விஷயம் யாது அது எதை ஆராய்கிறது என்பதைக் கவனிப்போம்.

### § 3. வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என்பது சமூக வளர்ச்சிக்கு உரிய மிகப் பொதுவான விதிகளையும் இயக்கு சக்திகளையும் பற்றிய விஞ்ஞானம்

சமூக வாழ்க்கை சிக்கலானது, பல துறைகள் கொண்டது எனவேதான் சமூகம் பற்றிய பல விஞ்ஞானங்களுக்கு உரிய விஷயமாக அது திகழ்கிறது. இவற்றில் ஒவ்வொரு விஞ்ஞானமும் சமூக வாழ்க்கையின் எவையேனும் திட்டவட்டமான நிகழ்ச்சிகளையோ அம்சங்களையோ ஆராய்கிறது. உதாரணமாக வரலாற்று இயல் மக்கள் இனங்களுடையவும் நாடுகளுடையவும் வரலாற்றை முழு விவரங்களுடன் எல்லாத் தரப்புக்களிலிருந்தும் ஆராய்கிறது. ஒரு நாடு அல்லது நாடுகளின் தொகுப்பினது வரலாற்று வளர்ச்சியின் ஏதேனும் ஒரு குறித்த காலக்கட்டத்தில் அவற்றின் வாழ்க்கைக்கு, அன்றாட நடப்புக்கு உரிய மிக மிக அற்ப விவரங்களில் வரலாற்று இயல் அக்கறை செலுத்து

கிறது. உற்பத்தி, வினியோகம், பரிவர்த்தனை ஆகியவற்றுக்கு உரிய பொருளாதார விதிகளை அரசியல் பொருளாதாரம் ஆராய்கிறது. அழகியலோ, கலையின் வளர்ச்சி பற்றிய விதிமுறைகளை ஆராய்வதில் நாட்டம் செலுத்துகிறது. வேறு வார்த்தைகளில் சொன்னால் இவை எல்லாமும் அம்சரீதியான, திட்டவட்டமான விஞ்ஞானங்கள் எனப்படும் மற்றவையும் சமூக வாழ்வின் தனித் தனித் துறைகளுக்கு உரிய விதிமுறைகளை மட்டுமே ஆராய்கின்றன.

வரலாற்றுப் பொருள்முதல்வாதமோ, மொத்தமாக மனித சமூகம் முழுவதையும், அதன் வளர்ச்சிக்கு உரிய மிகப் பொதுவான விதிகளையும் தனது ஆராய்ச்சிக்கு விஷயமாக எடுத்துக் கொள்ளுகிறது. அதாவது, சமூக வாழ்க்கையின் ஏதேனும் ஒரு காலப்பகுதி அல்லது சகாப்தத்துக்கு மட்டுமின்றி அதன் எல்லாக் கட்டங்களுக்கும் மொத்தமாக இயல்பான நிகழ்ச்சிகளை வரலாற்றுப் பொருள்முதல்வாதம் ஆராய்கிறது.

சமூக வளர்ச்சிக்கு உரிய மிகப் பொதுவான அடிப்படை விதிகளை ஆராய்வதும் அவற்றின் பரஸ்பரத் தொடர்புகளையும் பரஸ்பரச் சார்பையும் கண்டறிவதுமே வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தின் முதன்மையான கடமை ஆகும்.

சமூகத்தின் வளர்ச்சிக்குரிய விதிகளின் தன்மையும் அவற்றின் தோற்ற வடிவங்களும் செயல்பாட்டு வடிவங்களும் வெவ்வேறானவை. மனிதகுல வரலாறு முழுவதிலும் செயல்படும் பொது விதிகள் உள்ளன. உதாரணமாக, சமூக இருத்தல் சமூக உணர்வை நிர்ணயிக்கிறது என்ற விதி இத்தகையதே.

ஒரு சில சமூகப் பொருளாதார அமைப்புக்களில் மட்டுமே செயல்படும் விதிகள் உள்ளன. உதாரணமாக வர்க்கப் போராட்டம் பற்றிய விதி, சமரசப்படுத்த முடியாத வர்க்கங்கள் நிலவும் சமூகங்களில் மட்டுமே செயல்படுகிறது.

இறுதியாக, தனி அமைப்புக்கு மட்டுமே இயல்பான விதிகளும் உள்ளன. உதாரணமாக, உற்பத்திப் போட்டியும் அராஜகமும் பற்றிய விதி முதலாளித்துவத்துக்கு இயல்பானது, பொருளாதாரத்தின் திட்டப்படி அமைந்த வளர்ச்சி விதி சோஷலிஸத்துக்கு இயல்பானது.

சமூக வாழ்வுக்கு உரிய விதிகள், இயற்கையின் விதிகள் போன்றே, புறநிலையாக, அதாவது மனிதனுடைய உணர்வு மீதும் சித்தத்தின்மீதும் சார்பு இன்றி நிலவுகின்றன. மனிதர்கள்

அவற்றைப் பற்றி ஒன்றுமே அறியாது இருக்கலாம். ஆயினும் இந்த விதிகள், பொருத்தமான நிலைமைகள் உள்ள எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் செயல்படுகின்றன. இதன் பொருள் என்னவென்றால், சமூக வாழ்வுக்கு உரிய விதிகளை இயற்றவோ, மாற்றவோ, அழிக்கவோ மனிதர்களால் முடியாது என்பதே. இந்த விதிகளைக் கண்டுபிடிக்கவும், அறியவும் பின்னர் இவற்றைத் தங்கள் நலன்களுக்காகப் பயன்படுத்தவும் மட்டுமே அவர்களால் முடியும்.

சமூக வாழ்வுக்குரிய விதிமுறைகள் இயற்கையின் விதிமுறைகளுடன் ஒன்றாக மாட்டா. இயற்கையில் விதிகளின் செயல்பாடு தானாகவே நிகழ்கிறது. புதிய விண்மீன்கள் உதிப்பதோ, பழைய விண்மீன்கள் மறைவதோ, கடலின் ஏற்றவற்றங்களோ மனிதர்களின் உணர்வுக்கும் விருப்பத்துக்கும் புறம்பாக ஏற்படுகின்றன. சமூகத்திலோ, விஷயம் வேறு. இங்கே விதிகள் மனிதர்களின் நடவடிக்கைகள் வாயிலாகவே தங்களுக்கு வழி அமைத்துக்கொள்கின்றன. உணர்வு வாய்ந்துள்ள மனிதர்கள் திட்டவட்டமான குறிக்கோள்களைத் தங்களுக்கு முன்னே வைத்துக்கொண்டு அவற்றை அடையப் பாடுபடுகிறார்கள் என்பது இதைத் தெளிவுபடுத்துகிறது.

சமூக வாழ்வின் விதிமுறைகள் மனிதர்களின் உணர்வு பூர்வமான நடவடிக்கைகள் வாயிலாகவே வெளிப்படுகின்றன என்பதால், அவை உணர்வினாலேயே நிர்ணயிக்கப்படுகின்றன என்றும், அவை புறநிலையானவை அல்ல என்றும் அர்த்தமாகாது. இல்லை, அவை புறநிலையானவை. இயற்கையின் விதிகள் போன்றே அவை மாற்ற முடியாத, தவிர்க்க இயலாத வகையில் செயல்படுகின்றன. எடுத்துக்காட்டாக, கம்யூனிஸத்தை நோக்கி மனித குலத்தின் முன்னேற்றப் போக்கைத் தங்கள் விருப்பப்படி தடுத்து நிறுத்திவிடுவது ஏகாதிபத்தியவாதிகளுக்கு இயலாது. இது வரலாற்று நோக்கில் தவிர்க்க முடியாதது.

சமூக வளர்ச்சிக்குரிய புறநிலை விதிகளது செயல்பாட்டின் தன்மையை, வரலாற்று ரீதியான இன்றியமையாமை, மனிதனின் சுதந்திரம் ஆகியவை பற்றிய பிரச்சினையின் தொடர்பில் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் ஆராய்கிறது. மனிதர்களது உணர்வுபூர்வமான செயல்பாட்டுக்கும் இயற்கையினுடையவும் சமூகத்தினுடையவும் புறநிலை விதிகளுக்கும் இடையிலுள்ள பரஸ்பர உறவுகளை இந்தக் கருதுகோள்கள் குறிக்கின்றன.

மனிதர்கள் தங்கள் நடவடிக்கைகளிலும் செய்கைகளிலும் சுதந்திரமானவர்களா அல்லது இயற்கைக்கும் சமூகத்துக்கும் உரிய விதிகளின் கைதிகளாகவும் அடிமைகளாகவுமே அவர்கள் எப்போதும் இருக்கிருர்களா? மார்க்ஸீயத் தத்துவவாதிகளும் பூர்ஷ்வாத் தத்துவவாதிகளும் இந்தக் கேள்விக்கு வெவ்வேறு விடைகள் அளிக்கிருர்கள்.

மனிதனுடைய செய்கைகள் மனிதர்களது சித்தத்தாலும் உணர்வாலும் மட்டுமே நிர்ணயிக்கப்படுகின்றன என்றும் சமூகத்தின் புறநிலை விதிகளுடன் அவை எவ்வகையிலும் தொடர்பற்றவை என்றும் அகநிலைக் கருத்துமுதல்வாதத்தின் ஆதரவாளர்களான சில பூர்ஷ்வாத் தத்துவவாதிகள் வலிந்துரைக்கிருர்கள். மனிதன் தனக்கு எப்படி உசிதமாகப் படுகிறதோ அப்படியே எப்போதும் செயல் புரிகிருன் என்பது அவர்களுடைய அபிப்பிராயம். இத்தகைய நோக்கு நிலை தன்னிச்சை வாதம் எனப்படுகிறது. மனிதர்களது நடவடிக்கையில் தான் தோன்றித்தனத்தை இது நியாயப்படுத்துகிறது.

மனிதர்களுடைய எல்லா நடவடிக்கைகளும் செய்கைகளும் அவர்கள்மீது சார்பு அற்ற வெளிச் சூழ்நிலைகளிஞல்தான் நிர்ணயிக்கப்படுகின்றன என்று வேறு சில பூர்ஷ்வாத் தத்துவவாதிகள் எண்ணுகிருர்கள். தங்கள் செயல்களை உரிய திசையில் செலுத்தவும் நிகழ்ச்சிகளின் போக்குமீது உணர்வுபூர்வமாகச் செல்வாக்கு விளைக்கவும் மனிதர்கள் வலிமை அற்றவர்களாக இருப்பது இதனுலேயே என்கிருர்கள் இவர்கள். இந்தக் காரணத்திஞலேயே தனது செய்கைகளுக்கான எல்லாவிதப் பொறுப்பும் மனிதனிடமிருந்துஅகற்றப்பட்டுவிடுகிறது. இந்த நோக்கு நிலை விதிவாதம் எனப்படுகிறது. நிலவும் வெளிச் சூழ்நிலைகளுக்கு முன் முடி பணிவதை இது நியாயப்படுத்துகிறது. சமூக வாழ்வின் வளர்ச்சிக்கு உரிய விதிகளை அறிவதும் பயன்படுத்துவதும் இயலாதவை என்று கூறுகிறது.

தன்னிச்சைவாதமும் விதிவாதமும் தவருன சித்தாந்தங்கள். மனிதர்களது நடவடிக்கைகளின் இன்றியமையாமையையும் சுதந்திரத்தையும் இயக்க இயல் வகைப்பட்ட பரஸ்பரத் தொடர்பில் கவனித்து நோக்கவேண்டும். வரலாற்று வகைப்பட்ட இன்றியமையாமை என்பது, சமூக வளர்ச்சி விதிகளின் செயல்பாட்டிலிருந்து தவிர்க்க இயலாதவாறு தோன்றுவது ஆகும். மனிதர்களின் செய்கைகளை அது நிர்ணயிக்கிறது. ஆனுல் மனி

தர்களும் வரலாற்று வகைப்பட்ட இன்றியமையாமையைக் கருத்தில் எடுத்துக்கொண்டு வரலாற்றுப் போக்குமீது பாதிப்பு விளைக்கக் கூடும். இந்த இன்றியமையாமை சமூக வளர்ச்சிக் குரிய விதிகளின் வடிவில் நிலவுகிறது. எனவே, இவ்விதிகளை அறிந்து, அவற்றுக்கு இணங்கச் செயல்படுவதன் வாயிலாகவே மனிதன் உண்மையான சுதந்திரத்தைப் பெறுகிறான். மனித னுடைய சுதந்திரம், இயற்கையினுடையவும் சமூகத்தினுடை யவும் விதிகளிலிருந்து விடுபடுதல் என்ற கற்பனைச் சுதந்திரம் அல்ல, இந்த விதிகளை அறிந்துகொள்வதே, இவற்றை நடை முறைச் செயல்களில் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பே ஆகும் என்று சுட்டிக் காட்டினார் பிரெடெரிக் எங்கெல்ஸ். ஆகவே சுதந்திரம் என்பது, இன்றியமையாமையை அறிதலும் செய்கைபற்றிய ஞானத்துடன் செயலாற்றும் திறனுமே தவிர வேறில்லை.

சமூக வாழ்க்கையின் வளர்ச்சிக்கு உரிய விதிகளை அறிதலும், மனிதர்களது நலன்களின் பொருட்டு அவற்றை உணர்வுபூர்வ மாகப் பயன்படுத்தலும் ஸ்தூல நிலைமைகளைப் பொறுத்திருக் கின்றன. வர்க்கங்களின் சமரசப்படுத்த முடியாத பகைமையை அஸ்திவாரமாகக் கொண்ட சமூகங்களில், சமூக வளர்ச்சிக்குரிய விதிமுறைகளும் வரலாற்றுவகைப்பட்ட இன்றியமையாமையும் மனிதர்களால் சமாளிக்க முடியாத இயற்கைச் சக்தி போல வெடித்துக் கிளம்புகின்றன. இதற்கு உதாரணமாக முதலாளித்துவச் சமூகத்தை எடுத்துக்கொள்ளலாம். பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் இதைச் ''சுதந்திர உலகம்'' என்று அழைக் கிறார்கள். ஆனால் இந்த உலகில் நிலவும் சுதந்திரம் எத்தகை யது? முதலாளித்துவச் சொத்துரிமையின் ஆதிக்கம் உற்பத்தி யை ஒரே அரசாங்கத் திட்டத்தின்படி இயக்கி நடத்த வாய்ப்பு இல்லாதவாறு அடிக்கிறது. இந்தச் சமூகத்தின் விதிகள், சிறப் பாக உற்பத்திப் போட்டியும் அராஜகமும் பற்றிய விதி, கண் ணற்ற அழிவுச் சக்தியாக இங்கே செயல்படுகின்றன. மனிதர் களைச் சந்தர்ப்பத்தின் அடிமைகளாக, உற்பாதச் சக்திகளின் விளையாட்டுக் கருவிகளாக இவை மாற்றிவிடுகின்றன. முதலா ளித்துவத்தில் சமூக உறவுகள் மக்களுக்கு விரோதமானவை, அவர்களுக்கு எதிர் நிற்பவை, அவர்கள்மீது ஆதிக்கம் செலுத் துபவையாக உள்ளன. சமூக வளர்ச்சிக்கு உரிய விதிகள் உணர்வுபூர்வமாகப் பயன்படுத்தப்படுவது பற்றிய பேச்சுக்கே

இங்கே இடமில்லே. எனவே சுதந்திரம் பற்றிய பேச்சுக்கும் இங்கே இடம் கிடையாது.

சமரசப்படுத்த முடியாத வர்க்கங்கள் அற்ற கம்யூனிஸ அமைப்பின் விஷயமே வேறு. சோஷலிஸப் புரட்சி மனிதனை மனிதன் சுறண்டுவதை ஒழித்துவிட்டது, உற்பத்திச் சாதனங்கள் பொதுவுடைமை ஆக்கப்பட்டதன் அடிப்படையில் புதிய உற்பத்தி உறவுகளை நிலைநாட்டிவிட்டது. சமூக வளர்ச்சிக்குரிய விதிகள் நாசகரமான பாதிப்பு விளைப்பதை சோஷலிஸ சமூகத்தில் நிறுத்திவிடுகின்றன. தங்கள் வாழ்க்கை நிலைமைகளை மனிதர்கள் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்துவிடுகிறார்கள். மனிதன் சுதந்திரம் உள்ளவன் ஆகிவிடுகிறான்.

சோஷலிஸத்தில் மனிதனுடைய சுதந்திரம், சமூக வளர்ச்சிக்குரிய விதிகளின் புறநிலைத் தன்மையின் மறுப்பு ஆகாது, வரலாற்று வகைப்பட்ட இன்றியமையாமையின் மறுப்பு ஆகாது என்று கூறவே தேவையில்லை. வரலாற்று வகைப்பட்ட இன்றியமையாமை கம்யூனிஸ அமைப்பிலும் நிலவுகிறது. ஆனால் இங்கே மனிதர்களின் ஆக்கச் செயல்கள் சோஷலிஸத்துக்கு முன் இருந்தது போல தான்தோன்றித்தனமாக இருப்பதில்லை. சமூக வளர்ச்சிக்குரிய விதிகளை அறிந்துகொண்டு மனிதர்கள் அவற்றைத் தங்கள் நடைமுறைச் செயல்களில் பயன்படுத்துகிறார்கள். சோஷலிஸம், கம்யூனிஸம், இவற்றின் கட்டுமானத்தில் மனிதர்களின் உணர்வுபூர்வமான நடவடிக்கைகள் புறநிலை விதிமுறைகளாக விளங்குகின்றன. இந்த விஷயமே சமூக வாழ்வின் எல்லாத் துறைகளிலும் மனிதனது சுதந்திரத்திற்குக் காரணம் ஆகிறது.

சமூக வளர்ச்சிக்குரிய விதிகள் பற்றிய அறிவு மனிதர்களின் நடைமுறைச் செயல்களுக்கு மிகப் பெரிய முக்கியத்துவம் உள்ளது ஆகும். நடப்புச் சூழ்நிலையைச் சரியாகப் புரிந்துகொள்ளவும் வருங்காலத்தில் நிகழ்ச்சிகள் எவ்வாறு வளர்ச்சி அடையும் என்பதை முன்காணவும் இந்த அறிவு அவர்களுக்கு உதவுகிறது. தற்கால நிலைமைகளில், மனிதகுலம் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்கும் சோவியத் நாட்டில் சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்கும் பரிணமித்துக்கொண்டிருக்கும் காலப்பகுதியில், இந்த அறிவு சிறப்பாக அவசியமானது.

சமூக வளர்ச்சி விதிகளது புறநிலைத் தன்மையைக் கணக்கில் எடுத்துக்கொள்ள இயலாமை அல்லது விருப்பமின்மை,

சித்தாந்தத்திலும் செயல்முறையிலும் படுமோசமான தவறு கள் விளையக் காரணம் ஆகிறது. நடப்புச் சூழ்நிலையைப் புரிந்து கொள்ளவும் நிகழ்ச்சிகளின் போக்கைச் சரியாக முன்காண வும் அது வாய்ப்பு இல்லாதவாறு செய்கிறது.

## § 4. வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தின் படைப்புத் தன்மை

வரலாற்றுப் பொருள்முதல்வாதம் படைப்புத்தன்மை கொண்ட விஞ்ஞானம். எல்லாக் காலங்களுக்கும் வாழ்க்கையின் எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் பொருந்தக் கூடிய, கட்டி தட்டிப்போன சூத்திரங்களும் முடிவுகளும் கொண்டது அல்ல அது. அதன் படைப்புத் தன்மை இவ்விஷயத்தில்தான் அடங் கியுள்ளது. அது புரட்சிச் சித்தாந்தம் ஆதலால், இருந்த இடத்திலேயே நின்றுகொண்டிராமல், ஓயாது வளர்ச்சி அடைந்துகொண்டிருக்கிறது. தொழிலாளி வர்க்கம், அதன் கட்சிகள், இவற்றின் நடைமுறைச் செயல்களின் அடிப்படையில் பெறப்படும் புதிய முடிவுகளால் அது வளம் அடைந்த வண் ணமாக இருக்கிறது. எனவேதான் அது வறட்டுச் சூத்திரமாக இன்றிச் செயலுக்கு வழிகாட்டியாக இருக்கிறது.

இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என்னும் புதிய உலகக் கண்ணோட்டத்தை உருவாக்கியதன் வாயிலாக, கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் மாபெரும் விஞ்ஞான அருஞ்செயலை நிறைவேற்றினார்கள். மார்க்ஸீயப் போதனையைப் புதிய வரலாற்றுச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு விரிவும் வளமும் படுத்தினார் வி. இ. லெனின். ஏகாதிபத்தியக் காலக்கட்டத்தில் முதலாளித்துவத்தின் பொருளாதார, அரசியல் வளர்ச்சி ஒரு சீராக இராது என்ற விதியை அவர் வரலாற்றுப் பொருள்முதல்வாதத் துறையில் கண்டுபிடித்தார். சோஷலிஸப் புரட்சிச் சித்தாந்தத்தையும் தனியான ஒரு நாட்டில் சோஷலிஸம் நிறுவப்படுவது சாத்தியமே என்ற போதனையை யும் அவர் உருவாக்கினார். வெவ்வேறு சமூக அமைப்புக்கள் கொண்ட நாடுகளின் சமாதான சகவாழ்வு பற்றிய கோட்பாட் டை அவர் முன்வைத்தார்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிக் காங்கிரஸ்களிலும் மத்தியக் கமிட்டியின் முழுக் கூட்டங்களிலும் நிறைவேற்றப்

பட்ட தீர்மானங்கள் வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தை மேலும் வளர்வுறுத்தின. தற்காலத்தின் மிக முக்கிய தஸ்தாவேஜுகளாக விளங்கும் இவற்றில் கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படை நிறுவுவதற்கும், கம்யூனிஸ முறைக்கு இயைந்த சமூக உறவுகளை உருவாக்குவதற்கும் புது மனிதனைப் பயிற்றி வளர்ப்பதற்கும் உரிய வழிகள் குறிக்கப்பட்டுள்ளன.

உதாரணமாக, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 23 வது காங்கிரஸ் கம்யூனிஸத்தை நோக்கி மனிதகுலம் வளர்ச்சி அடைவதற்கான வழிகளை வரலாற்றின் புறநிலை விதிகள் பற்றிய அறிவை ஆதாரமாகக் கொண்டு தனது தீர்மானங்களில் விஞ்ஞானரீதியாக நிச்சயித்தது. தற்போதையக் காலக் கட்டத்தின் மிக முக்கியப் புரட்சிச் சக்திகளான கம்யூனிஸ இயக்கம், தேசிய விடுதலை இயக்கம் ஆகியவையும், போருக்கு எதிராக, சமாதானத்தின் பொருட்டு நடக்கும் பொது ஜன நாயக இயக்கமும் ஆற்றும் பங்கையும் அவற்றின் முக்கியத்துவத்தையும் அது துல்லியமாகப் பிரமாணப்படுத்தியது. சர்வ தேசக் கம்யூனிஸ இயக்கத்தின் ஒற்றுமையும் ஒருமைப்பாடும், ஏகாதிபத்தியவாதத்துக்கு எதிராக மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகளின் நடவடிக்கைகளில் ஒருமையும் உலகம் முழுவதிலும் கம்யூனிஸத்தின் வெற்றியை உறுதிப்படுத்துகின்றன என்று இந்தக் காங்கிரஸ் தனது தீர்மானங்களில் குறித்தது.

வரலாற்றுப் பொருள்முதல்வாதம் படைப்புத் தன்மையுடன் விரிவுபடுத்தப்படுவதைக் காட்டும் உதாரணமாக விளங்குகின்றன 1957லும் 1960லும் நடந்த கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளின் பிரதிநிதிகளுடைய மகாநாடுகளது நடவடிக்கை விவரங்கள். மாபெரும் அக்டோபர் சோடிலிஸப் புரட்சிக்குப் பின்னர் நிகழ்ந்துள்ள வரலாற்று முன்னேற்றங்கள் பற்றிய ஆழ்ந்த பகுப்பாய்வு இந்த விவரங்களில் தரப்பட்டுள்ளது. முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு நிகழும் காலக்கட்டம் என்ற வகையில் தற்போதையக் காலக்கட்டத்தின் சிறப்புத்தன்மை அவற்றில் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. உலகக் கம்யூனிஸ இயக்கத்தின் பொது வளர்ச்சிப் போக்கு வரையறுக்கப்பட்டிருக்கிறது. சமாதானம், தேசிய விடுதலை, ஜனநாயகம், சோஷலிஸம் ஆகியவற்றுக்கான போராட்டத்தில் மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகளின் போர்த்

தந்திரமும் செயல் தந்திரமும் சூத்திர வடிவில் தரப் பட்டுள்ளன.

சோஷலிசச் சமூகத்தின் வளர்ச்சிக்கு உரிய விதிகள் பற்றிய ஆழ்ந்த ஞானம் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் நடைமுறைச் செயல்கள் எல்லாவற்றுக்கும் இயல்பானதாக அமைந்திருக்கிறது. மார்க்ஸீய-லெனினீய விஞ்ஞானச் சித்தாந்தத்தைப் படைப்புத் தன்மை வாய்ந்த முறையில் விரிவுபடுத்தல், உழைப்பாளி மக்களின் நடைமுறைச் செயல்களுடனும் கம்யூனிஸ உணர்வில் பொது மக்கள் திரளைப் பயிற்றி வளர்ப்பதுடனும்இந்தச் சித்தாந்தத்தை உறுப்பிணைவுகொண்ட வகையில் ஒன்றுபடுத்தல் ஆகியவற்றில் கட்சி விசேஷக் கவனம் செலுத்துகிறது.

மற்ற மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகளும் வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தின் அடிப்படை வரையறுப்புக்களுக்கு இணங்கவே தங்கள் நடைமுறைச் செயல்களைத் திட்டப்படுத்திக்கொள்கின்றன. முதலாளித்துவத்திலிருந்து சோஷலிசத்துக்குப் பரிணமிப்பது பற்றிய பொது விதிமுறைகளை ஆழ்ந்து பகுத்தாய்ந்து, தங்கள் நாட்டின் வரலாற்று, தேசீயச் சிறப்புத் தன்மைகளுக்குப் பொருந்தும் வகையில் தங்கள் கொள்கையையும் போர்த் தந்திரத்தையும் செயல் தந்திரத்தையும் அவை உருவாக்கிக்கொள்கின்றன.

அத்தியாயம் ஏழு

# மனித சமூக வளர்ச்சிக்கு உரிய பொருளியல் நிலைமைகள்

கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் வரலாற்றின் பொருளியல் அர்த்தத்தைக் கண்டுபிடித்தது சமூகச் சிந்தனையில் மாபெரும் பாய்ச்சலாக, புரட்சியாக விளங்கியது. மனித சமூக வளர்ச்சியை விஞ்ஞான ரீதியாக விளக்குவதை இந்தக் கண்டுபிடிப்பு சாத்தியம் ஆக்கிற்று. சமூக-பொருளாதார அமைப்பு பற்றிய போதனையை மார்க்ஸீய-லெனினீயத்தின் ஸ்தாபகர்கள் சீரமைத்தார்கள். சமூகத்தில் நடக்கும் நிகழ்முறைகளைப் புரிந்துகொள்வதில் இது மிகப் பெருத்த பங்கு ஆற்றியது. இந்தப் போதனையின் அடிப்படை வரையறுப்புக்களைச் சுருக்கமாகப் பார்வையிடுவோம்.

## § 1. இயற்கையும் சமூகமும். சமூக வாழ்க்கைக்கு உரிய இயற்கை நிலைமைகள்

மனிதச் சமூகம் என்பது என்ன? அது நிலவுவதற்கான நிலைமைகள் யாவை? அதன் வளர்ச்சியையும் மாற்றங்களையும் இயக்கும் சக்திகள் எதில் அடங்கியுள்ளன? சுறண்டும் வகுப்புக்களின் கொள்கைவாதிகளால் இந்தக் கேள்விகளுக்கு விடையளிக்க முடியவில்லை, முடியவும் முடியாது. அவர்களுடைய கருத்துப்படி சமூக வாழ்வின் வளர்ச்சி ஆண்டவனுலோ, தூய இயற்கை நிலைமைகளாலோ, சிறப்புமிக்க தனி மனிதர்களின் செய்கைகளாலோ நிர்ணயிக்கப்படுகிறது. இத்தகைய நோக்குக்கள் விஞ்ஞானச் சார்பு அற்றவை, தவருனவை, சமூக வளர்ச்சியின் மெய்யான சித்திரத்தைத் திரிப்பவை.

இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடைகளை முதன்முதலில் அளித்தது வரலாற்றுப் பொருள்முதல்வாதம். இதன்படி, மனிதர்களுக்கு இடையே நிலவும் பொருளாதார, அரசியல், கொள்கைவாத உறவுகளின் திட்டவட்டமான தொகுப்பே சமூகம் ஆகும். சமூகத்தின் அஸ்திவாரமாக விளங்குபவை பொருளாதார உறவுகள், அதாவது பொருளியல் நலன்களின் உற்பத்திச் செயல்முறையின்போது மனிதர்களுக்கு இடையே உருவாகும் உறவுகள். சமூக (பொருளாதார, அரசியல், கொள்கைவாத) உறவுகள் வரலாற்று வளர்ச்சிப் போக்கில் மாறுதல் அடைகின்றன, மறுவடிவு பெறுகின்றன. காலத்துக்கும் இடவெளிக்கும் வெளியே நிலவும் ''தானேயான சமூகம்'' என்பது கிடையாது, வரலாற்றின் குறித்த காலக்கட்டங்களில் மனிதர்களின் சமூக அமைப்பினது ஸ்தூல வடிவங்களே உள்ளன என்பதை இந்த விஷயம் உணர்த்துகிறது. சமூகத்தின் ஒவ்வொரு ஸ்தூல வகைப் பிரிவும் திட்டவட்டமான, சிறப்புத்தன்மை கொண்ட, தனக்கு மட்டுமே உரிய இயல்புகளிலும் விதிமுறைகளிலும் மற்றதிலிருந்து வேறுபடுகிறது.

சமூகம் தோன்றி நிலவுவதற்கு உரிய அடிப்படை முதனிலையாக விளங்குவது இயற்கை ஆகும். இயற்கையின் வளர்ச்சிச் செயல்முறையிலேயே மனிதன் தோன்றினன், சமூக வாழ்வின் முதல் வடிவங்கள் உருவாயின. எனினும் இயற்கைக்கும் சமூகத்துக்கும் இடையே எவ்வித வேறுபாடும் கிடையாது என்று இதனல் அர்த்தம் ஆகாது. சமூகம் ஒன்றுக்கு மட்டுமே உரிய தனிப்பட்ட சமுதாய விதிமுறைகள் சமூகத்தில் செயல்படுகின்றன.

சமூகத்துக்கும் இயற்கைக்கும் இடையே நெருக்கமான பரஸ்பரப் பாதிப்பு நிகழ்ந்துகொண்டிருக்கிறது. மனிதர்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளியல் நலன்களின் உற்பத்தியை ஒழுங்கமைப்பதற்குக் குறித்த இயற்கை நிலைமைகள் தேவைப்படுகின்றன. சமூகத்தின் வளர்ச்சியினது குறித்த வரலாற்றுக் காலக்கட்டத்தில் அதனுடன் பரஸ்பரப் பாதிப்பு நிகழ்த்திக்கொண்டிருக்கும் இயற்கையின் பகுதி பூகோளச் சூழ்நிலை எனப்படும். பூமி, பூகர்ப்பம், கடல்கள், ஆறுகள், பருவநிலை, தாவர, விலங்கு உலகம் ஆகியவை இத்தகைய சூழ்நிலையைச் சேர்ந்தவை ஆகும்.

பூகோளச் சூழ்நிலை சமூக வாழ்வின்மீது, மனிதர்களின்

உற்பத்திச் செயல்மீது முக்கியமான பாதிப்பு நிகழ்த்துகிறது. மேலோங்கியிருக்கும் இயற்கைச் சூழ்நிலைகளுக்கு ஏற்றவாறு மனிதர்கள் சுரங்கத் தொழிலிலோ, பயிர்த்தொழிலிலோ, பிராணி வளர்ப்பிலோ, வேறு தொழில்களிலோ ஈடுபட்டிருக்கிறார்கள். உற்பத்திமீது பூகோளச் சூழ்நிலையின் பாதிப்பு பொருளியல் உற்பத்தியின் வளர்ச்சித் தரத்தையே பொறுத்திருக்கிறது. சமூக வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களில் உற்பத்திச் சக்திகள் மந்தமான வளர்ச்சி பெற்றிருந்தன. மண்ணின் வளம், விலங்குகள், தாவரங்களின் செழிப்பு, நீர் வளம் ஆகியவை போன்ற இயற்கைக் காரணிகள் மனிதர்களுக்கு முதன்மை முக்கியத்துவம் உள்ளவையாக விளங்கிவந்தன.

உற்பத்தியின் வளர்ச்சிக்கும் செவ்வைப்பாட்டுக்கும் இணங்க, சமூகத்துக்கும் பூகோளச் சூழ்நிலைக்கும் இடையே உள்ள பரஸ்பரப் பாதிப்பின் தன்மை மாற்றம் அடைந்தது. நிலக்கரி, பெட்ரோலியம், இரும்பு, செம்பு, வெள்ளீயம் முதலிய பயனுள்ள கனியப் பொருள் சேமிப்புக்கள் தற்கால உற்பத்திக்குச் சாராம்சமான முக்கியத்துவம் உள்ளவையாக விளங்குகின்றன. தற்கால உற்பத்திச் செயல்முறையில் கனிய வளங்களும் ஆற்றல் வளங்களும் பயன்படுத்தப்படுவது செழுமையான மண், வெப்பம், நீர்வளம் முதலியவற்றின் பொருத்த முக்கியத்துவத்தை மறுக்கவே இல்லை. பின்னவை இன்றி விவசாயப் பயிர்களில் நல்ல விளைச்சல் பெறுவது இயலாது.

மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையே நிலவும் பரஸ்பரப் பாதிப்பு, பூகோளச் சூழ்நிலைமீது மனிதன் பிரதிப் பாதிப்பு நிகழ்த்துவதன் வாயிலாகவும் செயல்படுகிறது. உற்பத்திச் சக்திகள் எந்த அளவுக்கு அதிக வளர்ச்சி அடைந்திருக்கின்றனவோ, இயற்கைமீது மனிதனின் ஆதிக்கம் அந்த அளவுக்கு அதிக வன்மை உடையது ஆகிறது, தனது நோக்கங்களுக்கும் தேவைகளுக்கும் ஏற்ப இயற்கையை அவன் அந்த அளவுக்கு மாற்றி அமைத்துக்கொள்கிறான்.

இயற்கைமீது மனிதனின் பாதிப்பு சமூக அமைப்பின் தன்மையைப் பொறுத்திருக்கிறது. உதாரணமாக முதலாளித்துவம் இயற்கையைச் சூறையாடுகிறது, பாழ்படுத்துகிறது, இயற்கை வளங்களை அழிக்கிறது. இயற்கையைத் திட்டப்படி மாற்றி அமைப்பது சோஷலிஸச் சமூகத்துக்கு இயல்பானது. கார்ல் மார்க்ஸின் சொற்படி இங்கே மனிதர்கள் இயற்கையுடன்

தங்கள் பொருள் மாற்றத்தை முறைப்படுத்துகிறுர்கள், அதைச் சமூகக் கண்காணிப்பில் வைக்கிறுர்கள், அதன் செல்வங்களே அறிவுக்கு ஒத்த முறையில் பயன்படுத்தும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறுர்கள்.

சமூகத்தின் மீது பூகோளச் சூழ்நிலேயின் பாதிப்பு விவாதத்துக்கு இடமற்றது. ஆனல் அதை மிகைப்படுத்துவது கூடாது. அனேக ஆராய்ச்சியாளர்கள், சமூக இயலில் பூகோளப் போக்கு எனப்படுவதன் ஆதரவாளர்கள், சமூக வாழ்வின் மீது இந்தப் பாதிப்பின் முக்கியத்துவத்தை மிகைப்படுத்துகிறுர்கள். அவர்களது கருத்துப்படி, சமூகத்தின் பொருளாதார அமைப்பையும் அதன் சமுதாய, அரசியல் அமைப்பையும் பூகோளச் சூழ்நிலேயே நிர்ணயிக்கிறது. இத்தகைய நோக்குநிலே விஞ்ஞானத்துக்கு எதிரானது. ஒரே மாதிரியான பூகோள நிலேமைகளில் ஒரு சில நாடுகள் விரைவாகவும் வேறு சில நாடுகள் மெதுவாகவும் வளர்ச்சி அடைவது ஏன், ஒரே பூகோளச் சூழ்நிலே நிலவுகையில் சமூகத்தில் மாறுதல்கள் ஏன் ஏற்படுகின்றன, ஒரு சமூக அமைப்பிலிருந்து மற்ெருரு சமூக அமைப்புக்குப் பரிணமிப்பு நிகழ்வது ஏன் என்பவற்றைப் புரிந்துகொள்ள இந்த நோக்கு வாய்ப்பு அளிப்பதில்லே.

ஏகாதிபத்தியவாதத்தின் நிலேமைகளில் பூர்ஷ்வாச் சமூக இயலில் பூகோளப் போக்கைப் பிரதிநிதித்துவப்படுத்துகிறது பூகோள அரசியல் எனப்படும் பிற்போக்குச் சித்தாந்தம். பூகோள நிலேமைகளேயும் ''வாழ்வாதார இடத்தின்'' பொருட்டுப் போராடுவதன் இன்றியமையாமையையும் மேற்கோள் காட்டி நாடுபிடிக்கும் போர்களே நியாயப்படுத்துகிறது இந்தச் சித்தாந்தம். ஜெர்மானிய பாசிஸ்டுகள் நாடுபிடித்தலும் சூறையாடுதலும் கொண்ட தங்கள் கொள்கையைப் பூகோள அரசியலின் துணேயால் சித்தாந்தபூர்வமாகப் பிரமாணப்படுத்த முயன்றுர்கள். தற்கால நிலேமைகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் பிற முதலாளித்துவ நாடுகளிலும் உள்ள கடைக்கோடிப் போர்வெறியும் பிற்போக்கும் கொண்ட வட்டாரங்கள் தங்கள் ஆக்கிரமிப்பு நோக்கங்களே நியாயப்படுத்துவதற்குப் பூகோள அரசியலே விரிவாகப் பயன்படுத்துகின்றன.

சமூகம் நிலவுவதற்குப் பூகோளச் சூழ்நிலே மட்டுமே அல்ல, குறித்த குறைந்தபட்சத் தொகை மக்களும் தேவை. சமூக வளர்ச்சி வேகம் மெதுவாவதும் விரைவுபடுவதும்

பூகோளச் சூழ்நிலைபோலவே மக்கள்தொகையின் பெருக்கத்தை யும் நெருக்கத்தையும் பொறுத்திருக்கிறது. உதாரணமாக, அனுகூலமான பூகோள நிலைமைகளும் மக்கள் வளத்தின் மிகு தியும் சமூக வளர்ச்சிக்குத் துணை புரிகின்றன. மாறாக, பிரதி கூலமான இயற்கை நிலைமைகளும் குறைந்த மக்கள் தொகை யும் அதன் வளர்ச்சி மீது பாதகமான பாதிப்பு விளைக்கின்றன. எனினும் மக்கள்தொகையின் நெருக்கமோ பெருக்கமோ, பூகோளச் சூழ்நிலையோ சமூகத்தின் வளர்ச்சியை நிர்ணயிக்க முடி யாது. மக்கள்தொகையின் நெருக்கமும் பெருக்கமுமே உற்பத்தி முறையை, சமூக அமைப்பின் தன்மையைப் பொறுத்திருக் கின்றன.

மக்கள்தொகையின் பெருக்கம் நிலவும் சமூக அமைப்பின் தன்மையைப் பொறுத்தது என்பதைக் கார்ல் மார்க்ஸே ஆதா ரத்துடன் நிலைநாட்டினர். ஒவ்வொரு சமூக அமைப்பின் நிலை மைகளிலும் மக்கள்தொகை பற்றிய அதற்கே உரிய சிறப்பான விதிமுறைகள் செயல்படுகின்றன என்றும் அந்த அமைப்புக்கு இயல்பான உற்பத்தி முறையால் இவை நிர்ணயிக்கப்படுகின் றன என்றும் அவர் நிரூபித்தார். மக்கள்தொகைப் பெருக்கத் தினலேயே சமூக வாழ்வு நிர்ணயிக்கப்படுகிறது என்று கூறும் பூர்ஷ்வாச் சமூக இயலாரின் வலிந்துரையைக் கார்ல் மார்க்ஸின் இந்தக் கண்டுபிடிப்பு நிராகரித்துவிட்டது.

மக்கள்தொகை பற்றிய மிகப் பிற்போக்கான சித்தாந்தங் களில் ஒன்று மால்தஸ் கொள்கை ஆகும். இந்தப் போதனை யை உருவாக்கியவர் ஆங்கிலப் பாதிரியான தாமஸ் மால்தஸ் என்பவர். 18ம் நூற்றூண்டின் இறுதியிலும் 19ம் நூற்றூண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்திருந்தவர் இவர். ''பூரண அமித ஜனத்தொகை பற்றிய விதி'' ஒன்று நிலவுவதாகவும், அதன்படி மக்கள்தொகைப் பெருக்கம் வாழ்க்கைச் சாதனங்களின் பெருக் கத்தை வெகுவாக முந்திவிடுகிறது என்றும் மால்தஸ் தமது கட்டுரைகளில் நிரூபிக்க முயன்றூர். ஒரு காலம் வரும், அப் போது மனிதர்களில் ஒரு பகுதியினர் உபரியாகிவிடுவார்கள், சமூகத்துக்கு வேண்டாதவர்களாகி விடுவார்கள் என்று அவர் முடிவு செய்தார். இந்த விதி இயற்கையின் சாசுவதமான விதியாக விளங்குவதாகவும் எனவே உழைப்பாளி மக்கள், பட்டினியால் மடியும் நிலையில் இருப்பினும், தங்கள் விதியைப் பற்றிக் குறை சொல்லக் கூடாது என்றும் மால்தஸ் குறிப்

பிட்டார். சுறண்டலையும் போர்களையும் நியாயப்படுத்துவதற்காக இந்தப் பிற்போக்குச் சித்தாந்தம் பூர்ஷ்வாக்களால் கையாளப்பட்டது.

மனிதகுலம் பட்டினியால் மடியும் தவிர்க்க முடியாத அபாயம் எதிர்நிற்பதாகத் தற்கால மால்தஸ் கொள்கையினர் நிரூபிக்க முயல்கிறார்கள். இதற்கு ஆதாரமாக அவர்கள் தாமே கற்பனை செய்த ''மண்ணின் குறைந்துகொண்டு போகும் செழுமைபற்றிய விதியை'' மேற்கோள் காட்டுகிறார்கள். நிலம் படிப்படியாக வளம் குறைந்துகொண்டு போகிறது என்றும் விரைவாக வளரும் மக்கள் தொகைக்கு உணவு அளிக்க அதனல் முடியாது என்றும் கூறுகிறது இந்த விதி. மனித குலத்தைப் பட்டினியிலிருந்து காக்கும் நோக்கத்துடன் ''அதிகப்படி வாய்களை'' அணுகுண்டுகள், நீர்வாயுக் குண்டுகள், பாக்டீரிய, இரசாயன ஆயுதங்கள் முதலியவற்றின் மூலம் கொன்று ஒழித்து விடும்படிக் கடைக்கோடிப் பிற்போக்காளர்களான சில தற்கால மால்தஸ் கொள்கையினர் யோசனை கூறுகிறார்கள்.

உண்மையிலோ, முதலாளித்துவ அமைப்பில் உழைப்பாளிகளின் பட்டினிக்கும் வறுமைக்கும் காரணம் முதலாளித்துவ வாழ்க்கை நிலைமைகளே அன்றி அமித மக்கள்தொகைப் பெருக்கம் அல்லவே அல்ல. விஞ்ஞானத்தினதும் தொழில்நுட்பத்தினதும் தற்போதையத் தரத்தில், நமது நிலவுலகில் வாழும் எல்லா மக்களுக்கும் வேண்டிய உணவை நிலம் முழுமையாக அளிக்க வல்லது என்று விஞ்ஞானிகள் நிரூபித்திருக்கிறார்கள்.

ஆகவே, மக்கள்தொகையோ, பூகோளச் சூழ்நிலையோ, சமூகத்தின் வளர்ச்சியில் நிர்ணயகரமான பங்கு ஆற்றுவதில்லை. இந்த வளர்ச்சிக்கு இன்றியமையாத நிபந்தனைகளாகவே அவை விளங்குகின்றன. சமூக வளர்ச்சியின் அடிப்படையாக, நிர்ணயகரமான காரணமாக இருப்பது பொருளியல் நலன்களின் உற்பத்திக்கு உரிய முறையே ஆகும். இது என்ன என்பதை இப்போது விளக்குவோம்.

### § 2. உற்பத்தி முறை—வரலாற்று வளர்ச்சியின் பிரதானமான, நிர்ணயகரமான சக்தி

வாழும் பொருட்டு மக்கள் உயிர் வாழ்க்கைக்குத் தேவையான சாதனங்களை உற்பத்தி செய்வது, அதாவது உழைப்பது அவசியம் ஆகும். மக்களது உழைப்புச் செயலை, இயற்கை

யுடன் மனிதன் நிகழ்த்தும் பரஸ்பரப் பாதிப்புச் செயல் முறை, பொருளியல் நலன்களின் உற்பத்தி எனக் கார்ல் மார்க்ஸ் ''மூலதனம்'' என்னும் தமது நூலில் சித்திரிக்கிருர். உழைப்பு என்பது சமூக வாழ்க்கைக்கு இன்றியமையாத சாசுவத நிபந்தனை என்று அவர் சுட்டிக் காட்டுகிருர்.

பொருளியல் நலன்களை உற்பத்தி செய்வதற்கு முதன்மை யாக உழைப்புக்கான பொருள்களையும் உழைப்புச் சாதனங் களையும் பெற்றிருப்பது அவசியம். மரம், இரும்புக் கனியம், நிலக்கரி முதலிய எந்தப் பொருள்கள்மீது மனிதன் செயல் படுகிருனே, எவற்றை அவன் தனது உழைப்பால் செய்முறைக்கு உள்ளாக்குகிருனே அவை உழைப்புக்கான பொருள்கள் எனப் படும். மனிதனுடைய உழைப்பு முன்னர் எவற்றின்மீது செலுத் தப்பட்டுள்ளதோ அவையும் உழைப்புக்கான பொருள்கள் ஆகக் கூடும். உதாரணமாக ஊதலைகளில் உருக்கப்பட்ட உலோகங் களை, அல்லது கம்பளியால் நெய்யப்பட்ட கம்பளத் துணியைக் குறிப்பிடலாம்.

எவற்றின் உதவியால் மனிதர்கள் உழைப்புக்கான பொருள் கள்மீது செயல்படுகிருர்களோ அந்த உழைப்புக் கருவிகள் அல்லது உற்பத்திக் கருவிகள் உழைப்புச் சாதனங்களில் முதன் மையானவை. கோடரி, ரம்பம், கலப்பை, உழவுக் கம்பைன், பொறிகள், இயந்திரங்கள், பல்வகைக் கருவிகள் ஆகியன இவற் றில் அடங்கும். உழைப்புக் கருவிகள் அடிப்படையான உழைப் புச் சாதனங்கள் ஆகும். உழைப்புக் கருவிகள் தவிர, எவை இன்றி உற்பத்திச் செயல்முறை நிறைவுற முடியாதோ அவை யாவுமே உற்பத்திச் சாதனங்களைச் சேர்ந்தவையே ஆகும். இயந்திரத் தொழில் அல்லது விவசாய நிலையங்கள் எதன்மீது அமைந்துள்ளனவோ அந்த நிலம், பண்டசாலைகள், உற்பத்திக் கட்டிடங்கள், போக்குவரத்துச் சாதனங்கள் முதலியன இவற்றில் அடங்கும். உழைப்புப் பொருள்களும் உழைப்புச் சாதனங்களும் மொத்தமாக உற்பத்திச் சாதனங்கள் எனப்படும்.

உழைப்புக் கருவிகள் உற்பத்திச் செயல்முறையில் மிகப் பெரிய பங்கு ஆற்றுகின்றன என்பது உண்மையே. ஆயினும் மனிதன் இல்லாமல் அவற்ருல் செயல்பட முடியாது. உற்பத்திச் செயல்முறையில் தொண்டு ஆற்ருத இயந்திரம் பயனற்றது என்று தமது ''மூலதனத்தில்'' கூறுகிருர் மார்க்ஸ். நெசவு

அல்லது பின்னல் வேலைக்குப் பயன்படுத்தப்படாத நூல் பழுதடைந்த பஞ்சே ஆகும். உயிருள்ள உழைப்பு இந்தப் பொருள்களைக் கைப்பற்றி அவற்றை இறப்பிலிருந்து உயிர்ப்பிக்க வேண்டும். உற்பத்திச் செயல்முறைக்கு மனிதர்கள் தேவை என்பது இதிலிருந்து பெறப்படுகிறது. மக்கள் நேரடியாகப் பங்காற்றுவதன் விளைவாகவே உற்பத்திச் செயல்முறை சாத்தியம் ஆகிறது. மனிதர்கள் உற்பத்திச் சக்திகளின் ஆக முக்கிய அம்சமாக, சமூகத்தின் தலைமை உற்பத்திச் சக்தியாகத் திகழ்கிறார்கள். "மனிதகுலம் அனைத்தினதும் முதலாவது உற்பத்திச் சக்தி தொழிலாளியே, உழைப்பாளியே ஆவான்"[1] என்றார் வி. இ. லெனின்.

உழைப்புக்கான பொருள்களும் உழைப்புக் கருவிகளும் அவற்றைச் செயல்படுத்தும் மனிதர்களும் சேர்ந்த மொத்தமே உற்பத்திச் சக்திகள் ஆகும். உற்பத்திச் சக்திகள் எப்போதுமே சமூகத் தன்மை கொண்டவை. இயற்கையின்பால் மனிதர்களுக்கு உள்ள உறவு அவற்றில் வெளிப்படுகிறது. உழைப்புக் கருவிகள் எவ்வளவு செவ்வையானவையோ, மக்கள் உழைப்பில் எவ்வளவு தேர்ச்சி அடைந்திருக்கிறார்களோ, இயற்கைமீது மனிதனின் ஆதிக்கம் அவ்வளவு அதிகமாக இருக்கும். கற்கோடரிகளையும் அம்புகளையும் ஆயுதங்களாகக் கொண்டிருந்த பண்டைக்கால மக்கள் இயற்கைக்கு முன் உண்மையில் வலிமை அற்றவர்களாக இருந்தார்கள். தற்கால மனிதன் உற்பத்திச் செயல்முறையில் ஆற்றலின் பல் வகைகளையும் ரேடியோ எலெக்ட்ரானிக்ஸ் இயலையும் தொலை இயக்க இயலையும் கையாண்டு இயற்கையைத் தன் நோக்கங்களுக்குப் பயன்படுமாறு செய்கிறான்.

உற்பத்திச் சக்திகள் பொருளியல் உற்பத்தியின் ஓர் அம்சம் மட்டுமே ஆகும். முக்கியத்துவத்தில் இதற்குக் குறையாத மற்றொரு அம்சமாக விளங்குபவை உற்பத்தி உறவுகள்.

மனிதர்கள் பொருளியல் நலங்களைத் தனிமையில் அல்ல, கூட்டாக, குழுக்களாக, சமூகங்களாக ஒன்றுசேர்ந்தே உற்பத்தி செய்கிறார்கள் என்று மனிதகுல வளர்ச்சி வரலாறு காட்டுகிறது. உற்பத்திச் செயல்முறையில் மனிதர்களுக்கு இடை

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 38, பக்கம் 359.

யே நிலவும் உறவுகளையே உற்பத்தி அல்லது பொருளாதார உறவுகள் என்று கார்ல் மார்க்ஸ் குறிப்பிடுகிறுர். சமூகத்தில் நிலவும் உறவுகள் யாவற்றிலும் பிரதானமான, அடிப்படையான உறவுகளாக இருப்பவை இவையே. வர்க்கங்களுக்கு இடையிலும் நகரத்துக்கும் கிராமத்துக்கும் இடையிலும் சமூகத்துக்கும் தனிநபருக்கும் இடையிலும் இவ்வாறே பிற வகைகளிலும் நிலவும் மற்ற எல்லாச் சமூக உறவுகளையும் இவையே நிர்ணயிக்கின்றன. ஆன்மீக, கொள்கைவாத உறவுகளும் உற்பத்தி உறவுகளையே சார்ந்திருக்கின்றன.

உற்பத்தி உறவுகளைத் தங்கள் சொந்த விருப்பப்படி ஏற்படுத்திக்கொள்ள மனிதர்களால் முடியுமா? இந்தக் கேள்விக்கு முடியாது என்றே பதில் அளிக்க வேண்டும். விஷயம் என்ன என்றுல், இந்த உறவுகள் பொருளியல் தன்மை கொண்டவை. அதாவது, மனிதர்களின் சித்தத்தையோ உணர்வையோ சாராமலே இவை நிலவுகின்றன. உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கு ஏற்பவே உற்பத்தி உறவுகள் உருவாகின்றன. ஆனுல் மனிதர்கள் தங்கள் உற்பத்திச் சக்திகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள முடியாது. மனிதர்களின் ஒவ்வொரு புதிய தலைமுறையும் வாழ்க்கையில் அடி வைக்கும்போது ஏற்கனவே தயாராகியுள்ள உற்பத்திச் சக்திகளையும் அவற்றின் அடிப்படையில் தோன்றியுள்ள உற்பத்தி உறவுகளையும் காண்கிறது. தங்களால் அன்றி, தங்களுக்கு முன்னரே நிறுவப்பட்டுள்ள, அதாவது முந்திய தலைமுறைகளின் செயல்களுடைய விளைவாக இருக்கும் வாழ்க்கை நிலைமைகளுக்குத் தங்களை இசைவித்துக் கொள்வது மனிதர்களுக்குக் கட்டாயம் ஆகிவிடுகிறது.

தவிரவும் சமூகத்தில் பொருளாதார உறவுகள் என்பவை நிலவுவதை மக்கள் அறியாமலேகூட இருக்கலாம். ''பொருள் முதல்வாதமும் அனுபவவிமர்சனவாதமும்'' என்னும் தமது நூலில் வி. இ. லெனின், முதலாளித்துவச் சமூகத்தில் வாழும் குடியானவனை இந்தத் தொடர்பில் உதாரணமாக எடுத்துக் கொள்கிறுர். தான் உற்பத்தி செய்யும் தானியத்தை விற்பதன் மூலம் மற்ற மனிதர்களுடன் தான் புறநிலையான ஒரு பொருளாதார உறவு ஏற்படுத்திக்கொள்வதைக் குடியானவன் உணர்கிறுனு? இல்லை, உணர்வதில்லை என்கிறுர் வி.இ. லெனின். இதன்மூலம் எத்தகைய சமூக உறவுகள் உருவாகின்றன என்பதையும் அவன் புரிந்துகொள்வதில்லை. குடியானவன் உணர்வ

தெல்லாம் தன் மிக நெருக்கமான நோக்கங்களை மட்டுமே. தானியத்தைச் சற்றுக் கூடுதல் விலைக்கு விற்பதும் தனது விவசாயத்துக்கும் குடித்தனத்துக்கும் தேவையான பண்டங்களைக் கிடைத்த பணத்தைக் கொண்டு வாங்குவதுமே இந்த நோக்கங்கள். உற்பத்தி உறவுகளின் பொருளியலான, புறநிலைத் தன்மையை இந்த விஷயங்கள் யாவும் காட்டுகின்றன.

உற்பத்தி உறவுகள் என்பவை ஸ்தூலமாக எதைக் குறிக்கின்றன?

உற்பத்தி உறவுகளின் அடிப்படையாக விளங்குபவை உற்பத்திச் சாதனங்கள்பால் மனிதர்களுக்கு உள்ள உறவுகள். அல்லது வேறு விதமாகச் சொன்னல், உற்பத்திச் சாதனங்கள் மீது உள்ள சொத்துரிமையின் வடிவங்கள் ஆகும். சொத்துரிமையின் வடிவங்களை, அதாவது உற்பத்திச் சாதனங்கள் யாருடைய உடைமையாக இருக்கின்றன என்பதையே பொறுத்திருக்கிறது உற்பத்தி உறவுகளின் ஒரு அல்லது மற்றொரு மாதிரி.

உற்பத்திச் சாதனங்கள்மீது சொத்துரிமையினது வடிவத்தின் தன்மை உற்பத்திச் செயல்முறையில் மனிதர்களுக்கிடையே நிலவும் உறவுகளுக்குக் காரணம் ஆகிறது. மனிதர்கள் தங்கள் செயல்கள்மூலம் செய்துகொள்ளும் பரஸ்பரப் பரிவர்த்தனையே இவ்வுறவுகள் என்று கார்ல் மார்க்ஸ் வரையறுத்தார். உற்பத்திச் சாதனங்கள்—நிலம், தொழிற்சாலைகள், ஆலைகள், இயந்திரங்கள், பல்வகைக் கருவிகள், உபகரணங்கள் ஆகியன—தனி நபர்களுக்குச் சொந்தமாக இருந்தால், அதாவது முதலாளித்துவ அமைப்பில் உள்ளது போன்று தனியார் சொத்தாக இருந்தால், அங்கே ஆதிக்கம், கீழ்ப்படிதல் என்ற உறவுகள் உருவாகின்றன, மனிதனை மனிதன் சுறண்டுதல் தோன்றுகிறது. உற்பத்திச் சாதனங்கள் சமூகம் அனைத்திற்கும் சொந்தமாக இருந்தால், அதாவது சோஷலிஸ அமைப்பில் உள்ளதுபோன்று சமூகச் சொத்தாக விளங்கினல், உற்பத்தி உறவுகள் சுறண்டலிலிருந்து விடுபட்ட மனிதர்களின் ஒத்துழைப்பு, பரஸ்பர உதவி என்ற தன்மையைப் பெறுகின்றன.

சொத்துரிமையின் வடிவங்கள் உற்பத்திச் செயல்முறையில் மனிதர்களால் உண்டாக்கப்படும் பொருளியல் நலன்களின் வினியோக வடிவங்களையும் நிர்ணயிக்கின்றன. தனியார் சொத்துரிமை உற்பத்தி உறவுகளின் அடிப்படையாக விளங்கும் எல்லாச் சமூகங்களிலும் பொருளியல் நலன்களின் வினியோகம்

உற்பத்திச் சாதனங்களை உடைமையாகக் கொண்ட ஒரு சில சுறண்டுவோருக்குச் சாதகமாக நடக்கிறது. உதாரணமாக, பூர்ஷ்வாச் சமூகத்தில் முதலாளி பொருளியல் நலங்களின் உற்பத்தியில் பங்கு ஆற்றுவதே இல்லை எனினும் அவற்றின் பெரும் பகுதியைத் தனக்கு எடுத்துக்கொள்கிருன். உற்பத்திச் சாதனங்கள்மீது சமூகச் சொத்துரிமை நிலவும் சோஷலிஸச் சமூகத்தில் பொருளியல் நலங்கள் அவற்றின் பொருட்டுச் செல விட்ட தங்கள் உழைப்புக்கு ஏற்ப உழைப்பாளிகளுக்கிடையே பங்கிடப்படுகின்றன.

இவ்வாறு, சொத்துரிமையின் வடிவங்கள், உற்பத்திச் செயல் முறையில் மனிதர்களுக்கிடையே நிலவும் உறவுகள், பொரு ளியல் நலங்களின் வினியோக வடிவங்கள் ஆகியவை, உற்பத்தி உறவுகள் என நாம் கூறும் பண்பாக அமைகின்றன. மொத்தத் தில் இந்த உறவுகள் சமூகத்தின் பொருளாதார அமைப்பாக, அதன் பொருளாதாரக் கட்டமைப்பாக, அல்லது வேறு வித மாகச் சொன்னல் சமூகத்தின் அடித்தளமாக உருவாகின்றன.

உற்பத்திச் சக்திகளுடன் தொடர்பிலும் ஒருமையிலும் எடுத்துக்கொள்ளப்படும் போது உற்பத்தி உறவுகள் உற்பத்தி முறையாக அமைகின்றன. உற்பத்தி முறை என்பது உழைப் பாளர்களை உற்பத்திச் சாதனங்களுடன் ஒன்றிணைக்கும் முறை ஆகும். வெவ்வேறு காலங்களில் மனிதர்கள் வெவ்வேறு உற்பத்திச் சாதனங்களைக் கையாளுகிருர்கள். இந்தக் காரணத் திஞலேயே அவர்கள் வெவ்வேறு முறைகளால் அவற்றுடன் ஒன்றிணைக்கப்படுகிருர்கள். எனவே தானேயான உற்பத்தி, எல்லாக் காலங்களுக்கும் எல்லா மக்களுக்கும் ஒரே மாதிரி உரிய தான உற்பத்தி இருக்க முடியாது. வரலாற்று வளர்ச்சியின் திட்டவட்டமான காலக்கட்டங்கள் தங்களுக்கே சிறப்பாக உரிய உற்பத்தி முறைகளிலேயே ஒன்றிலிருந்து ஒன்று முதன்மை யாக வேறுபடுகின்றன. இத்தகைய ஐந்து முறைகளை வரலாறு அறிந்துள்ளது. அவையாவன: பண்டைக் கூட்டுச் சமூக முறை, அடிமைச் சொந்தக்கார முறை, நிலப்பிரபுத்துவ முறை, முதலாளித்துவ முறை, சோஷலிஸ முறை.

உற்பத்தி முறை சமூக வாழ்க்கையின் சமுதாய, அரசியல், ஆன்மீகச் செயல்முறைகளுக்குக் காரணம் ஆகிறது என்று கார்ல் மார்க்ஸ் ''அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய விமர்சனத்துக்கு'' என்னும் தமது நூலின் முன்னுரையில்

குறிக்கிறூர். உற்பத்தி முறை எத்தகையதோ, அடிப்படையில் சமூகமும் அத்தகையதாகவே இருக்கும். உற்பத்தி முறை மாறுவதே எல்லாச் சமூக, அரசியல் மாற்றங்களுக்கும் மூல காரணமாக விளங்குகிறது.

## § 3. உற்பத்திச் சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகியவற்றின் பரஸ்பரப் பாதிப்பு

ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போல, பொருளியல் உற்பத்தியே சமூகத்தின் வாழ்க்கைக்கும் வளர்ச்சிக்கும் ஆதாரமாக விளங்குகிறது. ஆனுல் உற்பத்தியின் வளர்ச்சிக்கு உரிய தலையூற்று, காரணம் எது? இந்த வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகள் யாவை? உற்பத்தி வளர்ச்சிக்கான காரணத்தை உற்பத்திக்கு வெளியே தேடுவது கூடாது என்று மார்க்ஸும் எங்கெல்ஸும் காட்டியுள்ளார்கள். உற்பத்திச் சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகியவற்றின் இயக்க இயல் வகைப்பட்ட பரஸ்பரப் பாதிப்பிலேயே உள்ளது இந்தத் தலையூற்று.

உற்பத்திச் சக்திகளும் உற்பத்தி உறவுகளும் உற்பத்தியின் இரண்டு இன்றியமையாத அம்சங்கள் ஆகும். இவை எப்போதும் ஒருமையில் உள்ளன. இந்த அம்சங்களில் ஏதேனும் ஒன்று இல்லாவிட்டால் உற்பத்திச் செயல்முறை நடக்க முடியாது. அதே சமயம், உற்பத்திச் சக்திகளும் உற்பத்தி உறவுகளும் ஒன்ருேடு ஒன்று நெருக்கமாக இணைந்திருப்பினும் அவை சமூக உற்பத்தியின் வெவ்வேறு அம்சங்களாகவே விளங்குகின்றன. உற்பத்தியில் தங்கள் முக்கியத்துவம், தங்கள் வளர்ச்சியின் தன்மை, சமூகத்தின் வாழ்வில் தாங்கள் ஆற்றும் பங்கு ஆகியவற்றின் காரணமாக அவை ஒன்றுக்கு ஒன்று வேறுபடுகின்றன.

உற்பத்தியின் வளர்ச்சி உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியிலிருந்தே எப்போதும் தொடங்குகிறது. முதன்மையாக உற்பத்தியின் ஆகப் புரட்சிகரமான, யாவற்றிலும் சுறுசுறுப்பான அம்சம் ஆகிய உழைப்புக் கருவிகளின் வளர்ச்சியிலிருந்தே அது தொடங்குகிறது. கூடுதலாகப் பொருளியல் நலங்களை உற்பத்தி செய்யும் பொருட்டு மனிதர்கள் உழைப்புக் கருவிகளை இடையருது மாற்றிய வண்ணமாக இருக்கிருர்கள், தொழில்நுட்பத்தை மேலும் மேலும் செவ்வைப்படுத்திய

வண்ணமாக இருக்கிறார்கள். அதோடு கூடவே மனிதர்களும் புதிய உழைப்புத் தேர்ச்சி பெற்று, தங்கள் உற்பத்தி அனுபவத்தை வளப்படுத்துவதன் வாயிலாக மேலும் மேலும் செவ்வைப்பாடு அடைகிறார்கள். தொழில்நுட்பமும் உழைப்புத் தேர்ச்சியும் மனிதர்களின்அனுபவமும் தலைமுறை தலைமுறையாக வழங்கப்படுகின்றன. இந்தச் செயல்முறை இடையறாது நிகழ்கிறது, சமூக உற்பத்தியின் வளர்ச்சிக்கு உரிய பொருளியல்-தொழில்நுட்ப அஸ்திவாரமாக அமைகிறது.

உற்பத்திச் சக்திகளின் மாற்றத்துடன் கூடவே உற்பத்தி உறவுகளும் மாறுகின்றன. எனவே உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளினது வளர்ச்சியின் இயல்பாலும் தரத்தாலும் நிர்ணயிக்கப்படுகின்றன. உற்பத்திச் சக்திகள் எத்தகையனவோ, அத்தகையனவே உற்பத்தி உறவுகளும். இந்தக் காரணத்தினாலேயே உற்பத்திச் சக்திகள் உற்பத்தி வளர்ச்சியில் நிர்ணயகரமான, இயக்கும் அம்சமாகத் திகழ்கின்றன.

உற்பத்திச் சக்திகள் உற்பத்தியின் இயக்கும் அம்சமாகச் செயல்படுகின்றன என்பதனால் உற்பத்தி உறவுகள் செயலற்ற அம்சமாக, உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியைத் தாமாகவே பின்தொடரும் அம்சமாக விளங்குகின்றன என்று முடிவு கட்டி விடலாகாது. உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியை விரைவு அல்லது மந்தப்படுத்துவதன் வாயிலாக உற்பத்தி உறவுகள் அதன்மீது செயலூக்கமுள்ள பாதிப்பு நிகழ்த்துகின்றன. புதிய உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியை விரைவுபடுத்துகின்றன. பழையவையோ இந்த வளர்ச்சியை மந்தப்படுத்துகின்றன, தடைப்படுத்துகின்றன.

உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் இயல்புக்கும் தரத்துக்கும் பொருத்தமாக இருப்பது உற்பத்தியின் வெற்றிகரமான வளர்ச்சிக்கு இன்றியமையாதது. உற்பத்தி வளர்ச்சிக்கு உரிய இந்தப் பொது விதியைக் கண்டுபிடித்தார் கார்ல் மார்க்ஸ். எல்லாச் சமூகப்பொருளாதார அமைப்புக்களிலும் உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் இடையில் நிகழும் இயக்க இயல் வகைப்பட்ட பரஸ்பரப் பாதிப்பை இந்த விதி காட்டுகிறது. வெவ்வேறு சமூகங்களில் இந்த விதி வெவ்வேறு விதமாகச் செயல்படுகிறது. ஆயினும் சமூகம் முன்னேற்றப்பாதையில் வளர்ச்சி அடைவதற்கு இது எப்போதும் காரணம் ஆகிறது.

தனியார் சொத்துரிமையை அடிப்படையாகக் கொண்ட, சமரசப்படுத்த முடியாத வர்க்க முரண்பாடுகள் நிலவும் சமூகங்களில் உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சி இயல்புக்கும் தரத்துக்கும் பொருத்தமாயிருப்பது தாற்காலிகமாக மட்டுமே. உற்பத்தி வளர்ச்சிக்கு முழுமையான வீச்சை அது ஒருபோதும் உறுதிப்படுத்துவதில்லே. இந்தப் பொருத்தம் இத்தகைய சமூகங்களில் அவற்றினது வளர்ச்சியின் ஆரம்பக் கட்டங்களில் மட்டுமே நிலவுகிறது. ஏனெனில் அப்போது உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கு இன்னும் உதவியாக இருக்கின்றன. உதாரணமாக உற்பத்தியின் அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ முறைகள் தோன்றிய காலங்களில் விஷயம் இவ்வாறே இருந்தது.

ஆனல் உற்பத்தி ஓரிடத்தில் நிற்பது இல்லே. உற்பத்திச் சக்திகளும் உற்பத்தி உறவுகளும் இடையருது வளர்ச்சி அடைகின்றன. எனினும் அவற்றின் வளர்ச்சி வெவ்வேறு விதங்களில் நிகழ்கிறது. உற்பத்திச் சக்திகள் உற்பத்தி உறவுகளேக் காட்டிலும் மிக விரைவாகச் செவ்வைப்பாடு அடைகின்றன. விளேவாக, புதிய உற்பத்திச் சக்திகளுக்கும் ஏற்கனவே பழையவை ஆகிவிட்ட உற்பத்தி உறவுகளுக்கும் இடையே தோன்றுகிறது முரண்பாடு, இசைவின்மை. சமரசப்படுத்த முடியாத வர்க்க முரண்பாடுகள் கொண்ட சமூகங்களில் இது சமூகப் பிணக்குக்களுக்குத் தவிர்க்க இயலாதவாறு இட்டுச்செல்கிறது.

இந்தப் பிணக்கு சமுதாயப் புரட்சியின் மூலமே தீர்க்கப்பட முடியும். இப்புரட்சியின்போது பழையவை ஆகிவிட்ட உற்பத்தி உறவுகளின் இடத்தில் புதிய உற்பத்திச் சக்திகளுக்குப் பொருந்துபவையான புதிய உறவுகள் நிலேபெறுகின்றன. பழைய, வாழ்வு தீர்ந்துவிட்ட சமூகத்தின் ஆதிக்க வர்க்கங்கள் நிலவும் உற்பத்தி உறவுகளே முன்போலவே வைத்திருப்பதில் ஜீவாதார அக்கறை கொண்டிருக்கின்றன. எனவே இவ்வுறவுகளே மாற்றுவதற்கான எல்லா முயற்சிகளேயும் அவை தீவிரமாக எதிர்க்கின்றன. இந்தக் காரணத்திஞலேயே சமுதாயப் புரட்சி இன்றியமையாதது ஆகிறது.

உற்பத்திச் சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகியவற்றின் இயக்க இயல் வகைப்பட்ட வளர்ச்சி ஒரு உற்பத்தி முறையிலி

ருந்து மற்றொரு உற்பத்தி முறைக்குப் பரிணமிப்பு ஏற்படக் காரணம் ஆகிறது. இந்தப் பரிணமிப்பு எவ்வாறு நிகழ்கிறது?

வர்க்கங்களின் சமரசப்படுத்த முடியாத முரண்பாட்டை அடிப்படையாகக் கொண்ட புதிய உற்பத்தி முறை பழைய முறையின் கருவிலேயே தோன்றுகிறது. இந்த நிகழ்முறை உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியுடன் தொடர்பு கொண்டது. பழைய சமூக அமைப்பின் நிலைமைகளில் புதிய உற்பத்திச் சக்திகள் வளரும் வரை புதிய உற்பத்தி முறை பற்றிய பேச்சுக்கே இடமிருக்க முடியாது. ''எந்த உற்பத்திச் சக்திகளுக்கு ஒரு சமூக அமைப்பு போதிய வீச்சு தருகிறதோ அவை முழு மலர்ச்சி பெறுவதற்கு முன் அது அழிந்து போய்விடுவதில்லை. அதேபோல, அதிக உயர்வான புதிய உற்பத்தி உறவுகள் நிலவுவதற்கான நிலைமைகள் பழைய சமூகத்தின் உள்ளேயே முதிர்வதற்குமுன் அவை ஒருபோதும் வெளிப்படுவதில்லை''[1] என்று எழுதினார் கார்ல் மார்க்ஸ்.

பழைய உற்பத்தி முறைக்கு உள்ளே புதிய உற்பத்தி முறை முதிர்ச்சி அடைவது மனிதர்களின் சித்தத்தையோ உணர்வையோ சாராமல் இயல்பாகவே நிகழ்கிறது. இது ஏன் நிகழ்கிறது என்றால் உற்பத்திக் கருவிகளை மேம்படுத்துகையில் மனிதர்கள் இதனால் உற்பத்தியில் எத்தகைய அடிப்படை மாறுதல் முடிவில் ஏற்படும் என்பதைப் பற்றிச் சிந்திப்பதில்லை. ஆனால் புதிய உற்பத்திச் சக்திகள் முதிர்ச்சி அடைந்ததுமே பழைய உற்பத்தி உறவுகளுக்குப் பதில் புதிய உறவுகளை நிறுவுவது இன்றியமையாதது ஆகிவிடுகிறது.

உற்பத்தியின் சோஷலிஸ முறை முதலாளித்துவத்தின் கருவிலே தோன்ற முடியாது. பெரிய அளவான இயந்திரத் தொழில் உற்பத்தியின் வடிவில் புதிய சமூக அமைப்புக்குத் தேவையான பொருளியல்-தொழில் நுட்ப முதனிலைகள் மட்டுமே உருவாகின்றன. புதிய உற்பத்தி முறையை எடுத்துச் செல்வதான தொழிலாளி வர்க்கமும் முதலாளித்துவச் சமூகத்தில் வளர்ச்சி அடைகிறது. புதிய சோஷலிஸ உற்பத்தி உறவுகளோ முதலாளித்துவத்தில் தோன்றுவதில்லை. உற்பத்திச் சாதனங்கள்மீது தனி முதலாளித்துவச் சொத்துரிமையும் சுறண்

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய விமர்சனத்துக்கு'' முன்னுரை, நூல்திரட்டு, தொகுதி 13, பக்கம் 7.

டும் வர்க்கங்களும் பூர்ஷ்வா அரசும் இவ்வாறு நிகழ்வதற்குத் தடையாக இருக்கின்றன. சோஷலிஸ உற்பத்தி முறை தோன்றி உருவாவதற்கு சோஷலிஸப் புரட்சியும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் நிலைபெறுவதும் இன்றியமையாதவை. இந்த நிபந்தனையின்பேரில் தான் தொழிலாளி வர்க்கம் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில், எல்லா உழைப்பாளிகளுடனும் சேர்ந்து ஆட்சி அதிகாரத்தைத் தன் கைகளில் எடுத்துக்கொண்டு சோஷலிஸ உற்பத்தி முறையை நிறுவுகிறது. சோஷலிஸம் முற்றுக நிறுவப்படுவதற்கும் புதிய உற்பத்திமுறை முழு வெற்றி அடைவதற்கும் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பதற்கு ஏற்ற சிறப்பான வரலாற்றுக் காலக் கட்டம் தேவையாகும்.

சோஷலிஸ உற்பத்தி முறை தோன்றுவதற்கான மேற்கூறிய சிறப்புத் தன்மைகள் சோஷலிஸப் பாதையில் அடி வைக்கும் எல்லா நாடுகளுக்கும் இயல்பானவை ஆகும். எனினும் ஒரு அல்லது மற்ருெரு நாடு எந்த ஸ்தூல வரலாற்றுச் சூழ் நிலைகளில் நிலவுகிறதோ அதைப் பொறுத்து உற்பத்தியின் முதலாளித்துவ முறையிலிருந்து சோஷலிஸ முறைக்குப் பரிண மிப்பு வெவ்வேறு வகைகளில் நிகழக் கூடும். முதலாளித்துவத் திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பதன் வடிவங்கள் வெவ்வேருக இருப்பினும் புரட்சிகர உருமாற்றத்தின் சாரம் ஒன்றுகவே இருக்கும்: அதாவது தனி முதலாளித்துவச் சொத் துரிமை அழிக்கப்படும், சோஷலிஸத்தின் பொருளாதார அடிப் படை ஆகிய சமூகச் சோஷலிஸச் சொத்துரிமை நிலைநாட்டப் படும். சோவியத் யூனியனிலும் ஐரோப்பிய, ஆசிய மக்கள் குடியரசு நாடுகளிலும் க்யூபாவிலும் சோஷலிஸ உற்பத்தி முறை தோன்றியது இதற்குத் துலக்கமான சான்ருக விளங்கு கிறது.

இவ்வாறு, சோஷலிஸப் புரட்சி வெற்றிபெறுவதும் பாட் டாளி வர்க்கச் சர்வாதிகாரம் அதன் ஏதேனும் ஒரு வடிவில் நிலைநாட்டப்படுவதும் சோஷலிஸ உற்பத்தி உறவுகள் நிறுவப் படுவதற்கு இன்றியமையாத நிபந்தனைகளாக உள்ளன. சீர் திருத்தவாதிகளும் திரிபுவாதிகளும் இந்த இன்றியமையாமையை மறுக்கிருர்கள். சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தை வலிமை குன்றச் செய்து அதன் புரட்சிகர வாய்ப்புக்களைப் பறித்துவிட முயன்றவாறு அவர்கள் முதலாளித்துவம் சோஷலிஸமாகப்

படிப்படியாக வளர்வது (புரட்சிகரமாக மாறுவது அல்ல) சாத்தியமே என்று வலிந்துரைக்கிருர்கள்.

உற்பத்திச் சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உரிய இயக்கப்போக்கு இத்தகையது. உற்பத்தியின் ஒரு முறையிலிருந்து இன்னெரு முறைக்குப் பரிணமிப்பும் ஒரு சமூக-பொருளாதார அமைப்பிலிருந்து அதிக முற்போக்குள்ள மற்றென்றுக்கு மாற்றமும் நிகழக் காரணம் ஆவது வளர்ச்சியின் இந்த இயக்கப்போக்கு ஆகும்.

பொருளியல் நலங்களின் உற்பத்தி முறை என்பது என்ன, உற்பத்திச் சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகியவற்றின் பரஸ்பரப் பாதிப்பு எதில் அடங்கியுள்ளது என்பதை நாம் விளக்கினேம். ஆனுல் சமூகத்தில் உற்பத்தி உறவுகளோடு கூடவே வேறு வகை உறவுகளும் உள்ளன. நாட்டினங்களுக்கும் அரசுகளுக்கும் இடையே நிலவும் அரசியல் உறவுகள், ஒழுக்க நெறி உறவுகள், மத உறவுகள் முதலியன இவை. கேள்வி என்னவென்றுல், உற்பத்தி உறவுகளுடனும் தமக்குள் ஒன்றுடன் ஒன்றும் இவை எப்படித் தொடர்பு கொண்டிருக்கின்றன? சமூக வாழ்வில் இவை ஆற்றும் பங்கு என்ன? சமூகத்தின் அடித்தளத்தையும் மேற்கட்டுமானத்தையும் பற்றிய மார்க்ஸ், எங்கெல்ஸ், இருவரதும் போதனே இந்தக் கேள்விகளுக்கு விடை அளிக்கிறது.

### § 4. சமூகத்தின் அடித்தளமும் மேற்கட்டுமானமும்

சமூகத்தின் அடித்தளம் என்பது என்ன? அடித்தளம் என்ற சொல்லுக்குச் சமூகத்தின் பொருளாதார அமைப்பு, அல்லது, வேறு வார்த்தைகளில் சொன்னுல் மனிதர்களின் உற்பத்தி உறவுகள் என்று கார்ல் மார்க்ஸ் ''அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய விமர்சனத்துக்கு'' என்னும் தமது நூலின் முன்னுரையில் பொருள் கொள்கிறுர். இந்த உறவுகள் எதனுல் அடித்தளம் எனப்படுகின்றன? ஏனென்றுல் அரசியல், ஒழுக்க நெறி ஆகிய வேறு எல்லாச் சமூக உறவுகளும் உற்பத்தி உறவுகளேயே சார்ந்திருக்கின்றன. அடித்தளத்தின் முதன்மையான நோக்கம், பொருளியல் நலங்களின் உற்பத்தியையும் வினியோகத்தையும் ஒழுங்கமைப்பதை அது சாத்தியம் ஆக்குகிறது, அதாவது, சமூகத்துக்குப் பொருளாதார வகையில் தொண்டு ஆற்றுகிறது என்பதே.

மேற்கட்டுமானம் என்பது என்ன? மேற்கட்டுமானம் என்பது அரசியல், சட்ட, ஒழுக்க நெறி, அழகியல், மதக் கருத்துக்களும் பிற கருத்துக்களும் இந்தக் கருத்துக்களுக்குப் பொருத்தமான ஸ்தாபனங்களும் அலுவலகங்களும் ஆகும். எடுத்துக்காட்டாக, அரசு இயந்திரம்—அதாவது, அதிகாரவர்க்கம், நீதிமன்றம், சிறைச்சாலை, படை, ஒற்றர் இலாக்கா முதலியன—அரசியல், சட்டக் கருத்துக்களுக்குப் பொருந்துகிறது. மதக் கருத்துக்கள் பல்வகை மதஸ்தாபனங்களுடன் எப்போதும் தொடர்பு கொண்டிருக்கின்றன.

அடித்தளத்துக்கும் மேற்கட்டுமானத்துக்கும் இடையே வேறு பிரிக்க முடியாத, உறுப்பிணைவு கொண்ட பரஸ்பரத் தொடர்பு நிலவுகிறது. இந்தப் பரஸ்பரத் தொடர்பில் அடித்தளம் முதன்மையான பங்கு ஆற்றுகிறது. மேற்கட்டுமானத்தை அதுவே தோற்றுவிக்கிறது, அதற்குக் காரணம் ஆகிறது. எனவே சமூகத்தின் அடித்தளம் எத்தகையதோ மேற்கட்டுமானமும் அத்தகையதாகவே இருக்கும். சமூகம் சமரசப்படுத்த முடியாத வர்க்கங்களாகப் பிளவுபட்டிருந்து, மனிதனை மனிதன் சுறண்டுவது அதில் நிலவினால் இயல்பாகவே சமூகத்தின் அடித்தளம் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்டதாக இருக்கிறது. மேற்கட்டுமானம் இந்தச் சமரசப்படுத்த முடியாமையைப் பிரதிபலிக்கிறது. இதற்கு உதாரணமாக அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவச் சமூகங்களை எடுத்துக்காட்டலாம். இவை சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் உள்ள அடித்தளமும் தனது உள்ளடக்கத்தில் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் உள்ள மேற்கட்டுமானமும் கொண்டவை.

உதாரணமாக, முதலாளித்துவத்தில் அடித்தளம் சமரசப் படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்டிருப்பது ஏன்? ஏனென்றால் இந்தச் சமூகத்தில் அடிப்படை வர்க்கங்களின்—பூர்ஷ்வாக்கள், பாட்டாளிகள் ஆகியோரின்—நலன்கள் எதிரெதிரானவை. அவற்றுக்கு இடையே சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் நிலவுகின்றன. முதலாளித்துவச் சமூகத்தின் மேற்கட்டுமானமும் உள்முரண்பாடுகள் கொண்டது. பூர்ஷ்வா வர்க்கத்திற்கு மட்டுமே அல்ல, தொழிலாளி வர்க்கத்துக்கும் உரிய நோக்குக்களும் அவற்றுக்குப் பொருத்தமான ஸ்தாபனங்களும் அதில் அடங்கியுள்ளன. எனினும் ஆளும் வர்க்கம்

ஆகிய பூர்ஷ்வா வர்க்கத்துக்கு உரிய கருத்துக்களும் ஸ்தாபனங்களுமே அதில் ஆதிக்கம் வகிக்கின்றன.

மேற்கட்டுமானத்தைப் பொறுத்தவரையில் அடித்தளம் நிர்ணயகரமானதாக விளங்குகிறது என்பதிலிருந்து மேற்கட்டுமானம் அடித்தளத்தைச் செயலின்றிப் பிரதிபலிக்க மட்டுமே செய்கிறது என்றும் பணிவுடன் அதைப் பின்பற்றுகிறது என்றும் முடிவு கட்டிவிடலாகாது. மேற்கட்டுமானத்தின் செயலூக்கம் உள்ள பங்கையும் ஒப்புநோக்கில் சுதந்திரமான வளர்ச்சியையும் மார்க்ஸும் எங்கெல்ஸும் லெனினும் எப்போதும் வலியுறுத்தியிருக்கிறார்கள்.

மேற்கட்டுமானத்தைத் தோற்றுவிப்பது அடித்தளமே. ஆனால் ஒருமுறை தோன்றியபின் கருத்துக்களும் அவற்றுக்குப் பொருத்தமான ஸ்தாபனங்களும் தங்கள் வளர்ச்சியில் ஒப்புநோக்கான ஓரளவு சுதந்திரத்தைப் பெறுகின்றன. கருத்துக்கள் சமூக இருத்தலைப் பிரதிபலிப்பினும், அதே சமயம் அவை தமக்கே உரிய வாழ்வும் வாழ முடியும் என்பதில்தான் இந்தச் சுதந்திரம் முதன்மையாக வெளிப்படுகிறது. மனித சமூகத்தில் கருத்துக்கள் மரபுவழியாக வருவது—வரலாற்றுக் காலம் முழுவதிலும் மனிதகுலத்தால் உருவாக்கப்பட்டுள்ள ஆன்மீகச் செல்வங்கள் கம்யூனிஸச் சமூகம் உள்பட எந்தச் சமூகத்தினதும் மேற்கட்டுமானத்தில் பாதுகாக்கப்பட்டுவருவது—இந்தக் காரணத்தினால்தான் சாத்தியம் ஆகிறது. சென்ற காலத்தின் சிறந்த சாதனைகளை—விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்கள், அசாதாரணக் கலைப் படைப்புக்கள், மனிதகுலம் அனைத்திற்கும் பொதுவான ஒழுக்கநெறி நியமங்கள் முதலியவற்றை—கம்யூனிஸ மேற்கட்டுமானம் மரபு வழியாகப் பெற்று அவற்றைப் பேணிப் பாதுகாத்து மேலும் விரிவுபடுத்துகிறது. மனிதர்களுடைய உணர்விலும் நடத்தையிலும் பழைமையின் மிச்ச சொச்சங்கள் எவையேனும் பாதுகாக்கப்பட்டிருப்பதற்கும் காரணம் மேற்கட்டுமானத்தின் ஒப்புநோக்கான சுதந்திரமே ஆகும்.

மேற்கட்டுமானத்தின் ஒப்புநோக்கான சுதந்திரம் மேலும் ஒரு விஷயத்தில் வெளிப்படுகிறது. அது என்ன என்றால் மேற்கட்டுமானம் அடித்தளத்தினாலேயே தோற்றுவிக்கப்பட்டாலும் தன் முறைக்கு அடித்தளத்தின் மீது செல்வாக்கு செலுத்துகிறது, அதன் வளர்ச்சிமீது தீவிரமாகப் பாதிப்பு நிகழ்த்துகிறது என்பதாகும். எடுத்துக்காட்டாக, சோஷலிஸ அரசு சோவியத்

சமூகத்தின் அரசியல் மேற்கட்டுமானமாக விளங்கும்போதே அதன் பொருளாதார அடித்தளத்தின் வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் உதவுகிறது.

அடித்தளத்துக்கும் மேற்கட்டுமானத்துக்கும் இடையே மட்டும் அல்ல, மேற்கட்டுமானத்தின் உள்ளேயும் பரஸ்பரப் பாதிப்பு நிலவுகிறது. உதாரணமாக ஒழுக்க நெறி, கலை முதலிய வற்றின்மீது அரசியல் மிகப் பெரிய செல்வாக்கு செலுத்துகிறது. மேற்கட்டுமானத்தின் ஒரு பகுதி குறித்த நிலைமைகளில் மற்றப் பகுதிகளைத் தன் செல்வாக்குக்குக் கீழ்ப்படுத்த முடியும்.

மற்ற எல்லாச் சமூக நிகழ்ச்சிகளையும் போலவே அடித்தளமும் மேற்கட்டுமானமும் வளர்கின்றன, மாறுகின்றன. அடித்தளம் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியைப் பொறுத்து மாறுகிறது. மேற்கட்டுமானமோ, அடித்தளத்தின் வளர்ச்சியைப் பொறுத்து மாறுகிறது. இந்த மாறுதல் நிகழ்முறை குறித்த சமூகத்துக்கு உள்ளேயும் அதே போல ஒரு சமூக அமைப்பிலிருந்து வேறொரு சமூக அமைப்புக்குப் பரிணமிப்பு ஏற்படுகையிலும் நிறைவேறுகிறது. இத்தகைய பரிணமிப்பு ஏற்படும்போது அடித்தளமும் மேற்கட்டுமானமும் அடியோடு மாற்றம் அடைகின்றன. பண்டைக்கால அமைப்பிலிருந்து அடிமைச் சொந்தக்கார அமைப்புக்குப் பரிணமிப்பு நடந்தபோது இவ்வாறே நிகழ்ந்தது. பண்டைக்காலச் சமூகத்தில் தனியார் சொத்துரிமையும் வர்க்கங்களும் அரசும் இல்லை. சமூக நிர்வாகம் மக்கள் அனைவராலும் நடத்தப்பட்டது. அதன் இடத்துக்கு வந்த அடிமைச் சொந்தக்காரச் சமூகமோ முற்றிலும் வேறு அடித்தளமும் வேறு மேற்கட்டுமானமும் கொண்டிருந்தது. தனியார் சொத்துரிமை, அடிமைகளின் வர்க்கமாகவும் அடிமைச் சொந்தக்காரர்களின் வர்க்கமாகவும் சமூகம் பிரிக்கப்பட்டது ஆகியவற்றின் அஸ்திவாரத்தின்மீதே எழுந்தது இந்த அடித்தளம். அதற்குப் பொருந்தவே அமைந்தது அதன் மேற்கட்டுமானம்—அடிமைச் சொந்தக்கார அரசும் ஒழுக்கநெறியும் தத்துவமும் மதமும்.

சோஷலிஸச் சமூகத்தின் அடித்தளமும் மேற்கட்டுமானமும் தாங்கள் தோன்றிய நிலைமைகளில் முன்னர் நிலவிய அடித்தளங்கள், மேற்கட்டுமானங்களிலிருந்து அடிப்படையில் வேறுபடுகின்றன. சோஷலிஸத்துக்கு முந்திய சமூகங்களில் அடித்தளங்களும் மேற்கட்டுமானங்களும் பழைய அமைப்பின் கருவிலே

யே உருவாகித் தோற்றம் அடைந்தன. சோஷலிஸச் சமூகத்தின் அடித்தளம் முதலாளித்துவத்தின் நிலைமைகளில் தோன்ற முடியாது. ஏனெனில் சோஷலிஸ அடித்தளம் உற்பத்திச் சாதனங்கள் மீது தனியார் சொத்துரிமையை அல்ல, சமூகம் அனைத்தின் சொத்துரிமையை அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது.

சோஷலிஸப் புரட்சியும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரமுமே சோஷலிஸ அடித்தளத்துக்குக் கால் நாட்டுகின்றன. தனது ஆட்சி அதிகாரத்தை நிலைநாட்டிய பிறகு தொழிலாளி வர்க்கம் கனரகத் தொழில், போக்குவரத்து முதலியவற்றைத் தேசியமயம் ஆக்குகிறது, நாட்டின் பொருளாதாரத்தில் சோஷலிஸத் துறையை உருவாக்குகிறது. இதுவே சோஷலிஸ அடித்தளத்தின் அமைப்புக்கு மூல ஆரம்பம் ஆகிறது. நாட்டில் இயந்திரத் தொழில் பெருக்கமும் விவசாயம் கூட்டுப்பண்ணை முறையில் அமைக்கப்படுவதும் இந்த அடித்தளம் நிறுவும் பாதையில், உதாரணமாக சோவியத் யூனியனில், முக்கியமான திருப்புமுனைகளாக விளங்குகின்றன. சோஷலிஸ அடித்தளம் அமையும் இந்த முறை, சோஷலிஸத்துக்கு முந்திய சமூகங்களில் நிகழ்ந்தது போன்று அது தானாகவே தோன்றுவதில்லை, உணர்வு பூர்வமாகவும் ஒழுங்கமைக்கப்பட்ட முறையிலும் திட்டப்படியும் உருவாகிறது என்று முடிவு செய்ய இடம் அளிக்கிறது.

சோஷலிஸச் சமூகத்தின் மேற்கட்டுமானத்தைப் பொறுத்த வரையில் நிலைமை சற்று வேறானது. அதன் தனித்தனி அம்சங்கள்—அதாவது பாட்டாளி வர்க்க மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதம், கம்யூனிஸ்ட் கட்சி, தொழிலாளி வர்க்கத்தின் தொழிற்சங்கங்கள் ஆகியன—முதலாளித்துவத்தின் கருவிலேயே தோன்றிவிடுகின்றன. ஒரே முழுமையானது என்ற வகையில் சோஷலிஸ மேற்கட்டுமானம் அமைவதோ சோஷலிஸப் புரட்சியின் வெற்றிக்கும் சோஷலிஸ அடித்தளத்தின் நிர்மாணத்துக்கும் பிறகே நிகழ்கிறது.

சோஷலிஸச் சமூகத்தின் அடித்தளம், மேற்கட்டுமானம், இரண்டுமே சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகங்களின் அடித்தளத்திலும் மேற்கட்டுமானத்திலுமிருந்து தாங்கள் தோன்றும் நிலைமைகளில் மட்டுமே இன்றி உள்ளடக்கத்திலும் வேறுபடுகின்றன. ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போல, சோஷலிஸச் சமூகத்தின் அடித்தளம் சமூகம் அனைத்துக்கும்

பொதுவான, சோஷலிஸச் சொத்துரிமையையும், அதன் காரணமாகச் சுறண்டலிலிருந்து விடுபட்ட சுதந்திர மனிதர்களின் ஒத்துழைப்பும் பரஸ்பர உதவியும் நிறைந்த உறவுகளையும் அஸ்திவாரமாகக் கொள்கிறது. அதில் சமரசப்படுத்த முடியாத உள்முரண்பாடுகள் கிடையா. கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் எல்லா மக்களாலும் சோஷலிஸ அடித்தளம் விரிவும் செவ்வையும் படுத்தப்படுகிறது.

சோஷலிஸ மேற்கட்டுமானம் பற்றியும் இதையே கூற வேண்டும். சோஷலிஸ மேற்கட்டுமானம்—அதாவது, மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதம், சோஷலிஸ அரசு, கம்யூனிஸ்ட் கட்சி, பிற சமூக ஸ்தாபனங்களும் அலுவலகங்களும் ஆகியன—உறுதியான ஒன்றிணைவையும் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் இன்மையையும் தனக்கு உரிய இயல்புகளாகக் கொண்டிருக்கிறது. தலைசிறந்த, முற்போக்குள்ள சோஷலிஸ அடித்தளத்தை அது பிரதிபலிக்கிறது, அதன் உறுதிப்பாட்டின் மீதும் வளர்ச்சியின் மீதும் ஆழ்ந்த பாதிப்பு நிகழ்த்துகிறது.

கம்யூனிஸம் நிறுவப்படும் காலப்பகுதியில் அடித்தளத்தையும் மேற்கட்டுமானத்தையும் செவ்வைப்படுத்துவதற்குரிய திட்டவட்டமான வழி துறைகள் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ளன. சோஷலிஸச் சமூகத்தின் உற்பத்தி உறவுகள் படிப்படியாக மாறுவதும், சோஷலிஸ அரசு முறை கம்யூனிஸச் சமூகச்சுய நிர்வாகமாக வளர்வதும், விஞ்ஞான ரீதியான மார்க்ஸீய-லெனினீய உலகக் கண்ணோட்டம் ஆற்றும் பங்கு அதிகரிப்பதும் தற்காலத்திலேயே நடந்துவருகின்றன.

### § 5. சமூக-பொருளாதார அமைப்புக்களின் வளர்ச்சியும் மாற்றமும் இயல்பான வரலாற்றுச் செயல்முறையே

சமூக-பொருளாதார அமைப்பு என்பது தனது வளர்ச்சியின் குறித்த வரலாற்றுக் கட்டத்தில் உள்ள சமூகம் ஆகும். பொருளியல் நலங்களின் உற்பத்திக்கான குறித்த முறை இதன் அஸ்திவாரமாக விளங்குகிறது. இந்தச் சமூகத்தின் பொருளாதாரக் கட்டமைப்பாக, இதன் சட்டகமாக விளங்குபவை

பொருளாதார, உற்பத்தி உறவுகள் ஆகும். இவையே சமூகத்தின் அடித்தளம். சமூகத்தின் இந்த அடித்தளத்தின்மீது அதற்குப் பொருத்தமான மேற்கட்டுமானம் எழுப்பப்படுகிறது. சமூக வரலாற்றில் ஐந்து சமூக-பொருளாதார அமைப்புக்கள் கணக்கிடப்படுகின்றன. அவையான: பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பு, அடிமைச் சொந்தக்கார அமைப்பு, நிலப் பிரபுத்துவ அமைப்பு, முதலாளித்துவ அமைப்பு, கம்யூனிஸ அமைப்பு.

உற்பத்தி உறவுகள் சமூகத்தின் கட்டமைப்பு முழுவதையும் நிர்ணயிக்கும் பிரதானமான உறவுகள் என்ற முறையில் எல்லாச் சமூக உறவுகளின் மொத்தத்திலிருந்தும் அவற்றைச் சிறப்பாகத் தனிப் பிரித்துச் காட்டியதன் வாயிலாக மார்க்ஸீயத்தின் ஸ்தாபகர்கள் சமூக-பொருளாதார அமைப்பு என்ற கருதுகோளை உருவாக்கினர்கள். சமூக-பொருளாதார அமைப்பு என்ற கருதுகோளை முதன்முதல் வழங்கிய கார்ல் மார்க்ஸின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தொண்டை அசாதாரண வலிவுடன் அழுத்திக்காட்டினர் வி. இ. லெனின். ''தற்செயலாகத் தோன்றுவதும் மாறுவதும் ஆன தலைமைப் பீடத்தின் விருப்பப்படி (அல்லது சமூகத்தினதும் அரசாங்கத்தினதும் விருப்பப்படி என்ருலும் ஒன்றுதான்) எல்லாவித மாறுதல்களுக்கும் இடம் அளிக்கும் தனிநபர்களின் இயந்திரவகைப்பட்ட தொகுப்பே சமூகம் என்ற கண்ணேட்டத்துக்கு'' மார்க்ஸ் சமூக-பொருளாதார அமைப்பு பற்றிய கருதுகோளை உருவாக்கியதன் மூலம் ''முற்றுப்புள்ளி வைத்துவிட்டார்'' என்றும் ''சமூக இயலை விஞ்ஞான ஆதாரத்தில் முதன்முதலாக நிலைநாட்டினர்....''[1] என்றும் '' 'மக்களின் நண்பர்கள்' எனப்படுவோர் யார், சோஷல்-டெமாக்ராட்டுகளுக்கு எதிராக அவர்கள் எவ்வாறு போராடுகிருர்கள்?'' என்னும் தமது நூலில் வி. இ. லெனின் எழுதினர்.

வரலாற்றைப் பொருள்முதல்வாத நோக்கில் விளக்குவதில் சமூக-பொருளாதார அமைப்புபற்றிய மார்க்ஸீய-லெனினீயப் போதனை அபரிமித முக்கியத்துவம் வாய்ந்த பங்கு ஆற்றியது. முதலாவதாக, ''தானேயான சமூகம்'' பற்றிச் சிந்திப்பது

---

[1]வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 1, பக்கம் 139.

கூடாது, ஏனெனில் இத்தகைய சமூகம் வரலாற்றில் இருந்ததும் இல்லை, இருக்கவும் முடியாது என்பது இந்தப் போதனை காரணமாகத் தெளிவாயிற்று.

இரண்டாவதாக, மற்ற எல்லாச் சமூக உறவுகளையும் நிர்ணயிக்கும் முதன்மையான, அடிப்படையான உறவுகள் என்ற முறையில் உற்பத்தி உறவுகள் சிறப்பாகத் தனிப் பிரித்துக் காட்டப்பட்டதன் விளைவாக, மிக வெவ்வேறு நாடுகளுக்கும் இயல்பாயுள்ள பொதுவான, மீண்டும் மீண்டும் நிகழ்கின்ற அம்சத்தைக் கண்டுபிடிப்பதும் அதன் மூலமாகவே இந்த எல்லா நாடுகளுக்கும் ஒன்றான அவற்றின் வளர்ச்சி விதிமுறைகளைப் புரிந்துகொள்வதும் சாத்தியம் ஆயின.

மூன்றாவதாக, ஒரு சமூக அமைப்பு மற்றொன்றாக மாறுவதற்கு உரிய காரணங்களைப் புரிந்துகொள்ள முடிந்தது. சமூக வளர்ச்சி புறநிலையான, விதிமுறைகளுக்கு உட்பட்ட இயல்பான வரலாற்றுச் செயல்முறையே என்ற புரிவு இதனால் ஏற்பட்டது.

கடைசியில் நான்காவதாக, ஒரு சமூக அமைப்பின் இடத்துக்கு மற்றொரு அமைப்பு வருவது, அதிலும் தாழ்நிலை அமைப்பின் இடத்திற்கு உயர்நிலை அமைப்பு, அதிக வளர்ச்சியடைந்த, முற்போக்கான அமைப்பு வருவது நிகழும் தொடர்ச்சி தெளிவாயிற்று. ஒரு சமூக-பொருளாதார அமைப்பால் மற்றொரு அமைப்பு இவ்வாறு மாற்றப்படுவதன் விதிமுறைக்கு உட்பட்ட, புறநிலையான தன்மை, முன்னேற்றப் பாதையில் சமூகத்தின் வளர்ச்சியை நிறுத்துவது நடக்க முடியாதது என்பதைக் குறிக்கிறது.

கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் வி. இ. லெனினும் சமூக-பொருளாதார அமைப்பு பற்றிய போதனையை உருவாக்கியதுடன் நின்றுவிடவில்லை. சமூக வாழ்க்கை மேல்நோக்கிய போக்கில் வளர்ச்சி அடைவது தவிர்க்க முடியாதது என்பதையும் விஞ்ஞான ரீதியாக நிரூபித்தார்கள். தொடர்ச்சியான வளர்ச்சியும் ஒரு சமூக-பொருளாதார அமைப்பு மற்றொன்றால் மாற்றப்படுவதுமே மனிதகுல வரலாறு என்றார்கள் அவர்கள். சோஷலிஸச் சமூகம் தோன்றுவதற்கு முன் வரலாறு தனது வளர்ச்சியில் நான்கு கட்டங்களைக் கடந்து வந்திருக்கிறது. பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பு, அடிமைச் சொந்தக்கார அமைப்பு, நிலப்பிரபுத்துவ அமைப்பு, முதலா

ளித்துவ அமைப்பு என்பவற்றின் நிலவுகையுடன் தொடர்பு கொண்டவை இந்தக் கட்டங்கள். தனக்கே சிறப்பாக உரிய உற்பத்தி முறையும், தனக்கே சிறப்பான முரண்பாடுகளும் இந்த அமைப்புக்கள் ஒவ்வொன்றுக்கும் இயல்பானவை. ஒரு அமைப்பு மற்ருென்ருல் மாற்றப்படுவதற்கு இந்த முரண் பாடுகளே காரணம் ஆகின்றன.

வரலாற்றுக் கிரமப்படி முதலாவது அமைப்பு பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பு ஆகும். உற்பத்திச் சக்திகளின் ஆகத் தாழ்ந்த வளர்ச்சித் தரம் இந்த அமைப்புக்கு இயல்பானது. அந்தக் காலத்தில் வழங்கிய கற்கோடரிகள், கத்திகள், சுறண்டி கள், பின்னர் வந்த வில்களும் அம்புகளும் ஆகிய பண்படாத உற்பத்திக் கருவிகளைக் கொண்டு மனிதர்கள் உயிர் வாழ்வதே அரிதாக இருந்தது. இந்த அமைப்பில் உற்பத்திச் சாதனங்கள் கூட்டுச் சமூகக் குழு அனைத்திற்கும் சொந்தமாயிருந்தன. இந்தப் பொதுச் சொத்துரிமைமீதே சார்ந்திருந்தன உற்பத்தி உறவுகள். உற்பத்திச் சாதனங்கள் இவ்வாறு கூட்டுச் சொத் தாக இருந்தமையால்தான் மனிதன் அந்தக் கடுமையான நிலைமைகளில் பிழைத்திருக்க முடிந்தது. பண்டைக் கூட்டுச் சமூகத்தில் வர்க்கங்கள் இருக்கவில்லை. எனவேதான் அதன் மேற்கட்டுமானம் அரசு இன்மையைச் சிறப்பியல்பாகக் கொண்டிருந்தது. சமூகக் காரியங்களை எல்லோரிலும் அனுபவம் மிக்க முதியவர்கள் நிர்வகித்தார்கள். இவர்கள் குலத்த வராலோ அல்லது கூட்டுச் சமூகத்தாலோ தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

இயற்கைச் சக்திகளுடன் நிகழ்த்திய போராட்டத்தின் போது மனிதர்கள் உழைப்புக் கருவிகளைச் செவ்வைப்படுத் தினர்கள். கல்லாலும் மரத்தாலும் ஆன கருவிகளிலிருந்து உலோகக் கருவிகளுக்குப் பரிணமிப்பு நிகழ்ந்ததும், விவசாய மும் கால்நடை வளர்ப்பும் கைத்தொழிலின் தொடக்கமும் தோன்றியதும் உழைப்பின் உற்பத்தித் திறன் அதிகரிக்கக் கார ணமாக இருந்தன. இதன் விளைவாகச் சமூகச் செல்வம் மிகுந் தது. இந்தச் செல்வம் படிப்படியாகத் தனி நபர்களின் கைக ளில் குவியலாயிற்று. தனியார் சொத்துரிமையும் அதோடுகூட மற்றவர்களின் உழைப்பைச் சுறண்டி ஒரு சிலர் வாழ்க்கை நடத்தும் வாய்ப்பும் ஏற்பட்டன. சமூகம் பகை வர்க்கங்க ளாகப் பிளவுபட்டது. புதிய உற்பத்தி உறவுகள் தோன்றி

யதை இது குறித்தது. இந்த உறவுகள் உற்பத்திச் சாதனங்கள்மீது தனியார் சொத்துரிமையையும் ஆதிக்க, கீழ்ப்படிவு உறவுகளையும் சார்ந்திருந்தன.

முதலாவது வர்க்கச் சமூகமாகத் தோன்றியது அடிமைச் சொந்தக்காரஅமைப்புஆகும். அடிமைச் சொந்தக்கார அமைப்பு தொடக்கத்தில் உற்பத்திச் சக்திகள் மேலும் வளர்வதற்கு உதவியாக இருந்தது. கல், மரக் கருவிகளை உலோகக் கருவிகள் அகற்றிவிட்டன. புதிய உற்பத்தித் துறைகள் தோன்றின. மேலும் உழைப்புப் பிரிவினை ஏற்பட்டது. உழைப்பின் உற்பத்திச் சக்தி உயர்ந்தது.

உற்பத்திச் சாதனங்கள்மீதும் அடிமைமீதும் அடிமைச் சொந்தக்காரனின் முழுச் சொத்துரிமையை அடிப்படையாகக் கொண்ட உற்பத்தி உறவுகள்ஆதிக்கம் வகித்த நிலைமைகளிலேயே அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தின் உற்பத்திச் சக்திகள் வளர்ச்சியுற்றன. இந்த அடிமையை அடிமைச் சொந்தக்காரன் கொடுமையாகச் சுறண்டினன். அடிமையைக் கொல்வதுகூட அவனுக்கு முடிந்தது. இதனல் அவன் எவ்விதப் பொறுப்பும் ஏற்க நேரிடவில்லை.

அடிமைகள் மனிதத் தன்மை இன்றிச் சுறண்டப்படுவதையே அடிமைச் சொந்தக்கார அமைப்பு சார்ந்திருந்தது. ஆதலால் அடிமைகள் எதிர்ப்பின்றிக் கீழ்ப்படியுமாறு நிர்ப்பந்திக்கும் ஸ்தாபனம் இன்றியமையாதது ஆயிற்று. எனவேதான் இங்கே முதன்முதலாக அரசியல் மேற்கட்டுமானம் தோன்றியது. இதுதான் அடிமைச் சொந்தக்கார அரசு. அடிமைகளை அடக்கி ஒடுக்குவதற்கும் நசுக்குவதற்குமான உறுப்பு.

உற்பத்தி மேலும் வளர்ச்சி அடைவதில் அடிமைகள் அக்கறை கொள்ளவில்லை என்பது இயல்பே. எனவே அடிமைச் சொந்தக்கார உற்பத்தி முறை நாளடைவில் சீரழிவு அடையலாயிற்று. அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தில் நிலவிய உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்குப் பொருத்தம் அற்றவை ஆகிவிட்டன, அவற்றுக்கு முரண்படலாயின என்பதை இது குறித்தது. இந்த முரண்பாட்டின் வெளியீடாக விளங்கின அடிமைகளின் பெருந்தொகையான கிளர்ச்சிகள். இவை அடிமைச் சொந்தக்கார அமைப்பை ஆட்டி உலுக்கின. விளைவாக முடிவில் இந்த அமைப்பின் இடத்துக்கு நிலப்பிரபுத்துவ உற்பத்தி முறை வந்தது.

நிலப்பிரபுத்துவ, அல்லது பண்ணையடிமை அமைப்பு அடிமைச் சொந்தக்கார அமைப்பின் இடிபாடுகள்மீது எழுந்தது. நிலப்பிரபுத்துவக் காலக்கட்டத்தில் உற்பத்திச் சக்திகள் மேலும் வளர்ச்சி அடைந்தன. காற்று, நீர், பயனுள்ள கனியங்கள் ஆகிய இயற்கை வளங்களை அதிக உற்பத்திகரமாகப் பயன்படுத்த மனிதர்கள் தெரிந்துகொண்டார்கள். அதிகச் செவ்வைப்பாடுள்ள உழைப்புக் கருவிகள் தோன்றின. நகரங்களில் கம்மியத் தொழில் தீவிர வளர்ச்சி அடைந்தது.

நிலப்பிரபுத்துவச் சமூகத்தில் உற்பத்தி உறவுகளின் அடிப்படையாக இருந்தது உற்பத்திச் சாதனங்கள் மீது, முதன்மையாக நிலத்தின்மீது நிலப்பிரபுக்களின் முழுச் சொத்துரிமையும் குடியானவன்மீது முழுமையற்ற சொத்துரிமையுமே. குடியானவனை விற்கவோ வாங்கவோ, தனக்காக வேலை செய்யும்படி நிர்ப்பந்திக்கவோ நிலப்பிரபுவால் முடிந்தது. ஆனால் குடியானவனைக் கொன்றுவிட்டுத் தண்டனை பெறாமல் தப்ப அவனால் முடியவில்லை. நிலப்பிரபுத்துவ உற்பத்தி உறவுகள் முந்திய அமைப்பில் ஏற்பட்டதைவிட அதிக முற்போக்கான உற்பத்தி வளர்ச்சிக்கு வகை செய்தன. காரணம் என்ன என்றால் நிலப்பிரபு குடியானவனைச் சுறண்டத்தான் செய்தான் எனினும் குடியானவனிடம் சொந்தப் பண்ணை, அவன் தனக்காகப் பாடுபடுவதற்கு ஏற்ற துண்டு நிலம் (ஒதுக்கீட்டு நிலம்) இருந்தபடியால் உற்பத்தியின் வளர்ச்சியில் குடியானவனும் ஓரளவு அக்கறை கொண்டிருந்தான்.

நிலப்பிரபுத்துவச் சமூகத்தின் அரசியல் மேற்கட்டுமானம்—அதாவது நிலப்பிரபுத்துவ அரசு—ஆளும் வர்க்கமாகிய நிலப்பிரபுக்களின் நலன்களைத் தீவிரமாகப் பாதுகாத்தது. நிலப்பிரபுத்துவச் சமூகத்தின் ஆன்மீக மேற்கட்டுமானமும் இந்த நோக்கத்துக்கே பயன்பட்டது. இது முழுவதும் மதக் கொள்கை வாதத்துக்குக் கீழ்ப்பட்டிருந்தது. நிலப்பிரபுத்துவ ஒழுங்கு முறைகளுக்குக் காப்பாளியாக விளங்கிய மதஸ்தாபனத்தின் செல்வாக்கு நிலப்பிரபுத்துவக் காலக்கட்டத்தில் மட்டுமீறி அதிகமாக இருந்தது.

நிலப்பிரபுத்துவ அமைப்பில் உற்பத்திச் சக்திகள், முதன்மையாகக் கைத்தொழில் உற்பத்தி, மேற்கொண்டு அடைந்த வளர்ச்சியின் விளைவாகத் தோன்றின பெரிய பட்டறைகள்—தொழிற்கூடங்கள். நிலப்பிரபுத்துவச் சமூகத்தின் கருவில் முத

லாளித்துவ உற்பத்திமுறை தோன்றத் தொடங்கியதை இவை குறித்தன. தொழிற்கூடங்களின் வளர்ச்சிக்குச் சுதந்திரமான உழைப்பாளிகளின் கரங்கள் தேவைப்பட்டன. குடியானவர்களை நிலத்துடன் பிணைத்து வைத்திருந்த நிலப்பிரபுத்துவ உற்பத்தி உறவுகள் இதற்கான வாய்ப்பை அளிக்கவில்லை. ஆகவே பழைய உற்பத்தி உறவுகளை ஒழித்துவிட்டு, புதிய உற்பத்திச் சக்திகளுக்குப் பொருந்துபவையான புதிய உற்பத்தி உறவுகளை அவற்றின் இடத்தில் ஏற்படுத்துவது இன்றியமையாதது ஆயிற்று. பூர்ஷ்வாப் புரட்சிகளின் மூலமாகப் பழைய உற்பத்தி உறவுகள் ஒழிக்கப்பட்டன. விளைவாக நிலப்பிரபுத்துவத்தின் இடத்திற்கு முதலாளித்துவம் வந்துவிட்டது.

முதலாளித்துவச் சமூக-பொருளாதார அமைப்பு தனது வாழ்க்கையின் ஆரம்பக் கட்டங்களில் மனிதகுல வளர்ச்சியின் வரலாற்றில் மிகவும் முற்போக்குள்ள பங்கு ஆற்றியது. இந்தப் பங்கைக் குறிப்பிட்டுக் கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் ''கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கையில்'' பின்வருமாறு எழுதினார்கள்: ''பூர்ஷ்வா வர்க்கம் நூறு ஆண்டுகளுக்கும் குறைவான தனது வர்க்க ஆதிபத்தியக் காலத்தில் முந்திய தலைமுறைகள் அனைத்தும் சேர்ந்து படைத்தவற்றைக் காட்டிலும் அதிகப் பெருந்தொகையானவையும் அதிகப் பிரமாண்டமானவையும் ஆகிய உற்பத்திச் சக்திகளைப் படைத்திருக்கிறது.''[1]

உற்பத்திச் சாதனங்கள்மீது முதலாளித்துவத் தனியார் சொத்துரிமையே முதலாளித்துவ உற்பத்தி உறவுகளின் அஸ்திவாரம். ஆலைகளும் தொழிற்சாலைகளும் நிலமும் போக்குவரத்துச் சாதனங்களும் தகவல் துறையும் முதலாளிகளுக்குச் சொந்தமாக இருக்கின்றன. தொழிலாளியோ, எவ்வகை உற்பத்திச் சாதனங்களும் அற்றவனாக இருக்கிறான். எனவே, அவன் பெயரளவில் சுதந்திரமானவன், நிலப்பிரபுத்துவ அமைப்பில் இருந்தது போலத் தனிப்பட்டவர் ஆதீனத்தில் இல்லை என்றாலும், பட்டினியால் சாகாமல் இருக்கும் பொருட்டு முதலாளிகளுக்குத் தன் உழைப்புச் சக்தியை விற்றுத் தீர வேண்டிய நிர்ப்பந்தத்தில்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை'', நூல்திரட்டு, தொகுதி 4, பக்கம் 429.

இருக்கிறான். முதலாளிகள் குறித்த ஊதியத்துக்குத் தொழிலாளி களை வேலைக்கு அமர்த்திக் கொள்கிறார்கள். ஆனால் தொழி லாளிகள் தாங்கள் சம்பளத்தின் வடிவில் பெறுவதைக் காட்டி லும் எவ்வளவோ அதிகமான மதிப்பைத் தங்கள் உழைப்பால் படைக்கிறார்கள். தங்கள் வேலை நேரத்தின் பெரும் பகுதி அவர்கள் முதலாளிக்காக வேலை செய்து உபரி மதிப்பு எனப்படுவதை அவனுக்காக உற்பத்தி செய்கிறார்கள். இவ்வாறு உபரி மதிப்பு தொழிலாளிகளின் ஊதியம் அற்ற உழைப்பின் மூலம் படைக்கப்படுகிறது. இந்த உழைப்பை முதலாளி இலவசமாகத் தனது ஆக்கிக்கொள்கிறான். வேறு வார்த்தைகளில் சொன்னால், உற்பத்திச் சாதனங்கள்மீது தனி முதலாளித்துவச் சொத்துரிமை கூலி உழைப்பாளிகளைச் சுறண்டவும் உபரி மதிப்பைப் பெறவும் முதலாளிகளுக்கு அனுமதி அளிக்கிறது. உபரி மதிப்பின் உற்பத்தியே முதலாளித்துவத்தின் அடிப்ப டைப் பொருளாதாரச் சட்டமாக விளங்குகிறது.

பூர்ஷ்வா அரசு, அரசியல் கட்சிகள், பிற ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் வடிவில் தீவிர வளர்ச்சி அடைந்த அரசியல் மேற்கட்டுமானம் முதலாளித்துவச் சமூகத்தின் அடித்தளத் தைப் பாதுகாக்கிறது. பூர்ஷ்வா ஒழுக்க நெறி, தத்துவம், கலை, மதம் என்னும் கொள்கைவாத மேற்கட்டுமானமும் இவ்வகையில் செயலூக்கமுள்ள பங்கு ஆற்றுகிறது.

முதலாளித்துவம் என்பது சமரசப்படுத்த முடியாத வர்க்க முரண்பாடுகள் கொண்ட கடைசிச் சமூக-பொருளாதார அமைப்பு ஆகும். முதலாளித்துவ உற்பத்தி உறவுகள் உற்பத்தி வளர்ச்சிக்குக் குறித்த அளவு தூண்டுதலை ஏற்படுத்தின. ஆயினும் பெருந்தொகையான முரண்பாடுகள் முதலாளித்துவத்துக்கு இயல்பானவை.

முன்னர், உதாரணமாக நிலப்பிரபுத்துவ அமைப்பில், தனி உற்பத்தியாளன்—நெசவாளி அல்லது கருமான்—துணி அல்லது லாடம் தன்னால் ஆக்கப்பட்டது என்று சொல்ல முடிந்தது. இப்போது, முதலாளித்துவ அமைப்பில், உழைப்புப் பிரிவினை யின் விளைவாக ஏதேனும் ஒரு செய்பொருளை உண்டாக்கு வதில் உற்பத்தியின் வெவ்வேறு கிளைகளில் ஈடுபட்டுள்ள ஏராள மான மனிதர்கள் பங்கெடுத்துக்கொள்கிறார்கள். ஆதலால் தனித்தனி மனிதர்களது உழைப்பின் உற்பத்திப் பண்டங்கள் சமூகம் அனைத்தினதும் உழைப்பின் உற்பத்திப் பண்டங்கள்

ஆகிவிட்டன. பொருளியல் நலங்களின் உற்பத்திச் செயல்முறை முதலாளித்துவ அமைப்பில் சமூகத் தன்மை பெற்றுவிட்டது என்பதை இந்த எல்லா மாறுதல்களும் காட்டுகின்றன. முதலாளித்துவப் பொருளாதாரம் ஒரே முழுமையானது ஆகிவிட்டது. முதலாளித்துவ அமைப்பில் உற்பத்தி ஒன்று சேர்ந்தே, சமூகம் அனைத்தாலுமே நடத்தப்படுகிறது.

முதலாளித்துவ அமைப்பில் உற்பத்தி சமூகத்தன்மை பெற்றுவிட்டது என்றால் சமூகத்தின் எல்லா உறுப்பினர்களும் உற்பத்திச் சாதனங்களைக் கூட்டுச் சொத்தாக வைத்திருக்க வேண்டும், உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களை ஒன்றுசேர்ந்து உபயோகிக்க வேண்டும் என்று தோன்றும். ஆனால் பூர்ஷ்வாச் சமூகத்தில் பண்டங்கள் உழைப்பாளிகளாலேயே உண்டாக்கப்படுகின்றன என்றாலும் முதலாளிகளாலேயே அவை உரித்தாக்கிக் கொள்ளப்படுகின்றன. காரணம் என்னவென்றால் முதலாளிகள் உற்பத்திச் சாதனங்களின் சொந்தக்காரர்களாக இருப்பதுதான். முதலாளித்துவத்தின் அடிப்படை முரண்பாடு இங்குதான் தோன்றுகிறது. உற்பத்தியின் சமூகத்தன்மைக்கும் உரிமையாக்கிக்கொள்ளுவதன் தனி முதலாளித்துவ வடிவத்துக்கும் இடையிலுள்ள முரண்பாடு இது. பாட்டாளி வர்க்கம் ஒரு புறமும் பூர்ஷ்வா வர்க்கம் மறுபுறமும், தனித்தனித் தொழில் நிலையங்களில் உற்பத்தியின் ஒழுங்கமைப்பு ஒரு புறமும் சமூகம் முழுவதிலும் உற்பத்தியில் நிலவும் அராஜகமும் திட்டமின்மையும் மறுபுறமுமாக விளங்கும் எதிர்நிலைகளிலும் நெருக்கடிகளிலும், வேலையில்லாத் திண்டாட்டத்திலும், சுறண்டப்படுவோரால் சுறண்டுவோருக்கு எதிராக நடத்தப்பெறும் வர்க்கப் போராட்டத்திலும் இந்த முரண்பாடு வெளிப்படுகிறது.

19ம் நூற்றாண்டின் இறுதியிலும் 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் முதலாளித்துவம் தனது இறுதியான உச்சக் கட்டத்தில்—ஏகாதிபத்தியத்தில்—அடிவைத்தது. இந்தக் கட்டத்தின் பிரதான அம்சம் ஏகபோகங்கள் உருவானதாகும். இவை முதலாளிகளின் பெருத்த கூட்டு ஸ்தாபனங்கள். ஏகபோகங்கள் அரசியல் அதிகாரத்தைத் தாமே கைப்பற்றவும் அரசு இயந்திரத்தைத் தமக்குக் கீழ்ப்படுத்தவும் தொடங்கும் அளவுக்கு அவற்றின் பொருளாதார வல்லமையின் வளர்ச்சி இட்டு வந்தது. ஏகபோகங்கள் அரசு இயந்திரத்துடன் ஒன்றுகிவிட்டதன் விளைவாக அரசு-ஏகபோக முதலாளித்துவம் உருவாயிற்று.

அரசு-ஏகபோக முதலாளித்துவம் சோஷலிஸத்துக்கு உரிய முழுமையான பொருளியல் முன்னேற்பாடு என்று சுட்டிக் காட்டினார் வி. இ. லெனின்.

அரசு-ஏகபோக முதலாளித்துவம் முதலாளித்துவத்தின் சுரண்டும் இயல்பை மாற்றிவிடுவதில்லை. மாறாக, முதலாளித் துவச் சமூகத்தின் உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுக ளுக்கும் இடையில் உள்ள முரண்பாடுகளை அது இன்னும் தீவிரம் ஆக்குகிறது. உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச் சிக்கு மேலும் மேலும் அதிகமாக முட்டுக்கட்டை போடுகின் றன. முதலாளித்துவத்தின் உற்பத்திச் சக்திகள் தற்போது முற் றிலும் வளர்ச்சி அடைவதில்லை என்று இதனால் அர்த்தம் ஆகாது. முதலாளித்துவச் சமூகத்தில் நிகழும் விஞ்ஞான-தொ ழில்நுட்ப முன்னேற்றம் உற்பத்திச் சக்திகளை ஓரளவு வளர்ச்சி யுறச் செய்வதற்கும் உற்பத்திச் செலவைக் குறைப்பதற் கும் லாபம் பெறுவதற்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கு வாய்ப்பு அளிக்கிறது. எனினும் முதலாளித்துவத்தில் ஏற்படும் எல்லா வகை முன்னேற்றமும் விரல்விட்டு எண்ணிவிடக் கூடிய முதலாளிகளின் செல்வத்தை அதிகரிப்பதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டிருக்கிறது. உழைப்பாளிகளின் பொரு ளியல் நிலைமையை மேம்படுத்துவதற்கு அதனால் கிடைக்கும் வாய்ப்பு அற்பமே. உழைப்புக்கும் மூலதனத்துக்கும் இடை யேயும் உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் இடையேயும் நிலவும் முரண்பாடுகளை இவை எல்லாம் கூர்மைப் படுத்துகின்றன.

இந்த நிலைமையிலிருந்து வெளியேறும் வழி என்ன? முதலா ளித்துவ உற்பத்தி முறைக்குப் பதில் சோஷலிஸ உற்பத்தி முறை யைச் செயல்படுத்துவதே, கம்யூனிஸச் சமூக-பொருளாதார அமைப்புக்குப் பரிணமிப்பதே வெளியேறும் வழி. இந்தப் பரிணமிப்பு வரலாற்று நோக்கில் இன்றியமையாதது ஆகும். சமூகத்தன்மை கொண்ட உற்பத்திச் சக்திகளுக்கு உற்பத்திச் சாதனங்களின்மீது சமூகச் சொத்துரிமையும் தேவைப்படுகிறது.

கம்யூனிஸச் சமூக-பொருளாதார அமைப்பு முந்திய எல்லாச் சமூகங்களுடனும் ஒப்பிடுகையில் ஆக உயர்வான, முற் போக்கு உள்ள அமைப்பாகத் திகழ்கிறது. இதன் தோற்றம் மனிதகுல வரலாறு முழுவதிலும் அடிப்படையான புரட்சியைக் குறிக்கிறது. இன்றியமையாமையின் ஆட்சியிலிருந்து விடு

தலையின் ஆட்சிக்குப் பண்புவகையான பாய்ச்சல் என்று இந்தப் புரட்சியை வருணித்தார் எங்கெல்ஸ்.

வரலாற்றிலேயே யாவற்றினும் முற்போக்கு உள்ள இந்தச் சமூக அமைப்பு எவ்வாறு தோன்றி வளர்ந்தது, மேற்கொண்டு எவ்வாறு வளரப்போகிறது என்பதை ஆராய்வோம்.

கம்யூனிஸச் சமூகம் தனது வளர்ச்சியில் இரண்டு கட்டங்களைக் கடந்து செல்கிறது. அவற்றில் முதல் கட்டம் சோஷலிஸம் எனவும் இரண்டாவது கம்யூனிஸம் எனவும் படும். சோஷலிஸமும் கம்யூனிஸமும் வெவ்வேறான இரு சமூக அமைப்புக்கள் என்று நினைப்பது சரியாகாது என ''அரசும் புரட்சியும்'' என்னும் தமது நூலில் வி. இ. லெனின் குறித்தார். இவை ஒரே கம்யூனிஸச் சமூகத்தின் இரண்டு படிகள் என்றும் முதிர்ச்சியின் வெவ்வேறு தரங்களிலேயே இவை ஒன்றுக்கு ஒன்று வித்தியாசப்படுகின்றன என்றும் அவர் கூறினார்.

சோஷலிஸம் முதலாளித்துவத்திலிருந்து நேராகத் தோன்றுகிறது. பாட்டாளி வர்க்கம் ஆட்சி அதிகாரத்தைப் போராடிப் பெற்றபின் பிரதான உற்பத்திச் சாதனங்கள் அரசாங்க சோஷலிஸ உடைமை ஆக்கப்படுவதன் விளைவாக அது நிறுவப்படுகிறது. கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் தொழிலாளி வர்க்கம் தொழிற்சாலைகளையும் பாங்குகளையும் நிலத்தையும் போக்குவரத்துச் சாதனங்களையும் தேசியமயமாக்கி அவற்றை மக்கள் அனைவரதும் உடைமை ஆக்குகிறது.

சோஷலிஸச் சமூகத்தின் உற்பத்திச் சக்திகள் சோஷலிஸ இயந்திரத் தொழிலை, முதன்மையாகக் கனரகத் தொழிலையும் சோஷலிஸ விவசாயத்தையும் போக்குவரத்துச் சாதனங்களையும் உட்படுத்திக் கொள்கின்றன. சோஷலிஸ அமைப்பில் அவற்றின் வளர்ச்சி ஒத்தியைந்த தன்மை கொண்டிருக்கிறது. திட்டமிட்ட, அளவுப் பொருத்தமுள்ள வளர்ச்சி விதிக்குக் கண்டிப்பாக இணங்கும் வகையில் செயல்படுத்தப்படுகிறது.

சோஷலிஸ உற்பத்தி உறவுகள் சுறண்டலிலிருந்து விடுபட்ட சுதந்திர மனிதர்களின் தோழமையுள்ள ஒத்துழைப்பும் பரஸ்பர உதவியும் கொண்ட உறவுகளாக விளங்குகின்றன. உற்பத்திச் சாதனங்கள்மீது சமூக சோஷலிஸச் சொத்துரிமையே இவ்வுறவுகளின் அஸ்திவாரம் ஆகும். இது அரசாங்க (மக்கள் அனைவருக்கும் பொதுவான) உடைமை, கூட்டுறவு-கூட்டுப் பண்ணை உடைமை என்ற இரு வடிவங்களில் செயல்படுகிறது.

சோஷலிஸச் சொத்துரிமை நுகர்வுப் பொருள்கள் தனி மனிதரின் உடைமையாக இருப்பதை விலக்குவதில்லை.

சோஷலிஸ அமைப்பில் நிகழும் சமூக மாற்றங்களில் மிக முக்கிய அம்சமாக இருப்பது பண்பாட்டுப் புரட்சி ஆகும். இது செயல்படுத்தப்படுவதன் விளைவாக, பொருளியல் நலங்களின் உற்பத்தியில் உழைப்பாளிகள் தீவிரமாக, படைப்புத் தன்மையுடன் பங்கெடுத்துக் கொள்வதற்கும், புதிய தொழில் நுட்பத்தையும் புதிய உழைப்பு அனுபவங்களையும் பயின்று தேர்ச்சி அடைவதற்கும், உற்பத்தியையும் அரசாங்க, சமூகக் காரியங்களையும் நிர்வகிக்கப் பழகுவதற்கும் வேண்டிய எல்லா நிலைமைகளும் உருவாக்கப்படுகின்றன.

உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சக்திகளின் தன்மைக்கு எப்போதும் பொருத்தமாயிருப்பது சோஷலிஸச் சமூகத்தின் விதிமுறையாகத் திகழ்கிறது. இதனுல் உற்பத்திச் சக்திகள் எல்லையின்றியும் தடையின்றியும் வளர்வது சாத்தியம் ஆகிறது. சோவியத் யூனியனிலும் பிற சோஷலிஸ்ட் நாடுகளிலும் உற்பத்தி அதிகரிப்பின் விரைந்த வேகம் இதற்குத் துலக்கமான சான்று தருகிறது.

உற்பத்திச் சக்திகளின் தன்மைக்கும் தரத்துக்கும் உற்பத்தி உறவுகள் பொருந்தியிருப்பதனுல் அவற்றுக்கு இடையே எவ்வித முரண்பாடுகளும் இல்லை என்று அர்த்தம் ஆகாது. உற்பத்தியில் முரண்பாடுகள் சோஷலிஸச் சமூகத்திலும் உள்ளன. ஆனுல் இந்த முரண்பாடுகள் சமரசப்படுத்த முடியாதவை அல்ல. ஏனெனில் சோஷலிஸ அமைப்பில் தனியார் சொத்துரிமையும் பகைமை கொண்ட வர்க்கங்களும் இல்லை. இந்த முரண்பாடுகள் எழுவது மொத்தத்தில் உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளுக்கும் இடையே அல்ல, இடையருது செவ்வைப்பட்டுக்கொண்டிருக்கும் உற்பத்திச் சக்திகளுக்கும் உற்பத்தி உறவுகளின் பழையவை ஆகிவிட்ட தனித்தனி அம்சங்களுக்கும் இடையிலேயே. இம்முரண்பாடுகள் வர்க்கப் போராட்டத்தின் மூலமும் புரட்சியின் மூலமும் அல்ல, உற்பத்தி உறவுகளின் பழையவை ஆகிவிட்ட அம்சங்களுக்குப் பதில் புதிய அம்சங்களைப் புகுத்துவதன் வாயிலாகத் தீர்க்கப்படுகின்றன.

சோஷலிஸ உற்பத்தி உறவுகள் யாவற்றிலும் மனிதத்தன்மை நிறைந்த உறவுகள் ஆகும். சமூகம், தனிநபர் இரு தரப்

புக்களினதும் நலன்களின் ஒருமைக்கு இவை அடிப்படையாக விளங்குகின்றன. இந்த உறவுகளின் அடித்தளத்திலேயே சமூக வாழ்வின் எல்லாத் துறைகளிலும் பொதுமக்கள் திரளின் முன்முயற்சி தொடங்கிப் பரவுகிறது. சோஷலிஸப் போட்டி, கம்யூனிஸ முறை உழைப்பு இயக்கம், புதுப்புனைவு, கண்டுபிடிப்பு ஆகியவை இதில்தான் வளர்கின்றன. மக்களின் திறமையும் இயற்கைச் சாமர்த்தியமும் மலர்கின்றன. கம்யூனிஸச் சமூகத்தின் மனிதனது உருவம் வடிவுபெறுகிறது.

சோஷலிஸம் தனது வளர்ச்சிப் போக்கில் தவிர்க்க முடியாத வாறு கம்யூனிஸமாக வளர்கிறது. சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பு புறநிலை விதிமுறைகளுக்கு உட்பட்ட நிகழ்முறை என்ற மார்க்ஸீய-லெனினீயத்தின் முடிவை சோவியத் யூனியன், மக்கள் குடியரசு நாடுகள் ஆகியவற்றின் நடைமுறை அனுபவம் உறுதிப்படுத்துகிறது.

கம்யூனிஸச் சமூகத்தின் கட்டுமானம் தானுகவே அல்ல, ஒழுங்கமைக்கப்பட்ட முறையில், கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் நடக்கிறது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ள கடமைகளின் நிறைவேற்றம் நாட்டில் கம்யூனிஸச் சமூகம் நிலைபெறுவதை அருகில் கொண்டு வரும். கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில் நுட்ப அடிப்படையை நிறுவுதல், சோஷலிஸச் சமூக உறவுகளைக் கம்யூனிஸ உறவுகளாக மாற்றி அமைத்தல், புது மனிதனைப் பயிற்றி வளர்த்தல் ஆகியவை இந்தக் கடமைகள் ஆகும்.

நாடு முழுமையாக மின்சாரமயம் ஆக்கப்படும். இந்த அடிப் படையில் தேசீயப் பொருளாதாரத்தின் எல்லாத் துறைகளிலும் சமூக உற்பத்தியின் தொழில்நுட்பமும் தொழில்முறையும் ஒழுங்கமைப்பும் செவ்வைப்படுத்தப்படும், உற்பத்திச் செயல் முறைகள் சர்வாம்ச ரீதியாக இயந்திரமயமாக்கப்படும், இந்தச் செயல்முறைகள் மேலும் மேலும் அதிகமாகத் தானியங்கிமயம் ஆக்கப்படும். தேசீயப் பொருளாதாரத்தில் இரசாயனம் விரிவாகப் பயன்படுத்தப்படும். பொருளாதார நோக்கில் அதிகப் பயன்பாடுள்ள புதிய உற்பத்தித் துறைகளும் புதுவகை ஆற்றல்களும் பொருள்களும் மிக மிக விருத்தி அடையும். இயற்கை, பொருளியல், உழைப்பு வளங்கள் சர்வாம்ச ரீதியாகவும் அறிவுக்கு உகந்த முறையிலும் உபயோகிக்கப் படும். விஞ்ஞானம் உற்பத்தியுடன் உறுப்பிணைவுள்ள முறையில்

ஒன்றுக்கப்படும். விஞ்ஞான-தொழில்நுட்ப முன்னேற்றத்தின விரைவு அதிகரிக்கும். உழைப்பாளி மக்களின் பண்பாட்டு-தொழில்நுட்பத் தரம் உயரும்.

கம்யூனிஸ அமைப்பில் உற்பத்திக்குக் கற்றுத்தேர்ந்த, விரிந்த கண்ணேட்டம் உடைய பண்பட்ட மனிதர்கள் தேவைப்படுவார்கள். மக்களின் பொதுக்கல்வித் தேர்ச்சி, பண்பாடு, தொழில்நுட்பம் ஆகியவற்றின் தரம் உயர்வதால் அறிவு உழைப்புக்கும் உடல் உழைப்புக்கும் இடையே தற்போது நிலவும் வேறுபாடு நீங்கிவிடும். ஆன்மீகச் செல்வம், ஒழுக்கத் தூய்மை, உடற் செவ்வை ஆகியவை ஒத்திசைந்து சேரப்பெற்றுள்ள மனிதனது பல்துறை வளர்ச்சிக்கு இதனுல் வாய்ப்பு ஏற்படும்.

கம்யூனிஸக் கட்டுமானத்தின்போது வளர்ச்சி பெறுபவை உற்பத்திச் சக்திகள் மட்டுமே அல்ல. அவற்றேடுகூடவே உற்பத்தி உறவுகளும் வளர்ந்து திருத்தம் அடைகின்றன.

சோஷலிஸ, கம்யூனிஸ உற்பத்தி உறவுகளுக்கு அஸ்திவாரமாக விளங்குவது, ஏற்கனவே கூறப்பட்டுள்ளது போல, உற்பத்திச் சாதனங்கள்மீது சமூகச் சொத்துரிமையே. ஆனுல் உற்பத்தி உறவுகளது முதிர்ச்சியின் தரம் கம்யூனிஸத்தில் சோஷலிஸத்தை விட அதிகமாயிருக்கும். இது கம்யூனிஸத்தின் சிறப்பு. சோஷலிஸ அமைப்பில் மக்கள் அனைவருக்கும் பொதுவான (அரசாங்க) உடைமை, கூட்டுறவு-கூட்டுப்பண்ணை உடைமை என்ற இரு உடைமை வடிவங்கள் நிலவுகின்றன. கம்யூனிஸத்திலோ, ஒரே கம்யூனிஸ உடைமை மட்டுமே இருக்கும்.

உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியும் அதன் காரணமாக ஏற்படும் நுகர்வுப் பொருள்களின் மிகுதியும் எந்த அளவுக்கு அதிகரிக்குமோ அந்த அளவுக்குப் பொருளியல் நலங்களின் வினியோக முறையும் செவ்வையுறும். சோஷலிஸ அமைப்பில் வினியோகத் துறையில் செயல்படுவது ''திறமைக்கு ஏற்ற உழைப்பு, உழைப்புக்கு ஏற்ற ஊதியம்'' என்ற கோட்பாடு ஆகும். இந்த அர்த்தத்தில் இங்கே வினியோகத்தில் சமமின்மை இன்னும் எஞ்சியுள்ளது. கம்யூனிஸ அமைப்பில் இம்மாதிரிச் சமமின்மை மறைந்துவிடும். கம்யூனிஸச் சமூகத்தில் மனிதர்களின் அறிவுக்குகந்த எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்ய முடியும் அளவுக்கு உற்பத்தி வளர்ச்சி அடைந்துவிடும். ''திறமைக்கு ஏற்ற உழைப்பு, தேவைக்கு ஏற்ற ஊதியம்'' என்ற கோட்பாடு கம்யூனிஸச் சமூகத்தில் செயல்படும்.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது: ''கம்யூனிஸம் என்பது, உற்பத்திச் சாதனங்கள் மீது மக்கள் அனைவருக்கும் பொதுவான சொத்துரிமையும் சமூகத்தின் எல்லா உறுப்பினர்களதும் முழுமையான சமுதாய சமத்துவமும் நிலவும், வர்க்கங்களற்ற சமூக அமைப்பு. அதிலே மனிதர்களின் சர்வாம்ச ரீதியான வளர்ச்சியோடு கூடவே இடையருது வளர்ச்சியுறும் விஞ்ஞானம், தொழில்நுட்பம் ஆகியவற்றின் அடிப்படையில் உற்பத்திச் சக்திகளும் விரிவடையும். சமூகச் செல்வத்தின் எல்லா ஊற்றுக்களும் நிறை வெள்ளமாகப் பொங்கிப் பெருகும். 'திறமைக்கு ஏற்ற உழைப்பு, தேவைக்கு ஏற்ற ஊதியம்' என்னும் மாண்புமிக்க கோட்பாடு செயல் படுத்தப்படும். கம்யூனிஸம் என்பது சுதந்திரமான, கடமை உணர்வுள்ள உழைப்பாளிகளின் சிறந்த ஒழுங்கமைப்பு கொண்ட சமூகம். அதிலே சமூகச் சுயநிர்வாகம் நிலைபெறும். சமூக நலத்தின் பொருட்டு உழைப்பது யாவருக்கும் முதலாவது ஜீவாதார முக்கியத்துவம் உள்ள தேவை ஆகிவிடும், மனமறிந்த இன்றியமையாமை ஆகிவிடும். ஒவ்வொருவரது திறமையும் மக்களின் மிகப் பெருத்த நன்மைக்காகப் பயன்படுத்தப்படும்.''

சமூக-பொருளாதார அமைப்புக்கள் பற்றிய மார்க்ஸீய-லெனினீயப் போதனை மிகப் பெரிய சித்தாந்த, நடைமுறை முக்கியத்துவம் உள்ளது. மனிதகுல வரலாற்றுக் காலம் முழுவதிலும் வெவ்வேறு சமூகங்கள் எவ்வாறு உருவாகின்றன, வாழ்கின்றன, வளர்கின்றன என்பதையும், இந்த வளர்ச்சியின் விதிமுறைகளும் இயங்கு திசையும் கட்டங்களும் யாவை என்பதையும் புரிந்துகொள்ள இந்தப் போதனை உதவுகிறது. முன்னே, தாழ்நிலையிலிருந்து மேல் நிலைக்குப் படிப்படியாக உயரும் சமூகத்தின் முற்போக்கு இயக்கம் என்ற வகையில் மனிதகுல வரலாற்றை ஆராய்வதற்கு அது வாய்ப்பு அளிக்கிறது.

அத்தியாயம் எட்டு

# மனிதர்களது பொதுமையின் வரலாற்று வடிவங்கள்

மனித சமூகத்தின் வளர்ச்சிக்கு உரிய பொருளியல் நிலைமைகள் பற்றி முந்திய அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டது. பொருளியல் நலங்களின்—அதாவது உணவு, உடை, இருப்பிடம், எரி பொருள் முதலியவற்றின்—உற்பத்தி சமூக வாழ்க்கைக்கு முதன்மையான, யாவற்றிலும் முக்கியமான நிலைமையாக விளங்குகிறது என்று அங்கே வலியுறுத்தப்பட்டது. மனிதர்கள் இந்த நலன்களைத் தனிமையில் அல்ல, கூட்டு வாழ்க்கையின் குறித்த வரையறைகளுக்குள் ஒன்றுசேர்ந்தே உற்பத்தி செய்கிறார்கள். இந்தக் கூட்டு வாழ்க்கையின் வடிவங்கள் வரலாற்றுப் போக்கில், சமூகத்தின் வளர்ச்சியோடு கூடவே உருவாகின்றன. உற்பத்திச் சக்திகள், உற்பத்தி உறவுகள் ஆகியவற்றின் வளர்ச்சித் தரத்தினாலேயே இந்த வடிவங்கள் முடிவில் நிர்ணயிக்கப்படுகின்றன. எனவேதான் நாம் இவற்றை மனிதர்களது பொதுமையின் வரலாற்று வடிவங்கள் என்கிறோம்.

## § 1. குலம், இனம், நாட்டினம்

மனிதர்களது பொதுமையின் ஒரு சில திட்டவட்டமான வடிவங்கள் விஞ்ஞானத்துக்குத் தெரியும். இவை வரலாற்றுப் போக்கில் ஒன்றின் இடத்துக்கு ஒன்று வந்தன. சில வேளைகளில் ஒரே சமயத்தில் உடன் நிலவின, அல்லது நிலவுகின்றன. சாதி-குலப் பொதுமை இவற்றில் முதலாவதும் மிகத் தொன்மையானதும் ஆகும். பண்டைக் கூட்டுச் சமூகக் காலகட்டத்தில், விலங்கு உலகிலிருந்து மனிதன் சிறப்பாகத் தனிப் பிரிந்ததன்

விளைவாக இந்தப் பொதுமை தோன்றியது. தமக்குள் இரத்த உறவுப் பிணைப்பு கொண்ட மனிதர்களின் தனித்த சமூக-உற்பத்திக் குழு சாதியாக அமைந்தது. மிக மிக எளிய, பண்படாத உற்பத்திக் கருவிகளும் கொல்லப்பட்ட விலங்குகள், பிடிக்கப்பட்ட மீன், சேகரிக்கப்பட்ட காட்டுப் பழங்கள் முதலிய உழைத்துப் பெற்ற பொருள்களும் கூட்டு உழைப்பின் காரணமாகச் சாதியின் சமூக உடைமை ஆயின.

வளர்ச்சி அடைந்த இரத்த உறவுப் பிணைப்புக்கள் உழைப்புக் கருவிகளும் உற்பத்தியும் செவ்வைப்படுவதற்கு மிக முக்கியமாக இருந்தன. மனிதர்களுக்கு இடையே ஒத்துழைப்பின் வரம்புகள் விரிவடைய அவை உதவின. ஆரம்பத்தில் ஒவ்வொரு சாதியும் மிகப் பெரியதாக இல்லை. தமக்குள் இரத்த உறவுப் பிணைப்பு கொண்ட சில பத்து மனிதர்களே ஒரு சாதியில் இருந்தார்கள். பின்னர் சாதியின் உறுப்பினர் தொகை படிப்படியாக அதிகரித்தது. ஆரம்பத்தில் உறவு தாய் வழியால் நிச்சயிக்கப்பட்டது (தாய்வழி ஆட்சிமுறை). பின்னர், பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பு நிலவிய காலத்தின் கடைசிப் பகுதியில் உற்பத்தி அதிகரிப்பின் விளைவாகக் குடித்தனத்தில் ஆண்களின் பங்கு அதிகமாகத் தொடங்கியதும் உறவு தந்தை வழியால் நிச்சயிக்கப்படலாயிற்று (தந்தைவழி ஆட்சி முறை).

சாதி அமைப்பின் கட்டமைப்பையும் தன்மையையும், சமூக உற்பத்தியின் வளர்ச்சியில் அதன் பங்கையும் பற்றி ''குடும்பம், தனிச் சொத்து, அரசு, ஆகியவற்றின் தோற்றம்'' என்னும் தமது நூலில் பிரெடெரிக் எங்கெல்ஸ் விரிவாக ஆராய்கிறார். மனிதர்களுடைய பொதுமையின் வரலாற்று வடிவங்கள் உற்பத்தி முறையின் வளர்ச்சியைச் சார்ந்தவை என்ற முக்கியமான முடிவை இந்த நூலில் அவர் செய்தார்.

சமூக உற்பத்தி வளர்ச்சி அடைய அடைய மனிதர்களது பொதுமையின் வடிவங்கள் திருத்தம் அடைந்துகொண்டு போயின. நாளடைவில் சாதி அமைப்பின் நிலைமைகளில் குலங்கள் தோன்றின. ஒவ்வொரு குலமும் பல சாதிகளின் கூட்டு. சாதிச் சமூக வளர்ச்சியின் ஒப்புநோக்கில் உயர்வான கட்டத்தில் குலங்கள் உருவாயின. ஒவ்வொரு குலமும் தனது பிரதேசத்தை, அதாவது நிலத்தை உடைமையாகக் கொண்டிருந்தது. குலத்தின் உறுப்பினவான சாதிகளின் மூப்பர்களுடைய பிரதிநிதிகள் அடங்கிய ஆலோசனைக் குழு குலத்துக்குத் தலைமை வகித்தது.

குலத்தின் வாழ்க்கை குறித்த எல்லாப் பிரச்சினைகளும் குலப் பொதுக் கூட்டத்தில் தீர்க்கப்பட்டன. ஒவ்வொரு குலத்துக்கும் சொந்தப் பெயரும் தனக்கே சிறப்பாக உரிய மொழி அல்லது பேச்சு வகையும் இருந்தன. குலத்துக்கு உரிய வழக்க பழக்கங்களும் இருந்தன.

மனிதர்களது பொதுமையின் குல வடிவம் ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, ஆசியா ஆகியவற்றின் சில பிரதேசங்களில் தற்காலம் வரை எஞ்சியிருக்கிறது. ஆனால் தொல்பொருளியல் நினைவுச் சின்னங்களிலிருந்து நாம் அறிந்துகொண்டுள்ள அந்தக் குலங்கள் அல்ல இப்பொழுது இருப்பவை என்பது கூறாமலே விளங்கும். மனிதர்களது பொதுமையின் தற்போது நிலவும் பண்டை (சாதி அல்லது குல) வடிவங்கள் நவீனச் சமூக முன்னேற்றத்தின் ஓரளவு செல்வாக்குக்கு உள்ளாகி வருகின்றன. இனம், நாட்டினம் போன்ற வளர்ச்சியுற்ற வடிவங்கள் அவற்றைப் பாதித்து வருகின்றன.

பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பு சீர்குலைந்த காலப் பகுதியில் குலங்களின் கூட்டுக்கள் தோன்றின. மனிதர்களின் சாதிப் பொதுமை எவற்றை ஆதாரமாகக் கொண்டிருந்ததோ அந்தப் பழைய பரம்பரை உறவுகளும் ஒழுங்குகளும் (பிரமாணம், வழக்க பழக்கங்கள் ஆகியவற்றின் ஆதிக்கம், மூப்பர் வழிபாடு முதலியன) இந்தக் குழுக்கள் உருவானதன் விளைவாகச் சிதறி அழியலாயின.

உற்பத்திச் சக்திகள் உழைப்பின் சமூகப் பிரிவினை ஆகியவற்றின் வளர்ச்சி, தனியார் சொத்துரிமையும் வர்க்கங்களும் உண்டானது, இவற்றின் விளைவாக மனிதர்களின் சாதி-குலப் பொதுமைக்குப் பதில் அதைவிட உயர்ந்த பொதுமை வடிவம் நிலைபெறலாயிற்று. இதுதான் இனம். வர்க்கங்கள் அற்ற சமூகம், வர்க்கச் சமூகம், இவற்றின் எல்லை நிலையில் தோன்றியது இனம். அடிமைச் சொந்தக்காரக் காலக்கட்டத்தில் அது வளர்ச்சி பெற்றது. பொதுப் பிரதேசத்தில் வாழ்ந்தவையும் மொழியிலும் பிறப்பிலும் உறவு கொண்டவையுமான குலங்கள் ஒன்றானதன் விளைவாக உண்டாயிற்று இனம். குலங்கள் தங்கள் தனித்த நிலைமையை இழந்துவிட்டன என்பதை இனம் உருவானது குறித்தது. தனிப்பட்ட குலங்களின் உடைமையாக இருந்த காடுகள், நிலங்கள், நீர்நிலைகள் ஆகியன நாளடைவில் பொதுப் பிரதேசமாக மாறிவிட்டன. ஓரளவு பிரதேசப் பொ

துமை தொடங்கியது. மக்களின் பெருங் குழுக்களுக்குள் பண்ட மாற்றத்தின் மிக எளிய வடிவங்களின் உருவில் பொருளாதாரத் தொடர்புகளின் அம்சங்கள் தோன்றின. சாதிப் பொதுமையில் இத்தகைய பண்ட மாற்றம் நிகழவில்லை. எனினும் இனங்கள் தோன்றிய போதும் நிலையான பொருளாதாரத் தொடர்புகள் இன்னும் ஏற்படவில்லை.

இனங்கள் அமைந்த காலக்கட்டத்தில் அரசு உறுப்புக்களின் வடிவில் மக்கள் மீது பொது நிர்வாகம் உருவாயிற்று. பிரமாணங்களையும் பரம்பரைகளையும் புனிதமாகக் கருதப் பட்ட வழக்கபழக்கங்களையும் ஆதாரமாகக் கொண்டிருந்த குல நிர்வாகத்திலிருந்து இது சாராம்சத்தில் வேறுயிருந்தது.

தோன்றி வளர்ந்த இனங்கள் தொகுதிப் பெயர்களை வைத்துக்கொண்டன. உதாரணமாக, கிழக்கு ஸ்லாவியக் குலங்களின் தொகுதி ''ரூஸ்'' என்ற பெயரை வைத்துக்கொண்டது. அயோனியத் தீபகற்பத்தில் வசித்த குலங்களின் தொகுதி ''ஹெலெனியர்'' என்று பெயர் பெற்றது. ''ஹோமரின் காவியங்களில் கிரேக்கக் குலங்கள் பெரும்பாலான சந்தர்ப்பங்களில் ஏற்கனவே சிறு இனங்களாக ஒன்ருகியிருக்கக் காண்கிறேம்....''[1] என்று ''குடும்பம், தனிச் சொத்து, அரசு, ஆகியவற்றின் தோற்றம்'' என்னும் தமது நூலில் பிரெடெரிக் எங்கெல்ஸ் சுட்டிக்காட்டியிருக்கிருர்.

வரலாற்றில் முதன்முதலாக உருவானவை அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தைச் சேர்ந்த இனங்களே. பண்டை எகிப்திய, பண்டைக் கிரேக்க இனங்கள் இதற்கு எடுத்துக் காட்டுக்கள். இந்திய இனம் தொன்மையானவற்றில் ஒன்ருகக் கருதப்படுகிறது. பிறகு வேறு பல இனங்களும் படிப்படியாக உருவாயின.

குல மொழிகளிலிருந்து இன மொழிகளுக்குப் பரிணமிப்பும் இந்தக் காலப்பகுதியிலேயே நிறைவேறியது. சமூக உற்பத்தி, மனிதர்களின் ஒருமுனைப்பாடுள்ள செயல், இவற்றின் வளர்ச்சியில் மொழி ஆற்றும் பங்கை இந்த நிகழ்முறை கணிசமான அளவுக்குத் தூண்டி ஊக்கியது. உளப்பாங்குப் பொதுமை உருவாவதற்கு வேண்டிய நிலைமைகள் ஏற்பட்டன.

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்'', நூல்திரட்டு, தொகுதி 21, பக்கம் 104.

பண்பாட்டுப் பொதுமையில் இது முதன்மையாக வெளிப் பட்டது.

வெவ்வேறு இனங்களாகக் குலங்கள் ஒன்றிணைந்தது, அவற்றின் பிரதேசப் பொதுமையும் பொருளாதாரத் தொடர்புகளும் வலுப்பட்டது, உளப்பாங்கு, வாழ்க்கை முறை ஆகியவற்றின் பொது அம்சங்கள் அமைந்தது, இவை எல்லாமே தோன்ற அரசும் உதவியது. அடிமைச் சொந்தக்காரர்கள், அடிமைகள் என்ற எதிரெதிரான வர்க்கங்கள் சமூகத்தில் தோன்றியதைத் தொடர்ந்தே அரசு உருவாயிற்று. மேலே இது விரிவாக விளக்கிக் காட்டப்படும். திட்டவட்டமான தனித்தனி இனங்கள் வழக்கமாக, குறித்த அரசின் பிரதேசத்தில் வசிக்க முடிந்தது, அவை வசித்தன. பண்டைச் சமூகம் சிதறிய காலக்கட்டத்தில் உருவான இனம் பெரும்பாலும் அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ அமைப்புக்களின் நிலைமைகளிலேயே நிலவியது.

எனவே மனிதர்களது பொதுமை அமைவதன் வரலாற்று ரீதியாக வளரும் போக்கின் குறித்த கட்டங்களிலேயே குலமும் இனமும் தோன்றுகின்றன. இந்தப் பொதுமையின் ஆக உயர்ந்த கட்டம் நாட்டினம் ஆகும்.

முதலாளித்துவ உற்பத்தி முறை நிலைபெற்று வெற்றி அடைந்த நிகழ்முறையில் தோன்றிய வரலாற்று வகைப்பிரிவு என்ற வகையில் நாட்டினத்தைக் ''கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கையில்'' கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் ஆராய்கிறார்கள். பூர்ஷ்வாச் சமூகத்தில் நிகழ்ந்த பொருளாதாரக் குவிவும் அரசியல் மையப்பாடும் பல்வேறு துறைகளைச் சேர்ந்த மக்களை ''ஒரே அரசாங்கமும், ஒரே சட்டத் தொகுப்பும், ஒரே தேசிய வர்க்க நலனும் ஒரே சுங்க எல்லையும் கொண்ட ஒரே நாட்டினமாக''[1] ஒன்றுபடுத்தின என்று அவர்கள் சுட்டிக் காட்டினார்கள்.

நாட்டினம் பற்றிய மார்க்ஸீயச் சித்தாந்தத்தை வி. இ.லெனின் தமது நூல்களில் விரிவுபடுத்தினார். முதலாளித்துவத்தின் தோற்றத்துடனேயே நாட்டினங்கள் தோன்றின என்று

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''கம்யூனிஸ்ட் கட்சியின் அறிக்கை'', நூல்திரட்டு, தொகுதி 4, பக்கம் 428.

அவர் விவரமாகக் காட்டினர். நாட்டினம் என்பது சமூக வளர்ச்சியின் பூர்ஷ்வாக் காலக்கட்டத்தினுடைய தவிர்க்க முடியாத விளைவு, தவிர்க்க முடியாத வடிவம் என்று அவர் எழுதினர். வெவ்வேறு நாடுகளில் நாட்டினங்கள் அமைவது தனக்கே உரிய சிறப்புத் தன்மைகள் கொண்டிருக்கிறது என்றும் இவற்றைக் கருத்தில் கொள்ளாமல் இருக்க முடியாது என்றும் அவர் உரைத்தார்.

நாட்டினத் தொடர்புகள் என்பவை சமூக வாழ்க்கையில் கோட்பாட்டு ரீதியில் புதிய நிகழ்ச்சி ஆகும். பூர்ஷ்வாப் பொருளாதாரத் தொடர்புகள், உறவுகளின் அஸ்திவாரத்தில், சிறு சிறு வட்டாரச் சந்தைகள் ஒரு பொதுவான தேசீயச் சந்தையாக ஒன்றுவதன் அடிப்படையில் நாட்டினத் தொடர்புகள் உருவாகின்றன.

சந்தைக்கும் நாட்டினங்கள் உருவாவதற்கும் என்ன பரஸ்பரத் தொடர்பு நிலவுகிறது? விஷயம் என்ன என்றுல் நாட்டினம் தோன்றுவதற்குப் பிரதேசப் பொதுமை ஒன்று மட்டுமே போதாது. இதற்கு இன்னும் நிலையான பொருளாதாரத் தொடர்புகள் தேவைப்படுகின்றன. பொது மொழியும் பொதுப் பிரதேசமும் உடைய மனிதர்கள் ஒன்றிணைவதற்கு இந்தத் தொடர்புகள் உதவுகின்றன. இத்தகைய பொருளாதாரத் தொடர்புகளோ, வியாபாரத்தின், தேசீயச் சந்தையின் அடிப்படையிலேயே தோன்றி விரிவடைகின்றன. நிலப்பிரபுத்துவச் சமூகத்தின் பொருளாதார வாழ்வினது துண்டுகளாகச் சிதறி அடைபட்டிருக்கும் நிலைமையை அகற்றுவது தேசீயச் சந்தையின் உதவியாலேயே இயல்கிறது. தேசீயப் பொதுச் சந்தை அமைவதற்கும் நாட்டினம் உருவாவதற்கும் உள்ள தொடர்பை இதுவே தீர்மானிக்கிறது.

எனினும் நாட்டினம் நிலவுவதற்குப் பொருளியல் வாழ்க்கை நிலைமைகளின் பொதுமை, அதாவது பிரதேச, பொருளாதாரப் பொதுமை மட்டுமே போதாது. மனிதர்கள் ஒரே பிரதேசத்தில் வாழ்வது, குறிப்பிட்ட பொருளாதாரத்தை நடத்துவது ஆகியவற்றேடு கூடவே உணர்வும், சித்தமும், உணர்ச்சிகளும் குறித்த ஆன்மீகப் பண்புகளும் தேவைகளும் பெற்றிருக்கிறர்கள். எனவே, ஆன்மீக-பண்பாட்டு வாழ்வின் நிலையான பொதுமையும்—அதாவது மொழி, உளப் பாங்கு, இவற்றின் பொதுமையும்—நாட்டினம் உருவாவதற்கு இன்றியமையாத

வை. ஒவ்வொரு நாட்டினமும் தனக்கே உரிய உளப் பாங்கின் திட்டவட்டமான ஒருமையும், தன் ஆன்மீக வாழ்வு அனைத்திலும் தோன்றியுள்ள பரம்பரைகளும் பழக்க வழக்கங்களும் சிறப்பாகப் பெற்றிருக்கிறது.

எனவே, நாட்டினம் என்பது மனிதர்களது பொதுமையின் நிலையான வரலாற்று வடிவம். பிரதேசம், பொருளாதார வாழ்வு, இவற்றின் பொதுமையும் அதேபோல மொழி, உளப் பாங்கு, இவற்றின் பொதுமையும் அதற்கு இயல்பானவை.

நாட்டினம் வேறு, மானிட இனம் வேறு. மானிட இனங்கள் உயிரியல் வகைப்பட்ட தோற்றங்கள். தோல், தலைமயிர், இவற்றின் நிறம், கண்கள், மண்டையோடு, இவற்றின் வடிவமைப்பு முதலிய உடலின் வெளிச் சின்னங்களில் இவை ஒன்றுக்கொன்று வேறுபடுகின்றன. மனிதர்கள் வாழும் வெவ்வேறு இயற்கை, பூகோள நிலைமைகள் காரணமாக இந்தச் சின்னங்கள் ஏற்பட்டிருக்கின்றன. மானிட இனங்கள் மிகத் தொன்மையான காலத்தில் தோன்றின. நாட்டினங்களோ கணிசமாகப் பிற்காலத்திய சமூக வளர்ச்சியின் விளைவுகள். வெவ்வேறு நாட்டினங்கள் ஒரே மானிட இனத்தைச் சேர்ந்தவையாக இருக்கலாம். உதாரணமாக ருஷ்ய, பிரெஞ்சு, ஜெர்மானிய நாட்டினங்களும் பிறவும் வெள்ளை மானிட இனத்தைச் சேர்ந்தவை. ஜப்பானியர்கள், சீனர்கள், கொரியர்கள் முதலியவர்கள் மஞ்சள் மானிட இனத்தைச் சேர்ந்தவர்கள்.

நாட்டினங்கள் உருவாவது ஒரே சமயத்தில் நிகழ்வதில்லை. பூமியின் வெவ்வேறு பகுதிகளில் மனிதர்கள் வெவ்வேறு விதமான இயற்கை நிலைமைகளிலும் சமுதாய-பொருளாதார நிலைமைகளிலும் வாழ்கிறார்கள் என்பதே இதன் காரணம். எனவே உலகின் ஒரு பகுதியில் சாதிகளும் குலங்களும் இன்னும் எஞ்சியிருக்கையில் மறு பகுதியில் நாட்டினங்கள் உருவாகிவிட்டிருக்கலாம்.

மனிதர்கள் நாட்டினங்களாக ஒன்று சேர விடாமல் தடுக்கும் காரணங்களில் ஒன்று ஏகாதிபத்தியத்தின் காலனியாட்சி முறையாகும். ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க மக்களின் வரலாறு இதற்கு விளக்கமான சான்று தருகிறது. பல்லாண்டுக் காலமாக இந்த மக்களைச் சூறையாடிவந்த ஏகாதிபத்தியவாதிகள் அவர்களது வளர்ச்சியைச் செயற்கையாகத் தடைப்படுத்தி வைத்தார்கள். உற்பத்தி, வாழ்க்கைமுறை,

இவற்றின் மிகப் பின்தங்கிய வடிவங்களை இந்த நிலப்பரப்புக்களில் நிலையாக வைத்திருக்கவும் வெவ்வேறு நாட்டின, குலக் குழுக்களுக்கிடையே உறவுகளில் பிணக்கு ஏற்படுத்தவும் ஏகாதிபத்தியவாதிகள் முயன்றார்கள், இன்னும் முயன்று வருகிறார்கள்.

முதலாளித்துவத்தின் கொள்கைவாதிகள் நாட்டினங்களைப் பற்றிப் பேசுகையில் மனிதர்களின் மதப் பொதுமைக்கும் குறித்த அரசியல் ஸ்தாபனங்கள் நிலவுவதற்கும் இவைபோன்ற பிற விஷயங்களுக்கும் முதலிடம் தருகிறார்கள், இவற்றையே நாட்டினத்தை நிர்ணயிக்கும் சின்னங்கள் என்று கருதுகிறார்கள். பூர்ஷ்வா நாடுகளில் மானிட இனங்கள் பற்றிய வெவ்வேறு சித்தாந்தங்கள் சிறப்பாகப் பரப்பப்படுகின்றன. இவற்றின்படி அதிக வளர்ச்சியுற்ற இனத்தைச் சேர்ந்த மக்கள் வளர்ச்சி குறைந்தவையும் சுதந்திரமாக வாழத் திறன் அற்றவையுமான பிற இனங்களைச் சேர்ந்த மக்கள்மீது ஆட்சி செலுத்த வேண்டும். சமூக நிகழ்ச்சிகளை வேண்டுமென்றே பொய்யாகத் திரித்துக் கூறுவதில் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் கொண்டுள்ள அக்கறையை இத்தகைய ''சித்தாந்தங்கள்'' காட்டுகின்றன. ஒடுக்கப்பட்ட மக்களின் விழிப்பையும் தேசீய உணர்வு வளர்ச்சியையும் தடுப்பதும் காலனி ஆட்சி முறையின் இறுதிச் சீரழிவின் வரலாற்று நிகழ்முறையைத் தாமதப்படுத்துவதுமே அவர்கள் இவ்வாறு பித்தலாட்டம் செய்வதன் நோக்கம்.

எனினும் முன்னர் பின்தங்கியிருந்த மக்கள் நாட்டினங்களாக ஒன்றிணைவதைத் தடுப்பதற்கு ஏகாதிபத்தியவாதிகள் என்னதான் முயன்றாலும் இந்த நிகழ்முறையை முழுமையாகத் தடுத்து நிறுத்த அவர்களால் முடியாது. விடுதலை பெற்ற நாடுகளில் இயந்திரத் தொழில் படிப்படியாக அதிகரித்து வருகிறது, தொழிலாளி வர்க்கம் வளர்ந்துவருகிறது, மக்களின் தேசீய உணர்வு விழிப்படைந்து வருகிறது. உலகின் சில பாகங்களில் இன்னும் நிலவிவரும் சாதி-குலப் பொதுமை அகன்று அதன் இடத்தில் இனம், நாட்டினம் போன்ற பொதுமையின் அதிக உயர்வான வடிவங்கள் நிலைபெற்று வருகின்றன. மனித குலத்தின் ஏறுமுகமான வளர்ச்சி, வரலாற்று நிகழ்முறையின் முன்னேறிச் செல்லும் போக்கு இதில் வெளிப்படுகிறது.

## § 2. நாட்டினமும் வர்க்கமும்.
### பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதம்

மனிதர்களது பொதுமையின் வடிவங்கள் பற்றிய பிரச்சினையை ஆராய்கையில் நாட்டினத்தையும் வர்க்கத்தையும் வேறு பிரித்து அறிவது அவசியம். நாட்டினம், வர்க்கம், இரண்டுமே சமூகத்தினுடைய வளர்ச்சியின் குறித்த கட்டத்தில் ஏற்படும் வரலாற்று நிகழ்ச்சிகள் என்பதுதான் இவற்றுக்கு இடையே உள்ள பொது அம்சம். ஆனால் இவற்றுக்கு இடையே வித்தியாசங்களும் உள்ளன. நாட்டினம் என்பது வர்க்கத்தைக் காட்டிலும் அதிக விரிவான சமூக நிகழ்ச்சி. நாட்டினத்தில் முற்றிலும் வெவ்வேறு வர்க்கங்களையும் சமூகத் தரங்களையும் குழுக்களையும் சேர்ந்த மனிதர்கள் அடங்கியிருக்கக் கூடும். உதாரணமாக, புரட்சிக்கு முந்திய ருஷ்ய நாட்டினத்தில் தொழிலாளர்களையும் குடியானவர்களையும் தவிர நகர, கிராம பூர்ஷ்வாக்களும் அடங்கியிருந்தார்கள். தற்கால ஆங்கில, அமெரிக்க, பிரெஞ்சு முதலிய நாட்டினங்கள் பற்றியும் இவ்வாறே கூறலாம். வர்க்கநோக்கில் இவை ஒரே மாதிரியானவை அல்லவே அல்ல.

ஆகவே திட்டவட்டமான நாட்டினத்தில் வெவ்வேறான, சில வேளைகளில் எதிரெதிரான வர்க்கங்கள் அடங்கியிருக்கின்றன. நாட்டின உறவுகள் வர்க்க உறவுகளைக் காட்டிலும் அதிக நிலைத்தன்மை கொண்டிருக்கின்றன. மனிதர்களது பொதுமையின் வடிவம் என்ற முறையில் நாட்டினத்துக்கு உள்ள சிறப்பியல்பு இந்த நிலைத்தன்மையைத் தீர்மானிக்கிறது. ஆனால் வர்க்கவேற்றுமைகளும் முரண்பாடுகளும் நாட்டினப் பொதுமை காரணமாக நீங்கிவிடுகின்றன என்று இதற்கு அர்த்தமல்ல.

இதன் தொடர்பாக நாட்டினப் பொதுமை, அரசுப் பொதுமை என்ற கருதுகோள்களைச் சற்று விளக்குவது அவசியம். இவற்றில் ஒவ்வொன்றுக்கும் அதற்கு உரிய சிறப்புத் தன்மைகள் உள்ளன. உதாரணமாக, நாட்டினப் பொதுமை மொழிப் பொதுமை இன்றி நிலவவே முடியாது. ஆனால் அரசுப் பொதுமைக்குப் பொது மொழி இன்றியமையாதது அல்ல. அரசுப் பொதுமையில் பல நாட்டினங்கள் அடங்கியிருக்கலாம். அவற்றில் ஒவ்வொன்றுக்கும் உரிய சொந்த நாட்டின மொழி இருக்கும். சோஷலிஸத்தின் நிலைமைகளில் யாவற்றிலும் வளர்ச்சி

மிக்க மொழிகளில் ஒன்று நாட்டினங்களுக்கு இடையே தொடர்புச் சாதனமாகப் படிப்படியாக மாற முடியும் என்று சமூக வளர்ச்சியின் அனுபவம் காட்டுகிறது. சோவியத் நாட்டில் ருஷ்ய மொழி இத்தகையது ஆகிவருகிறது. இருபத்து மூன்று கோடிக்கும் அதிகமான ஜனத்தொகை கொண்ட சோவியத் யூனியனில் பதினைந்து கோடிக்குக் குறையாத மக்கள் ருஷ்ய மொழியை அறிந்திருக்கிறார்கள்.

வர்க்கங்களின் போராட்டம் பற்றிய பிரச்சினையை நாட்டினங்களின் போராட்டம் பற்றிய பிரச்சினையாகத் தற்கால பூர்ஷ்வாத் தத்துவவாதிகளும் சமூகவியலாரும் அனேக சந்தர்ப்பங்களில் பாவிக்க முயல்கிறார்கள். நாட்டின ஒடுக்குமுறையும் அதற்கு எதிரான போராட்டமும் மக்களது இயல்பு காரணமாகவே, வேறு பண்பாட்டின், வேறு நாட்டினத்தின் பிரதிநிதிகள் பால் அவர்களுக்கு உண்டாகும் உள்ளார்ந்த பகைமை காரணமாகவே ஏற்படுகின்றன என்று அவர்கள் சொல்லுகிறார்கள். வர்க்க உறவுகளுக்கு நாட்டின உறவுகளைப் பதிலியாக வைக்க முற்படும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் வர்க்க சம்பந்தமானதையும் நாட்டின சம்பந்தமானதையும் அடிக்கடி ஒன்றே என்று சாதித்துவிடுகிறார்கள். நாட்டினத்தில் அடங்கிய எல்லாச் சமூகக் குழுக்களதும் ''நலன்களின் ஒருமையை'' அவர்கள் பிரசாரம் செய்கிறார்கள். நாட்டினத்துக்கு உள்ளே வர்க்கங்களுக்கு இடையே நிலவும் முரண்பாடுகளைப் பூசி மெழுக முயல்கிறார்கள். உழைப்பாளிகளின் பிரதானப் பகைவர்கள் குறித்த நாட்டினத்தைச் சேர்ந்த சுறண்டும் வர்க்கத்தினர் அல்ல, வேறொரு நாட்டினத்தைச் சேர்ந்த மக்களே என்று பொது ஜனத் திரளை நம்ப வைப்பதற்கு பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் இவ்வாறு முயல்கிறார்கள். மக்களுக்கு இடையே நாட்டின வேற்றுமையைத் தூண்டிவிடுவதன் வாயிலாக பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் தங்கள் சொந்த நாட்டினத்தைச் சேர்ந்த சுறண்டுவோருக்கு எதிராக இந்த மக்களின் போராட்டத்தைப் பலவீனப்படுத்த முயல்கிறார்கள்.

திரிபுவாதிகளும் ''இடதுசாரிச்'' சந்தர்ப்பவாதிகளும்கூட வர்க்க சம்பந்தமானதையும் நாட்டின சம்பந்தமானதையும் பற்றிய புரிவை இவ்வாறே கலந்து குழப்புகிறார்கள். திரிபுவாதிகள் நாட்டினச் சிறப்புத்தன்மையை முதன்மையாகக் கருதுகிறார்கள். ஜனநாயகத்திற்காகவும் சோஷலிஸத்திற்காகவும்

தனித்தனி நாடுகளில் நடக்கும் போராட்டத்தின் திட்டவட்ட மான சிறப்பியல்புகளை சோஷலிஸத்தின் கட்டுமானத்தையும் வெற்றியையும் குறித்த, எல்லா நாடுகளுக்கும் இயல்பான பொது விதிமுறைகளுக்கு எதிர்நிறுத்துகிறார்கள். இவ்வாறு செய்வதனாலேயே அவர்கள் பூர்ஷ்வா தேசீயவாத நிலையை மேற்கொண்டுவிடுகிறார்கள்.

முதலாளித்துவ நாடுகளில் உள்ள புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்தின் ஜீவாதார நலன்களை நாட்டினப் பொது நலன்கள் எனப்படுபவற்றுடன் கரைத்துக் கலந்துவிடத் திரிபுவாதிகள் முயற்சி செய்கிறார்கள். தேசீய விடுதலை இயக்கத்தில் தொழி லாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தை அவர்கள் குறை வாக மதிப்பிடுகிறார்கள். நாட்டினப் பொது நலன் பூர்ஷ்வாச் சமூகத்தில் நிலவுவது உண்மையே. தேசீய விடுதலை, மக்களின் அரசுரிமை முதலியன இவ்வகையில் சேர்ந்தவை. ஆனால் பாட் டாளிகளின் அடிப்படை வர்க்க நலன்கள் இந்தப் பிரச்சினை களைச் சேர்ந்தவையே அல்ல, இவற்றோடு அவை தீர்ந்து விடு வதும் இல்லை. ஏனெனில் தொழிலாளி வர்க்கத்தின் முடிவான குறிக்கோள் கம்யூனிஸத்தின் வெற்றி ஆகும்.

திரிபுவாதிகள் போலவே ''இடதுசாரிச்'' சந்தர்ப்பவாதி களும் புரட்சி இயக்கத்தின் அத்தியாவசியப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்கையில் தேசீயவாதப் போக்கைக் கடைப்பிடிக் கிறார்கள். சமுதாய, வர்க்க அணுகுமுறைக்கு பதிலாக பூகோள அணுகுமுறையையும் மானிட இன அணுகு முறையையும் கூட அவர்கள் மேற்கொள்கிறார்கள். காலனி ஆட்சிமுறைக்கு எதிராகப் போராடும் மக்களுக்கிடையே நாட்டின மனப்பான் மையைத் தூண்டிவிட அவர்கள் முயல்கிறார்கள். இவ்வாறு செய்வதனால் இந்தப் போராட்டத்துக்கு அவர்கள் பெருத்த தீங்கு விளைக்கிறார்கள்.

வர்க்க சம்பந்தமானதையும் நாட்டின சம்பந்தமானதை யும் ஒன்றாகக் கருதுவதை மார்க்ஸீய-லெனினீயம் தீர்மான மாக எதிர்க்கிறது. ''நாட்டின சம்பந்தமானது'' என்ற கருது கோளை உறைந்துபோன, என்றென்றைக்கும் மாறாமல் நிலைத்து விட்ட வடிவில் நோக்கக் கூடாது. இந்த விஷயத்தில் ஸ்தூல மான அணுகுமுறை அவசியமானது. உதாரணமாக நாட்டின மரபுகளையும் பழக்க வழக்கங்களையும் எடுத்துக்கொள்வோம். சில மரபுகள் முற்போக்கானவை, ஒரு அல்லது இன்னொரு இனத்

தின் சிறந்த இயல்புகளை மிக விளக்கமாகக் காட்டுபவை. இத்தகைய மரபுகள் பொருளாதாரத் துறையிலோ, பண்பாட்டுத் துறையிலோ, அன்றாட வாழ்க்கையிலோ, எதில் இருப்பினும் சரியே, எல்லா வகையிலும் ஆதரிக்கப்பட வேண்டும். இவற்றோடு கூடவே சோஷலிஸக் கோட்பாடுகளுக்கு முரணான, பின் தங்கிய, பிற்போக்கான மரபுகளும் பழக்க வழக்கங்களும் உள்ளன. இவை புது வாழ்வை நிறுவுவதற்குத் தடையாக இருப்பதால் இவற்றை விடாப்பிடியாக, பொறுமையுடன் முயன்று அகற்றிவிடுவது அவசியம்.

கம்யூனிஸ்டுகள் தங்கள் நடைமுறைச் செயல்களில் பாட்டாளி வர்க்கச் சர்வதேசீயவாதத்தின் கோட்பாடுகளை வழிகாட்டியாகக் கொள்கிறார்கள். தொழிலாளி வர்க்கத்தின் நண்பர்களையும் பகைவர்களையும் அவர்கள் எந்த நாட்டினத்தையும் மானிட இனத்தையும் சேர்ந்தவர்களானாலும் கண்டறிந்து கொள்ள இது உதவுகிறது.

பாட்டாளி வர்க்கச் சர்வதேசீயவாதம் நாட்டினப் பிரச்சினை பற்றிய துறையில் தொழிலாளி வர்க்கம், கம்யூனிஸ்ட் கட்சி, இவற்றின் கொள்கைவாதமாகவும் கொள்கையாகவும் விளங்குகிறது. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் தன்மை எதில் அடங்கியுள்ளது? பூர்ஷ்வா தேசீயவாதத்திற்கும் உலகப் பிரஜாவாதத்திற்கும் அது அடிப்படையில் எதிர்நிலையில் இருப்பது ஏன்? இந்தக் கேள்விகளைச் சரியாகப் புரிந்துகொள்வதால் மார்க்ஸீய-லெனினீயக் கண்ணோட்டத்தின் மிக முக்கியமான அம்சங்களில் ஒன்று வெளிப்படுகிறது.

முதன்மையாக ஒரு விஷயத்தைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது, மூலதனம் தேசீயச் சக்தி மட்டும் அல்ல, அனைத்து மக்களது சக்தி, சர்வதேசீயச் சக்தி. எல்லா நாடுகளிலும் உள்ள தொழிலாளி வர்க்கத்துக்கு எதிர்நிற்கிறது பூர்ஷ்வா வர்க்கத்தின் வலிமை மிகுந்த முன்னணி. இப்பொழுதும்கூடப் பல நாடுகளில் அரசியல் ஆட்சி அதிகாரம் பூர்ஷ்வா வர்க்கத்தின் கைகளிலேயே இருக்கிறது. பூர்ஷ்வா வர்க்கத்துடன் வெற்றிகரமாகப் போராடுவதற்கு வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்த பாட்டாளிகள் தங்கள் பிரயாசைகளை ஒன்றிணைப்பது இன்றியமையாதது. உலகம் அனைத்திலும் உள்ள தொழிலாளிகளின் அடிப்படையான, ஜீவாதார நலன்கள் ஒன்றாயிருப்பதும் அவர்களது கொள்கைவாதம்—புரட்சிகர

மார்க்ஸீயப் போதனை—பொதுவாயிருப்பதும் இவ்வாறு முயற்சிகளை ஒன்றிணைப்பதற்கு உதவுகின்றன.

நூறு ஆண்டுகளுக்கும் முற்பட்ட காலத்திலேயே கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் ''உலகத் தொழிலாளர்களே, ஒன்று சேருங்கள்!'' என்ற கோஷத்தை முன் வைத்தார்கள். பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதத்தின் ஆழ்ந்த சாரத்தை இந்தக் கோஷம் வெளியிட்டது. மக்களின் வெறுப்புக்குப் பாத்திரம் ஆகியுள்ள முதலாளித்துவத்தை ஒழித்துவிட்டுப் புதிய, கம்யூனிஸச் சமூகத்தை நிறுவும் பொருட்டுப் பாட்டாளி மக்கள் கட்டாயமாக ஒன்று சேர வேண்டும்.

எனினும் உலகம் முழுவதிலும் உள்ள உழைப்பாளிகள் ஒன்றிணைந்து ஒருங்கு சேர்வதற்கு தடையாயிருக்கிறது பூர்ஷ்வா தேசியவாதம். தொழிலாளர் இயக்கத்தைத் தனித்தனிப் போக்குக்களாகவும் பகைமை கொண்ட குழுக்களாகவும் பிளவு படுத்துவதன் மூலம் தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமையை பூர்ஷ்வா தேசியவாதம் சிதைக்கிறது. ''தேசியவாத நோக்கு நிலையை மேற்கொள்பவன் தனது நாட்டினத்தை, தனது தேசியத் தொழிலாளர் இயக்கத்தைச் சுற்றிச் சீனச் சுவர் எழுப்பி அரண் செய்துகொள்ள விரும்பும் அளவுக்கு இயல்பாகவே சென்றுவிடுவான்... எல்லா நாட்டினங்களையும் எல்லா மானிட இனங்களையும் எல்லா மொழிகளையும் சேர்ந்த பாட்டாளிகளை அருகே கொண்டுவருதல், ஒற்றுமைப்படுத்தல் என்ற மாபெரும் அறிவுரையைத் தனிப் பிரித்தல், துண்டுகளாக நொறுக்கல் என்ற தனது செயல் தந்திரத்தால் தான் ஒன்றுமில்லாதது ஆக்கிவிடுவது கூட அவனுக்கு மனக் கலக்கம் அளிக்காது''[1] என்று எச்சரித்தார் வி. இ. லெனின். எனவே பூர்ஷ்வா தேசியவாதத்தை எதிர்த்துச் சமரசமற்ற போராட்டம் நடத்துவது ஒவ்வொரு மார்க்ஸீய-லெனினீயவாதியினதும், உணர்வு பெற்ற ஒவ்வொரு உழைப்பாளியினதும் கட்டாயக் கடமை ஆகிறது.

தேசியவாதம் பற்றிய பிரச்சினையை மார்க்ஸீயம் ஸ்தூலமான வரலாற்று நோக்கில் அணுகுகிறது. பல வகைப்பட்ட தேசியவாதம் நிலவுகிறது என்பதை அது கருத்தில் கொள்கிறது. அடக்குமுறை செலுத்தும் நாட்டினத்தின் தேசியவாதம்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 7, பக்கம் 325.

இருக்கிறது. அதற்கு எதிராகப் பாட்டாளிவர்க்கச் சர்வதேசீய வாதம் தீர்மானமாகப் போராடுகிறது. அதே சமயம் அடக்கு முறைக்கு உட்பட்ட நாட்டினங்களின் தேசீயவாதமும் உள்ளது. காலனி ஆட்சிமுறைக்கு எதிராக, தங்கள் தேசீய விடுதலையின் பொருட்டு, கட்டற்ற சுயாதீனத்தின் பொருட்டு அடக்கப்பட்ட மக்கள் நடத்தும் போராட்டத்துக்கு மார்க்ஸீயம் எல்லா வகையிலும் ஆதரவு அளிக்கிறது.

பூர்ஷ்வா தேசீயவாதத்தையும் பெருவல்லரசு நாட்டுவெறியையும் அம்பலப்படுத்தும் அதே சமயத்தில், ஏகாதிபத்திய வாத பூர்ஷ்வா வர்க்கத்தின் கொள்கைவாதமான உலகப் பிரஜாவாதத்தையும் மார்க்ஸீய-லெனினீயவாதிகள் தீர்மானமாக எதிர்க்கிறார்கள். மக்களின் தேசீய மரபுகளையும் அவர்களது பண்பாட்டையும் புறக்கணிக்குமாறு உலகப் பிரஜாவாதம் பிரசாரம் செய்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஏகபோகவாதிகள் உலக ஆதிபத்தியத்துக்கான தங்கள் போராட்டத்தில் கொள்கைவாதக் கருவியாக உலகப் பிரஜாவாதத்தைப் பயன்படுத்துகிறார்கள்.

''நாட்டினப் பிரச்சினை பற்றிய விமர்சனக் குறிப்புக்கள்'' என்னும் தமது நூலிலும் வேறு சில நூல்களிலும் வி. இ. லெனின் பாட்டாளி வர்க்கச் சர்வதேசீயவாதமும் பூர்ஷ்வா தேசீயவாதமும் கோட்பாட்டு நோக்கில் எதிரெதிரானவை என்பதைக் காட்டியிருக்கிறார். ''பூர்ஷ்வா தேசீயவாதம், பாட்டாளி வர்க்கச் சர்வதேசீயவாதம், இவை இரண்டும் சமரசப்படுத்த முடியாத பகைமை கொண்ட கோஷங்கள். இவை முதலாளித்துவ உலகம் அனைத்திலும் உள்ள இரண்டு மாபெரும் வர்க்க முகாம்களுக்குப் பொருந்துபவை, நாட்டினப் பிரச்சினையில் இரண்டு கொள்கைகளை (அவற்றை மட்டுமின்றி பிரபஞ்சம் பற்றிய இரண்டு சிந்தனைகளை) வெளியிடுபவை''[1] என்று அவர் எழுதினார்.

பாட்டாளி வர்க்கச் சர்வதேசீயவாதம் முரணற்ற கொள்கைவாதம் ஆகும். எல்லா நாட்டினங்களையும் சேர்ந்த தொழிலாளி வர்க்கத்தின் அடிப்படை நலன்களும் கடமைகளும் அதில் விஞ்ஞான ரீதியில் வெளியிடப்படுகின்றன. இந்தக் கடமை

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 24, பக்கம் 123.

களைச் சுருக்கமாகப் பின்வருமாறு சூத்திரப்படுத்தலாம்: சுறண்டலிலும் அடக்குமுறையிலுமிருந்து எல்லா மக்களையும் விடுதலை பெறச் செய்வதற்கான போராட்டம், ஒவ்வொரு நாட்டின மக்களதும் சர்வாம்ச ரீதியான, சுதந்திர வளர்ச்சி, எல்லா நாடுகளின் மக்களுக்கு இடையிலும் சமத்துவமும் நட்பும். பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதம் பல்வேறு நாட்டினங்களைச் சேர்ந்த தொழிலாளிகளுக்கு இடையே புதிய, கம்யூனிஸ வகைப்பட்ட உறவுகளின் வடிவமாக விளங்குகிறது. நாட்டின மக்களின் சமத்துவத்தையும், அவர்களுடைய பொதுவான, சிறப்பான நலன்கள் பற்றிய ஆழ்ந்த பரஸ்பரப் புரிவையும், சோதரப் பாங்குள்ள பரஸ்பர உதவியையும் ஆதரவையும் இந்த உறவுகள் ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. ''செயலில் சர்வதேசியவாதம் ஒன்றே, ஒன்று மட்டுமே ஆகும்: தனது நாட்டில் புரட்சி இயக்கத்தையும் புரட்சிப் போராட்டத்தையும் வளர்ப்பதற்கான தன்னலமற்ற உழைப்பு, விதிவிலக்கின்றி எல்லா நாடுகளிலும் அதே மாதிரிப் போராட்டத்துக்கு, அதே மாதிரிப் போக்குக்கு, அது ஒன்றுக்கு மட்டுமே ஆதரவு (பிரசாரத்தாலும் அனுதாபத்தின் மூலமும் பொருள் வகையிலும்)''[1] என்று எழுதினர் வி. இ. லெனின்.

பூர்ஷ்வா தேசியவாதத்துடனும் அதேபோல திரிபுவாதம், ''இடதுசாரிச்'' சந்தர்ப்பவாதம், வறட்டுச் சூத்திரவாதம் ஆகியவற்றுடனும் நிகழ்த்தும் போராட்டத்தில் மார்க்ஸீய-லெனினீய வாதிகள் வி. இ. லெனினுடைய பிரசித்திபெற்ற குறிப்புக்களையே வழிகாட்டியாகக் கொள்கிருர்கள். வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினர்: ''எல்லாவித தேசீயவாதத்தையும், கறுப்புநூற்றுவரது[2] போன்ற, முரடான, வன்முறைகொண்ட தேசியவாதத்தையும், மிகவும் நயப்பாங்குள்ள, நாட்டினங்களின் சமத்துவத்தையும் அதோடு கூட... தொழிலாளர் நடவடிக்கைகளையும் தொழிலாளர் ஸ்தாபனங்களையும் தொழிலாளர் இயக்கத்தையும் நாட்டின வாரியாகத் துண்டுகளாக்குவதையும்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி *31*, பக்கம் *170*.

[2] கறுப்புநூற்றுவர் — *1905—1907*ல் பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சிக் காலத்தில் ருஷ்யாவில் உருவான கடைக்கோடிப் பிற்போக்குத் தனமான முடியரசுவாதி ஸ்தாபனங்களின் உறுப்பினர்கள்.—(ப-ர்.)

பிரசாரம் செய்கிற தேசியவாதத்தையும் எதிர்த்து முறியடிப்பதற்கு உணர்வுபூர்வமான தொழிலாளர்கள்... எல்லா முயற்சிகளேயும் செய்வார்கள்.''[1]

உலகில் எல்லாவற்றையும் போலவே நாட்டின உறவுகளும் இடைவிடாது மாறிக்கொண்டும் வளர்ந்துகொண்டும் இருக்கின்றன. எனவே அவற்றை ஸ்தூலமான வரலாற்று நோக்கில் பரிசீலிக்க வேண்டும். முதலாளித்துவ வளர்ச்சியின் ஏகாதிபத்தியக் கட்டத்தில் நாட்டின உறவுகளின் சிறப்புத்தன்மை என்னவென்ருல், நாட்டினங்கள் ஒருபுறம் ஆதிக்கம் வகிப்பவையும் அடக்குமுறை செலுத்துபவையும் ஆகவும், மறுபுறம் அடிமைப்பட்டவையும் ஒடுக்கப்படுபவையும் ஆகவும் பிரிவுபட்டிருப்பது தான். முதலாளித்துவ உற்பத்தி முறை, இந்த உற்பத்தி முறையின் வரம்புகளுக்குள் தீர்க்க இயலாத அதன் முரண்பாடுகள் ஆகியவற்றின் ஆழ்ந்த சாரத்தை இந்தப் பிரிவுபாடு பிரதிபலிக்கிறது. ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் முதலாளித்துவம் ''நாட்டினங்களின் பிரமாண்டமான அடக்குமுறையாளி''[2] ஆகிவிட்டது.

சோஷலிஸத்தின் நிலைமைகளில் நாட்டின உறவுகள் கோட்பாட்டு நோக்கில் வேருெரு இயல்பு கொண்டுள்ளன. அவற்றின் அடிப்படைச் சிறப்பியல்புகளைப் பரிசீலிப்போம்.

## § 3. சோஷலிஸ நாட்டினங்களின் தோற்றமும் வளர்ச்சியும். சோஷலிஸ நாட்டினங்களிலிருந்து கம்யூனிஸ நாட்டினங்களாகப் பரிணமிப்பு

தற்கால நிலைமைகளில் நாட்டினங்களின் இரண்டு முக்கிய வகைகள் நிலவுகின்றன. சோஷலிஸ நாட்டினங்கள், பூர்ஷ்வா நாட்டினங்கள் என்பவை அவை. வரலாற்று ரீதியில் முதலாவது வகை பூர்ஷ்வா நாட்டினங்களே. சோஷலிஸச் சகாப்தத்தில் கோட்பாட்டு நோக்கில் புது வகை நாட்டினம் தோன்றியது. அதுதான் சோஷலிஸ நாட்டினம். பாட்டாளி வர்க்கப் புரட்சியின் வெற்றி ''எல்லாவித தேசிய அடக்குமுறையையும்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 25, பக்கம் 144.

[2] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 26, பக்கங்கள் 313-314.

ஒழிப்பதற்கும் சுதந்திரமும் சமத்துவமும் கொண்ட நாட்டினங்களும் இனங்களும் ஒரே அரசில் தாமே விரும்பி ஒன்றிணைவதற்கும் உரிய எல்லா வாய்ப்புக்களையும் நிலைமைகளையும் உருவாக்குகிறது.''

மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி ருஷ்யாவில் வசிக்கும் எல்லா நாட்டினங்களுக்கும் உண்மையான சுயநிர்ணய உரிமை அளித்தது. தொகையிலும் வலிமையிலும் குறைந்த சிறு இனங்களை வலுக்கட்டாயமாகப் பெரிய அரசுகளில் இணைப்பதற்கும் நாட்டினங்களை ஒடுக்குவதற்கும் அது ஒரேயடியாக முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. அக்டோபர் ஆயுதக் கிளர்ச்சிக்குச் சில நாட்கள் பின்னர் ''ருஷ்யாவின் மக்களினங்களது உரிமைகள் பற்றிய அறிக்கை'' அங்கீகரிக்கப்பட்டது. நாட்டினங்கள் பற்றிய பிரச்சினையில் சோவியத் ஆட்சியினது கொள்கையின் பின்வரும் அடிப்படைக் கோட்பாடுகள் அதில் சூத்திரப்படுத்தப்பட்டிருந்தன: ருஷ்யாவின் மக்களினங்களுக்குச் சமத்துவமும் அரசுரிமையும்; தனிப்பிரிந்து சுதந்திர அரசுகள் நிறுவிக்கொள்வது வரை மக்களினங்களுக்குக் கட்டற்ற சுயநிர்ணய உரிமை; நாட்டின, நாட்டின-மத நோக்கில் நிலவும் எல்லாவித விசேஷச் சலுகைகளும் கட்டுப்பாடுகளும் முழுமையாக ரத்து; நாட்டினச் சிறுபான்மையோரின் கட்டற்ற வளர்ச்சி. இந்தக் கோட்பாடுகள் இளம் சோஷலிஸ அரசின் முதல் அரசியல் சட்டத்திலும் (1918) பதிவு செய்யப்பட்டன. சோவியத் அரசால் இவை பிறழ்வின்றிச் செயல்படுத்தப்பட்டன, செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

சோஷலிஸப் புரட்சியின் வளர்ச்சிக்கு ஏற்ப, பல நாட்டினங்கள் கொண்ட சோவியத் அரசு உருவாகி வலுவடைந்தது. நாட்டின சோவியத் குடியரசுகள் தோன்றின. 1922 டிசம்பரில் அவை தாமே விரும்பி ஒரே சோஷலிஸ அரசாக—சோவியத் சோஷலிஸக் குடியரசுகளின் யூனியனாக — ஒன்றிணைந்தன. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் சாராம்சத்தில் ஆழ்ந்த சர்வதேசியத்தன்மை கொண்டது. சிறிய, பெரிய மக்களினங்களின் பரஸ்பர உதவியையும் ஒத்துழைப்பையும் அது ஆதாரமாகக் கொண்டிருக்கிறது. இந்த மக்களினங்களின் பொருளாதாரம், பண்பாடு, நாட்டின அரசமைப்பு ஆகியவற்றின் தீவிர வளர்ச்சிக்கு வகை செய்கிறது. உலகம் அனைத்திலும் உள்ள உழைப்பாளிகளுடன் சர்வதேசத் தொடர்புகள் வலுப்பட உதவுகிறது. ஒவ்வொரு இனமும் ஒவ்வொரு நாட்டினமும் எல்

லாத் துறைகளிலும் வளர்ச்சி அடைவதற்கேற்ற எல்லையற்ற வாய்ப்புக்களை சோஷலிஸம் முன்வைத்திருக்கிறது. இந்த வளர்ச்சி சோஷலிஸச் சமூகத்தின் விதிமுறை ஆகிவிட்டது.

சோவியத் யூனியனின் நிலப்பரப்பில் வசிக்கும் பெருந்தொகையான மக்களினங்களுக்கு இடையே சோஷலிஸ உறவுகளை உருவாக்கும் செயல்முறையில் பல கஷ்டங்களைச் சமாளிக்க நேர்ந்தது. இது முற்றிலும் புரியக்கூடியதே. வரலாற்றிலேயே முதன்முதலாக சோஷலிஸத்தின் அடிப்படையில் பல நாட்டினங்கள் கொண்ட அரசு, அதிலும் மிக மிகப் பல்வகையான நாட்டினங்கள் அடங்கிய நாட்டில், நிறுவப்பட்டது.

அந்த ஆண்டுகளில் சோவியத் நாட்டின் மொத்த ஜனத்தொகை 14 கோடி என்று கணக்கிடப்பட்டது. இதில் சுமார் $6\frac{1}{2}$ கோடி மக்கள் ருஷ்யர் அல்லாத நாட்டினங்களைச் சேர்ந்தவர்கள். பொருளாதார, அரசியல், பண்பாட்டு வளர்ச்சியின் தரத்தில் இந்த நாட்டினங்கள் ஒன்றுக்கொன்று பெரிதும் வேறுபட்டிருந்தன. அவற்றில் சில ஏற்கனவே நன்கு அமைந்து விட்ட பெரிய நாட்டினங்கள். இவை ஒப்புநோக்கில் வளர்ச்சியுற்ற இயந்திரத் தொழிலும் நவீனப் பண்பாடும் புரட்சிப் பரம்பரையுள்ள பெருந்தொகையான இயந்திரத்தொழில் பாட்டாளிகளும் கொண்டவை. ஆனால் இவற்ருேடு கூடவே நாடோடிக் குலங்களும் இனங்களும் இருந்தன. இவை பிரதானமாகக் கால் நடை வளர்ப்பில் ஈடுபட்டிருந்தன. தவிர, எண்ணிக்கையில் சிறிய மானிடவகைக் குழுக்கள் வேறு இருந்தன. பண்டைக் கால உறவுகளின் சில அம்சங்களை இவை இன்னும் விடாது கடைப்பிடித்துவந்தன. சோஷலிஸப் புரட்சி இந்த எல்லா மக்களினங்களும் அரசியலிலும் சட்டங்களிலும் சமத்துவம் பெற வகை செய்தது. தொழிலாளி வர்க்கத்தின் ஆகப் பெரிய சாதனையாகத் திகழ்ந்தது இது.

ஆனல் அதே சமயம் வேருெரு முக்கியமான கடமையையும் நிறைவேற்ற வேண்டியிருந்தது. மக்களினங்களுக்கு இடையே நிலவிய எதார்த்தமான சமமின்மையை அகற்றுவதும், ஜாரின் எதேச்சாதிகாரத்தாலும் முதலாளித்துவத்தாலும் கடைப்பிடிக்கப்பட்ட காலனி ஆட்சிக் கொள்கையின் விளைவாக ஏராளமான இனங்கள், குலங்களில் எஞ்சியிருந்த நூற்ருண்டுக்காலப் பொருளாதார, அரசியல், பண்பாட்டுப் பின்தங்கிய நிலையைப் போக்குவதும் அவசியமாயிருந்தன. நன்கு

அமைந்த நாட்டினங்கள் முதல் தனித்தனியே பிரிந்த பின் தங்கிய குலங்கள்வரை சோவியத் நாட்டின் எல்லா மக்களும் சோஷலிஸப் புரட்சியின் நலங்களையும் சாதனைகளையும் பயன் படுத்திக் கொள்ளும் வாய்ப்பை எதார்த்தத்தில் பெற வேண்டி யிருந்தது. கம்யூனிஸ்ட் கட்சிக்கும் சோவியத் அரசுக்கும் முற்றிலும் புதிய சித்தாந்த, நடைமுறைப் பிரச்சினை எதிர்ப்பட் டது. முன்னர் பின்தங்கியிருந்த இனங்களும் குலங்களும் முதலாளித்துவக் கட்டத்தில் புகாமலே சோஷலிஸப் பாதையில் வளர்ச்சி பெறுவதற்கு வகை செய்வது எப்படி என்பதே அந்தப் பிரச்சினை.

முன்னர் பின்தங்கியிருந்த மக்களும் இனங்களும் பொருளா தார, அரசியல், பண்பாட்டு வளர்ச்சி என்னும் அகன்ற சாலையில் குறுகிய காலக் கெடுவுக்குள் முன்னேறுவதற்கான எல்லா வாய்ப்புக்களையும் சோஷலிஸ அமைப்பு ஏற்படுத்திற்று. அரச மைப்பின் வளர்ச்சியிலும் புதிய பொருளாதாரத்தையும் பண் பாட்டையும் நிறுவுவதிலும், இயந்திரத் தொழிலுக்கும் விவசா யத்துக்கும் விஞ்ஞானத்துக்கும் தேவையான அலுவலர்களைப் பயிற்றுவதிலும் முன்னர் பின்தங்கியிருந்த மக்களுக்கு சோஷ லிஸ அரசும் தொழிலாளி வர்க்கமும் முன்னணி நாட்டினங் களைச் சேர்ந்த உழைப்பாளி மக்கள் அனைவரும் எல்லா வகை களிலும் உதவி புரிவதன் வாயிலாகவே இவ்வாறு செய்வது சாத்தியம் ஆயிற்று. கம்யூனிஸ்ட் கட்சியின் தீவிர முயற்சியின் விளைவாக இத்தகைய உதவி இந்த மக்களுக்கு அளிக்கப்பட்டது.

சோவியத் நாட்டின் மக்களினங்கள் மாபெரும் அக்டோ பர்ப் புரட்சிக்குப் பின் வளர்ச்சிப் பாதையில் வெகுதூரம் முன்னேறி விட்டார்கள். நாட்டின சோஷலிஸ அரசமைப்பு வளர்ந்து வலுப்பெற்றது. ஒவ்வொரு சோவியத் குடியரசின் பொருளாதாரத்திலும் அடிப்படை மாற்றம் நிகழ்த்தப்பட்டது. பண்பாட்டில் இந்த மக்களினங்களின் பின்தங்கிய நிலை பழங்கதை ஆகிவிட்டது. நாட்டின சோவியத் அறிவுஜீவி களின் பெருந்தொகையான அலுவலர்கள் சோவியத் ஆட்சிக் காலத்தில் பயிற்றப்பட்டார்கள். உருவத்தில் நாட்டினப் பாங் கும் உள்ளடக்கத்தில் சோஷலிஸத் தன்மையும் வாய்ந்த பண் பாடு தழைத்தது. பண்பாட்டுப் புரட்சியின் பயனாக நாட்டினக் குடியசுரகள், பிரதேசங்களைச் சேர்ந்த உழைப்பாளி மக்களின் ஆன்மீக வாழ்வு அடியோடு மாற்றி அமைக்கப்பட்டது.

நாற்பதுக்கும் மேற்பட்ட இனங்கள் சோவியத் ஆட்சி ஆண்டு களிலேயே தங்கள் மொழிகளுக்கு வரிவடிவங்கள் பெற்றன. தற்போது சோவியத் நாட்டில் புத்தகங்கள் சோவியத் யூனிய னின் மக்களினங்களின் சுமார் 90 மொழிகளில் வெளியிடப் படுகின்றன.

மக்களினங்களின் நட்பு வலுப்பெற்றது. சோஷலிஸ அமைப் பில் அது சமூக வளர்ச்சிக்கு உரிய பெருத்த சக்தியாக மாறி விட்டது. சோவியத் மக்களினங்களின் நட்பு போர்க் காலத்தி லும் சமாதானக் காலத்திலும் கடுமையான சோதனைகளுக்கு வெற்றிகரமாக ஈடுகொடுத்தது.

சோஷலிஸக் காலப்பகுதியிலும் கம்யூனிஸக் கட்டுமானம் நடக்கையிலும் புதிய, சோஷலிஸ நாட்டினங்கள் உருவாகி வளர்ந்துவருகின்றன. சோவியத் யூனியனில் இந்த நாட்டினங்கள் இரு விதங்களில் தோன்றின: முதலாவது, பழைய, பூர்ஷ்வா நாட்டினங்கள் (ருஷ்ய, உக்ரேனிய, பெலோருஷ்ய, ஜார்ஜிய நாட்டினங்கள் முதலியன) புரட்சிகரமாக மாற்றி அமைக்கப் பட்டதன் அடிப்படையில்; இரண்டாவது, வளர்ச்சியின் முதலாளித்துவக் கட்டத்தைக் கடக்காத இனங்களையும் குலங்களையும் சோஷலிஸ நாட்டினங்களாக (ஹாக்காஸிய, துவீனிய நாட்டினங்கள் போன்றவை) ஒன்றிணைத்ததன் அடிப்படையில்.

சோஷலிஸ நாட்டினங்கள் தங்கள் வர்க்க அமைப்பிலும் சமூக-பொருளாதார நலன்களிலும் குறிக்கோள்களிலும் அதே போல ஆன்மீகச் சிறப்புத்தன்மைகளிலும் பூர்ஷ்வா நாட் டினங்களிலிருந்து வேறுபடுகின்றன. ஒடுக்கும் நாட்டினங்கள், ஒடுக்கப்படும் நாட்டினங்கள் என்ற பிரிவினைக்கு சோஷலிஸம் முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. சோஷலிஸ அமைப்பின் நிலைமைகளில் கோட்பாடுகள், செயல்கள், இவற்றின் ஒருமை காரணமாக நாட்டினங்கள் ஒற்றுமைப்பட்டுள்ளன. வர்க்கப் பகைமைகளும் முரண்பாடுகளும் அவற்றில் இல்லை. தற்காலச் சமூகத்தின் முன்னணியில் உள்ளதும் மிகச் சிறந்த அமைப்பு பெற்றதும் கம்யூனிஸ்ட் கட்சியால் தலைமை தாங்கி நடத்தப் பெறுவதும் ஆன தொழிலாளி வர்க்கமே இந்த நாட்டினங்களின் இயக்கு சக்தியாக விளங்குகிறது.

சோஷலிஸ நாட்டினங்களின் பொருளாதார அடிப்படை யாக அமைந்துள்ளன சோஷலிஸ உற்பத்தி உறவுகள். சுரண்டலி

லிருந்து விடுபட்ட சமூக உழைப்பாளிகளின் ஒத்துழைப்பும் பரஸ்பர உதவியும் இவ்வுறவுகளின் தன்மையாகும். புரட்சிகர மார்க்ஸீய-லெனினீயப் போதனையும் பாட்டாளி வர்க்கச் சர்வ தேசியவாதமுமே சோஷலிஸ நாட்டினங்களின் கொள்கைவாத அஸ்திவாரமாகத் திகழ்கின்றன.

தற்போது சோவியத் யூனியனில் நன்கு அமைந்துள்ள பதிற்றுக்கணக்கான நாட்டினங்கள் உள்ளன. இவற்ருேடு கூட வே வாழ்ந்து வளர்ந்து வருகின்றன புதிய சோஷலிஸ இனங்கள். எல்லா நாட்டினங்களதும் சோதரக் கூட்டுறவில், சோஷலிஸ உழைப்புப் பிரிவினையின் நிலைமைகளில், சோவியத் மக்கள் புது வாழ்வையும் நவீனப் பொருளாதாரத்தையும் பண்பாட்டையும் வெற்றிகரமாக நிறுவிவருகிருர்கள். பூர்ஷ்வா-நிலப் பிரபுத்துவ ருஷ்யாவில் நசுக்கப்பட்டு உரிமைகளின்றி இருந்த மக்களினங்கள் சோஷலிஸத்தில் புகழ்மிக்க பெரு வழியில் முன்னேறி வருகின்றன.

சோவியத் மக்களினங்களினதும் சோஷலிஸ நாட்டினங்களதும் நட்பு ஒவ்வொரு குடியரசிலும் பொருளாதார, பண்பாட்டு நிர்மாணம் பற்றிய மிகப் பெரிய பிரச்சினைகளுக்கு வெற்றிகரமாகத் தீர்வுகாண உதவுகிறது. உதாரணமாக, புரட்சிக்கு முன்பு ருஷ்யப் பேரரசின் பின்தங்கிய எல்லைப் பகுதியாக இருந்த தாஜிக்கிஸ்தானில் சோவியத் ஆட்சிக் காலத்தில் 300க்கும் மேல் பெரிய தொழிற்சாலைகள் நிறுவப்பட்டுள்ளன. உலோகத் தயாரிப்புத் தொழிலும் சுரங்கத் தொழிலும் மின் ஆற்றல் உற்பத்தித் தொழிலும் விரிவாக வளர்ந்திருக்கின்றன. இன்றையத் தாஜிக்கிஸ்தான் நூறு சதவிகிதம் எழுத்தறிவுள்ளவர்களின் நாடு. தாஜிக் மக்களின் நாட்டின சோவியத் பண்பாடு தழைத்துச் செழித்திருக்கிறது. பொருளாதாரமும் பண்பாடும் முன்னறியா விரைவுடன் வளர்ச்சி அடைந்து வருகின்றன. மற்ற நாட்டினக் குடியரசுகளிலும் மக்களது நல்வாழ்வு மேம்பட்டு வருகிறது.

சோஷலிஸ நாட்டினங்களின் வளர்ச்சி காரணமாக நாட்டினங்களின் சில அடையாளங்களில் முக்கியமான மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. பொருளாதார வாழ்விலும் உளப்பாங்கிலும் உள்ள பொதுமையை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். சோஷலிஸத்தின் பொருளாதார அஸ்திவாரமாக அமைந்துள்ள உற்பத்திச் சாதனங்கள் மீது சமூகச் சொத்துரிமையின்

ஆதிக்கத்தையும் பொருளாதாரத்தின் திட்டப்படி இயங்கும் தன்மையையும் அதன் விரைந்த வளர்ச்சி வேகத்தையும் சோஷலிஸ நாட்டினங்களின்பொருளாதார வாழ்விலுள்ள பொதுமை இயல்பாகக் கொண்டிருக்கிறது. முதலாளித்துவத்தில் நிலவும் கேடுகளான நெருக்கடிகள், பொருளுற்பத்தியில் அராஜகம், போட்டிப் போராட்டம் போன்றவை சோஷலிஸ நாட்டினங்களின் பொருளாதார வாழ்வில் கிடையா. நாட்டினங்களின் பொருளாதார வாழ்வின் பொதுமை என்ற கருதுகோளே சோஷலிஸத்தில் புதிய உள்ளடக்கம் பெற்று விடுகிறது என்பதை இவை அனைத்தும் காட்டுகின்றன.

உளப்பாங்கு அல்லது நாட்டின இயல்பு என்ற நாட்டின அடையாளமும் புதிய அர்த்தம் நிறைந்து விளங்குகிறது. சோவியத் மக்களின் நாட்டின இயல்பு சிறந்த பண்புகள் கொண்டு திகழ்கிறது. தாய்நாட்டின்பால் ஆர்வமிக்க பற்று, அதன் நலன் களைக் காப்பதற்கான சுயநலமற்ற போராட்டம், எல்லா மக்கள்பாலும் நட்பு உணர்ச்சி, சோஷலிஸ நாட்டன்பு, கூட்டுத் துவம், சர்வதேசிய நோக்கு, புதியவையும் முற்போக்குள்ளவையு மான எல்லாவற்றின் சார்பிலும் ஊக்கமுள்ள போராட்டம் ஆகியவை இந்தப் பண்புகள். இப்பண்புகள் எல்லா சோஷலிஸ நாட்டினங்களுக்கும் இயல்பானவை.

சோஷலிஸச் சமூக வளர்ச்சியின் அனுபவம் இன்னொரு கவனத்துக்குரிய நிகழ்ச்சியைத் தோற்றுவித்திருக்கிறது. சோவியத் மக்கள் என்ற சமூகப் பொதுமை வரலாற்றிலேயே முதன் முறையாக சோவியத் யூனியனில் தோன்றியிருப்பதையே இங்கு குறிக்கிறோம். விரிவான அனைத்து நாட்டினப் பொதுமை இது. நூறுக்கும் மேற்பட்ட சோஷலிஸ நாட்டினங்களையும் இனங் களையும் இது சுயவிருப்பத்தின் அடிப்படையில் ஒன்றிணைத்துள் ளது. திட்டப்படி அமைந்த உயர் வளர்ச்சி பெற்ற ஒரே சோஷலிஸப் பொருளாதாரம் இந்தப் பொதுமையின் உறுதியான பொருளியல் அஸ்திவாரமாக விளங்குகிறது. புதிய சமூகப் பொதுமை என்ற வகையில் சோவியத் மக்கள் மார்க்ஸீய-லெனினீயம் என்னும் பொதுப் பிரபஞ்சக் கண்ணோட்டத்தையும் கம்யூனிஸச் சமூகத்தை நிறுவுதல் என்னும் பொதுக் குறிக் கோளையும் பெற்றிருக்கிறார்கள்.

கம்யூனிஸக் கட்டுமானம் நிகழ்கையில் இனங்கள் நாட் டினங்களாக மேற்கொண்டு வளர்ச்சி அடைவதும் சோவியத்

யூனியனின் மக்களினங்களது நட்பு மேலும் வலுப்படுவதும் நடைபெறுகின்றன. கம்யூனிஸக் கட்டுமானம் சோவியத் நாட்டில் நாட்டினங்களுடைய உறவுகளின் வளர்ச்சியில் புதிய கட்டத்தைக் குறிக்கிறது. இந்தக் கட்டத்தின் தன்மையைச் சித்திரிக்கும் பிரதான அம்சம் சோஷலிஸ நாட்டினங்களின் மலர்ச்சியும் நெருங்கிய நட்பும். கம்யூனிஸக் கட்டுமானம் நடைபெறுகையில் சோவியத் யூனியனின் மக்களினங்கள் மேலும் நெருக்கமாக ஒற்றுமைப்பட்டு ஒன்றிணையும், நாட்டினங்களுக்கு இடையே பொருளியல், ஆன்மீகச் செல்வங்களின் பரிமாற்றம் மேலும் விரிவடையும், அவற்றின் பொருளாதார, பண்பாட்டு வளர்ச்சியின் தரம் சமநிலைக்கு வரும்.

இந்த விஷயத்தில் 1966—1970க்கான புதிய ஐந்தாண்டுத் திட்டத்தில் மிக நிறைய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும். சில புள்ளிவிவரங்களை மேற்கோள் காட்டுவதே போதுமானது. ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இயந்திரத் தொழில் உற்பத்தியின் அளவு பின்வருமாறு அதிகரிக்கும்: ருஷ்ய சோவியத் சோஷலிஸக் கூட்டுக் குடியரசிலும் உக்ரேனிய, லாட்விய, எஸ்தோனிய சோவியத் சோஷலிஸக் குடியரசுகளிலும் ஏறக்குறைய 1.5 மடங்கு; ஜார்ஜிய, அஸர்பெய்ஜான், உஸ்பெக், கிர்கீஸிய, துர்க்மேனிய சோவியத் சோஷலிஸக் குடியரசுகளில் 1.6 மடங்கு; பெலோருஷ்ய, கஸாக், லிதுவானிய, மல்தாவிய சோவியத் சோஷலிஸக் குடியரசுகளில் 1.7 மடங்கு; தாஜிக், அர்மீனிய சோவியத் சோஷலிஸக் குடியரசுகளில் 1.8 மடங்கு.

சோஷலிஸ நாட்டினங்களின் கூட்டுறவை மேற்கொண்டு வலுப்படுத்தும் நோக்கத்துடன் கம்யூனிஸ்ட் கட்சி தேசீய வாதம், நாட்டுவெறி, இவற்றின் மீத மிச்சங்களை எதிர்த்துச் சமரசமற்ற போராட்டம் நடத்தி வருகிறது. பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதத்தின் உணர்வில் உழைப்பாளி மக்களை அது பயிற்றி வருகிறது.

தேசியவாதம், குறுகிய நாட்டின மனப்பான்மை ஆகியவற்றின் மிச்ச சொச்சங்களும் தோற்றங்களும் சோஷலிஸப் புரட்சி, சோஷலிஸ அமைப்பு வெற்றி பெற்றவுடன் தாமாகவே மறைந்துவிடுவதில்லை. மக்களினங்களுக்கு இடையேயும் சோஷலிஸ நாடுகளுக்கு இடையேயும் உண்மையிலேயே சோதர உறவுகளை ஏற்படுத்துவதற்கும் நட்பை வலுப்படுத்துவதற்கும்

லெனினது நாட்டினக் கொள்கையை ஒத்தியைந்த வகையில் கடைப்பிடிப்பதும் சோஷலிஸச் சர்வதேசியவாதமும் நாட்டுப் பற்றும் இணைந்த உணர்வில் எல்லா உழைப்பாளிகளையும் பயிற்றுவதும் இன்றியமையாதவை ஆகும்.

கம்யூனிஸ்ட் கட்சி மார்க்ஸீய-லெனினீயப் போதனையின் தூய்மையை விழிப்புடன் பாதுகாக்கிறது, பூர்ஷ்வா தேசியவாதத்தையும் நாட்டுவெறியையும் அம்பலப்படுத்துகிறது. சோஷலிஸ நாடுகளுக்கு இடையே தொடர்புகளும் உறவுகளும் பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதத்தை அஸ்திவாரமாகக் கொண்டு ஏற்படுத்தப்பட வேண்டும் என்ற அடிப்படையில் அது செயல்படுகிறது. மக்களினங்களுக்கு இடையே ஒத்துழைப்பும் பரஸ்பர உதவியும் உற்பத்தியில் கூட்டுறவும் சோஷலிஸ உழைப்புப் பிரிவினையும், ஏகாதிபத்தியத்துக்கும் அதன் கொள்கைவாதத்துக்கும் எதிராகத் தீவிரமான ஒன்றித்த போராட்டம் ஆகியவற்றைப் பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாதம் முன்வைக்கிறது. கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளின் பிரதிநிதிகள் மகாநாட்டின் அறிக்கையில் (1960, நவம்பர்) பின்வருமாறு வலியுறுத்தப்பட்டிருக்கிறது: ''மார்க்ஸீய-லெனினீயம், சோஷலிஸச் சர்வதேசியவாதம், இவற்றின் கோட்பாடுகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடிப்பது சோஷலிஸ நாடுகளுக்கு இடையே பரஸ்பர உறவுகளுக்கு உரிய மீறமுடியாத விதியாக விளங்குகிறது. சோஷலிஸ முகாமில் சேரும் ஒவ்வொரு நாட்டுக்கும் உண்மையான சமத்துவமும் சுதந்திரமும் கிடைப்பதற்கு அதில் வகை செய்யப்பட்டிருக்கிறது. சோஷலிஸ அரசுகள் முழுச் சமத்துவம், பரஸ்பர லாபம், தோழமை நிறைந்த பரஸ்பர உதவி என்ற கோட்பாடுகளை வழிகாட்டியாகக் கொண்டு எல்லாத் துறைகளிலும் பொருளாதார, அரசியல் பண்பாட்டு ஒத்துழைப்பைச் செவ்வைப்படுத்திவருகின்றன. இந்த ஒத்துழைப்பு ஒவ்வொரு சோஷலிஸ நாட்டின் நலன்களுக்கும் அதே போல மொத்தத்தில் சோஷலிஸ முகாம் அனைத்தின் நலன்களுக்கும் ஏற்றதாக இருக்கிறது.''

நாட்டினங்கள் பற்றிய பிரச்சினையில் லெனினது செயல் திட்டத்தை நிறைவேற்றியது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி, சோஷலிஸ அரசு, கம்யூனிஸக் கொள்கைவாதம் ஆகியவற்றின் பெருத்த வெற்றி ஆகும். அதோடு கூட, மார்க்ஸீய-

லெனினியச் சித்தாந்தத்திற்கு சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி வழங்கியுள்ள மிகப்பெரும் பங்கும் ஆகும் இது.

கம்யூனிஸக் கட்டுமானம் நிகழ்கையில் சில புதிய பிரச்சினைகள் கிளம்புகின்றன. சோவியத் சமூகத்தில் சோஷலிஸ நாட்டின உறவுகள் வளர்ச்சி அடைவதுடன் தொடர்பு கொண்டவை இந்தப் பிரச்சினைகள். சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசும் அவ்வப்பொழுது இவற்றுக்குத் தீர்வு கண்டு வருகின்றன. ஒரு புறம் ஒவ்வொரு குடியரசின் வளங்களையும் அதிகபட்சப் பயன்பாடுள்ள விதத்தில் உபயோகிப்பதற்கும் மறுபுறம் தனித்தனிக் குடியரசுகளின் நலன்களையும் மொத்தத்தில் சோவியத் சமூகம் அனைத்தின் நலன்களையும் சரியாக இணைப்பதற்கும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி தனது கொள்கையில் வகை செய்கிறது. குடியரசுகளுக்கு இடையே பொருளாதார, பண்பாட்டு உறவுகள் வலுப்பட்டு வருகின்றன. சோஷலிஸ உழைப்புப் பிரிவினை விரிவடைந்து மேலும் ஆழ்ந்துகொண்டு போகிறது. நாட்டின சோவியத் குடியரசுகளில் சோஷலிஸ இயந்திரத் தொழிலின் புதிய பெரிய கேந்திரங்கள் தோன்றி வருகின்றன. கல்வி, உடல்நலப் பாதுகாப்பு, கலை, விஞ்ஞானம், பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்காகவும அலுவலர் பயிற்சிக்காகவும் யூனியன் குடியரசுகளில் பற்பல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

சோஷலிஸச் சமூகத்தில் நாட்டின வேறுபாடுகள் பலவந்தமாக நீக்கப்படுகின்றன என்று பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் அவதூறாக வலிந்துரைத்து வருகிறார்கள். உண்மையிலோ, சோஷலிஸம் நாட்டின வேறுபாடுகளையும் சிறப்புத் தன்மைகளையும் அழித்துவிடுவதில்லை. மாறாக, ஒவ்வொரு நாட்டினத்தினுடையவும் ஒவ்வொரு இனத்தினுடையவும் பொருளாதாரமும் பண்பாடும் எல்லா அம்சங்களிலும் வளர்ச்சி அடைந்து வளம் கொழிப்பதற்கு அது வகை செய்கிறது. நாட்டினங்களின் பொருளாதாரமும் பண்பாடும் தழைத்துச்செழித்துச் சர்வாம்ச ரீதியாக மேம்படுவது உற்பத்தித் துறையிலும் ஆன்மீக வாழ்வுத் துறையிலும் நாட்டினங்களை நெருங்கிய உறவு கொள்ளச் செய்வதற்கு இன்றியமையாத நிபந்தனையாகும். இந்த நிகழ்முறைகள் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவை, ஒன்றுக்கொன்று காரணமாக இருப்பவை. அதோடுகூட, சோஷலிஸத்தின் நிலைமைகளில் நாட்டினங்களை நெருங்கிய உறவு கொள்ளச்

செய்வது அவை மேற்கொண்டு சர்வாம்சரீதியாக வளர்ந்து செழிப்பதற்கு முக்கியமான முன் நிபந்தனையாக விளங்குகிறது.

நம் காலத்தில் சோஷலிஸ நாட்டினங்களின் விரிவான பொருளாதார, அரசியல், பண்பாட்டுத் தொடர்புகளின் விளைவாக மக்களினங்களது பண்பாடு பரஸ்பரம் வளம் மிகுந்து வருகிறது. சோஷலிஸத்தினலும் கம்யூனிஸத்துக்கான போராட்டத்தினலும் தோற்றுவிக்கப்பட்ட பொதுப் பண்புகளும் பொதுப் பரம்பரைகளும் அவற்றின் பரஸ்பர உறவுகளில் மேலும் மேலும் பெருத்த பங்கு ஆற்றி வருகின்றன. சோஷலிஸ தேசபக்தி, உழைப்பில் வீரம், சோஷலிஸ முறைப் புதுமை புகுத்தல், தன்னலமற்ற பரஸ்பர உதவி ஆகியவை இத்தகையனவே.

கம்யூனிஸக் கட்டுமான வேலை வெற்றிகரமாக நிறைவேற்றப்பட்டு, சமூகம் கம்யூனிஸத்தின் தாழ்நிலைக் கட்டமான சோஷலிஸத்திலிருந்து முதிர்ந்த, வளர்ச்சியுற்ற கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பதன் விளைவாக, தற்போதைய சோஷலிஸ நாட்டினங்கள் கம்யூனிஸ நாட்டினங்களாகப் படிப்படியாக வளர்ச்சி அடைய வேண்டும். இந்த வளர்ச்சிக்குரிய திட்டவட்டமான வழிகளையும் வடிவங்களையும் வாழ்க்கை அனுபவமே வரையறுக்கும் என்பது கூறாமலே விளங்கும்.

முதன்மையாகப் பொருளாதார, அரசியல், ஆன்மீக முதிர்ச்சியின் தரத்தில் கம்யூனிஸ நாட்டினங்கள் தற்போதைய சோஷலிஸ நாட்டினங்களிலிருந்து வேறுபடும். நாட்டினங்களுக்குரிய பிரதான அறிகுறிகள் பண்புவகையில் புதிய உள்ளடக்கம் பெறும். மனித சமூக வளர்ச்சியின் மிக உயர்ந்த கட்டம் என்ற முறையில் கம்யூனிஸத்தின் சிறப்புக்கள் இந்தப் புதிய உள்ளடக்கத்தைத் தோற்றுவிக்கும். புதிய, கம்யூனிஸ நாட்டினங்களுக்குரிய அறிகுறிகள், நாட்டின உறவுகளின் துறையில் கம்யூனிஸ முளைகள் சோவியத் யூனியனில் நம் காலத்திலேயே தென்படத் தொடங்கியுள்ளன.

உலகம் முழுவதிலும் கம்யூனிஸம் வெற்றி அடைந்ததும் கம்யூனிஸ நாட்டினங்கள் தாமே விரும்பி ஒன்று சேர்வது நிகழும். இது மிக இயல்பானதே. நாட்டினங்களின் பொருளியல் ஆன்மீக வாழ்வு முழுமையாக வளர்ச்சி அடைதல், மக்களுக்கு இடையே நட்பும் பரஸ்பர உதவியும் ஒத்துழைப்பும் வலுப்பெறுதல், இவற்றை ஆதாரமாகக் கொண்டு இந்தச்

சேர்க்கை நிகழும். எனினும் நாட்டினங்கள் முழுமையாகச் சேர்ந்து ஒன்றுவது உலகக் கம்யூனிஸ அமைப்பின் நீடித்த வளர்ச்சியின் விளைவாகவே ஏற்படும்.

## § 4. குடும்பமும் அன்றாட வாழ்க்கையும்

மக்களின் பெரிய குழுக்களை உட்படுத்தி ஒன்றிணைக்கும் நிலையான சமூகப் பொதுமைகள் மேலே ஆராயப்பட்டன. ஆனால் மனிதர்களின் வரலாற்றுப் பொதுமையின் வடிவங்கள் மிக மிகப் பல்விதமானவை. அவை வெவ்வேறு அடிப்படை கொண்டவை. சாதி, குலம், இனம் அல்லது நாட்டின வரம்புகளுக்குள் அடங்கியவை அல்ல.

பொதுமையின் இத்தகைய வடிவங்களில் ஒன்று குடும்பம். குடும்பம் என்பது விசேஷ அந்தரங்கமுள்ள, தனிநபர்களைப் பொறுத்த துறை என்றும் சமூக வாழ்விலிருந்து தொலைவில் உள்ளது என்றும் எஞ்சிய உலகிலிருந்து கடக்கமுடியாத சுவற்றால் தனிப் பிரிக்கப்பட்டிருப்பது என்றும் கருதும் போக்கு இப்போதும் அடிக்கடி எதிர்ப்படுகிறது. சந்தேகமின்றிக் குடும்பத்தில், குடும்ப வாழ்க்கையில் தனிநபர்களுக்கு உரிய அந்தரங்க அம்சங்கள் நிறைய உள்ளன. எனினும் மொத்தத்தில் மேற்குறித்த கருத்து ஆழ்ந்த முறையில் தவறானது.

குடும்பம் என்பது சமூகக் காரணங்களால் தோற்றுவிக்கப்பட்ட சிக்கலான நிகழ்ச்சி. குலம், இனம், நாட்டினம், இவற்றைப் போலவே குடும்பத்துக்கும் பல நூற்றாண்டுக்கால வரலாறு உண்டு. சமூக நிகழ்ச்சி என்ற முறையில் குடும்பத்தின் சிக்கலான தன்மை பல காரணங்களால் நிர்ணயிக்கப்படுகிறது. உயிரியல் பிராணிகள் (ஆண்கள், பெண்கள்) என்ற வகையில் மனிதர்களின் உறவுகளும் வரலாற்று நோக்கில் திட்டவட்டமான சமூகத்தில் வாழும் சமூகப் பிராணிகள் என்ற வகையில் மனிதர்களின் உறவுகளும் குடும்பத்தில் இணைந்திருப்பது இவற்றில் முதன்மையான காரணம். இந்த உறவுகளின் தனிவகையான இணைவில் நிர்ணயகரமான பங்கு ஆற்றுபவை சமூக உறவுகளே ஆகும். குடும்பம் என்பது முதன்மையாக ஒரு சமூக உறுப்பி. சட்ட சம்பந்தமானவையும் ஒழுக்கநெறி பற்றியவையும் வேறு வகையினவுமான அளவுமானங்களாலும் விதிகளாலும் அது கட்டுப்படுத்தி இயக்கப்படுகிறது. முடிவாகப்

பார்க்கும்போது, குடும்பத்தின் வளர்ச்சி மனித சமூக வளர்ச்சிக்குரிய புறநிலை விதிகளாலேயே நிர்ணயிக்கப்படுகிறது.

மனித சாதியைத் தொடர்விப்பதும் குழந்தைகளைப் பேணி வளர்ப்பதுமே குடும்பத்தின் பிரதானக் காரியம். இது இல்லாவிடில் சமூகம் முறையாக வளர்வது இயலாது. பால்களுடைய (ஆண்கள், பெண்கள்) குறிப்பிட்ட வகை உறவு அல்லது இணைவு இதற்குத் தேவைப்படுகிறது. இந்த இணைவு திருமணத்தினுல் முறைப்படுத்தப்படுகிறது. குடும்பத்தின் சட்டரீதியான அடிப்படையாக இருக்கும் திருமணம் பால்களின் உறவுகளை மட்டுமே அல்ல, பெற்ருேருக்கும் அவர்களுடைய சந்ததிகளுக்கும் இடையில் உள்ள உறவுகளையும் முறைப்படுத்துகிறது. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட அமைப்புக்களில், அதாவது அடிமைச் சொந்தக்கார அமைப்பிலும் நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ அமைப்புக்களிலும் குடும்ப-திருமண உறவுகள் இந்த அமைப்புக்களுக்கு இயல்பான சமுதாய முரண்பாடுகளையும் பிணக்குகளையும் ஒரு அல்லது மறு வடிவில் கட்டாயமாக வெளியிடுகின்றன.

பண்டைச் சமூகத்தில் குடும்பம் தற்காலம் அது நிலவும் வடிவில் இருக்கவில்லை. ஒரு பெண்ணை மணத்தலை ஆதாரமாகக் கொண்ட ஒரு தார மணக் குடும்பம் எனப்படுவது வர்க்கங்கள் அற்ற பண்டைச் சமூகத்துக்கும் வர்க்கங்கள் உள்ள (அடிமைச் சொந்தக்காரச்) சமூகத்துக்கும் இடைப்பட்ட காலத்தில்தான் தோன்றியது.

உற்பத்திச் சாதனங்கள் மீது தனியார் சொத்துரிமையும் அதனுடன் தொடர்பு கொண்ட சொத்தின் பரம்பரைப் பாத்தியதையும் தோன்றியதன் விளைவாகவே ஒரு தார மணக் குடும்பம் உருவாயிற்று. இந்த நிலைமைகளில் மணம் செய்துகொள்வதற்குரிய முதன்மையான, நிர்ணயகரமான நோக்கம் பொருளாதாரக் கணக்கீடுதான். ஆண்கள், பெண்களுக்கிடையே ஏற்றத்தாழ்வு தோன்றி வளர்ந்தது. பெண் சமூகத்தில் அடிப்பட்ட, ஒடுக்கப்பட்ட நிலைமைக்கு இழிந்துவிட்டாள். குடும்ப-மண உறவுகள்மீது அரசின் செல்வாக்கு படிப்படியாக வலுவடைந்தது.

ஒவ்வொரு சமூக-பொருளாதார அமைப்புக்கும் குடும்ப-மண உறவுகளின் ஒரு குறித்த வடிவம் பொருந்துகிறது. முதலாளித்துவச் சமூகத்தில் ஆளும் வர்க்கத்துக்குள் திருமணங்கள் கணக்கீட்டின்படியே செய்துகொள்ளப்படுகின்றன. தனியார்

சொத்துரிமை உறவுகள் தொழிலாளர்களின் குடும்பங்களேயும் சில வேளைகளில் பாதிக்கின்றன. எனினும் குடும்ப உறுப்பினர்களுக்கிடையே நிலவும் மனிதப் பண்புள்ள உறவுகள் காரணமாகவும் கணவர் மனைவியர், பெற்றேர் குழந்தைகள் ஆகியவர்களின் பரஸ்பர மரியாதை காரணமாகவும் பெரும்பாலான தொழிலாளர் குடும்பங்கள் பூர்ஷ்வாக் குடும்பங்களிலிருந்து வேறுபடுகின்றன.

சோஷலிஸத்தின் வெற்றி குடும்ப-மண உறவுகளில் ஆழ்ந்த மாறுதல்களை ஏற்படுத்துகிறது. புதிய சோஷலிஸக் குடும்பம் மாதரின் சமமற்ற நிலைமையை அகற்றிவிடுகிறது. கணவர் மனைவியரின் பரஸ்பரக் காதல், மரியாதை, நலன்களின் ஒருமை ஆகியவற்றின் அடிப்படையில் அது அமைகிறது. குழந்தைகளைப் பயிற்றி வளர்த்துச் சுதந்திர வாழ்க்கைக்குத் தயாராக்கும் தனது கடமையை அது முழுமையாக நிறைவேற்றுகிறது. சோஷலிஸத்தில் உற்பத்தியிலும் சமூக வாழ்க்கையிலும் உருவாகும் தோழமையும் பரஸ்பர உதவியும் நிறைந்த உறவுகள் குடும்ப உறவுகளுக்கும் பரவுகின்றன. புகழ்பெற்ற சோவியத் கல்வி நிபுணர் அன்தோன் மக்காரென்கோ சோஷலிஸச் சமூகத்தில் குடும்பத்தின் தனிச் சிறப்புகளைப் பின்வரும் சொற்களில் எடுத்துரைத்தார்: ''குடும்பம் சமூகத்தின் இயற்கையான தொடக்கக் குழுவாக மனித வாழ்வின் எழில் மலரும் இடமாக, மனிதனுடைய வெற்றி ஆற்றல்கள் இளைப்பாற வரும் தங்கிடமாக, வாழ்வின் தலைமை இன்பமான குழந்தைகள் வளர்ந்து வாழ்வு நடத்தும் பண்ணையாக மாறிவிடுகிறது.''

சுரண்டும் அமைப்பின் நிலைமைகளில் குடும்பம் எந்தச் சமுதாய நாட்டின, மதத் தளைகளில் சிக்கியிருந்ததோ, அவற்றிலிருந்து சோஷலிஸம் அதைப் படிப்படியாக விடுவிக்கிறது. புதிய குடும்பத்தை வலுப்படுத்துவதிலும் இளந் தலைமுறையைப் பயிற்றி வளர்ப்பதிலும் சோஷலிஸ அரசாங்கம் அக்கறை எடுத்துக்கொள்கிறது. குடும்ப-மண உறவுகளில் எஞ்சியுள்ள பழமையின் மீத மிச்சங்களை எதிர்த்துத் தீர்மானமாகப் போராடுகிறது.

காதல், திருமணம் ஆகிய விஷயங்களில் தகுதியற்ற முறையில் நடந்துகொள்பவர்கள் சோஷலிஸத்தின் நிலைமைகளில் பொதுஜன அபிப்பிராயத்தால் ஒழுக்க நெறி நோக்கில் கண்டனத்துக்கு உள்ளாக்கப்படுகிறுர்கள். தங்கள் சமூக விரோதச்

செயல்களால் குடும்பத்தைச் சீர்குலைப்பவர்களைப் பொதுஜன அபிப்பிராயம் ஒழுங்குக்குக் கொண்டுவருகிறது. சோஷலிஸக் குடும்பத்தைப் பலப்படுத்தவும், நல்ல உறவுகளை அதில் வளர்க்கவும், பெற்றோரும் குழந்தைகளும் ஒருவருக்கொருவரும் சமூகத்துக்கும் தாங்கள் செய்யவேண்டிய கடமைகளை நேர்மையுடன் நிறைவேற்றவும் சோவியத் சட்டங்கள் உதவுகின்றன. உறுதியான குடும்ப உறவுகளுக்கு அடிப்படையாக விளங்கும் குணங்களை—ஆண்களுக்கும் பெண்களுக்கும் உரிய தன்மானம், கற்பு, நேர்மை ஆகியவற்றை—சோவியத் இளைஞர்களுக்கும் மகளிருக்கும் பயிற்றிப் புகட்டுவதில் சமூக நிறுவனங்கள் பயனுள்ள பெருந்தொண்டு ஆற்றி வருகின்றன.

கம்யூனிஸத்தை நிறுவுவதில் பெண் ஆணுக்குச் சமமாகத் தீவிரப் பங்கு எடுத்துக்கொள்ளவும் தனது திறமைகளையும் இயல்திறனையும் முழு அளவுக்கு வளர்த்துக்கொள்ளவும் தேவையான நிலைமைகளை சோஷலிஸ அமைப்பு ஏற்படுத்துகிறது. வேலைநாள் நேரம் குறைக்கப்பட்டிருக்கிறது. வசதிகள் நிறைந்த வசிப்பிடங்கள், குழந்தைத் தோட்டப் பள்ளிகள், குழந்தை வளர்ப்பகங்கள், பொது உணவுச்சாலைகள், பண்பாட்டு நிலையங்கள், பொதுநல நிலையங்கள் ஆகியவை நிறுவப்பட்டிருக்கின்றன. இவை எல்லாம் உற்பத்தி, சமூக-அரசியல் வாழ்வில் பெண்கள் மேலும் தீவிரமாகச் செயல்பட வாய்ப்பு அளிக்கும். களைப்பூட்டும் வீட்டு வேலைகளில் இப்போது பெண்கள் ஓழிவு நேரத்தை மிகுதியாகச் செலவிடுகிறார்கள். மேற்குறித்த வசதிகள் நிறைய ஏற்பட்டதும் இந்த வேலையிலிருந்து பெண்களுக்கு விடுதலை கிடைக்கும்.

கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படை அமைக்கப்படுவதாலும் கம்யூனிஸச் சமூக உறவுகள் வளர்ச்சி அடைவதாலும் சோவியத் குடும்பம் மேலும் உறுதிப்படும். இளந் தலைமுறையைப் பயிற்றி வளர்ப்பதில் அதன் பங்கு இன்னும் அதிகமாகும். கம்யூனிஸச் சமூகத்தில் குடும்ப உறவுகள் பொருளியல் கணக்கீடுகளிலிருந்து முற்றாக விடுபட்டுவிடும். பரஸ்பர அன்பையும் நட்பையுமே அடிப்படையாகக் கொண்டு இவை அமையும்.

குடும்ப வாழ்க்கை நடைபெறும் சூழ்நிலை வழக்கமாக வாழ்க்கைமுறை எனப்படுகிறது. மனிதனது வாழ்க்கை முறைக்கு விரிவான அல்லது குறுகிய வரையறுப்பு தர முடியும். விரிவான

அர்த்தத்தில், மனிதர்களின் நேரடியான உற்பத்திச் செயல், சமூக-அரசியல் நடவடிக்கைகள் ஆகியவற்றின் எல்லைக்குப் புறம்பே உள்ள பொருளியல், பண்பாட்டு வாழ்க்கை நிலைமைகள் யாவும் இந்தச் சொல்லில் அடங்கிவிடுகின்றன. இன்னும் குறுகிய அர்த்தத்தில் பார்க்கும்போது மனிதரது குடும்ப வாழ்க்கையின் மிக இன்றியமையாத நிலைமைகளையே இது குறிக்கிறது. அவையாவன: உணவு தயாரிப்பது, உடை, வசிக்குமிடம், ஒய்வு போன்ற தேவைகளை நிறைவேற்றுவது முதலியன. மனிதர்களின் வாழ்க்கை முறை வரலாற்று நோக்கில் ஸ்தூலமான குடும்ப வகையுடனும் அதன் சொத்துரிமையுடனும் நிர்வாகத்துடனும் குடும்ப-மண உறவுகளின் சிறப்புத்தன்மைகளுடனும் நேரடியான தொடர்பு கொண்டது.

முடிவாகப் பார்க்கும்போது சமூக உற்பத்தியின் வளர்ச்சித் தரமே மனிதர்களின் பண்பாட்டு-வாழ்க்கை முறையின் நிலைமைகளையும் தேவைகளையும் வரையறுக்கிறது. பண்டைக்காலக் காட்டு மிராண்டிகளைப் பற்றிய தனித்தனியான வரலாற்றுச் சின்னங்கள் இன்றுவரை எஞ்சியுள்ளன. இந்தக் காட்டு மிராண்டிகளின் வாழ்க்கை முறையையும் தற்கால மனிதனின் வாழ்க்கை முறையையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்தால் அவற்றுக்கு இடையில் உள்ள மிகப் பெருத்த வித்தியாசத்தை எளிதில் காணலாம்.

வழக்க பழக்கங்களும் குறித்த வகைச் சடங்குகளும் வாழ்க்கை முறையின் உள்ளார்ந்த அம்சங்கள் ஆகும். இவை வரலாற்றுப் போக்கில் உருவாகி வளர்ச்சி பெறுகின்றன. மனிதர்களுடைய வாழ்க்கை முறைக்கும் சமூகத்தின் ஆன்மீகப் பண்பாட்டுக்கும் உள்ள தொடர்பை இங்கே நாம் காண்கிறோம். தங்கள் பங்குக்கு மனிதர்களின் வாழ்க்கை முறையும் வாழ்க்கை நிலைமைகளும் பொருளியல், ஆன்மீக உற்பத்தியின் வளர்ச்சியைப் பாதிக்கின்றன. இந்த வளர்ச்சியை அவை விரைவுபடுத்துகின்றன அல்லது தாமதப்படுத்துகின்றன.

பூகோள நிலைமைகளும் மக்களின் நாட்டினச் சிறப்புத் தன்மைகளும் தொழில், ஒழுக்க நெறி, மதம் ஆகியவற்றுக்கும் பிறவற்றுக்கும் உரிய காரணிகளும் கூட வாழ்க்கை முறைமீது குறித்த விதத்தில் பாதிப்பு நிகழ்த்துகின்றன. எனவேதான் நகர வாழ்க்கை முறை, கிராம வாழ்க்கை முறை, உடலுழைப்பாளிகள், அறிவு உழைப்பாளிகள் ஆகியோரின் வாழ்க்கை

முறை, ஒரு குறித்த நாட்டினத்துக்கு உரிய வாழ்க்கை முறை என்று நாம் வேறுபடுத்திப் பேசுகிறோம். இவர்களில் ஒவ்வொரு பிரிவினருக்கும் பொதுப் பண்புகள் தவிரத் தமக்கே உரிய சிறப்புத் தன்மைகளும் உண்டு.

சோவியத் நாட்டில் புதிய, சோஷலிஸ வாழ்க்கை முறை மேலும் மேலும் வளர்ச்சி அடைந்து வருகிறது. சோஷலிஸ அமைப்பின் சிறப்புத் தன்மைகளை, சமூக உறுப்பினர்களுக்கு இடையே நிலவும் கூட்டான உறவுகளை இது பிரதிபலிக்கிறது.

பொதுமக்கள் திரளின் வறுமையையும் உரிமை இன்மையையும் சோஷலிஸம் முற்றுக ஒழித்துவிட்டது. நகரத்திலும் கிராமத்திலும் உழைப்பாளிகளின் பொருளியல், பண்பாட்டு வாழ்க்கைத் தரம் அளவிட முடியாதவாறு மேம்பட்டுவிட்டது. நூலகம், திரைப்படம், நாடக மன்றம், வானொலி, தொலைக் காட்சி, இலக்கியம், உடற்பயிற்சியும் விளையாட்டும், நவீன இயந்திர சாதனங்கள் ஆகியவை சோவியத் மக்களின் வாழ்க்கை முறைக்கு உரிய உள்ளார்ந்த அம்சங்கள் ஆகிவிட்டன.

திரளான பொதுமக்களின் உபயோகத்துக்கு உரிய பொருள்களின் உற்பத்தியையும் அவற்றின் தரத்தையும் அதிகரிப்பதற்கான எல்லா நடவடிக்கைகளையும் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசாங்கமும் மேற்கொண்டு வருகின்றன. உழைப்பாளிகள் தங்கள் ஒழிவு நேரத்தை அறிவுக்குகந்த முறையில் பயன்படுத்துவதற்குத் தேவையான எல்லா வசதிகளும் செய்யப்பட்டு வருகின்றன. மக்களது சமுதாய-அன்றாட வாழ்க்கைச் சேவைகளும் மருத்துவத் தொண்டும், நகரத்திலும் கிராமத்திலும் வர்த்தகமும் மேலும் சீர்பட்டுவருகின்றன. அன்றாட வாழ்க்கைச் சேவைகளைத் தேசீயப் பொருளாதாரத்தின் இயந்திர வசதிகள் கொண்ட ஒரே பெரிய துறையாக மாற்றும் வேலை தொடங்கி நடந்துவருகிறது. இவை எல்லாவற்றின் காரணமாகவும் சோவியத் நாட்டில் வாழ்க்கைத் தரம் பொதுவாக உயரும், நாட்டுப்புறமும் நகரமும் வாழ்க்கைத் தரத்தில் ஒன்றுக்கொன்று இன்னும் அருகே வரும்.

உற்பத்திச் சக்திகளின் தீவிர வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு சோஷலிஸம் கம்யூனிஸமாக வளரும் போது வாழ்க்கை முறையிலும் ஆழ்ந்த மாற்றங்கள் நிகழ்ந்துவரும். சோஷலிஸ வாழ்க்கைமுறை கம்யூனிஸச் சமூகத்துக்கு உரிய வாழ்க்கை முறையாகப் படிப்படியே மாறி வருகிறது. கம்யூனிஸ

வாழ்க்கை முறை நிலவுவதற்கு எல்லாத் துறைகளிலும் வளர்ச்சி அடைந்த மக்களின் பொருளியல், ஆன்மீகத் தேவைகள் முழுமையாக நிறைவேற்றப்பட வேண்டும். மக்களுடைய கோரிக்கைகளையும் தேவைகளையும் நிறைவேற்றுவதற்கான சமூக வடிவங்கள் விரிவாகக் கையாளப்பட வேண்டும். பொது உணவுச்சாலை வசதிகள், பல்வகைக் குழந்தை நிலையங்கள், ஆரோக்கிய நிலையங்கள், பண்பாட்டு நிலையங்கள், அன்றாடச் சேவைக்கான நிலையங்கள் ஆகியன இவை. கிராம, நகர உழைப்பாளிகள், அறிவு வேலையிலும் உடல் உழைப்பிலும் ஈடுபட்டிருப்பவர்கள், எல்லாரது வாழ்க்கை நிலைமைகளும் ஒரே படித்தாக அமைவதும் இதற்கு அவசியம்.

சோஷலிஸச் சமூகத்தில் தற்கால நிலைமைகளிலேயே கம்யூனிஸ வாழ்க்கை முறையின் பண்புகள் வர வரத் துலக்கமாகக் காணப்படுகின்றன. சோவியத் மக்களின் வாழ்க்கை முறையில் புதிய, கம்யூனிஸ அம்சங்கள் நிலைபெறுவதற்குக் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைவாத, ஒழுங்கமைப்பு வேலை உதவுகிறது. வாழ்க்கை முறையின் கம்யூனிஸ வடிவங்கள் வளர்ச்சி அடைவது சமூக உற்பத்தியின் வளர்ச்சி வேகத்தின்மீது நேரடியான பாதிப்பு ஏற்படுத்துகிறது, மேலும் ஏற்படுத்திவரும். இவ்வாறு சமூகம் கம்யூனிஸத்தை நோக்கி முன்னேறுவதை அது இன்னும் விரைவுபடுத்தும்.

## அத்தியாயம் ஒன்பது

# சமூக வர்க்கங்கள்

மனிதர்களது பொதுமையின் வரலாற்று வடிவங்களை ஆராய்ந்து நாம் பின்வரும் முடிவுகளுக்கு வந்தோம்: இனங்களோ நாட்டினங்களோ தங்கள் சமுதாய அமைப்பில் ஒரே வகை யானவை அல்லது ஒன்றுனவை அல்ல. வெவ்வேறு வர்க்கங்களும் குழுக்களும் சமுதாயப் படிவுகளும் அவற்றில் அடங்கியுள்ளன. இவை யாவும் ஒன்று சேர்ந்தே சமூகத்தின் வர்க்க அமைப்பை உருவாக்குகின்றன. வர்க்கங்கள், வர்க்கப் போராட்டம் என்பவை யாவை, எந்தக் காரணங்களால் சமூகம் வெவ்வேறு வர்க்கங் களாகப் பிரிவுபடுகிறது, இந்த வர்க்கங்கள் ஏன் தோன்றின, சமூகத்தின் வளர்ச்சிப் போக்கில் ஒருவகை வர்க்கங்களின் இடத்துக்கு வேறுவகை வர்க்கங்கள் வருவது எப்படி நிகழ் கிறது, வர்க்க எதிர்நிலைகளையும் வர்க்க வேறுபாடுகளையும் போக்குவதற்கு உரிய வழிகள் யாவை, என்பவற்றை எல்லாம் விளக்குவதை வர்க்கங்கள் பற்றிய மார்க்ஸீய-லெனினீயப் போதனை தனது நோக்கமாகக் கொள்கிறது. வர்க்கங்கள் அற்ற கம்யூனிஸச் சமூகத்தை நிறுவும் மிகப் பெரும் கடமையை சோவியத் மக்கள் நடைமுறையில், எதார்த்தத்தில் நிறை வேற்றிக்கொண்டிருக்கும் நமது காலத்தில் வர்க்கங்கள்பற்றிய மார்க்ஸீயப் போதனை சிறப்பாக மிகுந்த முக்கியத்துவம் உள்ளது ஆகிறது.

### § 1. வர்க்கங்கள் என்பவை யாவை. வர்க்கங்கள் பற்றிய மார்க்ஸீயவிரோதச் ''சித்தாந்தங்களின்'' விமர்சனம்

சமூகத்தில் வர்க்கங்கள் நிலவுவது கார்ல் மார்க்ஸுக்கும் பிரெடெரிக் எங்கெல்ஸுக்கும் முந்திய காலத்திலேயே அறியப்

பட்டிருந்தது. எனினும் இந்த உண்மையைக் கண்டுபிடித்த, மார்க்ஸியத்துக்கு முந்திய பூர்ஷ்வாத் தத்துவவாதிகளும், வரலாற்று அறிஞர்களும் அதற்குச் சரியான விஞ்ஞான ரீதியான விளக்கம் தர முடியவில்லை. சமூகம் தோன்றிய உடனேயே வர்க்கங்கள் தோன்றிவிட்டன என்றும் அவை நிலையான, அகற்ற முடியாத நிகழ்ச்சிகள் என்றும் அவர்கள் எண்ணினார்கள். சமூகத்தை வேறு விதமான, வர்க்கங்கள் அற்ற அடிப்படையில் மாற்றி அமைக்கவும் ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கத்தைச் சுறண்டுவதற்கு ஒரேயடியாக முடிவு கட்டவும் உழைப்பாளி மக்கள் செய்த எல்லாவித முயற்சிகளும் இந்தக் காரணத்தால் நம்பிக்கைக்கு இடமற்றவை, நிச்சயமாகத் தோல்வி அடையக் கூடியவை என்று தொடக்கத்திலேயே அறிவிக்கப் பட்டன.

வர்க்கங்கள் என்பவை யாவை, எந்த நிலைமைகளில் அவை தோன்றின என்ற கேள்விக்குத் தெளிவான, துலக்கமான விடையைக் கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் விளாதிமிர் இல்யீச் லெனினும் மட்டுமே அளித்தார்கள். எதிர் நிலையிலுள்ள வர்க்கங்களது போராட்டத்துக்கு உரிய புறநிலைக் காரணங்களையும் உழைப்பாளி வர்க்கங்களது ஒத்துழைப்புக் கான நிபந்தனைகளையும் அவர்கள் வெளிப்படுத்தினார்கள். வர்க் கங்கள் அற்ற சமூகத்தை நிறுவுவதற்கு உரிய வழிகளை அவர்கள் காட்டினார்கள்.

வர்க்கங்கள் பற்றிய ஆக முழுமையான வரையறுப்பு ''மா பெரும் முன்முயற்சி'' என்னும் நூலில் வி. இ. லெனினால் தரப் பட்டிருக்கிறது. ''வரலாற்றுப் போக்கில் திட்டவட்டமான சமூக உற்பத்தி அமைப்பில் அவை வகிக்கும் இடத்துக்கு ஏற்ப வும், உற்பத்திச் சாதனங்கள்பால் அவற்றுக்கு உள்ள (பெரும் பகுதி சட்டங்களில் நிலைப்படுத்தப்பட்டவையும் பதிவு செய் யப்பட்டவையும் ஆன) உறவுகளுக்கு ஏற்பவும், உழைப்பின் சமூக ஒழுங்கமைப்பில் அவை ஆற்றும் பங்குக்கு ஏற்பவும், எனவே, தங்களிடம் உள்ள சமூகச் செல்வத்தின் எந்த அளவு பங்கை, எம்முறையில் அவை பெறுகின்றன என்பதற்கு ஏற்ப வும் தமக்குள் வேறுபடுகின்ற பெரிய மக்கள் குழுக்கள் வர்க்கங் கள் என்று அழைக்கப்படுகின்றன''[1] என்று எழுதினார் லெனின்.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 39, பக்கம் 15.

மனிதர்கள் ஒரு அல்லது மற்ெருரு சமூக வர்க்கத்தைச் சேர்ந்திருப்பதற்குக் காரணமாக விளங்கும் நான்கு முக்கிய அறிகுறிகளை வி. இ. லெனின் இந்த வரையறுப்பில் சிறப்பாகத் தனிப் பிரித்துக் காட்டுகிருர். அவையாவன: வரலாற்றுப் போக்கில் திட்டவட்டமான சமூக உற்பத்தி அமைப்பில் வகிக்கும் இடமும், உற்பத்திச் சாதனங்கள்பால் உள்ள உறவும், உழைப்பின் சமூக ஒழுங்கமைப்பில் ஆற்றும் பங்கும், கடைசியில் வருமானம் பெறப்படும் முறையும் அதன் அளவும்.

வர்க்கத்தின் பிரதான, அடிப்படை அறிகுறி உற்பத்திச் சாதனங்கள்பால் அதற்கு உள்ள உறவே ஆகும். சமூக உற்பத்தியின் திட்டவட்டமானஅமைப்பில் ஒரு குறித்த வர்க்கம்வகிக்கும் இடமும் அது ஆற்றும் பங்கும் உற்பத்திச் சாதனங்கள்பால் அதற்கு உள்ள உறவினுலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. இந்த வர்க்கம் வருமானம் பெறும் முறையும் அதன் அளவும் கூட மேற்கண்ட உறவினுலேயே தீர்மானிக்கப்படுகின்றன.

சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகத்தில் உற்பத்திச் சாதனங்களின் உடைமையாளியாக விளங்கும் வர்க்கம் பொருளாதாரத் துறையிலும் அதே போல அரசியல், கொள்கைவாதத் துறைகளிலும் ஆதிக்க நிலைமை மேற்கொள்கிறது. உற்பத்திச் சாதனங்கள் அற்றவர்களைச் சுறண்டவும் அவர்களது உழைப்பைத் தனதாக்கிக்கொள்ளவும் இந்த வர்க்கம் வாய்ப்பு பெற்றிருக்கிறது.

மனிதர்கள் வர்க்கங்களாகப் பிரிவுபட்டது வரலாற்று நிகழ்ச்சி ஆகும். வர்க்கங்கள் நிலவுவது உற்பத்தி வளர்ச்சியின் திட்டவட்டமான வரலாற்றுக் கட்டங்களுடன், அல்லது, வேறு வார்த்தைகளில் சொன்னுல், பொருளியல் நலங்களின் உற்பத்திக்கான திட்டவட்டமான முறைகளுடன் தொடர்பு கொண்டது என்று எழுதினுர் கார்ல் மார்க்ஸ்.

அடக்குவோர், அடக்கப்படுவோர் என்று சமூகம் பிரிவுபட்டிராத காலம் ஒன்று இருந்தது. பண்டைக் கூட்டுச் சமூகம் வர்க்கங்களற்ற அத்தகைய சமூகமாக விளங்கியது. அந்தச் சமூகத்தில் உற்பத்திச் சக்திகளின் தாழ்ந்த தரம் மக்கள் கூட்டாக உழைப்பதை இன்றியமையாதது ஆக்கியது. ஏனெனில் பட்டினியால் சாகாமலிருப்பதற்குத் தேவையான அளவு உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வது ஒன்றுசேர்ந்த உழைப்பின் மூலமே சாத்தியமாக இருந்தது. கூட்டு உழைப்பு விளைபொருள்

கள்மீதும் உற்பத்திச் சாதனங்கள்மீதும்பொது உடைமையைத் தீர்மானித்தது. பெறப்பட்ட உணவுப் பொருள்கள் சாதியின் எல்லா உறுப்பினர்களுக்கு இடையிலும் சமமாக வினியோகிக்கப் பட்டன. ஒவ்வொருவனும் மற்றவர்களுக்குச் சமமாக உழைத் தான். எல்லோருக்கும் ஒரே மாதிரி உரிமைகளும் பொறுப்புக் களும் இருந்தன.

பண்டைக் கூட்டுச் சமூகம் வளர்ச்சி அடைந்ததன் விளை வாக உழைப்பின் முதலாவது பெருத்த சமூகப் பிரிவினை நடந் தேறியது. பயிர்த்தொழிலின் தொடக்ககால வடிவங்களில் ஈடுபட்டிருந்த குலங்களோடு கூடவே காட்டு விலங்குகளைப் பழக்கி வளர்ப்பதையும் விருத்திசெய்வதையும் முக்கியத் தொழிலாகக் கொண்ட குலங்கள் படிப்படியாகத் தோன்றலுற் றதால் ஏற்பட்டது இது. இவ்வாறு கால்நடை வளர்ப்பு உழவுத் தொழிலிலிருந்து பிரிந்தது. விளைவாக, உழவுத் தொழில் செய் யும் குலங்களுக்கும் கால்நடை வளர்ப்புத் தொழில் செய்யும் குலங்களுக்கும் இடையே பண்ட மாற்றத்தின் பண்டை வடிவங் கள் தோன்றின. உழைப்பின் சமூகப் பிரிவினை இத்துடன் நின்று விடவில்லை. அது படிப்படையாக விரிவும் ஆழமும் அடைந்து கொண்டு போயிற்று. விளைவாக உழைப்பின் இரண்டாவது, மூன்ருவது பெருத்த சமூகப் பிரிவினைகள் நிகழ்ந்தன. கைத் தொழில் சுதந்திரத் துறையாகத் தனிப் பிரிந்தது. அறிவு உழைப்பு உடல் உழைப்பிலிருந்து வேருயிற்று.

உற்பத்திக் கருவிகள் செவ்வையடைந்தது, உழைப்பின் சமூகப் பிரிவினை ஏற்பட்டது ஆகியவற்றின் விளைவாக மனித உழைப்பு மேலும் மேலும் அதிகப் பயன் விளைப்பது ஆயிற்று. உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத அளவுக்கு மேலேயே வாழ்க் கைச் சாதனங்களை மனிதர்கள் உற்பத்தி செய்யலானுர்கள். விளைவாக அதிகப்படியான பொருள்கள் (உணவுப் பண்டங் கள், உடைகள், எரிபொருள்கள், கருவிகள் முதலியன) உண்டா யின. தொடக்கத்தில் இந்தக் கூடுதல் பொருள்கள் கொஞ்ச மாகவே இருந்தன. உபரிப் பண்டங்கள் என்பவை இவையே.

உபரிப் பண்டங்கள் இருந்தது பண்டைக் கூட்டுச் சமூகத் தைச் சேர்ந்த ஒரு அற்பப் பகுதியினருக்கு உற்பத்திச் செயலில் நேரடியாகப் பங்கு கொள்ளாமலே பிறரது உழைப்பின் செல வில் வாழும் வாய்ப்பை அளித்தது. குலத் தலைவர்களும் மூப்பர் களும் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டார்கள். குலச்

சொத்துக்களை இவர்கள் படிப்படியாகத் தங்கள் கைகளில் குவித்துக்கொண்டார்கள்.

சொத்து விஷயத்தில் ஏற்றத்தாழ்வு இவ்வாறு முளை விட்டது. உற்பத்திச் சாதனங்கள்மீது தனியார் சொத்துரிமை தோன்றியது. சாதி, குலப் பிரமுகர்கள் கைகளில் செல்வம் குவிந்ததன் விளைவாக, சொத்து இல்லாதவர்களை அடிமைப் படுத்தவும் கீழ்ப்படுத்தவும் தங்களுக்காக உழைக்கும்படி அவர்களைக் கட்டாயப்படுத்தவும் இந்தப் பிரமுகர்களுக்கு வாய்ப்பு கிடைத்தது. ஆதிக்கம், கீழ்ப்படிவு என்ற உறவுகள் ஏற்பட இது காரணம் ஆயிற்று. பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பில் இந்த உறவுகள் கிடையா. சமூகம் எதிரெதிரான வர்க்கங்களாகப் பிளவுபட்டது.

அடிமைச் சொந்தக்காரச் சமூகமே முதலாவது வர்க்கச் சமூகமாக இருந்தது. அடிமைச் சொந்தக்காரர்களும் அடிமைகளும் இதன் பிரதான வர்க்கங்களாக விளங்கினர். அடிமைச் சொந்தக்காரர்கள் செல்வத்தையும் அதிகாரத்தையும் தங்கள் கைகளில் குவித்து வைத்துக்கொண்டு அடிமைகளை இரக்கமின்றிச் சுறண்டியதன் மூலம் வாழ்ந்துவந்தார்கள் என்பதுதான் இந்த வர்க்கங்களின் எதிர்நிலையை நிச்சயப்படுத்தியது. அடிமைகள் அடிமைச் சொந்தக்காரர்களின் முழுமையான உடைமையாக இருந்தார்கள். அவர்களைப் ''பேசும் கருவிகள்'' என்று அடிமைச் சொந்தக்காரர்கள் இகழ்ச்சியாக அழைத்தார்கள்.

சமூகம் மேற்கொண்டு வளர்ச்சி அடைந்ததற்கு ஏற்ப, ஒரு உற்பத்தி முறையிலிருந்து இன்னொரு உற்பத்தி முறைக்குப் பரிணமிப்பு நிகழ நிகழ வர்க்க முரண்பாடுகள் மேலும் ஆழமாகி வரவரக் கூரிய வடிவை அடைகின்றன. நிலப்பிரபுத்துவச் சகாப்தத்தில் அடிமைகளுக்கும் அடிமைச் சொந்தக்காரர்களுக்கும் பதிலாக நிலப்பிரபுக்கள், குடியானவர்கள் என்ற எதிர்நிலையான வர்க்கங்கள் வந்தன. பூர்ஷ்வா அமைப்பு நிலப்பிரபுத்துவ உறவுகளைத் தகர்த்துவிட்டுப் புதிய வர்க்க எதிர்நிலையைத் தோற்றுவித்தது. முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே உள்ள எதிர்நிலை அது. இந்த அமைப்புக்களில் ஒவ்வொன்றும் வர்க்க ஆதிக்கத்தின் வெளித் தோற்றத்தில் மட்டுமே வேறுபட்டிருந்தது. அவற்றின் தன்மை ஒன்றேதான். அதாவது, ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கத்தை அடக்கி ஒடுக்குவதும் சுறண்டுவதும். உற்பத்திச் சாதனங்கள்மீது தனியார் சொத்துரி

மை இந்த அடக்கு முறைக்கும் சுறண்டலுக்கும் காரணமாக இருந்தது.

எனவே வர்க்கங்கள் தோன்றியதற்கும் சுறண்டுவோர் சமூகங்கள் வர்க்கங்களாகப் பிரிவுபட்டதற்கும் அடிப்படைக் காரணம் உற்பத்திக் கருவிகள்மீதும் சாதனங்கள்மீதும் தனியார் சொத்துரிமை நிலவியதுதான்.

சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகத்தின் ஒவ்வொரு திட்டவட்டமான வகையினதும்—அதாவது அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவச் சமூகங்கள் ஒவ்வொன்றினதும்—வர்க்க அமைப்பு சிக்கலான தன்மை கொண்டது. இந்தச் சமூகங்களில் அடிப்படை வர்க்கங்கள் அடிப்படையற்ற வர்க்கங்களிலிருந்து தனிப் பிரிக்கப்படுகின்றன. ஆதிக்கத்தில் இருக்கும் உற்பத்தி முறையுடன் நேரடியான தொடர்பு கொண்ட வர்க்கங்கள் அடிப்படையானவை ஆகும். அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தில் அடிமைச் சொந்தக்காரர்களும் அடிமைகளும், நிலப்பிரபுத்துவச் சமூகத்தில் நிலப்பிரபுக்களும் குடியானவர்களும், முதலாளித்துவச் சமூகத்தில் பூர்ஷ்வாக்களும் பாட்டாளிகளும் அடிப்படை வர்க்கங்கள் ஆவர்.

ஆதிக்கம் வகிக்கும் உற்பத்தி முறைக்குள் நேரடியாக அடங்காத பொருளாதார அமைப்புக்கள் இருப்பதே அடிப்படை அற்ற வர்க்கங்கள் நிலவுவதற்குக் காரணம் ஆகிறது. உதாரணமாக, நிலப்பிரபுத்துவ அமைப்பின் மீத மிச்சங்களும் அதனுடன் தொடர்புள்ள நிலச்சொந்தக்காரர்களேயும் குடியானவர்களேயும் கொண்ட சமூகக் குழுக்களும் முதலாளித்துவத்தில் சிறிது காலம் எஞ்சியிருக்கக்கூடும்.

சமூகம் வர்க்கங்களாகவும் அவற்ருேடு கூடவே வகுப்புக்களாகவும் பிரிவுபட்டிருந்தது அடிமைச் சொந்தக்கார அமைப்புக்கும் நிலப்பிரபுத்துவ அமைப்புக்கும் இயல்பாக இருந்தது. இவற்றில் வர்க்கங்கள் ஒரே சமயத்தில் வகுப்புக்களாகவும் விளங்கின. உற்பத்தியில் தங்கள் நிலே காரணமாக மட்டுமின்றிச் சட்டபூர்வமான சில உரிமைகள், பொறுப்புக்கள் காரணமாகவும் தங்களுக்குள் வேறுபட்டிருந்த திட்டவட்டமான சமூகக் குழுக்களே வகுப்புக்கள் எனப்படுபவை. இந்த உரிமைகளும் பொறுப்புக்களும் அரசு அதிகாரத்திஞல் அவர்களுடன் நிலேயாக இணைக்கப்பட்டுவிட்டன, பரம்பரைச் சொத்தாகக்

கருதப்பட்டன. நிலப்பிரபுத்துவத்தில் பிரபு வம்சத்தினரும் மதகுருக்களும் உயர் வகுப்பினராகவும் குடியானவர்களும் கைத் தொழிலாளர்களும் கீழ் வகுப்பினராகவும் விளங்கினுர்கள்.

அடிப்படை வர்க்கங்களோடும் அடிப்படையற்ற வர்க்கங் களோடும் கூடவே சமூகத்தில் திட்டவட்டமான சமுதாயப் படிவுகள் உள்ளன. இவற்றுக்கு உதாரணமாக அறிவுஜீவிகளை, அதாவது அறிவு உழைப்பில் (விஞ்ஞானம், கலை முதலியவற்றில்) ஈடுபட்டுள்ள மக்கள் பகுதியினரைக் காட்டலாம். அறிவுஜீவி களைத் தனி வர்க்கமாக எண்ண முடியாது. ஏனெனில் பொரு ளியல் உற்பத்தி முறையில் அவர்கள் சுதந்திரமான இடம் வகிப்பதில்லை. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட அமைப்புக்களில் அறிவுஜீவிகள் ஆளும் வர்க்கங்களின் பிரதி நிதிகளைக் கொண்டே உருவாகிருர்கள். சோஷலிஸச் சமூகத்தி லோ, உழைப்பாளிகளின் வர்க்கங்களிலிருந்து இவர்கள் உருவாகி ருர்கள். தற்போதையச் சமூகத்தில் அறிவுஜீவிகள் மிகப் பெரிய பங்கு ஆற்றுகிருர்கள். விஞ்ஞான-தொழில்நுட்ப முன் னேற்றம், கலை, விஞ்ஞானம், சுகாதாரப் பாதுகாப்பு, கல்வி முதலியவற்றின் வளர்ச்சி—இவை யாவும் பெரும் அளவு அறிவுஜீவிகளின் படைப்புத்தன்மை கொண்ட உழைப்பின் விளைவாகும்.

அடிப்படை வர்க்கங்களும் அடிப்படை அற்ற வர்க்கங்களும், அவ்வாறே திட்டவட்டமான சமுதாயப் படிவுகளும் சமூகத்தின் வர்க்க அமைப்பாக உருவாகின்றன.

வர்க்கங்கள் பற்றிய மார்க்ஸீயப் போதனை பாட்டாளி மக்களின் புரட்சிப் போராட்டத்தின் போக்கில் உருவாயிற்று. சுறண்டுவோரின் நலன்களுக்குச் சாதகமாக வர்க்கப் பிரச்சினை யைத் திரித்துக் காட்டும் எல்லா வகையான குட்டி பூர்ஷ்வா, பூர்ஷ்வா, அராஜக, சீர்திருத்தவாதச் ''சித்தாந்தங்களுக்கும்'' கருத்துக்களுக்கும் எதிராக இடையருத போராட்டத்தில் இந்தப் போதனை வளர்ச்சி அடைந்தது. வர்க்கங்களின் தோற்ற மும் தன்மையும் பற்றிய பிரச்சினை குறித்த விஞ்ஞானப் புரிவு, மேற்கண்ட ''சித்தாந்தங்களின்'' பொய்மையை அம்பலப் படுத்தவும், பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் பொருட்டு, சோஷலிஸத்தின் பொருட்டு உணர்வு பூர்வமாகப் போராடவும் தொழிலாளி வர்க்கத்துக்கு உதவுகிறது. இந்தப் புரிவின் முக்கியத்துவம் இதில்தான் அடங்கியிருக்கிறது.

வர்க்கங்கள் பற்றிய பிரச்சினை குறித்து மார்க்ஸீயப் பிரபஞ்சக் கண்ணோட்டத்துக்கும் பூர்ஷ்வாப் பிரபஞ்சக் கண்ணோட்டத்துக்கும் இடையே உக்கிரமான போராட்டம் தற்காலத்திலும் நடந்துவருகிறது. சோஷலிஸத்தின் எதிரிகள் வர்க்கங்கள் பற்றிய மார்க்ஸீயச் சித்தாந்தத்தின் அடிப்படை வரையறுப்புக்களையே எதிர்க்கிறார்கள். இத்தகைய சித்தாந்தம் நிலவவேஇல்லை போலச் சில வேளைகளில் அவர்கள் பாவனை செய்கிறார்கள்.

வர்க்கங்கள் பற்றிய பிரச்சினையை ''விஞ்ஞானரீதியாக'' விளக்குவதாக உரிமை கொண்டாடும் தற்கால பூர்ஷ்வாச் ''சித்தாந்தங்களில்'' மிக விரிவாகப் பரவியுள்ளவற்றை மட்டும் நாம் சுருக்கமாக ஆராய்வோம். இவற்றில் ஒன்று ''சமுதாயப் படிவமைப்பு'' பற்றிய சித்தாந்தம். அமெரிக்க பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் இந்தச் சித்தாந்தத்தை விசேஷத் தீவிரமாகப் பரப்பிவருகிறார்கள். வர்க்கம் என்ற மார்க்ஸீயக் கருதுகோள் ''பழையதாகிவிட்டது'' என்றும் அதற்குப் பதில் சமுதாயப் படிவுகள் என்ற கருதுகோள் வழங்கப்பட வேண்டும் என்றும் இந்தச் ''சித்தாந்தத்தை'' உருவாக்கியவர்களும் அவர்களுடைய ஆதரவாளர்களும் கருதுகிறார்கள். பூர்ஷ்வாச் சமூக இயலாரின் கருத்துப்படி இந்தச் சமுதாயப் படிவுகள், அவற்றைச் சேர்ந்த மனிதர்களின் தொழில், கல்வி, தேர்ச்சி ஆகியவற்றையும் அவர்களது வருவாயின் ஊற்றுக்கண்களையும் அளவையும், அவர்களுடைய பதவியையும் பண்பாட்டுத் தரத்தையும் பொறுத்து வேறுபடுகின்றன.

வர்க்கங்களின் அடிப்படை அடையாளத்தை, உற்பத்திச் சாதனங்கள்பால் மனிதர்களுக்கு உள்ள உறவை, பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் வேண்டுமென்றே விட்டுவிடுகிறார்கள். மனிதர்கள் எதிர்நிலையான வர்க்கங்களாகப் பிரிவுபடுவதை விளக்குவது உண்மையில் இந்த அடையாளமே அன்றோ? பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் சொல்வதுபோல மனிதர்களை அவர்களுடைய வருமானங்களையோ, சம்பளத்தின் அளவையோ, தேர்ச்சியின் தரத்தையோ மாத்திரம் கொண்டு நாம் பிரித்தால் ஒரு அல்லது இன்னொரு வர்க்கம், உதாரணமாக இயந்திரத் தொழிற்சாலைத் தொழிலாளிகள் சமூகத்தின் மிக மிக வெவ்வேறு படிவுகளாகச் சிதறி விடுவார்கள். அப்போது, ஒன்றிணைந்த ஒரே வர்க்கம் என்ற வகையில் பாட்டாளி வர்க்கம் பூர்ஷ்வா வர்க்கத்திற்கு, ஏகபோக மூலதனத்திற்கு, புறநிலையாக

எதிர்நிற்கிறது, அதனுடன் சமரசப்படுத்த முடியாத போராட்டம் நிகழ்த்துகிறது என்பதைப் புரிந்துகொள்வது இயலாது.

சம்பளத்திலும் தேர்ச்சியிலும் பொருளியல் நிலையிலும் பண்பாட்டுத் தரத்திலும் பாட்டாளிகளுக்கு இடையே வித்தியாசங்கள் உள்ளனவா? கட்டாயமாக உள்ளன. எனினும் இந்த வித்தியாசங்கள் பாட்டாளிகளின் அடிப்படை வர்க்க அடையாளங்களை அகற்றிவிடுவதில்லை. அந்த அடையாளங்களாவன, அவர்களிடம் உற்பத்திச் சாதனங்கள் இன்மையும் பூர்ஷ்வாக்களால் அவர்கள் சுரண்டப்படுதலும்.

பூர்ஷ்வாச் சமூக இயலில் இதே அளவு பரவியுள்ளது ''சமுதாய இடப் பெயர்ச்சிச்'' சித்தாந்தம். வர்க்கங்களையும் வர்க்கப் போராட்டத்தையும் பற்றிய மார்க்ஸீயப் போதனையை நிராகரிப்பது இந்தச் ''சித்தாந்தத்தின்'' நோக்கம். இதை உருவாக்கியவர்கள் பின்வருமாறு வாதிக்கிறார்கள்: கார்ல் மார்க்ஸ் தமது நூல்களில் சென்ற நூற்றாண்டின் முதலாளித்துவத்தைப் பற்றி எழுதினர். இப்போழுதோ சூழ்நிலை மாறிவிட்டது. பூர்ஷ்வாச் சமூகம் முற்றிலும் வேறு வகையானது ஆகிவிட்டது. வர்க்கத் தடுப்புக்கள் அதில் அடித்துச் செல்லபட்டுவிட்டன, தேய்ந்து போய்விட்டன. எனவே தாழ்நிலையில் உள்ள, உடைமை அற்ற சமூகப் படிவுகள் உடைமையுள்ள படிவுகளாகத் தடையின்றி இடம் பெயர்வது நிகழ்ந்துகொண்டிருக்கிறது. இப்போது சமூகம் இயங்குவதாக, இடப்பெயர்ச்சி நிகழ்வதாக மாறிவிட்டது (இந்தச் சித்தாந்தம் ''சமுதாய இடப்பெயர்ச்சிச்'' சித்தாந்தம் எனப் பெயர் பெற்றது இதனுல் தான்). ஆதலால் அதில் ஒரு புறம் முதலாளிகளையும் மறு புறம் தொழிலாளிகளையும் முன்போலத் தேடுவது தற்போது கூடாது. இந்த வாதத்தை ஆதாரமாகக் கொண்டு பூர்ஷ்வாச் சித்தாந்தவாதிகள் தற்கால பூர்ஷ்வாச் சமூகத்தின் ''ஒருபடித்தான தன்மை'' பற்றியும் அதன் சமுதாய ''ஒருமை'' பற்றியும் ''வர்க்க ஒத்துழைப்பு'' பற்றியும் வர்க்கப் போராட்டத்தின் மறைவு பற்றியும் பேசுகிறார்கள்.

''வர்க்க ஒத்துழைப்புப்'' பிரசாரத்தில் தற்காலச் சீர்திருத்தவாதிகளும் வலதுசாரி சோஷலிஸ்ட் தலைவர்களும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளுக்குப் பெருத்த உதவி செய்துவருகிறார்கள். முதலாளித்துவச் சமூகத்தில் வர்க்கங்களின் தீவிரச் சமுதாயச் சமப்பாடு நிகழ்ந்துவருவதாக அவர்களும் வலிந்துரைக்

கிறார்கள். இதன் விளைவாக பூர்ஷ்வாச் சமூகத்தின் புதிய அமைப்பு ஏற்படுகிறது என்றும் ''நடு வர்க்கம்'' என்பது உருவாகிறது என்றும், இது பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் பாட்டாளி வர்க்கத்துக்கும் நடுவே இடைநிலை வகிக்கிறது என்றும் சமூகத்தில் முக்கியமான பங்கு ஆற்றுகிறது என்றும் அவர்கள் சொல்கிறார்கள். அவர்களது கருத்துப்படி அணித்தான வருங்காலத்தில் இந்த நடு வர்க்கம் பூர்ஷ்வாச் சமூகத்தின் எல்லா வர்க்கங்களையும் சமுதாயப் படிவுகளையும் உறிஞ்சித் தனக்குள் இழுத்துக்கொண்டுவிடும். இவ்வாறாக, சமரசப்படுத்த முடியாத முரண்பாடு உள்ள சமூகத்தின் வளர்ச்சி பகை வர்க்கங்களுக்கு இடையே போராட்டத்தின் விளைவாக அல்ல, அவை கலந்து ஒன்றாகிவிடுவதன் விளைவாகவே நிகழும் என்று அர்த்தமாகிறது. எனவே, அரசியல் ஆதிக்கத்தின் பொருட்டு, சோஷலிஸத்தின் பொருட்டுத் தொழிலாளி வர்க்கத்தின் போராட்டம் அனாவசியமானது, அர்த்தம் அற்றது.

தற்கால முதலாளித்துவத்துக்கும் 19ம் நூற்றாண்டின் முதலாளித்துவத்துக்கும் உள்ள முக்கியமான வேறுபாட்டை யாரேனும் மறுப்பது அரிதே. இந்தக் காலத்தில் பூர்ஷ்வாச் சமூகம் பெருத்த மாறுபாடுகள் அடைந்துள்ளது. ஆயினும் இந்த மாறுபாடுகள் முதலாளித்துவத்தின் அஸ்திவாரத்தைத் தொடவில்லை. உற்பத்திச் சாதனங்கள்மீது தனியார் சொத்துரிமையும் மனிதனை மனிதன் சுறண்டுவதுமே அந்த அஸ்திவாரம். முதலாளித்துவத்துக்கு இயல்பான முரண்பாடுகளையும் அவை அகற்றிவிடவில்லை. மாறாக முதலாளித்துவத்தின் வளர்ச்சி காரணமாக வர்க்க முரண்பாடுகள் உள்பட இந்த முரண்பாடுகள் மேலும் ஆழமும் கூர்மையும் அடைந்துள்ளன, புதிய முரண்பாடுகள் வேறு தோன்றியுள்ளன. எதிர்நிலையிலுள்ள வர்க்கங்கள் ''சமரசப்படுதல்'' பற்றிய எல்லா விதமான வலிந்துரைகளும் ஆதாரமற்றவை, பொய்த் தோற்றங்கள் என்பது வெளிப்பட்டுள்ளது.

### § 2. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகத்தில் வர்க்கப் போராட்டம்

எதிர்நிலையான, சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்கள் தோன்றுவதன் விளைவாகச் சமூகத்தில் வர்க்கப் போராட்டம் ஏற்படுகிறது. சமரசப்படுத்த முடியாத

வர்க்கங்கள் கொண்ட எல்லாச் சமூகங்களதும் வரலாறு வர்க்கங்களது போராட்டத்தின் வரலாறே ஆகும் என்று கார்ல் மார்க்ஸூம் பிரெடெரிக் எங்கெல்ஸூம் காட்டியிருக்கிறார்கள். மேலான வாழ்வைப் பெறவும் சுறண்டல், அடிப்படுத்தல் என்னும் விலங்குகளைக் கழற்றி எறியவும் நியாயமுள்ள, இன்பம் நிறைந்த சமூகத்தை நிறுவவும் ஒடுக்கப்பட்ட வர்க்கங்கள் செய்யும் முயற்சிகளின் விதிமுறைக்கு ஒத்த வெளியீடாக விளங்குகிறது இந்தப் போராட்டம். மறுபுறம், உழைப்பாளி மக்கள் திரளின் நடவடிக்கைகளை நசுக்கவும் தங்கள் பொருளாதார, அரசியல் ஆதிக்கத்தை நிலையாக வைத்திருக்கவும் ஆளும் வர்க்கங்கள் செய்யும் முயற்சிகள் இந்தப் போராட்டத்தைத் தோற்றுவித்துக் கூர்மைப்படுத்துகின்றன. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்களது பொருளாதார, அரசியல் நலன்களின் ஒற்றுமைப்பட இயலாமை காரணமாக விளைவதாகும் வர்க்கப் போராட்டம்.

வர்க்கங்களின் போராட்டம் தற்செயல் நிகழ்ச்சி என்றும், அராஜக மனப்பான்மை கொண்ட தனி நபர்களது, ''கலகக்காரர்களது'' நடவடிக்கைகள் காரணமாக அது ஏற்படுகிறது என்றும், எல்லா வகையான ஆத்திரச் செயல்களுக்கும் ஒழுங்கீனங்களுக்கும் அவர்கள் மக்களைத் ''தூண்டிவிடுகிறார்கள்'' என்றும் காட்டுவதற்கு பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் முயல்கிறார்கள். முதலாளித்துவச் சமூகத்தில் வர்க்கப் பிணக்குகள் இருப்பதை ஒருசில பூர்ஷ்வாச் சமூக இயலார் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் இந்தப் பிணக்குகளின் இயல்பு ''அசாதாரண உணர்ச்சி வேகம் கொண்டதாக'' இருக்கிறது என்று அதே சமயம் அவர்கள் வலிந்துரைக்கிறார்கள். வேறு வார்த்தைகளில் சொல்வதானால், அவர்களது எண்ணப்படி இந்தப் பிணக்குகள் ஆவேசம் கொண்டுள்ள மனிதர்களின் பல்வேறு உணர்ச்சிகளது வெளியீடுகளே ஆகும். சிறப்பான வருங்காலத்தின் பொருட்டு உழைப்பாளி மக்கள் திரள் புரியும் போராட்டம் முதலாளித்துவ அமைப்பைத் தாங்கிப் பேசும் இந்த நபர்களுக்கு அறிவுசான்ற வாழ்க்கை நியமங்கள் அனைத்தையும் முறிப்பது போலத் தோன்றுகிறது.

உண்மையிலோ, மனிதனை மனிதன் சுறண்டுவதும் ஒரு வர்க்கம் மற்றவற்றின் உழைப்பைத் தனதாக்கிக் கொள்வதுமே, மார்க்ஸீய-லெனினீயம் காட்டியிருப்பது போல, வர்க்கப்

போராட்டத்தின் காரணம் ஆகும். இதன் விளைவாகவே அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தில் அடிமைகளின் பயங்கரக் கிளர்ச்சிகள் நிகழ்ந்தன, நிலப்பிரபுத்துவ அமைப்பில் குடியானவர்களின் மாபெரும் போர்களும் விடுதலை இயக்கங்களும் நடந்தன, முதலாளித்துவச் சமூகத்தில் வர்க்கங்களின் கொடும் போராட்டம் நடந்துகொண்டிருக்கிறது.

வர்க்கப் போராட்டத்துக்குத் தனி வரலாறு உண்டு. ஒடுக்கப்பட்டவர்களும் உரிய பங்கை இழந்தவர்களும் நடத்திய ஆரம்பகால, தாமே கிளம்பிய, உணர்வு அற்ற, தொடர்பில்லாத நடவடிக்கைகளிலிருந்து தொடங்கிப் பாட்டாளி வர்க்கத்தின் பெருந்திரளான, ஒழுங்கமைக்கப்பட்ட தற்காலப் போராட்டமாக அது வளர்ந்திருக்கிறது. மார்க்ஸீய-லெனினீயக் கட்சியால் தலைமை தாங்கி நடத்தப் பெறும் தொழிலாளி வர்க்கம் சமூக வரலாற்றிலேயே எல்லாவற்றிலும் புரட்சிகரமான வர்க்கமாகத் திகழ்கிறது. முதலாளித்துவ அமைப்பில் நிகழும் வர்க்கப் போராட்டத்தின் சிறப்புத் தன்மைகளையும் அதன் விளைவுகளையும் இது நிர்ணயிக்கிறது. மனிதனை மனிதன் சுறண்டும் எல்லா வடிவங்களையும் ஒழிப்பதும் மனிதகுலம் அனைத்தையும் முதலாளித்துவ ஆட்சியிலிருந்து விடுவிப்பதும் சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவுவதுமே தொழிலாளி வர்க்கத்தின் இறுதிக் குறிக்கோள். சமூக வளர்ச்சிப் போக்கு முழுவதிலும் பாட்டாளி வர்க்கம் இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கடமையை நிறைவேற்றுவதற்கு ஆயத்தம் செய்யப்பட்டிருக்கிறது.

வர்க்கப் போராட்டம் பற்றி மார்க்ஸுக்கு முன்பும் சில பூர்ஷ்வா வரலாற்று அறிஞர்கள் கூறினர்கள். எனினும் இந்த நிகழ்ச்சிக்கு விஞ்ஞான விளக்கம் தர அவர்களால் முடியவில்லை. முதலாளித்துவத்தின் அஸ்திவாரங்களைத் தீண்டாத சிறு சீர்திருத்தங்களை பூர்ஷ்வாச் சமூகத்தில் செய்வதன் அவசியத்தைப் பற்றிப் பிரசாரம் செய்துவரும் தற்காலச் சீர்திருத்தவாதிகள் அனேகரது உரைகளிலும் ''வர்க்கப் போராட்டம்'' என்ற சிறப்புச் சொல்லைக் காணலாம். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் பற்றிய கோரிக்கையையும் தொழிலாளி வர்க்கம் அரசு அதிகாரத்தை வென்று பெற வேண்டும் என்பதையும் வர்க்கப் போராட்டத்தின் தன்மை குறித்த புரிவில் மார்க்ஸீயம்-

லெனினீயம் கட்டாயமாகச் சேர்க்கிறது. இதுவே அதைச் சீர்திருத்தவாதத்திலிருந்து தனிப் பிரித்துக் காட்டுகிறது.

முதலாளித்துவ அமைப்பில் பாட்டாளிகளின் வர்க்கப் போராட்டம் மூன்று பிரதான வடிவங்களில் நிறைவேற்றப்படுகிறது. அவையாவன: பொருளாதார, அரசியல், கொள்கைவாத வடிவங்கள். இந்தக் காரணத்தினுலேயே இந்தப் போராட்டம் சமூக வாழ்க்கையின் எல்லா முக்கியத் துறைகளையும் தன்னுள் அடக்கிவிடுகிறது.

பொருளாதாரப் போராட்டம் தொழிலாளர்கள் தங்கள் தொழிலுக்குரிய நலன்களுக்காக மேற்கொள்ளும் நடவடிக்கைகளில் வெளிப்படுகிறது. உழைப்பு நிலைமைகளையும் வாழ்க்கை நிலைமைகளையும் மேம்படுத்தவும், சம்பளத்தை உயர்த்தவும், சமூக இன்ஷூரன்ஸைச் செயல்படுத்தவும் இவைபோன்ற பிறவுக்காகவும் இத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படுகின்றன. வரலாற்று நோக்கில் பாட்டாளிகளின் வர்க்கப் போராட்டத்தின் முதலாவது வடிவம் ஆகும் இது. இந்தப் போராட்டம் நிகழ்கையில்தான் தொழிலாளர்களின் தொழில் வகைப்பட்ட ஸ்தாபனங்கள் தோன்றின, அவர்களது ஒருமைப்பாட்டு உணர்வும் பாட்டாளிகளின் அணிகளது ஒற்றுமையும் வலுவடைந்தன. தங்கள் வாழ்க்கை நிலைமைகளை மேம்படுத்துவதற்காக முயன்று வெற்றி அடைந்தவாறு தொழிலாளி வர்க்கம் ''அதோடு கூடவே உளவுறுதியிலும் அறிவிலும் அரசியல் நோக்கிலும் மேம்பட்டு, தனது விடுதலைப்படுத்தும் மாபெரும் லட்சியங்களை நிறைவேற்றுவதற்கு முன்னிலும் அதிகத்திறன் உள்ளது ஆகிவிடுகிறது''[1] என்று சுட்டிக் காட்டினுர் வி. இ. லெனின். ஆயினும் பொருளாதாரப் போராட்டம் ஒன்றுமட்டுமே தொழிலாளி வர்க்கத்தைச் சுறண்டலிலிருந்து விடுவிப்பதற்கான நிலைக்கு இட்டு வர முடியாது, ஏனெனில் பூர்ஷ்வா வர்க்கத்தின் அரசியல் ஆட்சி அதிகாரத்தை அது பாதிப்பதில்லை என அவர் குறித்தார்.

அரசியல் போராட்டம் பாட்டாளிகளது வர்க்கப் போராட்டத்தின் மிக உயர்ந்த வடிவமாக விளங்குகிறது. தனித் தனி முதலாளிகளுக்கு எதிராக அல்ல, பூர்ஷ்வா வர்க்கம்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 21, பக்கம் 319.

அனைத்துக்கும் எதிராக, அதன் அரசியல், பொருளாதார ஆதிக்கத்துக்கு எதிராக இந்தப் போராட்டம் நடத்தப்படுகிறது. வர்க்கப் போராட்டம் எப்பொழுது அரசியல் துறைக்குப் பரவுவதுடன் நில்லாமல் அரசியலிலேயே முதன்மையானதை—அரசு அதிகார அமைப்பை—எடுத்துக்கொள்கிறதோ அப்போதே அது மிக உயர்ந்த வளர்ச்சியை அடைகிறது என்பதை மார்க்ஸீய-லெனினீயம் அடிப்படையாகக் கொள்ளுகிறது. பாட்டாளி வர்க்கம் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு தனது சர்வாதிகாரத்தை நிலைநாட்டுவதே அரசியல் போராட்டத்தின் கடமை ஆகும். தொழிலாளி வர்க்கத்தின் அடிப்படை நலன்கள்—சுறண்டலில் இருந்தும் வறுமையில் இருந்தும் ஆன்மீக அடிமைத் தளைகளில் இருந்தும் அதன் விடுதலை—சோஷலிஸப் புரட்சியால் பூர்த்திசெய்யப்பெறும் அரசியல் போராட்டம் இன்றி நிறைவேற முடியாது என அனுபவம் காட்டுகிறது.

கொள்கைவாத, அல்லது சித்தாந்தப் போராட்டம் பூர்ஷ்வாச் சமூகத்தில் பாட்டாளிகள் நடத்தும் வர்க்கப் போராட்டத்தின் மூன்றாவது அடிப்படை வடிவம் ஆகும். கொள்கைவாதத் துறையில், ஆன்மீக வாழ்க்கையில் அது நிகழ்கிறது. பூர்ஷ்வா உணர்வின் செல்வாக்கிலிருந்தும், தனியார் சொத்துரிமையையும் மதத்தையும் சார்ந்த ஒழுக்க நெறியிலிருந்தும் பாட்டாளி வர்க்கத்தை விடுவிப்பது, மார்க்ஸீய-லெனினீயப் பிரபஞ்சக் கண்ணோட்டத்தின் உணர்விலும் பாட்டாளி வர்க்கச் சர்வதேசியவாத உணர்விலும் உழைப்பாளி மக்களைப் பயிற்றுவது—இவையே இந்தப் போராட்டத்தின் பிரதான லட்சியங்கள். கொள்கைவாதப் போராட்டத்தின் வளர்ச்சி உழைப்பினதும் மூலதனத்தினதும் நலன்களின் சமரசப்படுத்த முடியாத தன்மையை ஆழ்ந்த முறையில் புரிந்துகொள்ளப் பாட்டாளி மக்களுக்கு உதவுகிறது, தங்களுடைய நோக்கங்களையும் கடமைகளையும் பற்றிய உண்மையில் விஞ்ஞான ரீதியான புரிவை அவர்களுக்குத் தருகிறது, ஜனநாயகத்துக்காகவும் கம்யூனிஸக் குறிக்கோளை அடைவதற்காகவும் அவர்களுடைய செயலூக்கமுள்ள போராட்டத்தில் உதவி செய்கிறது.

பாட்டாளி மக்களது வர்க்கப் போராட்டத்தின் எல்லா வடிவங்களையும் ஒருமையிலும் பரஸ்பரத் தொடர்பிலும் பரஸ்பரச் சார்புத் தன்மையிலும் மார்க்ஸீய-லெனினீயவாதிகள்

ஆராய்கிருர்கள். வர்க்கப் போராட்டத்தின் எல்லா வடிவங்களையும் கையாள்வதன் வாயிலாக மட்டுமே பாட்டாளி வர்க்கம் சுறண்டுவோர்மீது வெற்றி பெற முடியும் என்பதைச் சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்தின் வரலாற்று நடைமுறை காட்டுகிறது.

வர்க்கங்களின் போராட்டத்தைப் பல்வேறு அரசியல் கட்சிகள் தலைமை தாங்கி நடத்துகின்றன. ஒரு அல்லது மற்றெரு திட்டவட்டமான வர்க்கத்தின் நலன்களை வெளியிடும் பொருட்டு இந்தக் கட்சிகள் வழக்கமாகத் தோன்றுகின்றன. உதாரணமாக முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குச் சமூகத்தின் பரிணமிப்பைச் செயல்படுத்தும் கடமை வரலாற்ருல் தொழிலாளி வர்க்கத்துக்கு அளிக்கப்பட்டது; இந்தத் தொழிலாளி வர்க்கம் உருவாகி, சுதந்திரமான போராட்ட அரங்கில் அடிவைத்த சகாப்தத்தில் தோன்றியது கம்யூனிஸ்ட் கட்சி.

சமூக வர்க்கத்துக்கும் அரசியல் கட்சிக்கும் உள்ள பரஸ்பரத் தொடர்பு எதில் வெளிப்படுகிறது? சுருங்கக் கூறின் முழுமைக்கும் அதன் பகுதிக்கும் இடையே உள்ள உறவே ஆகும் இந்தப் பரஸ்பரத் தொடர்பு. ஒரு வர்க்கம் குறித்த அர்த்தத்தில் முழுமை என்ருல் அந்த வர்க்கத்துக்குத் தலைமை தாங்கும் கட்சி அதன் முன்னணியாக விளங்குகிறது, இந்த வர்க்கத்தின் பகுதி ஆகிறது. வழக்கமாக ஒவ்வொரு வர்க்கமும் தனக்கே உரிய கட்சியை அமைக்கிறது. இந்தக் கட்சி அதன் அடிப்படை நலன்களை வெளியிடுகிறது. அரசியல் போராட்டத்தில் இந்த நலன்களைப் பாதுகாக்கிறது. அது முன்னணி வர்க்கமாக இருந்தால் அதன் கட்சியின் கொள்கையும் நோக்கங்களும் செயல் திட்டமும் சமூக முன்னேற்றத்துக்கு உரிய கோரிக்கைகளை வெளியிடுகின்றன, அவற்றை ஆதரித்துப் போராடுகின்றன. வாழ்ந்து தீர்ந்துவிட்ட, பிற்போக்கான வர்க்கங்களின் கட்சிகளோ, உதாரணமாகத் தற்கால பூர்ஷ்வா வர்க்கத்தின் கட்சிகளோ எனில், சமூக வளர்ச்சிக்கு உரிய உடனடித் தேவைகளுக்கு எதிராகச் செயல்படுகின்றன. வரலாற்றின் இயல்பான போக்கை எதிர்த்துச் செயல் புரிய அவை முயல்கின்றன.

தற்போது முதலாளிகளின் வர்க்கத்துக்குப் பல்வேறு கட்சிகள் உள்ளன. எடுத்துக்காட்டாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இரண்டு முக்கியக் கட்சிகள் நிலவுகின்றன. டெமாக்ரடிக்

கட்சி, ரிபப்ளிகன் கட்சி என்பவை அவை. பிற முதலாளித்துவ நாடுகளிலும் அனேக பூர்ஷ்வா அரசியல் கட்சிகளும் குழுக் களும் உள்ளன. ஆனால் பூர்ஷ்வாக் கட்சிகள் பெயர்களில் எவ்வளவுதான் வெவ்வேறாக இருப்பினும், ஒரு சில தனிப்பட்ட பிரச்சினைகளில் அவை ஒன்றுக்கு எதிராக மற்றொன்று எவ்வளவு தான் செயல்படினும், முடிவில் பார்க்கும்போது அவை முதலாளித்துவத்தின் நலன்களையே வெளியிடவும் பாதுகாக்க வும் செய்கின்றன, தொழிலாளி வர்க்கத்துக்கும் பொதுமக்கள் திரளுக்கும் எதிரிகளாகவே விளங்குகின்றன.

தொழிலாளி வர்க்கத்தினதும் உழைப்பாளி மக்கள் அனைவர தும் லட்சியத்துக்காக முடிவுவரை ஒத்தியைந்த வகையில் போராடுபவை கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளே ஆகும். அவற்றின் இறுதிக் குறிக்கோள் கம்யூனிஸச் சமூகத்தை நிறுவு வதுதான். தங்கள் செயல்களுக்கு அவை வழிகாட்டியாகக் கொண்டிருப்பவை தற்காலத்தின் மிக மிக முற்போக்குள்ள போதனையான மார்க்ஸீய-லெனினீயமும் தொழிலாளி வர்க்கத்தின் கொள்கைவாதமுமே. பாட்டாளி வர்க்கம் தனது சர்வாதிகாரத்தின் பொருட்டு, புதிய உலகை நிறுவும் பொருட்டு நடத்தும் போராட்டத்தின் எல்லாக் கட்டங்களிலும் அதன் வழியை ஒளியுறுத்துகிறது புரட்சிகர மார்க்ஸீயச் சித்தாந் தம். ''நமது சகாப்தத்தின் அறிவும் கௌரவமும் மனச்சான் றும்''—இந்தச் சிறந்த சொற்களில் வி. இ. லெனின் கம்யூனிஸ்டு கள்-போல்ஷெவிக்குகளின் கட்சியை வருணித்தார். சமூக வளர்ச்சி அனுபவம் காட்டுவது என்ன என்றால், தொடக்கத்தில் தொழிலாளி வர்க்கத்தின் முன்னணி வரிசையாகத் தோன்றும் கம்யூனிஸ்ட் கட்சி, சோஷலிஸத்தின் அடித்தளத்தில் சமூக-பொருளாதார வாழ்வின் மிக ஆழ்ந்த மாற்றங்கள் நிகழ்கை யில், கம்யூனிஸத்தை நிறுவும் உழைப்பாளி மக்களின் முன்ன ணியாக விதி முறைப்படி மாறிவிடுகிறது.

வர்க்கப் போராட்டத்திற்குரிய விதிகள், பூர்ஷ்வாக் கொள் கைவாதிகளும் அரசியல்வாதிகளும் அந்த உண்மையை எவ் வளவுதான் மறுத்தாலும், தற்போதைய முதலாளித்துவ நிலை மைகளில் முழு ஆற்றலுடன் செயல்படுகின்றன. முதலாளித்துவ உலகின் சமரசப்படுத்த முடியாத பகைமைகளும் முரண் பாடுகளும் எல்லா வர்க்கப் பிணக்குகளும் ஏகாதிபத்தியச் சகாப் தத்தில் அசாதாரணமாகக் கூர்மை அடைந்துவிட்டன. இதைத்

தற்செயல் எனக் கருதலாகாது என்று சொல்லவே வேண்டிய தில்லை.

மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சியின் விளைவாக, அதிலும் இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு சிறப்பாக, முதலாளித்துவ ஆதிக்கப் பிரதேசம் வெகுவாகக் குறைந்து விட்டது. அனேக ஐரோப்பிய, ஆசிய நாடுகளிலும் க்யூபாவிலும் சோஷலிஸப் புரட்சிகள் வெற்றி அடைந்துள்ளள. பல்வேறு கண்டங்களைச் சேர்ந்த 14 அரசுகள் உறுப்பினர்களாக இருக்கும் சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு வளர்ந்து வலு மிகுந்து வருகிறது. விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் மற்ற நாட்டினர் நடத்தும் போராட்டத்தில் அவர்களுக்கு அது வழி காட்டுகிறது.

ஏகாதிபத்தியத்தின் காலனி அமைப்பு தகர்ந்து சிதறும் செயல்முறை தற்போது பூர்த்தி ஆகிக் கொண்டிருக்கிறது. இரண்டாவது உலக யுத்தத்துக்கு முன்பு காலனி வல்லரசுக ளின் மேலாதிக்கத்தில் சுமார் 150 கோடி மனிதர்கள் இருந்தார் கள். தற்போதோ காலனிகளில் தொடர்ந்து போராட்டம் நடத்திக்கொண்டிருப்பவர்கள் சுமார் 3 கோடி 70 லட்சம் பெயர்தாம். பதிற்றுக்கணக்கான புது அரசுகள் காலனி ஆட்சியை அகற்றி அரசியல் விடுதலை பெற்ற பின் சுதந்திர வளர்ச்சிப் பாதையில் முன்னேறத் தொடங்கியுள்ளன.

தற்கால நிலைமைகளில் சோஷலிஸம் உலகம் முழுவதிலும் உள்ள உழைப்பாளி மக்களால் மேலும் மேலும் அதிகமாக விரும் பப்படுகிறது என வாழ்க்கை காட்டுகிறது. பொருளாதார, பண்பாட்டுக் கட்டுமானம், விஞ்ஞானம், தொழில்நுட்பம், தொழிலாளியின் வாழ்க்கை, தினசரித் தேவைகள் ஆகிய துறைகளில் உலகின் முதல் சோஷலிஸ நாடு ஆகிய சோவியத் யூனியனும் சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு முழுவதுமே அடைந்துள்ள, அடைந்துவரும் வெற்றிகள் உழைப்பாளி மக்கள் அனைவரதும் கவனத்தைக் கவர்கின்றன. சோவியத் யூனியனும் பிற சோஷலிஸ நாடுகளும் கடைப்பிடித்துவரும் சமாதானப் பற்றுள்ள வெளிநாட்டுக் கொள்கை உலகின் எல்லாப் பகுதி களையும் சேர்ந்த சாதாரண மனிதர்களின் பாராட்டையும் ஆதரவையும் பெற்றுவருகிறது.

20ம் நூற்றாண்டின் முற்பாதியின் இறுதியில் உலக அரங்கில் சக்திகளின் புதிய ஒப்பு நிலை உருவாயிற்று. வரலாற்றுச் செயல்

முறையை இயக்கி நடத்தும், அதன் போக்கையும் திசையையும் தீர்மானிக்கும் சக்தியாகத் தற்போது விளங்குகிறது சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு. அதே சமயம் முதலாளித்துவம் தான் முன்பு வகித்துவந்த தலைமை நிலையை இழந்து, முடிவான, முழுமையான அழிவை நோக்கி இடைவிடாமல் சரிந்து கொண்டிருக்கிறது. முதலாளித்துவ உற்பத்தி முறையின் எல்லா முரண்பாடுகளும், முதன்மையாக அதன் அடிப்படை முரண்பாடு—உற்பத்தியின் சமூகத்தன்மைக்கும் உரிமையாக்கிக் கொள்ளுவதன் தனியார் வடிவுக்கும் இடையில் உள்ள முரண்பாடு—இறுதியான கூர்நிலை அடைவது ஏகாதிபத்தியத்தின் தன்மையாக விளங்குகிறது.

விற்பனைச் சந்தைகளுக்காகவும் செல்வாக்கு மண்டலங்களுக்காகவும் முதலாளித்துவ நாடுகளுக்கு இடையே போராட்டம் தற்போது மேலும் மேலும் அதிக இறுக்கம் அடைந்து வருகிறது. சங்கடமான நிலைமையிலிருந்து வெளியேறும் வழியைக் கண்டுபிடிக்க ஏகாதிபத்தியவாதிகள் சந்தேகமின்றி முயன்றுவருகிறார்கள். முதன்மையாக, புதிய உலக யுத்தத்துக்கு முஸ்தீப்புக்கள் செய்வதன் வாயிலாகவும் பொருளாதாரத்தை இராணுவமயம் ஆக்குவதன் (யுத்தகால நிலைமைகளுக்கு ஏற்ப மாற்றி அமைப்பதன்) வாயிலாகவும் இந்த வழியை அவர்கள் தேடுகிறார்கள்.

பிரதான முதலாளித்துவ நாடுகளின் இராணுவ பட்ஜெட்டுகளின் அதிகரிப்பும் வரிகள் மிகுதியாக்கப்படுதலும் தொழிலாளர்கள், குடியானவர்களின் தோள்கள்மீது பாரமான சுமையாக அழுத்துகின்றன. இப்பொழுது போல இவ்வளவு டதிக அளிவில் அவர்கள் முன் ஒருபோதுமே சுறண்டப்பட்டதில்லை.

முதலாளித்துவ உலகில் உழைப்பாளிகள் அனுபவிக்கும் இன்னொரு பெருந்தொல்லை வேலையில்லாத் திண்டாட்டம் ஆகும். வளர்ச்சி மிக்க பூர்ஷ்வா நாடுகளில் லட்சோபலட்சம் மக்கள் வேலை வாய்ப்பு அற்றவர்களாக இருக்கிறார்கள். உழைப்பாளி மக்கள் வரவர அதிகமாகச் சுறண்டப்படுதல், அவர்களது வாழ்க்கைத் தரம் தாழ்தல், அவர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம் ஆகியவற்றின் விளைவாக முதலாளித்துவச் சமூகத்தில் வர்க்கப் போராட்டம் தீவிரம் அடைகிறது, சமுதாயப் பூசல்கள் கடுமையாகின்றன. தங்கள் உரிமைகளின் பொருட்டுத்

தொழிலாளர்களின் போராட்டம் தற்காலத்தில் மிக விரிவாகப் பரவிவிட்டது.

ஏகபோகக் கம்பெனிகளுக்கு எதிராக, அரசு-ஏகபோக மூல தனத்துக்கு எதிராக உழைப்பாளிகள் முதன்மையாகத் தாக்கு நடத்துகிருர்கள். சம்பள உயர்வையும் வேலைநாள் குறைப்பை யும் கோரித் தொழிலாளர்கள் நடத்தும் போராட்டங்கள் ஏகாதிபத்தியத்தின் கொள்கை அனைத்திற்கும் எதிரான போ ராட்டமாகத் தவிர்க்க இயலாதவாறு மாறி வருகிறது. வேறு விதமாகச் சொன்னல், முதலாளித்துவ நாடுகளைச் சேர்ந்த உழைப்பாளி மக்கள் பொருளாதாரக் கோரிக்கைகளோடு கூடவே மேலும் மேலும் அதிகப் பிடிவாதமாகவும் அடிக்கடியும் அரசியல் கோரிக்கைகளை முன்வைக்கிருர்கள். அரசியல் வேலை நிறுத்தங்களை ஒட்டி ஆர்ப்பாட்டங்களும் எதிர்ப்புப் பொதுக் கூட்டங்களும் வீதிகளில் போலீசாருடன் மோதல்களும் நிகழ் கின்றன. தொழிலாளர்கள் அரசியல் துறையிலும் கருத்துத் துறையிலும் மேலும் மேலும் முதிர்ச்சி அடைந்து வருவதை இவை எல்லாம் காட்டுகின்றன.

தற்காலப் பாட்டாளி மக்களின் வர்க்கப் போராட்டத்தி னுடைய தனிச் சிறப்பு வேலை நிறுத்தங்களின் வெகு ஜனத்தன்மை ஆகும். இப்போது நடப்பவை போன்ற இவ்வளவு நீடித்தவை யும் பங்குகொள்ளும் உழைப்பாளிகளின் பரப்பில் இவ்வளவு விரிந்தவையும் ஆன வேலை நிறுத்தங்களை முதலாளித்துவ உலகம் முன்னர் கண்டதே இல்லை. சமாதானத்திற்காகவும் ஆயுத ஒழிப்புக்காகவும் அனேக நாடுகளில் நடக்கும் விரிவான சர்வஜனநாயகப் பாதயாத்திரைகளுடன் தொழிலாளர்களின் வேலை நிறுத்தங்களும் இணைக்கப்படுவது இந்தச் சந்தர்ப்பத் தில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது ஆகும். ஏகாதிபத்தியவாதி களின் போர் முஸ்தீப்புக்கள் தொழிலாளர்களின் நடவடிக் கைகளைக் கட்டுப்படுத்துகின்றன, சில வேளைகளில் இடை முறித்தும் விடுகின்றன.

தொழிலாளர்களின் சக்திகளைப் பிளவுபடுத்தவும் பலவீனப் படுத்தவும் பூர்ஷ்வா வர்க்கம் முயல்கிறது. இதற்காக எந்தச் சாதனங்களை வேண்டுமானுலும் கையாள அது தயங்குவ தில்லை. இந்த நோக்கத்துடன் அது அடக்குமுறைகளையும் சமு தாய வாய்வீச்சுக்கள், பொய்கள், அவதூறுகள் போன்ற சாத னங்களையும் ஒன்று மாற்றி ஒன்ருகப் பிரயோகிக்க முயல்கிறது.

சோஷல்-டெமாக்ரடிக் கட்சியின் வலதுசாரித்தலைவர்களும் திரிபுவாதிகளும் ''இடதுசாரிச்'' சந்தர்ப்பவாதிகளும் வறட்டுச் சூத்திரவாதிகளும் குறுகிய பிரிவுவாதிகளும்கூடத் தொழிலாளர் இயக்கத்தின் ஒற்றுமையைக் குலைக்கிறார்கள். திரிபுவாதிகள் வர்க்கப் போராட்டம் பற்றிய மார்க்ஸீயச் சித்தாந்தத்தைத் திரித்துக் கூற முயல்கிறார்கள். உழைப்பாளிகளுக்கும் முதலாளிகளுக்கும் இடையே ''வர்க்கச் சமாதானம்'' பற்றி அவர்கள் பிரசாரம் செய்கிறார்கள். இவ்வாறு செய்வதன் மூலமே தொழிலாளி வர்க்கத்தின் கவனத்தை அரசியல் போராட்டத்தின்பாலிருந்து வேறு புறம் திருப்புகிறார்கள். ''இடதுசாரிச்'' சந்தர்ப்பவாதிகள் பாட்டாளி வர்க்கத்தை மையமாகக் கொண்டு புரட்சிச் சக்திகள் ஒன்று சேர்வதற்குக் குந்தகம் விளைக்கிறார்கள். தொழிலாளி வர்க்கத்தின் ஒரு சில நாட்டினப் பிரிவுகளை மற்றவைக்கு எதிர் நிறுத்துகிறார்கள். இதன் வாயிலாகவே சர்வதேசப் பாட்டாளி வர்க்க இயக்கத்தின் தாக்குச் சக்தியைக் குறைக்கிறார்கள். மார்க்ஸீய-லெனினீயப் போக்கிலிருந்து ''வலதுசாரிப்'' பிறழ்ச்சியையும் ''இடதுசாரிப்'' பிறழ்ச்சியையும் எதிர்த்து ஒத்தியைந்த போராட்டம் நடந்துவதால் தான், திரிபுவாதம், வறட்டுச் சூத்திரவாதம் ஆகியவற்றின் எல்லா வெளிப்பாடுகளையும் எதிர்த்துப் போராடுவதால் தான் தொழிலாளி வர்க்கத்தின் சர்வதேச ஒற்றுமை பலப்படும்.

கடந்த சில ஆண்டுகளில் முதலாளித்துவ நாடுகளைச் சேர்ந்த தொழிலாளி வர்க்கம் அனேக முக்கிய வெற்றிகளைப் பெற்றிருக்கிறது. புதிய உலக யுத்த நெருப்பை மூண்டெரியச் செய்வதற்கான ஏகாதிபத்தியச் சூழ்ச்சிகள் தகர்க்கப்பட்டுவிட்டது இவற்றில் மிக முதன்மையானது. இதேபோல, அனேக முதலாளித்துவ நாடுகளில் உழைப்பாளிகள் தங்கள் தனித்தனிப் பொருளாதாரக் கோரிக்கைகள், உதாரணமாகச் சமுதாயச் சட்டத் தொகுப்பு பற்றிய கோரிக்கைகள் நிறைவேற்றப்படுமாறு செய்திருக்கிறார்கள்.

முதலாளித்துவ நாடுகளில் உள்ள தொழிலாளி வர்க்கம் பெருந்தொகையான ஸ்தாபனங்கள் கொண்டது. அதற்குத் தொழிற்சங்கங்கள் உள்ளன. இவை பாட்டாளி மக்களின் மிகப் பெரிய வெகு ஜன ஸ்தாபனங்கள். உதாரணமாக, உலகத் தொழிற்சங்க சம்மேளனத்தில் சோஷலிஸ நாடுகளையும் முதலா

ளித்துவ நாடுகளையும் அண்மையில் சுதந்திரம் பெற்ற நாடுகளையும் சேர்ந்த தொழிற்சங்கங்களின் 14 கோடி உறுப்பினர் ஒன்றிணைந்துள்ளனர். பல்வகைக் கூட்டுறவு, பண்பாட்டு ஸ்தாபனங்களும் சங்கங்களும் தொழிலாளர்களுக்கு இருக்கின்றன. தொழிலாளர்களைப் பயிற்றுவதிலும் ஒற்றுமைப்படுத்துவதிலும் ஒழுங்கமைப்பதிலும் அவை எல்லாம் ஏதேனும் ஓர் அளவுக்குப் பங்காற்றுகின்றன. தங்கள் உரிமைகளுக்காகத் தொழிலாளர்கள் நடத்தும் போராட்டங்களுக்கு உதவுகின்றன.

பாட்டாளி வர்க்கத்தின், எல்லா நாட்டினங்களையும் சேர்ந்த உழைப்பாளி மக்கள் திரளின் புரட்சிகர நடவடிக்கைகளைத் தலைமைதாங்கி நடத்துகின்றன கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகள். இவை தொழிலாளி வர்க்கத்தின் முன்னணியிலுள்ள, யாவற்றிலும் அதிக ஒழுங்கமைப்பு கொண்ட, யாவற்றிலும் மிகுந்த உணர்வு படைத்த பிரிவாக, மக்களின் கூட்டான அரசியல் தலைமையாக, வழிகாட்டியாகத் திகழ்கின்றன. தற்போது உலகத்தில் 88 கம்யூனிஸ்ட் கட்சிகள் உள்ளன. சுமார் 5 கோடி மனிதர்கள் இவற்றில் உறுப்பினர்களாக இருக்கிறார்கள்.

தற்போதைய காலக்கட்டத்தில் வர்க்கப் போராட்டத்தின் வடிவங்களில் ஒன்றாக விளங்குவது வெவ்வேறு சமூக அமைப்புக்கள் கொண்ட அரசுகளின் சமாதான சகவாழ்வு ஆகும். சோஷலிஸ அமைப்புக்கும் முதலாளித்துவ அமைப்புக்கும் இடையே பொருளாதாரப் போட்டி என்ற முறையில் செயல்படுவது இதன் சிறப்பு. முதலாளித்துவத்துடன் பொருளாதாரப் போட்டியில் சோஷலிஸ அமைப்பின் வெற்றிகள், சர்வதேச இறுக்கத்தைத் தளர்த்தவும் புதிய உலக யுத்தம் மூளாதவாறு தடுக்கவும் நடக்கும் போராட்டம் ஆகியவை ஏகாதிபத்திய அடக்கு முறையிலிருந்து தங்கள் சமுதாய விடுதலையின் பொருட்டு முதலாளித்துவ நாடுகளின் உழைப்பாளி மக்களதும் ஒடுக்கப்பட்ட மக்களதும் போராட்டம் விரிவாக நடப்பதற்குச் சாதகமான நிலைமைகளைத் தோற்றுவிக்கும்.

எதிர்நிலையான சமூக-பொருளாதார அமைப்புக்கள் ஆகிய சோஷலிஸமும் முதலாளித்துவமும் கொள்கைவாதத் துறையில் கடுமையான போராட்டம் நிகழ்த்திவருகின்றன. இந்தத் துறையில் சமாதான சகவாழ்வு இருக்க முடியாது. அதே போல, சுரண்டுவோருக்கும் சுரண்டப்படுவோருக்கும், அடக்குமுறை நடத்துவோருக்கும் அடக்கப்படுவோருக்கும் இடையில் உள்ள

உறவுகளிலும் சமாதான சக வாழ்வு நிலவ முடியாது. ஏனெனில் இவர்களுக்கு இடையே நடக்கும் போராட்டம் சமரசப்படுத்த முடியாதது.

அரசியல், பொருளாதார, பண்பாட்டுக் கட்டுமானத்தின் துறைகளில் சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு பெறும் நிறைவேற்றங்கள், முதலாளித்துவ நாடுகளில் தொழிலாளர் இயக்கம் புது வெற்றிகள் பெறுவதற்கு ஏற்ற சாதக நிலைமை களை உருவாக்குகின்றன. காலனிகள், ஆதீன நாடுகள் ஆகிய வற்றின் மக்கள் தங்கள் விடுதலைக்காக நடத்தும் போராட்டத் தையும் இந்த நிறைவேற்றங்கள் எளிதாக்குகின்றன. மறு புறம் புரட்சிகரத் தொழிலாளர் இயக்கம் தேசீய விடுதலை இயக்கம், இவற்றின் வளர்ச்சி சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்புக்கு விறல் மிக்க ஆதரவாக விளங்குகிறது.

## § 3. சோஷலிஸக் கட்டுமானக் காலப்பகுதியில் வர்க்கங்களும் வர்க்கப் போராட்டமும்

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் நிலைநாட்டப்படுவது வர்க்கப் போராட்டம் நின்றுவிட்டதாகச் சற்றும் அர்த்தப் படாது. அனேகச் சந்தர்ப்பங்களில் இந்தப் போராட்டம் சிறப் பாகக் கடுமையான வடிவங்களைக் கூட மேற்கொள்ளக் கூடும். ''மாபெரும் முன்முயற்சி'' என்னும் தமது நூலில் வி. இ. லெனின் இதுபற்றிப் பின்வருமாறு எழுதினர்: ''அரசியல் அதிகாரத்தை வென்று பெற்றபின் பாட்டாளி வர்க்கம் வர்க்கப் போ ராட்டத்தை நிறுத்திவிடுவதில்லை. மாருக, வர்க்கங்கள் அழிந்து விடும் வரை அதை மேலும் தொடர்ந்து நடத்துகிறது, ஆனல் வேறு சூழ்நிலையில், வேறு வடிவத்தில், வேறு சாதனங்களைக் கொண்டு என்று கூறவே வேண்டியதில்லை.''[1]

அரசியல் அதிகாரம் தொழிலாளர்கள் கைக்கு மாறிவிட்ட பின் உள்ள சகாப்தத்தில் வர்க்கப் போராட்டம் நிலவுவதற்கு என்ன காரணம்? முதன்மையான காரணம், சோஷலிஸப் புரட்சி யால் வீழ்த்தப்பட்ட சுறண்டும் வர்க்கங்கள் இன்னும் சிறிது காலம்வரை ஓரளவு வலிமை படைத்திருக்கின்றன என்பதே.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 39, பக்கம் 15.

சுறண்டும் வர்க்கங்களின் விரிவான சர்வதேசத் தொடர்புகள், அவற்ருல் சேமிக்கப்பட்டுள்ள செல்வம், அறிவு ஆகியவற்ருலும், இடைவிடாது முதலாளித்துவத்தைத் தோற்றுவிக்கும் சிறுரகப் பொருள் உற்பத்தியாலும் இந்த வலிமை வரையறுக்கப்படுகிறது.

சோஷலிஸப் புரட்சி நடந்த நாடு வழக்கமாக அனேக ஆண்டுகள்வரை பல்வகை அமைப்பு உள்ளதாக இருந்து வருகிறது என்பதை அனுபவம் காட்டுகிறது. உதாரணமாக, சோவியத் ருஷ்யாவில் பாட்டாளி வர்க்க ஆட்சியின் தொடக்க ஆண்டுகளில் ஐந்து விதங்கள் வரை விவசாய-பொருளாதார அமைப்புக்கள் கணக்கிடப்பட்டன. யாவற்றிலும் தொன்மையான தந்தைவழி அமைப்பு முதல் யாவற்றிலும் புதியதும் புரட்சியால் தோற்றுவிக்கப்பட்டதுமான சோஷலிஸ அமைப்பு வரைஇவற்றில் இருந்தன. இவற்றில் ஒவ்வொரு அமைப்புக்கும் ஆதரவாக நிற்கின்றன திட்டவட்டமான சமுதாயச் சக்திகள், வர்க்கங்கள். அவற்றின் நலன்கள் அடிக்கடி ஒன்றுக்கொன்று நேர் எதிரானவை.

சோஷலிஸப் புரட்சியின் வெற்றிக்குப் பிறகு முதன்மையாகத் தொழிலாளி வர்க்கம், உழைக்கும் குடியானவர்கள், நகர, கிராம பூர்ஷ்வாக்கள் போன்ற வர்க்கங்கள் இருப்பது சமூகத்தின் சமுதாய அமைப்புக்கு இயல்பாக உள்ளது. புரட்சிகர மாற்றத்தின் விளைவாக அவற்றின் நிலைமையும் அதற்கேற்ப நாட்டில் வர்க்கச் சக்திகளின் ஒப்புநிலையும் சாராம்சத்தில் மாறுகின்றன. தொழிலாளி வர்க்கம் ஆளும் வர்க்கமாக, உற்பத்திச் சாதனங்களின் உடைமையாளியாக மாறிவிடுகிறது. உழைக்கும் குடியானவர்கள் (பண்ணையாட்களும் ஏழை விவசாயிகளும் நடுத்தர விவசாயிகளும்) நிலப்பிரபுக்களின் சுறண்டலிலிருந்து விடுபட்டு விடுகிருர்கள். எனினும் குலாக்குகள்(கிராம பூர்ஷ்வாக்கள்) தரப்பிலிருந்து அடக்கு முறைக்கு இன்னும் ஆளாக்கப்படுகிருர்கள். விளைவாக உழைக்கும் குடியானவர்கள் தொழிலாளி வர்க்கத்தின் கூட்டாளிகளாகச் செயல்படுகிருர்கள். குலாக்குகளோ அதன் பகைவர்களது நிலையை மேற்கொள்கிருர்கள். ஏற்கனவே கூறப்பட்டது போல, புரட்சியால் தகர்க்கப்பட்ட முதலாளிகள் வர்க்கத்தின் மீதமிச்சங்களும் நாட்டில் தொடக்கக் காலத்தில் எஞ்சியிருக்கின்றன. பாட்டாளி வர்க்க ஆட்சியை இவை உக்கிரமாக எதிர்க்கின்றன. சக்திகளின் இம்

மாதிரி ஒப்புநிலை வர்க்கப் போராட்டத்துக்கு இட்டுவராமல் இருக்க முடியாது. எனவேதான் வி. இ. லெனின், முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு நிகழும் காலப் பகுதியின் நிலைமைகளைக் கருத்தில் கொண்டு பின் வருமாறு கூறினார்: ''வர்க்கப் போராட்டம் தொடர்கிறது. அது தன் வடிவங்களைமட்டுமே மாற்றிக்கொண்டிருக்கிறது. பழைய சுறண்டுவோர் திரும்பி வர இயலக் கூடாது என்பதற்காக, தனித்தனியே சிதறிக் கிடக்கும் அரசியலறிவு அற்ற குடியானவர்களின் திரள் ஒரே சங்கமாக ஒன்றிணைய வேண்டும் என்பதற்காகப் பாட்டாளி வர்க்கம் நடத்தும் வர்க்கப் போராட்டம் இது.''[1]

அரசு அதிகாரம் பெற்றுவிட்ட, ஏழைக் குடியானவர்களுடன் ஒன்றுசேர்ந்து பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை ஸ்தாபித்துவிட்ட வர்க்கம் என்ற முறையில் தொழிலாளி வர்க்கம் இப்போது இந்தப் போராட்டத்தை நடத்துகிறது.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் நிலைமைகளில் ஆளும் கட்சியாக விளங்குகிறது கம்யூனிஸ்ட் கட்சி—தொழிலாளி வர்க்கத்தின் முன்னணி. சுறண்டுவோரின் எதிர்ப்பை நசுக்குதல், நகர, கிராம உழைப்பாளிகள் அனைவரையும் தன் தரப்பில் ஈர்த்துக்கொள்ளல் என்ற கடமையைத் தொழிலாளி வர்க்கம் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் ஒத்தியைந்த முறையில் நிறைவேற்றுகிறது.

வெற்றி அடைந்த பாட்டாளி வர்க்கத்தின் நாட்டில் வர்க்கப் போராட்டத்தின் கடுமையும் அதன் ஸ்தூல வடிவங்களும் ஆட்சியிலிருந்து அகற்றப்பட்ட சுறண்டும் வர்க்கங்களின் எதிர்ப்பினுடைய அளவையும் தன்மையையுமே முதன்மையாகப் பொறுத்திருக்கின்றன. சோவியத் ருஷ்யாவில் சோஷலிஸக் கட்டுமானத்தின் தொடக்க ஆண்டுகளில் பெற்ற அனுபவத்தைப் பொதுமைப்படுத்தி, முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு நிகழும் காலப்பகுதியில் வர்க்கப் போராட்டம் பின்வரும் முக்கிய வடிவங்களில் வெளிப்படுகிறது என்ற முடிவுக்கு வி. இ. லெனின் வந்தார்:

அ) சுறண்டுவோரின் எதிர்ப்பை நசுக்குதல். சோஷலிஸப் புரட்சியால் துடைத்தொழிக்கப்பட்ட பழைய பிற்போக்கான

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 41, பக்கம் 311.

வர்க்கங்களாகிய முதலாளிகள், நிலப்பிரபுக்களின் மீதமிச்சங்கள் புதிய ஆட்சியின் நடவடிக்கைகளைத் துவேஷத்துடன் எதிர்க்கின்றன, அதைத் திணற வைக்க முயல்கின்றன. இந்த நோக்கத்துடன் அவை சதியாலோசனைகளும், மறைமுக நாச வேலைகளும், அழிவு நடவடிக்கைகளும், இவை போன்ற பிறவும் ஏற்பாடு செய்கின்றன. எனவேதான் அவற்றின் எதிர்ப்பை நசுக்குவது அவசியம் ஆகிறது. தொழிலாளி வர்க்கம் வென்று பெற்ற நலங்களைப் பாதுகாப்பதற்கு இவ்வாறு செய்வது தேவைப்படுகிறது.

ஆ) **உள்நாட்டுப் போர்.** ஆட்சியிலிருந்து அகற்றப்பட்ட வர்க்கங்களின் எதிர்ப்பு குறித்த நிலைமைகளில் உள்நாட்டுப் போரை—ஒரு வர்க்கத்துக்கு எதிராக மற்றொரு வர்க்கத்தின் ஆயுதப் போராட்டத்தை—மூட்டி விடலாம். உதாரணமாக, இளம் சோவியத் ருஷ்யாவில் அவ்வாறே நடந்தது. உள்நாட்டுப் போர் நடக்கையில் தொழிலாளிகளும் குடியானவர்களும் கைகளில் ஆயுதங்கள் ஏந்தி, உள்நாட்டு, சர்வதேசியப் புரட்சி எதிர்ப்பாளர்களின் சக்திகளிடமிருந்து சோவியத் ஆட்சி அதிகாரத்தைக் காத்துப் போர் புரிந்தார்கள்.

இ) **குட்டி பூர்ஷ்வாக்களை, சிறப்பாகக் குடியானவர்களை ''நடுநிலைமைப்படுத்தல்.''** நகரிலும் கிராமத்திலும் உள்ள குட்டி பூர்ஷ்வாக்கள் மீதும் நடுத்தரக் குடியானவர்கள்மீதும் செல்வாக்கு செலுத்துவதற்காக, முதன்மையாக சோஷலிஸக் கட்டுமானத்தில் அவர்களைப் படிப்படியாக ஈடுபடுத்தும் நோக்கத்துடன் அரசு வாயிலாக அவர்களை வழிகாட்டி நடத்துவதற்காகத் தொழிலாளி வர்க்கம் நடத்தும் போராட்டமே இது. தகர்க்கப்பட்ட சுறண்டும் வகுப்பாரின் சக்திகளும் குடியானவர்கள் மீது செல்வாக்கு செலுத்தவும் அவர்களைத் தங்கள் நோக்கங்களுக்குப் பயன்படுத்திக் கொள்ளவும் முயல்கின்றன ஆதலால் இந்தப் போராட்டம் மேலும் சிக்கல் அடைகிறது.

ஈ) **பழைய நிபுணர்களைப் பயன்படுத்திக்கொள்ளல்.** வெற்றி பெற்ற தொழிலாளி வர்க்கம் பொருளாதாரம், பண்பாடு, இராணுவ விவகாரங்கள் முதலிய பல்வேறு துறைகளில் தேர்ச்சி பெற்ற அலுவலர்கள், நிபுணர்கள் மிகக் குறைவாக இருப்பதை ஆரம்ப காலத்தில் உணர்கிறது. தொழிலாளர்களையும் குடியானவர்களையும் விரைவாகப் பயிற்றி நிபுணர்கள் ஆக்கும் அதே வேளையில் பழைய பூர்ஷ்வா நிபுணர்களையும்

அது தேசியப் பொருளாதாரத்தில் ஓரளவுக்குப் பயன்படுத்திக் கொள்கிறது. இந்தக் காரியமும் போராட்டத்தின் மூலமாகவே நிறைவேற்றப்படுகிறது. இப்போராட்டம் சில வேளைகளில் கடுமையான வடிவங்களை மேற்கொள்கிறது.

உ) புது ஒழுங்கு பயிற்றல். பழைய ஒழுங்கு—அதாவது, அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ ஒழுங்கு—தடியாலும் பட்டினியாலும் புகுத்தப்பட்ட ஒழுங்கு என்ருர் வி. இ. லெனின். சோஷலிஸமோ, உழைப்பின்பாலும் அரசின் நலன்கள்பாலும் சமூக உறுப்பினர்களின் உணர்வு பூர்வமான உறவுகளின் அடிப்படையில்தான் வளரவும் வலுப் பெறவும் முடியும். புதிய, சோஷலிஸ ஒழுங்கைப் பயிற்றுவது கடினமான நீண்டகால வேலை. வாழ்ந்துதீர்ந்துவிட்டவை பழையவை ஆகியவற்றின் மிச்ச சொச்சங்களுக்கும் மூட நம்பிக்கைகளுக்கும் எதிராக, பூர்ஷ்வா ஒழுக்க நெறிக்கு எதிராக இடைவிடாத போராட்டம் நடத்துவது இதற்குத் தேவைப் படும்.

நாட்டில் இயந்திரத் தொழில் பெருக்கம் செய்யப்படுவதும் விவசாயம் கூட்டுப்பண்ணை முறையில் அமைக்கப்படுவதும் நிகழ்வதன் விளைவாக, புதிய, சோஷலிஸப் பொருளாதாரம் தோன்றுகிறது. சோஷலிஸச் சொத்துரிமை அதன் இரு வடிவங்களில்—சர்வஜன (அரசாங்க), குழுப்பொது (கூட்டுறவு-கூட்டுப்பண்ணை) வடிவங்களில்—நிலை பெறுகிறது. நகரத்திலும் கிராமத்திலும் சோஷலிஸ உற்பத்தி உறவுகள் வெற்றியடைந்து இறுதியாக நிலைபெறுகின்றன. சமுதாய வாழ்வின் எல்லாத் துறைகளிலும் சமூகத்தின் உறுப்பினர்களது ஒத்துழைப்பையும் பரஸ்பர உதவியையும் இயல்பாகக் கொண்டவை இவ்வுறவுகள். மனிதனை மனிதன் சுறண்டுவதும் சமுதாய நாட்டின அடக்குமுறையும் என்றென்றைக்கும் ஒழித்துவிடப்படுகின்றன.

சோஷலிஸக் கட்டுமானத்தின்போது சமூகத்தின் சமுதாய அமைப்பில் நேர்ந்த மாறுதல்களைப் பின்வரும் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன: 1913ம் ஆண்டு ருஷ்யாவில் சுறண்டும் வர்க்கங்கள் (நிலப்பிரபுக்களும், நகரப் பெரும் பூர்ஷ்வாக்களும் குட்டி பூர்ஷ்வாக்களும், வியாபாரிகளும் குலாக்குகளும்) நாட்டின் மொத்த மக்கள் தொகையில் 16.3 சதவிகிதம் இருந்தன. 1928ல் இவை 4.6 சதவிகிதமே இருந்தன. 1937க்குள் சோவியத் சமூகத்தில் இந்தச் சமுதாயக் குழுக்கள் முற்றிலும்

இல்லை. தனியாள் பண்ணைக் குடியானவர்களும் (குலாக்குகள் நீங்கலாக) கூட்டுறவு முறைப்படுத்தப்படாத குடிசைத் தொழில் உழைப்பாளிகளும் கைத்தொழிலாளிகளும் 1913ல் 66.7 சதவிகிதம் இருந்தார்கள். 1928ல் இவர்களது தொகை 74.9 சதவிகிதம் ஆயிற்று. 1939ல் அது 2.6 சதவிகிதமாகவும் 1959ல் 0.3 சதவிகிதமாகவும் குறைந்து விட்டது. 1959ம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்குப் புள்ளி விவரங்களின்படி நகரங்களையும் கிராமங்களையும் சேர்ந்த தொழிலாளிகளும் அலுவலகச் சிப்பந்திகளும் அவர்களுடைய குடும்பத்தினரும் மொத்த மக்கள்தொகையில் 68.3 சதவிகிதமும் கூட்டுப்பண்ணைக் குடியானவர்கள் 31.4 சதவிகிதமும் இருந்தார்கள்.

ஒருபுறம் உழைப்பாளி வர்க்கங்களுக்கும் மறு புறம் நகர, கிராம பூர்ஷ்வாக்களுக்கும் இடையே நிலவிய சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் ஆழ்ந்த பொருளாதார மாற்றங்களின் அடிப்படையில் அகற்றப்பட்டன. சோவியத் யூனியனில் சுறண்டும் வர்க்கங்கள் அடியோடு ஒழிக்கப்பட்டுவிட்டதை நடைமுறையில் இது குறித்தது.

விவசாயம் கூட்டுப்பண்ணை முறையில் அமைக்கப்பட்டது, தொழிலாளி வர்க்கம், அரசாங்கம், இவற்றின் தலைமையிலும் செயலூக்கமுள்ள ஆதரவுடனும் குடியானவர்களுக்கு இடையே சோஷலிஸக் கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சி, கட்சியின் சரியான மார்க்ஸீய-லெனினீயப் பொருளாதாரக் கொள்கை ஆகியன தொழிலாளி வர்க்கத்துக்கும் குடியானவர்களுக்கும் ஒற்றுமை வலுப்படவும் இவ்விரு வர்க்கங்களுக்குள்ளும் நட்பு உண்டாகவும் வழி வகுத்தன.

சோவியத் யூனியனில்தான் வரலாற்றிலேயே முதன்முதலாக சோஷலிஸம் முழுமையாகவும் மாற்ற முடியாத வகையிலும் வெற்றி அடைந்தது. சுறண்டலும் வர்க்க, நாட்டின அடக்குமுறையும் ஒழிக்கப்பட்டதன் அடிப்படையில் சோவியத் சமூகத்தின் குலைக்க முடியாத சமுதாய, அரசியல், கருத்து ஒற்றுமை உருவாயிற்று. மக்களினங்களின் நட்பும் சோஷலிஸ நாட்டுப்பற்றும் வலுவடைந்தன. சோஷலிஸத்துக்கான போராட்டத்தில் சோவியத் மக்களின் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த வெற்றிகள் இப்போது நன்கு காணக்கிடக்கின்றன. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிச் செயல்திட்டத்தில்

இந்த வெற்றிகள் சர்வாம்சரீதியாகப் பொதுமைப்படுத்தப் பட்டிருக்கின்றன.

சோஷலிஸத்துக்கு முற்பட்ட எல்லா வர்க்க அமைப்புக் களுக்கும் (அடிமைச் சொந்தக்கார அமைப்பு, நிலப்பிரபுத்து வம், முதலாளித்துவம்) சமுதாய முரண்பாடுகளும் வர்க்கப் போராட்டமும் ஆழமும் தீவிரமும் அடைவது இயல்பாக இருந் தது. கம்யூனிஸ அமைப்புக்கோ, வர்க்கங்களுக்கு இடையில் நிலவும் முக்கிய வேறுபாடுகள் படிப்படியாக அகற்றப்படு வதும், பிற்பாடு இந்த வர்க்கங்கள் நகர, கிராம உழைப்பாளி களின் ஒரே சமூகமாக ஒன்று கலந்துவிடுவதுமே வளர்ச்சி விதியாக விளங்குகின்றன.

கம்யூனிஸத்தின்பால் பகைமை பாராட்டும் வர்க்கங்களும் சமூகப் படிவுகளும் சோஷலிஸச் சமூகத்தில் கிடையா. அவை வெகு காலத்துக்கு முன்பே ஒழிக்கப்பட்டுவிட்டன. எனினும் சோஷலிஸத்துக்குப் பகையான கருத்துக்களையும் பழக்கவழக் கங்களையும் உணர்வுடனோ உணர்வின்றியோ வைத்துக்கொண்டி ருப்பவர்கள் இன்னும் நம்மிடையே இருக்கிறார்கள். சமூக சோஷலிஸ உடைமைபால் சூறையாடும் போக்கை (திருட்டுத் தனம், ஊதாரித்தனம், கள்ள வியாபாரம்) சிலர் கடைப்பிடிப்பது காணப்படுகிறது. உழைப்பைப் பற்றியும் சமூகத்தின்பால் பொறுப்பைப் பற்றியும் பழைய கருத்துக்கள் (சோம்பேறித் தனம், ஒட்டுண்ணித்தனம்) எதிர்ப்படுகின்றன. திருடர்கள், கள்ள வியாபாரிகள், பிற ஒட்டுண்ணிப் பேர்வழிகள் முதலி யோர் சமூகத்தில் தனி வர்க்கமாக அமைவது இல்லை, அமைய வும் முடியாது. சோஷலிஸத்தில் இவர்கள் வெறுமே தனித் தனி யான இழிகேடர்கள், காலிகள், சோவியத் மனிதன் என்ற பெயரை அவமதிப்பவர்கள், அவ்வளவுதான்.

அன்றாட வாழ்க்கையிலும் பழைமையின் மீத மிச்சங்கள் சோவியத் சமூகத்தில் காணப்படுகின்றன. மாதர்களை மதியா மை, நிலப்பிரபுத்துவ-பாய்கள் கால மிச்ச சொச்சங்கள் முத லியவற்றில் அவை வெளிப்படுகின்றன. நாட்டின மீத மிச்சங் களும் சில சந்தர்ப்பங்களில் சொரூபத்தைக் காட்டுகின்றன.

கம்யூனிஸத்துடன் போராடும் பூர்ஷ்வா உலகம் சோஷலி ஸச் சமூகத்தில் எஞ்சியுள்ள பழைமையின் மீத மிச்சங்களை ஆதாரமாகக் கொள்ள முயல்கிறது. முதலாளித்துவக் கொள் கைவாதிகளும் அரசியலாரும் இவற்றையே துணையாக நம்பி

யிருக்கிறார்கள். இந்த மீத மிச்சங்களை ஒழிப்பதில் சோவியத் மக்களின் முழுப் பெரும்பான்மை அக்கறை செலுத்துகிறது.

மக்களின் உணர்விலும் அன்றாட வாழ்க்கையிலும் எஞ்சியுள்ள முதலாளித்துவத்தின் மீதமிச்சங்களைத் துடைத்து அகற்றவும், புது மனிதனை—வருங்காலக் கம்யூனிஸச் சமூகத்தின் குடிமகனை—சர்வாம்சமாக, ஒத்திசைந்த முறையில் போதித்துப் பயிற்றவும் தேவையான பொருளியல், ஆன்மிக முதனிலைகள் கம்யூனிஸக் கட்டுமானச் செயல்முறையில் உருவாக்கப்படுகின்றன. கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைவாத வேலை இந்தத் துறையில் பெரும் பங்கு ஆற்றுகிறது.

### § 4. வர்க்க வேறுபாடுகளை முழுமையாக அகற்றுவதற்கான வழிகள்

சமூகத்தை ஒத்தநிலையான சமுதாயம் ஆக்குவதற்குப் பெரிய வளர்ச்சிப் பாதையைக் கடப்பது இன்றியமையாதது என்று விஞ்ஞானக் கம்யூனிஸத்தின் ஸ்தாபகர்கள் கற்பித்துள்ளனர். சமூகத்தின் வர்க்கப் பிரிவினையை அகற்றுவதற்கு இன்றியமையாத நிபந்தனைகளை விவரிக்கையில் பிரெடெரிக் எங்கெல்ஸ் ''டூரிங்குக்கு மறுப்பு'' என்னும் தமது நூலில் பின்வருமாறு எழுதினார்: ''... எந்தக் கட்டத்தில் உற்பத்திச் சாதனங்களும் பண்டங்களும் தனிப்பட்ட சமூக வர்க்கத்தால் உரித்தாக்கிக் கொள்ளப்படுதல்—அதோடு கூடவே அரசியல் ஆதிக்கமும் கல்வியிலும் ஆன்மீகத் தலைமையிலும் ஏகபோக உரிமையும்—அனாவசியம் ஆகிவிடுவது மட்டும் இன்றி, பொருளாதார, அரசியல், அறிவு வளர்ச்சிக்குத் தடையாகவும் விளங்குமோ, உற்பத்தி வளர்ச்சியின் அந்த உயர்ந்த கட்டத்தை அடைவது வர்க்கங்களை நீக்குவதற்குத் தேவையானது.''[1] பழைய, சுரண்டும் வர்க்கங்களை ஒழிப்பதற்கு ஏற்ற பொருளியல், ஆன்மீக முதனிலைகள் சோஷலிஸக் கட்டுமானத்தின் போது உருவாகின்றன. பிறகு, கம்யூனிஸம் நிறுவப்படும் செயல்முறையில், வர்க்க வேறுபாடுகளை அகற்றுவதற்கான நிலைமைகள் ஏற்படுகின்றன. சோவியத் யூனியனது மட்டும் அல்ல, உலக சோஷலிஸ நட்பு

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''டூரிங்குக்கு மறுப்பு'', நூல்திரட்டு, தொகுதி 20, பக்கம் 293.

மண்டலத்தைச் சேர்ந்த எல்லா நாடுகளினதும் வரலாற்று அனுபவம் இந்த உண்மையைக் காட்டுகிறது.

சோவியத் நாட்டில் சமூகத்தின் வர்க்கப் பிரிவினையை நீக்குவதற்கு அடி கோலியது மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி. நிலப்பிரபுக்கள், முதலாளிகள், பின்பு குலாக்குகள் ஆகியோர் கொண்ட சுறண்டும் வர்க்கங்கள் ஒழிக்கப் பட்டது இந்தத் திசையில் முக்கியமான அடிவைப்பாக விளங்கியது. சோவியத் யூனியனில் சுறண்டும் வர்க்கங்கள் ஒழிக்கப் பட்டதன் முக்கியத்துவம் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிச் செயல்திட்டத்தில் பின்வருமாறு விவரிக்கப்பட்டிருக்கிறது: ''சோஷலிஸம் மாபெரும் சமுதாயப் பிரச்சினைக்குத் தீர்வு கண்டுவிட்டது—சுறண்டும் வர்க்கங்களையும் மனிதனை மனிதன் சுறண்டுவதற்கு வித்தாயிருக்கும் காரணங்களையும் அது வேருடன் களைந்துவிட்டது. சோவியத் யூனியனில் இரண்டு நட்பார்ந்த வர்க்கங்கள்—தொழிலாளி வர்க்கமும் குடியானவர்களும்—உள்ளன. தவிர இந்த வர்க்கங்கள் தாமும் மாறிவிட்டன. சோஷலிஸ உடைமையின் இரண்டு வடிவங்களது பொதுமை தொழிலாளி வர்க்கத்தையும் கூட்டுப் பண்ணைக் குடியானவர்களையும் அருகே கொண்டுவந்துவிட்டது, அவர்களுடைய ஒற்றுமையை மேலும் வலுப்படுத்தியிருக்கிறது, அவர்களுடைய நட்பை அழிக்க முடியாதது ஆக்கியிருக்கிறது. மக்களிலிருந்து உதித்த, சோஷலிஸத்தின்பால் விசுவாசமுள்ள புதிய அறிவுஜீவிகள் வகுப்பு வளர்ந்திருக்கிறது.''

சோஷலிஸச் சமூகத்தில் வர்க்கங்களுக்கு இடையே கணிசமான வேறுபாடுகள் இன்னும் நிலவுகின்றன. இந்த வேறுபாடுகள் புறநிலையானவை. மக்களின் உணர்வையோ சித்தத்தையோ பொறுத்தவை அல்ல இவை. மேலிருந்து ஏதேனும் ஆணை பிறப்பிப்பதன் மூலம் இவற்றை நீக்கிவிட முடியாது. சோவியத் சமூகத்தின் வர்க்கப் பிரிவினைக்குக் காரணம் அரசாங்க உடைமை, கூட்டுறவு-கூட்டுப்பண்ணை உடைமை என்ற இரு வடிவங்கள் சோஷலிஸ உடைமைக்கு இருப்பதும் உற்பத்திச் சாதனங்கள்பால் தொழிலாளர்களுக்கும் குடியானவர்களுக்கும் உள்ள உறவில் இருக்கும் வித்தியாசமுமே ஆகும்.

சோவியத் யூனியனின் தொழிலாளி வர்க்கம் அரசாங்கத் தொழில் நிலையங்களில் வேலை செய்கிறது. தொழிற்சாலைகள், ஆலைகள், போக்குவரத்து, கட்டுமானம், அரசாங்கப் பண்ணை

கள் முதலிய இவை மக்கள் அனைவருக்கும் பொதுவான உடைமைகள். கூட்டுப்பண்ணைக் குடியானவர்களின் நிலைமை சற்று வேறானது. அவர்கள் கையாளும் உற்பத்திச் சாதனங்கள்—வேளாண்மைக் கருவிகள், உழைப்புக் கால்நடைகள் முதலியன—சமூகம் அனைத்திற்கும் அல்ல, உழைப்பாளிகளின் தனித் தனிக் குழுக்களுக்கே, கூட்டுப்பண்ணைகளுக்கே சொந்தமானவை. அதே சமயம் இந்தக் கூட்டுப்பண்ணைகள் மக்கள் அனைவருக்கும் பொதுவான சோஷலிஸ உடைமைகளுக்கும் பகுதிச் சொந்தக்காரர்களாக விளங்குகின்றன.

தொழிலாளர்களும் குடியானவர்களும் வருவாய் பெறும் முறையும் வருவாய்களின் தன்மையும் கொண்டுள்ள வேறுபாடும் இதனாலேயே நிச்சயிக்கப்படுகிறது. தொழிலாளி வர்க்கம் தனது உழைப்புக்கான ஊதியத்தை ரொக்க வடிவில் (சம்பளம்) பெறுகிறது. கூட்டுப்பண்ணையினரோ, பண்ட (விவசாய விளை பொருள்கள்) வடிவிலும் ரொக்க வடிவிலும் ஊதியம் பெறுகிறார்கள். இரு வகையினருக்கும் சம்பளம் உழைப்புக்கு ஏற்பவே தரப்படுகிறது. அதோடுகூட, கூட்டுப்பண்ணையினரனது வருவாயின் அளவு கூட்டுப்பண்ணையின் நிலைமையையும் பொருளாதார வளர்ச்சித் தரத்தையும் பொறுத்திருக்கிறது. அதன் மேம்பாட்டிற்கும் அரசாங்கத்திடமிருந்து கிடைக்கும் உதவி வளர்ச்சிக்கும் ஏற்ப கூட்டுப்பண்ணைகளில் உழைப்புக்கான ஊதியமும் அதிகரிக்கிறது. சம்பளம் ரொக்கமாகக் கொடுக்கப்படுவது தற்போது மேலும் மேலும் விரிவாகப் பரவிவருகிறது.

சோவியத் யூனியனில் எஞ்சியுள்ள, தொழிலாளி வர்க்கத்துக்கும் குடியானவர்களுக்கும் இடையே நிலவும் கணிசமான வேறுபாடுகள் வர்க்க எதிர்நிலைகளைக் குறிக்கவில்லை. கம்யூனிஸக் கட்டுமானம் நிகழ்கையில் சோஷலிஸ உடைமையின் இரு வடிவங்களதும் அமோகமான வளர்ச்சியின் அடிப்படையிலும் கூட்டுப்பண்ணை-கூட்டுறவுச் சொத்துக்கள் மேலும் மேலும் பொது உடைமை ஆக்கப்படுவதன் அடிப்படையிலும் தொழிலாளி வர்க்கமும் கூட்டுப்பண்ணைக் குடியானவர்களும் இன்னும் அதிகமாக நெருங்கி வருவது நிகழும்.

நடப்பு ஐந்தாண்டுகளில் (1966-1970) இந்த விஷயத்தில் நிறையக் காரியங்கள் செய்து முடிக்கப்படும். நகரங்களிலும் கிராமங்களிலும் வேலை நிலைமைகளும் வாழ்க்கை நிலைமைகளும் ஒன்றுக்கொன்று கணிசமாக நெருங்கிவர வகை செய்வது

நடப்பு ஐந்தாண்டுத் திட்டத்தின்படி மேற்கொள்ளப்பட்டிருக்கும் லட்சியம் ஆகும். விவசாய உழைப்பு இயந்திரமயமாக்கப்படுவதும், தொழில்மயமாக்கப்படுவதும், மின்சார வசதி பெறுவதும் மேலும் அதிகரிக்கும். குறித்த ஐந்தாண்டுக் காலத்தில் சமுதாய-அன்றாட வாழ்க்கைச் சேவைகளுக்காக மின்னுற்றலின் பயன்பாடு நகரங்களில் 1.6 மடங்கும் கிராமங்களில் 3 மடங்கும் அதிகமாகும். 1965ம் ஆண்டில் ஒவ்வொரு நகரவாசியும் கிராமவாசியை விட 4 மடங்கு அதிக மின்னுற்றலைப் பயன்படுத்தினுன் என்ருல், 1970ல் அவன் 2 மடங்கு மட்டுமே அதிகமாக இதைப் பயன்படுத்துவான். இன்றியமையாத நிலைமைகள் ஏற்படுவதன் அடிப்படையில் கூட்டுப்பண்ணையினருக்கு உத்தரவாதம் செய்யப்பட்ட மாதாந்தரச் சம்பளம் வழங்குவது அமுல்படுத்தப்படும். வேலையின் வகையையும் செய்வேலையின் அளவுமானத்தையும் பொறுத்து, அரசாங்கப் பண்ணைத் தொழிலாளர்களது சம்பளத் தரத்துக்கு இது ஒப்பாக இருக்கும்.

சோவியத் யூனியனில் தொழிலாளி வர்க்கத்தையும் கூட்டுப் பண்ணைக் குடியானவர்களையும் அருகே கொண்டுவரும் செயல்முறை நடந்துகொண்டிருக்கும் அதே நேரத்தில், ஒரு புறம் தொழிலாளர்கள், குடியானவர்களுக்கும் மறு புறம் மூளை வேலை செய்பவர்களான அறிவுஜீவிகளுக்கும் இடையே நிலவும் கணிசமான வேறுபாடுகளைப் போக்கும் செயல்முறையும் நிறைவேற்றப்பட்டு வருகிறது. சோவியத் யூனியனில் பண்பாட்டுப் புரட்சியின் இறுதிப் பகுதி எந்த அளவுக்குச் செயல்படுத்தப் படுகிறதோ, அந்த அளவுக்குத் தொழிலாளர்களும் குடியானவர்களும் விஞ்ஞான-தொழில்நுட்ப அறிவுஜீவிகளின் தரத்துக்கு இடைவிடாது உயர்வார்கள்.

வர்க்க வேறுபாடுகள் முழுமையாக அகற்றப்படுவதற்கு உற்பத்திச் சாதனங்கள்பால் சமூகத்தின் எல்லா உறுப்பினர்களும் ஒரே மாதிரி உறவுகள் கொண்டிருப்பது தேவையாகும். உற்பத்திச் சக்திகள் பெருமளவு உயர்த்தப்படுவதன் மூலமும், சர்வஜன உடைமையும் கூட்டுறவு-கூட்டுப்பண்ணை உடைமையும் ஒரே கம்யூனிஸ உடைமையாக ஒன்ருக்கப்படுவதன் மூலமும் அறிவு உழைப்பாளிகளுக்கும் உடல் உழைப்பாளிகளுக்கும் இடையே நிலவும் கணிசமான வேறுபாடுகள் அகற்றப்படுவதன் மூலமும் இந்தக் கடமை நிறைவேற்றப்படும். சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் பின்வருமாறு

கூறப்பட்டிருக்கிறது: ''...சமூகம் வர்க்கங்களாகவும் சமுதாயப் படிவுகளாகவும் பிரிவுபட்டிருப்பதற்குக் கம்யூனிஸம் முடிவு கட்டிவிடும். பண்டைக் காலம் நீங்கலாக மனிதகுலத்தின் வரலாறு முழுவதும் வர்க்கச் சமூகத்தின் வரலாருகவே இருந்து வந்திருப்பது இதனுடன் ஒப்பு நோக்கத் தக்கது.... கம்யூனிஸத்தில் எல்லா மனிதர்களும் சமூகத்தில் சம நிலை கொண்டிருப்பார்கள். உற்பத்திச் சாதனங்கள்பால் அவர்களுடைய உறவுகள் ஒரே மாதிரியாக இருக்கும். உழைப்பு, வினியோக நிலைமைகள் எல்லோருக்கும் சமமாக இருக்கும். சமூகக் காரியங்களில் யாவரும் ஊக்கத்துடன் பங்கு ஆற்றுவார்கள்.'' முதிர்ந்த கம்யூனிஸச் சமூகத்தில் வர்க்கங்கள் இருக்க மாட்டா. அறிவுஜீவிகள் என்ற தனிப்பட்ட சமுதாயப் படிவும் இராது. அதிலே சமூக உறுப்பினர்கள் மேலாக ஒழுங்கமைக்கப்பட்ட ஒரே உழைப்பாளிகள் குழுவைச் சேர்ந்தவர்களாக விளங்குவார்கள்.

ஆகவே, வர்க்கங்களும் வர்க்க வேறுபாடுகளும் முற்ருக ஒழிக்கப்படுவதும் சமுதாய ஒருவகைப்பாடு சமூகத்தில் ஏற்படுத்தப்படுவதும் சமூகம் சோஷலிஸத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பதுடன், கம்யூனிஸத்தின் இறுதி வெற்றியுடன் தொடர்பு கொண்டிருக்கின்றன.

அத்தியாயம் பத்து

# அரசையும் சமூக வாழ்வில் அதன் பங்கையும் பற்றிய மார்க்ஸீய-லெனினீயப் போதனை

அரசை, அதாவது சமூகத்தின் அரசியல் அமைப்பைப்பற்றிய பிரச்சினை வர்க்கங்களைப் பற்றிய பிரச்சினையுடன் நெருக்கமாகப் பின்னிப் பிணைந்திருக்கிறது. ஆளும் வர்க்கங்களின் அடிப்படை நலன்களை இது நேரடியாகப் பாதிக்கிறது. பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் அரசையும், அது தோன்றியதன் காரணங்களையும் அதன் தன்மையையும் பற்றிய பிரச்சினையை மற்ற எல்லாவற்றையும்விட அதிகமாகச் சிடுக்குப்படுத்தியிருப்பது தற்செயலாக அல்ல என்று இந்தக் காரணத்தினுல் தான் வி. இ. லெனின் சொன்னுர். அரசு நித்தியமானது, மாற முடியாதது, வரலாற்றுக்கு மேற்பட்ட தன்மை கொண்டது என்று நிரூபிப்பதையே பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் தங்கள் நோக்கமாகக் கொள்கிருர்கள்.

அரசு என்பது என்ன? அதன் தன்மை எத்தகையது? அரசு பற்றிய மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தம் இந்தக் கேள்விகளுக்கு விடை அளிக்கிறது.

## § 1. அரசின் தோற்றமும் சுறண்டுவோர் சமூகத்தில் அதன் தன்மையும்

அரசு எப்போதும் நிலவவில்லை. உதாரணமாக, பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பில் தனியார் சொத்துரிமையும் பகைமை கொண்ட வர்க்கங்களும் இருக்கவில்லை. ஆதலால் இந்த மாதிரி ஸ்தாபனம் நிலவுவதற்குத் தேவை இல்லாதிருந்தது. கூட்டுச் சமூகம் அல்லது சாதியின் மிகுந்த மதிப்பும் செல்வாக்கும் வாய்ந்த உறுப்பினர் சமூக விவகாரங்களை நிர்வகித்தார்.

எனவே அரசு என்பது வரலாற்று நிகழ்ச்சி. தனியார் சொத்துரிமையும் உடைமைகளில் ஏற்றத்தாழ்வும் தோன்றியதன் விளைவாகச் சமூகம் ஒன்றுக்கொன்று பகைமை கொண்ட வர்க்கங்களாகப் பிளவுபட்டது. அதன் பயனாகவே அரசு ஏற்பட்டது. சமூகத்தில் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்கள் உருவாகும் போதுதான் அரசு தோன்றுகிறது என்று ''அரசும் புரட்சியும்'' என்னும் தமது நூலில் எழுதினார் வி. இ. லெனின். வர்க்க முரண்பாடுகளின் சமரசப்பட முடியாமையின் விளைவே அரசு என்றார் அவர்.

அரசோடு கூடவே தோன்றுகிறது சட்டம். சமூகத்தில் மனிதர்களின் நடத்தைக்கு உரிய நியமங்களின் (விதிகளின்) தொகுப்பே சட்டம். இந்த நியமங்கள் அரசினால் ஏற்படுத்தப்படுகின்றன. இவற்றைக் கடைப்பிடிப்பது சமூகத்தின் ஒவ்வொரு உறுப்பினனதும் கட்டாயக் கடமை ஆகிறது. வர்க்கச் சமூகத்தில் சட்டம் எப்போதும் ஆளும் வர்க்கத்தின் சித்தத்தை வெளியிடுகிறது. சுறண்டுவோரின் அரசில் அது சுறண்டுபவர்களின் சித்தத்தை வெளியிடுகிறது.

அரசு பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் ஒரே அளவில் தொண்டாற்றுகிறது என நிரூபிக்க பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் முயல்கிறார்கள். உண்மையிலோ, சுறண்டுவோர் சமூகத்தில் அரசு தனியார் சொத்துரிமையைப் பாதுகாப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. சுறண்டப்படும் மக்கள் திரளைக் கீழ்ப்படிவில் வைத்திருப்பதே அதன் பிரதானக் கடமை. ''அரசு என்பது ஒரு வர்க்கத்தின் மீது மற்றொரு வர்க்கத்தின் ஆதிக்கத்தைத் தாங்குவதற்கான இயந்திரமே ஆகும்''[1] என எழுதினார் வி. இ. லெனின்.

ஏகாதிபத்திய அரசு வர்க்கங்களுக்கு மேற்பட்ட, ''மக்களுக்குரிய'' அரசு என்றும் ''பொது வளமை அரசு'' என்றும் சித்திரிக்க முயலும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளின் புனைசுருட்டை அரசு பற்றிய மார்க்ஸீய-லெனினீயப் போதனை நிராகரிக்கிறது. ஏகபோக பூர்ஷ்வா வர்க்க அரசை ஆதர்சப்படுத்தவும், வர்க்க முரண்பாடுகளைப் பூசி மெழுகவும், தற்கால பூர்ஷ்வா அரசு சோஷலிஸப் பாதையில் வளர்ச்சி அடைகிறது

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 39, பக்கம் 73.

என்று நிரூபிக்கவும் முயலும் சீர்திருத்தவாதிகளையும் திரிபு வாதிகளையும் இந்தப் போதனை அம்பலப்படுத்துகிறது.

சுரண்டுவோரின் அரசு சிறுபான்மையோரின் அரசியல் அதிகாரம் ஆகும். பெரும்பான்மையோரை நசுக்குவதற்கு இது பயன்படுகிறது. ஒரு வர்க்கம் இன்னொரு வர்க்கத்தை வன்முறைக்கும் அடக்குமுறைக்கும் சுரண்டலுக்கு உட்படுத்த உதவும் கருவியாக இது விளங்குகிறது. இது மக்களிலிருந்து தனியாகப் பிரிந்தது, பகைச் சக்தி என்ற வகையில் மக்களுக்கு எதிராக நிற்கிறது.

வர்க்க ஸ்தாபனம் என்ற முறையில் அரசு அனேக அறிகுறிகளை இயல்பாகக் கொண்டிருக்கிறது. இவற்றில் ஆக முக்கியமானது பொதுவான (சமூக) அரசியல் அதிகாரம். பெருந்தொகையான சிப்பந்திகள் கொண்ட அதிகாரவர்க்க நிர்வாக இயந்திரம், மனிதர்களின் ஆயுதந்தாங்கிய பிரிவுகள் (சைனியம், போலீஸ்), நீதிமன்றம், அரசாங்க வழக்குரைஞர் அலுவலகம், சிறைச்சாலைகள் ஆகியவை அரசு அதிகாரத்தின் கருவிகளாகப் பயன்படுகின்றன. முதலாளித்துவச் சமூகத்தில் பிரதிநிதி ஸ்தாபனங்களும் (சட்ட மன்றங்களும்) அரசு அதிகாரக் கருவிகளாக விளங்குகின்றன.

அரசின் தன்மை அதன் வேலைகளில் வெளிப்படுகிறது. இத்தகைய வேலைகள் இரு வகையானவை—உள் வேலை, வெளி வேலை. அரசின் உள் வேலை முதன்மையானது. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகத்தில் இதன் நோக்கம் சுரண்டப்படும் மக்கள் திரளை நசுக்குவது ஆகும். வெளி வேலை உள் வேலையிலிருந்து உற்பத்தியாகிறது, அதைத் தொடர்கிறது, இட்டு நிரப்புகிறது. சுரண்டுவோரின் அரசில் இந்த வேலையின் நோக்கம் அயலார் பிரதேசங்களைக் கைப்பற்றுவதும் பிற அரசுகளின் தாக்குதலிலிருந்து தனது பூமியைக் காப்பதும் ஆகும்.

அரசுகள் தங்கள் வகையின் படியும் ஆட்சி வடிவத்தின் படியும் வெவ்வேறானவை. அரசின் வகை சமூகத்தின் பொருளாதார அடித்தளத்தாலும் உற்பத்தி உறவுகளாலும் நிர்ணயிக்கப்படுகிறது. அரசின் வர்க்க இயல்பை அது வெளியிடுகிறது, அதாவது அரசு எந்த வர்க்கத்துக்குத் தொண்டாற்றுகிறது என்பதை அது காட்டுகிறது. சுரண்டுவோர் சமூகத்தில் அரசுகளின் மூன்று வகைகள் தெரிந்தவை. அடிமைச் சொந்தக்

கார அரசு, நிலப்பிரபுத்துவ அரசு, முதலாளித்துவ அரசு என்பவை அவை. இவற்றில் ஒவ்வொரு வகை அரசுக்கும் ஆட்சியின் வெவ்வேறு வடிவங்கள் (அதிகார உறுப்புக்களின் வெவ்வேருன அமைப்பு, வெவ்வேருன அரசியல் முறைகள்) இயல்பானவை.

வர்க்க முரண்பாடுகளின் தன்மையாலும் ஒரு அல்லது மற்ெருரு காலப்பகுதியில் குறித்த நாட்டிலும் சர்வதேச அரங்கிலும் நிலவும் வர்க்கச் சக்திகளின் ஒப்புநிலே, வரிசை ஆகியவற்ருலும் ஆட்சி வடிவம் நிச்சயிக்கப்படுகிறது. உதாரணமாக, அடிமைச் சொந்தக்காரச் சமூகத்தில் பின்வரும் ஆட்சி வடிவங்கள் இருந்தன: முடியாட்சி—ஒரு மனிதனின் ஆட்சி, உயர் குடிமக்கள் ஆட்சி—தெரிந்தெடுக்கப்பட்ட சிறு குழுவின் ஆட்சி, குடியாட்சி—தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் ஆட்சி, கடைசியாக, மக்கள் ஆட்சி—பெரும்பான்மையோரின் ஆட்சி. அரசு ஆட்சியின் இந்த எல்லா வடிவங்களும் வெவ்வேருனவை. ஆனுல் இவற்றின் தன்மை ஒன்றே. இது அடிமைச் சொந்தக்காரர்களின் ஆட்சி என்பதே அது.

அரசமைப்பின் வெவ்வேறு வடிவங்கள் நிலப்பிரபுத்துவச் சமூகத்துக்கும் இயல்பானவை. இங்கே மிக அதிகமாகப் பரவியிருந்தது முடியாட்சி. நிலப்பிரபுத்துவ அரசின் வர்க்கத் தன்மை பண்ணேயடிமைச் சொந்தக்காரர்களின், நிலப்பிரபுக்களின் ஆட்சியாக அமைந்தது.

அரசியல் சட்டத்துக்குட்பட்ட முடியரசு முதல் குடியரசு ஈருக ஆட்சியின் மிகப் பல்வேறு வடிவங்கள் முதலாளித்துவச் சமூகத்திலும் நிலவுகின்றன. முதலாளித்துவத்துக்கு மிக இயல்பான அரசமைப்பு வடிவம் குடியரசு ஆகும். ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் பாசிஸம் போன்ற ஆட்சி வடிவமும் நிலவக் கூடும். இது பூர்ஷ்வாக்களின் கடைக்கோடிப் பிற்போக்காளர் குழுவின் சர்வாதிகாரம் ஆகும். இந்த எல்லா வடிவங்களும் பூர்ஷ்வாக்களின் வெவ்வேறு படிவுகளின் அரசியல் ஆதிக்கத்தை வெளியிடுகின்றன.

முதலாளித்துவ அரசு தனது ஜனநாயகத் தன்மை காரணமாகத் தனக்கு முந்திய அரசுகளிலிருந்து வேறுபடுகிறது என்று திரும்பத் திரும்பக் கூறுவதை பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் விரும்புகிருர்கள். முதலாளித்துவத்தில் சுதந்திரமும் சமத்துவமும் சகோதரத்துவமும் நிலவுவதாக அவர்கள் வலியுறுத்து

கிறார்கள். உண்மையிலோ, முதலாளித்துவச் சமூகத்தில் ஜன நாயகச் சுதந்திரங்கள் உண்மைச் சுதந்திரத்தின் பொய்த்தோற் றம் மட்டுமே. முதலாளித்துவத்தில் சுதந்திரம் என்பது ஒரு சிலருக்கு மாத்திரம், சிறுபான்மையோருக்கு, மிக அற்பத் தொகையினரான சுறண்டுவோருக்கு மட்டுமே உரிய சுதந் திரம். அரசியல் சட்டங்களில் குறிக்கப்பட்டுள்ள உரிமைகளை ஒன்றும் அற்றவை ஆக்கும் எத்தனை எத்தனையோ சூழ்ச்சிகளை முதலாளி வர்க்கம் கையாளுகிறது. உழைப்பாளிகளை ஆட்சி அதிகாரத்துக்கு வர விடாதிருப்பதற்காகக் கல்வித் தகுதி, சொத்து உடைமைத் தகுதி முதலிய விசேஷத் தகுதிகள் வாக்காளர்களுக்கு விதிக்கப்படுகின்றன.

பூர்ஷ்வா அரசு பூர்ஷ்வா வர்க்கத்தின் வர்க்க ஆதிக்கக் கருவி ஆகும். முதலாளிகளின் நலன்களைப் பாதுகாப்பதும் பூர்ஷ்வா அமைப்பை நிலையாக வைத்திருப்பதும் உழைப்பாளிகளின் புரட்சி நடவடிக்கைகளை நசுக்குவதுமே அதன் கடமைகள்.

தொடக்ககால முதலாளித்துவச் சகாப்தத்தில் பூர்ஷ்வா அரசு குறித்த அளவு முற்போக்கு முக்கியத்துவம் கொண்டி ருந்தது. புதிய உற்பத்தி முறை நிலைபெறவும் வலுவடையவும் அது உதவியது. ஏகாதிபத்தியச் சகாப்தத்திலோ, அது பிற்போக்குப் பாதையில், அழிந்துகொண்டிருக்கும், வாழ்ந்து தீர்ந்துவிட்ட அமைப்பைப் பாதுகாக்கும் பாதையில் மேலும் மேலும் சென்றுகொண்டிருக்கிறது.

ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் பெருத்த ஏகபோக ஸ்தா பனங்கள் (முதலாளிகளின் கூட்டுக்கள்) அரசியல்அதிகாரத்தைப் படிப்படியாகத் தங்கள் கைகளில் எடுத்துக்கொள்கின்றன. அரசு இயந்திரத்தை அவை தங்கள் குறுகிய சுயநல நோக்கங் களுக்கு அடிப்படுத்துகின்றன. இவ்வாறு அடிப்படுத்துவது அர சாங்க ஊழியர்களையும் சட்டமன்ற உறுப்பினர்களையும் அமைச் சர்களையும் அரசியல் கட்சிகளின் தலைவர்களையும் சட்ட வல்லு நர்களையும் இத்தகைய பிறரையும் நேரே கைக்கூலி கொடுத்து வசப்படுத்துவதன் வாயிலாக நிகழ்கிறது. உதாரணமாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளின் காங்கிரஸின் 87வது கூட்டத்தில் 536 காங்கிரஸ் உறுப்பினர்களில் 314 பெயர் (சட்ட வல்லுநர் கள், வழக்குரைஞர்கள்) பெருத்த ஏகபோக ஸ்தாபனங்களின் பணியாளர்களாக இருக்கிறார்கள்.

பெருத்த ஏகபோக முதலாளிகள் தற்காலத்தில் தமக்கு

வேண்டிய நபர்களை லஞ்சம் கொடுத்துக் கைக்குள் போட்டுக் கொள்வதுடன் நில்லாமல் அரசாங்க ஸ்தாபனங்களில் மிக முக்கியமான பதவிகளைத் தாமே வகிக்க முற்பட்டிருக்கிறார்கள்.

தற்கால முதலாளித்துவ நாடுகளில் ஏகபோக முதலாளிகளின் நலன்களுக்காகவே அரசு வழக்கமாகச் செயல்படுகிறது. அவர்களுக்கு லாபகரமான அரசாங்க ஆர்டர்கள் கிடைக்க அது வகை செய்கிறது, கடன்கள் வழங்குகிறது, சட்டங்கள் விதிப்பதன்மூலம் சம்பளத்தைக் கட்டுப்படுத்துகிறது, ஏகபோக ஸ்தாபனங்களுக்கு எதிராக உழைப்பாளிகளின் நடவடிக்கைகளை அடக்கி ஒடுக்குகிறது.

அரசு இயந்திரமும் ஏகபோக ஸ்தாபனங்களும் ஒன்று கலப்பது ஏகபோக முதலாளித்துவம் அரசு-ஏகபோக முதலாளித்துவம் ஆவதைக் குறிக்கிறது. அரசு-ஏகபோக முதலாளித்துவம் பொருளாதாரத் துறையிலும் அரசியல் துறையிலும் வரம்பற்ற அதிகாரத்தை ஏகபோக முதலாளிகளுக்கு அளிக்கிறது. தற்கால பூர்ஷ்வா அரசு எதார்த்தத்தில் ஏகபோக பூர்ஷ்வா வர்க்கத்தின் விவகாரங்களை நிர்வகிக்கும் ஒரு வகைக் கமிட்டி ஆகிவிட்டது. ஏகபோக ஸ்தாபனங்கள் அரசுடன் ஒன்றுகலந்ததன் விளைவாகப் பாட்டாளி வர்க்க இயக்கமும் தேசீய விடுதலைப் போராட்டமும் முன்னிலும் கொடுமையாக நசுக்கப்படுகின்றன. புதிய ஆக்கிரமிப்புப் போர்கள் தொடங்க ஆயத்தங்கள் செய்யப்படுகின்றன. ''விரல்விட்டு எண்ணக்கூடிய கோடீசுவரர்களும் லட்சாதிபதிகளும் முதலாளித்துவ உலகின் செல்வங்களை எல்லாம் வரைமுறையின்றி நிர்வகிக்கிறார்கள். முழு நாட்டினங்களின் வாழ்க்கையைத் தங்கள் தன்னல ஒப்பந்தங்களின் பெயரால் வெறும் சில்லறைக் காசாக அவர்கள் மாற்றிவருகிறார்கள்.'' இவ்வாறு கூறுகிறது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டம்.

ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் பூர்ஷ்வா ஜனநாயகத்தின் நெருக்கடி தொடங்கிவிட்டது. அலுவலர்-அதிகார வர்க்கத்தினர் கொண்ட இயந்திரம் மேலும் மேலும் வளர்கிறது. போலீஸ், வேவுப்படைகளின் வேலை தீவிரம் ஆகிறது. சைனியம் தொகையில் பெருகுகிறது. இவ்வாறு தற்கால பூர்ஷ்வா அரசுகள் இராணுவ-போலீஸ் அரசுகள் ஆகிவருகின்றன.

ஏகபோக முதலாளிகளின் ஏவலுக்கு இணங்கப் பணியாற்றும் ஏகாதிபத்திய அரசு ஒரு காலத்தில் உழைப்பாளிகள் அனு

பவித்துவந்த பெயரளவான உரிமைகளைக்கூட எல்லா வகையிலும் குறுக்கிக் கட்டுப்படுத்துகிறது. லஞ்சம், மிரட்டுதல், பயமுறுத்தல்கள், கொலைகள், தேர்தல் முடிவுகளில் மோசடி செய்தல் முதலிய பல்வேறு வழிகளைப் பரவலாகக் கையாள்வதன்மூலம் ஏகபோக ஸ்தாபனங்களுக்கு எதிர்ப்பேச்சின்றிக் கீழ்ப்படியும் கைத்தொண்டர்களையே சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கவும் தலைமைப் பதவிகளில் அமர்த்தவும் பூர்ஷ்வா வர்க்கம் முயன்று வெற்றி பெறுகிறது. சாராம்சத்தில் பூர்ஷ்வாச் சட்டமன்றம் தற்போது வெளியிடுவது முதலாளிகள் வர்க்கம் அனைத்தினதும் சித்தத்தை அல்ல அதன் உச்சியில் உள்ள நிதி அதிபர்கள், தொழில் அதிபர்களின் சிறு குழுவினது சித்தத்தை மட்டுமே அது வெளியிடுகிறது. பல முதலாளித்துவ நாடுகளில் சட்டமன்ற ஜனநாயகத்திலிருந்து அரசியல் பிற்போக்கை நோக்கித் திடீர் மாற்றம் நிகழ்ந்து வருகிறது.

பாசிஸ முறையைக் கடைப்பிடிக்கும் போக்கிலும், சில நாடுகளில் பாசிஸ அரசியல் நிர்வாகம் நிலைநாட்டப்பட்டிருப்பதிலும் பூர்ஷ்வா ஜனநாயகத்தின் நெருக்கடி வெளிப்படுகிறது.

ஏகாதிபத்திய பூர்ஷ்வா அரசாங்கங்கள் கடைக்கோடிப் பிற்போக்குத் தன்மை கொண்ட உள்நாட்டு, வெளிநாட்டுக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகின்றன. மக்களின் நலன்களுக்காகப் போராடும் கம்யூனிஸ்ட் கட்சிகளை அவை விசேஷ வன்மத்துடன் துன்புறுத்துகின்றன. கம்யூனிஸ்ட் தலைவர்களைப் பிடிப்பதும் கொலை செய்வதும் கம்யூனிஸ்டுகளுக்கு எதிரான போராட்டத்தில் கையாளப்படும் மிக விரும்பப்படும் முறைகளும் சாதனங்களுமாக விளங்குகின்றன. மேற்கு ஜெர்மனியிலும் இன்னும் சில முதலாளித்துவ நாடுகளிலும் கம்யூனிஸ்ட் கட்சிகளுக்குச் சட்டப்படி சர்க்காரால் தடை விதிக்கப்பட்டிருக்கிறது.

ஏகாதிபத்திய அரசுகளின் வெளிநாட்டுக் கொள்கையும் இவ்வளவே பிற்போக்கானது. ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க மக்களின் தேசிய விடுதலை இயக்கத்தை எதிர்த்து அவை கடும் போராட்டம் நிகழ்த்தி வருகின்றன.

உலக அரசியல் போலீசின் பாத்திரத்தை ஏற்றுக்கொண்டிருக்கும் தற்காலத்திய முதன்மைப் பிற்போக்குச் சக்தியாக விளங்குகிறது வட அமெரிக்க ஏகாதிபத்தியம். அமெரிக்க ஐக்கிய

நாடுகளின் பூர்ஷ்வா வர்க்கம் முதலாளித்துவத்தின் ''இரட்சகன்'' என்ற வகையில் செயல்பட முயல்கிறது. தனது அரசின் உதவியால் அது ஆக்கிரமிப்புத் தன்மை கொண்ட இராணுவக் கூட்டணிகளும், உலகின் பல்வேறு பகுதிகளில் இராணுவத் தளங்களும் அமைத்துவருகிறது. பற்பல நாடுகள், மக்களின் உள் விவகாரங்களில் முரட்டுத்தனமாக அது தலையிடுகிறது. அவர்களது சுதந்திரத்தை அதிக்கிரமிக்கிறது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்புத் தன்மை வியத்நாமிய மக்களுக்கு எதிரான குற்றத்தன்மை நிறைந்த போரில் மிகத் துலக்கமாக வெளிப்படுகிறது. ''உலகக் கம்யூனிஸத்துக்கு'' எதிரான போராட்டம் என்ற கோஷத்தின் போர்வைக்குள் தங்கள் பிற்போக்கான வெளிநாட்டுக் கொள்கையை அமெரிக்க ஐக்கிய நாடுகளும் பிற ஏகாதிபத்திய அரசுகளும் மூடி மறைக்கின்றன

தற்கால பூர்ஷ்வா அரசின் பிற்போக்குத் தன்மை கொள்கைவாதத் துறையிலும் வெளிப்படுகிறது. விரிவான மக்கள் திரளைத் தம்பால் ஈர்க்க வல்ல கருத்துக்களை முன்வைக்கத் திறன் இல்லாமையால் ஏகாதிபத்திய பூர்ஷ்வா வர்க்கம் மக்கள் திரளின் கவனத்தை வர்க்கப் போராட்டத்தின்பாலிருந்து திருப்பக்கூடிய விஞ்ஞானக் கேடான எல்லா வகைச் சித்தாந்தங்களையும் பயன்படுத்த முயல்கிறது. குட்டி பூர்ஷ்வாக் கட்சிகளும் வலதுசாரிச் சோஷலிஸ்டுகளின் தலைமை உச்சக் குழுவும் வர்க்கச் சமாதானத்தையும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் பாட்டாளி வர்க்கத்துக்கும் இடையே ஒத்துழைப்பையும் பற்றிப் பிரசாரம் செய்வதன் வாயிலாக உண்மையில் ஏகபோக ஸ்தாபனங்களின் நலன்களுக்கே காவலர்களாக விளங்குகின்றன.

ஏகாதிபத்தியத்தின் பிரதானக் கொள்கைவாத-அரசியல் ஆயுதமாக விளங்குகிறது கம்யூனிஸ எதிர்ப்பு. இந்தப் பிற்போக்குப் பெயரின் பின்னே மறைந்திருக்கிறது முற்போக்கானவை யாவற்றையும், புரட்சிகரமானவை எல்லாவற்றையும் மிக மிக வெறியுடன் வேட்டையாடுதல். நம் காலத்தில் கம்யூனிஸ எதிர்ப்பு வெறும் கொள்கைவாதம் மட்டுமே அல்ல. சோஷலிஸ நாடுகளுக்கும், சர்வதேசத் தொழிலாளர் இயக்கத்துக்கும் ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க மக்களின் விடுதலை இயக்கத்துக்கும் எதிராக மறைமுகமாகவும் வெளிப்படையாகவும் நடக்கும் போராட்டத்தின் நேரான அரசியல் போக்கும் ஆகும்.

முதலாளித்துவ நாடுகளின் தொழிலாளி வர்க்கமும் உழைப்பாளி மக்களும் ஏகாதிபத்தியத்தின் பிற்போக்குக் கொள்கையையும் கொள்கைவாதத்தையும் எதிர்த்துத் தங்கள் கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளின் தலைமையில் போராடி வருகிறார்கள். முதலாளித்துவ ஏகபோக ஸ்தாபனங்களின் அதிகாரத்திலிருந்தும் இராணுவக் கொடுங்கோல் ஆட்சிகளிலிருந்தும் சோஷலிஸப் புரட்சி ஒன்றுதான் அவர்களைக் காப்பாற்றி விடுவிக்க வல்லது.

### § 2. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்— புது வகை அரசு

சோஷலிஸப் புரட்சி நடந்து பூர்ஷ்வா அரசு இயந்திரம் உடைக்கப்படுவதன் விளைவாக, பண்பு வகையில் புதிய வித அரசு ஒன்று தோன்றுகிறது. இதுதான் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம். தனது வர்க்கத் தன்மையிலும் ஸ்தாபன வடிவங்களிலும் இது தனக்கு முந்திய சுறண்டுவோர் அரசுகள் எல்லாவற்றிலும் இருந்து அடிப்படையில் வேறானது.

புதிய, சோஷலிஸச் சமூக வளர்ச்சியின் தேவைகளிலிருந்தே நேரடியாக உண்டாகிறது இத்தகைய வகை அரசு தோன்றுவதன் இன்றியமையாமை. முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸம் உடனேயே, உழைப்பாளி மக்கள் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிய மறு நாளே, வளர்ந்துவிடுவதில்லை. முதலாளித்துவத்துக்கும் சோஷலிஸத்துக்கும் இடையே, முன்னது பின்னதாகப் புரட்சி மூலம் மாற்றப்படும் காலப்பகுதி உள்ளது என்றும் அரசியல் பரிணமிப்புக் காலப்பகுதி இந்தக் காலப்பகுதிக்குப் பொருந்த அமைகிறது என்றும் கார்ல் மார்க்ஸ் சுட்டிக் காட்டினார். இந்தப் பகுதியைச் சேர்ந்த அரசு பாட்டாளி வர்க்கத்தின் புரட்சிகரச் சர்வாதிகாரம் தவிர வேறு எதாகவும் இருக்க முடியாது. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் சோஷலிஸப் புரட்சியின் மிக முக்கிய ஆயுதம். சுறண்டும் வர்க்கங்களை ஒழிப்பதோ, சோஷலிஸச் சமூகத்தை நிறுவுவதோ அது இல்லாமல் நடவாது.

புது வகை அரசு என்ற முறையில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் தன்மையை வரையறுக்கையில் வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினார்: ''பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்

என்பது, பழைய சமூகத்தின் சக்திகளையும் பரம்பரைகளையும் எதிர்த்து நிகழ்த்தப்படும் இரத்தப்பெருக்கு உள்ளதும் இரத்தப் பெருக்கு அற்றதும், வன்முறை கொண்டதும் அமைதி உள்ளதும், இராணுவ வகைப்பட்டதும் பொருளாதார வகைப் பட்டதும், கல்வித் துறையைச் சேர்ந்ததும் நிர்வாகத் துறையைச் சேர்ந்ததும் ஆன பிடிவாதமான போராட்டம் ஆகும்.''[1] பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள், சீர்திருத்தவாதிகள், திரிபுவாதிகள் ஆகியோர் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் இன்றியமையாமையை மறுக்கிறார்கள். முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பது வர்க்கப் போராட்டம் இல்லாமலும் சோஷலிஸப் புரட்சி இல்லாமலும் நிகழ முடியும் என்று அவர்கள் பிரசாரம் செய்துவருகிறார்கள். லெனினது மேற்குறித்த வரையறுப்பு இத்தகையவர்களின் நோக்குக்களை அம்பலப்படுத்துகிறது. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் முற்ற முழுக்க வன்முறையே என்று காட்டுவதற்கு அவர்கள் செய்யும் முயற்சிகளையும் இந்த வரையறுப்பு நிராகரிக்கிறது.

பூர்ஷ்வா வர்க்கத்தினுடையவும் பிற சுறண்டும் வர்க்கங்களுடையவும் எதிர்ப்பை முறியடிக்கும் பொருட்டுப் பாட்டாளி வர்க்கம் தனிக் காலப்பகுதிகளில் வன்முறையை மேற்கொள்ள நேருகிறது என்பதில் சந்தேகம் இல்லை. எனினும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் முதன்மையான வேலை ஆக்கச் செயலே ஆகும். பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் சுறண்டுவோர் மீது வன்முறையைக் கையாள்வது மட்டும் அல்ல, முதன்மையாக வன்முறையைக் கையாள்வதும் அல்ல என்று வி. இ. லெனின் குறித்தார். சோஷலிஸக் கட்டுமானம், பொருளாதாரத்தைப் புதிய அடிப்படைகளில் மாற்றி அமைத்தல், அதிக உயர்ந்த வகையான உழைப்பின் சமூக ஒழுங்கமைப்பை நிறுவுதல், இவற்றுக்கான போராட்டமே பாட்டாளி வர்க்கத்துக்கு இன்னும் நிர்ணயகரமானது.

மற்ற அரசுகள் போலவே பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசுக்கும் உரிய உள்நாட்டு, வெளிநாட்டு வேலைகள் உள்ளன. எனினும் சுறண்டுவோர் அரசுகளின் இத்தகைய வேலைகளுடன் ஒப்பிடுகையில் இவற்றின் உள்ளடக்கம் அடிப்படையில் வேறுபடுகிறது.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 41, பக்கம் 27.

ஆட்சியிலிருந்து அகற்றப்பட்டுவிட்ட, ஆனால் இன்னும் முற்றிலும் ஒழிக்கப்படாத சுரண்டுவோர் வர்க்கங்களின் எதிர்ப்பை முறியடிப்பதே பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசின் முதன்மையான, மிக முக்கிய உள்நாட்டு வேலை ஆகும். கட்டாயப் படுத்தல் இன்றி, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் இன்றி, முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பது இயலும் என்று நினைப்பது மிகப் பெரிய மடத்தனம், மிக மிக அர்த்தமில்லாத கற்பனாவாதம் ஆகும் என்றார் லெனின்.

பாட்டாளி வர்க்க அரசு சுரண்டுவோர் வர்க்கங்களின் எதிர்ப்பை முறியடிப்பதற்கான ஆயுதமட்டுமே அல்ல. பொருளாதார ஒழுங்கமைப்பு வேலையையும் அது நிறைவேற்றுகிறது. சோஷலிஸக் கட்டுமானத்திற்கு உரிய பிரதானக் கருவியாக அது தொண்டு ஆற்றுகிறது. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் படைப்புத்தன்மை கொண்ட பாத்திரம் இந்தக் கட்டுமானத்தில்தான் விசேஷ வன்மையுடன் துலக்கமாக வெளிப்படுகிறது.

மார்க்ஸீய-லெனினீயக் கட்சியால் வழிகாட்டி நடத்தப் பெறும் பாட்டாளி வர்க்க அரசு உற்பத்திச் சக்திகளின்—இயந்திரத் தொழில், விவசாயம் ஆகியவற்றின்—வளர்ச்சிக்கும், புதிய உற்பத்தி உறவுகள் அமைவதற்கும் எல்லா வகையிலும் உதவுகிறது; உழைப்பு, நுகர்வு இவற்றைக் கணக்கெடுக்கிறது, மேற்பார்வை செய்கிறது; சமூக உடைமைகளைப் பாதுகாக்கிறது; உழைப்பு ஒழுங்கையும் அரசாங்க ஒழுங்கையும் மீறுபவர்களை எதிர்த்துப் போராடுகிறது; மக்களின் பொருளியல் நல்வாழ்வை மேம்படுத்துவதற்கு இடைவிடாது பாடுபடுகிறது.

இவற்றோடு கூடவே பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசு பண்பாடு, பயிற்றி வளர்த்தல் ஆகிய துறைகளிலும் பணியாற்றுகிறது. பொது மக்கள் திரளின் உணர்வையும் பண்பாட்டையும் உயர்த்துவதற்கு எல்லா வகையிலும் முயற்சி எடுத்துக் கொள்கிறது. அது பண்பாட்டுப் புரட்சியைச் செயல்படுத்துகிறது. மக்கள் கல்விப் பயிற்சியை இயக்கி நடத்துகிறது. விஞ்ஞான நிலையங்கள், பண்பாட்டுப் பயிற்சி நிலையங்கள் ஆகியவற்றின் செயல்களை ஒழுங்கமைக்கிறது. உழைப்பாளிகளைக் கம்யூனிஸ முறையில் பயிற்றுவதற்கான மிகப் பெரிய வேலையை நிர்வகிக்கிறது.

இவ்வாறு, எதிர்ப்பை முறியடிக்கும் வேலையோடு கூடவே பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசு வேறு வேலைகளையும் செய்கிறது. பொருளாதார-ஒழுங்கமைப்பு, பண்பாட்டு-பயிற்சி வேலைகள் இவற்றில் முதன்மையானவை. சுறண்டுவோர் அரசுகளிலிருந்து அதற்கு உள்ள சாராம்சமான வேறுபாடு இதுவே.

உள்நாட்டு வேலைகளுடன் வெளிநாட்டு வேலைகளும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசுக்கு உள்ளன. நாட்டின் தற்காப்புத் திறனை வலுப்படுத்துதல், ஏகாதிபத்தியவாதிகளின் தாக்குதல்களிலிருந்து அதைக் காத்தல், சோஷலிஸக் கட்டுமானத்துக்குச் சாதகமான வெளி நிலைமைகளை ஏற்படுத்தல், சமாதானத்துக்காகப் போராடுதல் ஆகியவை இந்த வேலைகள். பாட்டாளி வர்க்க, சோஷலிஸ அரசின் மனிதாபிமானம் உள்ள, சமாதானப் பற்று நிறைந்த இயல்பு இந்த வேலைகளின் நிறைவேற்றத்தில் விசேஷத் துலக்கமாக வெளிப்படுகிறது.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசு யாவற்றிலும் ஜனநாயகத் தன்மை கொண்டது. வி. இ. லெனின் சுட்டிக்காட்டியது போல, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் ஆகச் சிறந்த வகை ஜனநாயகம், உண்மையான மக்கள் ஆட்சி. தனது செயல்களில் அது நேரடியாக உழைப்பாளி மக்கள் திரளைச் சார்ந்திருக்கிறது. மக்களின் மேலும் மேலும் விரிவான படிவுகளை அரசியல், சமூக நிர்வாகத் துறையில் ஈடுபடுத்துகிறது.

பாட்டாளி வர்க்க ஜனநாயகத்தின் அஸ்திவாரமாக, பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் தலைசிறந்த கோட்பாடாகத் திகழ்கிறது உழைப்பாளிக் குடியானவர்களுடன் தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமை. பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் நிலப்பிரபுக்களுக்கும் எதிராக நடந்த கொடும் வர்க்கப் போராட்டத்தில் உதித்தது இந்த ஒற்றுமை. சுறண்டலிலிருந்து மனிதகுலம் விடுபடுவது இந்த ஒற்றுமை வலுப்படுவதில்தான் அடங்கியுள்ளது என்று இதன் முக்கியத்துவத்தை மதிப்பிடுகையில் வி. இ. லெனின் எழுதினார்.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் எல்லா வகை ஜனநாயகத்தையும் மறுக்கிறது என்று பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளும் அவர்களுக்கு ஒத்துப்பாடும் சீர்திருத்தவாதிகளும் நிரூபிக்க முயல்கிறார்கள். இத்தகைய வலிந்துரைகள் எதார்த்தத்துக்கு எவ்விதத்திலும் பொருந்துபவை அல்ல. ஜனநாயகம் எப்

போதும் வர்க்கத் தன்மை கொண்டது என்று மார்க்ஸீய-லெனினியம் போதிக்கிறது. ஜனநாயகம் என்பது அரசு அதிகாரத்தின் வடிவம் ஆகும். இந்த அதிகாரம் ஒரு அல்லது மற்றெருரு வர்க்கத்தின் அதிகாரமாகவே உள்ளது. சமூகத்தில் அதிகாரம் பூர்ஷ்வா வர்க்கத்தின் கையில் இருந்தால் ஜனநாயகமும் பூர்ஷ்வா வர்க்கத்தன்மை கொண்டிருக்கும். மாருக, அதிகாரம் பாட்டாளி வர்க்கத்தின் கையில் இருந்தால், ஜனநாயகமும் பாட்டாளி வர்க்கத் தன்மையே கொண்டிருக்கும். எனவே ''வர்கங்களுக்கு மேற்பட்ட'', ''தூய'' ஜனநாயகம் என்பதாக எதுவும் இல்லை, இருக்கவும் முடியாது.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் என்பது பண்பு வகையில் புது வகை ஜனநாயகம், மக்களின் பிரமாண்டமான பெரும்பான்மைக்காக நிலவும் ஜனநாயகம் என்று வி. இ. லெனின் காட்டினுர். பூர்ஷ்வா வர்க்கத்தின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான கருவியாகவும் புது வகை ஜனநாயகமாகவும் இருக்கும் தொழிலாளி வர்க்கச் சர்வாதிகாரம், ஸ்தூல வரலாற்றுச் சூழ்நிலையையும் பொருளாதார நிலைமைகளையும் வர்க்கச் சக்திகளின் வரிசையையும், மக்களின் நாட்டின, வரலாற்று மரபுகளையும் வெளிநாட்டு அரசியல் நிலைமைகளையும் பொறுத்து வெவ்வேறு வடிவங்களில் செயல்படுகிறது. உதாரணமாக ருஷ்யாவில் அது சோவியத்துக்களின் வடிவில் வெளியீடு பெற்றது. ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் உள்ள அனேக நாடுகளில் மக்கள் ஜனநாயக வடிவில் அது தோன்றியுள்ளது. வருங்காலத்தில் வேறு வடிவங்களிலும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் சாத்தியமே. ''முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு அபரிமிதமும் பல்விதங்களும் கொண்ட அரசியல் வடிவங்களை மேற்கொள்ளாமல் இருக்க முடியாது. எனினும் இதன் தன்மை தவிர்க்க முடியாதவாறு ஒன்ருகவே இருக்கும். அது தான் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம்''[1] என்று எழுதினுர் லெனின்.

சோவியத் அரசும் மக்கள் ஜனநாயக அரசுகளும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் இரண்டு வடிவங்கள் என்ற முறையில் பொதுவான அம்சங்கள் கொண்டிருக்கின்றன. அவை அடிப்படையில் பூர்ஷ்வா அரசுக்கு எதிர்நிலையானவை. பூர்ஷ்வா

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 33, பக்கம் 35.

அரசு இயந்திரத்தை உடைத்ததன் வாயிலாகத் தோன்றியவை. சோஷலிஸச் சமூகத்தை நிறுவுதல் என்ற ஒரே குறிக்கோள் அவற்றுக்கு உள்ளது.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் மிக முக்கியமான சிறப்பு, அது பாட்டாளி மக்களுக்குப் பெயரளவில் அல்ல, உண்மையிலேயே உரிமைகளும் சுதந்திரங்களும் கிடைக்க வகை செய்கிறது என்பதே. தொழிற்சாலைகளேயும் ஆலைகளேயும் கல்வி நிலையங்களேயும் அச்சகங்களேயும் பண்பாட்டு-பயிற்சி நிலையங்களேயும் உழைப்பாளிகளின் பொறுப்பில் ஒப்படைப்பதன் வாயிலாகப் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் உழைப்புக்கும் ஓய்வுக்கும் கல்விப் பயிற்சிக்கும் அவர்களுக்கு உள்ள உரிமைகளின் செயல்பாட்டை எதார்த்தம் ஆக்குகிறது. அரசு நிர்வாகத்தில் பங்கு கொள்ளும் வாய்ப்பை உழைப்பாளி மக்கள் வரலாற்றிலேயே முதல் முறையாகப் பெறுகிறார்கள். அரசாங்கச் சட்டங்கள் தயாரிப்பதில் தொழிலாளர்களும் குடியானவர்களும் செயலூக்கத்துடன் பங்கு கொள்கிறார்கள், அவற்றைத் தாமே நடப்புக்குக் கொண்டுவருகிறார்கள். ''இது எல்லோருக்கும் வாய்ப்பு அளிக்கும், எல்லாவற்றையும் மக்கள் காணும் விதத்தில் செய்யும், மக்களுக்குக் கிடைக்கக் கூடிய, நேரே மக்கள் திரளிடம் இருந்தே வருகின்ற அதிகாரம். மக்கள் திரளுடைய, அதன் சித்தப்படி அமைந்த நேரான, பிரத்தியட்சமான ஆட்சி உறுப்பு''[1] என்று குறித்தார் வி. இ. லெனின். எனவேதான் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் எவ்வித பூர்ஷ்வா ஜனநாயகத்தைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக ஜனநாயகத் தன்மை கொண்டது என்று அவர் அழுத்திக் கூறினார்.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரம் உழைப்பாளி மக்களின் பெருந்திரள் அடங்கிய ஸ்தாபனங்களது முழுத் தொகுப்பு ஆகும். முதன்மையாக இந்தத் தொகுப்பைச் சேர்ந்தவை உழைப்பாளி மக்கள் பிரநிதிகளின் சோவியத்துக்கள். சோஷலிஸ ஜனநாயகத்தின் தன்மைக்கு யாவற்றிலும் முழுமையாகப் பொருந்தும் உறுப்புக்கள் இவை. அரசாங்க, சமூக ஸ்தாபனங்களின் அடையாளங்கள் சோவியத்துக்களில் ஒன்று சேர்ந்துள்ளன. இவை முழு அதிகாரம் பெற்ற உறுப்புக்கள்; சோஷலிஸ

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 41, பக்கம் 381.

அரசு இயந்திரத்தைத் தலைமை தாங்கி இயக்குபவை. நாடு அனைத்தையும் பாதிக்கும் மிக முக்கியப் பிரச்சினைகளை சோவியத்துக்கள் தீர்க்கின்றன. நிர்வாக, மேற்பார்வை உறுப்புக்களை அமைக்கின்றன. சட்டம் இயற்றும் அதிகாரம், செயல் படுத்தும் அதிகாரம், இவற்றின் ஒருமையினது வடிவாக அவை விளங்குகின்றன. ஆட்சி செலுத்துபவையும் வேலை செய்பவையும் ஆன உறுப்புக்களாக அவை ஏககாலத்தில் திகழ்கின்றன. எதார்த்த அதிகாரம் அற்ற பூர்ஷ்வாச் சட்ட மன்றங்களுக்கும் சோவியத்துக்களுக்கும் உள்ள அடிப்படை வித்தியாசம் இதுவே.

உழைப்பாளி மக்களின் பல்வேறு நலன்களையும் தேவைகளையும் வெளியிடும் தொழிற்சங்கங்கள், கூட்டுறவு, இளங் கம்யூனிஸ்ட், மாதர், விளையாட்டு ஸ்தாபனங்கள், பிற பொது ஸ்தாபனங்கள் ஆகியனவும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத் தொகுப்பில் அடங்கியுள்ளன. தொழிலாளர்களும் குடியானவர்களும் அறிவுஜீவிகளும் இவற்றின் வாயிலாக நாட்டின் அரசியல் வாழ்வில், சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவுவதில், செயலூக்கத்துடன் பங்கெடுத்துக்கொள்கிறார்கள்.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் தொகுப்பில் தலைமைப் பாத்திரம் கம்யூனிஸ்ட் கட்சிக்கு உரியது. இது முற்றிலும் புரியக்கூடியதே. பூர்ஷ்வா வர்க்கத்தை ஆட்சியிலிருந்து அகற்றுவதற்காகவும் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிலை நாட்டுவதற்காகவும் மக்கள் திரளை அணிதிரட்டி ஒழுங்கமைத்தது கம்யூனிஸ்ட் கட்சியே. தொழிலாளி வர்க்கம் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றிக்கொண்ட பிறகு சோஷலிஸக் கட்டுமானத்திற்காக உழைப்பாளிகளைக் கட்சியே ஒழுங்கமைக்கிறது. ஆளும் தொழிலாளி வர்க்கத்தின் கட்சியாக, அதன் முன்னணியாக இருந்துகொண்டு, எல்லா உழைப்பாளி மக்களுடையவும் சித்தத்தையும் நலன்களையும் வெளியிடுவதன் வாயிலாகக் கம்யூனிஸ்ட் கட்சி நாட்டின் பொருளாதார, அரசியல், கொள்கைவாத வாழ்வை இயக்கி நடத்துகிறது. பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத் தொகுப்பில் அடங்கிய எல்லாச் சமூக ஸ்தாபனங்களும் அதன் தலைமையின் கீழ் வேலை செய்கின்றன. கம்யூனிஸ்ட் கட்சி திரளான பொது மக்களுடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது; கம்யூனிஸக் கட்டுப்பாடு, ஒழுங்கமைப்பு ஆகியவற்றின் உணர்

வில் அவர்களைப் பயிற்றுகிறது. அதே சமயம் திரளான பொது மக்களிடமிருந்து அது கற்றுக்கொள்ளவும் செய்கிறது, அவர்களுடைய கூட்டு அறிவையும் அனுபவத்தையும் ஆதாரமாகக் கொள்கிறது.

சோஷலிஸ, கம்யூனிஸக் கட்டுமானம் நடக்கையில் சோஷலிஸ அரசு நிரந்தரமாகச் செவ்வைப்பாடும் வளர்ச்சியும் அடைகிறது. அதன் அமைப்பும் வேலை முறையும் செப்பம் உறுகின்றன, அதன் அடிப்படை வேலைகளின் தன்மை மாறுகிறது. இவை எல்லாவற்றினதும் விளைவாக, சோஷலிஸ அரசு அமைப்பு கம்யூனிஸச் சமூகச் சுய ஆட்சியாக வளர்வது முடிவில் நிகழும். இந்தச் செயல்முறை எவ்வாறு நிறைவுறுகிறது என்பதை சோவியத் சோஷலிஸ அரசின் உதாரணத்தைக் கொண்டு ஆராய்வோம்.

### § 3. சோஷலிஸ அரசமைப்பிலிருந்து கம்யூனிஸச் சமூக சுய நிர்வாகமாக வளர்ச்சி

முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிக்கும் காலப்பகுதியில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசு தொழிலாளி வர்க்கத்துக்குத் தேவைப்படுகிறது. ஏற்கனவே கூறப்பட்டது போல, ஆட்சியிலிருந்து அகற்றப்பட்ட சுறண்டுவோர் வர்க்கங்களின் எதிர்ப்பை முறியடிப்பதும் சோஷலிஸப் பொருளாதாரத்தை அமைப்பதுமே இந்தக் காலப்பகுதியில் அதன் முக்கியக் கடமைகளாக இருக்கின்றன. சோவியத் யூனியனில் சோஷலிஸக் கட்டுமானம் நிறைவுற்றுவிட்டதன் விளைவாகச் சுறண்டுவோர் வர்க்கங்கள் ஒழிக்கப்பட்டுவிட்டன. சோஷலிஸ உற்பத்தி முறை தனி ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிவிட்டது. இவ்வாறு பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தின் பிரதானக் கடமைகள் நிறைவேறிவிட்டன.

சோஷலிஸம் நிறுவப்பட்டதும் சோவியத் சமூகத்தின் வர்க்க அமைப்பு அடிப்படையில் மாறிவிட்டது. சுறண்டுவோர் வர்க்கங்கள் ஒழிக்கப்பட்ட பிறகு சோவியத் யூனியனில் இரண்டு நட்புள்ள வர்க்கங்கள்—தொழிலாளி வர்க்கமும் கூட்டுப்பண்ணைக் குடியானவர்களும்—உழைப்பாளி அறிவுஜீவிகள் என்ற சமூகப் படிவும் எஞ்சியுள்ளன. சோஷலிஸத்தின் நிலைமைகளில் இவை யாவும் தொகையிலும் பண்பிலும் மாறிவிட்டன.

சோவியத் சோஷலிஸச் சமூகத்தில் தொழிலாளி வர்க்கம் முதலாளித்துவத்தின் ஆட்சிக்காலத்தில் இருந்த சுரண்டப் பட்ட, உரிமைகள் அற்ற பாட்டாளி வர்க்கமாக இல்லை. எல்லா மக்களோடும் சேர்ந்து சமூகச் செல்வங்களின் உடைமையாளி ஆகிவிட்ட தொழிலாளி வர்க்கம் நாட்டின் சொந்தக்காரன் ஆகிவிட்டது. மிகச் சிறந்த ஒழுங்கமைப்பும் கட்டுப்பாடும் உணர்வும் உள்ள வர்க்கம் என்ற முறையில் தொழிலாளி வர்க் கம் சோஷலிஸச் சமூகத்தின் எல்லாப் படிவுகளையும் ஒன்றிணைக் கிறது, சமூகத்தில் தலைமைப் பங்கு ஆற்றுகிறது.

சோஷலிஸத்தின் நிலைமைகளில் குடியானவர்களின் சமுதாயப் பாங்கும் மாறிவிட்டது. நிலப்பிரபுக்களதும் குலாக்குகளதும் நுகத்தைக் கழற்றி எறிந்துவிட்டுக் குடியானவர்கள் விடுதலை பெற்ற வர்க்கம் ஆகிவிட்டார்கள். இந்த வர்க்கம் நிலவுவது சோஷலிஸச் சொத்துரிமையையும் கூட்டு உழைப்பையும் அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது. கிராமங்களில் சோஷலிஸ உற்பத்தி உறவுகள் நிலைநாட்டப்பட்டதனாலும் கூட்டுப்பண்ணை வயல்களில் கூட்டு உழைப்பின் விளைவாகவும் தனியார் சொத் துரிமை மனப்பான்மை குடியானவர்களிடமிருந்து மறைந்து விட்டது. தொழிலாளி வர்க்கத்துடன் ஒற்றுமையாக இணைந்து அதன் தலைமையில் இப்பொழுது கூட்டுப் பண்ணைக் குடியான வர்கள் சோவியத் நாட்டில் கம்யூனிஸக் கட்டுமானத்தைச் செயல்படுத்தி வருகிறார்கள்.

சோஷலிஸம் நிறுவப்பட்டதோடு கூடவே அறிவுஜீவிகளி டையேயும் முக்கியமான மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. இவர் களில் பெரும்பான்மையினர் தொழிலாளி வர்க்கத்திலும் கூட்டுப் பண்ணைக் குடியானவர்களிலும் இருந்து தோன்றியவர்கள். இவ்வாறு தங்கள் அமைப்பு காரணமாக அவர்கள் இந்த வர்க் கங்களுக்கு மிக நெருக்கம் ஆகிவிட்டார்கள். தங்கள் சக்திகளை யும் அறிவையும் மக்களின் நன்மைக்கே முழுதும் வழங்கும் உண்மையான உழைப்பாளி அறிவுஜீவிகளாக அவர்கள் மாறி விட்டார்கள்.

சோவியத் யூனியனின் பொருளாதார, சமுதாய வாழ்வில் சோஷலிஸக் கட்டுமானம் நிறைவுற்றதன் தொடர்பாக ஏற்பட் டுள்ள உருமாற்றங்களும் மாறுதல்களும் சோவியத் சோஷ லிஸ அரசின் அடுத்துவரும் மாறுதலை, கம்யூனிஸக் கட்டுமானக்

காலப்பகுதியுடன் தொடர்புகொண்ட புதிய வளர்ச்சிக் கட்டத்தில் அது பிரவேசிப்பதை, நிச்சயிக்கின்றன.

சோவியத் யூனியன் கம்யூனிஸக் கட்டுமானக் காலக்கட்டத்தில் பிரவேசித்திருப்பதும், சோஷலிஸ அரசாங்கத்துக்கு எதிர்நிற்கும் கடமைகளும் அதன் உள்நாட்டு, வெளிநாட்டு வேலைகளில் மாறுதல் ஏற்படுத்தியுள்ளன. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்கள் ஒழிக்கப்பட்டுவிட்ட காரணத்திஞல் சுறண்டுவோர் வர்க்கங்களை நசுக்குதல் என்ற உள்நாட்டு வேலையின் தேவை அற்றுப் போய்விட்டது. அதே சமயம் சோஷலிஸச் சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநிறுத்துதல், சோஷலிஸ உடைமைகளைப் பாதுகாத்தல் என்னும் வேலைகள் வளர்ச்சி அடைந்து வலுப்பெற்றுவிட்டன. தற்போது நிர்ப்பந்த நடவடிக்கைகள் சோஷலிஸச் சட்டங்களை மீறுபவர்கள்மீது எடுத்துக்கொள்ளப்படுகின்றன.

பொருளாதார-ஒழுங்கமைப்பு வேலை மேலும் வளர்ச்சி பெற்றிருக்கிறது. கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படையை நிறுவுதல், சோஷலிஸ உறவுகளைக் கம்யூனிஸ உறவுகளாக மாற்றி அமைத்தல், உழைப்பு, நுகர்வு, இவற்றின் அளவை மேற்பார்த்தல், மக்களின் நல்வாழ்வு மேம்பட வகை செய்தல் ஆகியவற்றை ஒழுங்கமைப்பது சோஷலிஸ அரசின் பொறுப்பு ஆகிவிட்டது என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சோஷலிஸ அரசின் பண்பாட்டு-பயிற்சி வேலையும் விரிவாகியுள்ளது. மிகப் பரவலான பொது மக்களைக் கம்யூனிஸக் கட்டுமானத்தில் ஈடுபடுத்துவதும், அறிவுபூர்வமான சோஷலிஸக் கட்டுப்பாடு, உழைப்பின்பால் கம்யூனிஸ உறவுகள் ஆகியவற்றின் உணர்வில் அவர்களைப் பயிற்றுவதும் அவர்களது பண்பாட்டு, கொள்கைவாத, அரசியல் தரத்தைப் பெரிதும் உயர்த்தாமல் நடக்க முடியாது.

தற்போதைய நிலைமைகளில் சோவியத் சோஷலிஸ அரசின் வெளி நாட்டு அரசியல் வேலைகளும் வெகுவாக வளர்ச்சி அடைந்துள்ளன. சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவுவதற்குச் சாதகமான நிலைமைகளை ஏற்படுத்தும் நோக்கத்துடன் சோஷலிஸ அமைப்பைச் சேர்ந்த நாடுகளின் சோதர ஒத்துழைப்பை வலுப்படுத்தல், ஏகாதிபத்தியத்துக்கு எதிராகக் காலனிகள், ஆதீன நாடுகள் ஆகியவற்றின் மக்களது தேசிய

விடுதலே இயக்கத்துக்கு ஆதரவு அளித்தல், காலனியாதிக்க நுகத்திலிருந்து விடுபட்டுள்ள வளர்ச்சி அடைந்துவரும் இளம் அரசுகளுக்கு உதவுதல், வெவ்வேறு சமுதாய அமைப்புக்கள் கொண்ட அரசுகளின் சமாதான சகவாழ்வுக் கோட்பாட்டை ஒத்தியைந்த முறையில் உறுதிப்படுத்தல், மனிதகுலத்தை மூன்ருவது உலகப் போரில் இழுத்துவிட முயலும் ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்புச் சக்திகளே எதிர்த்துத் தாக்குவதை ஒழுங்கமைத்தல், நாட்டின் தற்காப்புக்கும் பந்தோபஸ்துக்கும் நம்பகமான விதத்தில் வகைசெய்தல், சோஷலிஸத் தாய்நாட்டையும் உலக சோஷலிஸ அமைப்பைச் சேர்ந்த நாடுகளேயும் காக்கும் பொருட்டு சோவியத் ஆயுதப் படைகளின் விறலே மேலும் உறுதிப்படுத்தல் ஆகியவை இந்த வேலேகளில் அடங்கியவை.

கம்யூனிஸக் கட்டுமானத்துக்குப் பரிணமிப்பு பொருளாதார, பண்பாட்டு வளர்ச்சியில் சோவியத் அரசின் ஒழுங்கமைக்கும் பங்கு மேலும் அதிகரிப்பதைக் குறிக்கிறது. தவிரவும், கம்யூனிஸச் சமூகம் நிறுவப்படுவதற்கு நாட்டின் பொருளாதார, அரசியல் வாழ்வில் மக்கள் மேலும் மேலும் முழுமையாக, செயலூக்கத்துடன் பங்காற்றுவது அவசியமாகிறது.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசு, தனது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பணியை நிறைவேற்றிவிட்டு, அனேத்து மக்கள் அரசாக, மக்கள் எல்லோருடையவும் நலன்களேயும் சித்தத்தையும் வெளியிடும் உறுப்பாக மாறிவிடுகிறது என்பதை இவை எல்லாம் குறிக்கின்றன.

அனேத்து மக்கள் அரசு ஏதோ புது வகை அரசு அல்ல. அதே சோஷலிஸ அரசாகவே, ஆனுல் தனது வளர்ச்சியின் மேலும் உயர்ந்த கட்டத்தில் உள்ளதாக, அது விளங்குகிறது.

பாட்டாளி வர்க்கச் சர்வாதிகார அரசு அனேத்து மக்கள் அரசு ஆவது வரலாற்று முக்கியத்துவம் உள்ள செயல்முறை. தொழிலாளி வர்க்கம் சமூகத்தில் தலேமைப் பாத்திரம் வகிப்பது நின்றுவிட்டது என்று இதற்கு அர்த்தம் இல்லவே இல்லே. சோஷலிஸச் சமூகத்தின் மிக முன்னணியிலுள்ள வர்க்கம் ஆன தொழிலாளி வர்க்கம் அனேத்து மக்கள் அரசின் நிலேமைகளிலும் தலேமை வகிக்கும் சக்தியாகத் தொடர்ந்து செயலாற்றுகிறது.

கம்யூனிஸக் கட்டுமானக் காலப்பகுதியில் சோஷலிஸ அரசு அமைப்பினது வளர்ச்சியின் பிரதானத் திசை ''சோஷலிஸ ஜன

நாயகம் எல்லாத் துறைகளிலும் விரிவாகப் பரவிச் செவ்வைப் படுதல், அரசு ஆட்சியிலும் பொருளாதார, பண்பாட்டுக் கட்டுமானத் தலைமையிலும் எல்லாக் குடிகளும் ஊக்கத்துடன் பங்கு ஆற்றுதல், அரசு இயந்திரத்தின் வேலை மேலும் சீர்படுதல், அதன் செயல் பாட்டின் மீது மக்கள் மேற்பார்வை தீவிரம் அடைதல்....'' இவை யாகவே விளங்கும் என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் குறித்துக் காட்டப்பட்டிருக் கிறது. சோஷலிஸ ஜனநாயகத்தின் வளர்ச்சி இரு வழிகளில் நடக்கிறது. ஒன்று, அரசு உறுப்புக்களை மேலும் ஜனநாயகப் படுத்துவதும் அவற்றின் வேலையில் மேலும் விரிவான உழைப்பாளி மக்கள் திரளை ஈடுபடுத்துவதும். மற்றது, சமூக விவகாரங்களின் நிர்வாகத்தில் பல்வேறு சமூக ஸ்தாபனங் களின் பங்கை இன்னும் அதிகப்படுத்துவது.

சமூகத்தின் எல்லா உறுப்பினர்கள் இடையேயும் உணர்வு பூர்வமான கட்டுப்பாட்டை வலுப்படுத்துதல் சோஷலிஸ ஜனநாயகத்தின் வளர்ச்சிக்கு உரிய மிக முக்கிய நிபந்தனை ஆகும். ''ஒவ்வொரு மனிதனின் பொருட்டும் சமூகம் அனைத் தினதும் சோஷலிஸ ஒழுங்கமைப்பும், சமூகம் அனைத்தின் பொருட்டும் ஒவ்வொருவனதும் சோஷலிஸக் கட்டுப்பாடும்— இதுவே சோஷலிஸ ஜனநாயகத்தின் சாரம்.'' உழைப்புக் கட்டுப் பாட்டை வலுப்படுத்துவதும் சோஷலிஸச் சமூகத்தில் அங்கீ கரிக்கப்பட்டுள்ள சட்டங்களையும் விதிகளையும் கட்டாயமாக நிறைவேற்றுமாறு கோருவதும் சோஷலிஸ அமைப்பின் ஜன நாயக அடிப்படைக்கு முரண்படுவதில்லை. மாறாக சோஷலிஸ ஜனநாயக முறை விரிவடைய அவை வாய்ப்பு அளிக்கின்றன.

சோவியத் அரசின் சோஷலிஸ ஜனநாயக முறை உழைப் பாளிப் பிரதிநிதிகள் சோவியத்துக்களில் மிகச்சிறந்த வகையில் செயல்படுகிறது. கம்யூனிஸக் கட்டுமான நிலைமைகளில் சோவியத் துக்கள் பொருளாதார, அரசியல் நடவடிக்கைகளிலும், உழைப்பாளி மக்களது பண்பாட்டு-அன்றாட வாழ்க்கைச் சேவை களை ஒழுங்கமைப்பதிலும் கம்யூனிஸ முறையில் அவர்களது பயிற்சிக்கு ஏற்பாடு செய்வதிலும் ஊக்கத்துடன் ஈடுபட்டுள் ளன.

மக்கள் பிரதிநிதித்துவ வடிவங்களும் சோவியத் தேர்தல் அமைப்பின் கோட்பாடுகளும் கம்யூனிஸக் கட்டுமானம் நிகழ் கையில் மேலும் மேலும் செவ்வைப்படுத்தப்படுகின்றன.

சோவியத்துக்களும் அவற்றின் உறுப்பினரும் தேர்வாளர்களுக்கு முன் தங்கள் செயல்கள் பற்றி முறையாக அறிக்கை செய்தல், சோவியத் உறுப்பினர்களை வாபஸ் பெறும் உரிமை, பொதுமக்கள் சார்பில் சோவியத்துக்களின் வேலை சரிபார்க்கப் படுதலும் அவற்றின் நடவடிக்கைகள் கண்காணிக்கப்படுதலும், இவை எல்லாம் நடப்புக்கு வந்து கொண்டிருக்கின்றன. சோவியத்துக்கள் செய்துவரும் பெரிய வேலையில் 230 லட்சத் துக்கும் மேற்பட்ட மனிதர்கள் சமூகத் தொண்டர்கள் என்ற முறையில் மிக ஊக்கத்துடன் பங்காற்றி வருகிறார்கள் என்பதை மட்டும் இங்கு குறிப்பிடுவது போதுமானது.

கம்யூனிஸத்தை நெருங்க நெருங்க, தற்போது அரசாங்க உறுப்புக்களால் நிறைவேற்றப்பட்டுவரும் சில வேலைகள் சமூக ஸ்தாபனங்களின் பொறுப்புக்குப் படிப்படியாக மாற்றப்படும். மக்கள் கண்காணிப்பு ஸ்தாபனங்கள் தற்போது மிகுந்த முக்கி யத்துவம் கொண்டுள்ளன. பொருளாதார நிலையங்களின் நட வடிக்கைகள்மீது சமூகக் கண்காணிப்பு தீவிரம் அடைந்துவரு கிறது. கட்சி-அரசாங்கக் கண்காணிப்பு பற்றிய லெனினது கோட்பாடுகள் அண்மை ஆண்டுகளில் சோவியத் யூனியனில் மீண்டும் நிலைநாட்டப்பட்டு மேற்கொண்டு விரிவாக்கப்பட்டுள் ளன. பொது விவகாரங்களின் நிறைவேற்றத்தில், உழைப்பாளி கள் பங்காற்றுவதற்குறிய உண்மையான அனைத்து மக்கள் வடிவம் ஆகிவருகிறது கண்காணிப்பு.

நிர்வாகப் பயிற்சிப் பள்ளியாகவும், பொருளாதார நிர் வாகப் பயிற்சிப் பள்ளியாகவும், கம்யூனிஸப் பயிற்சிப் பள்ளி யாகவும் தொழிற்சங்கங்கள் ஆற்றும் பங்கு புதிய சமூகத்தை நிறுவுவதில் அதிகரித்துள்ளது. எட்டு கோடி உறுப்பினர்கள் கொண்ட தொழிற்சங்கங்கள் தேசியப் பொருளாதாரத் திட்டங் களை நிறைவேற்றுவதில் தீவிரமாகப் பங்கு எடுத்துக்கொள் கின்றன. உழைப்பின் அளவுமான நிர்ணயிப்பையும் ஊதியத்தை யும் தொழில் சட்டங்கள் கடைப்பிடிக்கப்படுவதையும் அவை கண்காணிக்கின்றன, சோஷலிஸப் போட்டி ஏற்படுத்துகின்றன. சுகாதாரப் பாதுகாப்பு, அன்றாட வாழ்க்கை ஆகியவை குறித்த பிரச்சினைகளை அவை பரிசீலனை செய்கின்றன. பண்பாட்டு-பயிற்சித் துறையில் பெரிய செயல் ஆற்றிவருகின்றன.

கம்யூனிஸச்சமூகத்தின்கட்டுமானக்காலப்பகுதியில் கூட்டுறவு ஸ்தாபனங்கள் (கூட்டுப் பண்ணைகள், நுகர்வோர் கூட்டுறவு

ஸ்தாபனங்கள் முதலியன) பெரும் பங்கு ஆற்றுகின்றன. கூட்டுப்பண்ணைகள் பொருளாதாரத்தின் சமூகக் கூட்டு வடிவங்கள். கூட்டுப்பண்ணையினர் தாமே உற்பத்தியை நிர்வகிப்பதற்குக் கூட்டுப்பண்ணைகள் ஜனநாயகக் கோட்பாடுகளின் அடிப்படையில் வகை செய்கின்றன.

கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கத்தின் செயல்பாடும் தற்போது தீவிரமாகிவருகிறது. சோவியத் சமூகத்தின் செயலூக்கமுள்ள சக்தியாக விளங்கும் கம்யூனிஸ்ட் இளைஞர்கள் சங்கம் 230 லட்சம் வாலிபர்களையும் யுவதிகளையும் உறுப்பினராக கொண்டிருக்கிறது. இளைஞர்களைக் கம்யூனிஸ உணர்வில் பயிற்றுவதில் சோவியத் அரசுக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அது உதவுகிறது. கம்யூனிஸச் சமூகத்தின் நடைமுறைக் கட்டுமானத்தில் இளந் தலைமுறையினரை ஈடுபடுத்துகிறது.

சோவியத்துக்கள், தொழிற்சங்கங்கள், கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கம் ஆகியவற்றின் பாத்திரம் முன்னிலும் அதிக முக்கியமாகியிருப்பதும் சமூக விவகாரங்களிலும் அரசாங்க நிர்வாகத்திலும் அவை செயலூக்கத்துடன் பங்கு கொள்வதும் சோஷலிஸ ஜனநாயகத்தை எல்லா வகையிலும் விரிவுபடுத்துவது பற்றிய வி. இ. லெனினது கட்டளைக்குப் பொருத்தமாக இருக்கிறது.

கம்யூனிஸக் கட்டுமானக் காலக் கட்டத்தில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமைப் பாத்திரம் சிறப்பாக அதிகரிக்கிறது. தொழிலாளி வர்க்கம், குடியானவர்கள், அறிவு ஜீவிகள் ஆகியோரின் முன்னணியிலுள்ள உணர்வு மிக்க பிரதிநிதிகளைத் தனது உறுப்பினர்களாகக் கொண்ட கம்யூனிஸ்ட் கட்சி, சோவியத் மக்கள் அனைவருடையவும் ஆசிரியனாகவும் ஒழுங்கமைப்பாளியாகவும் அரசியல் தலைவனாகவும் வெற்றிகரமாகப் பணி ஆற்றிவருகிறது. பொருளாதார, சமுதாய, அரசியல், கொள்கைவாதக் கடமைகளை நிறைவேற்றுவதற்காக எல்லா உழைப்பாளி மக்களையும் கம்யூனிஸ்ட் கட்சி ஒழுங்கமைத்து அணிதிரட்டுகிறது.

சோஷலிஸ ஜனநாயகம் மேலும் வளர்ச்சியும் செவ்வைப்பாடும் அடைவது அதே சமயம் சோஷலிஸ அரசு அமைப்பு கம்யூனிஸ முறைப்படி சமூக சுயாட்சியாக வளர்வதைக் குறிக்கும். அதாவது அரசு மடிந்து மறைந்து விடுவதாக விளங்கும். அரசு அற்ற கம்யூனிஸச் சுயாட்சிக்குப் பரிணமிப்பு ''அரசு

ஆட்சிச் சுமையில் தங்கள் பங்கை மேலும் மேலும் அதிகத் தொகையினரான குடிகளும், பின்னர் ஒருவர் பாக்கி இல்லாமல் எல்லாக் குடிகளும் தினந்தோறும் வகிப்பதன் வாயிலாக''[1] நிகழும் என்றார் வி. இ. லெனின்.

அரசு மடிந்து மறைவது எப்போது நிகழும்?

எல்லா வகை அரசும் அல்ல, சோஷலிஸ அரசு மட்டுமே மடிந்து மறையும். பூர்ஷ்வா அரசைப் பொறுத்த வரையில் அது தானாக மடிந்து மறையாது, சோஷலிஸப் புரட்சி நிகழ்கையில் அழிக்கப்பட்டுவிடும். பூர்ஷ்வா அரசு இயந்திரம் சுரண்டுவோரின் மக்கள்விரோத நோக்கங்களுக்குத் தொண்டாற்றுகிறது. எனவேதான் அது உடைத்து எறியப்படுவது அவசியம் ஆகிறது.

சோஷலிஸ அரசு மடிந்து மறைவது படிப்படியான, நீடித்த செயல்முறை. முழுச் சகாப்தம் அதற்குத் தேவைப்படும். இதற்கு உள், வெளி நிலைமைகள் இன்றியமையாதவை. ''அரசு முழுமையாக மடிந்து மறைவதற்கு உள் நிலைமைகளும்—வளர்ச்சியுற்ற கம்யூனிஸச் சமூகம் நிறுவப்படுவதும்—வெளி நிலைமைகளும் — சர்வதேச அரங்கில் சோஷலிஸம் வெற்றி பெறுவதும் உறுதிப்படுவதும் — ஏற்படுவது இன்றியமையாதது'' என்று குறிக்கிறது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டம்.

சோஷலிஸ அரசு மடிந்து மறைவதற்குப் பொருளாதார, சமூக-பொருளாதார, ஆன்மீக முதனிலைகள் அவசியம். இவற்றில் முதன்மையானவை பொருளாதார முதனிலைகள். உற்பத்திச் சக்திகளின் மிகுந்த வளர்ச்சியும் பொருளியல் நலங்களின் செழிப்பும் இவற்றில் அடங்கியவை. ''திறமைக்கு ஏற்ற உழைப்பு, தேவைக்கு ஏற்ற ஊதியம்'' என்னும் கம்யூனிஸக் கோட்பாட்டைச் செயல்படுத்துவதை இவை சாத்தியம் ஆக்கும்.

சமூகத்தின் பொருளாதார அஸ்திவாரம் மாற்றமும் வளர்ச்சியும் அடைவதன் அடிப்படையில் கம்யூனிஸ அமைப்பில் சமூக, ஆன்மீகத் துறைகளில் மாறுதல்கள் ஏற்படும். கம்யூனிஸச்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 36, பக்கம் 74.

சமூகத்தில் அதன் எல்லா உறுப்பினர்களதும் முழுமையான சமுதாய சமத்துவம் நிலைநாட்டப்படும். நகரத்துக்கும் கிராமத்துக்கும், மூளை உழைப்புக்கும் உடல் உழைப்புக்கும் இடையே உள்ள கணிசமான வேற்றுமைகள் மறைந்துவிடும். பிறகு நாட்டினத் தனித்தன்மைகளும் தேய்ந்து மறைந்துவிடும். சமூக விவகாரங்களை நிர்வகிப்பதில் எல்லாக் குடிகளும் ஊக்கத்துடன் பங்காற்றுவார்கள். கம்யூனிஸ முறையில் உடன் வாழ்வது பற்றிய விதிகளை எவ்விதக் கட்டாயமும் இன்றிக் கடைப்பிடிக்கும் பழக்கம் ஏற்பட்டுவிடும். கம்யூனிஸ அமைப்பில் தகுதிகளும் திறமைகளும் சுதந்திர மனிதனுக்கு உரிய சிறந்த ஒழுக்க நெறிப் பண்புகளும் மலர்ந்து முழுமையாக வெளிப்படும். இவை எல்லாம் சோஷலிஸ அரசு மடிந்து மறைவதற்குத் தேவையான ஆன்மீக முதனிலைகளை உருவாக்கும்.

கம்யூனிஸச் சமூகத்தில் எவ்வகையான ஆட்சியும் இருக்காது என்று இதற்கு அர்த்தமா? இல்லை, அப்படி அர்த்தம் இல்லை. சோஷலிஸ ஜனநாயகம் மேலும் வளர்ச்சி அடைவதன் விளைவாக அரசு உறுப்புக்கள் கம்யூனிஸச் சமூகச் சுயாட்சியாகப் படிப்படியாக மாறும். சோவியத்துக்கள், தொழிற்சங்கங்கள், கூட்டுறவு ஸ்தாபனங்கள் ஆகியவையும் பிற ஸ்தாபனங்களும் இந்தச் சுயாட்சியில் ஒன்றிணையும். அரசியல் அதிகாரம் என்ற முறையில் அரசு மடிந்து மறைந்துவிடும். எனினும் திட்டம் வகுத்தல், கணக்கிடுதல் ஆகியவற்றுக்கான உறுப்புக்கள் கம்யூனிஸச் சமூகத்தில் நிலைத்திருக்கும். பொருளாதார, பண்பாட்டுத் துறைகளில் தலைமை செயல்படுத்தப்படும்.

அரசு மடிந்து மறைவதற்குத் தேவையான உள் நிலைமைகள் தவிர வெளி நிலைமைகளும் உள்ளன. சர்வதேச அரங்கில் சோஷலிஸம் வெற்றி அடைந்து உறுதிப்படுவது இவற்றில் முதன்மையாகக் குறிப்பிடத் தக்கது. ஏகாதிபத்திய வல்லரசுகளிடமிருந்து தோன்றும் யுத்த அபாயம் இருந்துவரும் வரை, முழுமையான ஆயுத ஒழிப்பு நிறைவேற்றப்படாதிருக்கும் வரை, தற்காப்புச் சக்தியை நிலையாக வைத்திருப்பது இன்றியமையாதது. நாட்டைக் காக்கும் அரசின் வேலை தொடர்ந்து நடந்துவரும் என்று இதனால் அர்த்தமாகிறது.

சோஷலிஸ ஜனநாயகத்தை மேலும் விரிவுபடுத்துவதற்காக சோவியத் யூனியனில் விரிவான நடவடிக்கைகள் மேற்கொள்

ளப்படுவதும் அரசின் அனேக வேலைகள் சமூக ஸ்தாபனங்கள் பொறுப்புக்கு மாற்றப்படுவதும் அரசின் பங்கு தற்போது பலவீனப்படுத்தப்படுவதைக் குறிக்கவே இல்லை. மாறாக, அரசு எல்லாவகையிலும் வலுப்படுத்தப்படுவதுதான் சோஷலிஸத்தால் பெறப்பட்ட நலங்களைக் காக்கிறது, கம்யூனிஸச் சமூகம் நிறுவப்படுவதை உறுதிப்படுத்துகிறது.

அத்தியாயம் பதினொன்று

# சமுதாயப் புரட்சிகள்

ஏற்கனவே குறிப்பிடப்பட்டது போல, சமூகத்தின் வளர்ச்சியில் படிப்படியான, பரிணும வகைப்பட்ட மாறுதல்களையும் விரைந்த பண்பு மாற்றங்களையும் பிரித்து அறிவது அவசியம். சமூக வாழ்க்கையில் பரிணும வகைப்பட்ட மாறுதல்கள் அடிப்படையான பண்பு மாற்றங்களுக்கு வேண்டிய நிலைமைகளை உருவாக்குகின்றன. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகத்தில் பழைய சமுதாய-பொருளாதார அமைப்பு பாய்ச்சல் முறையில் மாற்றி அமைக்கப்படும் காலப்பகுதியை இந்த மாற்றங்கள் குறிக்கின்றன. இந்தப் பாய்ச்சலையே நாம் சமுதாயப் புரட்சி என்கிறோம்.

புரட்சிகள் வரலாற்றின் திறன்மிக்க இயக்கு விசைகள் ஆகும். வாழ்வுதீர்ந்துவிட்ட சமூகத்தின் கேடுகளை அவை வேருடன் களைந்தெறிகின்றன. விரிவான மக்கள் திரளைச் சுதந்திரமான ஆக்கச் செயல் புரிய அவை தூண்டி ஊக்குகின்றன; மக்களது செயல்வன்மையைக் கட்டவிழ்த்து விடுகின்றன; சமூகப் புதுமலர்ச்சிக்கு வழி கோலுகின்றன.

## § 1. சமுதாயப் புரட்சியின் காரணங்களும் இயக்கு சக்திகளும் தன்மையும்

பயன் அழிந்துவிட்ட சமூகப் பொருளாதார அமைப்பையும் வர்க்கங்களின் நிலையையும் உழைப்பாளி மக்கள் திரளின் வாழ்க்கை நிலைமைகளையும் அரசியல் ஸ்தாபனங்களையும் சமூகக் கருத்துக்களையும் நோக்குகளையும் மாற்றுவதற்குச்

சமுதாயப் புரட்சி நிறைவேற்றப்படுவது இன்றியமையாதது. சமுதாயப் புரட்சி என்பது சமூக வளர்ச்சியில் ஏற்படும் அடிப் படையான திடீர்த் திருப்பம் ஆகும். ஒரு வகை வர்க்க, சமூக-பொருளாதார அமைப்பிலிருந்து மற்றொரு வகை அமைப்புக்கு, தாழ்ந்ததிலிருந்து உயர்ந்ததற்கு, பரிணமிப்பு இந்தத் திருப்பம் நிகழ்கையில் செயல்படுத்தப்படுகிறது.

புதிய உற்பத்திச் சக்திகளுக்கும் பழைய உற்பத்தி உறவு களுக்கும் இடையே ஏற்படும் பிணக்கே சமுதாயப் புரட்சிக் கான மிக ஆழ்ந்த காரணமாக விளங்குகிறது. உற்பத்தி உறவு கள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கு உரிய காரணிகளாக இருப்பதிலிருந்து அவற்றின் வளர்ச்சியைத் தடைப்படுத்தும் தளைகளாக மாறிவிடும்போது, உற்பத்தியின் பொருளாதார நிலைமைகளிலும் சொத்துரிமையின் நிலவும் வடிவிலும் சமூக உறவுகளின் தொகுப்பு முழுவதிலுமே அடிப்படையான திடீர்த் திருப்பம் ஏற்படுத்துவது இன்றியமையாதது ஆகிவிடு கிறது.

ஆனால் பழைய உற்பத்தி உறவுகளுக்கு ஆதரவாக உள் ளன திட்டவட்டமான வர்க்கங்கள். பயன் அழிந்துவிட்ட அமைப் பையும் அதோடு கூடவே சமூகத்தில் தங்கள் ஆதிக்க நிலை யையும் பாதுகாக்க அவை மூர்க்கமாகப் பாடுபடுகின்றன. தங்கள் நிலைகளைப் பாதுகாப்பதற்காக அவை அரசு இயந்திரத் தையும் அரசியல் அதிகாரத்தையும் பயன்படுத்துகின்றன. புரட்சி இயக்கத்தை நசுக்குவதற்கான ஆயுதமாக அவற்றை மாற்றிவிடுகின்றன. எனவே புது வகை உற்பத்தி உறவுகள் நிலை பெறுவதற்குப் பழைய வர்க்கத்தின் அரசியல் ஆதிக்கம் ஒழிக்கப்படுவதும் பிற்போக்குள்ள ஒரு வர்க்கத்தின் கைகளி லிருந்து முற்போக்குள்ள மற்றொரு வர்க்கத்தின் கைகளுக்கு ஆட்சி அதிகாரம் மாற்றப்படுவதும் முதன்மையாகத் தேவைப் படுகின்றன. இந்தக் காரணத்தினால் அரசு அதிகாரம் பற்றிய பிரச்சினை சோஷலிஸப் புரட்சியின் தலையாய பிரச்சினையாக விளங்குகிறது.

புரட்சிக் காலப்பகுதியில் வர்க்கப் போராட்டம் மிக அதிக இறுக்கம் அடைகிறது. முடிவில் அது வெளிப்படையான ஆயுதப் போராட்டங்கள், கிளர்ச்சிகள், உள்நாட்டுப் போர்கள் ஆகியவற்றின் வடிவங்களை அடிக்கடி மேற்கொள்கிறது. "கொடூ ரத்தின் உச்ச நிலையை எட்டிவிடும் வர்க்கங்களின் மூர்க்கமான

போராட்டமே புரட்சி எனப்படுகிறது''[1] என்று எழுதினர் வி. இ. லெனின்.

புரட்சி என்பது வர்க்கப் போராட்டத்தின் உச்ச வடிவம் ஆகும். புரட்சியில்தான் வர்க்கங்களின் போராட்டம் தனது தவிர்க்க முடியாத இறுதிக் கட்டத்தை அடைகிறது. ஒரு வர்க்கத்தின் கைகளிலிருந்து ஆட்சி அதிகாரத்தை மற்ருெரு வர்க்கத்தின் கைகளுக்கு மாற்றுவதன் வாயிலாகப் புரட்சி சமரசப்படுத்த முடியாத வர்க்க முரண்பாடுகளைத் தீர்க்கக் கூடிய ஒரே வழியாக விளங்குகிறது.

எந்த திடீர் அரசாங்க மாற்றங்களில் ஆட்சி அதிகாரம் புதிய வர்க்கத்தின் கைகளுக்கு அன்றி அதே வர்க்கத்தைச் சேர்ந்த தனி அரசியல் குழுக்கள் கைகளுக்கு மாறுகிறதோ அவற்றுடன் அரசியல் புரட்சிகளை ஒன்ருக எண்ணிக் குழப்பிக் கொள்ளக் கூடாது. இத்தகைய அரசாங்க மாற்றங்கள் நிலவும் அமைப்பை மாற்ருமலே வேறு சர்க்காரை ஸ்தாபிக்கக் கூடும்.

சமுதாயப் புரட்சி நிறைவேறுவதற்குப் புறநிலையும் அகநிலையும் ஆன நிலைமைகளின் முழுத் தொகுப்பு தேவை. புரட்சி நிறைவேறுவதற்குத் தேவையான புறநிலை நிலைமைகளின் மொத்தம் **புரட்சி நிலைமை** எனப்படுகிறது.

புரட்சி நிலைமையின் மூன்று முக்கிய அடையாளங்களை வி. இ. லெனின் சுட்டிக்காட்டினர். அவையாவன: 1) பழைய ரீதியில் ஆட்சி செலுத்துவது ஆளும் வர்க்கங்களுக்கு இயலாமை; 2) ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின் வறுமையும் துன்பங்களும் அசாதாரணமாகக் கடுமை ஆதல்; 3) இந்த அடிப்படையில் பொது மக்கள் திரளின் செயல்வன்மை கணிசமாக அதிகரித்தல்.[2] தனிப்பட்ட குழுக்கள் அல்லது கட்சிகளுடைய சித்தத்தை மட்டும் அல்ல, வர்க்கங்களின் சித்தத்தைக் கூடச் சாராத இந்தப் புறநிலையான நிலைமைகள் இல்லாவிடில் புரட்சி நிகழ முடியாது.

சமுதாயப் புரட்சி நிறைவேறுவதற்குப் புறநிலையான நிலைமைகள் தவிர அகநிலைக் காரணிகளும் நிலவுவது இன்றியமையாதது ஆகும். பழைய அரசு இயந்திரத்தை உடைத்தெறிந்துவிட்டு ஆட்சி அதிகாரத்தைத் தன் கைகளில் எடுத்துக்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 38, பக்கம் 366.

[2] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 26, பக்கம் 218; தொகுதி 41, பக்கம் 69 பார்க்க.

கொள்ளப் போதுமான அளவு வலிமையுள்ள தீவிரப் பொது ஜன நடவடிக்கைகளை மேற்கொள்ளப் புரட்சிகர வர்க்கம் வல்லமை கொண்டிருப்பது அகநிலைக் காரணி என்பதால் குறிக்கப் படுகிறது. சோஷலிஸப் புரட்சியைப் பற்றிப் பேசும்போது இந்த வல்லமை பாட்டாளி வர்க்கத்தின் செப்பமான ஒழுங்கமைப்பு, ஒருமைப்பாடு ஆகியவற்றின் தரத்தாலும் அதன் கொள்கைவாத, அரசியல் முதிர்ச்சியாலும் நிச்சயிக்கப்படுகிறது. தொழிலாளி வர்க்கத்துக்கு ஒழுங்கமைப்பையும் உணர்வையும் பயிற்றுகிறது மார்க்ஸீய-லெனினீயக் கட்சி. முதலாளித்துவ அமைப்புக்கு எதிராக உழைப்பாளி மக்களின் போராட்டத்தில் அவர்களைத் தலைமைதாங்கி நடத்த வல்ல ஒரே கட்சி இதுவே.

புரட்சிகர வர்க்கங்கள் போதிய வலிமையும் ஒழுங்கமைப்பும் பெற்றிராவிட்டால் புரட்சி வெற்றி அடைய முடியாது. புரட்சி நிலைமை உருவாகியிருந்த போதிலும் புரட்சிச் சக்திகள் புரட்சியின் நிறைவேற்றத்துக்குப் போதிய அளவு ஆயத்தமாக இல்லாமையால் புரட்சி வெற்றி பெருமல் போனதற்கு உதாரணங்கள் வரலாற்றில் உள்ளன.

புரட்சிகள் தனித்தனி நபர்கள் அல்லது மனிதர்களின் குழுக்களுடைய விருப்பத்தின்படி நிகழ்வது இல்லை என்றும் எந்த ஒரு நாட்டின் மக்கள்மீதும் அவற்றை வெளியிலிருந்து திணிப்பது இயலாது என்றும் வி. இ. லெனின் பல முறை வலியுறுத்திக் கூறியுள்ளார். ''புரட்சிகள் வேற்று நாட்டில் ஆர்டர்படி, ஒப்பந்தப் பிரகாரம் தோன்ற முடியும் என்று எண்ணும் மனிதர்கள் நிச்சயமாக இருக்கிருர்கள். இந்த மனிதர்கள் ஒன்ரு பைத்தியக்காரர்கள், இல்லாவிட்டால் பகைவரின் ஒற்றர்கள்''[1] என்று அவர் எழுதினுர். புரட்சியை எந்த நாட்டிலும் எந்தக் காலத்திலும் நிறைவேற்றுவது இயலாது. புரட்சி நிலைமை உருவாகத் தொடங்குவதையும் புரட்சிகர மாற்றங்களின் செல் திசையையும் விஞ்ஞான ரீதியாக முன்காண மட்டுமே முடியும்.

''இடதுசாரித்'' திரிபுவாதிகள் சதியாலோசனைச் செயல் தந்திரத்துக்கு முதன்மை கொடுக்கிருர்கள். புரட்சியின் பிரதானச் சக்திகளுடன் தொடர்பு அற்ற தனித் தனிக் குழுக்களின்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 36, பக்கம் 457.

நடவடிக்கைகளை அவர்கள் ஒழுங்கமைத்து நடத்துகிறார்கள். கம்யூனிஸ்ட் கட்சி இவர்களுக்கு எதிராகப் போராட்டம் நடத்தியது, இப்போதும் நடத்திவருகிறது. பொதுமக்களுடன் தொடர்பின்மையும் குறுகிய பிரிவுவாதமும் புரட்சி லட்சியத்துக்குப் பெருங்கேடு விளைவிக்கக் கூடும், மக்களின் முன்னணிச் சக்திகளைத் தாக்குதலுக்கு உள்ளாக்கக் கூடும்.

புரட்சியின் காரணங்களையும் அதன் புறநிலை, அகநிலை வகைப்பட்ட முதனிலைகளையும் தெளிவுபடுத்திக் கொள்வது அதன் இயல்பையும் இயக்கு சக்திகளையும் புரிந்துகொள்வதற்கு மிக முக்கியமானது. ''புரட்சியை உண்மையில் மார்க்ஸீய முறையில், இயக்க இயல் பொருள்முதல்வாத நோக்கு நிலையிலிருந்து மதிப்பிடுவதற்கு, இன்னின்ன புறநிலை நிபந்தனைகளில் உள்ளவையும் இன்னின்ன வகையில் செயல்படுபவையும் போராட்டத்தின் இன்னின்ன வடிவங்களை மிகுந்த அல்லது குறைவான வெற்றியுடன் கையாளுபவையும் ஆன உயிரோட்டம் உள்ள சமூகச் சக்திகளின் போராட்டம் என்ற வகையில் அதை மதிப்பிடுவது அவசியம்''[1] என்று எழுதினார் வி. இ. லெனின்.

ஒரு புரட்சியின் இயல்பு எத்தகைய சமுதாயமுரண்பாடுகளை அது தீர்க்கிறது, அதன் விளைவாக எத்தகைய சமூக அமைப்பு உருவாகிறது என்பதையே பொறுத்திருக்கிறது. இதற்கு ஏற்ப, அடிமைச் சொந்தக்கார அமைப்பிலிருந்து நிலப்பிரபுத்துவத்துக்குப் பரிணமிக்கையில் நடந்த புரட்சிகளையும் நிலப்பிரபுத்துவத்திலிருந்து முதலாளித்துவத்துக்குப் பரிணமிக்கையில் நிகழ்ந்த புரட்சிகளையும் (பூர்ஷ்வாப் புரட்சிகள்) முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிக்கையில் நடந்த புரட்சிகளையும் (சோஷலிஸப் புரட்சிகள்) வேறுபிரித்து அறிவது அவசியம் ஆகும்.

புரட்சியை எந்த வர்க்கங்கள் செயல்படுத்துகின்றனவோ, புது அமைப்பின் வெற்றிக்காக எவை போராடுகின்றனவோ, அந்த வர்க்கங்களே அதன் இயக்கு சக்திகளாக விளங்குகின்றன. இந்த வர்க்கங்களில் ஒன்று வழிகாட்டியாக, புரட்சித் தலைவனாகச் செயலாற்றுகிறது. புரட்சியில் அக்கறை உள்ள பிற வர்க்கங்கள் இந்த வர்க்கத்தை மையமாகக் கொண்டு ஒன்று இணை

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 17, பக்கம் 43.

கின்றன. இவ்வாறு அவை இந்த வர்க்கத்தின் போராட்டக் கூட்டாளிகள் ஆகின்றன.

வெவ்வேறு நாடுகளில் வெவ்வேறு வரலாற்று நிலைமைகளில் நிகழும் ஒரே மாதிரியான புரட்சிகள் இயக்கு சக்திகள், சமூக மாற்றங்களின் ஆழம், திரளான பொதுமக்களின் ஒழுங்கமைப்பு, போராட்ட வடிவங்கள் ஆகியவற்றின் கணிசமான தனித்தன்மைகள்காரணமாக ஒன்றுக்கொன்று வேறுபடக் கூடும்.

*18, 19*ம் நூற்றாண்டுகளில், நிலப்பிரபுத்துவ அமைப்பு பல நாடுகளில் ஆதிக்கம் செலுத்தி வந்த சமயத்தில் ஐரோப்பாவில் நடந்த பூர்ஷ்வாப் புரட்சிகளை *1905—1907*ம் ஆண்டுகளில், ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் நிகழ்ந்த ருஷ்ய பூர்ஷ்வா ஜனநாயகப் புரட்சியுடன் உதாரணமாக ஒப்பிட்டுப் பார்ப்போம். நிலப்பிரபுத்துவக் காலப்பகுதியில் பூர்ஷ்வா வர்க்கம் அடிப்படையில் புரட்சிகர வர்க்கமாக இருந்தது. புரட்சியின் இயக்கு சக்தியாகவும் தலைவனாகவும் அது செயல்பட்டது. பழைய, நிலப்பிரபுத்துவ உறவுகளை அழிப்பதையும் புதிய, முதலாளித்துவ உற்பத்தி முறையின் வளர்ச்சிக்கு விரிவான வாய்ப்புக்கள் அளிப்பதையும் அது லட்சியமாக வைத்துக் கொண்டது. கைத்தொழிலாளர்களும் புதிதாகத் தோன்றியிருந்த பாட்டாளி வர்க்கமும் நகர, கிராமக் குட்டி பூர்ஷ்வாக்களும் குடியானவர்களும் இந்தப் போராட்டத்தில் பூர்ஷ்வாக்களின் கூட்டாளிகளாக இருந்தார்கள்.

*1905—1907*ம் ஆண்டுகளில் ருஷ்யாவில் நடந்த பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சி வேறு வரலாற்று நிலைமைகளில் நிறைவேறியது. அப்போது முதலாளித்துவம் தனது வாழ்வின் இறுதிக் கட்டமான ஏகாதிபத்தியத்தில் பிரவேசித்துவிட்டிருந்தது. இந்த நிலைமைகளில் பூர்ஷ்வாப் புரட்சி பண்பு வகையில் புதிய தனித்தன்மைகள் பெற்றுவிட்டது. ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் நிகழ்ந்த பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சியின் இந்தத் தனித்தன்மைகளை வி. இ. லெனின் விளக்கி விவரித்தார். ஜாரிஸ ஆட்சியை அகற்றுவதும் நிலப்பிரபுத்துவ-பண்ணையடிமை உறவுகளின் மீத மிச்சங்களை இறுதியாக ஒழிப்பதுமே இந்தப் புரட்சியின் பிரதான லட்சியங்கள் என அவர் காட்டினார். ஆனால், இந்தப் புரட்சியின் முன் இருந்த லட்சியங்கள் பூர்ஷ்வாத் தன்மை கொண்டிருந்தன எனினும் இதை இயக்கும் சக்தியாக விளங்கியது ருஷ்ய பூர்ஷ்வா வர்க்கம் அல்ல. ருஷ்ய பூர்ஷ்வா

வர்க்கம் புரட்சி இயக்கத்துக்குத் தலைமை தாங்க முடியவில்லை, புரட்சித் தலைவனாக இருக்க அதனால் இயலவில்லை, ஏனெனில் விரிவான மக்கள் திரளின் ஒழுங்கமைந்த செயல்பாட்டை அது அஞ்சியது. நிலப்பிரபுத்துவ உறவுகளுக்கு எதிராக, நிலப் பிரபுக்களுக்கு எதிராகப் பொதுமக்கள் நடத்தும் போராட் டத்தின் விளைவாக முதலாளித்துவ அமைப்புக்கும் முடிவு கட். டப்பட்டு விடலாம் என்று அது உள்ளூற உணர்ந்தது. ருஷ்ய பூர்ஷ்வா வர்க்கம் தனது நலன்கள் காரணமாக எதேச்சாதிகார அமைப்புடன் ஜீவாதார உறவு கொண்டிருந்தது. தொழிலாளி வர்க்கத்தின் புரட்சி நடவடிக்கைகளிலிருந்து தன்னைக் காப்பது எதேச்சாதிகாரமே என அது கருதியது.

முதலாவது ருஷ்யப் புரட்சியை இயக்கி, தலைமை வகித்து நடத்திய சக்தி பாட்டாளி வர்க்கமே. அது குடியானவர்களைத் தன்னுடன் நடத்திச் சென்றது. நிலப்பிரபுக்களுக்கு எதிராகக் குடியானவர்களின் இயல்பான போராட்டத்தில் அரசியல் உணர்வை அது புகுத்தியது. ருஷ்யக் குடியானவர்களின் புரட்சி இயக்கம், மேற்கு நாடுகளின் முந்திய பூர்ஷ்வாப் புரட்சிகளில் இருந்ததை விட ஒப்பிட முடியாத அளவு அதிக வலியதாக இருந்தது.

*1905—1907*ம் ஆண்டுகளில் நடந்த புரட்சியில் ருஷ்யத் தொழிலாளி வர்க்கம் போராட்டத்தின் பட்டாளி வர்க்க முறை களைக் கையாண்டது. பாட்டாளி வர்க்கத்தின் ஆயுதந்தாங் கிய கிளர்ச்சியுடன் திரளான மக்களின் அரசியல் வேலை நிறுத்தங்களும் ஒன்று சேர்ந்ததன் காரணமாகவே புரட்சி இயக்கம் வரலாறு முன் கண்டிராத பெரிய அளவில் நடந்தது. புரட்சிப் போராட்டத்தின்போது தோன்றின தொழிலாளர்கள், குடியானவர்கள், படைவீரர்கள் பிரதிநிதிகளின் சோவியத் துக்கள். மக்களின் புதிய புரட்சிகர ஆட்சி அதிகாரத்தின் முளைகளாக விளங்கின இவை.

இந்தத் தனித்தன்மைகள் யாவும் புரட்சியின் விளைவுகளை யும் பாதித்தன. முந்திய பூர்ஷ்வாப் புரட்சிகளில் நேர்ந்தது போல இந்தப் புரட்சி பூர்ஷ்வா வர்க்கத்தின் வெற்றியுடன் தீர்ந்துவிட முடியவில்லை. சோஷலிஸப் புரட்சியின் தோற்று வாயாக அமைந்தது அது.

ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் பூர்ஷ்வாப் புரட்சிகள் எந்தப் புதிய வரலாற்று நிலைமைகளில் நிறைவேற்றப்படுகின்

றனவோ அவற்றை ஆழ்ந்து ஆராய்ந்ததன் அடிப்படையில் வி. இ. லெனின் பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சியை சோஷலிஸப் புரட்சியாக மாற்றுவது பற்றிய சித்தாந்தத்தை உருவாக்கினார். ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பின்னர் நிகழ்ந்த புரட்சி வளர்ச்சியின் போக்கு முழுவதும் இந்த விஞ்ஞானச் சித்தாந்தத்தை உறுதிப்படுத்தியுள்ளது.

### § 2. சோஷலிஸப் புரட்சி

முதலாளித்துவ அமைப்பைப் புரட்சி மூலம் அழிக்காமல் சோஷலிஸம் தோன்ற முடியாது. எனவே, புதிய சோஷலிஸச் சமூகத்தை நிறுவுவதற்கு இன்றியமையாத நிபந்தனையாக விளங்குகிறது சோஷலிஸப் புரட்சி.

சோஷலிஸப் புரட்சி மற்ற எல்லா வகைச் சமுதாயப் புரட்சிகளிலுமிருந்து அடிப்படையில் வேறுபடுகிறது. முந்திய புரட்சிகள் சுறண்டலின் ஒரு வகைக்குப் பதில் மற்றொரு வகையை நிலைநிறுத்த மட்டுமே செய்தன. மாறாக, சோஷலிஸப் புரட்சியோ எல்லாவகைச் சுறண்டல்களிலிருந்தும், எல்லாவகைச் சமுதாய அடக்குமுறைகளிலிருந்தும் மக்களை விடுவிப்பதைக் கடமையாகக் கொள்கிறது. முந்திய புரட்சிகளுக்கும் சோஷலிஸப் புரட்சிக்குமுள்ள வேறுபாடு முதன்மையாக இதில்தான் அடங்கியிருக்கிறது. பழைய அமைப்பை அழிப்பதுடன், வாழ்வுதீர்ந்து விட்ட முதலாளித்துவ உறவுகளைத் துடைத்து ஒழிப்பதுடன் இந்தக் கடமை முடிந்துவிடுவதில்லை. பண்பு வகையில் புதிய, அதிகச் செவ்வையான சோஷலிஸ உறவுகளை நிறுவுவது இந்தக் கடமையை நிறைவேற்றுவதற்கு இன்றியமையாதது ஆகும்.

இன்னும், முந்திய புரட்சிகள் அனைத்தும் புதிய பொருளாதாரத்தை அமைப்பதைத் தங்கள் கடமையாக் கொள்ளவில்லை. அந்தப் புரட்சிகளில் ஒன்று நிறைவேறுவதற்கு முன்பே, பழைய அமைப்பின் கருவிலேயே புதிய பொருளாதாரம் தோன்றிவிட்டிருந்தது. எனவே முந்திய புரட்சிகள் ஏற்கனவே தோன்றிவிட்டிருந்த இந்தப் பொருளாதாரத்துக்குப் பொருத்தமாக அரசியல் ஆட்சியைச் சீர்படுத்த மட்டுமே செய்தன. ஏற்கனவே கூறப்பட்டது போல, சோஷலிஸப் பொருளாதாரம் பூர்ஷ்வா அமைப்பின் கருவில் உதிக்க முடியாது. ஆதலால் இந்தப் பொருளாதாரத்தை அமைப்பதும் வலுப்படுத்துவதும்

சோஷலிஸப் புரட்சின் யிமிக முக்கியமான, பண்பளவில் புதிய கடமையாக விளங்குகிறது.

சோஷலிஸப் புரட்சியின் இந்தத் தனிச்சிறப்பைச் சுட்டிக் காட்டுகையில் வி. இ. லெனின் பின்வருமாறு எழுதினர்: ''பொதுவாக முதலாளித்துவத்தை வெற்றி கொள்வதற்குத் தேவையானது முதலாவதாக, சுறண்டுவோரை வெல்வதும் சுறண்டப்படுவோரின் ஆட்சி அதிகாரத்தைத் தாங்கிப் போராடுவதும்—இது சுறண்டுவோர் ஆட்சியைப் புரட்சிச் சக்திகளால் அகற்றும் கடமை ஆகும்; இரண்டாவதாக ஆக்கக் கடமை—அதாவது புதிய பொருளாதார உறவுகளை அமைத்தல், இதை எவ்வாறு செய்வது என்பதற்கு உதாரணம் காட்டுதல். சோஷலிஸப் புரட்சியைச் செயல்படுத்தும் கடமையின் இந்த இரு அம்சங்களும்பிரிக்க முடியாதவாறு ஒன்றிணைந்தவை. அழிவு அம்சம் மட்டுமே போதுமானதாக இருந்த முந்திய எல்லாப் புரட்சிகளிலுமிருந்து நமது புரட்சியை இவை தனிப்பிரித்துக் காட்டுகின்றன.''[1] ஆக்கக் கடமை சோஷலிஸப் புரட்சியின் முதன்மையான, ஆகக் கடினமான கடமை. அதற்கு நேரமும் படைப்புத் தன்மை கொண்ட உழைப்பும் எல்லா உழைப்பாளி மக்களதும் உணர்வுடைமையும் ஒழுங்கமைப்பும் தேவைப்படுகின்றன.

முடிவாக, முந்திய எல்லாப் புரட்சிகளிலிருந்தும் வேருக, சோஷலிஸப் புரட்சி உண்மையில் மக்கள் அனைவருக்கும் உரிய புரட்சியாக விளங்குகிறது. உழைப்பாளி மக்களின் நலன்களுக்காக மட்டுமே அல்ல, பொது மக்களது பலத்தாலேயே, அவர்களது புரட்சி உற்சாகத்தையும் தியாகத்தையும் துணையாகக் கொண்டே இந்தப் புரட்சி நிறைவேற்றப்படுகிறது.

சோஷலிஸப் புரட்சியை இயக்கி நடத்தும் சக்தியாக, முடிவுவரை ஒத்தியைந்த புரட்சிகர வர்க்கமாக விளங்குகிறது பாட்டாளி வர்க்கம். எல்லா உழைப்பாளிகளுடையவும் நலன்களை அது வெளியிடுகிறது. அவர்களை ஒன்றுதிரட்டி, போராட்டத்தில் ஒழுங்கமைக்கிறது.

ஒரு குறிப்பிட்ட நாட்டில் பாட்டாளி வர்க்கம் மக்கள் தொகையில் பெரும்பான்மையாக இருப்பது சோஷலிஸப் புரட்சியின் வெற்றிக்குக் கட்டாயமாக இன்றியமையாதது

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 42, பக்கங்கள் 27-28.

அல்லவே அல்ல. சமூகத்தின் சுரண்டப்படும் படிவுகளை எல்லாம் தன் தரப்பில் ஈர்த்துக்கொண்டு, தனது கூட்டாளிகள் ஆக்கிக் கொள்வதன் வாயிலாகப் பாட்டாளி வர்க்கம் வெற்றி பெறுகிறது. தனது ஒற்றுமை, ஒழுங்கமைப்பு, விரிவான மக்கள் திரளுடன் தனது தொடர்பு, இவற்றின் காரணமாகப் பாட்டாளி வர்க்கம் வலிமையுள்ளது.

உழைப்பாளி மக்களின் லட்சியத்துக்காக ஊக்கத்துடன் போராடுவதும், புதிய சமூகத்திற்கான போராட்டத்தை ஒழுங்கமைத்துத் தூண்டி ஊக்குவதும் ஆன கம்யூனிஸ்ட் கட்சி புரட்சிகரப் பாட்டாளி வர்க்கத்துக்குத் தலைமை தாங்குகிறது. கம்யூனிஸ்ட் கட்சி தொழிலாளி வர்க்கத்தின் முன்னணி, அதன் மிக மிக உணர்வு உள்ளதும், மிக மிக முற்போக்கானதும் புரட்சிக் குறிக்கோளில் ஈடுபாடு உள்ளதும் ஆன பகுதி.

தனது முன்னணிப் பகுதியான மார்க்ஸீய-லெனினீயக் கட்சியின் தலைமையில் இயங்கும் தொழிலாளி வர்க்கத்தின் உலக வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பாத்திரத்தைச் சித்திரிக்கையில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல் திட்டம் கூறுவதாவது: ''உலகைப் புரட்சிகரமாக மாற்றியமைப்பதற்கு உரிய முதன்மை இயக்கு சக்தி ஆன தொழிலாளி வர்க்கம் மிக மிக ஒத்தியைந்த புரட்சிகர வர்க்கம் ஆகும். வர்க்கப் போராட்டங்களின் போது அது தன்னை ஒழுங்கமைத்துக் கொள்கிறது, தனது தொழிற்சங்கங்களையும் அரசியல் கட்சிகளையும் நிறுவுகிறது, முதலாளித்துவத்துக்கு எதிராகப் பொருளாதார, அரசியல், சித்தாந்தப் போராட்டத்தை நடத்துகிறது. பழைய சமூகத்தைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பது, புதிய அமைப்பை உருவாக்குவது என்ற தனது வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த செயலை நிறைவேற்றுவதன் மூலம் தொழிலாளி வர்க்கம் தனது சொந்த வர்க்க நலன்களை மட்டுமின்றி உழைப்பாளி மக்கள் அனைவரதும் நலன்களை வெளியிடுவது ஆகிவிடுகிறது. முதலாளித்துவத்தை எதிர்த்துப் போராடும் எல்லாச் சக்திகளுக்கும் இயல்பாகவே தலைமைச் சக்தியாக அது செயலாற்றுகிறது.''

உற்பத்தியின் சமூகத் தன்மைக்கும் உரிமையாக்கிக் கொள்வதன் தனியார் வடிவுக்கும் இடையிலுள்ள முரண்பாடு முதலாளித்துவ உற்பத்தி முறையின் அடிப்படை முரண்பாடு ஆகும். இதுவே சோஷலிஸப் புரட்சியின் புறநிலை அடிப்படையாக விளங்

குகிறது. பாட்டாளி வர்க்கத்துக்கும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கும் இடையிலுள்ள சமரசப்படுத்த முடியாத பகைமையிலும் வர்க்க, நாட்டினப் பிணக்குகளின் பல்வேறு வடிவங்களிலும் இந்த முரண்பாடு வெளிப்படுகிறது. முதலாளித்துவத் தனியார் சொத்துரிமையைப் புரட்சி வாயிலாக ஒழிப்பதன் மூலமே இந்தப் பிணக்குகளைத் தீர்ப்பது இயலும். ஆகவே, சோஷலிஸப் புரட்சியின், முதலாளித்துவச் சமூகத்தைப் புரட்சி மூலம் சோஷலிஸச் சமூகமாக மாற்றி அமைப்பதன் இன்றியமையாமை முதலாளித்துவ வளர்ச்சியின் புறநிலை விதிகளாலேயே தோற்றுவிக்கப்படுகிறது.

ஏகாதிபத்தியம் முதலாளித்துவ வளர்ச்சியின் இறுதிக் கட்டம் என்றும், அழுகிப்போன, மடிந்துகொண்டிருக்கிற முதலாளித்துவமே அது என்றும் வி. இ. லெனின் காட்டினர். தனித்தனி முதலாளித்துவத் தொழில் நிலையங்களின் கட்டற்ற போட்டி ஏகாதிபத்தியத்தின் நிலைமைகளில் விற்பனைச் சந்தைகளுக்காகவும் கச்சாப் பொருள்களின் ஊற்றுக்கண்களுக்காகவும் ஏகபோகக் கம்பெனிகளின் போராட்டமாக மாறிவிடுகிறது. ஒடுக்கப்பட்ட மக்கள், திரளான உழைப்பாளி மக்கள்—தொழிலாளர்கள், குடியானவர்கள், தொழில்நுட்ப ஊழியர்கள், அலுவலகச் சிப்பந்திகள் ஆகியோர்—ஏகாதிபத்தியத்தின் மேலும் மேலும் அதிகரிக்கும் அடக்கு முறைக்கு ஆளாகிறார்கள்

ஏகாதிபத்தியம் அடிமுதல் நுனிவரை முழுமையாகப் பிற்போக்கைக் குறிக்கிறது. பூர்ஷ்வா ஜனநாயகத்துக்கு மறுப்பு, ஏகபோக பூர்ஷ்வா வர்க்கத்தின் வெளிப்படையான சர்வாதிகாரத்துக்குப் பரிணமிப்பு, மக்கள்விரோதச் சட்டங்களைத் திரளான பொதுமக்கள்மீது திணிக்கவும் முற்போக்குள்ள ஜனநாயக இயக்கங்களை நசுக்கவும் முயற்சி—இவை எல்லாம் ஏகாதிபத்தியத்தின் தன்மைகள். இடைவிடாத ஆயுத உற்பத்திப்போட்டி, போர்களுக்கான முஸ்தீப்பு, மற்ற நாட்டினரின் உள் விவகாரங்களில் பலவந்தமான தலையீடு ஆகியவை ஏகாதிபத்தியத்தின் தன்மைக்குரிய அடையாளங்கள் ஆகும். சோஷலிஸப் புரட்சியின் முற்போது தான் ஏகாதிபத்தியம்.

ஏகாதிபத்தியச் சகாப்தத்தில் பயன்படும் வகையில் சோஷலிஸப் புரட்சி பற்றிய சித்தாந்தம் வி. இ. லெனினால் செப்பம் செய்யப்பட்டது. ஏகாதிபத்தியத்தில் முதலாளித்துவ நாடுகளின் வளர்ச்சி மிக அதிகமான ஏற்றத்தாழ்வுகளுடன், பாய்ச்

சல் முறையில் நடக்கிறது என்று அவர் காட்டினர். தற்கால முதலாளித்துவத்தின் பொருளாதார, அரசியல் வளர்ச்சியின் சமமின்மை பற்றிய விதியின் செயல்பாடு காரணமாக சோஷலிஸப் புரட்சிகள் சில நாடுகளில் மற்ற நாடுகளைக் காட்டிலும் முன்னதாக முதிர்ந்துவிடுகின்றன.''இதிலிருந்து பின்வரும் மறுக்க இயலாத முடிவு பெறப்படுகிறது: சோஷலிஸம் எல்லா நாடுகளிலும் ஒரே சமயத்தில் வெற்றிபெற முடியாது. தொடக்கத்தில் அது ஒரு நாட்டில் அல்லது சில நாடுகளில் வெற்றி பெறும். மற்ற நாடுகள் சிறிது காலத்திற்கு பூர்ஷ்வா நாடுகளாகவோ பூர்ஷ்வா அமைப்புக்கு முந்திய நிலையிலுள்ள நாடுகளாகவோ இருந்து வரும்.''[1]

லெனினது இந்த மேதைவாய்ந்த முடிவு வரலாற்றின் போக்கு அனைத்திலுைம் சீரிய முறையில் உறுதிப்படுத்தப் பட்டிருக்கிறது. சோஷலிஸப் புரட்சி முதன் முதலில் ஒரு நாட்டில்—ருஷ்யாவில்—மட்டுமே வெற்றி பெற்றது. சோவியத் நாட்டில் முதலாளிகளின் ஆட்சிக்கு நிலையாக முற்றுப்புள்ளி வைத்துவிட்ட மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி உலகம் அனைத்திலும் புரட்சி இயக்கத்துக்குப் பெருத்த தூண்டுதல் அளித்தது. இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு பல ஐரோப்பிய, ஆசிய நாடுகளில் வெற்றிகரமான சோஷலிஸப் புரட்சிகள் நடந்தேறின. முதலாளித்துவச் சுறண்டல் என்னும் நுகத்தைக் கழற்றி எறிந்த முதலாவது லத்தீன் அமெரிக்க நாடு ஆன க்யூபாவிலும் சோஷலிஸப் புரட்சி வெற்றி வாகை சூடியது.

அகில உலகப் பரிமாணத்தில் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு நிகழும் மாபெரும் சகாப்தம் தொடங்கிவிட்டது. முதலாளித்துவம் உலகின் ஒரே சமூக அமைப்பாக இருந்தது தற்காலத்தில் நின்றுவிட்டது. சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு வளர்ந்து வலுப்பெற்றுள்ளது. விடுதலை பெற்ற சுதந்திர அரசுகள் இதில் ஒன்றிணைந்துள்ளன. கம்யூனிஸச் சமூகத்தை நிறுவுதலும் மக்களது அமைதியான ஆக்க வாழ்வுமே இந்த அரசுகளின் பொதுக் குறிக்கோள். சோஷலிஸ நாடுகளின் நட்பை வலுப்படுத்துவதற்காகவும் பொரு

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 30, பக்கம் 133.

ளாதார அரசியல் ஒத்துழைப்பை விரிவுபடுத்துவதற்காகவும் போராடுவது கம்யூனிஸ்ட் கட்சிகளின் சர்வதேசக் கடமையாக விளங்குகிறது. ஏகாதிபத்தியத்துக்கும் அதன் ஆக்கிரமிப்புச் சூழ்ச்சிகளுக்கும் எதிரான போராட்டத்தில் சோஷலிஸ நாடுகளினது சக்திக்கும் வெல்ல முடியாமைக்கும் தலையூற்முக இருப்பது அவற்றின் நட்புறவே ஆகும்.

சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பு ஒவ்வொரு நாட்டிலும் ஸ்தூலமான வரலாற்று நிலைமைகளில் நிகழ்கிறது. ஒவ்வொரு நாட்டின் அனுபவமும் சோஷலிஸக் கட்டுமானம் பற்றிய விஞ்ஞானத்தின் பொக்கிஷத்தில் ஒரு பகுதியாகச் சேர்கிறது. அதே சமயம், வெவ்வேறு நாடுகளில் சோஷலிஸப் புரட்சிக்கும் சோஷலிஸக் கட்டுமானத்துக்கும் பின்வரும் பொது அம்சங்களும் விதிமுறைகளும் இயல்பானவை:

பாட்டாளி வர்க்கம் புரட்சியை நடத்துவதிலும் ஒரு அல்லது மற்றொரு வடிவில் பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தை நிறுவுவதிலும் உழைப்பாளி மக்கள் திரள் மார்க்ஸீய-லெனினீயக் கட்சியைக் கருவாகக்கொண்ட தொழிலாளி வர்க்கத்தால் தலைமைதாங்கி நடத்தப்பெறுதல்;

குடியானவர்களின் திரளான பெரும்பான்மையுடனும் உழைப்பாளி மக்களின் பிற படிவுகளுடனும் தொழிலாளி வர்க்கத்தின் ஒற்றுமை;

பிரதான உற்பத்திச் சாதனங்கள்மீது முதலாளித்துவச் சொத்துரிமை அகற்றப்படுதல்;

விவசாயம் படிப்படியாகச் சோஷலிஸ முறையில் மாற்றி அமைக்கப்படுதல்;

சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவுவதையும் உழைப்பாளிகளின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதையும் நோக்கமாகக் கொண்ட திட்டமிட்ட தேசீயப் பொருளாதார வளர்ச்சி;

கொள்கைவாத, பண்பாட்டுத் துறைகளில் சோஷலிஸப் புரட்சி நிறைவேற்றப்படுதல், தொழிலாளி வர்க்கத்துக்கும் உழைப்பாளி மக்களுக்கும் சோஷலிஸ லட்சியத்துக்கும் விசுவாசமுள்ள பெருந்தொகையான அறிவுஜீவிகளை உருவாக்குதல்;

நாட்டின அடக்கு முறையை ஒழித்தல், மக்களுக்கு இடையே சம உரிமையை நிலைநாட்டுதல்;

சோஷலிஸத்தால் பெறப்பட்ட நலங்களை வெளி, உள் பகைவர்களின் தாக்குதலிலிருந்து பாதுகாத்தல்;

மற்ற நாடுகளின் தொழிலாளி வர்க்கத்துடன் குறித்த நாட்டின் தொழிலாளி வர்க்கத்தினது ஒருமைப்பாடு—அதாவது பாட்டாளி வர்க்கச் சர்வதேசியம்.

சோஷலிஸப் புரட்சிக்குரிய பிரதான விதிமுறைகளின் பொதுமை பாட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்துக்கான போராட்டத்தின் வடிவங்கள் வெவ்வேருக இருப்பதை நீக்கிவிடுவதில்லை. சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பதன் வடிவங்கள், தொழிலாளி வர்க்கத்தால் அரசியல் அதிகாரம் வென்று பெறப்படும் விதங்கள், சோஷலிஸப் புரட்சியைச் செயல்படுத்துவதற்கான முறைகளும் வழிகளும் ஆகியவை வெவ்வேறு நாடுகளில் வெவ்வேருக இருக்கலாம். குறித்த நாட்டில் நிலவும் வர்க்கங்களின் வரிசை, புரட்சி நிகழும் சிறப்பான வரலாற்றுச் சூழ்நிலை, நாட்டின் தேசியத் தனித்தன்மைகள் ஆகியவற்ருல் இந்த வேறுபாடுகள் ஏற்படுகின்றன.

புரட்சியின் பொது விதிகளையும் குறித்த நாட்டில் அவை வெளிப்படும் தனித்தன்மைகளையும் கருத்தில் கொள்வது எவ்வளவு முக்கியமானது என்பதை மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி, மற்ற நாடுகளில் நிகழ்ந்த பாட்டாளி வர்க்கப் புரட்சிகள் ஆகியவற்றின் அனுபவம் காட்டுகிறது. உதாரணமாக, தொழிலாளி வர்க்கம் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுதல் ஆயுதக் கிளர்ச்சியின் தன்மையைக் கொண்டிருப்பது, இரத்தப் பெருக்குடனும் இரணுவ மோதல்களுடனும் நிகழ்வது கட்டாயமல்ல. குறித்த நிலைமைகளில், தனித்தனி நாடுகளில் புரட்சி அமைதியான முறையில் நிகழ்வது சாத்தியமே. ருஷ்யாவில் ஆட்சி அதிகாரம் சமாதான ரீதியாகத் தொழிலாளர்கள் கைக்கு மாறுவது சாத்தியம் என்று 1917ம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடந்த பூர்ஷ்வா-ஜனநாயகப் புரட்சிக்குப் பின் உடனடியாக வி. இ. லெனின் எண்ணிஞர்.

ஆனல் சுறண்டுவோர் வர்க்கங்கள் பாட்டாளி வர்க்கத்தை எதிர்த்தால் புரட்சி அமைதியற்ற வழியில் செல்கிறது, ஆயுதக் கிளர்ச்சியில் போய் முடிகிறது. ஆயுதக் கிளர்ச்சி என்பது தனி வகைப்பட்ட அரசியல் போராட்டம். தனக்கே உரிய விதிகளுக்கு உட்பட்டது அது. புரட்சிக் கட்சியைப் பெரும்பான்

மையான உழைப்பாளிகள் பின்பற்றுவதும் நாடு பரவிய அளவில் புரட்சியின் வளர்ச்சி நிலவுவதும் பழைய அரசாங்கம் உளத்திண்மையிலும் அரசியல் நோக்கிலும் ஒரேயடியாகத் தோல்வி நிலையில் இருப்பதும் எல்லா இடைநிலைப் படிவுகளும் தயக்கத்தில் இருப்பதும் கிளர்ச்சி வெற்றிகரமாக நடப்பதற்கு அவசியமானவை என்று வி. இ. லெனின் சுட்டிக்காட்டினார். மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி, புரட்சியின் எல்லாச் சந்தர்ப்பங்களும் நிலைமைகளும் துல்லியமாகக் கணக்கில் எடுத்துக்கொள்ளப்பட்டதற்குச் சிறந்த உதாரணமாகவும் புரட்சிகர மாற்றம் நிகழ்த்திய மக்களின் முன்னணிச் சக்திகளது ஒருமைப்பாட்டுக்கும் மனவுறுதிக்கும் முன்மாதிரியாகவும் திகழ்கிறது.

மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகள் புரட்சிபற்றிய சீர்திருத்தவாதிகளின் புரிவையும் திரிபுவாதிகளின் புரிவையும் எதிர்த்துக் கடுமையான கொள்கைவாதப் போராட்டம் நடத்திவருகின்றன. பூர்ஷ்வா வர்க்கத்தைப் புரட்சிமூலம் ஆட்சியிலிருந்து அகற்றுவதன் இன்றியமையாமையைச் சீர்திருத்தவாதிகள் மறுக்கிறார்கள். முதலாளித்துவ அமைப்பு நிலவுவதைப் பாதிக்காத சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டுவருவதுடன் நின்றுவிட அவர்கள் முயல்கிறார்கள். பூர்ஷ்வாச் சமூகத்தில் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்களும் வர்க்கப் போராட்டமும் நிலவுவதை அவர்கள் மறுக்கிறார்கள், தனியார் சொத்துரிமையையும் பூர்ஷ்வா அரசையும் ஆதரிக்கிறார்கள். சில முதலாளித்துவ நாடுகளில் அரசியல் அதிகாரம் சீர்திருத்தவாதிக் கட்சிகளின் கைகளில் இருக்கிறது. ஆயினும் இந்த அரசுகளின் கொள்கை முன்போலவே, ஆதிக்கம் வகிக்கும் முதலாளிகள் வர்க்கத்தின் நலன்களுக்கு ஏற்றதாகவே உள்ளது.

தற்கால ''இடதுசாரித்'' திரிபுவாதிகள் புரட்சி இயக்கத்தில் பாட்டாளி வர்க்கத்தின் தலைமைப் பாத்திரத்தைப் பற்றிய மார்க்ஸீய போதனையை மறுக்கிறார்கள். புரட்சிப் பரிணமிப்பின் வடிவங்கள் பல்வகைப்படும் என்ற லெனினது முடிவுகளை இவர்கள் ஏற்பதில்லை. புரட்சியின் புறநிலைக் காரணிகளை இவர்கள் மறுக்கிறார்கள். விரிவான மக்கள் திரள் கலந்துகொள்வது அற்ற இரகசியச் சூழ்ச்சிகளையே முதன்மையாக நம்புகிறார்கள். உலக யுத்தத்தின் வாயிலாகப் புரட்சியைத் தூண்டிவிட

முடியும் என்ற இவர்களது வலிந்துரை மிகப் பெருத்த அபாயம் நிறைந்தது.

எல்லாப் புரட்சிச் சக்திகளும் வளர்வதற்குச் சாதகமான சூழ்நிலை தற்போது உலக அரங்கில் உருவாகியுள்ளது. முதலாளித்துவ உலகம் ஆழ்ந்த நெருக்கடிக்கு உள்ளாகியிருக்கிறது. இந்த நெருக்கடி அதன் பொருளாதார, அரசியல், கொள்கைவாதத் துறைகளில் வியாபித்துள்ளது. பூர்ஷ்வாச் சமூகத்தின் சமரசப்படுத்த முடியாத வர்க்க, நாட்டின முரண்பாடுகள் முன் ஒருபோதும் இல்லாத அளவு அம்மணமாகி விட்டன. மனிதகுலத்தின் பெரும்பான்மைமீது முதலாளித்துவம் தனது அதிகாரத்தை மீட்க இயலாதவாறு இழந்துவிட்டது. இவை எல்லாம் முதலாளித்துவ நாடுகளின் மக்கள் சோஷலிஸப் புரட்சியை நிறைவேற்றுவதன் இன்றியமையாமையை உணரும்படி செய்துவருகின்றன. ''மொத்தத்தில் உலக முதலாளித்துவ அமைப்பு முழுவதும் பாட்டாளி வர்க்கத்தின் சமுதாயப் புரட்சிக்குப் பக்குவம் ஆகிவிட்டது'' என்கிறது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிச் செயல்திட்டம்.

ஏகாதிபத்தியத்துக்கும், ஏகபோக ஸ்தாபனங்களின் ஆதிக்கத்துக்கும், இராணுவ துர்ச்சாகசச் செயல்களுக்கும், பாசிஸத்துக்கும் எதிராக அனேக முதலாளித்துவ நாடுகளின் மக்களது அனைத்து ஜனநாயகப் போராட்டம் தற்கால நிலைமைகளில் சோஷலிஸத்துக்கான போராட்டத்துக்கே இட்டுச் செல்கிறது. இந்தப் போராட்டம் திரளான பொதுமக்களை ஒன்றுபடுத்துகிறது, அடிப்படையான சமுதாய மாற்றங்களின் இன்றியமையாமையை அவர்கள் உணருமாறு செய்கிறது. ''ஏகபோக ஸ்தாபனங்களுக்கு எதிரான அனைத்து ஜனநாயகப் போராட்டம் சோஷலிஸப் புரட்சியைத் தொலைவில் அகற்றவில்லை, அருகேயே கொண்டுவருகிறது. ஜனநாயகத்துக்கான போராட்டம் சோஷலிஸத்துக்கான போராட்டத்தின் உறுப்புப் பகுதி ஆகும்'' என்று கூறுகிறது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டம்.

தற்போதையச் சகாப்தத்தில் வரலாற்று வளர்ச்சியின் முக்கியமான செல்திசையை சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பும் ஏகாதிபத்தியத்துக்கு எதிராக, சமூகத்தை சோஷலிஸ முறையில் மாற்றி அமைப்பதன் பொருட்டுப் போராடிவரும் சக்திகளுமே நிர்ணயிக்கின்றன. சோவியத் யூனியனதும்

சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பினதும் விறல் சோஷலிஸ நாடுகளது சுதந்திரத்தின் மீது ஏகாதிபத்தியவாதிகளின் எல்லாவித ஆக்கிரமிப்புக்களையும் எதிர்த்து முறியடிக்கும் நம்பகமான காப்பாக விளங்குகிறது.

தனது பொருளாதார, அரசியல், பண்பாட்டு நிறைவேற்றங்கள் காரணமாக சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு முதலாளித்துவ நாடுகளில் புரட்சிப் போராட்டத்தின் போக்கின்மீதும் வளர்ச்சிமீதும் தீவிரமான செல்வாக்கு செலுத்தி வருகிறது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 23வது காங்கிரஸில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தில் பின்வருமாறு குறிக்கப்பட்டுள்ளது: ''முதலாளித்துவ நாடுகளில் தொழிலாளர் இயக்கம் ஏகபோக ஸ்தாபனங்களுக்கு எதிராகப் பெருத்த வர்க்கப் போராட்டங்கள் நிகழ்த்தி வருகிறது. அனேக நாடுகளின் பாட்டாளி வர்க்கம் சுறண்டுவோர் அமைப்பு மீது மேற்கொண்டு தாக்குதல்கள் நடத்துவதற்கு ஏற்ற புது நிலைகளை வென்று பெற்றுள்ளது. தொழிலாளர் இயக்கத்தைச் சேர்ந்த வெவ்வேறு பிரிவுகளின் நடவடிக்கைகளில் ஒற்றுமை ஏற்படுவதற்கான வாய்ப்புக்கள் கடந்த சில ஆண்டுகளில் சில நாடுகளில் காணப்படுகின்றன. ஏகபோக ஸ்தாபனங்களின் அடக்குமுறைக்கு எதிராகப் போரிடும் பிற சமுதாயப் படிவுகள் தொழிலாளி வர்க்கத்தை மையமாகக் கொண்டு மேலும் மேலும் ஒன்று திரண்டு வருகின்றன.''

## § 3. தேசிய விடுதலைப் புரட்சிகள்

ஏகாதிபத்தியத்துக்கு எதிராக ஆதீன நாடுகள், காலனிகள் ஆகியவற்றின் மக்கள் நடத்திவரும் தேசீய விடுதலைப் போராட்டம் உலகப் புரட்சி இயக்கத்தின் முக்கிய உறுப்புப் பகுதியாகத் திகழ்கிறது. தேசீய விடுதலைப் போராட்டம் பல்வேறு வடிவங்கள் கொண்டிருப்பதற்குக் காரணம் இந்த நாடுகளின் மக்களது வரலாற்று வளர்ச்சி நிலைமைகள் ஆகும். ஆனால் பொது அம்சங்களும் போக்குக்களும் இந்தப் போரட்டத்துக்கு உள்ளன. இவற்றை நாம் சுருக்கமாகப் பார்வையிடுவோம்.

மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி வெற்றி பெற்றதும் சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு உருவானதும்

தேசிய விடுதலைப் போராட்டம் மும்முரமாக வளர்ச்சி பெறுவதற்கு உதவின. ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்கா ஆகியவற்றின் பல நாடுகள் ஏகாதிபத்தியத்துடன் போராடி விடுதலை அடைந்தன. காலனி ஆட்சி அமைப்பு தகர்ந்து சிதறுவது கடந்த சில ஆண்டுகளில் சிறப்பாகத் தீவிரம் அடைந்திருக்கிறது. 1939ம் ஆண்டில் காலனிகள் ஆதீன நாடுகளின் மக்கள் தொகை மனிதகுலத்தில் சுமார் மூன்றில் இரண்டு பகுதியாக இருந்தது. தற்போதோ, காலனி ஆட்சியாளர்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருப்பவர்கள் உலக ஜனத்தொகையில் இரண்டு சதவிகிதத்துக்கும் குறைவான மக்களே ஆவர்.

தேசிய விடுதலைப் புரட்சிகள் காலனிகளிலும் ஆதீன நாடுகளிலும் நடந்துவரும் ஜனநாயகப் புரட்சிகளின் ஒரு வடிவமே ஆகும். வெளிநாட்டு மூலதனத்துக்கு ஆதீனப்பட்டிருப்பதை ஒழிப்பதையும் பிற்போக்குள்ள நிலப்பிரபுத்துவ உறவுகளைத் தகர்ப்பதையும் ஏகாதிபத்தியவாதிகளுக்கு ஆதரவான மக்கள் விரோத அரசாங்கங்களைத் தீர்த்துக்கட்டுவதையும் இந்தப் புரட்சிகள் நோக்கமாகக் கொண்டுள்ளன. தொழிலாளர்கள், குடியானவர்கள், அரைப் பாட்டாளிகள், அறிவுஜீவிகள், தேசீய பூர்ஷ்வா வர்க்கம் ஆகிய விரிவான மக்கள் படிவுகள் இந்தப் புரட்சிகளில் அக்கறை கொள்கின்றன.

ஸ்தூல வரலாற்று நிலைமைகளுக்கு ஏற்ப அனேக நாடுகளில் தேசிய விடுதலைப் புரட்சிகள் பின்வரும் கடமைகளை மேற்கொள்ளுகின்றன: பெருத்த தேசீய பூர்ஷ்வாக்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தல், விவசாய நிலைமைகளை மாற்றி அமைத்தல், பாங்கிகளையும் வர்த்தக, தொழில் நிலையங்களையும் தேசிய உடைமை ஆக்குதல். பின்தங்கிய நாடுகள் முன்னணி நாடுகளைச் சேர்ந்த பாட்டாளி வர்க்கத்தின் உதவியால் வளர்ச்சியின் முதலாளித்துவக் கட்டத்தில் பிரவேசிக்காமலே சோஷலிஸ அமைப்புக்குப் பரிணமிக்க முடியும் என்று தேசிய விடுதலை இயக்கத்தின் வளர்ச்சி வாய்ப்புக்களை ஆதாரபூர்வமாக நிலை நாட்டுகையில் வி. இ. லெனின் சுட்டிக் காட்டினார்.[1] உலகனைத்திலும் உள்ள முன்னணிப் பாட்டாளி வர்க்கத்தினருக்கும் காலனிகளையும் வளர்ச்சி குன்றிய நாடுகளையும் சேர்ந்த ஒடுக்கப்பட்ட மக்களுக்கும் இடையே ஒற்றுமைக்கான

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 41, பக்கங்கள் 245-246 பார்க்க.

தனிப்பட்ட வடிவங்களைத் தேடிக் காண்பது இந்தப் பரிணமிப்பை நிறைவேற்றுவதற்கு இன்றியதது ஆகும்.

முதலாளித்துவத்தில் புகாமலே சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பதற்கு நாட்டின் வளர்ச்சியில் ஒரு பரிணமிப்புக் காலப் பகுதி தேவை. சமூக உறவுகளின் பல்வேறு வடிவங்கள் இந்தக் காலப்பகுதியில் நிலவக் கூடும். முந்திய சமுதாய-பொருளாதார அமைப்புக்களின், உதாரணமாக சாதி-குல அமைப்பின் மீத மீச்சங்களும் முதலாளித்துவத்துக்கு முந்திய உறவுகள், முதலாளித்துவ உறவுகள் ஆகியவற்றின் வேறு வடிவங்களும் இந்தக் காலப்பகுதியில் நிலவக் கூடும். வெளிநாட்டு பாங்கிகளும் தொழில் நிலையங்களும் பெரும் தேசீய பூர்ஷ்வாக்களின் தொழிற்சாலைகளும் தேசீய உடைமை ஆக்கப்படுவதன் அடிப்படையில் உருவாகிறது அரசினர் துறை. நாட்டின் விடுதலைக்குத் தேவையான பொருளாதார அஸ்திவாரம் இது. வெளிநாட்டு ஏகபோக ஸ்தாபனங்களிலிருந்து நாடு பொருளாதார விடுதலை பெறுதல், அதன் இயந்திரத்தொழில் அடிப்படை எல்லா வகையிலும் வளர்ச்சி அடைதல், விவசாய-குடியானவர் பிரச்சினை வெற்றிகரமாகத் தீர்க்கப்படுதல், உழைப்பாளி மக்களது வாழ்க்கையின் பொருளியல், பண்பாட்டுத் தரம் உயர்த்தப் படுதல் ஆகியவற்றின் நிலைமைகளிலேயே நாட்டின் தேசீய மறுமலர்ச்சி சாத்தியம் ஆகும்.

ஏகாதிபத்தியத்துக்கும் உள்நாட்டுப் பிற்போக்குக்கும் எதிரான கடும் போராட்டம், நாடு அனைத்திற்கும் பொதுவான குறிக்கோள்களுக்காகவும் சமாதானப் பற்றுள்ள கொள்கைக்காகவும் போராட்டம், முதலாளித்துவம் அற்ற வளர்ச்சிப் பாதையிலும் நடக்கக் கூடாதது அல்ல. காலனி ஆட்சியின் புது வடிவங்களை மக்கள்மீது சுமத்துவதற்கு எந்தச் சாதனங்களையும் கையாள ஏகாதிபத்தியவாதிகள் தயங்குவதில்லை என்பதை வரலாற்று அனுபவமும் கடந்த சில ஆண்டுகளின் நிகழ்ச்சிகளும் காட்டுகின்றன. விடுதலை அடைந்த நாடுகளின் உள்விவகாரங்களில் அவர்கள் ஆயுதத் தலையீடு செய்கிறார்கள், இராணுவத்தின் வாயிலாக அரசாங்க மாற்றம் நிகழ்த்துகிறார்கள், விரிவான உழைப்பாளி மக்கள் திரளின் நலன்களுக்குப் பொருத்தமான சமூக மாற்றங்கள் ஏற்படுத்தும் நாடுகளின் அரசாங்கங்களுக்கு எதிராக மறைமுக நாச வேலைகளைத் தீவிரப்படுத்துகிறார்கள்.

சோவியத் யூனியனும் பிற சோஷலிஸ நாடுகளும் ஏகாதிபத்தியத்துக்கு எதிராகத் தேசிய விடுதலையின் பொருட்டுப் போராடும் மக்களுக்கு எல்லா வகையிலும் ஆதரவு அளிக்கின்றன, விடுதலை பெற்ற நாடுகளின் பொருளாதார, பண்பாட்டு வளர்ச்சியில் ஒத்துழைக்கின்றன, எல்லாக் கண்டங்களதும் ஏகாதிபத்திய எதிர்ப்பு முன்னணியை வலுப்படுத்துகின்றன. ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தின் வெற்றிகள் சோஷலிஸ நட்புறவு மண்டலத்தின் எல்லாச் சக்திகளும் தற்காலத்தின் எல்லாப் புரட்சிச் சக்திகளும் உறுதியாக ஒன்றுபடுவதையும் உலகக் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் ஒற்றுமை வலுப்படுவதையுமே பொறுத்திருக்கின்றன.

அத்தியாயம் பன்னிரண்டு

# சமூக உணர்வும் சமூக வாழ்வில் அதன் பங்கும்

உற்பத்தி முறையும் பொருளாதார உறவுகளும் சமூக வளர்ச்சியில் கொண்டுள்ள நிர்ணயகரமான முக்கியத்துவத்தை வலியுறுத்தும் அதே சமயத்தில் சமூகத்தின் ஆன்மீக வாழ்வைப் பகுத்தாராய்வதிலும் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் பெருத்த கவனம் செலுத்துகிறது. சமூக உணர்வு என்பது மனிதர்களுடைய வாழ்வின் இன்றியமையாத அம்சம் ஆகும். அது இல்லாமல் எந்தச் சமூகமும் நிலவ முடியாது.

சமூக உணர்வு என்பது என்ன, அது எவ்வாறு தோன்றி வளர்கிறது, அதன் வடிவங்களும் அவை சமூக வாழ்வில் ஆற்றும் பங்கும் என்ன என்று பார்ப்போம்.

## § 1. சமூக உணர்வு என்பது என்ன

சமூக உணர்வு என்பது சமூகத்தின் ஆன்மீக வாழ்வு, அதாவது மனிதர்களின் சமூக வாழ்வு எவற்றில் பிரதிபலிக்கிறதோ அந்த அரசியல், சட்ட, ஒழுக்கநெறி, விஞ்ஞான, தத்துவ, அழகியல் கருத்துக்களும் நோக்குக்களும் சித்தாந்தங்களும் மத எண்ணங்களும் சமுதாய உணர்ச்சிகளும் மனநிலைகளும் வழக்க பழக்கங்களும் ஆகும்.

சமூக உணர்வு எப்படித் தோன்றுகிறது? அதன் தன்மை யாது? இந்தப் பிரச்சினை குறித்துக் கருத்துமுதல்வாதத்துக்கும் பொருள்முதல்வாதத்துக்கும் கடும் போராட்டம் நெடுங்காலமாக நடந்து வருகிறது. சமூக நோக்குக்களும் சித்தாந்தங்களும் தோன்றியதன் காரணம் ஒன்று மனிதர்களின் உணர்வில் இருக்

கிறது அல்லது புலனறிவுக்கு அப்பாற்பட்ட ஏதோ சக்தியில், அதாவது கடவுளில் இருக்கிறது என்று நிரூபிக்கக் கருத்து முதல்வாதிகள் முயல்கிறார்கள். இவ்விரு சந்தர்ப்பங்களிலும் சமூக உணர்வின் ஊற்றுக்கண்கள் சமூகத்தின் பொருளியல் வாழ்வுடன் தொடர்பற்ற நிலையில் பரிசீலிக்கப்படுகின்றன. இம்மாதிரி நோக்கு நிலைகள் சமூக வளர்ச்சியின் எதார்த்த விளக்கத்தைத் திரிக்கின்றன.

விஞ்ஞானக்கேடான கருத்துமுதல்வாத நோக்குக்களைக் கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் விமர்சித்தார்கள். சமூக உணர்வு தோன்றியதன் காரணத்தை மனிதர்களின் தலைகளுக்குள் அல்ல, பொருளியல் நலங்களின் உற்பத்தி முறையில் தேட வேண்டும் என்று காட்டினார்கள். சமூக உணர்வு என்பது பொருளியல் உற்பத்தி உறவுகளின் விளைபொருள், அவற்றின் காரணமாக உண்டாவது. இதன் அர்த்தம் என்னவென்றால் சமூக இருத்தல் முதன்மையானது, சமூக உணர்வு இரண்டாவது என்பதாகும். ''மனிதர்களின் இருத்தலை நிர்ணயிப்பது அவர்களது உணர்வு அல்ல, மாறாக, அவர்களுடைய சமூக இருத்தலே அவர்களது உணர்வை நிர்ணயிக்கிறது.''[1]

சமூக உணர்வு சமூக இருத்தலைப் பிரதிபலிக்கிறது. சமூகத்தின் பொருளியல் வாழ்வும் அதன் உற்பத்தி முறையும் உற்பத்தி உறவுகளும் எத்தகையனவோ, அத்தகையனவே மனிதர்களின் கருத்துக்களும் நோக்குக்களும். உதாரணமாக, முதலாளித்துவத்தில் ஒரு வகைச் சமூகக் கருத்துக்களும் சித்தாந்தங்களும் நோக்குக்களும் மனநிலைகளும் சோஷலிஸத்தில் வேறு வகையானவைகளும் நிலவுகின்றன என்றால் சோஷலிஸ உற்பத்தி முறையின் வெற்றி மனிதர்களின் சமூக இருத்தலை அடியோடு மாற்றிவிட்டது, புதிய உற்பத்தி உறவுகளை ஏற்படுத்திவிட்டது என்பதே இதன் காரணம். உற்பத்தி உறவுகள் உற்பத்திச் சாதனங்கள்மீது தனியார் சொத்துரிமையை ஆதாரமாகக் கொண்டிருக்கும் முதலாளித்துவச் சமூகத்தில் ஆளும் வர்க்கங்களின் ஒழுக்க நெறிக்கு அஸ்திவாரமாக அமைகிறது தனித்துவக் கோட்பாடு. உற்பத்தி உறவுகள் சமூக சோஷலிஸச் சொத்துரிமையை அடிப்படையாகக்

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். ''அரசியல் பொருளாதாரத்தைப் பற்றிய விமர்சனத்துக்கு'' முன்னுரை, நூல்திரட்டு, தொகுதி 13, பக்கம் 7.

கொண்டிருக்கும் சோஷலிஸத்திலோ ஒழுக்க நெறி கூட்டுத்துவம் உள்ளதாக விளங்குகிறது. எனவே, சமூக இருத்தல் மாறுவதற்கு ஏற்பச் சமூக உணர்வும் மாறுகிறது. அதோடு சமூக இருத்தல் மாறுவதே சமூக உணர்வு மாறுவதற்குக் காரணமாக இருக்கிறது.

சமூக உணர்வு தனி மனிதர்களின் உணர்விலிருந்து துணிக்கப்பட்டு நிலவுவது இல்லே. குறித்த வர்க்கத்தையோ அல்லது ஏதேனும் சமுதாயக் குழுவையோ சேர்ந்த தனி நபர்களால் ஆனதுதானே சமூகம். ஆகவே, மனிதர்களின் தனி உணர்வுதன் உள்ளடக்கத்தில் சமூக உணர்வின் வெளியீடாகவே விளங்குகிறது.

உணர்வின் சமூகத் தன்மையை வலியுறுத்தும் அதே சமயத்தில் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் தனி உணர்வை, அதாவது ஒரு மனிதனது உணர்வின் சொந்த அம்சங்களை மறுப்பதே இல்லே. தனி உணர்வு குறித்த மனிதனின் தனிப்பட்ட வாழ்க்கை நிலைமைகளேப் பொறுத்து உருவாகிறது. இந்த நிலைமைகள் இந்த மனிதன் ஒருவனுக்கு மட்டுமே இயல்பான இவனது உணர்வின் குறித்த சிறப்புக்களேத் தோற்றுவிக்கின்றன.

சமூக மனப்பான்மையும் கொள்கைவாதமும் சமூக உணர்வில் அடங்கியவை. சமூக மனப்பான்மை என்பது மனிதர்கள், வர்க்கங்கள், நாட்டினங்கள், தனிச் சமுதாயக் குழுக்கள் ஆகியவற்றின் இயல்பாக உருவாகும் உணர்ச்சிகள், மனநிலைகள், வழக்கங்கள், அனுபவங்கள், இவையே ஆகும். இவை அவற்றின் அன்றாட நடைமுறை வழக்கமான செய்கைகளின் போக்கில் தோன்றுகின்றன. எனவேதான் கைத்தொழிலாளியின் மனப்பான்மை, குடியானவனின் மனப்பான்மை குட்டி பூர்ஷ்வாவின் மனப்பான்மை என்று பேசப்படுகிறது. சமூகப் பிரச்சினைகளிலிருந்து அப்பால் விலகிச் சென்றுவிடவும் தனது சொந்த சௌக்கியம் பற்றிய கவலைகளிலேயே ''புதைந்திருக்கவும்'' முயல்வதைக் குறிப்பதற்கு ''பிலிஸ்டைன் மனப்பான்மை'' என்று கூறப்படுவதும் இதனுல்தான்.

தொழிலாளி வர்க்கம் நிலவி, செயல் புரிந்துவரும் நிலைமைகள் பண்புவகையில் புதிய சமூக மனப்பான்மை, வேறுவகை வழக்கங்களும் பழக்கங்களும் உருவாக அஸ்திவாரமாக அமைகின்றன. கூட்டுத்துவம், ஒருமைப்பாடு, சுறண்டுவோருக்கு

எதிரான போராட்டத்தில் பரஸ்பர உதவி ஆகியவற்றின் உணர்ச்சி போன்றவை இவை. இந்தக் காரணத்தினுல்தான் வெவ்வேறு வர்க்கங்களும் சமுதாயக் குழுக்களும் வெவ்வேருன மனப்பான்மை கொண்டிருக்கின்றன. அதே சமயம், குறித்த வர்க்கத்தின் மனப்பான்மை அதன் வாழ்க்கை நிலைமைகளின் முத்திரையைக் கொண்டிருக்கிறது என்ருலும் இந்த வர்க்கத்தின் நலன்களைச் சித்தாந்தரீதியாகப் புரிந்துகொள்ளும் அளவுக்கு அது மேல் எழுவதில்லை.

சமூக மனப்பான்மையிலிருந்து வேருனது கொள்கைவாதம். முதலாவதாக, ஸ்தூல வரலாற்று நடைமுறையின் போக்கில் மனிதர்களிடம் உருவாகியுள்ள திட்டவட்டமான அரசியல், சட்ட, ஒழுக்க நெறி, அழகியல், தத்துவ நோக்குக்களும் கருத்துக்களும் சித்தாந்தங்களும் கொள்கைவாதத்தில் அடங்கி யிருக்கின்றன. இரண்டாவதாக, ஒரு அல்லது இன்னெரு வர்க்கத்தின் கொள்கைவாதிகளால் அது உணர்வுபூர்வமாக உரு வாக்கப்படுகிறது. கொள்கைவாதம் சமூகத்தின் வாழ்வில் பெருத்த முக்கியத்துவம் உள்ளது. ஏனெனில், சமூக-வரலாற்று நடைமுறையின் அடிப்படையில் மனிதர்களால் உண்டாக்கப் பட்ட கருத்துக்கள், சித்தாந்தங்கள், திட்டவட்டமான கருது கோள்களின் தொகுப்பு ஆகியவற்றின் மொத்தமாக விளங்கு கிறது அது. உதாரணமாக, தொழிலாளி வர்க்கத்தின் கொள் கைவாதமாகத் திகழ்கிறது மார்க்ஸீயம்-லெனினீயம். நோக் குக்களின் செப்பமாக அமைந்த விஞ்ஞான ரீதியான தொகுப்பு இது. பாட்டாளிகளின் வர்க்கப் போராட்டத்தின் அடிப்படை யில் கார்ல் மார்க்ஸாலும் பிரெடெரிக் எங்கெல்ஸாலும் இது உருவாக்கப்பட்டு, வி. இ. லெனினுல் விரிவுபடுத்தப்பட்டது.

சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வெவ் வேறு வர்க்கங்கள் நிலவும் சமூகத்தில் வெவ்வேறு கொள்கை வாதங்களும் நிலவுகின்றன. ஒவ்வொரு வர்க்கமும் நோக்குக்கள், கருத்துக்கள், கருதுகோள்கள் ஆகியவற்றின் தனக்கே உரிய தொகுப்பை உண்டாக்குகிறது. இந்த நோக்குக்களும் கருத்துக்களும் கருதுகோள்களும் சமூகத்தில் அந்த வர்க்கத் தின் இடத்தையும் அதன் நலன்களையும் பிரதிபலிக்கின்றன. உதா ரணமாக முதலாளித்துவச் சமூகத்தில் பூர்ஷ்வாக் கொள்கை வாதமும் பாட்டாளி வர்க்கக் கொள்கைவாதமும் உள்ளன. தங்கள் நோக்கங்களிலும் கடமைகளிலும் இவை ஒன்றுக்

கொன்று அடிப்படையில் வேறுனவை. இது புரியக் கூடியதே. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கச் சமூகத்தில் எந்த ஒரே கொள்கைவாதமும் நிலவ முடியாது. ஏனென்ருல் சுறண்டுவோருடையவும் சுறண்டப்படுவோருடைய வும் நலன்கள் எதிர்நிலையானவை. உற்பத்திச் சாதனங்களும் அரசியல் அதிகாரமும் எந்த வர்க்கத்துக்குச் சொந்த மானவையோ அதன் கொள்கைவாதமே இங்கே முதன்மை வகிக்கிறது. ஆளும் வர்க்கம் தன் வசமுள்ள எல்லாச் சாதனங் களாலும்—வானொலி, டெலிவிஷன், அச்சு வெளியீடுகள் முதலியவற்றின் வாயிலாக—தனது கொள்கைவாதத்தைக் கட்டாயமாகத் திணிக்கிறது.

ஆளும் கொள்கைவாதத்துடன் போராடுகிறது சுறண்டப் படும் வர்க்கங்களின் கொள்கைவாதம். பாட்டாளி வர்க்கத்தின் விஞ்ஞான ரீதியான கொள்கைவாதம் ஆன மார்க்ஸீயம் தோன்றியதை ஒட்டியே சமரசப்படுத்த முடியாத முரண் பாடுகள் கொண்ட சமூக நிலைமைகளில் கொள்கைவாதப் போராட்டம் தனது உச்ச வளர்ச்சியை அடைந்தது.

கொள்கைவாதத்தின் வர்க்கத்தன்மை அதன் கட்சிச் சார்பைக் குறிக்கிறது. சுறண்டுவோர் வர்க்கங்களும் சிறப்பாக பூர்ஷ்வா வர்க்கமும் கொள்கைவாதத்தின் கட்சிச் சார்புள்ள தன்மையை நிராகரிக்கவும் தங்கள் கொள்கைவாதம் ''கட்சிச் சார்பு அற்றது'', ''வர்க்கங்களுக்கு மேற்பட்டது'', ''மக்களுக்கு உரியது'' என்று காட்டவும் முயல்கின்றன. உண்மையிலோ, ''கட்சிச்சார்பின்மை'', ''அரசியல் சார்பின்மை'' என்ற கொடி யின் பின் மறைந்துகொண்டு பூர்ஷ்வா வர்க்கம் தனது தன்னல நோக்கங்களையும் கூலி அடிமை முறையையும் பாதுகாக்கிறது, நாட்டின வேற்றுமைகளைத் தூண்டிவிடுகிறது, காலனிகளை வலியக் கைப்பற்றும் கொள்கையையும் சூறையாடும் போர்கள் புரியும் கொள்கையையும் கடைப்பிடிக்கிறது. வாழ்வுதீர்ந்து விட்ட, மடிந்துகொண்டிருக்கிற வர்க்கத்தின். கொள்கைவாதம் ஆன பூர்ஷ்வாக் கொள்கைவாதம் மக்களுடைய நலன்களுக்கும் சமூக வளர்ச்சிக்கும் முரண்படுகிறது. தற்கால நிலைமைகளில் அது முற்போக்குச் சக்திகளுக்கு எதிராகவும் முதன்மையாக சோஷலிஸத்துக்கும் கம்யூனிஸத்துக்கும் எதிராகவும் போராடு கிறது. ''ஏகாதிபத்தியத்தின் முக்கியமான கருத்து, அரசியல் ஆயுதம் கம்யூனிஸ எதிர்ப்பு. சோஷலிஸ அமைப்பைத் தூற்று

வதும் கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கையும் குறிக்கோள் களையும் மார்க்ஸிய-லெனினியப் போதனையையும் பித்தலாட்டம் செய்வதுமே இதன் பிரதான உள்ளடக்கம் ஆகும்'' என்று சுட்டிக் காட்டுகிறது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி யின் செயல்திட்டம்.

கொள்கைவாதம் வர்க்கத் தன்மை கொண்டது என்பதனால் ஒரு குறித்த வர்க்கத்தின் கொள்கைவாதம் எப்போதும் மாறாமல் இருந்துவரும் என்று அர்த்தம் ஆகாது. நிலைமைகளையும் இடத்தையும் காலத்தையும் அது சார்ந்தது. எந்த வர்க்கத் தின் நலன்கள் அதில் வெளியீடு பெறுகின்றன என்பதையும் அது பொறுத்திருக்கிறது. பூர்ஷ்வா வர்க்கம் தனது வளர்ச்சியின் ஒரு குறித்த கட்டத்தில் நிலப்பிரபுத்துவப் பண்ணையடிமைச் சொந்தக்காரர்களுடன் ஒப்பிடுகையில் முற்போக்குள்ள வர்க்க மாக இருந்தது என்பதை நாம் அறிவோம். அப்போது பூர்ஷ்வா வர்க்கத்தின் கொள்கைவாதிகள் முற்போக்குள்ள கருத் துக்களையும் சித்தாந்தங்களையும் பரப்பினார்கள். ஏனெனில் சமூக வளர்ச்சியின் தேவைகளை அவர்கள் வெளியிட்டார்கள். ஆனால் சோஷலிஸத்துக்காகவும் கம்யூனிஸத்துக்காகவும் போராடும் பாட்டாளி வர்க்கம் சுதந்திர அரசியல் போராட்டப் பாதை யில் அடி வைத்ததுமே பூர்ஷ்வா வர்க்கம் பிற்போக்குள்ள பங்கு ஆற்றத் தொடங்கியது. அதன் கொள்கைவாதமும் பிற்போக்கானதாக, நிகழ்ச்சிகளின் எதார்த்தப் போக்கைத் திரிப்பதாக மாறிவிட்டது.

சுரண்டுவோரின் கொள்கைவாதத்துக்கு மாறாக, 'தொழி லாளி வர்க்கத்தின் கொள்கைவாதம் ஆகிய மார்க்ஸீயம்-லெனி னீயம் எதார்த்தத்தைச் சரியாகப் பிரதிபலிக்கிறது. ஏனெனில் பாட்டாளி வர்க்கத்தின் வர்க்க நலன்கள் வரலாற்றின் புற நிலைப் போக்குக்குப் பொருந்துகின்றன. பாட்டாளி வர்க்கத்தின் அடிப்படையான, பிரதானக் குறிக்கோள்களும் கடமைகளும் உழைப்பாளி மக்கள் அனைவரதும் ஜீவாதார நலன்களை வெளி யிடுகின்றன. சமூக வாழ்வின் எல்லா அம்சங்களையும் செயல்முறை களையும் விதிகளையும் அறிவதில் தொழிலாளி வர்க்கம் அக்கறை கொண்டிருக்கிறது. எனவேதான் பாட்டாளி வர்க்கக் கொள் கைவாதம், அதாவது மார்க்ஸீயம்-லெனினீயம் கட்சிச் சார்புள் ளதாகவும் ஆழ்ந்த விஞ்ஞானக் கொள்கைவாதமாகவும் ஏககாலத்தில் விளங்குகிறது.

## § 2. சமூக உணர்வின் சார்புநிலைச் சுதந்திரமும் சமூக வளர்ச்சியில் கருத்துக்களின் செயலூக்கமுள்ள பங்கும்

சமூக உணர்வு சமூக இருத்தலாலேயே நிச்சயிக்கப்படுகிறது என்பதை நாம் ஏற்கனவே அறிவோம். ஆனால் முடிவாகப் பார்க்கும் போதுதான் சமூக இருத்தல் சமூக உணர்வை நிச்சயிக்கிறது. மனிதர்களின் பொருளியல் உற்பத்திச் செயல்களால் தோற்றுவிக்கப்படும் சமூக உணர்வு அதே சமயம் சார்புநிலைச் சுதந்திரமும் செயல்வன்மையும் கொண்டிருக்கிறது. அது தனக்கே உரிய தனிப்பட்ட விதிமுறைகளுக்கு உட்படுகிறது. இவை உற்பத்தி வளர்ச்சியின் விதிகளுடன் ஒன்றானவை அல்ல.

கருத்துக்களும் சித்தாந்தங்களும் சமூக இருத்தலை நேரடியாகப் பிரதிபலிக்கின்றன என்றும் உற்பத்தியிலிருந்து நேரே வளர்கின்றன என்றும் நினைப்பது சரி அல்ல. இவ்வகை நோக்குக்கள் மார்க்ஸீயத்தைக் கொச்சைப்படுத்துவோருக்கு இயல்பானவை. உதாரணமாக மேற்கு ஐரோப்பாவில் தத்துவத்தின் வளர்ச்சி முதலாளித்துவக் கைத்தொழில் உற்பத்தியிலிருந்து நேரே உண்டாயிற்று என்று காட்ட இவர்கள் முயன்றார்கள். இத்தகைய நோக்குக்களை வி. இ. லெனின் மார்க்ஸீயத்தின் கேலிச்சித்திரம் என்று அழைத்தார்.

உண்மையில் சமூக இருத்தல் மனிதர்களின் உணர்வில் பிரதிபலிப்பது சிக்கலான செயல்முறை. அரசியல் நோக்குக்கள், தத்துவம், கலை, மதம் முதலிய திட்டவட்டமான தனிப்பட்ட வடிவங்களில் அது செயல்படுத்தப்படுகிறது. இவற்றில் ஒரு வகை வடிவங்கள், உதாரணமாக அரசியல் நோக்குக்கள், அடித்தளத்துக்கு அருகே இருக்கின்றன. தத்துவம் போன்ற மற்றவை அதிலிருந்து தொலைவில் இருக்கின்றன. ஆகவே சமூக உணர்வின் வடிவங்களில் சமூக இருத்தலின் பிரதிபலிப்பு இடைநிலைக் காரணிகளது முழு வரிசையின் ஊடாகவே நிகழ்கிறது. இந்த இடைநிலைக் காரணிகளே சமூக உணர்வின் சார்புநிலைச் சுதந்திரத்தை உண்டாக்குகின்றன.

சமூக உணர்வு ஒன்று சமூக இருத்தலில் இருந்து பின்தங்கிவிடலாம் அல்லது அதை முந்திவிடலாம். சமூக உணர்வின் சார்புநிலைச் சுதந்திரம் முதலாவதாக இதில் வெளிப்படுகிறது.

சமூக உணர்வு பின்தங்கிவிடுவதற்கு முதன்மைக் காரணம் சமூக இருத்தலுடன் ஒப்பிடுகையில் அது இரண்டாவதாக, முன்னதன் அடியாகப் பிறந்ததாக இருப்பதும் அதைப் பிரதிப லிப்பதும் தான். தவிரவும் சமூக உணர்வின் சில வடிவங்களுக்கு, உதாரணமாக மதத்துக்கும் ஒழுக்க நெறிக்கும் ஓரளவு பழை மைப் பற்று இயல்பானது. அவற்றில் இருக்கும் உள்ளடக்கம், திட்டவட்டமான கருத்துக்களும் நோக்குக்களும் பரம்பரை யாக மாறி, தாம் தோன்றக் காரணமாக இருந்த நிலைமைகள் மறைந்துவிட்ட பின்னும் வெகுகாலம் வரை தொடர்ந்து நிலவு கின்றன. முடிவாக, வாழ்வு தீர்ந்துவிட்ட கருத்துக்களைப் பேணிப் பாதுகாப்பதில் அக்கறை கொண்ட பிற்போக்கு வர்க் கங்களின் செயல்களும் இந்தப் பின்தங்கிய நிலைக்குக் காரணம் ஆகின்றன.

சமூக உணர்வு சமூக இருத்தலின் வளர்ச்சியை முந்திவிடவும் கூடும். அறிஞர்களும் பிரபல அரசியல் தலைவர்களும் சமூக வளர்ச்சிக்குரிய தெரிந்த விதிகளை ஆதாரமாகக் கொண்டு, பல ஆண்டுகளுக்குப் பின் இந்த வளர்ச்சி எவ்வாறு இருக்கும் என்ற தொலைக்காட்சியை விஞ்ஞான ரீதியாக முன்காணும் சந்தர்ப்பங்களில் இது நிகழ்கிறது. சோஷலிஸச் சமூகம் தோன்று வதன் தவிர்க்க இயலாமை பற்றிய மார்க்ஸீய-லெனினீயத்தின் முடிவு விஞ்ஞான ரீதியான முன்காணலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

சமூக உணர்வின் சார்புநிலைச் சுதந்திரம் இரண்டாவதாக, கருத்துக்களின் வளர்ச்சியில் உள்ள மரபு பேணலில் வெளிப்படு கிறது. மனிதர்களின் ஆன்மீகப் பண்பாடு முந்திய சிந்தனைப் பொருளின் அடிப்படையிலேயே செப்பம் ஆக்கப்படுகிறது என் பதைச் சமூக வளர்ச்சியின் வரலாறு காட்டுகிறது. நூற்றாண்டு களின் போக்கில் மனிதர்களால் படைக்கப்பட்ட விலையுயர் ந்தவை யாவற்றையும் பயன்படுத்துவதன் விளைவாகத் தங்கள் வாழ்வின் எல்லா அம்சங்களையும், சமூக உணர்வு—அதாவது தத்துவம், விஞ்ஞானம், கலை முதலியவை—உள்பட, வளர்வுறுத் தும் வாய்ப்பு மனிதர்களுக்குக் கிடைத்துள்ளது.

கருத்துக்களின் வளர்ச்சியில் மரபு பேணலை, சமூகத்தின் பொருளியல் வாழ்வின் வளர்ச்சியிலிருந்து தனிப்பிரித்து ஆராய் வது கூடாது. முடிவாகப் பார்க்கும் போது மரபுபேணல் இந்தக்

காரணியினுலேயே நிச்சயிக்கப்படுகிறது. தவிரவும் கொள்கைவாதத்தின் பொதுவான நிலையையும், அதன் வளர்ச்சியில் உள்ள மரபுபேணலையும் புரிந்துகொள்வது பற்பல பிற காரணிகளும் கவனத்தில் கொள்ளப்பட்டால்தான் முடியும். வர்க்கப் போராட்டம், சமூக உணர்வின் பல்வேறு வடிவங்களின் பரஸ்பரப் பாதிப்பு முதலியன இந்தக் காரணிகள். வெவ்வேறு வர்க்கங்கள் கடந்த காலத்துச் சிந்தனைப் பொருளை வெவ்வேறு விதமாகப் பயன்படுத்துகின்றன என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவுபடுத்திக் கொள்வது அவசியம். முற்போக்கு உள்ள புரட்சிகர வர்க்கங்கள் சென்ற காலத்திலிருந்து சிறந்தவை யாவற்றையும் எடுத்துக்கொண்டு பழைமையாகிவிட்டவற்றையும் பிற்போக்கானவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிடுகின்றன. சென்ற காலத்தின் மரபுவழிப் பேற்றை விமர்சன நோக்குடன் திருத்தி அமைத்து முற்போக்குக் கொள்கைவாதத்தை அவை உருவாக்குகின்றன.

மாருக, பிற்போக்கு வர்க்கங்களோ, சென்ற காலத்தின் மரபுவழிப் பேற்றிலிருந்து வாழ்வு தீர்ந்த கருத்துக்களையும் சித்தாந்தங்களையும் எடுத்துக்கொண்டு முற்போக்கான முன்னணிக் கருத்துக்களை ஒதுக்கித் தள்ளிவிடுகின்றன. இந்த வர்க்கங்களின் கொள்கைவாதிகள் சென்ற காலத்தின் பிற்போக்குக் கருத்துக்களை நிலவும் அமைப்பைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் நிகழ்காலத்துக்குப் பொருந்த வைக்கப் பல்வேறு வழிகளில் முயல்கிருர்கள். இதற்கு உதாரணமாக பாசிஸ்டுகளைக் காட்டலாம். இடைக்காலத்தைச் சேர்ந்த மிக இருண்ட, இரத்த வெறி கொண்ட கருத்துக்களையும் பழக்க வழக்கங்களையும் பாசிஸக் கொள்கைவாதிகள் மீண்டும் உயிர்ப்பித்தார்கள்.

மூன்ருவதாக, சமூக வளர்ச்சியில் கருத்துக்கள் ஆற்றும் செயலூக்கமுள்ள பங்கில் வெளிப்படுகிறது சமூக உணர்வின் சார்புநிலைச் சுதந்திரம். சமூக உணர்வின் வெவ்வேறு வடிவங்கள் திட்டவட்டமான பொருளாதார உறவுகளின் அடிப்படையில் தோன்றி, சமூக வளர்ச்சியில் மிகத் தீவிரமான பங்கு ஆற்றுகின்றன. அவை ஒன்றன்மீது ஒன்றும் அடித்தளத்தின் மீதும் பாதிப்பு நிகழ்த்துவதில் இது வெளிப்படுகிறது.

## § 3. மார்க்ஸிய-லெனினீயக் கொள்கைவாதமும் சமூக வளர்ச்சியில் அதன் பங்கும்

தனது விஞ்ஞானத் தன்மை, முற்போக்கு, புரட்சித் தன்மை, சித்தாந்தத்துக்கும் நடைமுறைக்கும் உள்ள தொடர்பு, படைப்புத் தன்மை, கட்சிச் சார்பு ஆகியவை காரணமாக மார்க்ஸீய-லெனினீயம் முந்திய எல்லாக் கொள்கைவாதங்களிலும் இருந்து வேறுபடுகிறது. மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதம் சமூக வாழ்க்கையின் உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டிய தேவைகளைச் சரியாகப் பிரதிபலிக்கிறது. சமூக வளர்ச்சிக்குரிய விதிகளைக் கண்டறிகிறது. இந்த விதிகள்பற்றிய அறிவின் அடிப்படையில் முதலாளித்துவம் அழிவதும் அதன் இடத்திற்குக் கம்யூனிஸம் புரட்சி வாயிலாக வருவதும் தவிர்க்க இயலாதவை என்பதைச் சித்தாந்த ரீதியாக ஆதாரங்களுடன் நிலைநாட்டுகிறது. மார்க்ஸீய-லெனினீயத்தின் விஞ்ஞானத் தன்மை இவற்றிலேயே வெளிப்படுகிறது.

மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதத்தின் முற்போக்கு, உழைப்பாளி மக்களுக்கு முன் அது வைக்கும் குறிக்கோள்களிலும் கடமைகளிலும் சிறப்பான துலக்கத்துடன் காணக்கிடக்கிறது. இவையாவன: எதில் சுறண்டுவோரும் சுறண்டப்படுவோரும் இருக்க மாட்டார்களோ, எதில் உழைப்பு வாழ்க்கைச் சாதனமாக மட்டும் இன்றி ஒவ்வொரு மனிதனுடையவும் முதன்மைத் தேவையாக இருக்குமோ, எதில் மனிதர்களுக்கு இடையே உண்மையிலேயே மனிதாபிமானம் நிறைந்த உறவுகள் நிலை பெறுமோ அத்தகைய சமூகத்தை நிறுவுதல்.

முதலாளித்துவத்தின் நிலைமைகளில் மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதம் பாட்டாளி வர்க்கத்திற்குச் செயலுக்கு வழிகாட்டியாகப் பயன்படுகிறது, சுறண்டுவோர் அமைப்பைத் தகர்ப்பதற்கான வழிகளையும் சாதனங்களையும் பற்றிய அறிவால் அதைப் போராட்டத்துக்குத் தயார்ப்படுத்துகிறது. இந்தக் கொள்கைவாதத்தின் புரட்சித்தன்மை இதில்தான் அடங்கியுள்ளது. பூர்ஷ்வா வர்க்கத்தின்மீது வெற்றி பெறப்பட்ட பின், சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவுவதற்குப் பொதுமக்கள் திரளை அணிதிரட்டி ஒழுங்கமைப்பதில் இந்தப் புரட்சித் தன்மை வெளிப்படுகிறது. வழிகாட்டும், மாற்றி

யமைக்கும் சக்தி என்ற வகையில் கொள்கைவாதத்தின் முக்கியத்துவம் இங்கே பன்மடங்கு அதிகரித்துவிடுகிறது.

மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தத்தை ஆதாரமாகக் கொண்டு சோவியத் மக்கள் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் சோஷலிஸத்தை நிறுவிவிட்டார்கள். மார்க்ஸீய-லெனினீயக் கருத்துக்கள் நடைமுறையில் செயல்படுத்தப்பட்டதன் விளைவாக சோவியத் யூனியனின் மக்களிடையே சமுதாய-அரசியல் ஒற்றுமை ஏற்பட்டது. உழைப்பாளி மக்களின் உணர்வை ஆட்கொண்டுவிட்ட மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதம் தற்போது சோவியத் யூனியனில் தனியாணை செலுத்துகிறது. கம்யூனிஸக் கட்டுமான நிலைமைகளில் மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதத்தின் பங்கு இன்னும் அதிகரிக்கும்.

புரட்சிச் சித்தாந்தத்துக்கும் நடைமுறைக்கும் உள்ள பிரிக்க முடியாத ஒருமை மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதத்தின் தன்மையை விளக்கும் அம்சமாக, அடிப்படைக் கொள்கைகளில் ஒன்றாக விளங்குகிறது. தொழிலாளி வர்க்கத்தின் கொள்கைவாதத்தினுடைய வெல்லரும் ஆற்றல் இந்த ஒருமையில்தான் அடங்கியுள்ளது. சீர்திருத்தவாதம், திரிபுவாதம், வறட்டுச் சூத்திரவாதம் ஆகிய வெவ்வேறு சந்தர்ப்பவாதச் சித்தாந்தங்களிலிருந்து இதை அடிப்படையில் வேறுபிரித்துக் காட்டுவது இந்த ஒருமையே.

தற்போதையச் சகாப்தத்தில் மார்க்ஸீய-லெனினீயக் கருத்துக்கள் சர்வதேசப் புரட்சிகரத் தொழிலாளி வர்க்க இயக்கம், ஏகாதிபத்தியத்துக்கு எதிராக மக்கள் நடத்தும் தேசிய விடுதலைப் போராட்டம் ஆகியவற்றினது அனுபவத்தின் பொதுமைப்பாடாக விளங்குகின்றன. போர், சமாதானம், புரட்சி ஆகியவைகுறித்த பிரச்சினைகளை ஆக்க முறையில் தீர்க்க இவை உதவுகின்றன. சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவிக் கொண்டிருக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு இந்தக் கருத்துக்கள் உத்வேகம் ஊட்டுகின்றன.

மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதம் ஆழ்ந்த கட்சிச் சார்பு உள்ளது. ''கட்சிச் சார்பின்மை'' ''புறநிலைத்தன்மை'' என்ற கொடியின் கீழ்ப் பிரசாரம் செய்துவரும் பூர்ஷ்வாத் தத்துவவாதிகளுக்கு நேர் எதிராக, மார்க்ஸீய-லெனினீயவாதிகள் தங்கள் கொள்கைவாதத்தின் வர்க்கத் தன்மையையும் கட்சிச் சார்பையும் நேரடியாக, வெளிப்படையாக ஒப்புக்

கொள்கிறார்கள். சோஷலிஸத்தின் பொருட்டும் கம்யூனிஸத்தின் பொருட்டும் போராடிவரும் தொழிலாளி வர்க்கத்தின் நலன்களை அது ஆதரித்துச் செயல்புரிகிறது. பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளுடையவும் வலதுசாரி ''இடதுசாரித்'' திரிபுவாதிகளுடையவும் பகைமை நிறைந்த, விஞ்ஞானத்துக்கு முரணான சித்தாந்தங்கள்பால் அது சமரசமற்ற போக்கைக் கடைப்பிடிக்கிறது.

மார்க்ஸீய-லெனினீயக் கொள்கைவாதத்தின் உள்ளடக்கமும் முக்கியத்துவமும் சமூகத்தின் வாழ்வில் அதன் பங்கும் இத்தகையவை.

## § 4. சமூக உணர்வின் வடிவங்கள்

ஏற்கனவே குறிக்கப்பட்டுள்ளதுபோலச் சமூக உணர்வு பல்வேறு வடிவங்களில் தோன்றுகிறது, நிலவுகிறது, வளர்கிறது. இந்த வடிவங்களாவன: அரசியல், சட்ட நோக்குக்கள், ஒழுக்க நெறி, விஞ்ஞானம், தத்துவம், கலை, மதம் முதலியன. சமூக உணர்வின் வடிவங்கள் பல்வகைப்பட்டவையாக இருப்பதற்குக் காரணம் புறநிலை எதார்த்தத்தின் அம்சங்கள் பல்வகைப்பட்டவையாக இருப்பதே ஆகும். இந்த வடிவங்களில் ஒவ்வொன்றும் சமூக வாழ்வின் குறித்த அம்சத்தைப் பிரதிபலிக்கிறது. உதாரணமாக, அரசியல் கருத்துக்கள் வர்க்கங்களுக்கும் அரசுகளுக்கும் நாட்டினங்களுக்கும் இடையே நிலவும் உறவுகளைப் பிரதிபலிக்கின்றன. மனிதர்களுக்கு இடையே நிலவும் ஒழுக்க நெறி வகைப்பட்ட உறவுகளை ஒழுக்க நெறி உள்ளடக்குகிறது. சமூக உணர்வின் ஒரு அல்லது மற்றொரு வகை வடிவங்கள் தோன்றுவதற்குக் காரணம் முடிவாகப் பார்க்கும் போது சமூக வாழ்வில் அவற்றுக்குப் பொருத்தமான தேவைகள் ஏற்படுவதே ஆகும்.

சமூக உணர்வின் வடிவங்கள் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபடுகின்றன. ஆயினும் அதே சமயம் அவற்றுக்கு இடையே நெருக்கமான பரஸ்பரத் தொடர்பும் சிக்கலான பரஸ்பரப் பாதிப்பும் நிலவுகின்றன. உதாரணமாக, சமூக உணர்வின் அரசியல் வடிவம் ஒழுக்க நெறியையும் மதத்தையும் தத்துவத்தையும் கலையையும் மிகத் தீவிரமாகப் பாதிக்கிறது. கலை ஒழுக்க நெறி மீது செல்வாக்கு செலுத்துகிறது முதலியன.

சமூக உணர்வின் ஒரு சில வடிவங்களைச் சற்று விரிவாக நோக்குவோம்.

சமூக உணர்வின் வடிவங்கள் மனிதர்களின் கொள்கைவாத உறவுகளை உருவாக்குவதில் வெவ்வேறு வகைகளில் பங்கு ஆற்றுகின்றன என்று ''லுத்விக் பாயர்பாகும் சாஸ்திரீய ஜெர்மானியத் தத்துவத்தின் இறுதியும்'' என்னும் தமது நூலில் பிரெடெரிக் எங்கெல்ஸ் குறித்தார். சமூக உணர்வின் அரசியல் வடிவமான அரசியல் கொள்கைவாதம் தனது முக்கியத்துவம் காரணமாக முதல் இடம் பெறுகிறது.

அரசியல் கொள்கைவாதம் என்பது கருத்துக்களின் மொத்தம். வர்க்கங்கள், அரசுகள், நாட்டினங்கள் ஆகியவற்றின் உறவுகளைப் பிரதிபலிக்கும் நோக்குக்களின் திட்டவட்டமான தொகுப்பு இது. வர்க்கங்களின் நலன்களும் நிலவும் சமூக, அரசு அமைப்பின்பால் அவற்றுக்கு உள்ள உறவுகளும் முதன்மையாக இதில் பிரதிபலிக்கின்றன. உதாரணமாக, முதலாளித்துவச் சமூகத்தின் அஸ்திவாரங்கள், அதன் உற்பத்தி முறையும் அரசும் பிற ஸ்தாபனங்களும் அலுவலகங்களும் நிலையானவை, அசைக்க முடியாதவை என்று நிரூபிப்பதை பூர்ஷ்வா அரசியல் கொள்கைவாதம் தனது நோக்கமாகக் கொள்கிறது. மாறாக இந்த அஸ்திவாரங்களை ஆட்டி உலுக்குவதும் புதிய, கம்யூனிஸச் சமூகத்தை நிறுவுவதன் இன்றியமையாமையை ஆதாரபூர்வமாக நிலைநாட்டுவதுமே பாட்டாளி வர்க்க அரசியல் கொள்கைவாதங்களின் குறிக்கோளும் கடமையுமாக விளங்குகின்றன.

ஒவ்வொரு வர்க்கத்துக்கும் வழக்கமாக அதற்கே உரிய கொள்கைவாதிகள் உண்டு. ஒரு அல்லது மறு வகைக் கொள்கைவாதத்தைச் செப்பமாக அமைப்பவர்கள் இவர்களே. இந்தக் கொள்கைவாதிகளால் சூத்திரப் படுத்தப்படும் குறிக்கோள்களும் கடமைகளும் பல்வேறு அரசாங்க, கட்சி தஸ்தாவேஜுகளில், அரசியல் சட்டங்கள், செயல்திட்டங்கள், பிரகடனங்கள் முதலியவற்றில் நிறைவேற்றம் பெறுகின்றன.

அரசியல் கொள்கைவாதம் சமூகத்தின் வாழ்வில் பெரும் பங்கு ஆற்றுகிறது. பொருளாதாரத்தின்மீதும் அரசியல் போராட்டத்தின் மீதும் ஆன்மீக வாழ்வின்மீதும் அதன் செல்வாக்கு மிகப் பெரிது. அதன் அரசியல் முக்கியத்துவத்தைக் கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் தீர்க்கப்படும் பிரச்சினை ஒன்றுகூட உண்மையில் இல்லை. விஞ்ஞானம், தத்துவம், ஒழுக்க நெறி, கலை,

மதம் ஆகிய சமூக உணர்வின் மற்ற வடிவங்கள் மீது அரசியல் கொள்கைவாதம் வலிய பாதிப்பு நிகழ்த்துகிறது.

அரசியல் கொள்கைவாதத்தை மிக நெருக்கமாக ஒட்டியிருக்கின்றன சட்ட நோக்குக்களும் சித்தாந்தங்களும். சட்டம் என்பது ஆளும் வர்க்கத்தின் சித்தத்தை விதிகளாக நிறுவுவதே ஆகும் என்ருர் கார்ல் மார்க்ஸ்.

அரசியல் போலவே சட்டமும் அரசுடன் கூடவே தோன்றுகிறது, வர்க்கத்தன்மை கொண்டிருக்கிறது. அரசிஞல் விதிக்கப்படும் சட்டங்களின் திட்டவட்டமான தொகுப்பில் அது வெளியீடு பெறுகிறது. இந்தச் சட்டங்கள் நிர்ப்பந்தத் தன்மை கொண்டிருக்கின்றன. அதாவது, இவற்றைக் கடைப்பிடிப்பது சமூகத்தின் எல்லா உறுப்பினர்களுக்கும் கட்டாயமானது. நீதிமன்றச் சட்டங்களின் உதவியால் சமூகத்தின் ஆளும் வர்க்கங்கள் நிலவும் ஒழுங்கையும் தங்கள் பொருளியல் நலன்களேயும் பிற நலன்களேயும் பாதுகாக்கின்றன.

முதலாளித்துவத்தில் சட்டம் ஆளும் வர்க்கமான பூர்ஷ்வா வர்க்கத்துக்குத் தொண்டு ஆற்றுகிறது. சோஷலிஸத்திலோ, சட்டம் எல்லா உழைப்பாளி மக்களுக்கும் தொண்டு ஆற்றுகிறது, மக்களுக்கு உரியது ஆகிவிடுகிறது.

சட்ட ரீதியானது எது, சட்டத்துக்குப் புறம்பானது எது என்பது பற்றிய மனிதர்களின் எண்ணங்களும் குறித்த சமூக அமைப்பு அல்லது அரசின் சட்டம் பற்றிய அவர்களுடைய நோக்குக்களும் அவர்களுடைய சட்ட உணர்வாக அமைகின்றன. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்கள் உள்ள சமூகத்தில் சட்ட உணர்வு சட்டத்தைப் போன்றே வர்க்கத்தன்மை உடையதாக இருக்கிறது. ஒவ்வொரு வர்க்கமும் தன் விருப்பப்படி தனது உரிமைகளேயும் கடமைகளேயும் கருத்தில் கொள்ளுகிறது. எவை கட்டாயமான செயல்கள், எவை கட்டாயம் அற்றவை என்பதையும் இன்னும் பிறவற்றையும் தன் விருப்பப்படி மதிப்பிடுகிறது.

சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகங்களில் ஆளும் வர்க்கங்களின் சட்ட உணர்வு நிலவும் ஒழுங்குகளே உறுதிப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டிருக்கிறது. உதாரணமாக, பூர்ஷ்வாச் சட்டம் சமூகத்தின் எல்லா உறுப்பினர்களுடையவும் சம உரிமைக்கு வகை செய்கிறது என்று உழைப்பாளி மக்களுக்கு நம்பிக்கை ஊட்ட பூர்ஷ்வா

வர்க்கம் முயல்கிறது. ஆனல் இது வெறும் சடங்குமுறை யான, சொல்லளவில் மட்டுமே உள்ள சம உரிமை. இங்கே சட்டத்துக்கு முன் எல்லோரும் சொல்லளவில் சமமானவர்களே. செயலிலோ, பூர்ஷ்வாச் சட்டம் பூர்ஷ்வா வர்க்கத்தின் நலன்களை மட்டுமே பாதுகாக்கிறது. எதார்த்தத்தில் வர்க்கங் களுக்கு மேற்பட்ட நியாயமான சட்டம் எதுவும் முதலாளித்துவச் சமூகத்தில் இல்லை, இருக்கவும் முடியாது. அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜெர்மன் கூட்டுக் குடியரசு, பிற முதலாளித் துவ நாடுகள் ஆகியவற்றின் ஜனநாயக விரோதச் சட்டத் தொகுப்புக்களை இதற்கு உதாரணமாகக் காட்டலாம்.

சோஷலிஸச் சமூகத்தில் சமுதாய அரசியல் துறையிலும் கருத்துத் துறையிலும் சமூகம் அனைத்திலும் ஒருமை நிலவு கிறது. எனவே அங்கே சட்ட உணர்வு மக்கள் எல்லாருடைய வும் நலன்களை வெளியிடுகிறது. சோஷலிஸத்தில் சட்டங்கள் கடைப்பிடிக்கப்படுவது அரசின் அதிகாரத்தினல் உறுதிப்படுத் தப்படுகிறது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசாங்கமும் தனிநபர் வழிபாட்டின் விளைவுகளைத் துடைத்து ஒழித்துவிட்டுச் சட்டத்தை முறைப்படுத்துவதிலும் சோஷலிஸச் சட்ட உணர்வுக்குப் பொருந்தும் வகையில் அதை அமல் நடத்துவதிலும் அண்மைக் காலத்தில் பெருத்த பணி ஆற்றி உள்ளன. சோவியத் சோஷலிஸச் சட்டம் மொத்தத் தில் அரசு முழுவதன் நலன்களையும் தனித்தனியே ஒவ்வொரு சோவியத் குடியின் நலன்களையும் தற்போது கண்டிப்பாகப் பாதுகாத்து வருகிறது.

பூர்ஷ்வாச் சமூகத்துக்கு மாருக சோஷலிஸச் சமூகத்தில் சட்டங்கள் சுயவிருப்பத்தின்படி உணர்வுபூர்வமாகக் கடைப்பி டிக்கப்படுவது பெரும் பங்கு ஆற்றுகிறது. சோவியத் அரசின் சட்டங்கள்ஒவ்வொரு சோவியத் மனிதனுடையவும் நலன்களுக்கு உகந்தவை என்பதை மிகப் பெரும்பான்மையான உழைப்பாளி மக்கள் புரிந்து கொண்டிருக்கிருர்கள். எனவே அவற்றைக் கண்டிப்பாகக் கடைப்பிடிப்பதன் இன்றியமையாமையை அவர்கள் உணர்கிருர்கள்.

சோஷலிஸச் சட்டத்தை மதிக்கும் உணர்வில் சமூகத்தின் எல்லா உறுப்பினரையும் பயிற்றுவதில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசும் பெருஞ் செயல் ஆற்றி வருகின்றன. குற்றங்கள் நேராது தவிர்ப்பதிலும் சட்டங்கள்

கடைப்பிடிக்கப்படுவதில் சோவியத் மக்களின் பொறுப்பை அதிகப்படுத்துவதிலும் முதன்மையாகக் கவனம் செலுத்தப் படுகிறது. அதே சமயம், சோஷலிஸச் சட்டங்களை மீறுபவர் களை சோவியத் அரசு கடுமையாகத் தண்டிக்கிறது.

முதலாளித்துவத்தின் மீத மிச்சங்களை ஒழிப்பதிலும் குற்றத் தன்மையை வேரறுப்பதிலும் சோஷலிஸச் சமுதாய வாழ்க் கைக்கு உரிய விதிகளைச் சுயவிருப்புடன் கடைப்பிடிக்கும் பழக்கம் எல்லா சோவியத் மக்களுக்கும் ஏற்படும்படி பயிற்று வதிலும் உதவுவதன் வாயிலாக சோவியத் சட்ட உணர்வு கம்யூனிஸக் கட்டுமானத்தில் பெரும் பங்கு ஆற்றுகிறது.

மனித சமூகத்தில் ஏராளமான விதிகளும் மரபுகளும் நிலவு கின்றன. இவற்றை மேற்கொண்டு மனிதர்கள் வாழ்கிறார்கள், வேலை செய்கிறார்கள். இவற்றில் சில விதிகள் அரசினால் செப்பம் செய்யப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன, சட்டங்களின் அளவுமானங்களாக விளங்குகின்றன என்பதை நாம் ஏற்கன வே அறிவோம். சட்டத்தின் காரணமாக அவற்றைக் கடைப் பிடிப்பது மனிதர்களுக்குக் கட்டாயமாக இருக்கிறது. பிற விதிகள் பொதுஜன அபிப்பிராயத்தைச் சார்ந்துள்ளன, அதனால் அங்கீகரிக்கவோ நிராகரிக்கவோ படுகின்றன. இவை ஒழுக்க நெறி விதிகள். மனிதர்கள் ஒருவர்பால் ஒருவரும் மொத்தத் தில் சமூகத்தின்பாலும் கொண்டுள்ள உறவுகள் இவற்றில் வெளிப்படுகின்றன. கடமை, மானம், மனச்சான்று, நன்மை, தீமை, மனிதாபிமானம் நியாயம் முதலியவை என்ன என்பது பற்றிய மனிதர்களது எண்ணங்களை இந்த விதிகள் அல்லது அளவுமானங்கள் நிர்ணயிக்கின்றன. இத்தகைய விதிகளின் மொத்தமே ஒழுக்க நெறி அல்லது நீதி நெறி எனப்படுகிறது.

ஒழுக்க நெறி ஆண்டவனது ஆணைப்படி தோன்றியது, அல் லது ''பூரண அறிவு'', ''சர்வப்பொதுக் கடமை'' முதலியவற் றைத் தனது ஊற்றுக்கண்ணாகக் கொண்டிருக்கிறது என்று கருத்துமுதல்வாத, மதச் சித்தாந்தங்களில் வலிந்துரைக்கப் படுகிறது. உண்மையிலோ, ஒழுக்க நெறி விதிகள் சமூக வாழ்க்கை நிலைமைகளிலிருந்து தோன்றி வளர்கின்றன. இந்த நிலைமைகளில் முக்கியமானவை பொருளாதார உறவுகள். முடிவாகப் பார்க்கும்போது சமூகத்தின் பொருளாதார அமைப் பின் மாறுதலே ஒழுக்க நெறி நோக்குக்களில் மாறுதலை நிச்சயிக் கிறது. ஆனால் இந்த நோக்குக்கள் உருவாவதில் சமூக

வாழ்வின் பிற காரணிகளும் பாதிப்பு நிகழ்த்துகின்றன. வர்க்க, அரசியல் போராட்டமும் சமூக உணர்வின் மற்ற வடிவங்கள் ஆன அரசியல், சட்ட நோக்குக்கள், கலை முதலியனவும் இந்தக் காரணிகளுக்கு எடுத்துக்காட்டுக்கள்.

குறித்த ஒழுக்க நெறித் தேவைகளும் அளவுமானங்களும் பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பில் தோன்றின. ஆனுல் அதில் சமூகம் இன்னும் வர்க்கங்களாகப் பிரிவுபடவில்லை. எனவே சமூகத்தின் எல்லா உறுப்பினர்களும் ஒரே ஒழுக்க நெறிக்கு உட்பட்டிருந்தார்கள்.

தனியார் சொத்துரிமையின் அடிப்படையில் எழுந்தது சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கச் சமூகம். அதில் ஒழுக்க நெறி குறித்த வர்க்கங்களின் நலன்களை வெளியிடுகிறது, எனவே வர்க்கத்தன்மை உடையதாக இருக்கிறது. அடிமைச் சொந்தக்கார, நிலப்பிரபுத்துவ, பூர்ஷ்வா அமைப்புக்களில் சுறண்டுவோரின் ஒழுக்க நெறிக்கு எதிர்நிற்கிறது ஒடுக்கப்படும், சுறண்டப்படும் வர்க்கங்களின் ஒழுக்க நெறி. ஆயினும் ஆட்சி அதிகாரத்தைத் தன் கைகளில் வைத்துள்ள, உற்பத்திச் சாதனங்களை உடைமையாகக் கொண்டுள்ள ஆளும் வர்க்கத்தின் ஒழுக்க நெறியே ஆதிக்கம் வகிக்கும் ஒழுக்க நெறியாக விளங்குகிறது. நன்மை, தீமை, மானம், அவமானம் முதலியவை போன்ற ஒழுக்க நெறிக் கருதுகோள்களுக்கு ஒவ்வொரு வர்க்கமும் வெவ்வேறு அர்த்தம் கற்பித்துக்கொள்கிறது. உதாரணமாக, பூர்ஷ்வாச் சமூகத்தில் வேலை நிறுத்தங்களை முதலாளி தீமை என்று கருதுகிருன், தொழிலாளியோ நன்மை என்று எண்ணுகிருன்.

ஒவ்வொரு வர்க்கமும் தனது நோக்கு நிலையிலிருந்து, தன் வர்க்க நலன்களிலிருந்து சரியானது என்றும், எனவே எந்த வர்க்கத்தின் ஒழுக்க நெறி அளவுமானங்களும் கோட்பாடுகளும் எதார்த்தத்தில் நியாயமானவை என்பதை நிர்ணயிக்க வாய்ப்பு அளிக்கும் புறநிலை அளவுகோலைக் கண்டுபிடிப்பது இயலாது என்றும் ஒருவேளை தோன்றக்கூடும். எனினும் அத்தகைய அளவுகோல் இருக்கிறது. முற்போக்குள்ள வர்க்கங்களின் நலன்களை எந்த ஒழுக்க நெறி வெளியிடுகிறதோ அதுவே உண்மையான ஒழுக்க நெறி. உழைக்கும் மனிதகுலம் அனைத்தின் நலன்களுக்கும் உகந்த, ஆக முற்போக்கான ஒழுக்க நெறியாக விளங்குகிறது கம்யூனிஸ ஒழுக்க நெறி. பூர்ஷ்வா

ஒழுக்க நெறியுடன் இதை ஒப்பிட்டுப்பார்த்தால் இந்த உண்மை சிறப்பாகத் தெற்றெனப் புலப்படும்.

தனி முதலாளித்துவச் சொத்துரிமையை அஸ்திவாரமாக உடைய பூர்ஷ்வா ஒழுக்க நெறியின் தலைமைக் கோட்பாடாக விளங்குவது கடைக்கோடித் தனித்துவவாதமும் தன்னலமும் ஆகும். சுயலாபத்தின், தனித்துவவாதத்தின் உணர்வு முதலாளித்துவச் சமூகத்தின் ஒவ்வோர் அணுவிலும் புகுந்து நிறைந்திருக்கிறது. ''மனிதன் மனிதனுக்கு ஓநாய் போன்றவன்'', ''மற்றவர் களைக் கடித்துக் குதறு, இல்லாவிட்டால் சேற்றில் கிட''— இத்தகையவையே முதலாளித்துவச் சமூகத்தில் ஆதிக்கம் செலுத்தும் ஒழுக்க நெறி நியமங்கள் ஆகும். தனது லாபத்துக்காக முதலாளி செய்யத் தயங்கும் பாதகம் எதுவும் இல்லை.

பூர்ஷ்வா ஒழுக்க நெறியின் மானிட வெறுப்பு நிறைந்த இயல்பு தற்கால நிலைமைகளில் மிகவும் துலக்கமாக வெளிப்படுகிறது. ஏகபோக ஸ்தாபனங்களின் கொள்ளை லாபத்தைக் கருதித் தனி மனிதர்களது சுதந்திரம் மட்டுமல்ல, முழு நாட்டினங்களின் சுதந்திரம் பலியிடப்படுகிறது. வியத்நாமிய மக்களுக்கு எதிராக அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளால் நடத்தப்பட்டுவரும் மனிதத்தன்மை அற்ற போரை இதற்கு உதாரணமாகக் காட்டலாம்.

கம்யூனிஸ ஒழுக்க நெறி எல்லா வகைச் சுறண்டுவோர் ஒழுக்க நெறியிலுமிருந்து அடிப்படையில் வேறானது. மனித குல வரலாற்றிலேயே யாவற்றிலும் முற்போக்கானது அது. சுறண்டுவோரின் முறைக்கேடான தன்னல ஒழுக்க நெறியை நிராகரித்து உழைக்கும் மனிதகுலம் அனைத்தினதும் நலன்களையும் ஆதர்சங்களையும் வெளியிடுகிறது கம்யூனிஸ ஒழுக்க நெறி. சென்ற காலத்தில், சுறண்டுவோர் ஆட்சியின்போது விகாரப்படுத்தவோ, வெட்கமின்றி மிதித்துத் துவைக்கவோ பட்ட, நீதிநெறிக்கும் நியாயத்துக்கும் உரிய சாதாரண அளவுமானங்கள் கம்யூனிஸ ஒழுக்க நெறியில் வடிவுபெற்றுள்ளன. சமுதாய அடக்குமுறைக்கும் நீதிநெறிக் கேடுகளுக்கும் எதிரான ஆயிரமாண்டுக்காலப் போராட்டத்தில் திரளான பொதுமக்களால் உருவாக்கப்பட்டுள்ள சிறந்த பண்புகள் யாவும் கூட்டுத்துவத்தின் ஒழுக்க நெறியான கம்யூனிஸ ஒழுக்க நெறியில் பிரதிபலிக்கின்றன.

கம்யூனிஸ ஒழுக்க நெறி முதலாளித்துவத்தின் கருவிலேயே தொழிலாளி வர்க்க ஒழுக்க நெறி என்ற வகையில் உதித்து விட்டது. மனிதன் மனிதனுல் இரக்கமின்றிச் சுறண்டப்படுவதற்கு எதிர்ப்பாக விளங்கியது இது. சோஷலிஸமும் கம்யூனிஸமும் நிறுவப்படுகையில் கம்யூனிஸ ஒழுக்க நெறி புதிய கோட்பாடுகளாலும் புதிய உள்ளடக்கத்தாலும் மேலும் வளம் பெற்றது. கம்யூனிஸத்தை வலுப்படுத்தி நிறைவுறுத்துவதற்கான போராட்டம் கம்யூனிஸ நீதி நெறிக்கு அஸ்திவாரமாக விளங்குகிறது எனச் சுட்டிக் காட்டினுர் வி. இ. லெனின். கம்யூனிஸத்தை நிறுவுபவனுக்கு உரிய ஒழுக்க நெறித் தொகுப்பு சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிச் செயல்திட்டத்தில் சூத்திரப் படுத்தப்பட்டிருக்கிறது. கம்யூனிஸ ஒழுக்க நெறியின் அடிப்படைக் கோட்பாடுகள் இந்தத் தொகுப்பில் அடங்கியுள்ளன. கம்யூனிஸச் சமூகத்தை நிறுவுபவனுக்கு உரிய சிறந்த பண்புகளே இந்தக் கோட்பாடுகள் பிரதிபலிக்கின்றன. இவற்றில் சில வருமாறு:

—கம்யூனிஸக் குறிக்கோள்பால் விசுவாசம், சோஷலிஸத் தாய்நாட்டின்மீதும் சோஷலிஸ நாடுகள்மீதும் பற்று;

—சமூகத்தின் நலத்துக்காக நேர்மையுள்ள உழைப்பு: உழைக்காதவனுக்கு உணவு கிடையாது;

—சமூக உடைமையைக் காப்பதிலும் பெருக்குவதிலும் ஒவ்வொருவருக்கும் அக்கறை;

—சமூகக் கடமை பற்றிய உயர்ந்த உணர்வு, சமூக நலன்களுக்குக் குந்தகம் ஏற்படுவதைப் பொறுக்காமை;

—கூட்டுத்துவமும் தோழமையுள்ள பரஸ்பர உதவியும்: ஒவ்வொருவனும் எல்லோருக்காக, எல்லோரும் ஒருவனுக்காக;

—மனிதர்களுக்கு இடையே மனிதாபிமான உறவுகளும் பரஸ்பர மரியாதையும்; மனிதன் மனிதனுக்கு நண்பன், தோழன், சோதரன்;

—சமூக வாழ்விலும் சொந்த வாழ்விலும் நேர்மையும் மெய்மையும் ஒழுக்கத் தூய்மையும் எளிமையும் அடக்கமும்;

—குடும்பத்தினரிடையே பரஸ்பர மரியாதை, குழந்தைகளேப் பயிற்றி வளர்ப்பதில் அக்கறை;

—அனியாயம், ஒட்டுண்ணித்தனம், நேர்மையின்மை, பதவிப் பித்து, பொருளாசை, இவற்றிற்குச் சமரசமற்ற எதிர்ப்பு;

—சோவியத் யூனியனின் எல்லா மக்களுடையவும் நட்பும்

சோதரப்பான்மையும், நாட்டின, மானிட இனப் பகைமையைச் சகியாமை;

—கம்யூனிஸம், சமாதானம், மக்கள் விடுதலை ஆகியவற்றின் பகைவர்களுக்குச் சமரசமற்ற எதிர்ப்பு;

—எல்லா நாடுகளையும் சேர்ந்த உழைப்பாளிகளுடனும் எல்லா மக்களுடனும் சோதர ஒருமைப்பாடு.

சோவியத் மக்களின் வாழ்க்கையிலும் அன்றாட நடைமுறையிலும் இந்தக் கோட்பாடுகள் நிலையாக வேரூன்றத் தொடங்கியுள்ளன.

கம்யூனிஸக் குறிக்கோள்பால் விசுவாசம், சோஷலிஸத் தாய்நாட்டின்மீதும் சோஷலிஸ நாடுகள்மீதும் பற்று என்ற, ஒழுக்க நெறித் தொகுப்பின் முதன்மையான கோரிக்கையே சோஷலிஸச் சமூகத்தின் உழைப்பாளிகளது நடத்தையின் சர்வப்பொது அளவுமானம் ஆகிவருகிறது.

சமூக நன்மைக்கான உழைப்பு, சமூகக் கடமை பற்றிய ஆழ்ந்த உணர்வு, தனது தொழில் நிலையம், கூட்டுப்பண்ணை, சமூகம் அனைத்தும், இவற்றின் விதிக்கு ஒவ்வொருவனும் சொந்த முறையில் பொறுப்பாளி என்ற உணர்ச்சி—இவை எல்லாங்கூட நகரிலும் கிரமத்திலும் உள்ள கோடானுகோடி உழைப்பாளி மக்களின் ஒழுக்க நெறி அளவுமானமாக இப்போதே விளங்குகின்றன. உணர்வுபூர்வமான உழைப்பு சமூக வாழ்வில் ஆற்றும் பங்கை வி. இ. லெனின் பல முறை வலியுறுத்தியுள்ளார். கம்யூனிஸமும் உழைப்பும் ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்க முடியாதவை. எவர்களுக்கு உழைக்கும் விருப்பம் இல்லையோ, எவர்கள் சமூகத்திற்குக் கொடுப்பதைவிட அதனிடமிருந்து அதிகமாக எடுத்துக்கொள்வதை விரும்புகிறார்களோ, அவர்களை எதிர்த்து சோவியத் மக்கள் தீவிரமாகப் போராடுகிறார்கள்.

மக்களது உடைமையின்பால் அசட்டையான போக்கை சோஷலிஸச் சமூகத்தின் உழைப்பாளிகள் கவனிக்காமல் விட்டுவிடுவதில்லை. குற்றத்தன்மை கொண்ட ஊதாரித்தனம் செய்பவர்கள் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும் என்று அவர்கள் நியாயமாகக் கோருகிறார்கள். சமூக உடைமை கவனமாகப் பராமரிக்கப்படுதல், சமூக உடைமையைக் காப்பதிலும் பெருக்குவதிலும் ஒவ்வொருவருக்கும் அக்கறை—இது ஒழுக்க நெறித் தொகுப்பின் முக்கியக் கோட்பாடுகளில் ஒன்று. இந்தக் கோட்பாடு சோவியத் மக்களின் வாழ்க்கையில் மேலும் மேலும் ஆழமாக வேரூன்றிவருகிறது.

கம்யூனிஸ மனிதாபிமானத்தின் ஆதர்ச வாக்கியமாகத் திகழ்கிறது ''மனிதன் மனிதனுக்கு நண்பன், தோழன், சோதரன்'' என்ற கோட்பாடு. கம்யூனிஸ மனிதாபிமானம் தனது குறிக்கோளில் சென்ற காலத்திய மனிதாபிமானத்திலிருந்து அடிப்படையில் வேறுபடுகிறது. ஏனெனில் புதிய சமூக அமைப்பின் இயல்பு இதில் பிரதிபலிக்கிறது. மனிதனும் அவனுடைய தேவைகளுமே இந்தப் புதிய சமூக அமைப்பின் குறிக்கோள் ஆகும். கம்யூனிஸ மனிதாபிமானம் மனிதகுலத்தின் சால்பு மிக்க ஆதர்சங்களைப் பிரகடனம் செய்வதுடன் நின்றுவிடுவதில்லை, அவற்றை வாழ்க்கையில் முழுமையாகச் செயல்படுத்துமாறு கோருகிறது. கம்யூனிஸ ஆதர்சங்கள் வருங்காலத்தைப் பற்றிய வெற்றுன, அருவமான கனவுகள் மட்டுமே அல்ல. எல்லா உழைப்பாளிகளதும் இன்பத்தை நிறுவுவதற்காக ஊக்கத்துடன் புரட்சிப் போராட்டம் நடத்துவதற்கான அறைகூவல் ஆகும்.

மனிதனது விடுதலைக்கும் இன்பத்துக்கும் இடையூறு செய்யும் அனைத்தின் விஷயத்திலும் சகிப்பின்மையும் மனிதகுலத்தின் பகைவர்களான சுறண்டுவோர், பொதுமக்களை அடக்கி ஒடுக்குவோர், பிறரது பிரதேசங்களை வலியக் கைப்பற்றுவோர், போர் நெருப்பை மூட்டிவிட முயல்வோர் ஆகியோருக்குச் சமரசமற்ற எதிர்ப்பும் கம்யூனிஸ மனிதாபிமானத்துக்கு இயல்பானவை. கம்யூனிஸ மனிதாபிமானம் மக்கள் அனைவருக்கும் உரிய, கூட்டுத்துவ மனிதாபிமானம் ஆகும். மனிதகுலம் அனைத்தின் நலன்களையும் அது வெளியிடுகிறது. புரட்சிகர எதிர்கால நம்பிக்கையால், ஒளிவீசும் வருங்காலம் பற்றிய நம்பிக்கையால் அது நிறைந்து ததும்புகிறது.

சோஷலிஸச் சமூகத்தின் மனிதன் தனது தாய்நாட்டின்மீது பற்றுமிக்க தேசபக்தன். தனது நாட்டையும் தனது மக்களையும் அவன் நேசிக்கிறுன். சோவியத் தேசபக்தி சர்வதேசத் தன்மை உள்ளது. சோஷலிஸ அமைப்பு நாடுகளின் உழைப்பாளிகளுடனும் உலகின் எல்லா மக்களுடனும் சோதர ஒருமைப்பாடு சோவியத் மக்களுக்கு இயல்பானதும் அவர்களிடமிருந்து பிரிக்க முடியாததும் ஆன பண்பு. ஏகாதிபத்தியக் கொள்கைவாதிகளால் தூண்டிவிடப்படும் நாட்டின, மானிட இனக்காழ்ப்பை அவர்கள் வெறுக்கிறுர்கள்.

மேற்கூறப்பட்டுள்ளவற்றுடன் கம்யூனிஸச் சமூகத்து மனிதனது ஒழுக்க நெறிப் பாங்கின் வேறு பண்புகளும் சோஷலிஸ

அமைப்பிலேயே பல சோவியத் மக்களுக்கு இயல்பாக உள்ளன. சமூக வாழ்விலும் சொந்த வாழ்விலும் ஒழுக்கத் தூய்மையும் நேர்மையும் மெய்மையும் அடக்கமும், குடும்பத்தின்பால் மரியாதையும் குழந்தைகளைப் பயிற்றி வளர்ப்பதில் அக்கறையும், அனியாயம், ஒட்டுண்ணித்தனம், நேர்மையின்மை, பதவிப்பித்து, பொருளாசை ஆகியவற்றுக்கும் மக்களின் உணர்வில் உள்ள முதலாளித்துவத்தின் பிற மீத மிச்சங்களுக்கும் சமரசமற்ற எதிர்ப்பு முதலியவை அந்தப் பண்புகள்.

கம்யூனிஸத்தை நிறுவுபவனுக்கு உரிய ஒழுக்கநெறித் தொகுப்பின் உயர்ந்த கோட்பாடுகளின் உணர்வில் சோவியத் மக்களைக் கம்யூனிஸ்ட் கட்சி மேற்கொண்டும் சளைக்காது பயிற்றி வரும். இந்தக் கோட்பாடுகள் சோஷலிஸச் சமூகத்தின் எல்லா உறுப்பினர்களுடையவும் சொந்தக் கருத்துக்களாக மாறி விடும்படிப் புரிவதற்கு அது எல்லா வகையிலும் முயலும்.

மனிதனைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சம் சமூக உணர்வின் ஒரு வடிவமான விஞ்ஞானத்திலும் பிரதிபலிக்கிறது. பிரபஞ்சம் பற்றிய மனிதர்களது அறிவின் திட்டவட்டமான தொகுப்பே விஞ்ஞானம் ஆகும். இயற்கை, சமூகம், சிந்தனை ஆகியவற்றையும் அவற்றின் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளையும் விஞ்ஞானம் ஆராய்கிறது. பிரபஞ்சத்தைக் கருதுகோள்களிலும் விதிகளிலும் சித்தாந்தங்களிலும் பிரதிபலிக்கிறது விஞ்ஞானம். அதன் சிறப்புத்தன்மை இதுவே. விஞ்ஞான முடிவுகள் சமூக நடைமுறையால் உறுதி செய்யப்படுகின்றன. விஞ்ஞானம் இயற்கைமீது மனிதனது ஆதிக்கத்தை அதிகப்படுத்துகிறது, அவனது அறிவு எல்லையை விரிவுபடுத்துகிறது, சமூக உறவுகளை மேம்படுத்துவதற்கான வழிகளைக் காட்டுகிறது.

பிரபஞ்சம் தனது இயற்கையில் பல அம்சங்கள் கொண்டது. எனவேதான் பல்வேறு விதமான விஞ்ஞானங்கள் நிலவுகின்றன. அவற்றில் ஒரு சில (உதாரணமாக, கணிதம், பௌதிகம், ரசாயனம், உயிரியல், புவி இயல் முதலியன) இயற்கையின் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளை ஆராய்கின்றன. இவை இயற்கை விஞ்ஞானங்கள் எனப்படுகின்றன. வேறு சில (உதாரணமாக, வரலாறும் அரசியல் பொருளாதாரமும்) சமூக வாழ்வை ஆராய்கின்றன. இவை சமூக விஞ்ஞானங்கள் எனப்படுகின்றன. ஒவ்வொரு விஞ்ஞானத்துக்கும் அதற்கே உரிய விஷயமும் ஆராய்ச்சி முறையும் உண்டு. எதார்த்தத்தின் எந்தத்

துறை குறித்த விஞ்ஞானத்தால் ஆராயப்படுகிறதோ அதன் தன்மையால் நிச்சயிக்கப்படுகின்றன இவை.

இயற்கை விஞ்ஞானங்கள் வர்க்கத்தன்மை கொண்டவை அல்ல. உதாரணமாக, பூர்ஷ்வா வர்க்க அல்லது பாட்டாளி வர்க்கக் கணிதமோ, ரசாயனமோ, பௌதிகமோ, உயிரியலோ கிடையாது. ஆயினும் பெறப்பட்ட விஞ்ஞான விளைவுகள் வெவ்வேறு வர்க்கங்களால் வெவ்வேறு நோக்கங்களுக்காக அடிக்கடி பயன்படுத்தப்படுகின்றன என்பதைக் கருத்தில் கொள்வது அவசியம்.

வர்க்கச் சமூகத்தில் சமூக விஞ்ஞானங்கள் சமூகத்தன்மை கொண்டிருக்கின்றன. உதாரணமாக, பூர்ஷ்வா அரசியல் பொருளாதாரம் பற்றி நாம் பேசுகிறோம். தனது வர்க்கத்துக்குத் தொண்டாற்றுவதும் அதன் நலன்களைக் காப்பதுமே அதன் நோக்கம். பூர்ஷ்வாத் தத்துவம், சமூக இயல் ஆகியவற்றின் விஷயமும் இதுவே. ஏகபோக மூலதனத்தின் நலன்களை இவை மிக முழுமூச்சாகப் பாதுகாக்கின்றன. அது நிலவுவதை நியாயப் படுத்துகின்றன. சோஷலிஸ அமைப்பைப் பழி தூற்றுகின்றன.

சமூகத்தின் வாழ்விலும் வளர்ச்சியிலும் விஞ்ஞானம் மிகப் பெருத்த பங்கு ஆற்றுகிறது. உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சிக்கும், பொருளியல் ஆன்மீக நலங்களின் படைப்புக்கும் அது உதவுகிறது. பல்வகையான தப்பெண்ணங்களுடனும் மூடநம்பிக்கைகளுடனும் போராட அது துணை புரிகிறது. ஆனால் அதன் சமுதாயப் பாத்திரமும் அதன் வளர்ச்சியின் வேகமும் இயல்பும் சமூக அமைப்பின் இயல்பையும் சமூகத்தில் நிலவும் பொருளாதார, அரசியல் உறவுகளையும் இந்த அமைப்பு ஏறுமுகமான போக்கில், முன்னேற்றப் பாதையில் செல்கிறதா அல்லது, மாறாக, தன் வாழ்வின் இறுதிக் கட்டத்தில் இருக்கிறதா என்பதையுமே பொறுத்திருக்கின்றன.

சோஷலிஸச் சமூகத்தில் விஞ்ஞானத்தின் உதவியால் மக்களின் நலன்களுக்காகப் பூமியின் முகப்பே மாற்றி அமைக்கப்பட்டு வருகிறது. உற்பத்தித்திறன் மிக்க இயந்திரங்கள் புதிதாகப் புனையப்படுகின்றன, ஆற்றலின் புது வகைகள் கண்டு பிடிக்கப்படுகின்றன, சதுப்பு நிலங்கள் உலர்நிலங்கள் ஆக்கப் படுகின்றன, பாலை நிலங்கள் பாசன நிலங்கள் ஆக்கப்படுகின்றன, தாவரங்களின் புதிய இனங்களும் பிராணிகளின் புதிய வகைகளும் படைக்கப்படுகின்றன. சோவியத் மக்களே முதன்

முதலாக விண்வெளிக்குள் புகுந்து வந்தார்கள். சோஷலிஸ அமைப்பு விஞ்ஞான வளர்ச்சிக்கு எல்லையற்ற வாய்ப்புக்களை முன்வைத்திருப்பதன் பயனுகவே இவை எல்லாம் சாத்திய மாகி உள்ளன.

முதலாளித்துவச் சமூகத்தில் உள்ள விஞ்ஞானத்துடன் ஒப்பிடும்போது அதிக வெற்றிகரமான வளர்ச்சி அடைவதற்கு வாய்ப்பு அளிக்கும் சில அம்சங்கள் சோஷலிஸத்தில் விஞ்ஞானத் துக்குக் கிடைத்துள்ளன. சோஷலிஸத்தில் விஞ்ஞானத்தின் சிறப்பு இதுவே. இந்த அம்சங்களைப் பார்ப்போம்.

முதலாவதாக, சோஷலிஸத்தில் விஞ்ஞானம் இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தை ஆதாரமாகக் கொண் டிருக்கிறது. இது விஞ்ஞான ரீதியான ஒரே பிரபஞ்சக் கண் ணேட்டமும் இயற்கையையும் சமூகத்தையும் அறிவதற்கான சர்வப்பொது முறையும் ஆகும்.

இரண்டாவதாக, சோவியத் விஞ்ஞானம் உண்மையிலேயே மக்களுக்கு உரியது. அது தன்னை மக்களிடமிருந்து வேலியிட்டுப் பிரித்துக்கொள்வதில்லை. அவர்களுக்கு விசுவாசத்துடன் தொண் டாற்றுகிறது. அதே சமயம் சோவியத் நாட்டில் விஞ்ஞானத்தை அடையும் விரிவான வாய்ப்பு மக்களுக்குக் கிடைத்திருக்கிறது. புதுமை புகுத்துவோரும் புதுப்புனைவாளர்களும் உற்பத்தியைச் சீருறப் புதுக்குவோரும் சோவியத் யூனியனில் பதினுயிரக் கணக்கில் இருக்கிருர்கள். ஏராளமான சோவியத் விஞ்ஞானி களும் முழு விஞ்ஞான ஆராய்ச்சி நிலையங்களும் நேராகத் தொழில் நிலையங்களிலும் கூட்டுப்பண்ணைகளிலும் அரசாங்கப் பண்ணைகளிலும் பெரிய ஆராய்ச்சிகள் நடத்துகின்றனர்.

சோவியத் அரசு சோஷலிஸ விஞ்ஞானத்தின் வளர்ச்சிக்கு எல்லா வகையிலும் உதவுகிறது. தேசியப் பொருளாதாரத்தின் மிக முக்கியமான துறைகளில் அது விஞ்ஞானத்தை ஒருமுனைப் படுத்துகிறது. விஞ்ஞானிகளின் வேலை நிலைமைகள் பற்றிக் கவலை எடுத்துக்கொள்கிறது. அணுசக்தி உற்பத்தித் துறையி லும் சமாதான நோக்கங்களுக்காக அதைப் பயன்படுத்தும் துறையிலும் சோவியத் விஞ்ஞானம் அபார வெற்றி அடைந் திருப்பது தற்செயலாக அல்ல. சோவியத் விஞ்ஞானிகளே முதன் முதலாக விண்வெளிக்கு வழி வகுத்ததும் தற்செயலாக அல்ல. ''மிக முக்கியமான அறிவுத் துறைகளில் பெறப்பட்ட முன்னணி இடங்களை சோவியத் விஞ்ஞானத்துக்கு நிலைப்படுத்தி

யதும் எல்லாப் பிரதானத் திசைகளிலும் உலக விஞ்ஞானத்தில் சிறப்பான ஸ்தானம் வகிப்பதும் சோவியத் விஞ்ஞானிகளுக்குப் பெருமை அளிக்கும் விஷயங்கள்'' என்கிறது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டம்.

கம்யூனிஸக் கட்டுமானக் காலப்பகுதியில் சோவியத் யூனியனின் அடிவைப்பு சோவியத் விஞ்ஞானத்துக்கு முன் மகத்தான புதிய கடமைகளை வைத்திருக்கிறது. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்திலும் கட்சிக் காங்கிரஸ்களின் தீர்மானங்களிலும் இந்தக் கடமைகள் சூத்திரப்படுத்தப்பட்டிருக்கின்றன.

கம்யூனிஸத்தின் பொருளியல்தொழில்நுட்ப அடிப்படையை நிறுவுவதுடன் தொடர்புள்ள விஞ்ஞானங்களை வளர்வுறுத்துவது கம்யூனிஸக் கட்டுமானத்தின் நலன்களுக்கு இன்றியமையாதது. சித்தாந்தக் கணிதம், பயன்முறைக் கணிதம், கணக்கீட்டுத் தொழில்நுட்ப இயல், இயந்திர நுணுக்க இயல், அணு பௌதிகம், திடப்பொருள் பௌதிகம், ரசாயனம், உயிரியல் ஆகியவற்றுக்கு இது முதன்மையாகப் பொருந்தும். உற்பத்தியையும் போக்குவரத்தையும் தகவல் துறையையும் மின்சாரமயமாக்கலும் சர்வாம்ச ரீதியாக இயந்திரமயமாக்கலும் தானியங்கிமயமாக்கலும், தேசீயப் பொருளாதாரத்தின் மிக முக்கியக் கிளைகளை ரசாயனமயமாக்கல், அணு சக்தியையும் ஆற்றலின் பிற வடிவங்களையும் பயன்படுத்தல் ஆகிய துறைகளில் சித்தாந்த ரீதியான ஆராய்ச்சி, இவை யாவும் பொருளியல் நலங்களின் செழிப்பை ஏற்படுத்துவதற்கு இன்றியமையாத தொழில்நுட்ப முன்னேற்றத்திற்கும் உற்பத்திச் சக்திகளின் உயர்ந்த வளர்ச்சித் தரத்திற்க்கும் வகை செய்யும். இயற்கை விஞ்ஞானங்கள் உற்பத்தி வளர்ச்சிக்கு மிக முக்கியக் காரணிகள் ஆகி வருகின்றன என்பதை இவை எல்லாம் உணர்த்துகின்றன.

சோவியத் சமூகத்தில் விஞ்ஞானத்தின் மிகப் பெருத்த முக்கியத்துவம் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 23வது காங்கிரஸால் அங்கீகரிக்கப்பட்ட தீர்மானங்களில் வலியுறுத்தப்பட்டிருக்கிறது. கம்யூனிஸக் கட்டுமானத்தின் நிலைமைகளில் விஞ்ஞானம் நேரடியான உற்பத்திச் சக்தியாக மேலும் மேலும் மிகுதியாகச் செயலாற்றிவரும் என்று இந்தக் காங்கிரஸ் குறிக்கிறது. இயற்கை விஞ்ஞானங்களின் கடமை

களையும் இவற்றின் வளர்ச்சியில் விஞ்ஞானிகளின் பங்கையும் அது தெளிவாக நிச்சயித்திருக்கிறது. ''நமது விஞ்ஞானிகளின் பணி தற்காலத்தின் உடனடியான விஞ்ஞானப் பிரச்சினைகளுக்கு மேற்கொண்டு தீர்வுகள் காண்பதிலும், விஞ்ஞான-தொழில் நுட்ப முன்னேற்றத்தை எல்லா வகையிலும் விரைவுபடுத்து வதிலும், விஞ்ஞான ஆராய்ச்சிகளின் விளைவுகளைத் தேசீயப் பொருளாதாரத்தில் சிக்கிரத்திலும் சிக்கிரமாகப் புகுத்துவதி லும், உழைப்பின் உற்பத்தித் திறனின் வளர்ச்சி மிக விரைவாக ஏற்பட வகைசெய்வதிலும் ஈடுபட வேண்டும்'' என்று மேற்படிக் காங்கிரஸின் தீர்மானங்களில் சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது.

சோஷலிஸக் கட்டுமானத்தின் நிலைமைகளில் ஒழுங்கு முறை யற்ற பொருளாதார வளர்ச்சியின் இடத்தில் உற்பத்தி, சமூக வாழ்வு, இவை அனைத்தின் உணர்வுபூர்வமான ஒழுங்கமைப்பு இடம் பெற்றுவிடுவதால் சமூக விஞ்ஞானங்கள் சோஷலிஸச் சமூகத்தில் சிறப்பான முக்கியத்துவம் பெற்றுவிடுகின்றன. சமூக வளர்ச்சியை இயக்கி நடத்துவதற்கான விஞ்ஞான அஸ்தி வாரமாக விளங்குகின்றன சமூக விஞ்ஞானங்கள். எனவே, கம்யூனிஸக் கட்டுமான நடைமுறையை ஆராய்வதும் சித்தாந்த ரீதியில் பொதுமைப்படுத்துவதும், பொருளாதார நோக்கிலும் அரசியல் நோக்கிலும் பண்பாட்டு நோக்கிலும் சோஷலிஸம் உருவாவதற்கும் அது கம்யூனிஸமாக வளர்வதற்கும் உரிய அடிப்படையான விதிமுறைகளைப் பரிசிலனை செய்வதும், கம்யூனிஸ முறையில் மக்களைப் பயிற்றுவது குறித்த பிரச்சினை களை நுணுகி ஆராய்வதும் அவற்றின் கடமைகள் ஆகின்றன.

கம்யூனிஸக் கட்டுமான நடைமுறையுடன் நெருங்கிய தொடர்பில் பொருளாதாரம், தத்துவம், சமூக இயல், வரலாறு, சட்டம் ஆகியவற்றின் பிரச்சினைகளை நுட்பமாக ஆராய்வது சமூக விஞ்ஞானத் துறையில் யாவற்றிலும் முக்கியமான கடமையாக விளங்குகிறது. கம்யூனிஸச் சமூக உறவுகள் உரு வாகும் செயல்முறையின் போக்கையும் தன்மையையும், அரசு அமைப்பின் செவ்வைப்பாட்டுக்கும் சோஷலிஸ ஜனநாயகத் தின் வளர்ச்சிக்கும் உரிய பிரச்சினைகளையும், நிர்வாகத்தினதும் உழைப்பினதும் விஞ்ஞான ரீதியான ஒழுங்கமைப்பினுடைய வடிவங்களையும் முறைகளையும் கம்யூனிஸப் பாங்கில் பயிற்றி வளர்ப்பதற்கான முறைகளையும், பிற பிரச்சினைகளையும் சர் வாம்சரீதியாகப் பரிசிலிப்பது சோவியத் விஞ்ஞானிகளின் பொ

றுப்பாக இருக்கிறது. அவர்கள் பூர்ஷ்வாக் கொள்கைவாதத்தை அம்பலப்படுத்த வேண்டும். தற்காலச் சீர்திருத்தவாதத்தையும் திரிபுவாதத்தையும் வறட்டுச் சூத்திரவாதத்தையும் எதிர்த்து உறுதியாகப் போராட வேண்டும்.

இயற்கை விஞ்ஞானங்களின் நிறைவேற்றங்கள் பொருளியல் உற்பத்தியில் பயன்படுத்தப்படுவது எவ்வளவு முக்கியமான பங்கு ஆற்றுகிறதோ அவ்வளவே முக்கியமான பங்கு ஆற்றுகின்றன சமூக விஞ்ஞானங்களின் வளர்ச்சியும் அவற்றின் யோசனைகள் நடைமுறையில் புகுத்தப்படுதலும்.

சமூகத்தின் பரந்த ஆன்மீக வாழ்வுத் துறையாக விளங்குகிறது கலை. புனைவு இலக்கியம், இசை, ஓவியம், சிற்பம், ஆடற்கலை, மன்றக்கலை, திரைப்படம் முதலியன இதைச் சேர்ந்தவை.

எதார்த்தத்தின் அம்சங்களான இயற்கைக் காட்சி, சமூக வாழ்க்கைச் சம்பவங்கள், மனித இயல்பு முதலியவற்றில் எதை எடுத்துக்கொண்டாலும் சரியே, எதார்த்த நிகழ்ச்சிகளின் அழகியல் பண்பைப் புலப்படுத்துவதே கலையின் நோக்கம் ஆகும். குறித்த சமுதாய-அழகியல் ஆதர்சத்துக்குப் பொருந்த இந்த நிகழ்ச்சிகளை அழகியல் நோக்கில் புரிந்துகொள்ளவும் மதிப்பிடவும் கலை துணை செய்கிறது.

எதார்த்தத்தைப் பிரதிபலிக்கும் விதம் காரணமாகக் கலை சமூக உணர்வின் மற்ற வடிவங்களிலிருந்து வேறுபடுகிறது. இயற்கையையும் சமூகத்தையும் விஞ்ஞானம் கருதுகோள்களின் வடிவிலும் விதிகளின் வடிவிலும் பிரதிபலிக்கிறது என்றால் கலை அவற்றைக் கற்பனைப் பாத்திரங்களின் வடிவில் பிரதிபலிக்கிறது.

மனிதர்களுடைய சமூக வாழ்வின் தேவைகளிலிருந்து, உலகத்தை மாற்றி அமைத்த சமூக-வரலாற்று நடைமுறையிலிருந்து தோன்றியது கலை. உழைக்கும்போது, பொருளியல் நலங்களை உற்பத்தி செய்யும்போது மனிதன் இயற்கையை மாற்றி அமைப்பதோடு மட்டுமின்றித் தனது சொந்தத் திறமைகளையும் படைப்பு ஆற்றல்களையும் கூட வளர்த்துக்கொள்கிறான். இயற்கையை மாற்றி அமைக்கும் தேவை பிரபஞ்சத்தின்பால் மனிதனின் அழகியல் உறவுகளைத் தோற்றுவிக்கிறது. ஏனெனில் அவனால் ஆக்கப்படும் வஸ்துக்கள் பொருளியல் மதிப்பு மாத்திரமல்ல, அழகியல் மதிப்பும் கொண்டிருக்கின்றன, அதாவது மனிதன் அழகியல் இன்பம் துய்க்குமாறு செய்கின்றன.

தொடக்கத்தில் கலை உற்பத்திச் செயலுடன் நேரடியாகப் பின்னிப் பிணைந்திருந்தது. பாறைகள்மீதும் குகைகளின் சுவர் கள்மேலும் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. வேட்டை, மீன்பிடிப்பு ஆகியவற்றை இவை சித்தி ரிக்கின்றன. பின்னர், அறிவு உழைப்புக்கும் உடல் உழைப்புக் கும் இடையே பிரிவு எந்த அளவுக்கு ஏற்பட்டதோ, அந்த அளவுக்கு உற்பத்தியுடன் கலையின் தொடர்பு மேலும் மேலும் சிக்கலாயிற்று. முடிவாகப் பார்க்கும்போது நேரடியான பொ ருளியல் செயலினுலேயே கலை நிச்சயிக்கப்படுகிறது என்ருலும் இந்தச் செயலிலிருந்து அது தனித்து விலகிவிட்டது. அது சமூக உணர்வின் தனிப்பட்ட வடிவம் ஆகிவிட்டது. இங்கே தான் தோன்றுகிறது அழகியல் ஆதர்சமும். இந்த ஆதர்சத் துக்கு இசையவே நேர்த்தியானதைப் புரிந்துகொள்ளவும் மதிக்கவும் மக்கள் கற்றுக்கொண்டார்கள்.

கலை வர்க்கத்தன்மையும் கட்சிச்சார்பும் உடையது. ''தூய'' கலை இல்லவும் இல்லை, இருக்கவும் முடியாது. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகத்தில் கலை வளர்ச்சி வர்க்கப் போராட்டத்தின் பாதிப்பினுலும் அரசியல், ஒழுக்க நெறி முதலிய சமூக உணர்வின் மற்ற வடிவங்களது செல்வாக் கினுலும் ஏற்படுகிறது. கலையின் மிகப் பெரிய வாய்ப்புக்களைத் திட்டவட்டமான பிரபஞ்சம் பற்றிய சிந்தனையை வெளியிடு வதற்கு, அதாவது தனது நலன்களின் பொருட்டுப் பயன்படுத் திக்கொள்ள ஒவ்வொரு வர்க்கமும் முயல்கிறது. அதனுல்தான் ஒவ்வொரு கலைப் படைப்பிலும் திட்டவட்டமான வர்க்க நலன் களதும் அழகியல் ஆதர்சங்களதும் முத்திரை வெளிப்படை யாகவோ உள்ளூறவோ பதிந்திருக்கிறது.

கலைஞன் முற்போக்குக் கருத்துக்களை மேற்கொண்டிருந்து உயர்ந்த தேர்ச்சியும் பெற்றிருந்தால் உண்மையைச் சித்திரிக் கும் ஆழ்ந்த கலைச் சிருஷ்டியை அவன் படைக்கிருன். பிரபஞ் சத்தை அறிந்துகொள்ள அது மக்களுக்கு உதவுகிறது. குறிப் பிட்ட கற்பனைப் பாத்திரங்களின் வாயிலாக நாம் ஸ்தூல வரலாற்றுச் சூழ்நிலையையும் சமூக உறவுகளையும் அரசியல் அக்க றைகளையும் மனிதர்களின் கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் முன்னிலும் ஆழமாகவும் முழுமையாகவும் புரிந்துகொள் கிருேம். அறிதலில் கலை ஆற்றும் பங்கு இதுவே.

கலை உலகத்தை அறிவதற்கான சாதனமாக விளங்குவ

தோடு அதை மாற்றி அமைக்க உதவும் விறல் மிக்க கருவியாகவும் திகழ்கிறது. முன்னேக்கிச் செல்லும், முற்போக்குள்ள கலை வாழ்வுதீர்ந்த பழைய சமூக உறவுகளை மாற்றவும் அவற்றின் இடத்தில் புதிய உறவுகளைப் புகுத்தவும் எப்போதும் துணை புரிந்திருக்கிறது. இடைக்காலத்திய இருண்ட மதச் சார்புள்ள கலையின் இடத்தில் வந்து அமர்ந்த மறுமலர்ச்சிச் சகாப்தக் கலையை நினைவுகூர்வதே இதைக் காட்டப் போதுமானது.

சுற்றியுள்ள நிகழ்ச்சிகளில் அவற்றின் உள்ளார்ந்த சாரத் தன்மையைக் காணவும் அவற்றின் அழகியல் பண்புகளை மதிக்கவும் அவற்றால் இன்பம் பெறவும் கலை கற்பிக்கிறது. வாழ்க்கை பற்றிய அறிவால் மக்களை வளப்படுத்துவது மட்டுமின்றி அவர்களது செயலையும் அது உரிய திசையில் செலுத்துகிறது, அவர்களது பிரபஞ்சக் கண்ணேட்டத்தை உருவாக்குகிறது, சமூகத்தின் தேவைகளுக்கு ஏற்ப அவர்களைப் பயிற்றுகிறது.

கலை ''வர்க்கங்களுக்கு மேற்பட்ட'' தன்மை கொண்டிருக்கிறது என்றும் கலைஞர்கள் தங்கள் செயல்களில் ''சுதந்திரமானவர்கள்'', ''கட்டற்றவர்கள்'' என்றும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் வலிந்துரைக்கிறார்கள். எதார்த்தத்திலோ, முதலாளித்துவ அமைப்பில் ''வர்க்கங்களுக்கு மேற்பட்ட'' கலை எதுவும் இல்லவும் இல்லை, இருக்கவும் முடியாது. ''சமூகத்தில் வாழ்ந்துகொண்டு சமூகத்திலிருந்து சுதந்திரமாக இருப்பது முடியாது. பூர்ஷ்வா எழுத்தாளனின், ஓவியனின், நடிகையின் சுதந்திரம் என்பது பணப்பைக்கு, கைக்கூலிக்கு, பிழைப்பூதியத்துக்கு மறைவாக (அல்லது பாசாங்கான உரு மறைப்புடன்) கட்டுப்பட்டிருப்பதே ஆகும்''[1] என்று எழுதினர் வி. இ. லெனின்.

பகைமை கொண்ட வர்க்கங்களாகப் பிரிவுபட்டிருக்கும் சமூகத்தில் வர்க்கப் போராட்டத்தின் கருத்து ஆயுதமாகக் கலை எப்போதும் தொண்டாற்றுகிறது. உதாரணமாக, பூர்ஷ்வா வர்க்கம் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்ற முற்பட்டபோது நிலப்பிரபுத்துவக் கொள்கைவாதத்துடன் போராட்டத்தில் உதவிய முற்போக்குள்ள எதார்த்தவாதக் கலையை அது ஆதரித்தது. தலைசிறந்த கலைச்சிருஷ்டிகள் பல அப்போது

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 12, பக்கம் 104.

படைக்கப்பட்டன. இவை தற்காலத்திலும்கூடத் தங்கள் மதிப்பை இழந்துவிடவில்லை. மனிதகுலப் பொற் கருவூலத்தில் அவை நிலையாக இடம் பெற்றுவிட்டன.

ஆயினும் முதலாளித்துவச் சமூகம் தனது வளர்ச்சியின் இறுதியான, ஏகாதிபத்தியக் கட்டத்தில் அடிவைத்த பிறகு பூர்ஷ்வா வர்க்கம் இந்தக் கலையின்பால் பகைமை பாராட்டத் தொடங்கியது. இந்தக் கலைக்கு எதிராகப் பிற்போக்குள்ள, நிராசைவாதமும் வீழ்ச்சி மனப்பான்மையும் சீர்கேடும் ஊறித் ததும்பும் கலையை அது போற்றி ஊக்கலாயிற்று. அணுகிவரும் அழிவுகுறித்து பூர்ஷ்வா வர்க்கம் கொண்டுள்ள பேரச்சத்தை இந்தக் கலை பிரதிபலிக்கிறது. வருங்கால வாய்ப்பு இன்மையின் முத்திரை இதில் பதிந்திருக்கிறது. பூர்ஷ்வாக் கலை உலகில் வடிவவாத வகைப்பட்ட சாரமற்ற பிரிவுகளும் போக்குக்களும் பெருந்தொகையாகத் துளிர்த்துள்ளன. ஓவியக் கலையில் மறை பொருள்வாதம் இத்தகையதே. கீழ்த்தரமான, இழிந்த சிற்றின்ப வர்ணனைகள் நிறைந்த காதல் நவீனங்கள் முதலியன புத்தகச் சந்தையில் மலை மலையாய்க் குவிந்திருக்கின்றன.

தற்போதைய பூர்ஷ்வாக் கலை ஒழுக்கக் கேடானது. மக்கள் விரோதப் பான்மை, கோட்பாடின்மை, மனிதவெறுப்பு, நாட்டின வெறி, மானிட இன வெறி, போர்த் துர்ச்சாகசச் செயல்களுக்கும் காலனிகளைக் கைப்பற்றலுக்கும் அறைகூவல் ஆகியவையே அதன் இயல்பை விளக்கும் அம்சங்களாக விளங்குகின்றன. அது மனிதர்களின் மிக இழிவான வேட்கைகளைத் தூண்டிவிடுகிறது. அவர்களது உணர்விலிருந்து மனிதத்தன்மையை அறவே களைந்து அகற்றிவிட முயல்கிறது.

உலகக் கலை வளர்ச்சியின் உச்ச கட்டமாக விளங்குகிறது சோஷலிஸச் சமூகத்தின் கலை. தொழிலாளி வர்க்கத்தின் புரட்சி நடவடிக்கைகளின் அடிப்படையில் அது உதயமாயிற்று. மனித குல வரலாற்றுக் காலம் முழுவதிலும் கலைத்துறையில் படைக்கப்பட்ட தலைசிறந்தவை யாவற்றினதும் வாரிசாகத் திகழ்கிறது அது. சோஷலிஸக் கலை உலகிலேயே எல்லாவற்றையும் விட முன்னணியிலுள்ள முற்போக்கான கலை. அது ஆழ்ந்த நம்பிக்கைவாதம் உள்ளது. வாழ்வை வலியுறுத்தும் தன்மை கொண்டது. புதிய, கம்யூனிஸச் சமூகத்தின் பிறப்பு என்னும் மாபெரும் செயல்முறையைப் பிரதிபலிப்பதும், இந்தச் சமூகத்தை நிறுவும் மனிதர்களுடைய பாத்திரங்களைப் படைப்பதும்

கலைச் சாதனங்களின் உதவியால் கம்யூனிஸ, சோஷலிஸக் கருத்துக்களைப் பரப்புவதும் சோஷலிஸக் கலையின் கடமைகள் ஆகும். சோஷலிஸக் கலை நமது வாழ்வில் உள்ள புதுமையை எல்லாம் காண முயல்கிறது. நாம் வாழும் உலகின் அழகையும் புதிய சமூகத்தைச் சேர்ந்த மனிதனுடைய குறிக்கோள்கள், ஆதர்சங்களின் மாண்பையும் திறமையுடனும் துலக்கமாகவும் காட்ட அது முயற்சி செய்கிறது. அதே சமயம், நமது சமூகத்தில் உள்ள குறைகளை அது சீற்றத்துடன் அம்பலப்படுத்தி விளாசுகிறது.

சோஷலிஸக் கலை சோவியத் மக்கள் அனைவரையும் கம்யூனிஸக் கட்டுமானத்திற்காக அணிதிரட்டுகிறது. கம்யூனிஸத்தின்பால் விசுவாசம் கொண்ட, கம்யூனிஸத்தின் பொருட்டுப் போராடத் திறனுள்ள புதிய மனிதனைப் பயிற்றுவது அதன் பொறுப்பாக விளங்குகிறது.

மனிதர்களின் உணர்வு புறநிலைப் பிரபஞ்சத்தை எப்போதும் பிரதிபலிக்கிறது. ஆயினும் இந்தப் பிரதிபலிப்பு மெய்யானதாகவோ பொய்யானதாகவோ இருக்கலாம். பொருளியல் எதார்த்தத்தைத் திரிபான, பொய்யான முறையில் பிரதிபலிக்கும் சமூக உணர்வு வடிவம் மதம் ஆகும்.

மதம் பண்டைச் சமூகத்தில் தோன்றியது. பண்டைய மனிதன் இயற்கையின் குரூரமான சக்திகளின் செயல்களுக்கு முன் வலிமை அற்றவனாக இருந்தான். அதன் மூலதத்துவ நிகழ்ச்சிகளுக்கும் நோய், சாவு ஆகியவற்றுக்கும் காரணங்களைத் தெளிவுபடுத்த அவனுக்கு இயலவில்லை. எனவே இவை எல்லாம் இயற்கைக்கு மேற்பட்ட, நிலவுலகைச் சாராத எவையோ சக்திகளுக்கு உட்பட்டவை என அவன் எண்ணினான். கடவுள் நம்பிக்கையும் கடவுள் வழிபாடும் இவ்வாறே தோன்றின. அதன் பிறகு எழுந்தன பல்வகைச் சடங்குகள் (பலியிடுதல், பிரார்த்தனைகள்). இவைதாம் மத வழிபாடு எனப்படுபவை. வழிபாட்டுடன் தோன்றினார்கள் வழிபாட்டுத் தொண்டர்கள்—மந்திரவாதிகளான ஷமான்கள், பூசாரிகள், பாதிரிகள் முதலியோர். பல்வேறு வகைப்பட்ட மத வழக்கங்கள், பரம்பரைகள், நம்பிக்கைகள் முதலியவற்றைப் பரப்புவதற்கும் பாதுகாப்பதற்குமான பொறுப்பை இவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

மதம் தோன்றுவதும் நிலைத்திருப்பதும் இயற்கையின் மூலதத்துவங்களுக்கு முன் மனிதர்களின் வலிமையின்மை, அச்சம்

இவற்றின் காரணமாக மட்டுமே இல்லை என்பதைக் குறிப்பிட வேண்டும். அவ்வாறு நேர்ந்தது பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பில் மாத்திரமே. அதில் உற்பத்திச் சக்திகளின் தாழ்ந்த தரம் மதத்திற்குப் பிரதானக் காரணமாக இருந்தது. ஒன்றுக்கொன்று எதிர்நிலையில் உள்ள வர்க்கங்கள் நிலவும் சமூகத்தில் வேறு காரணங்களும் மதத்தைத் தோற்றுவித்துப் பாதுகாக்கின்றன. இந்தக் காரணங்கள் சமுதாயத் தன்மை கொண்டவை. சுறண்டுவோரின் அதிகாரத்துக்கு முன்பும், இயற்கையின் மூலதத்துவங்களது ஆற்றலுக்குச் சிறிதும் குறையாத அழிவாற்றல் உடைய தான்தோன்றித்தனமான சமூகச் சக்திகளின் பாதிப்புக்கு முன்னும் சுறண்டப்படுவோரின் வலிவின்மை இத்தகைய காரணங்களில் ஒன்று.

இயற்கையுடன் போராட்டத்தில் காட்டுமிராண்டிகளின் வலிவின்மை எப்படிக் கடவுள்கள், பேய்கள், அற்புதங்கள் முதலியவற்றில் நம்பிக்கையைத் தோற்றுவிக்கிறதோ, அப்படியே சுறண்டுவோருடன் போராட்டத்தில் சுறண்டப்படுவோரின் வலிவின்மை மரணத்துக்குப் பிந்தைய மேலான வாழ்வில் நம்பிக்கையைத் தவிர்க்க இயலாதவாறு தோற்றுவிக்கிறது என்று எழுதினார் வி. இ. லெனின். இதற்கு உதாரணமாக முதலாளித்துவத்தில் நிலவும் உற்பத்திப் போட்டியையும் உற்பத்தி அராஜகத்தையும் பற்றிய விதியின் பாதிப்பைச் சுட்டிக் காட்டுவது போதுமானது. இதன் விளைவாக அமித உற்பத்தி நெருக்கடிகள் உண்டாகின்றன. உழைப்பாளிகள் அளவிட முடியாத துன்பங்களுக்கு ஆளாகிறார்கள். பாட்டாளிகள், சிறு உடைமையாளர்களினது வாழ்க்கையின் ஒவ்வோர் அடியிலும் அச்சுறுத்தும் முதலாளித்துவத்தின் குருட்டுச் சக்திக்கு முன் பெருந்திகில், பஞ்சைகளாகிப் பட்டினியால் மடிவதுபற்றிய பெரும் பயம் முதலாளித்துவச் சமூகத்தில் மதத்துக்கு வேராக, மூல காரணமாக விளங்குகிறது என்று சுட்டிக் காட்டினார் வி. இ. லெனின். சுறண்டலும், வாழ்க்கையில் வருங்கால வாய்ப்பு இன்மையும், முடிவில்லாத போர்களும், அவற்றின் தொடர்பாக நேரும் இன்மைத் துன்பங்களும், இந்த எல்லா விபத்துக்களிலிருந்தும் விமோசனம் அளிப்பதாக ஆசை காட்டும் மதத்தையும் கடவுளையும் நாடுமாறு நசுக்கி ஒடுக்கப்பட்டுள்ள மக்களைக் கட்டாயப்படுத்துகின்றன.

மதம் தனது தன்மையிலேயே விஞ்ஞானத்துக்கு முரணானது, பிற்போக்குள்ளது. விஞ்ஞானமும் மதமும் ஒன்றாக நிலவ முடியாது. விஞ்ஞானம் உண்மை விவரங்களை ஆதாரமாகக் கொள்கிறது. இயற்கைக்கும் சமூக வாழ்வுக்கும் உரிய விதிகளை அறியவும் மனிதர்களின் நலன்களுக்காக இந்த விதிகளைப் பயன்படுத்தவும் மக்களுக்குத் துணை புரிகிறது. மாறாக மதமோ, கட்டுக்கதையை, எதார்த்தத்தின் மிகைக்கற்பனை நிறைந்த, திரிபுள்ள பிரதிபலிப்பை, இயற்கைக்கு மேற்பட்டதன் மீது குருட்டு நம்பிக்கையை அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது. அது மனிதர்களுக்குச் செயலின்மையை விதிக்கிறது. அவர்களுடைய படைப்புத் தன்மையுள்ள முன்முயற்சிகளுக்குத் தளைபூட்டுகிறது.

மதம் உழைப்பாளிகளை ஆன்மீக ஒடுக்குமுறைக்கும் கருத்து வகை அடிமைத்தனத்துக்கும் உட்படுத்துவதற்கு உரிய ஆயுத மாக விளங்குகிறது. அதனால்தான் மதம் மக்களுக்கு அபினி ஆகும் என்றார் கார்ல் மார்க்ஸ். மதம் என்பது ஆன்மீக பிராந்தி யின் ஒரு வகை என்று எழுதினார் வி. இ. லெனின். உழைப்பா ளர்களைக் கீழ்ப்படிவு உள்ளவர்களாக வைத்திருக்க மதம் சுறண்டுவோருக்கு உதவுகிறது. தீமையை வன்முறையால் எதிர்க் காமல் இருக்கும்படி மக்களுக்கு உபதேசிக்கிறது. சுறண்டு வோர் ஒழுங்குமுறைகள் நிலையானவை, மாற்ற முடியாதவை என்ற கருத்தைத் திரளான பொது மக்கள் நம்புமாறு செய் கிறது. சமூகம் முன்னேற்றப் பாதையில் வளர்ச்சி அடையும் போக்கை இந்தக் காரியங்கள் வாயிலாகவே தாமதப்படுத்து கிறது.

சமூக உணர்வின் வடிவம் என்ற வகையில் மதம் நிலையானது அல்ல. மதம் நிலவாத காலம் முன்பு இருந்தது. அது நிலவாத காலம் வரத்தான் போகிறது.

அத்தியாயம் பதின்மூன்று

## மக்களே வரலாற்று வளர்ச்சியை நிர்ணயிக்கும் சக்தி. சமூகத்தைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதில் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்கு

சமூக வரலாற்றில் திரளான பொது மக்களின் இடத்தையும் பங்கையும் பற்றிய கேள்விக்கு விடை காண்பது அதன் வளர்ச்சி விதிகளைச் சரியாகப் புரிந்துகொள்வதற்கு மிகவும் முக்கியமானது. வரலாற்றை ஆக்குவது யார்? சமூகத்தின் வளர்ச்சியின் இயக்கு சக்தியாக விளங்குவது யார்—திரளான பொதுமக்களா, அல்லது தனித்தனி அசாதாரண நபர்களா? இந்தக் கேள்வியைக் குறித்துத் தத்துவத்தில் கடுமையான விவாதங்கள் வெகு காலமாக நடந்து வருகின்றன.

வரலாற்றில் திரளான பொதுமக்களின் பங்கைக் குறைவாக மதிப்பிடுவதற்குச் சுறண்டுவோர் வர்க்கங்களின் கொள்கைவாதிகள் எல்லா வகையிலும் முயன்றுவருகிறார்கள். வலிமைமிக்க தனி நபருக்கோ, செல்வமும் அதிகாரமும் படைத்தவர்களிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்ட, சிறந்தோர் குழாம் எனப்படுகிற, சமூகத் தலைமைக் குழுவுக்கோதான் அவர்கள் சமூக வாழ்க்கையில் முதல் இடம் தருகிறார்கள்.

பிற்போக்குள்ள இந்த நோக்குக்கு எதிர்நிலையாக, திரளான பொதுமக்களே வரலாற்றின் பிரதானப் படைப்பாளி ஆகவும் சமூக வளர்ச்சியின் இயக்கு சக்தி ஆகவும் விளங்குகிறார்கள் என்று விஞ்ஞான ரீதியாக நிரூபிக்கிறது மார்க்ஸீய-லெனினீயம். அதே சமயம் சமுதாய வாழ்வில் தனி நபர் வகிக்கும் முக்கியப் பாத்திரத்தை அது மறுக்கவில்லை, மாறாக வலியுறுத்துகிறது. உச்சத்திலுள்ள, பணம்படைத்த வர்க்கங்களும் அவற்றின் பிரதிநிதிகளும் மட்டுமே வரலாற்றில் நிர்ணயகரமான பங்கு ஆற்று

கிறுர்கள் என்ற அபத்தமான, அசட்டுத்தனமான தப்பெண்ணத்தைச் சமூக வளர்ச்சியின் போக்கு நிராகரித்துவிட்டது. சமூகத்தின் வளர்ச்சியில் திரளான பொதுமக்கள் நிர்ணயகரமான பங்கு ஆற்றுகிறுர்கள் என்ற மார்க்ஸீய-லெனினீயப் போதனை சரியானது என்பதைச் சமூக வரலாறு உறுதிப்படுத்திவிட்டது.

### § 1. சமூக வளர்ச்சியின் படைப்பாளியும் இயக்கு சக்தியும் மக்களே

சமூகத்தின் முற்போக்கான வளர்ச்சியால் முன்வைக்கப்படும் கடமைகளை நிறைவேற்றுவதில் தங்கள் புறநிலையான நிலைமை காரணமாகப் பங்கு எடுத்துக்கொள்ளும் வர்க்கங்களும் சமுதாயப் படிவுகளும் குழுக்களுமே மக்கள், அல்லது திரளான வெகுஜனங்கள் ஆவர். மனிதர்களின் வரலாற்றுப் போக்கில் வரையறுக்கப்பட்ட, மாறிக்கொண்டிருக்கிற பொதுமையே மக்கள். 'தாமேயான மக்கள்' இல்லவும் இல்லை, இருக்கவும் முடியாது. சமூக வரலாற்றின் குறித்த கட்டத்தில் உள்ள மனிதர்கள் இருக்கிறுர்கள். ஆகவே மக்கள் என்பவர்கள் வரலாற்று நிகழ்ச்சியே ஆவர்.

பண்டைச் சமூகத்தில் மக்கள் தொகை அனைத்தும் மக்கள் அமைப்பில் அடங்கியிருந்தது. சுறண்டுவோர் வர்க்கங்களும் சுறண்டப்படுவோர் வர்க்கங்களும் நிலவும் சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகங்களில் பொருளியல் நலங்களின் நேரடியான உற்பத்தியாளர்கள் ஆகிய உழைப்பாளிகளே மக்களின் பிரதானத் திரளாக விளங்குகிறுர்கள்.

உதாரணமாக, முதலாளித்துவச் சமூகத்தில் மக்கள் என்பவர்கள், தொழிலாளர்களும் குடியானவர்களும் கம்மியர்களும் உழைக்கும் அறிவுஜீவிகளும் ஆவர். அதாவது பிறருடைய உழைப்பைச் சுறண்டாதவர்கள் எல்லோரும் ஆவர். ஏகாதிபத்திய ஏகபோக ஸ்தாபனங்களை எதிர்த்து, தேசிய விடுதலையின் பொருட்டுப் போராடும் ஜனப் படிவுகளும் மக்களில் அடங்கியவையே. பிற்போக்காளர் வர்க்கங்கள் மக்களைச் சேர்ந்தவை அல்ல. ஏகபோக பூர்ஷ்வா வர்க்கம் இத்தகையதே.

சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட வர்க்கங்களோ வர்க்கப் போராட்டமோ இல்லாத சோஷலிஸச் சமூ

கத்தில் தொழிலாளர்கள், குடியானவர்கள், அறிவுஜீவிகள் ஆகிய எல்லா வர்க்கங்களும் சமுதாயக் குழுக்களும் மக்களில் அடங்கியவையே.

மக்கள் என்பதற்கு இவ்வாறு அர்த்தம் செய்துகொள்வது உண்மையில் விஞ்ஞான ரீதியானது. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட சமூகங்களில் சுறண்டுவோருக்கும் சுறண்டப்படுவோருக்கும் இடையே நிலவும் வர்க்க முரண்பாடுகளை மூடி மறைக்க விரும்பும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளின் முயற்சிகளை அம்பலப்படுத்த இந்தப் புரிவு உதவுகிறது. வரலாற்றில் திரளான பொதுமக்களின் பங்கு என்ன என்பதைச் சரியாகப் புரிந்துகொள்வது இதனுல் சாத்தியம் ஆகிறது.

மக்கள் வரலாற்றைப் படைப்பவர்களாக இருப்பது எவ்வாறு? முதலாவதாக, சமூகம் நிலவுவதற்கு இன்றியமையாத பொருளியல் நலங்களைத் திரளான வெகுஜனங்களே உண்டாக்குகிருர்கள். உழைப்பாளி மக்கள் நிலக்கரி எடுக்கிருர்கள், உலோக உற்பத்தி செய்கிருர்கள், ஆலைகளும் தொழிற்சாலைகளும் கட்டுகிருர்கள், கால்வாய்கள் தோண்டுகிருர்கள், இருப்புப் பாதைகள் போடுகிருர்கள், விவசாயப் பண்டங்களைப் பயிர் செய்கிருர்கள். வேறு வார்த்தைகளில் சொல்வதானுல் எவை இன்றிச் சமூகம் உயிர் வாழவும் வளரவும் முடியாதோ அவை யாவற்றையும் உழைப்பாளிகளே செய்கிருர்கள். பொருளியல் பண்பாட்டின் எல்லா நலங்களும் மனிதனுடைய உழைப்பால் படைக்கப்பட்டவை என்றும் மனிதர்களுடைய பல தலைமுறைகளினுடைய உழைப்பின் பயன் இவை என்றும் கார்ல் மார்க்ஸ் விசேஷ வன்மையுடன் வலியுறுத்தினுர். திரளான வெகுஜனங்களே பிரதான உற்பத்திச் சக்தியாக விளங்குகிருர்கள். அவர்களது செயல்கள் உற்பத்தி முறைகளின் மாற்றங்களுக்கும், விளைவாகச் சமூக-பொருளாதார அமைப்புக்கள் மாறுவதற்கும் வழி வகுக்கின்றன.

இரண்டாவதாக, மக்களே சமூக-பொருளாதார மாற்றங்களை நிர்ணயிக்கும் சக்தியாகவும் விளங்குகிருர்கள். திரளானவெகுஜனங்கள் நிர்ணயகரமான பங்கு ஆற்ருத பெரிய நிகழ்ச்சி ஒன்றுகூட இல்லை என்று வரலாற்றிலிருந்து தெரிய வருகிறது.

சமுதாயப் புரட்சிகளின் காலப்பகுதிகளில் திரளான வெகுஜனங்களின் பங்கு சிறப்பாக முக்கியமானது. ''புதிய சமூக ஒழுங்குகளின் ஊக்கமுள்ள படைப்பாளிகளாகச் செயல்படத்

திரளான வெகுஜனங்கள் வேறு ஒருபோதும் புரட்சிக் காலத்தில் போலத் திறன் கொண்டிருப்பதில்லை. இத்தகைய காலங்களில் மக்கள் அற்புதங்கள் விளைக்க வல்லவர்கள்....''[1] என்று எழுதினார் வி. இ. லெனின். அடிமைகளின் கிளர்ச்சிகளே அடிமைச் சொந்தக்கார அமைப்பு அழிவதற்கு உதவின, பண்ணையடிமைகளின் கிளர்ச்சிகளோ, நிலப்பிரபுத்துவத்தின் இடத்துக்கு முதலாளித்துவம் வருவதை விரைவுபடுத்தின என்று சமூக வரலாறு காட்டுகிறது.

திரளான வெகுஜனங்களின் பங்கும் முக்கியத்துவமும் சோஷலிஸப் புரட்சியின் காலப்பகுதியில் அளவிட இயலாத வாறு அதிகரிக்கின்றன. ஏனெனில் மிகப் பெரும்பான்மையான உழைப்பாளிகள் பாட்டாளி வர்க்கத்தின் தலைமையில் அதில் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். சோஷலிஸப் புரட்சியில் மிக மிக விரிவான மக்கள் திரள் பங்கெடுத்துக்கொள்வது நிகழும் புரட்சிகர மாற்றத்தின் ஆழம் மிக மிக அதிகமானது என்பதற்குச் சான்று பகர்கிறது. மக்கள் ஒழுங்கமைக்கப்பட்டு, ஒற்றுமை கொண்டு முன்னணியிலுள்ள புரட்சிச் சித்தாந்தத்தால் கொள்கையில் உரம் பெற்றிருக்கையில் எத்தகைய விறல்மிக்க படைப்பு ஆற்றலாகத் திகழ்கிறார்கள் என்பதை மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி காட்டியது. தாங்கள் வரலாற்றைப் படைப்பவர்கள் என்பதை உழைப்பாளி மக்கள் முன் ஒருபோதும் இல்லாத அளவு இந்தப் புரட்சியில்தான் காட்டிக்கொண்டார்கள்.

மூன்றாவதாக, திரளான வெகுஜனங்கள் ஆன்மீகப் பண்பாட்டின் படைப்பாளிகளாகவும் செயல்படுகிறார்கள். மக்கள் எல்லாப் பொருளியல் செல்வங்களையும் படைக்கும் சக்தி மட்டும் அல்ல, ஆன்மீகச் செல்வங்களுக்கும் வற்றாத ஒரே ஊற்றுக்கண்ணாகவும் காலத்தாலும் படைப்பு எழிலினாலும் மேதையாலும் முதல்வர்களாக விளங்கும் தத்துவவாதிகளாகவும் கவிகளாகவும் திகழ்கிறார்கள். எல்லாப் பெருங் காவியங்களையும் உலகின் துன்பியல் கதைகள் யாவற்றையும் அவற்றில் மாண்பு சிறந்ததான உலகப் பண்பாட்டின் வரலாற்றையும் படைத்தவர்கள் அவர்களே என்று எழுதினார் மக்ஸீம் கோர்க்கிய்.

ஆன்மீகப் பண்பாட்டின் வளர்ச்சியில் திரளான பொது

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 11, பக்கம் 103.

மக்களின் பங்கை ஒப்புக்கொள்ள பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் மறுக்கிருர்கள். ஆளும் வர்க்கங்களைச் சேர்ந்த மாபெரும் தனி நபர்கள், மேதை வாய்ந்த ஒற்றையர்கள்தாம் ஆன்மீகப் பண்பாட்டை வளர்க்கிருர்கள் என்று இவர்கள் வலிந்துரைக்கிருர்கள். இத்தகைய தனிநபர்கள் சிறந்தோர் குழாம் எனப்படுவதாக அமைந்து, ''கும்பலுக்கு'', அதாவது உழைப்பாளி மக்களுக்கு உயரே எழுகிருர்கள் என்றும் உழைப்பாளி மக்கள் ஆன்மீகப் படைப்புக்குத் திறன் அற்றவர்கள் என்றும் சாசுவத அறிவீனமே அவர்களுக்கு விதிக்கப்பட்டுள்ளது என்றும் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் கூறுகிருர்கள்.

ஆனல் ஆன்மீகப் பண்பாட்டின் படைப்பிலும் வளர்ச்சியிலும் திரளான வெகுஜனங்கள் மிகப் பெரிய பங்கு ஆற்றுகிருர்கள் என்பதற்குச் சமூக வளர்ச்சியின் வரலாறு அனைத்தும் சான்று பகர்கிறது. சிறந்த விஞ்ஞானிகளும் எழுத்தாளர்களும் இசைஞர்களும் ஓவியர்களும் உயிர் வாழ்வதற்கும் விஞ்ஞான, கலைப் படைப்புக்களில் ஈடுபடுவதற்கும் தங்கள் உழைப்பினல் வகை செய்பவர்கள் மக்களே. சுறண்டலிலிருந்து விடுபடுவதற்காகவும், பொருளாதார, அரசியல், ஆன்மீக அடிமைத்தனத்துக்கு எதிராகவும் திரளான வெகுஜனங்கள் நிகழ்த்தும் போராட்டம், வாழ்க்கை நிகழ்ச்சிகள் பற்றிச் சரியாகச் சிந்திக்கவும் அவற்றைச் சரியாகச் சித்திரிக்கவும் முயலும் சிந்தனையாளர்களுக்கும் கலைஞர்களுக்கும் உத்வேகமூட்டும் வற்ருத ஊற்றுக் கண்ணுக விளங்குகிறது.

மொழியின் படைப்பாளர்களும் காப்பாளர்களும் மக்களே ஆவர்.

மாபெரும் எழுத்தாளர்களின் சிறந்த படைப்புக்கள் யாவும் மக்களது படைப்பை ஆதாரமாகக் கொண்டே தோன்றுகின்றன என்பதைப் புனைவு இலக்கிய வரலாறு காட்டுகிறது. மக்கள் கவிதை, மக்களது ஆன்மாவில் வாழும் சிறந்த ஆதர்சங்களைப் பிரதிபிம்பிக்கும் கண்ணுடியாகத் திகழ்கிறது. நாடோடிக் கதைகள், மரபுவழிக் கதைகள், பாட்டுக்கள், நடனங்கள், மக்களது அன்ருட வாழ்க்கையை அணிசெய்யும் கலைப் பொருள்கள்—இவை யாவுமே கூட்டுப் படைப்புச் செயலால் ஆக்கப்பட்டவையே.

பல விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களும் திரளான மக்களின் படைப்புச் செயலின் விளைவுகள்தாம்.

சோஷலிஸப் புரட்சியின் வெற்றிக்குப் பிறகு விஞ்ஞானம் மக்கள் திரளின் செயல்களுடன் உறுப்பிணைவு கொண்டு ஒன்று கலந்துவிடுகிறது. அப்போது, தொழில்நுட்ப முன்னேற்றத்தை விரைவுபடுத்துவதில் மக்கள் பங்காற்றுவதற்கான முன் கண்டறியாத புதிய வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன. இயந்திரத் தொழில், விவசாய உற்பத்தியில் புதுமை புகுத்துவோர், சீருறப் புதுக்குவோர் ஆகியோரின் எண்ணிக்கை சோவியத் யூனியனில் மிகஅதிகமாக உயர்ந்தது புதிய சமூகத்தின் கட்டமைப்பின் தொடர்பாகவே ஏற்பட்டது. ''கோடிக்கணக்கான படைப்பாளிகளின் அறிவு, மிக மிக மாண்புள்ள, மேதைவாய்ந்த முன்காணலைக் காட்டிலும் அளவிட இயலாதவாறு உயர்ந்த ஒன்றைச் சிருஷ்டிக்கிறது''[1] என்னும் வி. இ. லெனினுடைய சொற்களை இவை எல்லாம் உறுதிப்படுத்துகின்றன.

மார்க்ஸீய-லெனினீயத்தின் அமர ஆசிரியர்கள் சமூக வாழ்வில் உழைப்பாளிகளின் மாட்சி மிக்க பங்கை எப்போதும் வலியுறுத்தி வந்துள்ளனர். திரளான வெகுஜனங்களே வரலாற்றைப் படைக்கிறார்கள் என்பதையே தங்கள் சித்தாந்த, நடைமுறைச் செயல்களுக்கு அவர்கள் ஆதாரமாகக் கொண்டார்கள்.

## § 2. மக்கள் திரளின் பங்கு அதிகரித்தல் வரலாற்று வளர்ச்சியின் விதி ஆகும்

மனிதகுலத்தின் முற்போக்கான வளர்ச்சியின் போக்கில் மக்களது பங்கு இடைவிடாது வளர்ந்த வண்ணமாக இருக்கிறது. சமுதாய மாற்றங்களின் பரிமாணம் அதிகரிப்பதற்கு ஏற்ப, அவற்றில் தொண்டாற்றும் மக்கள் திரளின் பங்கு மேலும்மேலும் முக்கியத்துவம் உள்ளது ஆகிறது. ''வரலாற்றுச் செயல்களின் வீச்சு எவ்வளவு பெரியதோ, அவற்றின் பரப்பு எவ்வளவு பெரியதோ, இந்தச் செயல்களில் பங்காற்றும் மனிதர்களின் தொகையும் அவ்வளவே பெரியது ஆகும்....''[2] என்றார் வி. இ. லெனின். வரலாற்று வளர்ச்சியின் மிக முக்கிய விதி ஆகும் இது.

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 35, பக்கம் 281.

[2] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 42, பக்கம் 140.

சோஷலிஸத்துக்கு முந்திய அமைப்புக்களில் சமூக வளர்ச்சியில் திரளான வெகுஜனங்களின் பங்கு அளவறுத்தே இருந்தது. மனிதனை மனிதன் சுறண்டுவது மக்களின் படைப்பு ஆற்றல் கட்டின்றி முழுமையாகச் செயல்பட வாய்ப்பு அளிப்பதில்லை. சமூகத்தின் அரசியல் வாழ்விலும் ஆன்மீகப் பண்பாட்டின் வளர்ச்சியிலும் செயலூக்கமுள்ள பங்கு ஆற்றுவதிலிருந்து திரளான வெகுஜனங்களை விலக்கி ஒதுக்கிவிடச் சுறண்டுவோர் முயல்கிறார்கள்.

எனினும் இவ்வாறு செய்வதில் அவர்களுக்கு ஒருபோதும் வெற்றி கிடைக்கவில்லை. அடிமைச் சொந்தக்கார அமைப்பிலும் நிலப்பிரபுத்துவ அமைப்பிலுமே கூடத் திரளான வெகுஜனங்களின் செயலூக்கம் வரலாற்று நிகழ்ச்சிகள்மீது ஆழ்ந்த பதிவை ஏற்படுத்தியிருக்கிறது. முதலாளித்துவத்தில் சமூக வாழ்க்கைமீது, சிறப்பாகப் பொருளாதார, அரசியல் துறைகளில், மக்களின் பாதிப்பு கணிசமாக அதிகரிக்கிறது. சுறண்டலுக்கு எதிரான போராட்டத்தில் தொழிலாளி வர்க்கம் கலந்துகொள்வதே இந்த அதிகரிப்புக்குக் காரணம். தொழிலாளி வர்க்கம் தற்போதையச் சமூகத்தில் யாவற்றிலும் வளர்ச்சி மிக்கதும் ஒருங்கமைந்ததும் ஆன வர்க்கம். தனக்கே உரிய அரசியல் கட்சியை அமைத்துக்கொண்டிருக்கும் வர்க்கம் அது. சோஷலிஸத்துக்கான போராட்டத்தில் மிக மிக விரிவான மக்கள் திரளைத் தொழிலாளி வர்க்கம் ஈடுபடுத்துகிறது.

முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பே தற்போதையச் சகாப்தத்தின் பிரதான உள்ளடக்கம் ஆகும். இந்தச் சகாப்தத்தில் புரட்சிச் செயல்முறையின் சமுதாய அடிப்படை கணிசமாக விரிவடைகிறது. வாழ்வு தீர்ந்துவிட்ட முதலாளித்துவத்துக்கு எதிராகத் தற்போது விறல்மிக்க சக்திகள் செயல்பட்டு வருகின்றன. சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவிக்கொண்டிருக்கும் சோஷலிஸ அமைப்பு நாடுகளின் மக்கள், பூர்ஷ்வா வர்க்கத்தின்மீது தனது தாக்குதல்களைத் தீவிரப்படுத்திவரும் முதலாளித்துவ நாடுகளின் தொழிலாளி வர்க்கம், ஏகாதிபத்தியத்துக்கு எதிராகப் போராடிவரும் காலனிகள், ஆதீன நாடுகளின் திரளான வெகுஜனங்கள் ஆகியோரே இந்தச் சக்திகள். உலகம் அனைத்தின் திரளான வெகுஜனங்கள் முதலாளித்துவத்துடன் போராட்டத்தில் தற்காலத்தில் போல

முன்பு ஒருபோதும் இவ்வளவு ஒழுங்கமைக்கப்பட்டிருக்க வில்லை.

சமூகத்தின் பொருளாதார, அரசியல், ஆன்மீகத் துறைகளில் திரளான வெகுஜனங்கள் மிக மிகச் செயலூக்கத்துடன் பங்கு கொள்வதற்கு ஏற்ற எல்லையற்ற வாய்ப்புக்கள் அளிக்கும் நிலைமைகள் சோஷலிஸம் வெற்றி பெற்றதுமே ஏற்பட்டு விடுகின்றன. மக்கள் அரசியல் அதிகாரத்தை வென்று பெறுதல், தனியார் சொத்துரிமையும் மனிதனை மனிதன் சுறண்டுவதும் ஒழிக்கப்படுதல், சோஷலிஸ உற்பத்தி உறவுகள் நிலைநாட்டப் படுதல், இவை எல்லாம் மக்களின் முன் ஒருபோதும் இல்லாத படைப்புச் செயலூக்கத்துக்கு வாய்ப்பு அளிக்கின்றன. மக்களின் உற்பத்தித் திறனிலும் அரசியல், ஆன்மீக நடவடிக்கைகளிலும் வெளிப்படுகிறது இந்தச் செயலூக்கம்.

சோஷலிஸச் சமூகத்தில் மக்கள் உழைப்பின்பால் புதிய போக்கைக் கடைப்பிடிக்கத் தொடங்குகின்றனர். பொருளியல் உற்பத்தியின் வளர்ச்சியில் ஜீவாதார அக்கறை கொண்டவர்கள் திரளான வெகுஜனங்கள். பொது நலத்தின்பால் அவர்களுக்கு உள்ள அக்கறை அவர்களது அற்புதமான படைப்பு முன்முயற்சியைத் தோற்றுவிக்கிறது. முதலாவது கம்யூனிஸ முறை சுபோத்னிக்குகளிலேயே[1] இந்தத் தன்மை வெளிப்பட்டது. வி. இ. லெனின் இவற்றை ''மாபெரும் முன்முயற்சி'' என்று அழைத்தார். பின்னர், கோடிக்கணக்கான மக்கள் கலந்து கொள்ளும் சோஷலிஸப் போட்டியில் வெகுஜனங்களின் இந்த முன்முயற்சி வெளிப்பட்டது.

சோவியத் யூனியனில் கம்யூனிஸக் கட்டுமானத்தின் நிலைமைகளில் ''கம்யூனிஸ முறையில் வாழவும் வேலை செய்யவும் கற்போம்'' என்னும் கோஷத்துடன் கம்யூனிஸ முறை உழைப்புக்கான சிறந்த இயக்கம் தொடங்கியது. கம்யூனிஸக் கட்டுமானத்

---

[1] சுபோத்னிக்குகள்—தாய் நாட்டின் நலனுக்காக, விடுமுறை நாட்களிலோ, வேலை நேரத்துக்குப் பிறகோ, சோவியத் உழைப்பாளிகள் சுயவிருப்புடன், சம்பளம் பெறுமல் செய்த வேலை. மாஸ்கோ-கஸான் இருப்புப்பாதைஸார்ட்டிங் டிப்போ தொழிலாளர்களின் முன்முயற்சியால், 1919மே 10ந் தேதி, சனிக்கிழமை முதல் சுபோத்னிக் நடைபெற்றது. இதிலிருந்து தான் சுபோத்னிக் (சுபோத்தா—சனிக்கிழமை) என்ற பெயர் வந்தது. — (ப-ர்.)

துக்கு உரிய கடமைகள் பற்றிய ஆழ்ந்த புரிவும் அவற்றின் நிறைவேற்றத்தைத் துரிதப்படுத்த வேண்டும் என்ற உற்சாகம் பொங்கும் விழைவும் பொதுமக்களிடையே பெருத்த படைப்பு ஆற்றலையும் முன்முயற்சியையும் உண்டாக்கியிருக்கின்றன. தொழில் நிலையங்களிலும் விவசாயத் துறையிலும் உழைப்பவர்கள் தேசியப் பொருளாதாரத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கும் குறித்த லட்சியங்களைக் காட்டிலும் அதிகமாக உற்பத்தி செய்வதற்கும் ஊக்கத்துடன் பாடுபட்டுவருகிறார்கள். உற்பத்தியின் ஆதாயப் பாங்கை அதிகரிப்பதும், புதிய தொழில் நுட்பங்களைப் புகுத்துவதும், உழைப்புக் கட்டுப்பாட்டை வலுப்படுத்துவதும், உழைப்பின் உற்பத்தித் திறனை உயர்த்துவதும், பண்டங்களின் தரத்தை மேம்படுத்துவதும், உற்பத்தியின் ஒழுங்கமைப்பையும் நிர்வாகத்தையும் செவ்வைப்படுத்துவதுமே அவர்களது பிரயாசைகளின் நோக்கங்கள்.

சோஷலிஸ, கம்யூனிஸக் கட்டுமானக் காலப்பகுதியில் சமுதாய-அரசியல் பிரச்சினைகளின் தீர்விலும் திரளான வெகுஜனங்களின் பங்கு அதிகரிக்கிறது. அரசியல் அதிகாரத்தை வென்று பெற்றபின் சோவியத் யூனியனின் திரளான வெகுஜனங்கள் விரிவான சமூகச் செயலில் ஈடுபடத் தலைப்பட்டார்கள். சோவியத் சமூகத்தின் மிகப் பெருந்தொகையான உழைப்பாளிகள் செயலூக்கமுள்ள அரசியல் வாழ்விலும் பொருளாதார, பண்பாட்டுக் கட்டுமானத்தின் தலைமையிலும் பங்கு கொள்கிறார்கள். சோவியத் யூனியனின் மக்கள் வரலாற்றின் உண்மையான படைப்பாளிகள். சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிச் செயல்திட்டத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: ''கம்யூனிஸத்தின் வெற்றி மனிதர்களைச் சார்ந்துள்ளது. கம்யூனிஸம் மனிதர்களுக்காகவே நிறுவப்படுகிறது. ஒவ்வொரு சோவியத் மனிதனும் தனது உழைப்பினால் கம்யூனிஸத்தின் வெற்றியை அருகே கொண்டுவருகிறான். கம்யூனிஸக் கட்டுமானத்தில் ஏற்படும் முன்னேற்றங்கள் எல்லோருக்கும் செல்வச் செழிப்பையும் இன்ப வாழ்வையும் கொண்டுவரும், சோவியத் தாய்நாட்டின் விறலையும் பெருமையையும் புகழையும் இன்னும் மேலே உயர்த்தும்.''

உழைப்பாளி மக்களின் மிக மிக விரிவான பகுதியினர் சோஷலிஸ அரசு நிர்வாகத்தில் மிக நேர்முகமாகப் பங்கு எடுத்துக் கொள்கிறார்கள். உதாரணமாக, சோவியத்துக்கள், அவற்றின் பல்வகைக் கமிஷன்கள், கமிட்டிகள் ஆகியவற்றின் தீவிரமாக

உழைக்கும் உறுப்பினர்களின் தொகை நாட்டிலே லட்சோப லட்சம் ஆகும். எல்லாத் தொழில் நிலையங்களிலும் கட்டு மானங்களிலும் இடையருது செயலாற்றும் உற்பத்தி ஆலோசனைக் குழுக்கள் உள்ளன. லட்சக்கணக்கான தொழிலாளர்களும் அலுவலர்களும் இவற்றில் உறுப்பினராக இருக்கிருர்கள். தொழிற்சங்கங்களின் குழு, தொழிற்கூட, தொழில் நிலைய, வட்டாரக் கமிட்டிகளின் வாயிலாகவும் உழைப்பாளிகள் உற்பத்தி நிர்வாகத்துடன் இணைக்கப்படுகிருர்கள். மக்கள் கண்காணிப்பு ஸ்தாபனங்களின் செயல்களில் எத்தனையோ லட்சம் உழைப்பாளிகள் பங்கு கொள்கிருர்கள்.

சமூகத்தின் ஆன்மீக வாழ்விலும் திரளான மக்களின் பங்கு சோஷலிஸ அமைப்பில் அளவிட முடியாதவாறு அதிகரிக்கிறது. இந்தத் துறையில் மக்களின் படைப்பு முன்முயற்சிகள் வளர்வதற்குச் சாதகமான நிலைமைகளை சோஷலிஸ அமைப்பு உருவாக்குகிறது. முதலாளித்துவம் மக்களுடைய திறமைகளைப் பாழ்படுத்தியது. சாதாரண மக்களைச் சேர்ந்தவர்கள் முன்னர் மிகுந்த சிரமத்தின்பேரில்தான் விஞ்ஞானத்தை எட்ட முடிந்தது. மாருக, சோஷலிஸச் சமூகத்திலோ மனிதனுடைய தகுதிகளும் திறமைகளும் எல்லாத் திசைகளிலும் முழு மலர்ச்சி அடைகின்றன. தொழிலாளர்கள், குடியானவர்களின் இடையிலிருந்து பற்பல பெரிய விஞ்ஞானிகள் தோன்றியுள்ளனர். சோஷலிஸ அமைப்பில் அறிவுஜீவிகளே பெரும்பாலும் தொழிலாளர்கள், குடியானவர்களிலிருந்து உருவானவர்கள்தாம்.

விஞ்ஞானத்தை வளர்வுறுத்துவதிலும் உற்பத்தி உழைப்புடன் அதை ஒன்றிணைப்பதிலும் திரளான வெகுஜனங்களின் படைப்புத் தன்மை கொண்ட பங்கு உற்பத்தியில் புதுமை புகுத்துவோர், சீருறப் புதுக்குவோரின் இயக்கத்தில் சிறப்பான துலக்கத்துடன் வெளிப்படுகிறது. விஞ்ஞானத்தையும் தொழில் நுட்பத்தையும் முன்னே செலுத்தும் தொழிலாளிப் புதுப்புனைவாளர்களின் பதினுயிரக் கணக்கான பெயர்களைக் குறிப்பிட முடியும்.

## § 3. வரலாற்றில் தனிநபரின் பங்கு

சமுதாய உறுப்பினன் என்ற வகையில் தனி நபராக இருக்கும் இயல்பு மனிதனுக்கு உரியது. மனிதனது தன்மை எல்லாச் சமூக உறவுகளதும் மொத்தமே என்று ''பாயர்பாக் பற்றிய

ஆராய்ச்சி'' என்னும் நூலில் கார்ல் மார்க்ஸ் எழுதினர். எனவே ''தானேயான'' தனிநபர் கிடையாது. குறிப்பிட்ட, ஸ்தூலமான சமூகத்தைச் சேர்ந்த தனிநபர் மட்டுமே நிலவுகிருன். வேறு வார்த்தைகளில் சொன்னுல், ஒவ்வொரு மனிதனும் தனது காலத்தின் குழந்தையே.

''பொறுக்கி எடுக்கப்பட்ட'' மனிதர்கள் மட்டுமே ''மாபெரும் தனிநபர்களாக'' இருக்க முடியும் என்ற வாதம் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளுக்கு இயல்பானது. சிறந்தோர் குழாம் எனப் படுவதன் பிரதிநிதிகளான இந்த ''மாபெரும் தனி மனிதர்கள்'' தாம் சமூக வளர்ச்சியின் பிரதானச் சக்தியாக விளங்குகிருர்கள் என்று நிரூபிக்க அவர்கள் முயல்கிருர்கள். அவர்களது கூற்றுப்படி மனிதகுல வரலாற்றின் வளர்ச்சி ஒன்ருே வீரர்கள், படைத்தலேவர்கள், அரசாங்கத் தலேவர்கள் போன்ற அசாதாரண மனிதர்களின் செயல்களது விளேவு என்ருே அல்லது ''பொறுக்கி எடுக்கப்பட்ட'' நபர்கள் வாயிலாக நிறைவேற்றப்படும் ஈசுவர சித்தத்தின் வெளியீடு என்று விதிவாத நோக்கிலோ விளக்கப்படுகிறது.

தனிநபரைப் பெருமைப்படுத்துவதன் வாயிலாகச் சுறண்டுவோர் வர்க்கங்களின் கொள்கைவாதிகள் திரளான மக்களின் பங்கை இழிவுபடுத்துகிருர்கள். உதாரணமாக, தற்கால அமெரிக்கச் சமூக இயல் அறிஞர் எ. பொகார்துஸ் (*E. Bogardus*) மக்களேக் ''கும்பல்'' என்று அழைக்கிருர். கால்நடை மந்தை, பறவைகளின் கூட்டம் அல்லது மீன்களின் திரளிலிருந்து சாராம்சத்தில் எவ்வகையிலும் வேறுபாடு இல்லாதது இந்தக் கும்பல் என்கிருர் அவர். பூர்ஷுவாச் சமூக இயலார் திரளான வெகுஜனங்களேக் குருட்டுத்தனமான நாச சக்தி என்றும் ''மிகப் பெருத்த உளச்சோர்வு உண்டாக்கும் காரணி'' என்றுமே கருதுகிருர்கள். நாகரிகத்தைக் ''காப்பதன்'' பொருட்டு இந்தச் சக்தியை அடக்கிவைத்திருப்பது அவசியம் என்று அவர்கள் எண்ணுகிருர்கள்.

அசாதாரணமான நபர்கள் தோன்றுவதன் காரணங்களேப் பற்றிப் பேசுகையில் மார்க்ஸீய விஞ்ஞானம் நிரூபிப்பதும் வாழ்க்கை உறுதிப்படுத்துவதும் பின்வருமாறு: முதன்மையாக வரலாற்றின் இன்றியமையாமையும் சமூக வளர்ச்சியின், முக்கியமாகப் பொருளியல் உற்பத்தி வளர்ச்சியின் தேவைகளுமே அசாதாரண நபர்களேத் தோற்றுவிக்கின்றன. பகைமையுள்ள

வர்க்கங்கள் நிலவும் சமூகத்தில் வர்க்கப் போராட்டத்தின் தேவைகளும் இத்தகைய நபர்கள் தோன்றக் காரணமாக இருக்கின்றன. யாரேனும் ஒரு மனிதன் உண்மையிலேயே அசாதாரணத் தலைவன் ஆவது எப்போது என்றால், சமூகத்தின் முன்னணியில் உள்ள முற்போக்குச் சக்திகளின் நலன்களை அவன் சரியாகவும் முழுமையாகவும் வெளியிடும்போது தான். மனிதனுடைய தனிப்பட்ட பண்புகளும், அவனது சாமர்த்தியம், சித்தவுறுதி, இயற்கைத் திறமை, நிகழ்ச்சிகளில் சரியான திசையை நிர்ணயிக்கும் திறன், போராட்டத்தில் தன்னலத் தியாகம் முதலியனவும் அவ்வாறே முக்கியப் பங்கு ஆற்றுகின்றன. புரட்சி மேதாவிகள், விஞ்ஞானச் சிந்தனையின் முதல்வர்கள், தலைசிறந்த அரசியல் தலைவர்கள், கார்ல் மார்க்ஸ், பிரெடெரிக் எங்கெல்ஸ், விளாதீமிர் இல்யீச் லெனின் ஆகியோரை உலகம் அனைத்தும் அறியும்.

மாபெரும் மனிதர்கள் தோன்றுவது, சமூக வரலாற்றின் குறித்த காலப்பகுதியில் இந்தத் தனி நபர் மட்டுமே சமூகத்தின் முன் நிற்கும் கடமைகளை நிறைவேற்ற முடியும் என்று அர்த்தப்படாது. குறிப்பிட்ட நாட்டில் குறிப்பிட்ட காலத்தில் இந்த மாபெரும் நபர் தோன்றுவது தற்செயலான காரியம். அந்த நபர் நிறைவேற்றும் கடமைகளை வேறு ஒரு நபரும் நிறைவேற்ற முடியும். பொருத்தமான முதனிலைகள் இருந்தால் அத்தகைய நபர் எப்போதுமே கிடைப்பான். "...நெப்போலியன் இருந்திராவிட்டால் அவனுடைய பாத்திரத்தை வேறு ஒருவன் வகித்திருப்பான். இம்மாதிரி மனிதன் தேவைப்பட்ட போதெல்லாம் அவன் கிடைத்து வந்திருக்கிறான் என்பதே இதற்குச் சான்று. ஸீஸர், ஔகுஸ்த், கிராம்வெல் முதலியவர்கள் இதற்கு உதாரணங்கள்"[1] என்று எழுதுகிறார் எங்கெல்ஸ்.

ஒரு அல்லது மற்றொரு வகை நிலைமைகளில் செயலாற்றும் அசாதாரண மனிதன் சிறந்தவனாக இருப்பது சமூக வளர்ச்சியின் போக்கை மாற்றவோ நிறுத்தவோ, இயற்கைக்கும் சமூகத்திற்கும் உரிய நிலவும் விதிகளை ரத்து செய்துவிடவோ அவனால் முடியும் என்பதனால் அல்ல. இந்த விதிகளை அவன் கண்டுபிடிக்கிறான், அறிந்துகொள்கிறான், அவற்றைக் கையாளும் வழி

---

[1] கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும். நூல்திரட்டு, தொகுதி 39, பக்கம் 176.

களைக் காட்டுகிறுன் என்பதனுல்தான் அவன் சிறந்தவன். அவனுடைய செயல்கள் இன்றியமையாத இயற்கைச் செயல்முறையின் உணர்வுபூர்வமான, சுதந்திரமான வெளியீடாக விளங்குகின்றன. ''வரலாற்றில் தனிநபர் வகிக்கும் பாத்திரம்'' என்னும் நூலில் கி. வ. பிளெகானவ் பின்வருமாறு எழுதுகிறுர்: ''உயரிய மனிதன் தொடங்கிவைப்பவனுகவே விளங்குகிறுன், ஏனெனில் அவன் மற்றவர்களைவிட அதிகத் தொலைவில் பார்க்கிறுன், மற்றவர்களைவிட அதிகத் தீவிரமாக விழைகிறுன். சமூகத்தின் அறிவு வளர்ச்சியின் முந்திய போக்கினுல் வரிசையில் வைக்கப்பட்ட விஞ்ஞானப் பிரச்சினைகளை அவன் தீர்க்கிறுன். சமூக உறவுகளின் முந்திய வளர்ச்சியால் ஏற்படுத்தப்பட்ட புதிய சமூகத் தேவைகளை அவன் சுட்டிக் காட்டுகிறுன். இந்தத் தேவைகளை நிறைவேற்றும் முன்முயற்சியை அவன் தானே மேற்கொள்கிறுன்.''

ஒரு அல்லது மற்ருெரு வர்க்கத்துக்கு முன் நிற்கும் பிரச்சினைகள் எந்த அளவுக்கு மகத்தானவையோ, அந்த வர்க்கம் எந்த அளவுக்கு முற்போக்கு உள்ளதோ, அதனுல் தோற்றுவிக்கப்படும் தலைவர்கள் அந்த அளவுக்குப் பெரியவர்களாகவும் முக்கியத்துவம் உள்ளவர்களாகவும் இருப்பார்கள். பெருத்த அரசியல் தலைவர்கள் பிற்போக்கு வர்க்கத்திலிருந்தும் தோன்றக் கூடும். ஆயினும் சமூகத்தின் முன்செல்லும் வளர்ச்சிக்கு நேர் எதிராக அவர்கள் செயல்படுவதனுல் அரங்கிலிருந்து அவர்கள் தவிர்க்க இயலாதவாறு அகன்றுவிடுவார்கள்.

ஒரு அல்லது மற்ருெரு உயரிய மனிதன் எத்தகைய அசாதாரணத் திறமைகள் பெற்றிருந்தாலும் சரியே, நிகழ்ச்சிகளின் பொதுத் திசையை நிர்ணயிக்க அவன் வல்லவன் ஆக மாட்டான். ஓரளவுக்கு இந்த நிகழ்ச்சிகள்மீது செல்வாக்கு செலுத்தவும் அவற்றின் தனி வடிவத்தை மாற்றவும் மட்டுமே அவனுல் முடியும். எனவே அசாதாரண நபரின் பாத்திரத்தை மிகையாக மதிப்பிடுவது கூடாது. சமூகத்தின் பிரதான இயக்கு சக்தி—திரளான வெகு ஜனங்களே, ·கோடானுகோடி ''சாதாரண'' மக்களே என்பதை நினைவில் வைத்துக்கொள்வது அவசியம்.

ஒரு நபரின் செயல்கள் சமூக வளர்ச்சிக்கு உரிய புறநிலை விதிகளுக்கு எவ்வளவு பொருந்துகின்றன என்பதையும் திரளான வெகுஜனங்களுடன் அவனது தொடர்பையும், அவனுடைய

சொந்தப் பண்புகளையுமே பொறுத்திருக்கின்றன அவனுடைய இடமும் முக்கியத்துவமும். வரலாற்றில் அசாதாரண நபர் வகிக்கும் பாத்திரத்தை எந்த வகையிலும் மிகைப்படுத்துவதும், அவனைத் திரளான வெகுஜனங்களுக்கு எதிர் நிறுத்துவதும் சித்தாந்த நோக்கில் சரியற்றவை மட்டுமல்ல, அவற்றால் அரசியல் பிழைகளும் நடைமுறைத் தவறுகளும்கூட நேரலாம்.

தனிநபர் வழிபாடு வரலாறு பற்றிய பொருள்முதல்வாதப் புரிவுக்கு ஒவ்வாதது. தனிநபர் வழிபாட்டுக்கு அடிப்படையாக இருப்பது சமூக வாழ்வில் தனிநபரின் பாத்திரம் பற்றிய தவறான நோக்கு ஆகும். இதன்படி ஒரு குறித்த சமூகத் தலைவனே மக்களின் எல்லா முன்னேற்றங்களுக்கும் காரணகர்த்தா என்றும், செயல்களில் பிழையே அற்றவன் என்றும் சமூக வளர்ச்சியின் போக்கை இயக்க வல்லவன் என்றும் மதிக்கப்படுகிறான். சாராம்சத்தில் இதன் பொருள், அசாதாரண நபர் சமூக வாழ்வுக்கு உரிய புறநிலை விதிகளைக் கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் வரலாற்றைப் படைக்க வல்லவன் என்று ஒப்புக்கொள்வதாகும்.

சமூக அமைப்பின் இயற்கையும் தன்மையும் தனிநபரால் அல்ல, புறநிலை வரலாற்று விதிமுறைகளாலேயே நிச்சயிக்கப்படுகின்றன.

## § 4. சமூகத்துக்கும் தனிநபருக்கும் உள்ள பரஸ்பர உறவு

கார்ல் மார்க்ஸுக்கும் பிரெடெரிக் எங்கெல்ஸுக்கும் முந்திய சமூக இயலார் கருத்துமுதல்வாதிகளாகவும்மாறுநிலைவாதிகளாகவும் இருந்தமையால் சமூகத்துக்கும் தனிநபருக்கும் உள்ள பரஸ்பர உறவு பற்றிய பிரச்சினைக்குச் சரியான தீர்வு காண அவர்களால் முடியவில்லை. சமூகத்துக்கும் தனிநபருக்கும் இடையே பகைமை எப்போதும் நிலவிவந்தது, நிலவிவரும் என்று இவர்களில் பலர் வலிந்துரைத்தார்கள். தற்கால பூர்ஷ்வா சமூக இயலாரில் அனேகர் முதலாளித்துவத்தில் நிலவும் சமரசப்படுத்த முடியாத வர்க்க முரண்பாடுகளை மனிதகுலம் அனைத்திற்கும் இயல்பானதாகக் கருதுகிறார்கள். மனிதன் உலகில் அசட்டையாக விடப்பட்டிருக்கும் தனி ஆள் என்று அவர்கள் வருணிக்கிறார்கள். அவர்களது அபிப்பிராயப்படி மனிதன்

சமூகப் பிரச்சினைகளிலிருந்து ஓடி, சொந்த அனுபவங்களின் உலகில் புகுந்துகொள்ள வேண்டும்.

மார்க்ஸீயம்-லெனினீயம் சமூகத்தையும் அதன் சமுதாய, அரசியல், ஆன்மீகக் கட்டமைப்பையும் ஸ்தூல வரலாற்று அணுகு முறையில் ஆராய்ந்து, வரலாற்று வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் சமூகத்துக்கும் தனி நபருக்கும் உள்ள பரஸ்பர உறவு பற்றிய பிரச்சினைக்கு விஞ்ஞான ரீதியாகத் தீர்வு காண் கிறது. மார்க்ஸீயச் சித்தாந்தப்படி தனி நபர் சமூகத்துக்கு வெளியே நிலவ முடியாது. எனவே, எந்தச் சமூகத்தில் அவன் வாழ்கிருனே, செயல் புரிகிருனே, அந்தச் சமூகத்தினுலேயே அவனது தன்மை முற்றிலும் நிர்ணயிக்கப்படுகிறது. வேறு வார்த்தைகளில் சொல்வதானுல், சமூகம் எத்தகையதோ, அத்தகையவனே தனி நபர் என்று மார்க்ஸீயம்-லெனினீயம் வலியுறுத்துகிறது.

வெவ்வேறு சமூக-பொருளாதார அமைப்புக்களில் தனி நபருக்கும் சமூகத்துக்கும் உள்ள உறவுகள் வெவ்வேறு விதமாக உருவாகின்றன. சமரசப்படுத்த முடியாத முரண்பாடுகள் கொண்ட அமைப்புக்களில் சமூகத்துக்கும் தனி நபருக்கும் உள்ள உறவுகள்மீது தனது முத்திரையைப் பதிக்கிறது தனி யார் சொத்துரிமை. தனி நபரின் கட்டற்ற வளர்ச்சிக்குக் கடக்க முடியாத தடையாக விளங்குகிறது இது. இங்கே பொருளாதா ரச் சமமின்மை சமுதாய, அரசியல், ஆன்மீகத் துறைகளிலும் சமமின்மையைத் தோற்றுவிக்கிறது. அடிமைச் சொந்தக்கார அமைப்பிலும் நிலப்பிரபுத்துவ அமைப்பிலும் இருந்த நிலை மைகளில் இவ்வாறே நேர்ந்தது. பூர்ஷ்வாச் சமூகத்தில் தனி நபருக்கு முழுச் சுதந்திரமும் சமூகத்துடன் அதன் ஒத்திசைவும் நிலவுவதாக பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் பலர் வலிந்து ரைப்பினும் முதலாளித்துவத்திலும் முந்திய நிலைமையே தொடர்கிறது.

பூர்ஷ்வாப் புரட்சிகளின் விளைவாக நிலப்பிரபுத்துவ அடிமைத்தனமும் பண்ணை அடிமை முறையும் அகற்றப்பட்டது, பூர்ஷ்வாத் தனி நபர் சுதந்திரமும் சமூக உறுப்பினர்களிடையே சமத்துவமும் பெயரளவுக்கு அறிவிக்கப்பட்டது ஆகியவை நிலப்பிரபுத்துவத்துடன் ஒப்பிடும்போது முற்போக்குப் பாதையில் முன்னேக்கிய அடிவைப்பாக விளங்கின என்பதில் சந்தேகம் இல்லை. எனினும் சமூக நலன்களுக்கும் தனி நபர்

நலன்களுக்கும் இடையிலுள்ள சமரசப்படுத்த முடியாத முரண்பாடு முதலாளித்துவத்தில் அகற்றப்பட்டுவிட்டதாக இதற்கு அர்த்தம் அல்ல. ஒரு புறம் முதலாளிகளுக்கு, தொழிலதிபர்களுக்குரிய செயல்களுக்கான சுதந்திரம், மறு புறம் உழைப்பாளிகளுக்கு, பட்டினியால் சாகாமல் இருக்கும்பொருட்டு தனது உழைப்புச் சக்தியை விற்பதற்கான சுதந்திரம்—பூர்ஷ்வாச் சமூகத்தில் நிலவும் சுதந்திரம் இதுதானே. முதலாளித்துவத்தின் முரண்பாடுகள் கடுமை ஆக ஆக, தனி நபருக்கும் சமூகத்துக்கும் இடையே எதிர்நிலை மேலும் ஆழமாகிவருகிறது. ஏகபோக மூலதனம் விஞ்ஞான—தொழில்நுட்ப முன்னேற்றத்தின் நிறைவேற்றங்களை உழைப்பாளிகளுக்கு எதிராகப் பயன்படுத்துகிறது, லட்சோபலட்சம் மனிதர்களைத் ''தேவையற்றவர்கள்'' ஆக்குகிறது, தனித்துவவாதத்தையும் கடைக்கோடித் தன்னலத்தையும் மனிதனுக்குள் புகுத்தி அவனது உடலையும் ஒழுக்க நெறியையும் விகாரப்படுத்துகிறது.

சோஷலிஸத்தில் சமூகத்துக்கும் தனி நபருக்கும் உள்ள பரஸ்பர உறவுகள் பற்றிய பிரச்சினை முற்றிலும் வேறு விதமாகத் தீர்க்கப்படுகிறது. பொருளாதாரச் சமமின்மையின் அஸ்திவாரத்தையே சோஷலிஸம் தகர்த்துவிடுகிறது. இவ்வாறு செய்வதன் மூலமே அது சமூகத்துக்கும் தனி நபருக்கும் இடையே புதிய உறவுகளை ஏற்படுத்துகிறது. சோஷலிஸத்தின் நிலைமைகளில் உற்பத்திச் சாதனங்கள்மீது தனியார் சொத்துரிமை இருப்பதில்லை. சுறண்டுவோரும் சுறண்டப்படுவோரும் அங்கே கிடையாது. உற்பத்திச் சாதனங்கள்மீது பொதுச் சொத்துரிமையும் சமூகத்தின் நலத்துக்காகப் பொது உழைப்பும் சோஷலிஸத்துக்கு முதற்படியானவை. உற்பத்திச் சாதனங்கள்மீது சமூகச் சொத்துரிமை, தோழமையுள்ள ஒத்துழைப்பும் பரஸ்பர உதவியும் கொண்ட உற்பத்தி உறவுகள், உழைப்புக்கேற்ற வினியோகம் என்ற சோஷலிஸக் கோட்பாடு, மனிதனையும் அவனது தேவைகளையும் பற்றிச் சமூகம் எடுத்துக்கொள்ளும் அக்கறை, இவையே சோஷலிஸத்தில் சமூக, தனிநபர் நலன்களின் இணைவுக்கு அடிப்படையாக விளங்குகின்றன.

சோஷலிஸச் சமூகத்தில் தனி நபருக்கும் குழுவுக்கும் உள்ள பரஸ்பர உறவுகளை பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் திரித்துக் கூறுகிறார்கள். இங்கே குழு தனிநபரை நசுக்கிவிடுகிறது என்று அவர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் சோஷலிஸத்தின் நிலைமை

களில் சமூகமும் தனி நபரும் சுறண்டுவோர் சமூகங்களில் இருப்பது போலப் பரஸ்பரம் எதிர்நிற்பதில்லை. மாறுக, தனி நபருக்கும் சமூகத்துக்கும் சோஷலிஸ அமைப்பில் உள்ள அக்கறை ஒன்றே. அதுதான் கம்யூனிஸக் கட்டுமானம். சோவியத் சமூகத்தில் சமுதாய நலன்களும் தனி நபர் நலன்களும் ஒன்ருக இணைவதற்கும், தனி நபர் சர்வாம்சரீதியாக வளர்ச்சி அடைவதற்கும் நம்பகமான அஸ்திவாரமாகப் பயன்படுகிறது இந்த ஒன்றித்த குறிக்கோள்.

சோஷலிஸத்தில் சமூகத்தின் பொருளாதார, சமுதாய, அரசியல், ஆன்மீக ஒற்றுமை நிலவுவதனுல் இங்கே தனி நபருக்கும் சமூகத்துக்கும் இடையே முரண்பாடுகள் ஏற்பட முடியாது என்று அர்த்தம் அல்ல.

சமூகம் அனைத்தின் நலன்களுக்காகவும் ஏற்படுத்தப்பட்டுள்ள சட்டங்களுக்குக் கீழ்ப்படியத் தனி மனிதன் விரும்பவில்லை என்ருல், அவன் உழைக்க இஷ்டப்படாவிட்டால், சோஷலிஸக் கூட்டு வாழ்வு விதிகளை அவன் மீறிஞல் அப்போது தனிநபருக்கும் சமூகத்துக்கும் இடையே முரண்பாடுகள் சோஷலிஸ அமைப்பில் உண்டாகக்கூடும். இங்கே இத்தகைய முரண்பாடுகளைத் தீர்ப்பதில் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் மக்கள் அனைவரும் பங்கெடுத்துக் கொள்கிருர்கள். உழைப்பாளி மக்களின் கருத்து, அரசியல், ஒழுக்க நெறிப் பயிற்சியைத் தீவிரப்படுத்துவதன் வாயிலாகவும், இணங்குவிப்பு முறைகளையும் நிர்ப்பந்த முறைகளையும் சரியாக இணைப்பதன் வாயிலாகவும் இந்தச் செயல் நிறைவேற்றப்படுகிறது.

கம்யூனிஸத்துக்குப் பரிணமிப்பதன் விளைவாக, சமூகத்துக்கும் தனிநபருக்கும் இடையே பண்புவகையில் புதிய உறவுகள் தோன்றும். இந்த உறவுகள் அதிக முழுமையும் அதிகப் பல்வகைப்பாடும் அடையும். தனி நபரின் சர்வாம்சரீதியான, ஒருங்கிசைந்த வளர்ச்சிக்கும் அவனது பொருளியல், ஆன்மீகத் தேவைகளின் பூர்த்திக்கும் வேண்டிய எல்லா வாய்ப்புக்களையும் சமூகம் அளிக்கும். தன் பங்குக்குத் தனி மனிதன் நிர்ப்பந்தம் காரணமாக அன்றி, சமூகத்தின் நலத்துக்காக வாழவும் உழைக்கவும் ஆன உறுப்பிணைவு கொண்ட உள் தேவை காரணமாக, சமூகத்துக்குத் தான் செய்ய வேண்டிய கடமைகளை நிறைவேற்றுவான்.

## § 5. சமூகத்தைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதில் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்கு

மனித சமூகம் முதலாளித்துவத்திலிருந்து கம்யூனிஸத்துக்குப் பரிணமிக்கும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்முறை, திரளான வெகுஜனங்களின் தலைவன், கூட்டு வழிகாட்டி என்ற முறையில் கம்யூனிஸ்ட் கட்சியின் மிகப் பெரிய பங்குக்குச் சான்றாகத் திகழ்கிறது. முதலாளித்துவ அமைப்பின் நிலைமைகளில் கம்யூனிஸ்ட் கட்சி தொழிலாளி வர்க்கத்தின் அரசியல் தலைவனாகவும் பூர்ஷ்வா வர்க்கத்துக்கு எதிரான அதன் போராட்டத்தில் படைத் தலைமை அலுவலகமாகவும் விளங்குகிறது. கம்யூனிஸ்ட் கட்சி உழைப்பாளிகளை உறுதியாக ஒன்றுபடுத்தி, பூர்ஷ்வா வர்க்கத்தை ஆட்சியிலிருந்து அகற்றவும் பாட்டாளி வர்க்கத்தின் கைகளில் ஆட்சி அதிகாரத்தை ஒப்படைக்கவும் அவர்களது சக்தியை இயக்கிச் செலுத்துகிறது. மாபெரும் லெனினால் நிறுவப்பட்ட சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி இதற்கு ஒளிமிக்க எடுத்துக்காட்டு ஆகும். இந்தக் கட்சி முன்னாள் ஜாராட்சி ருஷ்யாவின் உழைப்பாளி மக்களை சமூகத்தைப் புரட்சிகரமாக மாற்றி அமைக்கும் பாதையில் செலுத்தியது. வரலாற்று நோக்கில் மிகக் குறுகிய கெடுவுக்குள் அவர்களை அணி திரட்டி சோஷலிஸக் கட்டுமானத்திலும் கம்யூனிஸக் கட்டுமானத்திலும் ஈடுபடுத்துவதில் வெற்றி அடைந்தது. பிரமாண்டமான நாட்டை நூற்றாண்டுக்கணக்கான பொருளாதாரப் பின்தங்கிய நிலையிலிருந்து மீட்டு, சமுதாய, விஞ்ஞான-தொழில்நுட்ப முன்னேற்றத்தின் மிக மிக முன்னணி நிலைக்குக் கொண்டுவந்தது.

கம்யூனிஸ்ட் கட்சியின் இந்த வெற்றிகளின் தலையூற்று எதில் உள்ளது? சோவியத் சமூகத்தின் வாழ்க்கையில் அதன் தலைமைப் பாத்திரம் எதனால் நிச்சயிக்கப்படுகிறது? முதன் முதலாக, சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி யாவற்றிலும் முன்னணியிலுள்ள புரட்சிச்சித்தாந்தமான மார்க்ஸீய-லெனினீயத்தால் உரம் பெற்றுள்ளது. சமூக வளர்ச்சிக்கு உரிய புறநிலை விதிகளை அறியவும், இந்த விதிகள் பற்றிய அறிவை ஆதாரமாகக் கொண்டு வரலாற்று நிகழ்ச்சிகளில் சரியான திசையைத் தெரிந்துகொள்ளவும், விஞ்ஞான அடிப்படை கொண்ட பொதுப்

போக்கை வகுக்கவும், இந்தப் போக்கைச் செயல்படுத்துவதற்குத் திரளான வெகுஜனங்களை ஒழுங்கமைத்து அணிதிரட்டவும் மார்க்ஸீயம்-லெனினீயம் அதற்கு வாய்ப்பு அளிக்கிறது.

கம்யூனிஸ்ட் கட்சி தொழிலாளி வர்க்கத்தின் நலன்களை, மிக விரிவான வெகுஜனத் திரளின் நலன்களை வெளியிடுகிறது. இதுவே அதன் வலிமைக்குக் காரணம். கம்யூனிஸ்ட் கட்சியும் மக்களும் ஒன்ருன முழுமை ஆகும். பொருளியல், ஆன்மீக நலங்களின் பிரதான உற்பத்தியாளியாக விளங்கும் உழைப்பாளி மக்களுக்குத் தொண்டு செய்வதே கம்யூனிஸ்ட் கட்சியின் குறிக்கோளாகவும் கடமையாகவும் விளங்குகிறது. ''கட்சி மக்களுக்காகவே நிலவுகிறது, மக்களுக்குத் தொண்டு புரிவதையே தனது நடவடிக்கைகளின் அர்த்தமாகக் கருதுகிறது'' என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் கூறப்பட்டிருப்பது தற்செயலாக அல்ல.

கம்யூனிஸ்ட் கட்சியின் வலிமைக்கும் பெரு விறலுக்கும் முதன்மையான ஊற்றுக்கண்ணுக விளங்குவது அதன் கருத்து, அரசியல், ஸ்தாபன ஒற்றுமை ஆகும். எந்த வகையான உட்குழுக்களின் நடவடிக்கைகளுக்கும் இந்த ஒருமையில் இடம் கிடையாது. ஒற்றுமையும் உணர்வுபூர்வமான கட்டுப்பாடும் கட்சிக்கு மிக அவசியமானவை, அதன் அஸ்திவாரமாக விளங்குபவை. ''பாட்டாளி வர்க்கக் கட்சியின் எஃகுக் கட்டுப்பாட்டை (சிறப்பாக அதன் சர்வாதிகாரக் காலத்தில்) சிறிதளவாயினும் பலவீனப்படுத்துபவன் பாட்டாளி வர்க்கத்துக்கு எதிராக பூர்ஷ்வா வர்க்கத்துக்கே உண்மையில் உதவுகிருன்''[1] என்று எழுதினுர் வி. இ. லெனின். உணர்வுபூர்வமான கட்டுப்பாடும் ஸ்தாபன அமைப்புமே உருவாகத் திகழும் கம்யூனிஸ்ட் கட்சி தனது நடவடிக்கைகளின் எல்லாக் கட்டங்களிலும் உழைப்பாளி மக்கள் திரள்களுக்கு வெற்றிகரமாகத் தலைமை வகித்து இயக்கிச் செல்கிறது, அவற்றின் போராட்டத்தில் கட்டுப்பாடு, ஒழுங்கமைப்பு ஆகியவற்றின் உணர்வைப் புகுத்துகிறது.

கம்யூனிஸக் கட்டுமானக் காலப்பகுதியில் கம்யூனிஸ்ட் கட்சியின் பங்கு இன்னும் அதிகரிக்கும். முந்திய அமைப்புக்கள் தாமாகவே உருவாயின. மாருக, கம்யூனிஸச் சமூகம் திரளான

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 41, பக்கம் 28.

வெகுஜனங்களின் உணர்வுபூர்வமான, குறிக்கோளை நோக்கி இயங்குகிற செயல்பாட்டின் விளைவாக உருவாகிறது. மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தத்தாலும் சமூக வளர்ச்சிக்கு உரிய விதிகள் பற்றிய அறிவாலும் உரம் பெற்றுள்ள கட்சிதான் மனிதகுல வரலாற்றிலேயே யாவற்றிலும் மகத்தான சமூக மாற்றியமைப்புக்குத் திட்டமிட்ட, விஞ்ஞான அடிப்படை கொண்ட பண்பை அளிக்க வல்லது.

கம்யூனிஸக் கட்டுமானக் காலப்பகுதியில் கட்சியின் பங்கு அதிகரிப்பதற்குப் பின்வரும் காரணங்கள் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சிச் செயல்திட்டத்தில் குறிக்கப்பட்டுள்ளன: கம்யூனிஸக் கட்டுமானத்தின் பரிமாணமும் சிக்கலும் அதிகரித்தல்; பொதுமக்களின் படைப்புச் செயல்கள் மிகுதல்; அரசாங்க நிர்வாகத்திலும் உற்பத்தி நிர்வாகத்திலும் அவர்கள் ஈடுபடுத்தப்படுதல்; சோஷலிஸ ஜனநாயகம் மேலும் விரிவடைதல்; விஞ்ஞானக் கம்யூனிஸச் சித்தாந்தத்தின் முக்கியத்துவம் அதிகரித்தல்; உழைப்பாளிகளைக் கம்யூனிஸ முறையில் பயிற்றுவதையும் மனிதர்களுடைய உணர்விலிருந்து பழைமையின் மீத மிச்சங்களை அகற்றுவதற்கான போராட்டத்தையும் தீவிரப்படுத்துவதன் இன்றியமையாமை.

உழைப்பாளி மக்களின் கூட்டுப் பயிற்சி ஆசானுகவும் அரசியல் தலைவனுகவும் விளங்கும் கம்யூனிஸ்ட் கட்சி, கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படையை உருவாக்குவதிலும், சோஷலிஸச் சமூக உறவுகளைக் கம்யூனிஸச் சமூக உறவுகளாக மாற்றி அமைப்பதிலும் சோவியத் மக்களின் பிரமாண்டமான ஆற்றலைத் திறமையாக ஈடுபடுத்துகிறது. சோவியத் மக்களைக் கம்யூனிஸ உணர்வில் அது பயிற்றுகிறது. திரளான வெகுஜனங்களின் வரலாற்றுப் படைப்பை ஒழுங்கமைப்பதும் தூண்டி ஊக்குவதுமாகக் கம்யூனிஸ்ட் கட்சி விளங்குவது இங்கே சிறப்பான துலக்கத்துடன் புலப்படுகின்றது.

வெகு ஜனங்களுடன் தனது தொடர்புகளைக் கம்யூனிஸ்ட் கட்சி விரிவாக்கி வலுப்படுத்துகிறது. சிக்கலான எல்லாப் பிரச்சினைகளிலும் அது மக்களைக் கலந்து ஆலோசிக்கிறது, மக்களின் கூட்டு அறிவையும் அனுபவத்தையும் ஆதாரமாகக் கொள்கிறது. புதியவற்றைக் கூர்ந்து கண்டுகொள்ளவும் அதற்கு வழியைச் செப்பஞ்செய்யவும் குறைகளைக் களையவும் இதனுல் அதற்கு முடிகிறது.

கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படையை நிறுவுதல், கம்யூனிஸச் சமூக உறவுகளை உருவாக்குதல், புதிய மனிதனைப் பயிற்றுதல் ஆகிய செயல்களை நிறைவேற்றுவதற்கு, கட்சி தனது நடவடிக்கைகளின் வடிவங்களையும் முறைகளையும் இடைவிடாது செவ்வைப்படுத்துவதும் வெகுஜனங்களுக்குத் தலைமையேற்று நடத்துவதன் தரத்தை உயர்த்துவதும் தேவையாகின்றன. சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் அக்டோபர், நவம்பர் (1964) முழுக்கூட்டங்கள் இந்த விஷயத்தில் மிகப் பெரிய பங்கு ஆற்றின. கட்சி வாழ்க்கையையும் தலைமையையும் பற்றிய லெனினது அளவுமானங்களை விரிவுபடுத்தவும் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கவும் கட்சி கொண்டுள்ள அசைக்க முடியாத சித்தவுறுதியை இவை வெளியிட்டன. பொருளாதார, அரசியல் பிரச்சினைகளைத் தீர்ப்பதில் அகநிலை அணுகுமுறை மேற்கொள்ளப்பட்டதன் விளைவாக நேர்ந்த தவறுகளை முழுக்கூட்டங்கள் திருத்தின. பொருளாதார, கட்சிக் கட்டுமானத்துறையில் உள்ள குறைகளும், கட்சி, சோவியத், பொருளாதார ஸ்தாபனங்களின் உசிதமற்ற புனர்நிர்மாணத்துடன் தொடர்புள்ள தவறுகளும் மேற்படி முழுக்கூட்டங்களின் தீர்மானங்களது அடிப்படையில் சீர்படுத்தப்படுகின்றன.

உலகக் கம்யூனிஸ இயக்கத்தின் முன்னணிப் படைப்பிரிவாக விளங்கும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி, சோஷலிஸ, கம்யூனிஸக் கட்டுமானத் துறையில் தான் அடைந்துள்ள வெற்றிகளால் உலகப் புரட்சிச் செயல்முறை மீது பிரதானப் பாதிப்பு நிகழ்த்தி வருகிறது. கம்யூனிஸத்தின் வெற்றிக்காக சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் போராட்டம் உலகக் கம்யூனிஸ இயக்கத்தின் குறிக்கோளுக்கு மாண்புமிக்க தொண்டாகத் திகழ்கிறது.

சோவியத் மக்களின் நலன்களையும் சோஷலிஸ நாடுகளுக்கும் எல்லா உலக நாடுகளுடையவும் உழைப்பாளிகளுக்கும் தான் செய்ய வேண்டிய சர்வதேசியப் புரட்சிக் கடமையையும் அடிப்படையாகக் கொண்டு சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி தனது வெளிநாட்டுக் கொள்கைக்கு உரிய நடவடிக்கைகளை அமைத்துக்கொள்கிறது. தற்கால நிலைமைகளில் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசாங்கமும் வெளிநாட்டுக் கொள்கைத் துறையில் ஆற்ற வேண்டிய கடமைகள் சோவியத்

யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் 23வது காங்கிரஸினது தீர்மானங்களில் பின்வருமாறு துலக்கமாக வரையறுக்கப்பட்டிருக்கின்றன: ''சோஷலிஸத்தையும் கம்யூனிஸத்தையும் நிறுவுவதற்குச் சாதகமான சர்வதேச நிலைமைகளை மற்ற சோஷலிஸ நாடுகளுடன் சேர்ந்து ஏற்படுத்தல்; சோஷலிஸ நாடுகளின் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் நட்பையும் சோதரப் பான்மையையும் வலுப்படுத்தல்; தேசிய விடுதலை இயக்கத்துக்கு ஆதரவு அளித்தல்; வளர்ச்சி அடைந்து கொண்டிருக்கும் இளம் அரசுகளுடன் சர்வாம்சரீதியான ஒத்துழைப்பைச் செயல்படுத்தல்; வெவ்வேறு சமுதாய அமைப்புக்கள் கொண்ட அரசுகளின் சமாதான சகவாழ்வுக் கோட்பாட்டை ஒத்தியைந்த வகையில் கடைப்பிடித்தல்; ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்புச் சக்திகளை உறுதியுடன் எதிர்த்து முறியடித்தல்; புதிய உலக யுத்தத்திலிருந்து மனிதகுலத்தைக் காத்தல், இவற்றையே சோவியத் அரசின் வெளிநாட்டுக் கொள்கை தனது குறிக்கோளாகக் கொண்டிருக்கிறது.''

சமூக வளர்ச்சிக்கு உரிய புறநிலை விதிமுறைகளை ஆதாரமாகக் கொண்டே சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி தனது வெளிநாட்டுக் கொள்கையைக் கடைப்பிடித்து வருகிறது. உலகத்தில் நடக்கும் எல்லாப் புது நிகழ்ச்சிகளையும் செயல்முறைகளையும் அது கணக்கில் எடுத்துக்கொள்கிறது. அவற்றை ஆழ்ந்து பகுத்தாராய்கிறது. இந்த அடிப்படையில், உலகப் புரட்சிச் செயல்முறைமீது சோவியத் யூனியனுடையவும் சோஷலிஸ அமைப்பு அனைத்தினுடையவும் செல்வாக்கு வலுப்படுவதற்கு இட்டுச் செல்லும்படியான போர்த்தந்திரத்தையும் செயல்தந்திரத்தையும் அது வகுக்கிறது.

சோவியத் யூனியனின் வெளிநாட்டுக் கொள்கைக்கும், மக்களின் சமாதானத்தையும் பாதுகாப்பையும் உத்தரவாதப்படுத்துவதற்கும் முக்கியத்துவம் உள்ள எல்லாப் பிரச்சினைகளிலும் பொருளாதாரப் பிரச்சினைகள்பால் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி சிறப்பான கவனம் செலுத்துகிறது. ஏனெனில், சோவியத் நாடும் உலக சோஷலிஸ அமைப்பைச் சேர்ந்த நாடுகளும் பொருளாதார விறலில் வளர்வதுதான் உலகப் புரட்சிச் செயல்முறைமீது இந்த நாடுகளின் செல்வாக்கைத் தீவிரப்படுத்தும். சோவியத் ஆட்சியின் தொடக்க ஆண்டுகளிலேயே வி. இ. லெனின் பின்வருமாறு குறித்தார்: ''சர்வதேசப் புரட்சி

மீது நமது பிரதானப் பாதிப்பை நமது பொருளாதாரக் கொள்கை வாயிலாகவே நாம் நிகழ்த்துவோம்.... இந்தத் துறையில் போராட்டம் அகில உலகப் பரிமாணத்தில் நடக்கத் தொடங்கி விட்டது. இந்தப் பிரச்சினைக்கு நாம் தீர்வு கண்டால், சர்வதேசப் பரிமாணத்தில் கட்டாயமாகவும் இறுதியாகவும் நாம் வெற்றி அடைந்து விடுவோம்.''[1] வி. இ. லெனினது இந்த அறிவுரையை சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி ஒத்தியைந்த முறையில் செயல்படுத்திவருகிறது.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி, சோவியத் அரசாங்கம் ஆகியவற்றின் வெளிநாட்டுக் கொள்கை நடவடிக்கை மிகப் பெரியது, பல்துறைகள் கொண்டது. சோஷலிஸ நாடுகளின் ஒருமைப்பாட்டையும் நட்புறவையும் வலுப்படுத்துவது பற்றிய அக்கறை இந்த நடவடிக்கையில் முக்கிய இடம் வகிக்கிறது. சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு சர்வதேசத் தொழிலாளி வர்க்கத்தின் மகத்தான வரலாற்று முக்கியத்துவமுள்ள வெற்றியாகவும், தற்போதையச் சகாப்தத்தின் பிரதானப் புரட்சிச் சக்தியாகவும், சமாதானம், தேசிய விடுதலை, ஜனநாயகம், சோஷலிஸம், கம்யூனிஸம் ஆகியவற்றுக்கான போராட்டத்தின் நம்பகமான ஆதரவாகவும் விளங்குகிறது.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி, பிற கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகள் ஆகியவற்றின் சோர்வறியாத முயற்சியின் பயனாக சோஷலிஸ நாடுகளுக்கு இடையிலும் சோதரக் கம்யூனிஸ்ட் கட்சிகளுக்கு இடையிலும் உறவுகள் வலுப்பட்டுள்ளன. மார்க்ஸீய-லெனினீயத்தின் அடிப்படையிலும், சோஷலிஸச் சர்வதேசியவாதம், சமத்துவம், உள் விவகாரங்களில் தலையிடாமை, பரஸ்பர மரியாதை, கட்சிகள், அரசுகளின் சுதந்திரம் ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையிலும் அமைந்தவை இவ்வுறவுகள். இவை முன்னிலும் அதிக நெருக்கமான, உளமார்ந்த உறவுகள் ஆகியிருக்கின்றன.

சோஷலிஸ நாடுகளின் பொருளாதார ஒத்துழைப்பும் புதிய மட்டத்துக்கு உயர்ந்திருக்கிறது. தேசியப் பொருளாதாரத் திட்டங்களின் திட்ட அமைப்பும் பொருத்தமான இசைவும் சீர்பட்டுள்ளன. சோஷலிஸ நாடுகளின் சுயவிருப்பத்தையும்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 43, பக்கம் 341.

முழுச் சமத்துவத்தையும் அடிப்படையாகக் கொண்ட சர்வதேச உழைப்புப் பிரிவினையும், பொருளாதாரப் பரஸ்பர உதவிச் சபையின் வரம்புகளுக்குள் தனித்துறைப்பாடும் கூட்டமைப்பும் இவற்றில் ஒவ்வொரு நாட்டினதும் மொத்தத்தில் சோஷலிஸ அமைப்பு அனைத்தினதும் பொருளாதாரம் வெற்றிகரமாக வளர்ச்சி அடைவதற்கு மிகவும் சாதகமான நிலைமைகளை ஏற்படுத்துகின்றன. கம்யூனிஸச் சமூகத்தை நிறுவுதல் என்ற ஒரே பொதுக் குறிக்கோளை நோக்கி சோஷலிஸ நட்பு மண்டலத்தைச் சேர்ந்த நாடுகள் விரைவாக முன்னேறுவதற்கு இது உதவுகிறது.

எல்லா நாடுகளையும் சேர்ந்த கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளுடன் கருத்து-அரசியல், பொருளாதார, பண்பாட்டுத் தொடர்புகளை மார்க்ஸீய-லெனினீயக் கோட்பாடுகளின் அடிப்படையில் மேலும் விரிவாக்கவும் வலுப்படுத்தவும், சோஷலிஸ நட்பு மண்டலத்தின் ஒருமைப்பாடு அதிகரிப்பதற்கும் அதன் விறலும் செல்வாக்கும் உறுதிப்படுவதற்கும் எல்லா வகையிலும் உதவவும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டிக்கு 23 வது காங்கிரஸ் பொறுப்பு அளித்திருக்கிறது.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் வெளிநாட்டுக் கொள்கை நடவடிக்கை ஸ்தூல வரலாற்று நிலைமைகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டே எப்போதும் நிறைவேற்றப்பட்டு வந்திருக்கிறது. உலகக் கம்யூனிஸ இயக்கத்தைப் பாட்டாளி வர்க்கச் சர்வதேசீயவாதத்தின் அடிப்படையில் மேலும் ஒற்றுமைப்படுத்துவது தற்போதைய சர்வதேசச் சூழ்நிலையில் தேவைப்படுகிறது. தொழிலாளி வர்க்கத்தின், உழைப்பாளி மக்கள் அனைவரின் தேசீய, சர்வதேசீய நலன்களையும் கடமைகளையும் ஒன்றுக்கொன்று எதிர்நிறுத்தக் கூடாது என்று வி. இ. லெனின் கற்பித்தார். எல்லா நாடுகளையும் சேர்ந்த உழைப்பாளி மக்களின் புரட்சி முயற்சிகளை ஒன்றிணைப்பதே சர்வதேசீயவாதத்தின் சாரம் என்று அவர் கருதினார்.

வி. இ. லெனினுடைய போதனைகளை வழிகாட்டியாகக் கொண்டு சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி எல்லாக் கம்யூனிஸ்ட் கட்சிகளதும் சர்வதேச ஒற்றுமையை மேலும் வலுப்படுத்துவதற்காக எப்போதும் போராடியது, போராடி வருகிறது. மார்க்ஸீய-லெனினீயக்கோட்பாடுகள்பால்விசுவாசம்

உள்ள சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி மற்றக் கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளுடன் ஒற்றுமையையும் சோதர ஒருமைப்பாட்டையும் பலப்படுத்தவும், அவற்றுடன் சேர்ந்து சர்வதேசக் கம்யூனிஸ இயக்கத்தின் பொதுப் போக்கைச் செயல்படுத்தவும் எல்லா வகையிலும் பாடுபட்டு வருகிறது.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி, தனது 23 வது காங்கிரஸிற்கு வந்திருந்த உலகக் கம்யூனிஸ இயக்கத்தின் பிரதிநிதிகளுக்கும் அவர்கள் வடிவில் உலகம் முழுவதிலும் உள்ள கம்யூனிஸ்டுகளுக்கும், தனது சர்வதேசியப் புரட்சிக் கடமைபால் விசுவாசத்துடன் அது ''மார்க்ஸ்—எங்கெல்ஸ்—லெனினது மாண்புமிக்க போதனையின் அடிப்படையில், உலகக் கம்யூனிஸ இயக்கத்தால் கூட்டாக உருவாக்கப்பட்டுள்ள போக்கின் அடிப்படையில், எல்லாச் சோதரக் கட்சிகளதும் சர்வதேச ஒற்றுமையை வலுப்படுத்துவதன் பொருட்டு இடைவிடாது போராடும்'' என்று வாக்களித்தது.

23 வது காங்கிரஸ் தஸ்தாவேஜுகளில் குறிக்கப்பட்டிருப்பது போல, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி வலதுசாரி, ''இடதுசாரித்'' திரிபுவாதத்துக்கு எதிராகவும் குறுகிய தேசீயவாதத்தின் தோற்றத்துக்கு எதிராகவும் மேற்கொண்டும் சமரசமற்ற போராட்டம் நடத்தும். ஏகாதிபத்தியத்தை எதிர்த்து, சமாதானம், ஜனநாயகம், தேசீய விடுதலை, சோஷலிஸம், கம்யூனிஸம் என்னும் மாபெரும் குறிக்கோள்களின் பொருட்டு நடக்கும் போராட்டத்தில் உலகம் அனைத்திலும் உள்ள கம்யூனிஸ்ட் கட்சிகள் ஒன்றித்துச் செயலாற்ற வேண்டும் என்ற போக்கை அது மேற்கொண்டும் கடைப்பிடித்துவரும்.

மக்களது தேசிய விடுதலை இயக்கத்துக்கு ஆதரவு அளிக்கும் கோட்பாட்டை சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி பிறழ்வின்றிக் கடைப்பிடித்து வருகிறது. விடுதலை பெற்ற அரசுகளுடன் எல்லாத் துறைகளிலும் ஒத்துழைக்கும் கொள்கையை ஒத்தியைந்த முறையில் அது கடைப்பிடித்து வருகிறது. சமத்துவம், அரசுரிமைக்குக் கண்டிப்பான மரியாதை, அவற்றின் உள் விவகாரங்களில் தலையிடாமை ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்தது இந்தக் கொள்கை.

எவற்றின் மக்கள் காலனி ஆட்சி நுகத்தைக் கழற்றி எறிந்து விடுதலை பெற்றுவிட்டார்களோ அந்த வளர்ந்துவரும் இளம் அரசுகளுக்கு சோவியத் யூனியன் எல்லா வகையிலும் உதவி

வருகிறது. சுதந்திரம் பெற்றுவிட்ட பற்பல ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுடன் சோவியத் யூனியனின் வர்த்தக, பொருளாதார, பண்பாட்டு உறவுகள் கடந்த சில ஆண்டுகளில் கணிசமாக விரிவடைந்திருக்கின்றன.

இளம் தேசிய அரசுகளின் உள் விவகாரங்களில் ஏகாதிபத்தியவாதிகளின் தலையீட்டை எதிர்த்தும், புதுக் காலனியாதிக்கத்தை எதிர்த்தும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசாங்கமும் தீவிரமாகச் செயலாற்றிவருகின்றன. காலனியாட்சி, புதுக் காலனியாதிக்க அடக்குமுறையிலிருந்து இறுதியாக விடுதலை பெறும் பொருட்டு மக்கள் நடத்திவரும் போராட்டத்துக்கு ஆதரவளிப்பதற்கான எல்லாவற்றையும் மேற்கொண்டும் செய்வது தங்கள் சர்வதேசியக் கடமை என அவை கருதுகின்றன.

போரும் சமாதானமும் பற்றிய பிரச்சினை தற்காலத்தின் பிரதானப் பிரச்சினை என்று சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் செயல்திட்டத்தில் குறிக்கப்பட்டிருக்கிறது. எனவே தான் சமாதானத்தின் பொருட்டும் சர்வதேச இறுக்கத்தைத் தளர்த்துவதன் பொருட்டும் புதிய உலக யுத்தம் மூளாது தவிர்க்கும் பொருட்டும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி நடத்திவரும் போராட்டம் அதன் வெளி நாட்டுக் கொள்கை நடவடிக்கையின் அஸ்திவாரமாக விளங்குகிறது.

சமுதாய முன்னேற்றம், மக்களின் இன்பம் என்னும் உயர்ந்த ஆதர்சங்களின் பொருட்டு, மக்களுக்கிடையே சமாதானத்தையும் நட்பையும் காப்பாற்றவும் பலப்படுத்தவும் தேவையான எல்லாவற்றையும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி செய்துவருகிறது. இந்த நோக்கத்துடனேயே அது வெவ்வேறு சமுதாய அமைப்புக்கள் கொண்ட அரசுகளின் சமாதான சகவாழ்வுக் கோட்பாட்டைச் செயல்படுத்துவதில் மட்டுமீறிய கவனம் செலுத்திவருகிறது. இந்தக் கோட்பாடு வி. இ. லெனினல் சோவியத்துக்களின் இரண்டாவது காங்கிரஸின் முன் வைக்கப்பட்டுச் சர்வாம்சரீதியாகப் பிரமாணப்படுத்தப்பட்டது. ''சூறையாடல்களையும் வன்முறைகளையும் பற்றிய எல்லா அம்சங்களையும் நாம் நிராகரிக்கிறோம். ஆனல் நல்ல அயலாருக்குரிய நிபந்தனைகளும் பொருளாதார ஒப்பந்தங்களும் அடங்கியுள்ள

எல்லா அம்சங்களேயும் நாம் மகிழ்வுடன் ஏற்கிறோம். அவற்றை நாம் நிராகரிக்க முடியாது''[1] என்றார் அவர்.

சோஷலிஸ நாடுகளின் அமைப்புக்கும் முதலாளித்துவ நாடுகளின் அமைப்புக்கும் இடையே சமாதான சகவாழ்வு மனித சமூக வளர்ச்சியின் புறநிலேத் தேவை ஆகும். விவாதத்துக்கு இடமான சர்வதேசப் பிரச்சினைகள் யுத்தத்தின் மூலம் அன்றிப் பேச்சு வார்த்தைகளின் மூலம் தீர்க்கப்படுவது இதற்கு முதற் படியாக அவசியம். சோவியத் யூனியனதும் சோஷலிஸ அமைப்பு நாடுகளதும் பொருளாதார, அரசியல், இராணுவ விறலேயும் சர்வதேசக் கம்யூனிஸ, தொழிலாளர், தேசீய விடுதலே இயக்கங்களேயும் ஆதாரமாகக்கொண்டு சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசாங்கமும் சோவியத் யூனியனில் கம்யூனிஸத்தை நிறுவுவதற்கும் சோஷலிஸ நாடுகளின் உலக அமைப்பு வளர்வதற்கும் ஏற்ற சமாதான நிலேமைகளே உத்தரவாதப்படுத்துவதைத் தமது நோக்கமாகக் கொண்டிருக்கின்றன. உலக வெப்ப அணுக்கரு யுத்தத்தின் பயங்கரங்களிலிருந்து மனிதகுலத்தைக் காக்க சமாதானப் பற்றுள்ள எல்லா மக்களுடனும் சேர்ந்து அவை விரும்புகின்றன.

வெவ்வேறு சமுதாய அமைப்புக்கள் கொண்ட அரசுகளின் சமாதான சகவாழ்வு பற்றிய லெனினது கொள்கை வர்க்கப் பகைவர்களுடன் கோட்பாடற்ற முறையில் சமரசம் செய்து கொள்வது அல்ல. சர்வதேச இறுக்கத்தைத் தளர்த்துவதற்கும் உலக யுத்தங்கள் மூளாது தவிர்ப்பதற்கும் கம்யூனிஸக் கட்டுமானத்திற்குச் சாதகமான நிலேமைகளே ஏற்படுத்துவதற்கும் நடக்கும் மிகக் கடுமையான வர்க்கப் போராட்டமாகும் இது. எனவேதான் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியும் சோவியத் அரசாங்கமும் ஏகாதிபத்திய ஆக்கிரமிப்புக்கு இலக்காகியுள்ள மக்களுக்கு எல்லா வித உதவிகளேயும் அளித்துவருகின்றன.

ஏகாதிபத்தியம் நிலவிவரும் வரையில் ஆக்கிரமிப்புப் போர்களின் ஊற்றுக்கண் இருந்துவரும் என்பதை சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி எப்போதும் நினேவில் வைத்திருக்கிறது. இந்தத் தொடர்பில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட்

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 35, பக்கம் 20.

கட்சியின் 23 வது காங்கிரஸ் சமாதானப் போராட்டத்துக் கான காரியரீதியான செயல்திட்டத்தை முன்வைத்தது. சர்வ தேசச் சூழ்நிலையைச் சீர்படுத்துவதற்குரிய திட்டவட்டமான, நடைமுறைச் செயல்களைக் குறித்தது.

உலக யுத்த அபாயத்தைப் போக்குவதில் சோவியத் மக் களின் விழிப்புணர்ச்சியை அதிகரிப்பதற்கும் சோவியத் யூனிய னின் தற்காப்புச் சக்தியை வலுப்படுத்துவதற்கும் கம்யூனிஸ்ட் கட்சி சிறப்பாகப் பெருத்த முக்கியத்துவம் அளிக்கிறது. சோ வியத் யூனியனின் இராணுவம் ''சோஷலிஸத்தால் பெறப்பட்ட நலங்களை நம்பகமாகக் காக்கவும் எந்த ஏகாதிபத்திய ஆக்கிர மிப்பாளனையும் எதிர்த்து நொறுக்கவும் எப்பொழுதும் ஆயத் தமாக'' இருக்கும் வகையில் தற்காப்புச் சக்தியை பலப்படுத்து வதை அது முக்கியமாகக் கருதுகிறது. சோவியத் யூனியனின் பொருளாதார, இராணுவச் சக்தியை அதிகப்படுத்துவது சோவியத் நாட்டில் கம்யூனிஸத்தையும் சோதர நாடுகளில் சோஷலிஸத்தையும் நிறுவுவதற்குச் சிறந்த நிலைமைகளை உத்தரவாதப்படுத்தும்.

இவ்வாருக, சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் உள் நாட்டுக் கொள்கையும் வெளி நாட்டுக் கொள்கையும் கம்யூனி ஸக் கட்டுமானத்தின் நலன்களுக்கும் உலக சமாதானத்தையும் மக்களின் பாதுகாப்பையும் நிலைநிறுத்துவதற்கும் வலுப்படுத் துவதற்கும் தொண்டாற்றுகின்றன. இந்தக் கொள்கைகள் மிகப் பெருத்த சர்வதேச முக்கியத்துவம் கொண்டிருக்கின்றன.

# முடிவுரை

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் ஒரு நூற்றுண்டுக்கு மேற்பட்ட காலமாக நிலவி வருகிறது. இந்தக் காலப்பகுதியில் அது ஆழ்ந்த நடைமுறைச் சோதனைக்கு ஈடுகொடுத்திருக்கிறது. தனது அடிப்படைக் கருத்துக்கள் சரியானவை என்பதை அது நிருபித்துவிட்டது. தனது மகத்தான புரட்சிகர மாற்றியமைப்புச் சக்தியை அது காட்டிவிட்டது. மனிதகுலத்தின் மிக முற்போக்குள்ள சக்திகளின் முன்னணி விஞ்ஞானப் பிரபஞ்சக் கண்ணேட்டமாக அது விளங்குகிறது.

நாம் ஏற்கனவே பார்த்ததுபோல, திட்டவட்டமான சமுதாயக் காரணங்களின் விளைவாகவும் விஞ்ஞான, தத்துவ வளர்ச்சியின் விளைவாகவுமே இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் தோன்றியது. கார்ல் மார்க்ஸும் பிரெடெரிக் எங்கெல்ஸும் சமூக வாழ்வை ஆழ்ந்து பகுத்தாராய்ந்தார்கள். இயற்கை விஞ்ஞானம், சமூக விஞ்ஞானம், தத்துவம் ஆகிய துறைகளில் தமக்கு முன்னர் பெறப்பட்டிருந்தவற்றைப் பற்றி விமர்சன நோக்குடன் மீண்டும் ஆலோசனை செய்து அவற்றில் மதிப்புள்ளவற்றை எல்லாம் சுவீகரித்துக் கொண்டார்கள். அவர்களால் இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் படைக்கப்பட்டது தத்துவத்தில் புரட்சிகரமான அடிப்படை மாற்றத்தை, அதன் வளர்ச்சியில் பண்பு வகையில் புதிய கட்டத்தைக் குறித்தது.

இந்த அடிப்படை மாற்றத்தின் தன்மை முதன்மையாக எதில் அடங்கியுள்ளது என்ருல், இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் தோன்றியதும் யாவற்றிலும் முன்னணி

வர்க்கமான பாட்டாளி வர்க்கத்துக்குக் கருத்து ஆயுதம் கிடைத்துவிட்டது என்பதே. தொழிலாளி வர்க்கத்தினதும் அதன் முன்னணிப் படையான கம்யூனிஸ்ட் கட்சியினதும் புரட்சி நடவடிக்கைகளுக்குச் சித்தாந்த அடிப்படையாக விளங்கு கிறது மார்க்ஸீயத் தத்துவம்.

இயக்க இயல்-பொருள்முதல்வாதப் பிரபஞ்சக் கண்ணோட் டம் ருஷ்ய, சர்வதேசப் பாட்டாளி வர்க்கத் தலைவர் வி. இ.லெனி னால் புதிய படிக்கு உயர்த்தப்பட்டது. ஏகாதிபத்தியம், சோஷலிஸ, தேசீய விடுதலைப் புரட்சிகள் ஆகியவற்றின் சகாப் தத்தில் பாட்டாளி வர்க்கத்தின் புரட்சி நடைமுறையை அவர் பொதுமைப்படுத்தினார். இயற்கை விஞ்ஞானங்களுடைய நவீன விவரங்களின் பொதுமைப்பாட்டை அடிப்படையாகக் கொண்டு இயக்க இயல் பொருள்முதல்வாதத்தைப் படைப்புத் தன்மையுடன் விரிவுபடுத்தினார். இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தை பூர்ஷ்வாத் தத்துவவாதிகள், திரிபு வாதிகள் ஆகியோரின் தாக்குதல்களிலிருந்து காத்தார்.

மனிதர்களின் பல நூற்றாண்டுக்காலச் செயல்கள் யாவற்றி னுடையவும் விளைவுகள் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் விதிகளிலும் வகைப்பிரிவுகளிலும் அடர்வான வடிவில் அடங்கியுள்ளன. எனவே இயக்க இயல் , வரலாற்றுப் பொருள் முதல்வாதத்தின் அடிப்படைக் கருத்துக்களைச் சித்தாந்தத்தி லும் நடைமுறையிலும் படைப்புத் தன்மையுடன் பயன்படுத் தும் திறன் விஞ்ஞானத்திலும் சமூக வாழ்விலும் கோட்பாடு வகைப்பட்ட தவறுகள் நேர்வதைத் தவிர்க்கிறது, ஒரு அல்லது மற்றொரு விஞ்ஞானக் கண்டுபிடிப்பின் தத்துவ முக்கியத்து வத்தைத் தெளிவாக அறிந்துகொள்ளவும், ஒரு அல்லது மற்றொரு வகை அரசியல் மாற்றங்களைச் சரியாக மதிப்பிடவும் உதவுகிறது.

இயற்கைச் செயல்முறைகளின் இயக்க இயல் தன்மை பற்றி மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் சித்தாந்த வரையறுப் புக்கள் இயற்கை விஞ்ஞானங்களின் வளர்ச்சி அனைத்தினாலும் உறுதிப்படுத்தப்படுகின்றன. இயற்கையை விஞ்ஞானரீதியாக அறிவதற்கான விதிமுறைகள் பற்றியும், இயற்கையின் மரு மங்களை உட்புகுந்து தெரிந்துகொள்ளவும் அதன் ஆற்றல்களைச் சமூகத்தின் நலன்களுக்காகப் பயன்படுத்தவும் மனிதனுக்கு உள்ள வாய்ப்புக்கள் பற்றியும் இயக்க இயல் பொருள்முதல்

வாதத்தின் முடிவுகள் எல்லா நடைமுறைச் செயல்களுக்கும் முதல்தர முக்கியத்துவம் உடையவை. பொருள்கள் செயல்முறைகளின் மாறுதலேயும் வளர்ச்சியையும் ஆராய்வதற்கும், அவற்றுக்கு இயல்பான முரண்பாடுகளே வெளிப்படுத்துவதற்கும் வழிகாட்டுவதன் வாயிலாக மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் இந்தப் பொருள்கள், செயல்முறைகளின் தன்மையை உட்புகுந்து அறிய உதவுகிறது.

மார்க்ஸீயத் தத்துவம் சமூக வளர்ச்சிக்கு உரிய புறநிலே விதிகளே அறியும் வழிகளேக் காட்டுகிறது. பொருளியல் உற்பத்தி, சமுதாய-பொருளாதார உறவுகள், தொழில்நுட்பவியல், பண்பாடு ஆகியவற்றின் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளேக் கண்டறியவும் சமூகத்தைப் புரட்சிகரமாக மாற்றி அமைப்பதற்கான சாதனங்களேத் தேடிப் பெறவும் அது உதவுகிறது. மார்க்ஸீயத் தத்துவத்தின் உறுப்புப் பகுதியான வரலாற்றுப் பொருள்முதல்வாதம் இயற்கையான வரலாற்று நிகழ்முறை என்ற வகையில் சமூக வாழ்வை ஆராயும் விஞ்ஞானமாக இருக்கிறது. எனவே அது சமூகம் பற்றிய மற்ற எல்லா விஞ்ஞானங்களுக்கும் சித்தாந்த, ஆராய்ச்சிமுறை இயல் அடிப்படையாகப் பயன்படுகிறது.

இயற்கையினதும் சமூகத்தினதும் வளர்ச்சிக்கு உரிய விதிமுறைகளேச் சரியாகப் பிரதிபலிக்கும் இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம், முதலாளித்துவத்துக்கு எதிராக, கம்யூனிஸக் கட்டுமானத்தின் பொருட்டு, கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் தொழிலாளி வர்க்கம் நடத்தும் போராட்டத்துக்குத் தத்துவ அடிப்படையாக விளங்குகிறது. முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குப் பரிணமிப்பை முக்கிய உள்ளடக்கமாகக் கொண்டது தற்போதையச் சகாப்தம். இது, சோஷலிஸப் புரட்சிகளும் தேசீய விடுதலேப் புரட்சிகளும் நிகழும் சகாப்தம். அகில உலகப் பரிமாணத்தில் சோஷலிஸமும் கம்யூனிஸமும் வெற்றி அடையும் சகாப்தம். இந்தச் சகாப்தத்துக்குச் சித்தாந்த ரீதியில் யாவற்றிலும் அதிகமாகப் பொருந்துகிறது இயக்க இயல்-பொருள்முதல்வாதக் கண்ணேட்டம். அகநிலே வாதமும் குதர்க்கவாதமும் வறட்டுச் சித்தாந்தங்களும் தப்பெண்ணங்களும் அதற்கு ஒவ்வாதவை. தற்காலச் சமூகத்தின் வளர்ச்சியை, சர்வாம்ச ரீதியாக , திட்டவட்டமான விஞ்ஞான நோக்கில் பகுத்தாராய்வது அதற்கு அவசியம். உண்மைக்கு

விஞ்ஞான ரீதியான ஒரே அளவுகோல் புரட்சி நடைமுறையே என மார்க்ஸீயத் தத்துவம் கருதுகிறது.

உலகப் புரட்சிகரத் தொழிலாளர் இயக்கமும் தேசிய விடுதலை இயக்கமும், சோஷலிஸம், கம்யூனிஸம், இவற்றின் கட்டுமான நடைமுறையும் புதிய பிரச்சினைகளைத் தோற்றுவிக்கின்றன. இவற்றைப் பயனுள்ள வகையில் செப்பமாகச் சித்தாந்த முறையில் ஆய்ந்து நடைமுறையில் தீர்ப்பது மார்க்ஸீய-லெனினீயத்தின் திண்ணமான அடிப்படையில்தான் இயலும். சர்வதேசத் தொழிலாளர் இயக்கம் அனைத்தும் அடைந்துள்ள முன்னேற்றங்களும் மார்க்ஸீய-லெனினீயக் கட்சிகள் பெற்றிருக்கும் வெற்றிகளும் சோவியத் யூனியனும் பிற சோஷலிஸ நாடுகளும் அடைந்துள்ள நிறைவேற்றங்களும் இதற்குச் சான்று பகர்கின்றன.

சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் அனுபவம் சிறப்பாகப் பெருத்த முக்கியத்துவம் உடையது. முதலாளித்துவத்துக்கு எதிரான போராட்டம், பாட்டாளி வர்க்கப் புரட்சியின் நிறைவேற்றம், சோஷலிஸம், கம்யூனிஸம், இவற்றின் கட்டுமானம் ஆகியவற்றின் நிலைமைகளில் மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் படைப்புத் தன்மையுடன் கையாளப்படுவதற்கும் விரிவாக்கப்படுவதற்கும் ஒளிவீசும் உதாரணமாகத் திகழ்கின்றன அதன் செயல்கள். உலகக் கம்யூனிஸ இயக்கத்தின் முன்னணிப் படைப்பிரிவு என்ற வகையில் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சியின் பாத்திரத்தையும் பெருமதிப்பையும் கட்சியின் 23 வது காங்கிரஸில் *(1966)* சோதரக் கட்சிகளின் பிரதிநிதிகள் தங்கள் சொற்பொழிவுகளில் வலியுறுத்தினார்கள்.

இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல்வாதத் தத்துவம் சிறந்த முறையில் சர்வாம்ச ரீதியாக உறுதிப்படுத்தப்பட்டிருக்கிறது. முதலாளித்துவ அமைப்பு வாழ்ந்து தீர்ந்துவிட்டது, முன்னணிப் புரட்சிச் சக்திகளின் தாக்குதலுக்கு எதிர் நிற்க மாட்டாமல் அது சோஷலிஸத்துக்கு வழி விட்டுவிடும் என்ற வரலாற்றுப் பொருள்முதல்வாதத்தின் முடிவுகள் சரியானவை என்பதற்கு வரலாற்று வளர்ச்சியின் போக்கு முழுவதும் சான்றாக விளங்குகிறது.

முதலாளித்துவத்தினதுபொதுநெருக்கடியின்தற்போதையக் கட்டம் பூர்ஷ்வா அரசியல், கொள்கைவாதம் ஆகியவற்றின் நெருக்கடியிலும் பிரதிபலிக்கிறது. தத்துவமும் சமூக இயலும்

கூட இந்த நெருக்கடிக்கு உள்ளாகி இருக்கின்றன. பூர்ஷ்வாத் தத்துவத்துக்கும் சமூக இயலுக்கும் நேர்ந்துள்ள நெருக்கடி தற்செயல் நிகழ்ச்சி அல்ல. வரலாற்று அரங்கிலிருந்து வெளியேறிவிட்ட வர்க்கம் விஞ்ஞான அடிப்படை கொண்ட பிரபஞ்சக் கண்ணோட்டத்தை உருவாக்கவும் வரலாற்று நிகழ்ச்சி களின் போக்கைச் சரியாக மதிப்பிடவும் வாழ்க்கையால் எழுப்பப்படும் கேள்விகளுக்கு விடை அளிக்கவும் திறன் அற்றது.

தற்காலச் சமூகத்தில் பூர்ஷ்வா வர்க்கத்தின் எதார்த்த நிலைமை, முதலாளித்துவம் சாசுவதமானது என்பதைப் பிர மாணப்படுத்தவும் மக்கள் விரோத ஏகாதிபத்தியக் கொள்கை யை நியாயப்படுத்தவும் தேவையான சாதனங்களைத் தேடு மாறு அதன் கொள்கைவாதிகளை நிர்ப்பந்திக்கிறது. ஏகபோக ஸ்தாபனங்களின் ஆதிக்கத்தைக் கருத்துவகையில் பிரமாணப் படுத்துதல், சுறண்டலை நியாயப்படுத்துதல், சமூகச் சொத் துரிமையையும் கூட்டுத்துவத்தையும் இகழ்தல், சைனியவாதத் தையும் யுத்தத்தையும் புகழ்தல், காலனியாட்சி முறையையும் மானிட இனவெறியையும் நியாயப்படுத்துதல், மக்களினங்களுக் கிடையே பகைமையையும் வெறுப்பையும் மூட்டிவிடுதல்—இத்தகைய கருத்துக்களாலேயே தற்கால பூர்ஷ்வா வர்க்கத்தின் அரசியல், பொருளாதாரச் சித்தாந்தங்களும் தத்துவமும் சமூக இயலும் ஒழுக்க நெறி இயலும் அழகியலும் நிறைந்து ததும்புகின்றன.

உழைப்பாளி மக்களின் கண்களுக்குக் கொஞ்சமாவது கவர்ச்சி உள்ளவையாகப் படும் ஆதர்சங்களும் மதிப்புக்களும் முதலாளித்துவ எதார்த்தத்தில் அறவே இல்லை. எனவேதான் கம்யூனிஸக் கருத்துக்களின் வளர்ந்துவரும் செல்வாக்கை எதிர்த் துப் போராடுவதற்கான ஒரே வழி கம்யூனிஸ்ட் கட்சிகளையும் சோஷலிஸ நாடுகளையும் அவற்றின் நோக்கங்களையும் கொள் கையையும் பழிதூற்றுவதும் மார்க்ஸீய-லெனினீயத்தைத் திரித்துக் காட்டுவதுமே என்று ஏகாதிபத்திய பூர்ஷ்வா வர்க்கம் கருதுகிறது. ஏகாதிபத்திய பூர்ஷ்வா வர்க்கக் கொள்கைவாதி களின் பிரதான முனைமுகமாக விளங்கும் கம்யூனிஸ எதிர்ப்பின் ஆயுதக்கிடங்கில் இருப்பவை இந்த எல்லா உபாயங்களுமே. கம்யூனிஸ எதிர்ப்புக் கொடியின் கீழ் தற்போது எல்லாப் பிற்போக்குச் சக்திகளும் ஒன்றிணைந்து வருகின்றன. தற்காலப்

பிற்போக்கு பூர்ஷ்வாத் தத்துவவாதிகளும் சமூக இயலாரும் கம்யூனிஸப் பிரபஞ்சக் கண்ணோட்டத்தையும் அதன் தத்துவ அடிப்படையான இயக்க இயல், வரலாற்றுப் பொருள்முதல் வாதத்தையும் பித்தலாட்டம் செய்வதில் தனித் தேர்ச்சி பெற்று வருகிறார்கள்.

பூர்ஷ்வாத் தத்துவத்திற்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியின் அறிகுறிகளில் ஒன்று அதில் ஏராளமான பிரிவுகளும் போக்குக் களும் நிலவுவது ஆகும். இந்தப் போக்குக்களின் பல்வகைப் பாட்டைத் தத்துவச் சிந்தனையின் ''சுதந்திரம்'' என்று காட்ட பூர்ஷ்வாக் கொள்கைவாதிகள் முயல்கிறார்கள். ஆனால் இது போலிச் சுதந்திரம். பூர்ஷ்வாச் சமூகத்தில் அரசியல், ஆன் மீக வாழ்வின் தொகுப்பு அனைத்துமே ஆளும் வர்க்கங்களின் நிலைகளை நியாயப்படுத்தும் சித்தாந்தங்களைத் தயாரிக்கும்படி தத்துவவாதிகளை நிர்ப்பந்திக்கிறது. மார்க்ஸீயத்துடன் ''பயன் விளைக்கும் போட்டி'' நடத்துவதற்கு ஏற்ற வழி வகைகளைத் தேடுமாறு ஏகபோக பூர்ஷ்வா வர்க்கம் அவர்களைக் கட்டாயப் படுத்துகிறது.

தத்துவ நோக்குக்களின் பல்விதம் முதலாளித்துவச் சமூகத் தின் வெவ்வேறு படிவுகளது நலன்கள் வித்தியாசப்படுவதை யும் மொத்தத்தில் பூர்ஷ்வாத் தத்துவம் கருத்துச் சிதறலுக் கும் ஒழுங்கீனத்துக்கும் உள்ளாகியிருப்பதையும் மார்க்ஸீய விஞ்ஞானத் தத்துவத்துக்கு எதிராக ஓரளவு முழுமையான எதையும் வைக்க அது திறனற்றிருப்பதையுமே காட்டுகிறது. வி. இ. லெனின் எழுதினார்: ''தத்துவக் கருத்துமுதல்வாதத்தின் விதங்களுக்கு இடையே... ஆயிரம் கருத்துச் சாயல்கள் இருக்க முடியும். ஆயிரத்து ஒன்றாவது கருத்துச் சாயலை உரு வாக்குவது எப்போதும் சாத்தியம். இம்மாதிரி ஆயிரத்து ஒன் றாவது கோவையைத் தொகுத்தவனுக்கு... மற்றவற்றிலிருந்து அதற்கு உள்ள வேறுபாடுகள் முக்கியமானவையாகத் தோன்றலாம். பொருள்முதல்வாதத்தின் நோக்கில் இந்த வேறு பாடுகள் முற்றிலும் அற்பமானவை.''[1]

பொருள்முதல்வாதத்துக்கும் இயக்க இயல்வாதத்துக்கும் எதிராகக் கடும் போராட்டம் நடத்துதல் இடைக்காலத்திய

---

[1] வி. இ. லெனின். முழு நூல்திரட்டு, தொகுதி 18, பக்கம் 284.

மதச்சார்புள்ள தத்துவ ஆராய்ச்சியை மீண்டும் உயிர்ப்பித்தல், மாருநிலைவாதச் சிந்தனை முறையையோ வெளிப்படையான பகுத்தறிவுப் புறம்புக் கொள்கையையோ இழுத்துவருதல், இவை தற்கால பூர்ஷ்வாத் தத்துவத்துக்கு இயல்பானவை.

தற்கால பூர்ஷ்வாத் தத்துவத்தின் செல்வாக்குள்ள போக்குக்களில் ஒன்று **நவதாமஸீயம்**. கத்தோலிக்கச் சர்ச்சின் அதிகார பூர்வமான தத்துவமாக விளங்கும் இது, தலைசிறந்த இடைக்கால இறை இயலார் தாமஸ் அக்வைனஸினுடைய போதனையின் மறுவுயிர்ப்பு ஆகும். இடைக்காலத்திய முன்னேற்ற எதிர்ப்புக்கு இவ்வாறு புத்துயிர் அளிக்கப்பட்டிருப்பதற்குக் காரணம் மடியும் தறுவாயிலிருக்கும் முதலாளித்துவம் மத மனப் பாங்கைப் பயன்படுத்த முயல்வதே. இந்த மனப்பாங்கு முதலாளித்துவ நாடுகளில் இன்னும் தீவிரமாக இருக்கிறது. சோஷலிஸத்திற்காகத் திரளான மக்கள் நடத்தும் புரட்சி இயக்கத்துக்கும் மார்க்ஸீயத் தத்துவத்தின் மிகுந்துவரும் செல்வாக்குக்கும் எதிரான போராட்டச் சாதனமாக இது கையாளப் படுகிறது. எனவே, நவதாமஸீயம் தாமஸ் அக்வைனஸினது போதனையின் மீட்டுரையாக மட்டும் இன்றி, பூர்ஷ்வாக் கொள் கைவாதிகளின் முன் நிற்கும் தத்துவ, அரசியல், பொருளாதாரப் பிரச்சினைகளுடன் வறட்டு மதச் சூத்திரங்களின் இணைவாகவும் விளங்குகிறது.

கத்தோலிக்கச் சர்ச்சின் தத்துவச் சித்தாந்தவாதிகள் [ஜாக் மரிட்டேன் (*Jacques Maritain*), எத்தியேன் ஜில்ஸோன் (*Etienne Gilson*), இஒஸெப் பொஹேறன்ஸ்கிய் (*Joseph Bochenski*), குஸ்தாவ் வெத்தேர் (*Gustav Wetter*) முதலியோர்] பின்வரும் நோக்கங்களை நிறைவேற்றப் பெரு முயற்சிகள் செய்துவருகிருர்கள்: முதலாவதாக, மத நம்பிக்கைக்கும் பகுத்தறிவுக்கும் ''ஒருங்கிசைவு'' ஏற்படுத்தல்—உண்மையில் இது விஞ்ஞானத்தை மதத்துக்கு அடிப்படுத்துவதையே குறிக்கிறது; இரண்டாவதாக, இயற்கை விஞ்ஞான விவரங்களை மாருட்டம் செய்து திரித்து, இயக்க இயல் பொருள்முதல்வாதத்தின் அடிப்படைப் பிரபஞ்சக் கண்ணோட்ட வரையறுப்புக்களைத் ''தவறு என நிரூபிக்கும்'' நோக்கத்துடன் இந்தத் திரிக்கப்பட்ட விவரங்களை அதற்கு எதிர் நிறுத்துதல்.

நவதாமஸீயவாதிகள் தங்கள் தத்துவத்தில மதக் கோட் பாடுகளை முதல் இடத்தில் வைக்கிருர்கள். விஞ்ஞானம் இந்தக்

கோட்பாடுகளைச் சார்ந்திருக்க வேண்டும் என்பது அவர்கள் கருத்து. ''தூய இருத்தல்'' அல்லது கடவுள் என்னும் ''உச்ச எதார்த்தம்'' அவர்களால் தோற்றத் தொடக்கமாகக் கொள்ளப்படுகிறது. நவதாமஸீயவாதிகளின் கருத்துப்படி காலத்துக்கும் இடத்துக்கும் வெளியே நிலவும் இந்தத் ''தூய இருத்தல்'' புலன்களால் அறியப்படக்கூடிய எதார்த்தத்தை, அதாவது இயற்கையை, படைக்கிறது. இயற்கை இட வரம்புக்கு உட்பட்டது. கடவுளால் விதிக்கப்படும் காலப்பகுதியில் அது நிலவுகிறது.

இவ்வாறாக, இருத்தலின் ஆதிகாரணமும் சாரமும் சடப் பொருளின் படைப்பாளியும் கடவுளே என்ற இடைக்கால இறை இயலாரின் கட்டுக்கதைகளையே நவதாமஸீயவாதிகள் திருப்பிக் கூறுகிறார்கள். பிரபஞ்சத்தின் தொடக்கத்தையும் முடிவையும் பற்றிய அபத்தமான எண்ணத்தைச் சுமத்துகிறார்கள். அவர்களது அபிப்பிராயப்படி, எல்லாம் குறிப்பிட்ட நோக்கங்களுக்காகக் கடவுளால் படைக்கப்பட்டுள்ளன. விஞ்ஞானத்தால் நிலைநாட்டப்பட்டுள்ள விதிகளும்கூட ஈசுவர சித்தத்தினுடைய செயலின் விளைவும் வெளிப்பாட்டினுடைய வடிவங்களுமே. பிரபஞ்சத்தில் யாவும் பிரயோஜனத்தைக் கருதியே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன என்றும் இயற்கையின் விதிகள் முன்னரே நிலைநாட்டப்பட்டுள்ள ஒருங்கிசைவே, ''விவேகம் பொருந்திய ஒழுங்கே'' என்றும் நவதாமஸீயவாதிகள் சொல்லுகிறார்கள்.

மத நம்பிக்கைக்கும் பகுத்தறிவுக்கும் இடையே ''ஒருங்கிசைவு'' பற்றி நவதாமஸீயவாதிகள் உருவாக்கியுள்ள கோட்பாடு அறிதல் சித்தாந்தத்திலும் கடைப்பிடிக்கப்படுகிறது. மனிதனது பகுத்தறிவு இருத்தலின் மர்மங்களை உட்புகுந்து காண்பதற்கான வரம்புகள் மதநம்பிக்கையால் வரையறுக்கப்பட்டுள்ளன என்று வலிந்துரைக்கிறார்கள் புதிய இறை இயலார். விஞ்ஞான அறிவு கீழ்ப் படி ஆகும். அதற்கு மேல் உயர்ந்து விளங்குகிறது தத்துவ ஞானம். கடவுளின் இருத்தலைத் தத்துவ ஞானம் நிரூபிக்க வேண்டும். நவதாமஸீயவாதிகளின் நோக்கின்படி விஞ்ஞானமும் தத்துவமும் மதத்துக்குத் தொண்டாற்றக் கடமைப்பட்டவை. திரு மறைகள் சரியானவை என்பதையும், புலனுணர்ச்சிகளுக்கு அப்பாற்பட்ட, மாயாவாதத்தன்மை கொண்ட ஒன்றின் மீது நம்பிக்கையையும் உறுதிப்படுத்தும்

வாதங்களை அவை தேடிக்காண வேண்டும், வறட்டு மதச் சூத்திரங்களுக்கு முரண்படுபவை எல்லாம் நிராகரிக்கப்பட வேண்டும்.

சமூக வாழ்வு குறித்த நவதாமஸீயவாதிகளின் நோக்குக்கள் மட்டுமீறித் தீங்கானவையும் பிற்போக்கானவையுமாக உள்ளன. இயற்கையில் போலவே சமூகத்திலும் எல்லாம் கடவுள் கோட்பாட்டினுல் முன்னரே நிர்ணயிக்கப்பட்டுள்ளன என்கிருர்கள் அவர்கள். சமூகத்தின் வரலாறு என்பது கடவுளால் முன்விதிக்கப்பட்டதற்கு உட்பட்ட சமுதாய நிகழ்ச்சிகளின் தொடர்தான். உடைமையாளர்களுக்கும் உடைமை அற்றவர்களுக்கும் இடையே நிலவும் சமுதாய அசமத்துவத்தையும் எதிர்நிலைகளையும் நவதாமஸீயவாதிகள் சாசுவதமானவையாகக் கருதுகிருர்கள். வர்க்க முரண்பாடுகளை மூடிமறைத்தும் சுறண்டுவோர் சமூகத்தில் நலன்களின் ஒருங்கிசைவும் பொதுமையும் நிலவுவதாகப் பொய்யாகப் பறைசாற்றியும் நவதாமஸீயவாதிகள் வர்க்கச் சமாதானத்தையும் தனியார் சொத்துரிமையின் நிரந்தரத் தன்மையையும் பற்றி எழுதுகிருர்கள்.

வரலாற்று வளர்ச்சியின் மாற்ற முடியாத தர்க்கம் முதலாளித்துவத்தின் அழிவு தவிர்க்க முடியாதது என்பதைக் காட்டுகிறது. ஆனுல் பூர்ஷ்வா வர்க்கத்தினுடையவும் பூர்ஷ்வா அறிவுஜீவிகளுடையவும் வர்க்க நிலை, நிகழும் சமுதாய மகாற்றங்ளின் சாராம்சத்தைச் சரியாக மதிப்பிட அவர்களுக்கு இடந்தருவதில்லை. புரட்சிகர மாற்றங்களை அவர்கள் அஞ்சுகிருர்கள். சுறண்டுவோர் சமூகத்தினுடையவும் தனியார் சொத்துரிமையினுடையவும் அடிப்படைகள் நிலைகுலைவதை அவர்கள் குழப்பம் என்றும் கட்டுக்கடங்காத இயற்கைச் சக்திகளின் செயல் என்றும் எண்ணுகிருர்கள். குறிக்கோள்களும் வருங்கால வாய்ப்புக்களும் இன்மை அவர்களுக்குச் சோர்வையும் திகிலையும் நிராசையையும் உண்டுபண்ணுகிறது. முதலாளித்துவ சமூகத்தின் விதியில் அவநம்பிக்கை கொண்டுள்ள தற்கால பூர்ஷ்வா வர்க்க, பூர்ஷ்வா அறிவுஜீவிப் பகுதியினரின் இந்த மனநிலைகள் நிலவுகைக் கொள்கைத் தத்துவத்தில் பிரதிபலிக்கின்றன.

நிலவுகைக் கொள்கை என்பது மனிதனது நிலவுகை பற்றிய மர்மங்களை வெளிப்படுத்துவதாக உரிமை கொண்டாடும் கருத்துமுதல்வாதத் தத்துவம் ஆகும். இந்த பூர்ஷ்வாத் தத்துவப் போக்கின் மூலப்பெயர் எக்ஸிஸ்டென்ஷியலிஸம் என்பது

''நிலவுகை'' எனப் பொருள்படும் ''எக்ஸிஸ்டென்ஷியா'' என்ற லத்தீன் சொல்லின் அடியாகப் பிறந்தது. கப்ரியேல் மர்ஸேல் (*Gabriel Marcel*) கார்ல் யாஸ்பெர்ஸ் (*Karl Jaspers*), மார்ட்டின் ஹைடெக்கர் (*Martin Heidegger*) முதலியவர்கள் நிலவுகைக் கொள்கையின் முக்கியப் பிரதிநிதிகள் ஆவர்.

மதச் சார்புள்ளது, நாஸ்திகத்தன்மை கொண்டது என நிலவுகைக் கொள்கையில் இரு விதங்கள் உள்ளன. இந்த இரு போக்குக்களுமே தத்துவப் பிரச்சினைகளை ஆராய்கையில் அக நிலைக் கருத்துமுதல்வாதம், அறியொணுமைக் கொள்கை ஆகியவற்றின் நோக்குக்களை மேற்கொள்கின்றன. தத்துவத்தின் பிரதானப் பிரச்சினைக்கு நிலவுகைக் கொள்கையினரின் தீர்வு பின்வரும் அடிப்படைக் கருத்தில் சூத்திரப்படுத்தப்படுகிறது: நிலவுகை தன்மைக்கு முன் நிகழ்கிறது. தத்துவத்தின் அறிதலுக்கு உரிய விஷயமாக விளங்குவது புறநிலை உலகம் அல்ல, மனித இருத்தலே, தனி நபரின் நிலவுகையே என்பதை ஆதாரமாகக் கொண்டு நிலவுகைவாதிகள் இந்த அடிப்படைக் கருத்தை விளக்குகிறுர்கள். அவர்களது கருத்துப்படி மனித நிலவுகை என்ற கருதுகோள் எல்லையின்றி விரிவானது, எல்லாவற்றையும் உள்ளடக்கியது. அதுதான் அவர்களுடைய தத்துவத்தின் ''மர்மம்'' ஆகும்.

நிலவுகை என்பதை நிலவுகைக் கொள்கையினர் எப்படி அர்த்தப்படுத்திக்கொள்கிறுர்கள்? நிலவுகை என்பது இடவெளியிலும் காலத்திலும் மனிதனது புறநிலையான நிலவுகை அல்ல. மனிதனுடைய அனுபவங்கள், உணர்ச்சிகள், மனநிலைகள் ஆகியவற்றின் பெருக்கு, அதாவது அவனுடைய அக வாழ்வு எவற்ருல் ஆனதோ அவை அனைத்துமேதான். நிலவுகையைத் துல்லியமான வரையறுப்புக்களின் தொகுப்புக்கு உட்படுத்த முடியாது, அது விஞ்ஞானத்துக்கு ஆதீனமானது அல்ல, பகுத்தறிவின் முயற்சிகளுக்கு அது வளைந்து கொடுக்காது என்று வலிந்துரைக்கிறுர்கள் நிலவுகைக் கொள்கையினர். வேறு விதமாகச் சொன்னுல், நிலவுகைக் கொள்கையினர் தாமே ஒப்புக்கொள்கிறபடிக் கூட, நிலவுகை என்பது பகுத்தறிவுக்குப் புறம்பான அடிப்படை. உள்ளுணர்வாலோ, திருவெளிப்பாட்டாலோ மட்டுமே அதைத் தெரிந்துகொள்ள முடியும்.

நிலவுகைக் கொள்கையினரின் போதனைப்படி தன்மை என்பது நிகழ்ச்சிகள், பொருள்கள், சம்பவங்கள் ஆகியவற்றின்

பிரபஞ்சம். தன்மை நிலவுகையிலிருந்தே தோன்றுகிறது. அதாவது, தனிநபரின் அக, மனக்கிளர்ச்சி, ஆன்மீக வாழ்வாலேயே அது தோற்றுவிக்கப்படுகிறது. இவ்வாறு, நிலவுகைக் கொள்கையினர் தத்துவத்தின் அடிப்படைப் பிரச்சினைக்கு அப்பட்டமான அகநிலைக் கருத்துமுதல்வாதப் பாங்கிலேயே தீர்வு காண்கிறார்கள்.

வெளிப் பிரபஞ்சத்தின் எதார்த்தத்தையும் புறநிலை விதிமுறைகளையும் மறுப்பதன் வாயிலாக நிலவுகைக் கொள்கையினர் புறநிலை உண்மையையும் மறுக்கிறார்கள். உண்மையைக் கண்டுபிடிப்பதற்கான கருவி என்ற வகையில் பகுத்தறிவு முற்றிலும் தகுதி அற்றது என்று அவர்கள் எண்ணுகிறார்கள். அவர்களது அபிப்பிராயப்படி மனித இருத்தலின் தன்மை சிந்தனைக்கு எட்டாதது. உச்ச எல்லை நிலைமைகள் எனப்படுபவற்றில் மட்டுமே உள்ளுணர்வின் வாயிலாக அது புலப்படுகிறது. மரண அபாயம், நோய், விபத்து முதலியவை இத்தகைய நிலைமைகள்.

நிலவுகைக் கொள்கையினரின் கருத்துப்படி புறநிலை உண்மை இல்லை, நம்பகமான ஞானம் இல்லை ஆதலால், தானே உண்மையைப் ''படைக்க'' ஒவ்வொரு மனிதனும் உரிமை உள்ளவன். மனிதன் எவ்வளவு குறைவாக அறிகிறானோ அவ்வளவு அதிகச் சுதந்திரத்துடனும் வெற்றிகரமாகவும் அவன் உண்மையைப் படைக்கிறான். இவ்வாறு கூறுவது, அறியொணாமைக் கொள்கை, பகுத்தறிவுப் புறம்புக் கொள்கை ஆகியவற்றின் கடைக்கோடி வடிவங்களை, மனித அறிவின் வலிமையிலும் திறனிலும் அவநம்பிக்கையைப் பரப்புவதே ஆகும்.

வர்க்கக் காழ்ப்புக்களில் சிக்கிக்கொண்டிருக்கும் பூர்ஷ்வாத் தத்துவவாதிகள் பழைய, உளுத்துப்போன முதலாளித்துவ அமைப்பு தகர்ந்து சிதறுவதை நாகரிகத்தின் பொது அழிவு என்று, பண்பாட்டின் வீழ்ச்சி என்று வருணிக்கிறார்கள். அச்சமும் சோர்வும் மனிதனை எப்போதும் வதைப்பதாலும் அபாயங்களும் நோய்களும் மரணமும் பின்தொடர்வதாலும் எந்த விதமான சமுதாய மாற்றங்களும் மனிதனுடைய விதியைச் சுளுவாக்க முடியாது என்று அவர்கள் சொல்லுகிறார்கள்.

சமூகத்தில் மனிதன் தனித்துவம் அற்றவன், நிர்க்கதியானவன் என்றும் மனித இருத்தலின் வாய்ப்பு தற்செயல் நிகழ்ச்சிகளைச் சார்ந்துள்ளது என்றும், இவற்றுடன் போராடுவதிலே

யே மனிதனது வாழ்க்கை கழிகிறது என்றும் நிலவுகைக்கொள்கையினர் இடைவிடாது அழுத்திக் கூறிவருகிறார்கள். ஒவ்வொரு மனிதனும் தன்னைப் பாதுகாத்துக்கொள்வது பற்றியே கவலை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் தனது செயல்களின் பொருளையும் உள்ளடக்கத்தையும் அதற்கு ஏற்றவாறே நிச்சயித்துக் கொள்ள வேண்டும் என்றும் அவர்கள் வலிந்துரைக்கிறார்கள்.

இவ்வாறு நிலவுகைக் கொள்கை தனி நபரின் அகநிலை அம்சத்தை மிகைப்படுத்தி முழுமையாகக் காட்டுகிறது. தனி நபரின் தன்னுணர்வை வாழ்க்கையின் புறநிலை நிலைமைகளுக்கு எதிர் நிறுத்துகிறது. உண்மையிலோ, சமூகத்திலிருந்து வேறாக ஒதுங்கி நிலவும் மனிதன் எவனும் இல்லை. எதார்த்தச் சமூக இருத்தலிலிருந்து தனிப்படுத்தப்பட்ட அவனது அக ஆன்மீக உலகமும் எதுவும் இல்லை.

நிலவுகைக் கொள்கையினர் புறநிலையாகத் தாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், முதலாளித்துவ அடிமைத்தனத்துக்கு முன் பணிந்து போகும் கருத்தைப் பரப்புகிறார்கள். உலகைப் புரட்சிமூலம் மாற்றி அமைப்பது குறித்த உடனடியான பிரச்சினைகளையும், எதிர்நிற்கும் பிற தற்காலப் பிரச்சினைகளையும் தீர்ப்பதிலிருந்து மனிதனது கவனத்தை அப்பால் திருப்ப முயல்கிறார்கள். மனிதர்கள் சுறண்டப்படுவதையும் ஒடுக்கப்படுவதையும் அவர்களது துயரத்தையும் இன்மையையும் துன்பங்களையும் சித்திரவதைகளையும் பற்றி அவர்கள் பேசுகிறார்கள் என்றாலும், இந்த நிலைமைகள் பொதுவான எதார்த்தங்கள் என்றும், நிலையானவை என்றும், ஆதலால் மனிதர்களின் எந்த விதப் பிரயாசைகளாலும் இவற்றை மாற்ற முடியாது என்றும் நினைக்கிறார்கள்.

இந்தத் தத்துவத்தின் பிற்போக்குத் தன்மை தெட்டத் தெளிவானது. மனிதனைப் புகலற்ற நிலைமையில் தள்ளவும், ஆயுதமற்றவன் ஆக்கவும் மேலான வாழ்க்கை நிலைமைகளுக்காகப் போராடுவதன் பயனின்மையை நிரூபிக்கவும் அது முயல்கிறது.

நிலவுகைக் கொள்கைத் தத்துவக் கருத்துக்கள் முதலாளித்துவ நாடுகளின் இலக்கியத்திலும் கலையிலும் புகுந்துவருகின்றன. நம்பிக்கை இழந்துவிட்ட பூர்ஷ்வா அறிவுஜீவிகள், தனித்துவ மனநிலை கொண்ட ''கலகக்கார'' இளைஞர்கள், ஆகியோரிடையே இந்தத் தத்துவம் வெகுவாகப் பரவிவருகிறது. இத்தகைய

இளைஞர்கள் நிகழ்ச்சிகள் பற்றிய ''தங்களது'' மதிப்பீட்டையும் ''தங்களுடைய'' நடத்தை விதிகளையுமே எல்லாவற்றுக்கும் மேலாகக் கருதுகிறார்கள். எத்தகைய அளவுமானங்களையும் கோட்பாடுகளையும் மறுக்கிறார்கள். நிலவுகைக் கொள்கையினரால் பரப்பப்படும் சோர்வு மனப்பான்மையும் அவநம்பிக்கையும் நிறைந்த கொள்கைவாதத்தை எதிர்த்துப் போராடுவது மார்க்ஸீய-லெனினீயத் தத்துவத்தின் மிக முக்கியக் கடமைகளில் ஒன்றாக விளங்குகிறது.

பொருள்முதல்வாதத்தின் மீது தனது தாக்குதல்களில் பூர்ஷ்வாத் தத்துவம் தற்கால விஞ்ஞானத்தைப் பயன்படுத்த முயல்கிறது. இந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக அது விஞ்ஞானத்தின் விளைவுகளைக் கருத்துமுதல்வாதப் பாங்கில் திரிப்பதுடன் நின்றுவிடாமல் விஞ்ஞானமொத்த வடிவத்தை மேற்கொள்ளவும் தத்துவப் பிரச்சினைகள்பால் கண்டிப்பான விஞ்ஞான அணுகுமுறை போன்ற தோற்றத்தை ஏற்படுத்தவும் முயல்கிறது. தற்கால பூர்ஷ்வாக் கொள்கைவாதத்தில் ''விஞ்ஞானத்தின் ஆதரவாளி'' ஆகவும் ''மாறுநிலைவாதத்துக்கும் இறை இயல்வாதத்துக்கும் எதிரி'' ஆகவும் பணியை மேற்கொண்டிருக்கிறது புதுப்புலக்கொள்கை.

புதுப்புலக்கொள்கை (நவீனப் புலக்கொள்கை, தர்க்க முறைப் புலக்கொள்கை) என்பது அகநிலைக் கருத்துமுதல்வாதமும் அறியொணாமைக் கொள்கையும் கொண்ட போக்கு. தற்போதைய பூர்ஷ்வாத் தத்துவத்தில் மிக விரிவாகப் பரவியுள்ளது இது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முப்பதுக்களில் ஒகுஸ்ட் கோன்ட் (*Auguste Comte*) என்பவரால் தொடங்கப்பட்டு, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் எர்ன்ஸ்ட் மாஹ் என்பவராலும் அவரது பிரிவினாலும் முன்வைக்கப்பட்ட தத்துவப் பாதையையே இது தொடர்கிறது. இவ்வாறு, புலக்கொள்கையின் பரிணாமத்தில் மூன்றாவது கட்டமாக விளங்குகிறது புதுப்புலக்கொள்கை.

இங்கே ஒரு விஷயத்தைக் குறிப்பிடுவது அவசியம்: புதுப்புலக்கொள்கை முழுமையான தத்துவப் போக்கு அல்ல. வெவ்வேறான அனேகப் பிரிவுகளையும் குழுக்களையும் அது ஒன்றிணைக்கிறது. அதோடுகூட, அதன் அடிப்படைக் கருத்துக்களும் வரையறுப்புக்களும் விஞ்ஞான ஆதாரமற்றவை என்பது வெளிப்

பட்டுவிடவே கணிசமான மாறுதல்களுக்கு உள்ளாயின. ருடோல்ப் கர்னுப் (*Rudolf Carnap*), ஹான்ஸ் ரெய்ஹன்பாஹ் (*Hans Reichenbach*), பிலிப் பிரான்க் (*Philipp Frank*) முதலியோர் புதுப்புலக்கொள்கையின் முக்கியப் பிரதிநிதிகள் ஆவர்.

நவீனப் புலக்கொள்கை தர்க்கமுறைப் புலக்கொள்கை அல்லது மொழி இயல் புலக்கொள்கை எனப்படுகிறது. ஏனெனில் வழக்கமான மொழியையும் விஞ்ஞான மொழியையும் தர்க்கமுறை அல்லது மொழி இயல் பகுப்பாய்வின் மூலம் ''தெளிவுபடுத்துவது'' தான் தத்துவத்தின் கடமை என்று அது கருதுகிறது. கணிதம், பௌதிகம், மொழி இயல், கணிதத் தர்க்கம் முதலியவற்றின் முக்கிய விளைவுகளையும் பிரச்சினைகளையும் கருத்து முதல்வாத நோக்கில், தவருக விளக்குவதன் வாயிலாக விஞ்ஞானத்தின் நிறைவேற்றங்களை ''ஆதாரமாகக் கொள்ள'' முயல்வது புதுப்புலக்கொள்கைக்கே உரிய இயல்பாகும்.

தத்துவத்தின் பெரும்பாலான பிரச்சினைகள், அதன் அடிப்படைப் பிரச்சினை உள்பட, உண்மையில் மாருநிலைவாதத் தன்மை கொண்ட பிரச்சினைகளே, போலிப்பிரச்சினைகளே என்ற வலிந்துரை புதுப்புலக்கொள்கையின் அடிப்படை வரையறுப்புக்களில் ஒன்று. எனவே, புதுப்புலக்கொள்கையின்படி, சிந்தனைக்கும் இருத்தலுக்கும் உள்ள உறவையும் பிரபஞ்சத்தின் அறியப்படுந்தன்மை, இயற்கைக்கும் சமூகத்துக்கும் உரிய விதிகளின் புறநிலைத்தன்மை முதலியவற்றையும் பற்றிய பிரச்சினைகளில் தத்துவம் ஈடுபட வேண்டியதில்லை. ஏனெனில் இந்தப் பிரச்சினைகள் யாவும் விஞ்ஞான அர்த்தம் அற்றவை. ''தத்துவத்தை மாருநிலைவாதத்திலிருந்து அகற்றித் தூய்மைப்படுத்துவதற்கான'' வழிகள் குறித்த பிரச்சினைக்குப் புதுப்புலக்கொள்கையினர் முதலிடம் கொடுக்கிருர்கள். அறிவார்ந்த கூற்றுக்களை அறிவற்ற கூற்றுக்களிலிருந்து வேறுபடுத்த உதவக்கூடிய அளவுகோல்களைத் தத்துவம் தேடிக்காண வேண்டும் என்கிருர்கள் அவர்கள். அவர்களுடைய அபிப்பிராயப்படி குறிப்பிட்ட கூற்று அனுபவத்தால் உறுதிப்படுத்தப்பட முடிவதே இந்த அளவுகோல். ஒரு கூற்று அனுபவத்துக்குப் பொருந்தினுல் அது உண்மையானது.

புதுப்புலக்கொள்கையின் உண்மைக்கு உரிய அளவுகோலைப் புரிந்துகொள்வதற்கு, அனுபவம் என்று சொல்லும் போது அவர்கள் எதைக் குறிக்கிருர்கள் எனத் தெரிந்துகொள்வது அவசி

யம். புதுப்புலக்கொள்கையினுடைய பரிணமத்தின் வெவ்வேறு கட்டங்களில் அனுபவம் என்பதற்கு வெவ்வேறு விளக்கங்கள் தரப்பட்டன. சில வேளைகளில் உணர்வுவகைப்பட்ட விவரங்கள் என்றும் வேறு சில வேளைகளில் ''மெய்மைகள்'' என்றும் பின்னும் சில வேளைகளில் ''பதிவுப்பத்திர வாக்கியங்கள்'' என்றும் அது விளக்கப்பட்டது. ஆனல் எப்போதுமே அது அகநிலைப் பொருள்முதல்வாதப் பாங்கிலேயே வியாக்கியானம் செய்யப்பட்டது. உதாரணமாக மெய்மை என்பதற்குப் புதுப் புலக்கொள்கையினர் தனி நபரினுடைய உணர்வின் நிலைகள்—தனி நபரின் புலனுணர்ச்சிகள், உளப் பதிவுகள், எண்ணங்கள்—எனப் பொருள் கொண்டார்கள். அவர்களுடைய கருத்துப்படி இவை சிறப்பாகத் தனித்துவத் தன்மை கொண்டவை. பிற்பாடு ருடோல்ப் கர்னுப் வேருெரு விளக்கம் தந்தார். ''பதிவுப்பத்திர வாக்கியங்களில்'' குறிக்கப்படுவது என அனுபவத்தை அர்த்தப்படுத்திக்கொள்ள வேண்டும் என்றுர் அவர். இவையும் முந்தியவை போன்றே உணர்வு நிலைகள்தாம். ஒரே வித்தியாசம் இவை மொழியில் வெளியிடப்படுவை என்பதுதான்.

உண்மையிலோ, உணர்வு வகைப்பட்டதும் அனுபவ வகைப் பட்டதும் உள்பட எந்த ஞானமும் புறநிலைப் பிரபஞ்சத்தைப் பிரதிபலிக்கிறது. ஞானத்தின் அறிவார்ந்த தன்மையையும் உண்மையையும் சரிபார்ப்பது அதன் மொழி வெளியீடுகளைப் ''பதிவுப்பத்திர வாக்கியங்களுடன்'' பொருத்திப்பார்ப்பதன் வாயிலாக அல்ல, நடைமுறைச் செயல்களின் போக்கில் நிகழ்த்தப்படுகிறது. வெளிப் பிரபஞ்சத்தின் பொருள்களும் நிகழ்ச்சிகளும் புற நிலையாக, மனிதன்மீது சார்பு இன்றி நிலவுவதையும், அவற்றைப் பற்றிய நமது ஞானத்தின் உண்மையை, அல்லது பொய்மையையும் நடைமுறைதான் நிரூபிக்கிறது.

எந்தவிதக் கூற்றுக்களதும் அர்த்த அம்சம் தவிர, விஞ்ஞான மொழியில் பயன்படுத்தப்படும் சிறப்புச் சொற்கள், வாக்கியங்களின் தர்க்க முறையான அமைப்பும் வரையறுக்கப்படுவது அவசியம் என்று புதுப்புலக்கொள்கையினர் கருதுகிருர்கள். மெய்யாகவே இந்தப் பிரச்சினை பெருத்த முக்கியத்துவம் உள்ளது. ஏனெனில் விஞ்ஞான ரீதியான அறிதலில் குறியீட்டுச் சாதனங்களினுடையவும் கணித ஆராய்ச்சி முறைகளினுடையவும் பங்கு இடையருது மிகுந்து கொண்டு போகிறது, விஞ்ஞான அறிதல் முறைகளின் இயற்கையை விளக்குவதன்பால் அக்கறை அதிகரித்துக்

கொண்டு போகிறது. ஆனல் தற்காலப் புதுப்புலக்கொள்கை யினரோ, விஞ்ஞான ரீதியான அறிதலுக்கு உரிய அடிப்படைப் பிரச்சினைகளுக்குப் பொய்யான, கருத்துமுதல்வாத நிலைகளி லிருந்து தீர்வு காண்கிருர்கள். தத்துவப் பிரச்சினைத் தொகுப்பு முழுவதையும் தர்க்கமுறைப் பகுப்பாய்வுக் கணக்குக்களுக்குக் குறுக்கிவிடவும், தத்துவத்தைப் பிரபஞ்சக் கண்ணேட்டத் தன்மை அற்றதாகச் செய்துவிடவும் அவர்கள் செய்யும் முயற்சி களில் இந்த விஷயம் சிறப்பான துலக்கத்துடன் வெளிப்படுகிறது.

ஏற்கனவே கூறப்பட்டதுபோல, பூர்ஷ்வாக் கொள்கைவாதத் தின் நெருக்கடி தத்துவத்தை மட்டுமே அல்ல, சமூக இயலையும் பற்றிவிட்டது. கம்யூனிஸ எதிர்ப்பு நிலைகளிலிருந்து செயல் படும் பூர்ஷ்வாச் சமூக இயலார், சமூக வளர்ச்சிக்கு உரிய விதிகளின் புறநிலைத் தன்மை பற்றியும் சோஷலிஸத்தினது வெற்றியின் தவிர்க்க முடியாமை பற்றியும் உள்ள மார்க்ஸீய-லெனினீயப் போதனையைச் சிறப்பாகக் கடுமையாகத் தாக்கு கிருர்கள்.

முதலாளித்துவத்தின் ஆதரவாளர்களுடைய பிரதான வாதம் இதுதான்: முதலாளித்துவம் தன் இயல்பை மாற்றிக் கொண்டுவிட்டது. அது ''மக்களுக்கு உரியது'', ''மனிதாபிமா னம் உள்ளது'' ஆகிவிட்டது. பூர்ஷ்வா அரசு வர்க்கங்களுக்கு மேற்பட்டதாக மாறிவிட்டது. சமூகத்தின் எல்லாப் படிவுகளதும் ''வளமைக்கும்'' எல்லா நாட்டினங்களின் நல்வாழ்வுக்கும் வகை செய்யும் விதத்தில் நாட்டின் பொருளாதாரத்தையும் வருவாய்களின் வினியோகத்தையும் முறைப்படுத்த அது வல்லது.

இத்தகைய வலிந்துரைகளின் பொய்மை வெட்ட வெளிச் சமானது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பூர்ஷ்வா அரசாங் கத்தை எடுத்துக்கொள்வோம். ''மக்களுக்கு உரிய முதலாளித்து வத்துக்கு'' மாதிரியாக இது மிக அடிக்கடி காட்டப்படுகிறது. ஆனல் இந்த ''மக்களுக்கு உரிய'' அரசில் பொருளாதாரம் 500 ஏகபோகக் கம்பெனிகளின் ஆதிக்கத்தில் இருக்கிறது. இவற்றுக்குத் தலைமை வகிக்கிருர்கள் விரல்விட்டு எண்ணிவிடக் கூடிய சில கோடீசுவரர்கள்—ராக்பெல்லர்களும் ட்யூப்போன் களும் மார்கன்களும். ஏகபோகத் தலைமை பூர்ஷ்வா அரசு இயந்திரத்தை வெகு காலத்துக்கு முன்பே தனது நலன்களுக்கு அடிப்படுத்திவிட்டது. ஏகபோக முதலாளிகளுக்கும் அவர்களி

டம் வேலையில் இருக்கும் பெரிய உத்தியோகஸ்தர்களுக்கும் நம்ப முடியாத அளவு கொள்ளை லாபங்கள் கிடைக்கின்றன. அதே சமயம் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பெருந்திரளான உழைப்பாளி மக்களுக்கு இன்றியமையாதவை கூடக் கிடைக்க வகை இல்லை. லட்சக் கணக்கான மனிதர்கள் வேலை தேடி நாடெங்கும் திரிகிருர்கள்.

அரசு-ஏகபோக முதலாளித்துவத்தின் பிற்போக்குள்ள பாத்திரத்தை மூடி மறைக்க முயன்றவாறு ஏகாதிபத்தியக் கொள்கைவாதிகள் பழைய உலகைக் காப்பதன் பொருட்டுப் புதிய சித்தாந்தங்களைக் கண்டுபிடித்துவருகிருர்கள். இவற்றில் ஒன்று ''ஒரே இயந்திரத்தொழில் சமூகம்'' பற்றிய சித்தாந்தம். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இது விரிவாகப் பறையடிக்கப் பட்டு வருகிறது. முதலாளித்துவத்துக்கும் சோஷலிஸத்துக்கும் இடையே உள்ள சமுதாய-வர்க்க வகைப்பட்ட வேறுபாடுகளைப் பூசி மெழுகவும் பூர்ஷ்வா அமைப்பின் சுறண்டும் இயல்பை மறைக்கவும் இந்தச் சித்தாந்தத்தின் பிரதிநிதிகள் [ரஸ்தூவும் (*Rostow*) பிறரும்] முயல்கிருர்கள். ''ஒரே உலகச்'' சித்தாந்தத்தின் ஆதரவாளர்கள் திரளான வெகுஜனங்கள்மீது மார்க்ஸீயக் கருத்துக்களுக்கு உள்ள செல்வாக்கைக் குலைக்கப் பிரயத்தனம் செய்கிருர்கள். தற்போதைய நிலைமைகளில், ''ஒன்ருன'', ''கலப்புச்'' சமூகத்தை நோக்கிச் செல்லும் யுகத்தில், கொள்கைவாதம் தேவையே இல்லை என்று இந்த நோக்கத்துடன் அவர்கள் எழுதுகிருர்கள்.

தற்கால பூர்ஷ்வாச் சமூக இயலின் சிறப்பியல்பு கருத்து முதல்வாதமும் மாருநிலைவாதமும் அதன்மீது செலுத்தும் ஆதிக்கம்தான். சமூக இயலின் ஆராய்ச்சிக்கு உரிய விஷயங்களாக மிக அடிக்கடி தெரிந்தெடுக்கப்படுபவை ஒன்றுக்கொன்று தொடர்பற்ற தூய ஆன்மீக நிகழ்ச்சிகளும் செயல்முறைகளுமே. இவையே வரலாற்று வளர்ச்சியின் போக்கை நிர்ணயிப்பவை எனக் கூறப்படுகின்றன. அதே சமயம், வரலாற்று இன்றியமையாமையும் சமுதாயச் செயல்முறைகள் பற்றிய புறநிலையான அறிதலின் சாத்தியப்பாடும் சமூக வாழ்க்கையின் பொருளியல் நிலைமைகள்மீது கருத்துக்களுக்குள்ள சார்புத்தன்மையும் மறுக்கப்படுகின்றன.

சமூக வாழ்வு குறித்த கருத்துமுதல்வாத நோக்கைச் சமூக இயலில் நிலவும் உளவியல் போக்கு சிறப்பான துலக்கத்துடன்

பிரதிநிதித்துவப்படுத்துகிறது. இந்தப் போக்கின் ஆதரவாளர்கள் ஆராய்ச்சிக்கு உரிய விஷயமாக உணர்வு நிகழ்ச்சிகளையும் உளவியல் உறவுகளையும் மட்டுமே எடுத்துக்கொள்கிறார்கள். உளவியல் போக்கு வெவ்வேறு பிரிவுகள் கொண்டது. தனி நபர்களின் புலனறிவையே சமூகத்தின் ''உளவியல். அடித்தளமாக'' இவற்றில் சில பிரிவுகள் கொள்கின்றன. வேறு சில பிரிவுகள் தனித் தனிச்சமூகக் குழுக்களுக்கு உள்ளே உருவாகும் கூட்டு உளவியல் உறவுகளையும் பின்னும் சில, தனி நபருக்கும் கூட்டத்துக்கும் இடையே நிலவும் உளவியல் உறவுகளையும் இவ்வாறே பிறவற்றையும் இத்தகைய அடித்தளமாகக் கருதுகின்றன. ஆனால் சமூக உறவுகளின் தன்மையாக அமைபவை உளவியல், அதாவது ஆன்மீக, கருத்துவகை உறவுகளே என்று இந்த எல்லாப் பிரிவுகளும் ஒப்புக்கொள்கின்றன. உற்பத்தி உறவுகளை அதாவது பொருளியல் உறவுகளை இவை புறக்கணிக்கின்றன.

இவ்வாறாக, சமூக இயலில் உள்ள உளவியல் போக்கின் பிரதிநிதிகள், ''மனிதர்களின் உணர்வே அவர்களது இருத்தலை நிர்ணயிக்கிறது'' என்ற கருத்துமுதல்வாதக் கோட்பாட்டை விசுவாசத்துடன் கடைப்பிடிக்கிறார்கள். இந்தக் கோட்பாடு விஞ்ஞான ஆதாரம் அற்றது என்பதை மார்க்ஸீயத்தின் ஸ்தாபகர்கள் நிரூபித்துவிட்டார்கள்.

பூர்ஷ்வாச் சமூக இயலாரின் மாறுநிலைவாதச் சிந்தனைப் போக்குக்குத் துலக்கமான உதாரணமாக விளங்குகிறது அனுபவச் சமூக இயல் எனப்படுவது. ஒரு அல்லது மற்றொருவகைச் சமுதாய நிகழ்ச்சிகளின் தன்மையை ஸ்தூல மெய்மைகளின் அடிப்படையில் இது ஆராய்கிறது. அனுபவத்திலிருந்தும் மெய்மைகளிலிருந்தும் பெறப்பட்ட ஸ்தூலமான, ''அருவமானவை'' அல்லாத, உண்மையான சமூக வாழ்வு விதிகளை வெளிப்படுத்துவதற்கு இந்த ஆராய்ச்சி முறை உதவுகிறது என்று அனுபவச் சமூக இயலார் கருதுகிறார்கள்.

நகர, கிராம, சமுதாய வாழ்வின் குறிப்பிட்ட தனித்தனி அம்சங்களை விளக்கிக் காட்டும் பேரளவான மெய்மை விவரங்களை அனுபவச் சமூக இயலார் சேகரித்துள்ளார்கள். ஆயினும் அவர்களது ஆராய்ச்சிகளில் முதல் இடம் பெறும் பிரச்சினைகள் மிக மிகக் குறுகிய, அற்பமான தன்மை கொண்டவை. அனுபவச் சமூக இயலில் மெய்மைகளே முதன்மையாகக் கவனத்தில்

எடுத்துக்கொள்ளப்படுகின்றன எனினும், இந்த மெய்மைகள் துணுக்குக்களாக, அருவமாக, அவற்றின் எதார்த்த வரலாற்றுத் தொடர்புகளுக்குப் புறம்பாக, பொருளியல் சமூக உறவுகள்மீது சார்பு இன்றி எடுத்துக்கொள்ளப்படுகின்றன. இத்தகைய அணுகுமுறை சமூக வளர்ச்சிக்கு உரிய விதிகளையும் இயக்கு சக்திகளையும் வெளிப்படுத்தும் வாய்ப்பு ஆராய்ச்சியாளனுக்குக் கிட்டாதவாறு செய்துவிடுகிறது. மெய்யாகவே முக்கியமான சமுதாயப் பிரச்சினைகளின் ஆழ்ந்த விஞ்ஞான முறை ஆராய்ச்சிக்குப் பதில், மேற்பரப்பில் கிடப்பவையும் பெருத்த முக்கியத்துவம் இல்லாதவையுமான உறவுகளின் வர்ணனை இத்தகைய அணுகுமுறையில் மிக அடிக்கடி இடம் பெற்று விடுகிறது.

பல்வேறு வகை நிகழ்ச்சிகளிலும் மெய்மைகளிலும் சரியான திசையில் செல்லவும், முதன்மையானதை இரண்டாந்தரமானதிலிருந்தும் இன்றியமையாததைத் தற்செயலானதிலிருந்தும் பிரித்து அறியவும், சமூக வளர்ச்சியின் இயங்கு திசையை முன்காணவும் வாய்ப்பு அளிக்கும் உண்மையிலேயே விஞ்ஞான ரீதியான முறை இன்மை காரணமாகவே அனுபவச் சமூக இயல் சித்தாந்த நோக்கில் இவ்வாறு பலவீனமாக இருக்கிறது. சமூக வாழ்வின் திட்டவட்டமான அம்சத்தை ஆராயும் எந்த ஸ்தூல விஞ்ஞானத்துக்கும், எந்த ஸ்தூலமான சமுதாய ஆராய்ச்சிக்கும் உரிய இத்தகைய முறையாகப் பயன்படுகிறது வரலாற்றுப் பொருள்முதல்வாதம்.

மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம் பூர்ஷ்வாக் கொள்கைவாதிகளின் பிற்போக்குள்ள பங்கை அம்பலப்படுத்தி, இயற்கை, சமூகம், அறிதல் ஆகியவைகுறித்த ஒத்தியைந்த பொருள்முதல்வாத நோக்கை ஆதாரபூர்வமாக நிலைநாட்டுகிறது. வளர்ச்சி பற்றிய யாவற்றிலும் சர்வாம்சரீதியான, ஆழ்ந்த போதனையாக விளங்கும் இயக்க இயலுடன் இணைந்த பொருள்முதல்வாதம் எதார்த்தம் பற்றிய சரியான எண்ணத்தை மனிதர்களுக்குத் தருகிறது, பிரபஞ்சத்தின் வளர்ச்சிக்கு உரிய புறநிலை விதிமுறைகளை வெளிப்படுத்துகிறது. இவற்றின் அடிப்படையில் இவ்வளர்ச்சியின் பிரதானப் போக்குக்களை முன்காண முடியும். விஞ்ஞான அறிதலில் புறநிலைத்தன்மையும், நிகழ்ச்சிகள், செயல்முறைகளின் எல்லா அம்சங்களையும் பற்றிய முழுமையான கணக்கீடும், விஷயங்களின் சாராம்சம் குறித்த ஆழ்ந்த

ஞானமும் இயக்க இயல்-பொருள்முதல்வாதப் பிரபஞ்சக் கண்ணோட்டத்துக்குத் தேவைப்படுகின்றன.

பூர்ஷ்வாக் கொள்கைவாதத்தின் எல்லா வடிவங்களையும், சீர்திருத்தவாத, திரிபுவாத நோக்குக்களையும் எதிர்த்துப் போராடுவதற்கான விறல்மிக்க கருத்து ஆயுதமாக விளங்குகிறது மார்க்ஸீய-லெனினீயத் தத்துவம். கம்யூனிஸ, பூர்ஷ்வாப் பிரபஞ்சக் கண்ணோட்டங்களின் போராட்டம் முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸத்துக்குச் சமூகம் பரிணமிப்பதற்கு உரிய வரலாற்றுச் செயல்முறையைப் பிரதிபலிக்கிறது. எல்லா நாடுகளையும் கண்டங்களையும் சேர்ந்த கோடிக்கணக்கான மக்களின் உணர்வில் புரட்சிகர மாற்றம் நிகழ்ந்துவருகிறது. மார்க்ஸீய-லெனினீயச் சித்தாந்தத்தின்பாலும் சோஷலிஸக் கட்டுமான அனுபவத்தின்பாலும் மக்களுக்கு உள்ள கவர்ச்சியையும் அக்கறையையும் இது காட்டுகிறது.

நமது சகாப்தத்தில் மார்க்ஸீய-லெனினீயப் போதனை உண்மையான பெருவெற்றி அடைந்துள்ளது. வருங்காலம் கம்யூனிஸத்துக்கும் அதன் விஞ்ஞானரீதியான புரட்சிகரப் பிரபஞ்சக் கண்ணோட்டத்துக்குமே உரியது ஆகும்.

## கலைச்சொல் வரிசை

அகநிலைப்பொருள் subject
அகம் the ego
அடித்தளம் basis
அடிநிலைப்பொருள் substance
அணுக் கொள்கை atomistic theory
அபிப்பிராயம் opinion
அமைப்பு formation
சமூக-பொருளாதார அமைப்பு socio-economic formation
அரசியல் சார்பின்மை indifference to politics
அரசு-ஏகபோக முதலாளித்துவம் state monopoly capitalism
அலுவலர்கள் cadre
அழகியல் aesthetics
அளவு quantity
அளவுகோல் criterion
அளவு மாற்றங்கள் பண்பு மாற்றங்களாகப் பரிணமித்தல்பற்றிய விதி law of transition of quantitative changes into qualitative changes
அறிதல் cognition
அறிதல் சித்தாந்தம் theory of cogniton
அறிதல் செயல்முறை process of cognition
பிரபஞ்சத்தின் அறியப்படும் தன்மை cognizability of the universe
அறியொணுமைக் கொள்கை agnosticism
அனுபவச் சார்பின்றி apriory
அனைத்து மக்கள் அரசு state of the entire people

ஆதாயப் பாங்கு profitableness
ஆயத் தொலைகள் coordinates
ஆயுத உற்பத்திப் போட்டி armament race
ஆராய்ச்சி முறை இயல் methodology

இடவெளி space
இயக்க இயல்வாதம் dialectics
இயந்திர இயல்வாதம் mechanicism
இயந்திரத்தொழில் பெருக்கம் industrialization
இயல்திட்டவாதம் teleology
இயல்பூக்கம் instinct
இயற்கைக்குப் புறம்பான super-natural

இயற்கைத் தேர்வு natural selection
இரண்டாவது சங்கேத மண்டலம் second signal system
இருத்தல் being
இருமைக் கொள்கை dualism
இறை இயல் theology
இறை இயல் பாண்டித்திய முறை scholastic method
இனம் nationality
இன்றியமையாமையும் தற்செயலும் necessity and chance

உடைமை property
அரசாங்க உடைமை—state property
கூட்டுறவு-கூட்டுப்பண்ணை உடைமை cooperative-collective farm property
உணர்வு consciousness
உணர்வுவகைப்பட்ட அறிதல் cognition through the senses
உண்மை truth
பூரண உண்மை absolute truth
சார்புநிலை உண்மை relative truth
உயிரணு cell
உயிர்ப்பொருள் இரசாயன மாற்றம் metabolism
உயிர் மின்னோட்டம் bio-current
உருவவாதம் formalism
உலக சோஷலிஸ (நாடுகளின்) நட்புமண்டலம் community of world socialist (countries)
உலகப் பிரஜாவாதம் cosmopolitanism
உளவியல் psychology
உள்ளடக்கமும் உருவமும் content and form
உற்பத்திப் போட்டியையும் உற்பத்தி அராஜகத்தையும் பற்றிய விதி law of competition and anarchy in production
உற்பத்தி முறை method of production

எண்ணம் notion
எதிர்நிலை opposite
எதிர்நிலைகளின் ஒருமையும் போராட்டமும் பற்றிய விதி law of the unity and struggle of the opposites
எதிர்மறுப்புவாதம் nihilism

ஒப்புநிலை வகைப்பிரிவு relative category
ஒருமைக்கொள்கை monism
பொருள்முதல்வாத ஒருமைக்கொள்கை materialistic monism
கருத்துமுதல்வாத ஒருமைக் கொள்கை idealistic monism
ஒழுக்க நெறி moral
கம்யூனிஸத்தை நிறுவுபவனுக்கு உரிய ஒழுக்க நெறித் தொகுப்பு moral code of the builder of communism
ஒன்றிணைந்த அரசாங்கத் திட்ட வகுப்பு unified state planning
ஒன்றித்த நிர்வாகத் தலைமைக் கோட்பாடு principle of one man management

கடத்தி conductor
கட்டமைப்பு structure
கதிரியக்கம் radio-activity
கதிர்ப்பு radiation

கம்யூனிஸச் சுயநிர்வாகம் communist self administration
கம்யூனிஸத்தின் பொருளியல்-தொழில்நுட்ப அடிப்படை the material-technical base of communism
கருதுகோள் concept
கருத்தியலான idealistic
கருத்துமுதல்வாதம் idealism
அகநிலைக் கருத்துமுதல்வாதம் subjective idealism
புறநிலைக் கருத்துமுதல்வாதம் objective idealism
கலப்படவாதம் eclecticism
கற்பனை சோஷலிஸம் utopian socialism

காரணமும் விளைவும் cause and effect
காரணம் உடைமை causality
காரணி factor

கிரகப்பாதை orbit

குதர்க்கவாதம் sophistry
குலம் tribe
குறி எழுத்து hieroglyph
குறி எழுத்துச் சித்தாந்தம் theory of hieroglyphs
குறுகிய பிரிவுவாதம் sectarianism

கூட்டுத்துவம் collectivism
கூட்டுப் பண்ணை முறை அமைப்பு collectivization

கொள்கைவாதம் ideology

சக்தி அழியாமையையும் மாற்றத்தையும் பற்றிய விதி law of the conservation and transformation of energy
சடத்துவம் inertia
சடப்பொருள் matter
சமரசப்படுத்தக் கூடிய non-antagonistic
சமரசப்படுத்த முடியாத antagonistic
சமூக உடைமை social property
சர்வப் பொதுவான universal
சர்வாம்ச ரீதியாக இயந்திரமயமாக்கல் complex mechanization

சாஸ்திரீய classical
சாதி genus
சாத்தியப்பாடும் எதார்த்தமும் possibility and reality
சாரம் essence
சார்பு அறிவுக்கொள்கை relativism

சிதைவு dissimilation
சிறந்தோர் குழாம் élite

சீருறப் புதுக்குவோன் rationalizer
சீர்திருத்தவாதம் reformism

சூழ்நிலை surroundings
சூனியம் non-being

செயல் தந்திரம் tactics
செலவுத் தற்பொறுப்பு non-financing by the state

சேர்க்கை synthesis

சைனியவாதம் militarism

சோர்வு மனப்பான்மை pessimism

ஜனநாயக மத்தியத்துவம் democratic centralism

ஞான இயல் gnosiology

தந்தை வழி ஆட்சி முறை patriarchy

தனித்துவவாதம் individualism

தனித்துறைப்பாடு specialisation

தனியார் சொத்துரிமை (சொத்து) private property

தனியானது, சிறப்பானது, பொதுவானது isolated, special, common

தன்மயமாக்கல் assimilation

தன்மை essence

தன்மையும் தோற்றமும் essence and appearence

தன்னிச்சைவாதம் voluntarism

தன்னிலைப் பொருள் thing in itself

தாய்வழி ஆட்சி முறை matriarchy

தானியங்கிமயம் ஆக்கல் automation

தானேயான கருத்து the idea in general

திரிபுவாதம் revisionism

தீர்மானம் conclution

தூண்டுவிப்பி stimulus

தெளிவான ஒலிப்புக்கள் கொண்ட பேச்சு articulate speech

தேசிய உடைமை ஆக்கல் nationalization

தொகுப்பு induction

தொலை இயக்க இயல் telemechanics

தொழில்நுட்பம் technique

நரம்பணு nerve cell

நரம்பு மண்டலம் nervous system

நவதாமஸீயவாதிகள் neo-Thomasists

நாட்டினம் nation

நாட்டு வெறி chauvinism

பெருவல்லரசு நாட்டு வெறிgreat power chauvinism

நிர்ணய நியதி இன்மைக் கொள்கை indeterminism

நிர்ணய நியதிக் கொள்கை determinism

நிலவுகைக் கொள்கை existentialism

நிலை மறுப்பின் நிலை மறுப்பு பற்றிய விதி law of negation of negation

நுகர்வு consumption

நுண்பொருள் பிரபஞ்சம் microcosm

பகு உறுப்பு analyser

பகுத்தறிவுப் புறம்புக் கொள்கை irrationalism

பகுப்பு deduction

பகுப்புமுறைத் தர்க்க ரீதியான சிந்தனை abstract logical thinking

படிவு layer

பண்டைக் கூட்டுச் சமூக அமைப்பு primitive communal system

பயன்வழிவாதம் pragmatism

பரம கருத்து Absolute Idea

பரமான்மா Absolute Spirit

பரிணமம் evolution
பரிமாணம் measure

பாகுபடுத்தல் abstraction
பாகுபாடு analysis
பாட்டாளி வர்க்கச் சர்வ தேசியவாதம் proletarian internationalism
பாய்ச்சல் leap
பாரம்பரியம் heredity

பிரபஞ்ச அறிவு comprehension of the universe
பிரபஞ்ச ஈர்ப்பு விதி law of universal gravitation
பிரபஞ்சக் கண்ணேட்டம் universal outlook
பிரபஞ்சம் பற்றிய சிந்தனை universal contemplation
பிறப்பியல் genetics

புதுப்புலக்கொள்கை neopositivism
புதுப்புனைவாளன் inventor
புதுமை புகுத்துவோன் novator
புலக் கொள்கை positivism
புலம் field
மின்காந்தப் புலம் electromagnetic field
புலனறிவு perception
புலனறிவுக்கு அப்பாற்பட்ட பிரபஞ்சம் the beyond (transcendental world)
புலனுணர்ச்சி sensation
புறணியடிப் படிவுகள் layers under the cortex

பூகோள அரசியல் geopolitics

பொருண்மை mass
பொருளாதாரப் பரஸ்பர உதவிச் சபை Council of mutual economic assistance
பொருளியலான materialistic
பிரபஞ்சத்தின் பொருளியல் ஒருமை the material oneness of the universe
பொருளியல் நலங்கள் material wealth

பொருள்முதல்வாதம் materialism
இயக்க இயல் பொருள் முதல்வாதம் dialectical materialism
வரலாற்றுப் பொருள் முதல் வாதம் historical materialism

போர்த் தந்திரம் strategy

மக்கள் கண்காணிப்பு ஸ்தாபனங்கள் organs of people's control
மதிப்பு value
உபரி மதிப்பு surplus value
நுகர்வு மதிப்பு consumers' value
பரிவர்த்தனை மதிப்பு exchange value
மரபைப் பேணல் succession, continuity of tradition
மறிவினை reflex
ஆக்கநிலை மறிவினை conditioned reflex
இயல் நிலை மறிவினை unconditioned reflex
மறு வடிவுகொண்ட கருத்து reincarnated idea
மறைபொருள்வாதம் abstractionism

மார்க்ஸீயத்துக்கு முந்திய pre marxist

மார்க்ஸுக்கு முந்திய pre-marxian
மால்தஸ் கொள்கை malthusianism
மாறுநிலைவாதம் metaphysics
மானிட இனம் race

மின்காந்த அதிர்வுகள் electromagnetic vibration

முதல் உந்தல் first impulse
முதல் சங்கேத மண்டலம் first signal system
முதனிலை premise
முரண்பாடு contradiction

மேற்கட்டுமானம் super-structure

வகுப்பு estate (status)
வகைப்பிரிவு category
வறட்டுச்சூத்திரவாதம் dogmatism

வாகி carrier
வாங்கி receptor

விஞ்ஞானக் கேடான பொருள்முதல்வாதிகள் vulgar materialists
விதிமுறைக்குட்பட்ட தன்மை conformity with law
விதிவாதம் fatalism

வெப்ப அணுக்கருப் பிரதிச்செயல் thermo-nuclear reaction



வாசக நேயர்களுக்கு

இந்த மொழிபெயர்ப்பைப் பற்றியும் இந்தப் புத்தகத்தின் தயாரிப்பைப் பற்றியும் வாசக நேயர்களின் கருத்தை முன்னேற்றப் பதிப்பகம் மகிழ்வுடன் வரவேற்கும்.

கடிதங்களைத் தயை செய்து "Progress Publishers, 21, Zubovsky Boulevard, Moscow, USSR" என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.

விற்பனையாளர்கள்

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம்

6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை-2

ஷோ-ரூம்

6/30, மவுண்ட் ரோடு, சென்னை-2

கிளைகள்

80, மேலக் கோபுர வீதி, மதுரை-1

19/43, பெரிய கடைத் தெரு, கோயமுத்தூர்-1

சிங்காரத்தோப்பு, திருச்சிராப்பள்ளி-8

பஸ் நிலையம், தஞ்சாவூர்